சூரியன் பதிப்பகம்

# மாஃபியா ராணிகள்

கே.என்.சிவராமன்

ISBN: 9789385118425

Title :
MAAFIA RANIGAL



சூரியன் பதிப்பகம்
வெளியீடு: 105

நூல் தலைப்பு:
**மாஃபியா ராணிகள்**

நூல் ஆசிரியர்:
**© கே.என்.சிவராமன்**

அட்டை ஓவியம்:
**ராஜா**

முதற்பதிப்பு:
**டிசம்பர் 2015**

விலை:
**ரூ.300/**




229, கச்சேரி ரோடு, மயிலாப்பூர்,
சென்னை600004.
விற்பனைப் பிரிவு தொலைபேசி :
044 4220 9191 **Extn: 21125**
மொபைல்: 72990 27361
இமெயில் : **kalbooks@dianakaran.com**

| | | |
|---|---|---|
| பதிப்பாளர் மற்றும் ஆசிரியர் | | **ஆர்.எம்.ஆர்.ரமேஷ்** |
| ஆசிரியர் குழு | | **தி.முருகன்** |
| | | **வள்ளி, கே.என்.சிவராமன், பிரபுசங்கர், வெ.நீலகண்டன்** |
| சீஃப் டிசைனர் | : | **பி.வேதா** |

# நிழல்களின் நிஜம்!

தாதாக்கள், மாஃபியாக்களைக் குறிப்பிடும்போது 'நிழல் உலக தாதாக்கள்', 'நிழல் உலக மாஃபியாக்கள்' என்ற சொற்களைப் பயன்படுத்துகிறார்கள். அது என்ன நிழல் உலகம்?

அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு எப்போதும் இரட்டை முகங்கள் இருக்கும். பொதுவெளியில் அவர்கள் காட்டுவது ஒரு முகம்; அதைத் தாண்டிய இன்னொரு முகம்தான், அவர்களின் அதிகாரம் இறுக்கமாகக் கைப்பிடியில் இருக்க உதவி செய்கிறது. அந்த இன்னொரு முகம், நிழல் உலகத்தில் இருக்கிறது. பணத்தில் புரளும் தொழிலதிபர்கள், ஆட்சி நிர்வாகத்தை செய்யும் அரசியல்வாதிகள், எப்போதும் செல்வாக்கு குறையாத போலீஸார் உள்ளிட்ட அதிகாரவர்க்கம்... என இவர்கள் எல்லோருக்குமே தங்கள் அதிகாரம் கைநழுவிப் போய்விடக் கூடாது என்கிற அச்சம் இருக்கிறது. அதிகாரத்தைத் தக்க வைத்துக்கொள்ள அவர்கள் சில ஏவலாளிகளை வைத்துக்கொள்கிறார்கள்.

அந்த ஏவலாளிகளின் விசுவாசம் அடிக்கடி உரசிப் பார்க்கப்படும். விசுவாசத்தின் அளவு குறையும்போது - அல்லது அவர்களின் பலம் குறையும்போது - அவர்களின் வாழ்க்கை முடிந்துவிடும். இப்படித்தான் நிழல் உலகில் அடிக்கடி மாஃபியாக்கள் மாறுகிறார்கள். ஒரே எஜமானருக்கு வேறு வேறு அடிவருடி தாதாக்கள் மாறுவதும் இதனால்தான் சாத்தியமானது.

ஆனால், மும்பையின் நிழல் உலகம் வேறு மாதிரியானது. இந்தியாவின் பொருளாதாரத் தலைநகரான அங்கு, பணம் படைத்தவர்களைத் தாண்டி, போலீஸைத் தாண்டி, அரசியல்வாதிகளைத் தாண்டி, அதிகாரம் மாஃபியாக்களின் கைக்குப் போனது. இந்தியாவில் வேறு எங்கும் நிகழ்ந்திராத விசித்திரம் இது! அந்த மாஃபியாக்களின் நிழல் உலகில் நுழைந்து, உண்மைகளை ஒரு மர்ம நாவலுக்குரிய விறுவிறுப்புடன் விவரிக்கும் அற்புத நூல் இது. கையில் எடுத்தால், ஒரே மூச்சில் படித்து முடிக்காமல் கீழே வைக்க மாட்டீர்கள்!

**- ஆசிரியர்**

# GATE WAY OF THE BOOK

பத்தாம் வகுப்பு விடுமுறையில்தான் முதன்முதலில் சாண்டில்யனின் 'ஜலதீபம்' மூன்று பாகங்களையும் படித்தேன். கடற்கொள்ளைய(ன்)ர் என ஆங்கிலேய வரலாற்று ஆசிரியர்களால் பதிவு செய்யப்பட்ட கனோஜி ஆங்கரே, பெருமளவு ஈர்த்தார். இன்று மும்பையாக இருக்கும் அன்றைய ஏழு தீவுகளை அவர் கட்டி ஆண்ட விதம் பெருமளவு யோசிக்க வைத்தது.

இதன் தொடர்ச்சியாக வாசித்த 'மஞ்சள் பிசாசு' என்னும் சோவியத் ரஷ்யாவின் நூல், தங்கம் தொடர்பான தகவல்களை நுட்பமாக விவரித்தி ருந்தது. சிந்திக்கவும் தூண்டியது.

எந்த ஒரு நாட்டின் பொருளாதாரத்தையும் தங்கத்தின் இருப்பைக் கொண்டுதான் அளவிடுகிறோம். அந்த வகையில் உலகின் பத்தாவது இடத்தில் இந்தியா இருக்கிறது. ஆனால், இங்குதான் தங்கக் கடத்தல் அதிகம். நாள்தோறும் ஏதேனும் ஒரு விமானநிலையத்தில், இத்தனை கிலோ தங்கத்தை கடத்த முற்பட்டவர்களை கைது செய்ததாக செய்திகள் வந்துகொண்டே இருக்கின்றன. என்ன காரணம்?

மாஃபியாக்கள் குறித்த பொறி விழுந்தது இப்படித்தான். அது கொழுந்து விட்டு எரிந்தது மரியோ பூஸோவின் 'காட் ஃபாதர்' புதினத்தை இரவு முழுக்க கண்விழித்துப் படித்தபோது.

அதை அணையாமல் காப்பாற்றியது 'பிஸினஸ்மேன்' தெலுங்குப் படம். ஏற்கனவே மணிரத்னத்தின் 'நாயகன்', மும்பை மாஃபியா குறித்த அறிமுகத்தை தந்திருந்தாலும், தனி அரசாங்கமாக அது இயங்கி வருவதை 'பிஸினஸ்மேன்' திரைப்படம் சுட்டிக் காட்டியது.

ஆர்வம் மேலிட இது தொடர்பான ஆராய்ச்சியில் இறங்கியபோது, மலைக்க வைக்கும் அளவுக்கு பல செய்திகள் கிடைத்தன. இந்தியப் பொருளாதாரத்தின் தலைநகராக இருக்கும் மும்பைதான், இந்திய மாஃபி யாக்களின் கேப்பிடல் சிட்டியாகவும் இருக்கிறது என்பது அதில் ஒன்று.

இது தொடர்பாக மும்பை க்ரைம் ரிப்போர்ட்டரான ஹுஸைன் சாதி எழுதிய அனைத்து ஆங்கில நூல்களையும் ஒரே மூச்சில் படித்தேன். சேகரிப்பில் இருந்த பழைய 'ILLUSTRATED WEEKLY', 'SUNDAY' வார இதழ்களின் கட்டு ரைகளும்; 90களுக்குப் பிறகான 'OUTLOOK', 'INDIA TODAY' பத்திரிகைகளின் செய்திகளும்; 'HINDUSTAN TIMES', 'TIMES OF INDIA' மும்பை பதிப்புகளின் கட்டிங்ஸும் ஓரளவு முழுமையான பிக்சரை கொடுத்தன.

இதன்பிறகு தயக்கத்துடன் எங்கள் 'தினகரன்' குழுமத்தின் எம்.டி.யான திரு.ஆர்.எம்.ஆரை சந்தித்து விஷயத்தை சொன்னேன். புதிய முயற்சிகளை எப்போதும் ஆதரிக்கும் அவர், உற்சாகத்துடன் உடனடியாக தொடர் எழு தும்படி சொன்னார். இப்படித்தான் 'தினகரன்' நாளிதழுடன் ஞாயிறுதோறும் வெளியாகும் 'தினகரன் வசந்தம்' இணைப்பிதழில் 'மாஃபியா ராணிகள்' தொடர் ஆரம்பமானது. இந்தத் தலைப்புக் கூட ஹுஸைன் சாதி எழுதிய

ஆங்கில நூல் ஒன்றின் தமிழாக்கம்தான். விஷய தானம் செய்த அவருக்கு நன்றி செலுத்தும் விதமாகவே இத்தலைப்பு வைக்கப்பட்டிருக்கிறது.

கிட்டத்தட்ட இரண்டு ஆண்டு காலம் வாசகர்களின் ஏகோபித்த ஆதர வுடன் வெளியான இத்தொடர், இப்போது நூல் வடிவம் பெற்றிருக்கிறது.

ஆனால், இப்புத்தகம் மும்பை மாஃபியாக்களின் முழுமையான வர லாறு அல்ல.

வரதராஜ முதலியார், ஹாஜி மஸ்தான், கரீம் லாலாவின் உடன் பிறவா சகோதரியும் -

தாவூத் இப்ராஹிமின் தத்து அம்மாவும் -

மாஃபியா ராணிகளில் முதலானவருமான ஜெனா பாயில் தொடங்கி - துபாய் சென்றுவிட்ட தாவூத் இப்ராஹிமை கொல்ல முயன்ற அஸ்ரப் என்கிற சப்னாவின் வாழ்க்கை வரை இத்தொடர் பதிவு செய்திருக்கிறது. போலவே துபாய்க்கு தப்பிச் சென்ற பிறகு தாவூத் இப்ராஹிமின் ராஜ்ஜியம் - D கம் பெனி - எப்படி விரிந்தது என்பது இங்கு சொல்லப்படவில்லை. ஏனெனில், அது தனி நூலுக்கான விஷயம்.

சுருக்கமாகச் சொல்வதென்றால் சுதந்திரத்துக்கு முன்பான பம்பாய் முதல் -

உலக மயமாக்கல் அறிமுகப்படுத்தப்பட்ட 1990களின் ஆரம்பம் வரை - மும்பையில் ஆட்சி செய்த மாஃபியா ராஜாக்களும் ராணிகளும் முழுமை யாக இந்த நூலில் இடம்பெற்றிருக்கிறார்கள்.

குறைகள் அனைத்துக்கும் தமிழில் தொகுத்து எழுதியவன் என்ற முறையில் நானே பொறுப்பு. நிறைகளுக்கு ஹுசைன் சாதி உள்ளிட்ட முகம் தெரியா ஆங்கிலப் பத்திரிகையாளர்கள் பொறுப்பு.

தோள் கொடுத்து என்னை உயர்த்திவிடும் எங்கள் எம்.டி.க்கும், ‘சூரி யன்’ பதிப்பகத்துக்கும், ‘குங்குமம்’ வார இதழின் முதன்மை ஆசிரியரான தி.முருகனுக்கும், பி.வேதா உள்ளிட்ட வடிவமைப்பாளர்களுக்கும், பிழை திருத்தம் செய்த மேத்தா, பிரான்சிஸ், ஆசி.கண்ணம்பிரத்தினம் ஆகி யோருக்கும், தன் ஓவியங்கள் வழியே ஒவ்வொரு அத்தியாயத்துக்கும் உயிர் கொடுத்த ராஜாவுக்கும், வாரா வாரம் உற்சாகப்படுத்திய ‘நக்கீரன்’ பொறுப்பாசிரியர் கோவி.லெனின், உளுந்தூர்பேட்டை லலித்குமார், மும்பை கதிரவன் உள்ளிட்ட நண்பர்களுக்கும் அன்பு.

என் போக்கில் என்னை செயல்பட அனுமதிக்கும் அம்மாவுக்கும், தங்களில் ஒருவராக என்னைக் கருதும் வாசகர்களுக்கும் ஒருபோதும் நன்றி சொல்ல மாட்டேன். முகம் பார்க்கும் கண்ணாடியை பார்த்து எப்படி அன்பையும் நன்றியையும் தெரிவிக்க முடியும்?

தோழமையுடன்,

**கே.என்.சிவராமன்**

sivaraman71@gmail.com

செல்: 9840907375



அந்த சுடுகாடு அங்குதான் இருக்கிறது.

மும்பை மின்சார ரயில்களில் பயணம் செய்தவர்களுக்கு தெரியும். இல்லாவிட்டாலும் பிரச்னை ஒன்றும் இல்லை. சார்னி ரோட்டிலிருந்து மரைன் லைன் செல்லும் சாலையில் அந்த இடுகாடு இருக்கிறது.

மரைன் லைன் என்பது ஆங்கிலேயர்கள் சூட்டிய பெயர். கடற்படைப் பிரிவை அவர்கள் உருவாக்கியபோது அதனோடு ஒட்டிப் பிறந்த பிள்ளை.

ஆங்கிலேயர்கள் சென்ற பிறகு அந்த கடற்படை பிரிவுத்தளம் இந்திய அரசாங்கத்தால் விமானப்படை ஊழியர்களின் குடியிருப்புப் பகுதியாக மாற்றப்பட்டது. வாயிற் காவலர்கள் தடுக்கவில்லை என்றால் இப்போதும் அந்த குடியிருப்புப் பகுதிக்குள் சென்று ஒரு சுற்று சுற்றிவிட்டு வரலாம்.

இங்கிருந்து கூப்பிடும் தொலைவில் இருக்கிறது மரைன் லைன் ரயில் நிலையம். இறங்கி படிக்கட்டை கடந்து வெளியே வந்தால், ஒரேயொரு சாலைதான் கண்முன்னால் விரியும். வி.தாக்கர்ஸே மார்க் என்னும் அந்தச் சாலைதான் கடலையும் நிலத்தையும் பிரிக்கும் ஒரே ஜீவன்.

இந்த ரயில்நிலையத்தை ஒட்டித்தான் அந்த சுடுகாடு கொந்தளிப்பை வெளிப்படுத்தாத அமைதியுடன் வீற்றிருக்கிறது.

ஏழரை ஏக்கரில் பரந்திருக்கும் அந்த இடுகாட்டின் வயது அதிகமில்லை. வெறும் நூற்று ஐம்பது வருடங்கள்தான். Bada Qabrastan என்று அழைக்கப்படும் அந்தப் பகுதிக்குள் கால் சுண்டுவிரல் இடிபடாதபடி ஜாக்கிரதையாக தெற்கு நோக்கி நடக்க வேண்டும். வழியில் அகால மரணமடைந்த சிறுவர் - சிறுமிகளின் சமாதிகளை கடக்க நேரிடும். மனதை பிழியும் அந்த சோகத்தை தாங்கிக் கொண்டு பல நிமிடங்கள் நடந்தால் - எந்த அலங்காரமும் ஆர்ப்பாட்டமும் இல்லாமல், வெகுசாதாரணமாக ஆங்கில ‘எல்’ எழுத்து வடிவில் அந்த சமாதி தட்டுப்படும்.

Form No. 2544, Otta No. 601.

தூசுகளும் அழுக்குகளும் விழுங்கியிருக்கும் அந்த எழுத்துக்களை வாயினால் ஊதி, விரல்களால் விலக்கிப் பார்ப்பது நல்லது.

அந்த பவுர்ணமி நள்ளிரவில் அப்படித்தான் அந்தப் பெண்ணும், இளைஞனும் தரிசித்துக்கொண்டிருந்தார்கள். ஆண் நின்றிருக்க, பெண் மண்டியிட்டு அமர்ந்திருந்தாள். சமாதியின் மீது சாய்த்து வைக்கப்பட்டிருந்த துப்பாக்கி, எவர் உயிரையோ குடிப்பதற்காக காத்திருந்தது.

மனதார பிரார்த்தனை செய்த பிறகு, அந்தப் பெண் எழுந்தாள். இளைஞனை பின்தொடர்ந்தபடி சென்றாள்.



மும்பை மாஃபியாவில் இணையும் அத்தனை பெண்களும் இப்படி காவல்துறைக்கு தெரிந்தும், தெரியாமலும் இந்த சமாதிக்கு வருவார்கள். ஆசி வாங்கிவிட்டு செல்வார்கள்.

காரணம், அங்கு புதைக்கப்பட்டிருப்பது வெறும் பெண்ணல்ல.

சுதந்திரப் போராட்ட வீரர். தன் பெயருடன் காந்தியை இணைத்துக்கொண்டவர். வரதராஜ முதலியாரின் வளர்ப்புத்தங்கை. ஹாஜி மஸ்தானின் தத்து அக்கா (மும்பையின் ஆதி தாதாக்களான இவர்கள் இருவருமே தமிழகத்தை சேர்ந்தவர்கள் என்பது எவ்வளவு பெரிய முரண்?). தாவூத் இப்ராஹிமை சீராட்டி வளர்த்த அன்பு ஆயா. முன்னாள் இந்தியப் பிரதமர் மொரார்ஜி தேசாய்க்கும், முன்னாள் மகாராஷ்டிர மாநில முதல்வர் சவானுக்கும் ராக்கி கயிறு கட்டிய சகோதரி...

என பன்முகம் கொண்ட ஸைனாப் என்கிற ஜெனாபாய். மும்பை மாஃபியாவின் முதல் பெண் தாதா. குழு வேறுபாடின்றி இன்றுள்ள அனைத்து மாஃபியாக்களின் கண்கண்ட தெய்வம்.

இவரிடமிருந்துதான் இந்த 'மாஃபியா ராணிகள்' நூலையே ஆரம்பிக்க வேண்டும். ஆரம்பிக்கலாம்.

# மும்பை: இந்திய மாஃபியாக்களின் தலைநகரம்

எத்தனையோ மாநகரங்களும், நகரங்களும் இந்தியாவில் இருக்க ஏன் மும்பை மட்டும் இந்திய மாஃபியாக்களின் தலைநகரமாக இருக்கிறது? காரணம், ஆங்கிலேயர்கள்தான்.

நிலப்பிரபுத்துவ சமூகமாக இருந்த பிராந்தியத்தை, விவசாயிகள் வாழ்ந்த பிரதேசத்தை, வியாபாரிகளின் கேந்திரமாக மாற்றியது அவர்கள்தான். போலவே ஏழு தீவுகளை இணைத்து பம்பாய் என்னும் மும்பை மாநகரமாக சீராட்டி வளர்த்ததும் அவர்களே.

இந்தியாவுக்கு ஆங்கிலேயர்கள் வந்ததும் மும்பை, சென்னை துறைமுகங்களை முதலில் வாங்கினார்கள். ராபர்ட் க்ளைவ் இந்தியாவின் வைஸ்ராயாக வந்த பிறகு கொல்கத்தாவும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. வேறு எந்த இந்திய நகரங்களும் அடையாத வளர்ச்சியை இந்த மூன்று நகரங்களும் இன்று அடைந்திருப்பதற்கு காரணம் இதுதான்.

இந்த மூன்றுமே துறைமுக நகரங்கள் என்பது குறிப்பிடத்தக்கது. தங்கள் வியாபார நலன் கருதி ஆங்கிலேயர்கள் இந்த முப்பெரும் நகரங்களையும் வளர்த்தார்கள். இதனால் இந்த துறைமுக நகரங்களில் பணம் குவிந்தது. வேலை வாய்ப்பு பெருகியது. நாட்டின் அனைத்துப் பகுதிகளில் இருந்தும் இந்த மூன்று லோகங்களை நோக்கி மக்கள் படையெடுக்க ஆரம்பித்தார்கள்.

என்றாலும் மும்பைதான் இந்திய பொருளாதாரத்தின் தலைநகரமாக மாறியது. இதற்கு வந்தாரை வாழவைத்த (இப்போதல்ல!) மராத்தியர்கள் மட்டும் காரணமல்ல. பார்சிகளும்தான்.

பாரசீகத்தை விட்டு - அதாவது, ஈரானிலிருந்து ஓடிவந்த பார்சிகள், மும்பையில்தான் தஞ்சமடைந்தார்கள். இவர்களே ஆங்கிலேயர்களின் உற்ற நண்பர்களாகவும் மாறினார்கள். இறுதிவரை இந்துக்களும், இஸ்லாமியர்களும் ஆங்கிலேயர்களிடம் விரோதம் பாராட்ட, பார்சிகள் மட்டும் 'யெஸ் பாஸ்' என அவர்களுடன் கைகோர்த்தார்கள்.

இதனால் மிகப்பெரிய வாய்ப்புகள் அனைத்தும் பார்சிகளை தேடியே வந்தன. தாதாபாய் நவ்ரோஜி, டாடா குடும்பத்தினர் எல்லாம் பார்சிகள்தான்.

இவர்களுக்கு அடுத்து மும்பையை வளப்படுத்தியவர்கள் குஜராத்திகள். ஆங்கிலேயர் ஆட்சியில் குஜராத் என்னும் மாநிலமே உருவாகவில்லை. அந்தப் பகுதிகளும் 'பம்பாய் மாகாணம்' ஆகத்தான் இருந்தது. எனவே குஜராத்தின் இந்துக்களும் (படேல்), இஸ்லாமியர்களும்

(மேமோன்) ஆங்கிலேயர்களின் அடியாளாக வர்த்தக உலகில் நுழைந்தார்கள்.

அடுத்து மார்வாடிகள். ராஜஸ்தான் மாநிலமும் அப்போது பிறக்கவில்லை என்பது உபரித் தகவல். ஸோ மார்வார், மேவார் பகுதிகளை ஆங்கிலேயர்கள் முழுமையாக தங்கள் ஆளுகைக்கு கொண்டுவந்ததும் அவர்களும் போர்த் தொழிலை தூக்கி எறிந்துவிட்டு வியாபாரத்தில் இறங்கினார்கள்.

கவனிக்க... இந்தியர்களான இவர்கள் யாருமே தொடக்கத்தில் தொழிலை தொடங்கவில்லை.

ஆங்கிலேயர்கள் அதை அனுமதிக்கவும் இல்லை. வணிகர்களாக - அதுவும் இடைத்தரகர்களாக மட்டுமே பணிபுரிய இவர்கள் அனைவரும் அனுமதிக்கப்பட்டார்கள். ஆங்கிலேயர்கள் உற்பத்தி செய்த பொருட்களை இந்தியர்களிடம் விற்றுத் தரும் பணியை செவ்வனே செய்தார்கள். இதன் மூலம் பெரும் லாபம் ஈட்டினார்கள்.

இரண்டாம் உலகப்போரின்போது இந்த நிலை மாறியது. ஜெர்மனியை எதிர்க்க கம்பளி முதல் அனைத்துப் பொருட்களும் ஆங்கிலேயர்களுக்கு தேவைப்பட்டன. எனவே இந்தியர்களையும் தொழில் தொடங்க அனுமதித்தார்கள். பார்சிகள், குஜராத்திகள், மார்வாடிகள் ஆகியோரிடம் மட்டுமே அப்போது பணம் இருந்தது. எனவே இவர்களால் மட்டுமே உற்பத்தி சார்ந்த தொழில்களையும் தொடங்க முடிந்தது. பிர்லா, மிட்டல் எல்லாம் மார்வாடிகள்தான் என்பதை நினைவில் கொள்க.

இதன் பிறகு இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்தது. தொழிற்சாலைகளை நடத்தி வந்த ஆங்கிலேயர்கள் வந்த விலைக்கு அவைகளை விற்றுவிட்டு இங்கிலாந்து செல்ல விரும்பினார்கள். அவற்றை வாங்கக் கூடிய அளவுக்கு மேலே குறிப்பிட்ட மூன்று பிரிவினருக்கு மட்டுமே வசதி இருந்தது. வாங்கினார்கள்.

1940களில் ஏற்பட்ட பஞ்சமும், சுதந்திரத்தை ஒட்டி நடந்த பிரிவினையின் பாதிப்பும் மேற்கு வங்கத்தை, குறிப்பாக கொல்கத்தாவை நிலைகுலைத்தது. எனவே மும்பையை மட்டுமே வணிகர்கள் சரணடைந்தார்கள். அந்த மாநகரில் மட்டுமே குவிந்தார்கள். குமாஸ்தா வேலைகளுக்கு தமிழர்களும், சாலைகள், அடுக்குமாடி குடியிருப்புகளை கட்ட பீகார், ஒடிசா மாநிலத்தவர்களும் வந்து சேர்ந்தார்கள்.

அப்படியானால் மண்ணின் மைந்தர்களான மராத்தியர்கள்?

அவர்கள் விவசாயம் மட்டுமே செய்து வந்தார்கள். வணிகத்தில் இறங்கவேயில்லை. அதனால்தான் அவர்கள் சுதாரிப்பதற்குள் மற்ற மாநிலத்தை சேர்ந்தவர்கள் பொருளாதார கேந்திரங்களை கைப்பற்றிவிட்டார்கள். இந்த

கோபத்தின் விளைவுதான் மண்ணின் மைந்தரான பால்தாக்கரேவின் எழுச்சி.

ஒரு பேச்சுக்கு நாம் பயன்படுத்தும் சிறிய பொருட்கள் முதல் பெரிய பொருட்கள் வரை எதை வேண்டுமானாலும் எடுத்துப் பாருங்கள். அந்தப் பொருளை தயாரித்த நிறுவனத்தின் தலைமை அலுவலகம் மும்பையில்தான் இருக்கும்.

இப்படி பங்குச் சந்தை முதல் சகல துறைகளின் தலைமையகமாக மும்பை விளங்குவது வரம் மட்டுமல்ல, சாபமும் கூட. நல்ல பணமும், கெட்ட பணமும் சரிவிகிதத்தில் கலக்கும்போது - மாஃபியாக்கள் உருவாகாமலா இருப்பார்கள்?

2

ம்ஹூம். இன்றைய மும்பையில் இருக்கும் தோங்கிரியை ரப்பரால் அழித்துவிடலாம். பிரமாண்டமான ஜெ ஜெ மேம்பாலத்தின் கீழே ஹைடெக் கட்டிடங்களும், பாழடைந்த மாளிகைகளும் நீக்கமற நிறைந்திருக்கின்றன. அடித்தட்டு மற்றும் நடுத்தர வர்க்க இஸ்லாமியர்கள் ஒருவர் மூச்சை மற்றவர்கள் சுவாசித்தபடி நெருக்கமாக நடமாடிக் கொண்டிருக்கிறார்கள். ஏரியல் வியூவில் பார்த்தால் தரையே தெரியாது. தலைகளையும் எண்ண முடியாது. இயக்குநர் ஷங்கரின் படக் காட்சி போல் மிரட்டும்.

எனவே, வண்டியை ரிவர்ஸ் எடுப்போம். அதற்காக 1980 - 90களில் இந்தப் பகுதியில் மையம் கொண்டிருந்த கேங் வார்களில் கவனம் செலுத்த வேண்டாம். அது எதிர்பாராத தருணத்தில் நடுமண்டையில் ஓங்கி அடித்தது போலாகும். ஏனெனில் குருதியில் மிதந்த ஆண்டுகள் அவை. இயக்குநர் ராம்கோபால் வர்மாவுக்காக நேர்ந்து விடப்பட்ட இந்த காலக் கட்டத்தை சாவகாசமாக பிறகு பார்க்கலாம்.

போலவே 1960 - 70களிலும் சிக்கிக்கொள்ள வேண்டாம். தங்கக் கடத்தல் ரவுண்டு கட்டி அடித்த ஆண்டுகளும் இதுதான்.

இந்தி சினிமாவும், மாஃபியாவும் முதன்முதலில் கைகுலுக்கி, கட்டித் தழுவியதும் இதே காலத்தில்தான். தவிர, இந்தச் சூழலை பொறுமையாக எட்டிப் பார்க்கவும் நமக்கு நேரம் இருப்பதால் இப்போதைக்கு 'எஸ்' ஆகிவிடலாம்.

அதற்காக நானூறு, ஐநூறு ஆண்டுகளுக்கு முந்தைய தோங்கிரியை அலசி ஆராயப்போய் சட்டையை கிழித்துக்கொள்ளவும் வேண்டாம். தெருத்தெருவாக அலையவும் வேண்டாம்.

ஏனெனில் அப்போது மும்பை என்னும் நகரமே கிடையாது. தவிர, தோங்கிரியும் நிலமல்ல. குன்று.

ஏழு தீவுகள்தான் அப்போது பிரதானம். கொலபா, கிழட்டுப் பெண், மஹிம், பரேல், வோர்லி, மஸ்கான் ஆகியவற்றுடன் தோங்கிரியும் சேர்ந்த வானவில் பிரதேசம்தான் அப்போது வாழ்வாங்கு வாழ்ந்துகொண்டிருந்தது. மொகலாய மன்னர் அவுரங்கசீப்பின் கண்களில் விரல்விட்டு ஆட்டிய சத்ரபதி சிவாஜி காலத்தில் இந்த ஏழு தீவுகளும் ஒரு பெண்ணின் கழுத்தை அலங்கரிக்கும் 'நெக்லஸ்' ஆக கருதப்பட்டன. சாண்டில்யனின் எவர்க்ரீன் வரலாற்று நாவல்களில் ஒன்றான 'ஜலதீபம்' மூன்று பாகங்களிலும் பக்கம் பக்கமாக அலசப்பட்டிருக்கும் பகுதிகள் இந்த ஏழு தீவுகள்தான்.

பிறகு ஆங்கிலேயர் ஆட்சியில் இயற்கையாக அமைந்திருந்த இந்த ஏழு தீவுகளையும் செயற்கையாக இணைத்தார்கள்.

*வரலாற்றில் 'நெக்லஸ்' ஆக கொண்டாடப்பட்டவை அடகு வைக்கப்பட்டன. குன்றுகளை தரைமட்டமாக்கி நிலப்பரப்பை அதிகரித்தார்கள். தீவுகளும் மறைந்தன. 'நெக்லஸும்' காணாமல் போயின.*

*அப்படி இடிக்கப்பட்ட தோங்கிரி குன்று நிலப்பரப்பாகி, வடக்குப் பகுதியில் இருக்கும் க்ராஃபோர்ட் மார்க்கெட்டுக்கும், தெற்கில் இருக்கும் காமாத்திபுராவுக்கும் இடையில் சிக்கிக்கொண்டது.*

*இந்த வரலாறு நமக்குத் தெரியும். எனவே பத்தி பத்தியாக விளக்கவும் வேண்டாம். திரும்பத் திரும்ப மனப்பாடம் செய்து பித்துப் பிடித்து அலையவும் வேண்டாம். கமுக்கமாக 1920களுக்கு சென்றுவிடலாம். ரிலாக்ஸ் ஆக சப்பணமிட்டு அமரலாம்.*

*காரணம், மும்பையின் முதல் பெண் தாதாவான ஸைனாப் என்கிற ஜெனாபாய் பிறந்தது இந்த காலக்கட்டத்தில்தான்.*

*இவரது பிறப்புச் சான்றிதழை தரிசிக்கும் பாக்கியம் யாருக்கும் கிடைக்கவில்லை. எனவே, துல்லியமாக இந்த ஆண்டு, இந்த மாதம், இந்த தேதியில் இத்தனை மணிக்கு பிறந்தார் என அறுதியிட்டு கூற முடியவில்லை. நாம் என்ன ஜாதகமா கணிக்கப்போகிறோம்? எனவே, குத்துமதிப்பாக 1920கள் என்று கொள்ளலாம். அதனால் ஒன்றும் குடி மூழ்கிவிடப்போவதில்லை.*

*ஜெனாபாயின் ஆரம்ப காலம் குறித்த விவரங்கள் எதுவும் கிடைக்கவில்லை. ஜேன் போர்ஹேவுடன் இணைந்து பத்திரிகையாளர் எஸ்.ஹுசைன் சைதி எழுதிய 'மாஃபியா குயின்ஸ் ஆஃப் மும்பை' நூல் மட்டுமே ஓரளவுக்கு ஜெனாபாயின் சிறுவயது குறித்து பதிவு செய்துள்ளது.*

*ஆறு குழந்தைகளில் ஒருவராக பிறந்த இவர், ஏழ்மையில்தான் வாழ்ந்தார். தோங்கிரியில் உள்ள முகமது அலி ரோட்டில் ஒரேயொரு அறை கொண்ட வீட்டில்தான் வாசம். மழைக்கு ஒதுங்கலாம் என்றால் கூட கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை பள்ளி கிடையாது. எனவே, எழுத்தறிவு என்பது எட்டாக் கனியானது. அதே நேரம், அனுபவக் கல்வியே ஆசானானது வரம்.*

*அன்று சுதந்திரப் போராட்டத்தின் கேந்திரமாக தோங்கிரி விளங்கியதால் இவரும் அதன்பால் ஈர்க்கப்பட்டார். மகாத்மா காந்தி எப்போது எந்த இயக்கத்தை முன் எடுத்தாலும் அதைத் தன் பகுதியில் அமல்படுத்தும் முதல் நபராக இவரே விளங்கினார். இதனால் பலமுறை காவலர்களால் கைது செய்யப்பட்டிருக்கிறார். சிறையில் சித்திரவதையை அனுபவித்திருக்கிறார்.*

*பதினான்கு வயதானபோது திருமதியானார். கணவர் பெயர் மொகமத் ஷா தர்வேஷ். அதனால் அதே பகுதியில் இருந்த சுனவாலா கட்டிடத்துக்கு குடிபெயர்ந்தார். திருமணமான பிறகும் நாட்டுப் பற்று இவரை விட்டு அகலவில்லை. சொல்லப்போனால் முன்பை விட அதிகமாக போராட்டங்களில் கலந்து கொண்டார்.*

ஆனால், இவருக்கு நேர் எதிரான குணம் தர்வேஷுக்கு. சின்னதாக மரக்கடை நடத்தி பிஸினஸ் செய்தவருக்கு சுதந்திரம் என்றாலே கசந்தது. ராமனோ, ராவணனோ ஒருவேளை உணவு கிடைத்தால் போதும் என்பதே தர்வேஷின் பாலிசி. தவிர, போராட்டங்களில் பங்கேற்க அவரது மனமும், உடலும் இடம் தரவில்லை. எனவே, பொழுதெல்லாம் வீட்டில் சண்டைதான். அடிதான். கணவரால் ஜெனாபாயின் உடலில் ஏற்பட்ட காயங்களை எண்ணமுடியாது என்றால் பார்த்துக்கொள்ளுங்கள். என்றாலும் இவர்களுக்கு கதீஜா, இக்பால், சலீம், கமால், ஷம்மி என ஐந்து குழந்தைகள் அடுத்தடுத்து பிறந்தன.

இந்த நேரத்தில்தான், அதாவது, 1930களின் இறுதியில், மும்பையில் பஞ்சம் தலைவிரித்தாடியது. அரிசிக்கு தட்டுப்பாடு ஏற்பட்டது. குடும்பத்தில் எத்தனை உறுப்பினர்கள்? ஐந்தா. சரி. இவ்வளவுதான் உங்களுக்கு இந்த மாத கோட்டா. இதற்குள் முடிந்தால் வாழுங்கள். அல்லது செத்து தொலையுங்கள் என மவுனமாக அறிவித்தது ஆங்கிலேய அரசு.

பாஸ்மதி அரிசி மருந்துக்கும் கிடைக்கவில்லை. இந்த ரக அரிசி இல்லாமல் பிரியாணி செய்ய முடியாது. பிரியாணி இல்லாமல் மக்களால் சாப்பிட முடியாது. என்ன செய்வது?

கடத்தல்தான். ஒருவகையில் இன்றைய மும்பையின் மாஃபியா குழுக்கள் அனைத்தும் கரு கொண்டது இந்த காலக்கட்டத்தில்தான். அரிசி கடத்தலே அனைத்து தாதாக்களின் ஆதித் தொழில்.

காதில் பூ சுற்றவில்லை. ஆங்கிலேயர் காலத்து 'த கஸட்டியர் ஆஃப் பாம்பே சிட்டி அண் அய்லண்ட்' (பம்பாய் நகரம் மற்றும் தீவு பற்றிய தகவல் களஞ்சியம்) இது குறித்து விவரமாகவே பதிவு செய்திருக்கிறது.

இன்று வெங்காயம், உளுத்தம் பருப்பு உட்பட சகல அத்தியாவசிய பொருட்களின் விலையும் உயர ஊக வணிகம்தான் காரணம் என சமூக ஆய்வாளர்கள் தொண்டை கிழிய கத்துகிறார்கள் அல்லவா? பங்குச் சந்தைகள் இன்று ஏற்ற இறக்கத்துடன் பயணிக்கவும் இதுவே பிள்ளையார் சுழி போடுகிறதல்லவா?

இந்த ஊக வணிகம் அப்பொழுதே இருந்திருக்கிறது. இதுதான் அன்றைய அரிசி பஞ்சத்துக்கு காரணம் என செவிட்டில் அறைகிறது மேலே குறிப்பிடப்பட்டுள்ள ஆவணம்.

ஆக, ஆங்கிலேயர்கள்தான் இந்த களவையும் நமக்கு கற்றுத் தந்திருக்கிறார்கள்.

ரைட், விஷயத்துக்கு வரலாம். குடும்பத்துக்காக ஒரு பைசாவையும் தர்வேஷ் தரவில்லை. எனவே, குழந்தைகளை காப்பாற்ற அரிசி கடத்தலில் ஜெனாபாய் இறங்கினார். இவருக்கு குஜராத்தி மொழியும் தெரியும் என்பதால் மார்வாடிகளுடன் எளிதாக பேச முடிந்தது.

எனவே, பதுக்கல் பேர்வழிகளுக்கும், சில்லறை வியாபாரிகளுக்கும் இடையில் பாலமாக செயல்பட்டார். தனக்கான கமிஷனை பெற்றுக் கொண்டார். குடும்பத்தை காப்பாற்றினார்.

இந்த விஷயம் ஆங்கிலேய அரசாங்கத்துக்கு தெரிந்தது. இவரது வீட்டை சல்லடையிட்டு சலித்தார்கள். அப்படியும் ஒரேயொரு ஆதாரம் கூட கிடைக்கவில்லை. அந்தளவுக்கு புத்திசாலித்தனமாக கடத்தலில் ஈடுபட்டார்.

அன்றைய சூழ்நிலையில் இந்த செயலை மக்களும் தவறாக நினைக்கவில்லை. அரசுக்கு எதிரான ஒரு செயலாகவே அரிசி கடத்தலும் கருதப்பட்டது.

இந்நிலையில்தான் இந்தியாவுக்கு சுதந்திரமும், அதனையொட்டி பிரிவினையும் நடந்தன. தர்வேஷுக்கு பாகிஸ்தான் செல்ல வேண்டுமென்று ஆசை. ஜெனாபாய்க்கோ இந்தியாவிலேயே வாழ வேண்டும் என்பது கனவு.

ஆசையும், கனவும் முட்டிக் கொண்டதன் விளைவு குடும்பத்தில் பிளவு. மனைவியையும், ஐந்து குழந்தைகளையும் அனாதையாக தவிக்கவிட்டு தர்வேஷ் பாகிஸ்தானுக்கு நடையை கட்டிவிட்டார்.

இதற்குள் அரிசி தட்டுப்பாடும் நீங்கிவிட்டது. எனவே, முன்பு போல் கடத்தலில் ஜெனாபாயால் ஈடுபட முடியவில்லை. வேறெந்த தொழிலும் தெரியாது என்பதால் பிழைக்கவும் வழியில்லை. குடும்பத்தில் வறுமை தாண்டவமாடியது. பசியால் குழந்தைகள் வாடினார்கள்.

என்ன செய்வது?

ஒரு மனிதரை சந்திக்கும்படி நண்பர்கள் சொன்னார்கள்.

அவரை சந்திப்பதற்காக சிவாஜி டெர்மினல்ஸில் இருந்த ஷீரடி சாய் பாபா கோயிலுக்கு ஒரு வியாழக்கிழமை அன்று சென்றார்.

வேட்டி கட்டியபடி தன்னந்தனியாக அங்கிருந்த புறாக்களுக்கு தீனி போட்டுக்கொண்டிருந்த அந்த மனிதர், புன்னகையுடன் இவரை வரவேற்றார்.

அன்றைய சந்திப்பு தன் வாழ்க்கையை மட்டுமல்ல, மும்பையின் வரலாற்றையே திருத்தி எழுதப்போகிறது என்பதை ஜெனாபாய் அப்போது அறியவில்லை.

காரணம், அந்த மனிதர்தான் வரதுபாய் என்கிற வரதராஜ முதலியார். மணிரத்னம் இயக்கத்தில் கமல் நடித்த 'நாயகன்' இந்த மனிதரின் வாழ்க்கையை அடியொற்றியதுதான்.

டியூயல் சிம் மாதிரிதான் மும்பை பெண் தாதாக்களின் கதையும். ஆண்கள் இல்லாமல் அவர்களும் இல்லை. எனவே, வரதராஜ முதலியாரின் சரித்திரத்தையும் கூடவே நாம் பார்க்க வேண்டியது அவசியம்.

பார்க்கலாம்.

3

சிங்கிள் டீ. அதுவும் பால் கலக்காத தேநீர். கட்டஞ் சாயா. இதுதான் மணியோசை.

அனைத்து காவல்நிலையங்களுக்கு அருகில் இருக்கும் டீ கடையில் இருந்தும் குறிப்பிட்ட நேரத்துக்கு ஒருமுறை காவலர்களுக்கு தேநீர் சப்ளை ஆகும். பம்பாய் மாதுங்கா போலீஸ் ஸ்டேஷனுக்கும் அப்படித்தான் டீ செல்லும். அரை டிராயர் பையன்தான் அதை சுமந்து செல்வான். அங்கிருக்கும் ஏட்டு, ரைட்டர், எஸ்.ஐ., இன்ஸ்பெக்டர் என சகலருக்கும் விநியோகிப்பான். எல்லாமே பால் கலந்த தேநீர்தான்.

ஆனால் - எப்போது அந்தப் பையன் ப்ளாக் டீ க்ளாஸை மட்டும் இன்ஸ்பெக்டர் முன்பு வைத்துவிட்டு மவுனமாக செல்கிறானோ அப்போது மாதுங்கா ஸ்டேஷனே பரபரப்பாகிவிடும். புகார் கொடுக்க வந்த சகலரும் வெளியேற்றப்படுவார்கள். ரைட்டர், ஏட்டு... என காக்கிச்சட்டை அணிந்த அரசு ஊழியர்கள் மெல்ல நழுவுவார்கள். மின் விசிறி ஓடுகிறதா என இன்ஸ்பெக்டர் சரி பார்ப்பார். வியர்வை பூக்கும் தன் நெற்றியை கைக்குட்டையால் துடைத்துக்கொள்வார். ஈ, காக்காய் கூட இல்லாத ஸ்டேஷனில் அவர் மட்டும் நகத்தை கடித்தபடி காத்திருப்பார்.

சொல்லி வைத்தது போல் இன்ஸ்பெக்டருக்கு முன்னால் கட்டஞ் சாயா வைக்கப்பட்ட ஐந்தாவது நிமிடம், அந்த அம்பாசிடர் கார் வந்து நிற்கும்.

சரசரவென ஆட்கள் இறங்கி மாதுங்கா காவல்நிலையத்தை சுற்றிலும் சாதாரணமாக நிற்பது போல் நின்று கொள்வார்கள். கண்கள் மட்டும் ஒவ்வொருவரையும் ஸ்கேன் செய்து கொண்டிருக்கும்.

மெல்ல காரை விட்டு வெள்ளை வேட்டி, வெள்ளை சட்டை அணிந்த வரதுபாய் இறங்குவார். நேராக இன்ஸ்பெக்டரின் அறைக்கு செல்வார். எழுந்து நின்றிருந்த இன்ஸ்பெக்டரை சைகையால் அமரச் சொல்லிவிட்டு அவருக்கு முன்னால் நாற்காலியில் அமர்வார். இன்ஸ்பெக்டரின் மகனோ, மகளோ நன்றாகப் படிக்கிறார்களா என்று விசாரிப்பார். எந்த உதவி தேவைப்பட்டாலும் தன்னிடம் தயங்காமல் கேட்கும்படி அறிவுறுத்துவார். நாட்டு நடப்பையும் அரசியலையும் அலசுவார். எழுந்து கை குலுக்குவார். வந்த வழியே திரும்பி காரில் ஏறுவார்.

அதுவரை ஸ்டேஷனை தங்கள் கட்டுப்பாட்டுக்கு கொண்டு வந்திருந்த வரதுபாயின் ஆட்கள் அடுத்த நொடி ஓடி வந்து காரில் ஏறுவார்கள். மறுவிநாடி சீறிக்கொண்டு கார் கிளம்பும். காரின் ஓசை தேய்ந்து மறைந்ததும் பழையபடி மாதுங்கா போலீஸ் ஸ்டேஷன் இயங்க ஆரம்பிக்கும்.

1950களில் தொடங்கி 70களின் இறுதி வரை பம்பாயின் மத்தியப்



பகுதியில் உள்ள அனைத்து காவல்நிலையங்களும் இந்த சிக்னலுக்கு கட்டுப்பட்டுத்தான் அசைந்தன. கட்டஞ் சாயாவை பார்த்துத்தான் பயந்தன. அதிர்ந்து பேசாமல், வெறும் அடையாளங்களை வைத்தே இப்படித்தான் ஒட்டுமொத்த அரசுத் துருப்பையும் தன் விரல் நுனியில் வரதுபாய் ஆட்டிப் படைத்தார். பம்பாயின் முக்கிய தாதாவாக மாறினார்.

இதற்கு காரணம் மொரார்ஜி தேசாய்.

வரதராஜ முனுசாமி முதலியார் பிறந்தது தமிழகத்திலுள்ள வேலூரில். தன் ஏழாவது வயதிலேயே வேலைக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டார். இன்று அண்ணா சாலை என்றழைக்கப்படும் அன்றைய மெட்ராஸ் மவுன்ட் ரோட்டிலுள்ள ஒரு போட்டோ ஸ்டூடியோவில்தான் முதல் பணி. ஆபீஸ் பாய். டீ வாங்கிக் கொடுப்பதும், கூட்டிப் பெருக்குவதும்தான் வேலை. சுபயோக சுபதினத்தில் ரயில் ஏறினார். பம்பாயில் இறங்கினார். கூலி வேலை செய்ய ஆரம்பித்தார். வயிற்றுக்கும், வாய்க்கும் போராட்டம் நடத்தினார்.

திக்கு தெரியாமல் தவித்தபோது, அதிர்ஷ்டம் மொரார்ஜி தேசாய் வடிவில் வந்து நின்றது. அதை இருகரம் கூப்பி வரவேற்றார். ‘வரது பாய்’ ஆக மாறினார்.

சுதந்திரத்துக்கு முந்தைய பம்பாய் மாகாணத்தின் உள்துறை அமைச்சராக இருந்த மொரார்ஜி தேசாய், சுதந்திரம் கிடைத்த பின் அந்த மாகாணத்தின் முதலமைச்சரானார். பதவி ஏற்றதும் அவர் செய்த காரியம், மதுவிலக்கை அமல்படுத்தியது. இந்தச் சட்டம் மட்டும் இயற்றப்படாவிட்டால் வரதராஜ முனுசாமி முதலியார்,

‘வரதுபாய்’ ஆக உருவாகியிருக்கவே மாட்டார். பம்பாயிலும் மாஃபியாக்கள் வேர்விட்டு வளர்ந்திருக்கவே மாட்டார்கள்.

நல்லது செய்வதாக நினைத்து மொரார்ஜி தேசாய் செய்த இந்த செயல், பூமராங் ஆகி, ஒட்டுமொத்தமாக ரிவிட் அடித்துவிட்டது.

இதுபோல் நடக்கும் என இரண்டாயிரம் வருடங்களுக்கு முன்பே ஒருவர் கணித்திருக்கிறார்.

அதனால்தான் குடி நிர்வாகத்தை அரசாங்கமே ஏற்று நடத்த வேண்டும் என்று தன் நூலிலும் குறிப்பிட்டிருக்கிறார். இது சரியா, தவறா என்ற விவாதம் இங்கு அவசியமில்லை. ஆனால், காலம் காலமாக அனைத்து அரசாங்கங்களும் இப்படித்தான் செயல்பட்டு வருகின்றன. நில வருவாய்க்கு அடுத்தபடியாக குடி வருவாயைத்தான் நம்பி இருக்கின்றன.

இந்த வழிமுறையை உலகுக்கு சொன்னவர் வேறு யாருமல்ல... கவுடில்யர்தான். அவர் எழுதிய ‘அர்த்த சாஸ்திரம்’ நூலில், 2.25ம் அத்தியாயத்தில், 17 முதல் 34 வரையிலான பகுதிகள் அரசாங்கம் நடைமுறைப்படுத்த வேண்டிய குடி நிர்வாகம் குறித்தே பட்டியலிட்டிருக்கிறது.

அதிகமாக குடிப்பது தண்டனைக்குரிய குற்றம். இதனை கண்காணிக்க ‘சுராதயக் ஷா’ என ஒரு கண்காணிப்பாளரையும் அவருக்கு கீழ் ‘அதயாக் ஷா’ எனப்படும் 30 பேர்கள் கொண்ட ஒரு குழுவையும் அமைக்க வேண்டும். குடி குறித்த கண்காணிப்பு வலையை விரிக்க வேண்டும்.

மதுபானங்களை வடித்தெடுத்து அதனை நாடெங்கிலும் வணிகம் செய்யும் உரிமை அரசுக்கு மட்டுமே உண்டு. அரசுக்குத் தெரியாமல் மது காய்ச்சி விற்பவர்களை கண்டறிந்து அவர்களுக்கு தண்டனை வழங்கும் பணி, மேலே சொன்ன குழுவுக்கு உரியது. இக்குழு சமூகமெங்கும் கண்காணித்து மது குடிப்பதை ஒழுங்கமைக்க வேண்டும்.மதுஅருந்தும்உயர்குடியினர்(nobels)கண்காணிப்பாளரிடம் அனுமதி பெற்று வீட்டில் சேகரித்து வைத்துக் கொள்ளலாம். மது அருந்துவதற்கு என அரசு கட்டியுள்ள கட்டிடங்களில் மட்டுமே குடிக்க வேண்டும். குறிப்பிட்ட விழாக்காலங்களில் மது காய்ச்சவும் குடிக்கவும் தடை விதிக்க வேண்டும். ஆனால், அந்நாட்களில் வீடுகளில் குடிக்கலாம். மொத்தத்தில் அரசாங்கமே குடிசாலைகளை கட்டி பராமரிக்க வேண்டும். வேறெங்கும் மக்கள் குடிக்கக் கூடாது...

இதுதான் அர்த்த சாஸ்திரத்திலுள்ள பகுதியின் சாராம்சம். இதுவேதான் இன்றைய டாஸ்மாக்கின் ப்ளூ பிரின்டும். பிற்கால சோழர்களின் காலத்தில் வசூலிக்கப்பட்ட ‘ஈழப் பூச்சி வரி’யும் குடிக்குரியது தான். அவ்வளவு ஏன், ஆங்கிலேயர்கள் நம் நாட்டை விட்டு செல்லும்போது, நில வருவாய்க்கு அடுத்தபடியாகக் குடி மூலமான வருவாயே இருந்தது.

இதைத்தான் மாற்றினார் மொரார்ஜி தேசாய். அதைத்தான் கப்பென்று பிடித்துக்கொண்டார் வரதுபாய். இதுதான் சரியான சந்தர்ப்பம் என சாராயம் கடத்தலில் இவர் இறங்கியதுதான் பம்பாயின் தலையெழுத்தையே மாற்றியது.

ஆனால், இந்த கடத்தலை பக்காவாக நெட்வொர்க் அமைத்து செய்ததுதான் இவரது சாதனை. பிழைப்புக்காக பம்பாய் வந்த தமிழர்கள், தெலுங்கர்கள், கன்னடியர்கள், மலையாளிகள்... என அத்தனை 'மதராசிகளையும்' சந்தித்தார். நேர்முகத் தேர்வு வைத்தார். வெற்றி பெற்றவர்களை தன்னுடன் இணைத்துக்கொண்டார்.

டயர் டியூப்தான் சாராய கடத்தலுக்கான சாதனம். டியூப்புக்குள் காற்றுக்கு பதிலாக சாராயத்தை நிரப்பிவிடுவார்கள். நான்கு சக்கர, இரு சக்கர வாகனங்களில் உள்ள ஸ்டெப்னிகள் அனைத்தும் இப்படி சாராயத்தை தாங்கியே நிற்கும். வரதுபாயின் ஆட்கள் அந்த டியூப்பை, ஒவ்வொரு பகுதியிலும் இருக்கும் பன்சர் ஒட்டும் கடையில் இரவில் போட்டு விடுவார்கள். மறுநாள் அந்தந்த பகுதியில் உள்ள இவரது ஆட்கள், சம்பந்தப்பட்ட கடைக்குச் சென்று தனக்குத் தேவையான டயரை, டியூப்புடன் பெற்றுக்கொள்வார். பிறகென்ன... மறைவான இடத்தில் ஜாம் ஜாம் என்று விற்பனை நடக்கும்.

இந்த வழிமுறையில்தான் சாராய கடத்தல் நடக்கிறது என்பதை இறுதிவரை போலீசார் கண்டுபிடிக்கவேயில்லை என்பதுதான் ஹைலைட். இந்த கடத்தல் தொழிலில் வரதுபாய் ஈடுபட்ட சமயத்தில்தான் மாஃபியாக்களின் வரலாற்றில் புகழ்பெற்ற அந்த சந்திப்பு நடந்தது.

சிவாஜி டெர்மினல்ஸில் இருந்த ஷீரடி பாபா கோயிலுக்கு இவரை பார்ப்பதற்காகவே ஜெனாபாய் வந்தார்.

'சொல்லும்மா... என்ன விஷயம்?' - வரதுபாய் புன்னகையுடன் கேட்டார்.

'கஷ்டத்துல இருக்கேன் பாய்...' - கண்கலங்கினார் ஜெனாபாய்.ஒரு நொடி கண்மூடிய வரதுபாய், தன் முன்னால் நின்ற பெண்மணியை ஏறிட்டார். 'உன்னைப் பத்தி கேள்விப்பட்டிருக்கேன் ஜெனாபாய். அரிசி கடத்தல்ல நீ கில்லாடின்னு தெரியும். உன் கஷ்டத்தை நான் போக்கறேன். என் கூட சேர்ந்துடு...'

'நன்றி பாய்... நான் என்ன வேலை செய்யணும்?'

'சாராயம் கடத்தணும்...'

'பாய்...' அலறினார் ஜெனாபாய். 'எங்க மதம் இதை அனுமதிக்கறதில்ல...'

'எந்த மதமும் சாராய கடத்தலை அனுமதிக்கறதில்ல ஜெனாபாய்... ஆனா, நாலு பேருக்கு நல்லது செய்யணும்னா ஒரு தப்பை நாம தாராளமா செய்யலாம்...'

செய்தார் ஜெனாபாய். பற்றி எரிந்தது பம்பாய்.

4

தன்னையும் அறியாமல் ஜெனாபாயை நம்பர் ஒன் கிரிமினலாக மாற்றியவர் கன்னையாலால் மனேக்லால் முன்ஷி. சுருக்கமாக கே.எம்.முன்ஷி.

இன்றைய குஜராத்தில் பிறந்து வளர்ந்த முன்ஷி, சுதந்திரப் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டவர். எழுத்தாளர். கல்வியாளர். சிந்தனையாளர்.

குஜராத் இலக்கியத்தின் முன்னோடி. தொழில் முறையில் வழக்கறிஞர். 'பாரதீய வித்யா பவனை' தோற்றுவித்தது இவர்தான்.

அப்படிப்பட்டவர் ஆங்கிலேயர் ஆட்சியில் பம்பாய் மாகாணத்தின் உள்துறை அமைச்சராக இருந்தார். ஆண்டு, 1939. அப்போது காவல் துறையில் இவர் உருவாக்கிய ஓர் அமைப்புதான் 'எக்ஸ் டிவிஷன்'. இதன் தலைமை அலுவலகம் பல்டான் ரோட்டிலுள்ள ஒரு கட்டிடத்தில் இயங்கி வந்தது. அந்த கட்டிடத்தைதான் இன்று 'ஹஜ் ஹவுஸ்' என்று அழைக்கிறோம்.

பம்பாய் மாகாணத்தில் எந்த குற்றச் செயலும், கடத்தலும் நடக்காதபடி இந்த 'எக்ஸ் டிவிஷ' னை சேர்ந்தவர்கள் பார்த்துக் கொண்டார்கள்.

அந்த நேரம் பார்த்து இரண்டாம் உலக யுத்தம் ஆரம்பமானது. எனவே, 'எக்ஸ் டிவிஷ'னில் இருந்தவர்களை அப்படியே போர் நடவடிக்கைக்கு ஆங்கிலேய அரசு பயன்படுத்திக்கொண்டது.

யுத்தம் முடிந்ததும் நம் நாட்டுக்கு சுதந்திரம் கிடைத்தது. பம்பாய் மாகாணத்தின் முதல்வராக மொரார்ஜி தேசாய் பதவி ஏற்றார்.

பதவிப் பிரமாணம் எடுத்த கையோடு அவர் செய்த காரியம், 'எக்ஸ் டிவிஷ'னுக்கு தூசு தட்டியதுதான். கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் முன்ஷி எப்படி இந்தப் பிரிவை செயல்படுத்த நினைத்தாரோ அப்படியே மொரார்ஜி தேசாயும் அமல்படுத்தினார். இந்தப் பிரிவின் சேவையை அடுத்தடுத்து வந்த ஆட்சியாளர்களும் பயன்படுத்திக் கொண்டார்கள்.

1962ல் இந்த 'எக்ஸ் டிவிஷன்'தான் ஆண் மாஃபியாக்களே பயப்படும் அளவுக்கு ஜெனாபாயை நச்சுப் பாம்பாக மாற்றியது.

அந்த ஆண்டில், கூவர்ஷா டின்ஷா பெசாடியாவும், ராமாகன்ட் டெம்கரும் இந்தப் பிரிவில் சப் இன்ஸ்பெக்டராக பொறுப்பேற்றார்கள். பம்பாயில் நடைபெற்று வந்த சாராய கடத்தல்தான் இவர்கள் இருவரும் எதிர்கொண்ட முக்கியமான தலைவலி.

எந்த மாத்திரை போட்டும் வலி நீங்கவில்லை; எந்தத் தைலமும் இதற்கு சரிப்பட்டு வரவில்லை. என்னதான் செய்வது?

தங்கள் குழுவினருடன் ரூம் போட்டு ஆலோசித்தார்கள்.

அனைவருமே இதற்கெல்லாம் வரதுபாய்தான் காரணம் என்று சுட்டிக்காட்டினார்கள். ஆனால், பஸ் டிக்கெட் அளவுக்கு கூட ஆதாரம் கிடைக்கவில்லை.

சரியாக இந்த நேரத்தில்தான் 'எக்ஸ் டிவிஷ'னின் பார்வை ஜெனாபாய் பக்கம் திரும்பியது. வரதுபாயின் வலது கை. சாராய கடத்தலில் இரண்டாவது அக்யூஸ்ட். அவரைப் பிடித்து நாலு தட்டு தட்டினால் உண்மையை கக்கமாட்டாரா என்ன? மென்னியை திருகினால் நிச்சயம் அப்ரூவராக மாறிவிடுவார். கோழி அமுக்குவதுபோல் வரதராஜ முதலியாரை பிடித்துவிடலாம்.

திட்டம் போட்டார்கள். யாருக்கும் எந்தத் தகவலும் சொல்லாமல் திடுதிடுப்பென்று ஜெனாபாயின் வீட்டை சோதனையிட்டார்கள்.

ஆனால், இப்படி ரெய்டு நடக்கும் என்ற விஷயம் ஜெனாபாய்க்கு முன்பே தெரியும். ஓதியவர், ஒரு காவலர்!

அந்தளவுக்கு ஜெனாபாயின் நெட் ஒர்க் எதிரிகளின் கூடாரத்துக்குள்ளும் விரிந்திருந்தது. அப்படி விரிவுபடுத்தச் சொன்னவர் வரதுபாய்.

எப்போது சாராய கடத்தலில் ஜெனாபாய் இறங்கினாரோ அப்போதே இந்த வித்தையை வரதுபாய் அவருக்கு கற்றுக் கொடுத்துவிட்டார்.

காவலர்களை சமாளிக்க, அவர்களையே நண்பர்களாக்கிக் கொள். மாதாமாதம் படி அள. ஒவ்வொரு போலீஸ்காரரின் பலவீனத்தையும் கண்டறி. அதை அப்படியே சாதகமாக்கிக் கொள். கொண்டார் ஜெனாபாய்.

அவர் வசித்த இடத்தைச் சுற்றிலும் இருந்த அனைத்து காவலர்களையும் தன் நட்பு வளையத்தில் இணைத்துக் கொண்டார். ஏட்டு முதல் இன்ஸ்பெக்டர் வரை அனைவரது மனைவிமார்களும், சகோதரிகளும், தாயாரும் ஜெனாபாயின் சிநேகிதிகளாக மாறினார்கள். வாரம்தோறும் சந்தித்தார்கள். மகிழ்ச்சியையும், துக்கத்தையும் பரிமாறிக்கொண்டார்கள்.

எதிர்பாராத பரிசுகள் மாதம்தோறும் அவர்கள் வீடு தேடி செல்லும். நல்லது, கெட்டது என சகலத்திலும் அவர்களுடன் ஜெனாபாய் இருந்தார். அவர்களில் ஒருவராக வளைய வந்தார்.

எனவே, காவல்துறை நடவடிக்கை அனைத்தும் ஜெனாபாயின் விரல் நுனிக்கு வந்து சேர்ந்தன.

இதற்குள் அவருக்கு இரண்டாவது திருமணம் நடந்திருந்தது. இக்பால் காந்தி என்ற முன்பே திருமணமானவருடன் 'வசிக்க' ஆரம்பித்திருந்தார். முதல் கணவருக்கு பிறந்த குழந்தைகளும், இரண்டாவது கணவருக்கு பிறந்த குழந்தைகளுமாக குடும்பம், பல்கலைக்கழகமாக வளர்ந்திருந்தது.

ஆனால், சாப்பாட்டுக்கு எந்த கஷ்டமும் இல்லை. வரதுபாய்

வழிகாட்டலில் திறமையாக சாராயத்தை கடத்த ஆரம்பித்திருந்தார். இவர்கள் இருவருக்குமான ஒப்பந்தம் டிகிரி சுத்தமானது.

வரதராஜ முதலியாரின் ஆட்கள் இரு சக்கர - நான்கு சக்கர வாகன டயர் டியூப்பில் சாராயத்தை நிரப்பி பஞ்சர் கடையில் கொடுத்துவிடுவார்கள். அதை தனக்கென ஒதுக்கப்பட்ட பகுதிக்கு சப்ளை செய்ய வேண்டியது ஜெனாபாயின் பணி. வரும் லாபத்தில் சரிபாதியை எடுத்துக் கொள்ளலாம். எடுத்துக் கொண்டார். பரம சவுக்கியமாக வாழ்ந்தார்.

ஜெனாபாயின் பக்கத்து வீட்டில் வசித்து வந்த விக்கி, காலப்போக்கில் அவரது அல்லக்கையாக மாறினார். 'நாயகன்' படத்தில் இடம்பெற்ற ஜனகராஜ் கதாபாத்திரம் போல் என்று வைத்துக்கொள்ளுங்கள்.

இப்படி வாழ்வாங்கு வாழ்ந்த ஜெனாபாயின் வீட்டில் பலமுறை காவலர்கள் சோதனை நடத்தியிருக்கிறார்கள்.

ஆனால், ஒருமுறை கூட அவர் பிடிபட்டதேயில்லை. காரணம், நெட் ஒர்க். சிக்னல் கிடைத்ததும் பக்காவாக 'சரக்கை' அப்புறப்படுத்திவிடுவார்.அது எந்த இடம் என்று தெரிந்தால் மயக்கமே வந்துவிடும்.

ஜெனாபாயின் வீட்டில் ஒரு பூஜை அறை உண்டு. அவர் சர்வமத பக்தை என்பதால் அங்கு எல்லா சாமிகளின் படங்களும் இருக்கும். அனைத்தும் சொல்லிவைத்தது போல் மரப்பெட்டியின் மீது சாத்தி வைக்கப்பட்டிருக்கும்.

சாம்பிராணியும், ஊதுவர்த்தியும் கமகமக்கும். கிட்டத்தட்ட கோயிலின் வாசனையை அவரது வீட்டு பூஜையறையில் நுகரலாம்.

காவலர்கள் ரெய்டு வருகிறார்கள் என்று தெரிந்ததுமே அந்த பூஜையறையில்தான் சாராயத்தை பதுக்குவார்.

சாமிப் படங்கள் மரப்பெட்டியின் மீது சார்த்தி வைக்கப்பட்டிருக்கிறதல்லவா? அந்தப் பெட்டிக்குள்தான் சாராய டியூப்கள் கமுக்கமாக உறங்கிக் கொண்டிருக்கும்.

பூஜை அறையை சோதனையிட எந்த போலீசாருக்கு மனம் வரும்?

எனவே, ரெய்டு நடத்தி, எதுவும் கிடைக்காமல் வெறும் கையுடன் திரும்பிவிடுவார்கள்.

இப்படித்தான் பல ஆண்டுகள் ஜெனாபாய் பிடிபடாமலேயே இருந்தார். 1962ம் ஆண்டு இதற்கு முற்றுப்புள்ளி வைத்தது. 'எக்ஸ் டிவிஷ'னைச் சேர்ந்த காவலர்கள் கூவர்ஷா மற்றும் ராமாகன்ட் தலைமையில் ஜெனாபாயின் வீட்டை சல்லடையிட்டு சலித்தார்கள்.

முன்பு போல் அவரது வீட்டு பூஜை அறைக்கு அவர்கள் மரியாதை காட்டவில்லை. சாமிப் படங்களை அப்புறப்படுத்திவிட்டு மரப்பெட்டிகளை தலைகீழாக கவிழ்த்தார்கள்.

ஆனால், காற்றுதான் வந்தது. சாராய டியூப் கிடைக்கவேயில்லை.

ஜெனாபாய், தனக்குள் புன்னகைத்துக் கொண்டார். ரெய்டு விஷயம் அறிந்ததுமே அவர்தான் சுதாரித்துவிட்டாரே..?

இந்த முறையும் வெறுங்கையுடன்தான் திரும்ப வேண்டுமா?

கூவர்ஷா டின்ஷா பெசாடியாவும், ராமாகன்ட் டெம்கரும் சோர்ந்து போனார்கள். தலையை கவிழ்த்தபடி தங்கள் குழுவினர் பின்தொடர வெளியே வந்தார்கள்.

சட்டென்று கூவர்ஷாவுக்கு பொறி தட்டியது.

திரும்பி ராமாகன்ட்டை பார்த்தார். ராமாகன்ட் மனதிலும் அதே பொறிதான் கொழுந்துவிட்டு எரிந்தது.

எனவே, கண்களால் பேசிக்கொண்டவர்கள், சிறிதும் தாமதிக்காமல் விக்கியின் வீட்டுக்குள் நுழைந்தார்கள். இண்டு, இடுக்கு விடாமல் தேடினார்கள்.

எதுவும் கிடைக்கவில்லை.

அதற்காக பின்வாங்கவில்லை. முயற்சியை கைவிடவில்லை. எஞ்சியிருந்த வாட்டர் டேங்கை திறந்தார்கள்.

அதிர்ந்து போனார்கள்.

காரணம், அந்த வாட்டர் டேங்கில் தண்ணீரே இல்லை. பதிலாக சாராய டியூப்கள் நிரம்பி வழிந்தன.

அனைத்தையும் ஒன்று சேர்த்தால் எத்தனை லிட்டர் தேறும்? மலைத்துப் போனார்கள். பம்பாயின் கல்லீரல் இப்படித்தான் பழுதாகிறதா?

கொதித்துப் போனவர்கள் ஜெனாபாயை கைது செய்து தரதரவென நடுரோட்டில் இழுத்துச் சென்றார்கள்.

மறுநாள் அனைத்து செய்தித்தாள்களின் தலைப்புச் செய்தியும் இதுதான். விலங்கு மாட்டிய கையுடன் ஜெனாபாய் ஒரே போஸில் அனைத்து நாளிதழ்களின் முதல் பக்கத்தையும் நிரப்பினார்.

சந்தேகமே வேண்டாம். சுதந்திரத்துக்கு பிறகான இந்தியாவில், பம்பாயை குலுங்க வைத்த முதல் கைது இதுதான்.

சரித்திரம் அப்படித்தான் பதிவு செய்திருக்கிறது.

இந்த அரெஸ்டுக்கு பிறகே ஜெனாபாய் நம்பர் ஒன் கிரிமினலாக மாறினார்.

இதனையடுத்தே வரதுபாயும் சாராய பிசினசை விட்டுவிட்டு அடுத்த கட்டத்துக்கு நகர்ந்தார்.

அது தங்கக் கடத்தல்.

மட்டுமல்ல, இந்தித் திரையுலகில் மாஃபியாக்கள் வலது காலை எடுத்து வைத்து நுழைந்ததும் இந்த கைதுக்கு பிறகுதான்.

5

எது நடக்கும் என்று எதிர்பார்த்து 'எக்ஸ் டிவிஷன்' திட்டமிட்டு ஜெனாபாயை கைது செய்ததோ, அது நடக்கவேயில்லை.

யெஸ், வரதராஜ முதலியார் நிலைகுலைந்து போகவேயில்லை. இதுதான் அவரது பலம். இந்த மன உறுதிதான் அவரது அடையாளம். அதனால்தான் பம்பாய் காவல்துறையே அவரைப் பார்த்து நடுங்கியது.

ஒரேயொரு சின்ன புள்ளி விவரம்.

ஆண்டுக்கு 12 கோடி ரூபாய் Turn over... இதுதான் 1960களின் தொடக்கத்தில் வரதராஜ முதலியாரின் லாபக் கணக்கு. இவையனைத்துமே சாராய கடத்தல் வழியாக வந்ததுதான். இது மிகைப்படுத்தப்பட்ட தொகையாகவும் இருக்கலாம் அல்லது குறைந்த எண்ணிக்கையாகவும் தெரியலாம்.

எது எப்படியானாலும் லிக்கர் ஸ்மக்லிங் வழியாக வரதுபாய் கோடிகளில் புரண்டது மட்டும் சத்தியமான உண்மை. இதற்குத்தான் முற்றுப்புள்ளி வைக்க 'எக்ஸ் டிவிஷன்' முயன்றது. ஆனால், அது நடக்கவேயில்லை. காரணம் அவரது பழகும்தன்மை.

பம்பாயின் மிகப்பெரிய தீய சக்தியாகவே அவரை காவல்துறை அறிக்கைகள் எல்லா காலகட்டத்திலும் சித்தரித்திருக்கின்றன. ஆனால், இவை அனைத்தும் வெறும் காகிதங்களில் மட்டுமே இடம்பெற்றன என்பதுதான் முக்கியம்.

ஏனெனில், தனிப்பட்ட முறையில் காவல்துறையைச் சேர்ந்த அடிமட்ட ஊழியர்கள் அனைவருமே வரதுபாயை கடவுளாக வணங்கினார்கள். தங்கள் மீட்பராக கொண்டாடினார்கள். சொல்லப்போனால் அவர்களது நல்லது, கெட்டதுகளில் பங்கெடுத்து வரதுபாய் தோள் கொடுத்திருக்கிறார்.

இதே நிலைதான் அடித்தட்டு மக்கள் விஷயத்திலும். தனக்கு தெரிந்து யாரையும் அவர் பட்டினி கிடக்க விட்டதில்லை. நோய்வாய்ப்பட்டு இறக்க அனுமதித்ததில்லை.

இதையெல்லாம் ஓரளவு நேர்மையாக பதிவு செய்திருப்பவர், இயக்குநர் மணிரத்னம் மட்டுமே. வரதுபாயை மையமாக வைத்து அவர் இயக்கிய 'நாயகன்' படம், இந்த உண்மையைத்தான் சில கற்பனைகளுடன் வெளிச்சத்துக்கு கொண்டு வந்தது.

இப்படிப்பட்ட வரதுபாயா நிலைகுலைந்து போவார்..? நோ சான்ஸ்.

ஆனால், கைது செய்யப்பட்ட ஜெனாபாய் மனத்தளவில் ஆட்டம் கண்டது உண்மை.

பைதோனி மற்றும் வி.பி.ரோட் காவலர்கள் அவரை பெண்டு நிமிர்த்திவிட்டார்கள். அடி என்றால் அப்படியொரு அடி. முட்டுச்

சந்தில் ஓடவிட்டு வெளுத்து வாங்குவதுபோல் சிறை கம்பிகளுக்குள் இவரது முட்டியை பெயர்த்துவிட்டார்கள்.

என்றாலும் வரதுபாயை மட்டும் இவர் காட்டிக் கொடுக்கவில்லை. போலவே தன் இடங்களில் எந்த சரக்கையும் வைத்து ரெய்டு நேரத்தில் வரதராஜ முதலியார் சிக்கிக்கொள்ளவும் இல்லை.

ஜெனாபாயிடம் இருந்து உண்மையை வரவழைப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட 'ஆபரேஷனில்' முக்கிய பங்கு வகித்தவர் சப்-இன்ஸ்பெக்டர் சி.டி.பெசாடியா. அப்போது பம்பாய் போலீஸ் கமிஷனராக இருந்த எஸ்.மஜீதுல்லா, இவரது 'சேவை'யை பாராட்டி பதக்கம் வழங்கியிருக்கிறார். பின்னாளில் ஊழல் தடுப்புத்துறையின் அதிகாரியாக உயர்ந்து, ஓய்வு பெறுவதற்கு முன் க்ரைம் பிரான்சின் உதவி கமிஷனராக சி.டி.பெசாடியா பதவி வகித்தது எல்லாம் தனிக்கதை.

மொத்தத்தில் ஜெனாபாயை நாயை அடிப்பது போல் அடித்தவர் இவர்தான். கூடவே இன்னொரு காரியத்தையும் சி.டி.பொசாடியா செய்தார். அதுதான், ஜெனாபாயை 'விஷப்பெண்' ஆக மாற்றியது.

அப்போது முதல்வராக இருந்த யஷ்வந்த்ராவ் சவானை தனிப்பட்ட முறையில் ஜெனாபாய் சந்திக்க ஏற்பாடு செய்தார். குடும்ப கஷ்டம் காரணமாகவே சாராய கடத்தலில், தான் இறங்கியதாக முதல்வரிடம் சொல்லி அழுதிருக்கிறார் ஜெனாபாய். இதன் பிறகு அவர்கள் இருவரையும் தனியாக பேசவிட்டு சி.டி.பொசாடியா வெளியே வந்துவிட்டார். மூடிய அறைக்குள் கிட்டத்தட்ட அரைமணி நேரம் என்ன நடந்தது, இருவரும் என்ன பேசினார்கள் என்று அன்றும் சரி, இன்றும் சரி, யாருக்கும் தெரியாது.

ஆனால், முதல்வரை சந்தித்தபின் ஜெனாபாய், ஆளே மாறிவிட்டார்.

பாலுக்கும் காவல்... பூனைக்கும் தோழன்... இதுதான் இவரது இயல்பாக மாறிவிட்டது.

யெஸ், மிகப்பெரிய தாதாவாக விளங்கிய அதே நேரம், போலீஸ் இன்ஃபார்மராகவும் விளங்கினார். இதில் என்ன வேடிக்கை என்றால், இந்த கைதுக்கு பிறகு இவரை மாஃபியாவின் அங்கமாக காவல்துறை கருதவில்லை. போலவே தங்களுடன் இருந்துகொண்டே போலீசுக்கும் தகவல் சொல்கிறார் என்று மாஃபியாக்களும் சந்தேகிக்கவில்லை.

அந்தளவுக்கு ஆடு புலி ஆட்டத்தை திறமையாக விளையாடினார் ஜெனாபாய்.

உதாரணத்துக்கு பம்பாயின் ஏழு இடங்களில் ஒரே நேரத்தில் கடத்தல் நடக்கப் போகிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அந்த ஏழு இடங்களும் என்ன என்ன என்பது இவருக்கு முன்கூட்டியே தெரியும். ஏனெனில் இவர் முன்னால்தான் அந்த விவரங்களே பேசப்பட்டிருக்கின்றன. திட்டமிடப்பட்டிருக்கின்றன.

இந்த ரகசிய மீட்டிங் முடிந்ததுமே காவல்துறையை தொடர்பு

கொள்வார். ஏழு இடங்களில் எந்த இரு இடங்களில் குறைந்த மதிப்புள்ள 'சரக்குகள்' கைமாற இருக்கிறதோ -அந்த இரு இடங்களை மட்டும் போலீசாரிடம் தெரிவிப்பார்.

யார் வரப்போகிறார்கள், எந்த இடத்தில், என்ன வகையான சங்கேத மொழிகளில் அவைகள் நடக்கப் போகின்றன... அட்ரஸ் கேட்கும் விதமாகவா; தீப்பெட்டி கேட்பது போலவா; சிவப்பு சட்டை நீல சட்டையை தேடுமா அல்லது காக்கி பேன்ட் நீல ஜீன்ஸை தேடுமா; கைமாறப்போவது கருப்பு பெட்டியா சாம்பல் நிற பெட்டியா; இருவருமே கூலிங் க்ளாஸ் அணிந்திருப்பார்களா; பெட்டியில் இருப்பது பணம் என்றால் எவ்வளவு தொகை சரக்கு என்றால் அதன் மதிப்பு...என அத்தனையும் புட்டுப் புட்டு வைத்துவிட்டு கமுக்கமாக வந்துவிடுவார்.

ஜெனாபாய் சொன்ன தகவலை வைத்து காவல்துறை சம்பந்தப்பட்டவர்களை கையும், களவுமாக பிடித்துவிடும். ஆனால், சிக்கியவர்கள் அப்ரன்டீஸ் என்பதால் மேற்கொண்டு பெரிய மீனை எல்லாம் பிடிக்க முடியாது. பிடித்தவரை லாபம் என செய்தித்தாள்களுக்கு போஸ் கொடுத்துவிட்டு பதவி உயர்வு வாங்கி செட்டில் ஆகிவிடுவார்கள்.

குறிப்பிட வேண்டிய விஷயம், மாஃபியா தலைமை குழுவுக்கு இவர் மீது ஊசிமுனை அளவுக்கு கூட சந்தேகம் வந்ததில்லை என்பதுதான். காரணம், கடத்தல் நடந்தது ஏழு இடங்களில். அவை எந்தெந்த இடங்கள் என்பது ஜெனாபாய்க்கு துல்லியமாக தெரியும். இவர் போலீஸ் இன்ஃபார்மராக இருந்தால் ஏழு இடங்களையும்தானே காட்டிக் கொடுத்திருப்பார்? பதிலாக இரு இடங்களைத்தானே போலீஸ் மோப்பம் பிடித்திருக்கிறது? எனவே காவல்துறைக்கு செய்தி சொன்னது ஜெனாபாய் அல்ல என்ற முடிவுக்கு வந்தார்கள். 'யார் யாரையோ' சந்தேகப்பட்டு கட்டம் கட்டினார்கள்.

ஒருவேளை 'எல்லாம்' முடிந்த பிறகு 'என்னது... ஏழு இடங்களில் பொருள் கைமாறியதா?' என்று விஷயம் தெரிந்து காவல்துறை அதிர்ந்தாலும், ஜெனாபாய் அலட்டிக் கொள்ளமாட்டார்.

"ஏழு இடம்னு சத்தியமா எனக்குத் தெரியாதுங்க... இரண்டு இடம்னுதான் தகவல் கிடைச்சது. அதை அப்படியே உங்ககிட்ட சொல்லிட்டேன்..."

இப்படியாக, காவல்துறையும் இவரை நம்பியது, மாஃபியா தலைமையும் இவரது சேவையை பயன்படுத்திக் கொண்டது.

ஏற்கனவே காவலர்களும், அவர்களது வீட்டுப் பெண்களும் ஜெனாபாயின் தோழிகள் என்பதால் இந்த 'ஆள்காட்டி' வேலை கச்சிதமாக நடந்தது. 'காவல்துறை நம் நண்பன்' என்ற அடிப்படை கோட்பாட்டுடன் மாஃபியா தலைமை இயங்குவதால் ஜெனாபாயின் இந்த நட்பு சந்தேகத்துக்குரிய விஷயமாக மாறவில்லை.

வாழ்வாங்கு வாழ்ந்தார் ஜெனாபாய்.

அப்படி இவர் அதிகம் சென்றது ஒரு கான்ஸ்டபிள் வீட்டுக்கு. அந்த ஏட்டின் பெயர், இப்ராஹிம் கஸ்கர். அவரும் அவரது மனைவி அமினாவும் இவரை தங்கள் வீட்டு அங்கத்தினராகவே பார்த்தார்கள். வரவேற்றார்கள். இவர்களது இளையமகன் தனது இன்னொரு தாயாகவே ஜெனாபாயை நினைத்தான். 'பாட்டி'யாகவே உரிமை கொண்டாடினான்.

ஜெனாபாய் இப்படி ஆடு புலி ஆட்டம் ஆடி வந்த நேரத்தில்தான் அந்த வரலாற்று சிறப்புமிக்க திருப்பத்தை ஏற்படுத்தினார் வரதராஜ முதலியார்.

வெறும் சாராய கடத்தல் மட்டும் போதாது. குண்டு சட்டியில் குதிரை ஓட்டுவது போல் இருக்கிறது. அடுத்த கட்டத்துக்கு நகர வேண்டும். நெட் ஒர்க்கை விரிவு படுத்த வேண்டும்.

அதற்கு என்ன வழி என்று யோசித்தவர் தங்கத்தை கடத்தலாம் என்ற முடிவுக்கு வந்தார்.

மத்திய கிழக்கு நாடுகள் - குறிப்பாக துபாய்தான் தங்கத்துக்கு பெயர் போனது. அங்கிருந்துதான் 'பொருளை' எடுத்து வர வேண்டும். ஆனால், அங்கு, தானோ தனது ஆட்களோ செல்ல முடியாது. இதற்கு மாற்று என்ன..?

புருவத்தை சுருக்கியவர், ஒரே விநாடியில் அந்த முடிவுக்கு வந்தார். உலக மாஃபியாக்களின் சரித்திரத்தையே மாற்றி அமைத்த முடிவு அது.

அதுதான் 'ஐக்கிய முன்னணி'.

தன்னைப் போலவே பம்பாயின் முடிசூடா மாஃபியா மன்னர்களாக விளங்கிய ஹாஜி மஸ்தான், கரீம் லாலா ஆகிய இருவருடனும் கைகோர்த்தார்.

இதில் ஹாஜி மஸ்தான் நமக்கு நன்கு அறிமுகமானவர்தான். தமிழகத்தைச் சேர்ந்த இவரது வாழ்க்கையின் ஒரு பகுதிதான் ரஜினி நடித்த 'தீ' திரைப்படம்.

மட்டுமல்ல, முதன் முதலில் இந்தி சினிமாவில் நுழைந்த மாஃபியாவும் ஹாஜி மஸ்தான்தான். 'சொந்தமாக' அரசியல் கட்சி ஒன்றை முதலில் தொடங்கிய தாதாவும் இவரேதான்.

அனைத்தையும் விட வரதுபாய் என்று இவர்கள் இருவரையும் ஜெனாபாய்க்கு அறிமுகப்படுத்தினாரோ, அன்று மும்பையாக மாறிய பம்பாய்க்கு சனி பிடித்தது.

காரணம், ஜெனாபாயின் காலைச் சுற்றியபடி இதையெல்லாம் கவனித்தபடியே ஏட்டு இப்ராஹிமின் இளைய மகன் வளர்ந்து கொண்டிருந்தான். அவன்தான், இன்றும் தேடப்படும் குற்றவாளியாக இருக்கும் தாவூத் இப்ராஹிம்.

# 6

ம்க்கும். மாஃபியாக்களின் ஐக்கிய முன்னணிக்கு வரதராஜ முதலியார் மட்டும் விரும்பினால் போதுமா? சக டான் ஆன ஹாஜி மஸ்தான் இதற்கு ஒப்புக் கொள்ள வேண்டாமா?

இந்தக் கேள்வி ஜெனாபாயின் மனதில் மட்டுமல்ல, வரதுபாயின் அடிமட்ட அடியாட்கள் மனதிலும் சுற்றிச் சுற்றி வந்தது. ஏனெனில் தங்கக் கடத்தல் என்றால் அது ஹாஜி மஸ்தான்தான். அவர் அளவுக்கு 'திறமையாக' தங்கத்தை கடத்துபவர்கள் பம்பாய் மாகாணத்திலேயே கிடையாது. அப்படித்தான் காவல்துறைரிக்கார்டும் பதிவு செய்திருக் கிறது. அப்படியேதான் மக்களின் மனதிலும் பதிந்திருக்கிறது.

அப்படியிருக்களப்படி அவர் கூட்டுக்குஒப்புக்கொள்வார்? ஆனால், யாரும் எதிர்பார்க்காத வகையில், எந்தக் கேள்வியும் கேட்காமல் ஹாஜி மஸ்தான் இந்த கூட்டணிக்கு பச்சைக்கொடி காட்டினார்.

இதற்கு காரணம், மஸ்தானும் தமிழர், வரதுபாயும் தமிழர் என்பதா?

நிச்சயமாக இல்லை. வேறொரு அடிப்படை சரடு இருக்கிறது. இதை முதலில் உணர்ந்தவர் ஜெனாபாய்தான். அதனால்தான் அந்த 'காரணத்தையே' தனக்கு சாதகமாக பயன்படுத்திக் கொண்டு ஹாஜி மஸ்தானின் 'தத்து' அக்காவானார். தங்கக் கடத்தலிலும் ஜொலித்தார். மாஃபியா ராணிகளிலும் முதலிடம் பிடித்தார்.

அந்த சரடு வேறு யாருமல்ல, ஹைதர்மிர்ஸாதான். ஹாஜி மஸ்தானின் அப்பா. இத்தனைக்கும் இந்த கூட்டு ஏற்பட்டபோது ஹைதர் மிர்ஸா உயிருடன் இல்லை. என்றாலும், அவர் சொன்ன அறிவுரைதான் மஸ்தானை ஆதி முதல் அந்தம் வரை வழிநடத்தி வந்திருக்கிறது.

ஹாஜி மஸ்தான், தவழ்ந்தது தமிழகத்திலுள்ள கடலூரை அடுத்த பானன்குளம் கிராமத்தில். பிறப்புச் சான்றிதழ் வழி பார்த்தால், இவர் பிறந்தது மார்ச் 1, 1926ல். அப்பா ஹைதர் மிர்ஸா ஏழை கூலிவிவசாயி. ஒரு வேளை உணவுக்கே மொத்த குடும்பமும் ததுங்கினத்தோம் போட்டது.

எனவே, 1934ம் ஆண்டு குடும்பத்துடன் பம்பாய்க்கு வந்து சேர்ந்தார். சின்னச் சின்னதாக பல வேலைகளை பார்த்தவர், ஒருநாள் க்ராஃபோர்ட் மார்க்கெட்டுக்கு அருகில் இருந்த பெங்காலிபுராவில் சைக்கிள் ரிப்பேர் கடை ஒன்றை ஆரம்பித்தார். அப்போது மஸ்தானுக்கு வயது 8தான்.

அதிகாலை முதல் நள்ளிரவு வரை அப்பாவும், மகனும் மாடாய் உழைத்தார்கள். ஒருநாளைக்கு ரூபாய் ஐந்து கிடைத்தது. அதை வைத்து மொத்த குடும்பமும் பசியாறியது.

இரவு கடை மூடியதும் மஸ்தான் தெற்கு பம்பாயில் உள்ள க்ராண்ட் ரோட் வழியாக தன் வீட்டுக்கு நடந்து செல்வார். அது பணக்காரர்கள் வசிக்கும் ஏரியா. தெருவெங்கும் பங்களாக்கள்தான் நிரம்பி வழிந்தன. அந்த மாளிகைகளை அண்ணாந்து பார்ப்பார். பார்க்கிங்கில் நிறுத்தப்பட்டிருந்த கார்களை ஏக்கத்துடன் மேய்வார். அப்படியே அழுக்கடைந்த தன் சட்டையையும் கிழிந்த அரைக்கால் டவுசரையும் பார்த்து பெருமூச்சு விடுவார். இறுதியாக க்ரீஸ் படிந்த தன் கைகளை ஒரு பார்வை பார்த்துவிட்டுத்தான் மேற்கொண்டு நடப்பார்.

இப்படித்தான் பல ஆண்டுகள் மஸ்தானின்இரவுப் பொழுதுகள் கழிந்தன. 'இதுபோன்ற குடியிருப்பில் இப்படிப்பட்ட வசதிகளுடன் தன்னால் வாழ முடியுமா?' விடை தெரியாத இந்த வினாவை தன்னுள் கேட்டுக்கொண்டே உறங்குவது வாடிக்கையானது. குடும்பத்தை காப்பாற்ற வேண்டிய பொறுப்பும், கல்வி அறிவின்மையும் எதிர்காலத்தை இருண்ட காலமாக்கியது.

18 வயதானபோது மஸ்தான் ஒரு முடிவுக்கு வந்தார். சைக்கிள் ரிப்பேர் கடை வேலைக்கு ஆகாது. வேறு தொழிலுக்கு மாற வேண்டும். மாதம் பதினைந்து ரூபாய் கிடைத்தால் கூட போதுமானது. என்ன செய்யலாம்?

கண் முன்னால் துறைமுக கூலியாள் பணி விரிந்தது. அதற்கு செல்ல புறப்பட்டார். இவரது அப்பாவுக்கு பரம திருப்தி. மகனை நேர்மையாகவும் ஒழுக்கமாகவும் வளர்த்திருக்கிறோம். நிச்சயம் பிழைத்துக்கொள்வான். ஆசீர்வதித்து அனுப்பி வைத்தார்.

பம்பாய் துறைமுகத்தில் வலது காலை எடுத்து வைத்து கூலியாளாக மஸ்தான் நுழைந்தது 1944ல். ஏமன் (இந்த நாட்டிலுள்ள பெட்ரோல் பங்கில் பணிபுரியத்தான் திருபாய் அம்பானி இளம் வயதில் சென்றார். பிறகு படிப்படியாக அவர் வளர்ந்தது எல்லாம் தனி கதை), துபாய், ஹாங்காங் உள்ளிட்ட நாடுகளில் இருந்து கப்பல்கள் வரும். அதிலிருந்து சரக்குகளை இறக்குவதுதான் மஸ்தானின் பணி. மூன்றே ஆண்டுகளில் குறிப்பிடத் தகுந்த கூலியாளாக உயர்ந்துவிட்டார். அத்துடன் அடிப்படையான ஒரு விஷயமும் புரிந்தது.

வந்து இறங்கும் சரக்குகளில் பெரும்பாலானவை தங்க பிஸ்கட்டுகள், வாட்சுகள், பிலிப்ஸ் ரேடியோக்கள். இதற்கு ஆங்கிலேய அரசு அநியாயத்துக்கு சுங்கத் தீர்வை விதித்தது. எனவே, சுங்கம் செலுத்திவிட்டு பொருட்களை எடுப்பவர்கள் வேறு வழியின்றி அவற்றை அதிக விலைக்கு பம்பாயில் விற்றார்கள். தவிர கூலிகளுக்கும் குறைந்த கூலியே கிடைத்தது.

இதற்கு பதிலாக சுங்க இலாகாவின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு சரக்குகளை கொண்டு வந்தால் நேரடியாக விற்பனையாளர்களுடன் டீல் பேசலாம். கூலித் தொகையையும்

உயர்த்தலாம். இப்படி மட்டும் செய்ய ஆரம்பித்தால் ஓரளவுக்கு வசதி வாய்ப்பு பெருகும்.

எனவே, இந்த காரியத்தில் இறங்க மஸ்தான் முடிவு செய்தார். இதை இவர் 'கடத்தலாக' நினைக்கவில்லை. பதிலாக ஆங்கிலேயரின் சுரண்டலுக்கு எதிரான நடவடிக்கையாகவே கருதினார். அதற்குள் இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்துவிட்டது.

ஆனால் -ஆங்கிலேயர்கள் நடைமுறைப்படுத்திய சுங்கத் தீர்வை இந்திய அரசு விலக்கவில்லை. பதிலாக அப்படியே கையாண்டது. இது மஸ்தானுக்கு எரிச்சலை தந்தது. அதெப்படி சுதந்திரம் கிடைத்த பிறகும் ஆங்கிலேயரின் வழிமுறையை பின்பற்றலாம்? இது அடிமைத்தனம் தொடர்வதை அல்லவா சுட்டிக் காட்டுகிறது? இதை எதிர்க்க வேண்டும்.எதிர்த்தார்.

சுங்க இலாகாவுக்கு தெரியாமல் சரக்குகளை கொண்டு வந்து உரியவர்களிடம் சேர்த்தார். இதன் மூலம் கணிசமான பணத்தையும் சம்பாதித்தார். ஆனால், எந்த இடத்திலும் இவர் பேராசைப்படவில்லை. சரக்குகள் தனக்கே சொந்தம் என உரிமை பாராட்டவில்லை. இந்த 'நேர்மை' வியாபாரிகளுக்கு பிடித்திருந்தது. எனவே, இவருடன் தொடர்புகொள்வதை பெருமையாக நினைத்தார்கள்.

அப்படி மகிழ்ச்சியுடன் கை குலுக்கியவர்தான் ஷேக் மொஹமத் அல் காலிப். சுருக்கமாக காலிப். பூர்வீகம் அரபு நாடு. அங்கிருந்து பொருட்களை வாங்கி வந்து பம்பாயில் விற்பதுதான் அவரது தொழில். சுங்கப் பிரச்னை அவருக்கும் தலைவலியாக இருந்தது. இதற்கான நிவாரணியை மஸ்தான் அளித்ததால் மகிழ்ச்சியுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டார்.

லாபத்தில் பத்து சதவிகிதம்.

இந்த டீல் மஸ்தானுக்கு பிடித்திருந்தது. எனவே, தன் குல்லாவுக்குள் தங்க பிஸ்கெட், உள்ளாடைக்குள் ரிஸ்ட் வாட்ச், டர்பனுக்குள் பிலிப்ஸ் ரேடியோ ஆகியவற்றை சர்வசாதாரணமாக பதுக்கி காலிப்பிடம் கொண்டு வந்து சேர்த்தார்.

இந்த மாதிரி கடத்தல் வித்தைகளை 1970களில் புஷ்பா தங்கதுரை நாவல்களிலும், மாடர்ன் தியேட்டர்ஸ் தயாரித்த படங்களிலும் நாம் பார்த்திருப்போம். அவையெல்லாம் கற்பனையல்ல... மஸ்தான் 'கண்டுபிடித்த' வழிமுறைகள்தான். 'அயன்' படத்தில் தன் டோபா முடிக்குள் சூர்யா வைரத்தை பதுக்கியிருப்பாரே... அதுவும் மஸ்தானின் மோடி மஸ்தான் வேலைதான்.

இப்படி கொஞ்சம் கொஞ்சமாக கடத்தலில் வளர்ந்து வந்தவரின் பார்வை லோக்கல் தாதாவான ஷேர் கான் மீது பதிந்தது. வாரக் கூலிகளை வாங்கிச் செல்லும் கூலிகளிடம் இருந்து ஒரு தொகையை மாமூல் ஆக ஷேர் கான் வசூலித்துக் கொண்டிருந்தான்.

கிடைக்கும் கூலியே குறைவு. அதை வைத்துக்கொண்டு ஒருவேளை கஞ்சிதான் குடிக்க முடியும். அப்படியிருக்க அதிலிருந்தும் ஒரு தொகையை மாமூல் என்ற பெயரில் பறிப்பதா? இதென்ன அடாவடி என்று யோசித்த மஸ்தான், அடிக்கடி தன் அப்பா தனக்கு சொல்லும் அறிவுரையை நினைத்துப் பார்த்தார். ஒரு முடிவுக்கு வந்தார்.

அந்த முடிவுதான் இந்திய தங்கக் கடத்தல் வரலாற்றில் ஒரு மாற்றத்தையே ஏற்படுத்தியது. அதுவேதான் வரதுபாய் இவருடன் கூட்டணி அமைக்கவும் காரணமாக அமைந்தது.

இதன் பின்விளைவைத்தான் ஜெனாபாய் அறுவடை செய்தார். சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த அந்த அறிவுரையை அவசியம் அறிய வேண்டும்.

அறியலாம்.

# 7

விழுந்து விழுந்து சிரியுங்கள். அல்லது உதட்டைப் பிதுக்கிவிட்டு நம்ப முடியாத மனநிலையை மூளையில் நிரப்பியபடி கடந்து செல்லுங்கள். அது அவரவர் விருப்பம்.

ஆனால், ஹாஜி மஸ்தானின் அப்பா ஹைதர் மிர்ஸா தன் மகனுக்கு படித்துப் படித்து சொன்ன அறிவுரைதான் மும்பை மாஃபியாக்களின் வரலாற்றிலேயே மாபெரும் திருப்பத்தையும் ஏற்படுத்தியது. அதுதான் ஐக்கிய முன்னணிக்கும் வழிவகுத்தது. அதுவேதான் மஸ்தானை தங்கக் கடத்தலில் நம்பர் ஒன் ஆகவும் உயர்த்தியது.

அது மட்டுமல்ல, பம்பாய் துறைமுகத்தில் அப்போது நடந்த நிகழ்வுக்கும் அந்த அறிவுரையே பிள்ளையார் சுழி போட்டது.

கூலித் தொழிலாளர்களிடம் இருந்து வாரம்தோறும் மாமூலை வசூலித்து வந்த ஷேர்கானை எப்படியாவது அடக்க வேண்டும். பெறும் கூலியே குறைவு. அதிலும் ஒரு பகுதியை 'கப்பம்' கட்டிவிட்டால் வயிற்றில் ஈரத் துணியைத்தான் தொழிலாளர்கள் கட்டிக் கொள்வார்கள். நாள் முழுக்க உழைத்ததற்கு இதுவா பலன்? கூடாது. என்ன செய்யலாம்? திட்டமிட்டார்.

ஷேர்கானின் நடவடிக்கைகளை ஆராய்ந்தார். நான்கைந்து அடியாட்களுடன்தான் வருகிறான். அனைவரும் 'காபூலிவாலாக்கள்'. அதாவது ஆப்கானிஸ்தானை பூர்வீகமாக கொண்டவர்கள். அழுக்கேறிய பைஜாமா, ஜிப்பா. டிசைன் எல்லாம் கிடையாது. சிங்கிள் கலர்தான். பெரும்பாலும் அவையும் லைட் கலர்ஸ்தான். தடிமாடு மாதிரி உடலை வளர்த்திருந்தார்கள். தூக்கக் கலக்கம் அல்லது போதையுடன் கண்கள். அதிலும் கூர்மையோ, அக்கம்பக்கம் குறித்த விழிப்புணர்வோ மருந்துக்கும் தென்படவில்லை. யாரிடமும் பெரிதாக மட்டுமல்ல சின்னதாகவும் ஆயுதங்கள் இல்லை. குறிப்பாக ஷேர்கான் தன் பாக்கெட்டில் அரை பிளேடை கூட வைத்துக் கொள்ளவில்லை. குரலை உயர்த்தி அதட்டினாலே கூலியாட்கள் பயந்து விடுவார்கள் என்ற உண்மையை தெரிந்து வைத்திருந்தான். ஸோ, குரல்தான் அவனது வெப்பன்.

மூன்று வாரங்கள் தன்னந்தனியாக மஸ்தான் நின்று கவனித்த குறிப்புகள் இவை.

போதாதா? மடமடவென்று ஸ்கெட்ச் போட்டார். ஆஜானுபாகுவான உடல் தோற்றத்துடன் இருந்த கூலியாட்களை சந்தித்துப் பேசினார். அவர்களை கன்வின்ஸ் செய்தார். அந்த வார சனிக்கிழமைக்காக காத்திருந்தார்.

அந்த நாளும் வந்தது. வழக்கம்போல் அன்று மாலை ஷேர்கான், தன் படை பரிவாரங்களுடன் வந்தான். அதே ஐந்து பேர்தான்.

துறைமுக வாசலில் இருந்த தேநீர் கடையில் அவன் அமர்ந்து கொள்ள, அவனது ஆட்கள் கேட் அருகில் நின்றார்கள். ஒருவன் தன் ஜிப்பாவின் கைப்பகுதியை மடித்தான். அடுத்தவன் தன் தாடையை சொறிந்தான். மூன்றாவது ஆள் கால்களை அகலவைத்து நின்றான். நான்காவது நபர் பராக்கு பார்த்தான். ஐந்தாவது ஆள் மாமூலுக்காக தன் கைகளை விரித்தான்.

ஆனால் - முதலில் வந்த கூலித் தொழிலாளி வழக்கம்போல் தன் பங்கை கொடுக்கவில்லை. அப்படித் தர மஸ்தானும் அனுமதிக்கவில்லை. என்ன ஏது என்று ஷேர்கானும் அவனது அடியாட்களும் சுதாரிப்பதற்குள் எல்லாம் நடந்து முடிந்துவிட்டது. மஸ்தானும், அவர் திரட்டிய கூலியாட்களும் அவர்கள் மீது பாய்ந்தார்கள். அடி என்றால் அப்படியொரு அடி.

அனைத்தும் இடி போல் இறங்கியது. ஷேர்கானின் ஆட்கள் தலைதெறிக்க ஓடினார்கள். கூலியாட்கள் அவர்களை துரத்தித் துரத்தி வெளுத்தார்கள். ஷேர்கானால் அசையக் கூட முடியவில்லை. மஸ்தான் தன் கையால் அவனை புரட்டி எடுத்துவிட்டார். ரத்தக் காயங்களுடன் அவன் மயக்கமானான்.

மொத்தத் துறைமுகமும் இதை வேடிக்கை பார்த்தது. அனைத்து கூலியாட்களும் அந்த நொடியே மஸ்தானை தங்கள் தலைவராக ஏற்றுக்கொண்டார்கள். மறுநாள் பம்பாயில் இருந்து வந்த அனைத்து செய்தித்தாள்களின் இரண்டாம் பக்கமும் இதுதான் நியூஸ். இதன் பின்னர்தான் பம்பாய் துறைமுகத்தில் கூலிகள் ஒழுங்குப்படுத்தப்பட்டன. யாரும் மாமூல் வாங்காதபடி தடுக்கப்பட்டன.

இந்த சம்பவத்தை லேசாக டிங்கரிங் செய்துதான் ரஜினி நடித்த 'தீ' படத்தில் பயன்படுத்தியிருப்பார்கள். அது மட்டுமல்ல, மில் தொழிலாளிகள், தீப்பெட்டி தொழிற்சாலையில் பணிபுரிபவர்கள், கட்டிட வேலை பார்ப்பவர்கள்... என தினுசு தினுசாக கூலிகளிடமிருந்து மாமூல் வசூலிக்கும் லோக்கல் தாதாவை தட்டிக் கேட்கும் கதாநாயகன்கள் இந்தியாவின் சகல மொழி திரைப் படங்களிலும் இதன் பின்னரே உருவெடுத்தார்கள். இப்படியொரு காட்சிக்கு பின்னரே 'தலைவன் தலைவன் தலைவன்... இவன்தான் தலைவன்...' என்பது மாதிரியான சாங்கையும் கம்போஸ் பண்ண ஆரம்பித்தார்கள்.

இதற்கெல்லாம் காரணகர்த்தா ஹாஜி மஸ்தான் அல்ல. அவரது அப்பா சொன்ன அறிவுரை.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு ஷேர்கான் என்ன ஆனான் என்று தெரியவில்லை. ஆனால், பம்பாயின் எந்தப் பகுதியிலும் அதன் பின்னர் அவனை யாரும் பார்க்கவில்லை. ஆனால், இந்த சம்பவத்துக்கு பிறகு ஹாஜி மஸ்தான் பம்பாய் துறைமுகத்தில் தனிப்பெரும் தலைவராக உருவெடுத்தது உண்மை.

இதன் பிறகு அவரது கடத்தல் தொழில் ஜாம் ஜாம் என்று நடந்தது. சொல்லப்போனால் பலர் அவருக்கு ஒத்துழைப்பும் தர ஆரம்பித்தார்கள். சுங்க இலாகாவினரின் கண்களில் மண்ணைத் தூவி சரக்கை கொண்டுவந்தார்கள். அதை மஸ்தானிடம் கொடுத்து பணத்தை பெற்றுக்கொண்டார்கள். நீதி, நேர்மை, நியாயம் என நடக்க முற்பட்டவர்கள் அவருடன் சேரவில்லை. அதேநேரம் காட்டியும் கொடுக்கவில்லை. ஏனெனில் எந்தத் தொழிலாளியையும் அவர் தொந்தரவு செய்யவில்லை. வாரக் கூலியிலிருந்து மாமூல் வசூலிக்கவில்லை. எனவே, மஸ்தானின் அனைத்து நடவடிக்கைகளுக்கும் அனைவருமே அரணாக நின்றார்கள்.

இந்த இடத்தை அடைந்த பிறகும் மஸ்தானின் குணம் மாறவில்லை. பேராசைப்படாமல் உரியவர்களிடம் பொருளை சேர்த்தார். பணத்தைப் பெற்றார். திரும்பத் திரும்ப தன் அப்பாவின் அறிவுரையை மனதில் அசைபோட்டார்.

இதனால் பெருமளவு லாபமடைந்தது காலிப்தான் என்று மஸ்தானுடன் கைகோர்க்க ஆரம்பித்தாரோ அன்று முதல் இவருக்கு சுக்கிர திசைதான். ஷேர்கான் அடக்கப்பட்ட பிறகோ கேட்கவே வேண்டாம். மாதம் மும்மாரி பொழிந்தது. நேரடியாகவே தன் பார்ட்டிகளிடம் மஸ்தானை அனுப்பத் தொடங்கினார்.

சின்ன மரப்பெட்டி. பூஜை பொருட்கள் வைப்பது போல் அல்லது வெற்றிலைப் பெட்டி போல் செவ்வகமாக இருக்கும். அதை இன்னாரிடம், இந்த தேதிக்கு, இப்படியொரு உடை அணிந்து கொண்டு போய், இன்ன வார்த்தையை சொல்லிக் கொடு. பதிலுக்கு இந்த வார்த்தையை அவர் சொன்னால் பெட்டி அவருக்குத்தான் சொந்தம். கொடுத்துவிடு. பதிலுக்கு அவர் பணம் கொடுப்பார். வாங்கி வா. இதற்கு யாரையும் நம்பி அனுப்பாதே. நீயே நேரடியாக செல். உனக்கு உரிய கமிஷனை தருகிறேன்.

சொன்னபடி காலிப் தந்தார். இவர் சொன்னபடி மஸ்தானும் செய்தார். ஆனால், ஒருபோதும் அந்தப் பெட்டிக்குள் என்ன இருக்கிறது என்று அவர் திறந்துப் பார்க்கவில்லை. இதுதான் அவரது மிகப்பெரிய பலம். மெல்ல மெல்ல பம்பாய் காவலர்களின் நாசி வியர்க்க ஆரம்பித்தது. சுங்க இலாகா மூலம் வரவேண்டிய வருவாய் கணிசமாக குறைந்தது. ஆனால், தங்கமோ வழக்கத்தைவிட அதிகமாக மாநகரத்துக்குள்ளும், இந்தியாவுக்குள்ளும் ஊடுருவியது. இது எப்படி சாத்தியம்?

ரூம் போட்டு யோசித்தார்கள். ஹாஜி மஸ்தானை அவர்களால் பிடிக்க முடியவில்லை. அப்படியே பிடித்தாலும் குண்டூசி கூட கிடைக்கப்போவதில்லை. சாதாரண வீட்டில், மூன்று வேளை சாப்பிடவே மூச்சுத் திணறிக்கொண்டிருக்கிறார். தவிர சின்ன மீனை பிடிப்பதால் ஒரு பயனும் இல்லை. பேசாமல் பெரிய மீனை

பிடித்தால் என்ன?

தூண்டில் போட்டார்கள். வகையாக காலிப் சிக்கினார். ஒரே அமுக்காக அமுக்கி சிறையில் அடைத்தார்கள்.

இந்தக் கைது மஸ்தானை எழுந்திருக்கவிடாமல் செய்தது. சிங்கிள் டீக்கே தத்தளிக்கும் பழைய நிலைக்கு தூக்கி எறிந்தது.

இப்படி அதலபாதாளத்துக்கு சென்றவர், மீண்டும் தங்கக் கடத்தலில் நம்பர் ஒன் ஆக மாற ஒரே காரணம் அவரது அப்பா சொன்ன அறிவுரைதான். அந்த அறிவுரைதான் ‘நாயகன்’ படத்தில் ‘நீங்கள் நல்லவரா கெட்டவரா?’ என்ற வசனத்தையும் க்ளைமாக்சில் எழுத வைத்தது.

# 8

இதற்கு மேல் விளக்கி பயனில்லை. சகலருக்கும் தெரிந்த விஷயங்கள்தான் இம்மி பிசகாமல் நடந்தன.

வழக்கமாக ஒருவரை கைது செய்த பின்னர், காவல்துறை என்னவெல்லாம் செய்யுமோ அத்தனையும் காலிப் விஷயத்திலும் செய்தது. லத்தியில் எண்ணெய் தடவி அடித்தார்கள். தலைகீழாக தொங்கவிட்டு வெளுத்து வாங்கினார்கள். படுக்க வைத்து உள்ளங்காலை பதம் பார்த்தார்கள். பின்புறத்தை ரணமாக்கினார்கள். சொத்துக்கள் அனைத்தையும் கைப்பற்றினார்கள்; முடக்கினார்கள்.

அந்தக் காலத்தில் சுவிஸ் வங்கியில் கணக்கை தொடங்க வேண்டும், அசையும் - அசையா சொத்துக்களாக வாங்கிக் குவிக்க வேண்டும், பணத்தை பதுக்க வேண்டும் என்ற 'ஞானம்' எல்லாம் மாஃபியாக்களிடம் இல்லை. கைக்கு பணம் வந்ததும் வீட்டு பீரோவில் அடுக்கி வைப்பார்கள். சாவியை அரைஞாண் கயிற்றில் கட்டி வைத்திருப்பார்கள். தேவைப்படாத போதும் அள்ளி அள்ளி செலவு செய்வார்கள். நெகிழும்போதெல்லாம் கை நிறைய நோட்டுக்களை எடுத்து தானம் கொடுப்பார்கள். காமாத்திபுராவில் குடித்துவிட்டு விழுந்து கிடப்பார்கள்.

இந்த இலக்கணத்துடன்தான் காலிப்பும் வாழ்ந்து வந்தார். எனவே சில நிமிடங்களில் அவரை 'பாப்பர்' ஆக்குவது காவலர்களுக்கு எளிதாக இருந்தது.

கிட்டத்தட்ட ஒரு வருடக் காலம் காலிப் களி தின்றார். புஷ்டியான உடல் புஸ் என்று சுருங்கிவிட்டது.

இதே நிலைதான் ஹாஜி மஸ்தான் விஷயத்திலும் நடந்தது. தங்கக் கடத்தலிலும் கூலிக்குத்தான் மாரடித்தார். கைக்கும், வாய்க்குமான போராட்டம்தான் தொடர்ந்தது. என்ன, கொஞ்சம் நன்றாக இவராலும் இவரது வீட்டை சேர்ந்தவர்களாலும் சாப்பிட முடிந்தது.

இப்போது இதற்கும் வழியில்லை. காலிப்பை சார்ந்தே மஸ்தான் கடத்தலில் ஈடுபட்டார். அவரை சார்ந்தே இயங்கி வந்தார். எனவே காலிப் கைதானதும் மஸ்தானின் வாழ்க்கை இருண்டு விட்டது.

பல்வேறு கடத்தல்காரர்கள் இவரை தொடர்பு கொண்டார்கள். தங்களுக்கு வேலை பார்க்கும்படி கேட்டுக்கொண்டார்கள். காலிப் வழங்கிய கூலியை விட அதிக சதவிகிதம் தருவதாக வாக்குறுதி அளித்தார்கள்.

எதற்கும் மஸ்தான் அசைந்து கொடுக்கவில்லை. காரணம், மற்றவர்களின் பயோடேட்டா சிறப்பாக இல்லை. சட்டத்துக்கு புறம்பான காரியங்களை செய்தாலும் அதில் ஓர் ஒழுங்கு இருக்க வேண்டும், அதற்கென்று ஒரு தர்மம் இருக்க வேண்டும் என்பது

ஹாஜி மஸ்தானின் கொள்கை.

காலிப்பின் போட்டியாளர்கள் இதற்கு நேர்மாறாக இருந்தார்கள்.

கல்வெட்டாக தன் மனதில் பதிந்துவிட்ட தன் அப்பாவின் அறிவுரையை ஹாஜி மஸ்தான் நினைத்துப் பார்த்தார். அந்த அறிவுரைதான் இதுவரை தன்னை வழிநடத்தி வந்திருக்கிறது. இனியும் வழி நடத்தும் என தீர்மானமாக நம்பினார். தயக்கமின்றி வந்தவர்களுக்கு எல்லாம் 'நோ' சொன்னார்.

பழையபடி துறைமுகத்தில் கூலியாளாக பணியை தொடர்ந்தார்.

கன்னத்தில் மரு வைத்து, தாடையில் தாடியை ஒட்டி... என்றெல்லாம் காவலர்கள் மாறு வேடத்தில் இவரை பின்தொடர்ந்தார்கள். அனைவருக்கும் ஏமாற்றம்தான் கிடைத்தது. மஸ்தான் மீண்டும் சுங்க இலாகாவின் கண்களில் மண்ணைத் தூவிவிட்டு கடத்தலில் இறங்கவும் இல்லை. காலிப்பை போன்று மற்ற கடத்தல்காரர்களுக்கு உதவவுமில்லை. எனவே பின்தொடர்வதை விட்டுவிட்டார்கள்.

இதற்குள் ஓராண்டுக் காலம் முடிந்துவிட்டது. தண்டனைக் காலம் முடிந்து காலிப் வெளியே வந்தார். கிழிந்த உடை. வீட்டை ஜப்தி செய்துவிட்டதால், ஒதுங்க கூரை இல்லை. எங்கு செல்வதென்றும் தெரியவில்லை. குடும்பத்தினர் அரபு நாடுகளில் வசிக்கிறார்கள். அங்கு செல்ல மட்டுமல்ல, அப்போது சிங்கிள் டீ குடிக்கக் கூட அவரிடம் காசில்லை.

சக்கையாக பிழியப்பட்ட உடலுடன் நெஞ்செல்லாம் விரக்தி ஆக்கிரமிக்க சிறையை விட்டு வெளியே வந்த காலிப், அப்படியே அதிர்ந்து நின்றார்.

அவருக்காக மஸ்தான் அங்கு காத்திருந்தார். இவரை துளிகூட அவர் எதிர்பார்க்கவில்லை. கண்டதுமே கண்ணீர் பெருக்கெடுத்துவிட்டது. ஓடிச் சென்று மஸ்தானை அணைத்தார். மன அழுத்தம் கரையும் வரை அழுது தீர்த்தார்.

தட்டிக் கொடுத்து அவரை ஆறுதல்படுத்திய மஸ்தான், அருகிலிருந்த தேநீர் கடைக்கு அழைத்துச் சென்று ஆடையில்லாத டீயை வாங்கிக் கொடுத்தார். காலிப்பின் சிறை அனுபவங்களை காது கொடுத்து கேட்டார். பொடி நடையாக அவரை தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றார்.

சின்ன வீடு. ஒரேயொரு அறைதான். அதுவேதான் சமையலறை... படுக்கையறை. அதிக பொருட்கள் இல்லை. இருந்த சாமான்களும் மூலையில் குப்பை போல் குவிக்கப்பட்டிருந்தன.

தடபுடலாக விருந்து போடவில்லை. அதற்கான வசதி மஸ்தானிடமும் இல்லை. ஆனால், காலிப்பின் மனதும், வயிறும் நிறைந்து குளிரும் அளவுக்கு சுடச்சுட சாப்பாடு போட்டார்.

உண்டு முடித்த காலிப், அந்தக் கேள்வியை கேட்டார்.

*“கடத்தல்ல இறங்கலையா?”*

*“இல்லை. போகலை. போக விருப்பமில்லை...”*

*“ஏன்?”*

*“உங்ககிட்ட ஒரு நேர்மை இருக்கு. அதனால உங்களுக்கு வேலை பார்க்க பிடிச்சிருந்தது. மத்தவங்ககிட்ட அது இல்லை. அதனால தொடரலை...”*

*தயக்கமின்றி மஸ்தான் சொல்லி முடித்ததும் மீண்டும் அணைத்தார் காலிப்.*

*“சரி, நான் புறப்படறேன்...”*

*“ஒரு நிமிஷம்...” என்று சொன்ன மஸ்தான், மூலையில் குவிந்து கிடந்த குப்பைக்கு அடியில் இருந்த மரப்பெட்டியை எடுத்து காலிப்பிடம் கொடுத்தார்.*

*பார்த்ததுமே காலிப்பின் இதயம் அதிவேகமாக துடிக்க ஆரம்பித்தது. அது, சின்ன மரப்பெட்டி. பூஜைப் பொருட்கள் வைப்பது போல் அல்லது வெற்றிலைப்பாக்கு பெட்டி போல் செவ்வகமாக இருந்தது.*

*“என்ன இது?”*

*“கைதுக்கு முன்னாடி நீங்க என்கிட்ட கொடுத்தது...”*

*“அது தெரியுது. இத்தனை நாளா இந்த குப்பைக்குள்ளதான் வைச்சிருந்தியா?”*

*“ஆமா. யார்கிட்ட கொடுக்கணும்னு நீங்க சொல்லலை. அதனால தரலை...”*

*“போலீஸ் கண்ல இது படலையா?”*

*“குப்பைக்கு அடில தேடணும்னு அவங்களுக்கு தோணலை...”*

*கேட்ட காலிப் சிரித்தார். பதிலுக்கு மஸ்தான் புன்னகைத்தார்.*

*“இதை திறந்து பார்க்கலையா?”*

*“அது என் வேலை இல்ல. இது உங்க பொருள். இதை ஏன் நான் ஆராயணும்?”*

*சொன்ன மஸ்தானை உற்றுப் பார்த்தபடியே அந்தப் பெட்டியை வாங்கிய காலிப் அருகில் வந்தார்.*

*“இதுக்குள்ள என்ன இருக்கு தெரியுமா?”*

*“தெரியாது...”*

*“தெரிஞ்சிக்கணும்னு விரும்பலையா?”*

*“இல்லை...”*

*“இப்ப தெரிஞ்சுக்க...” என்றபடி பெட்டியைத் திறந்தார். உள்ளே இருந்தது அனைத்தும் தங்க பிஸ்கெட்டுகள். தூசு படிந்த நிலையிலும் அவை ஜொலித்தன.*

*“ஓ... இதுவா. சரி. ஜாக்கிரதையா கொண்டு போங்க...” சலனமில்லாமல் சொன்ன மஸ்தானின் தோளை இறுகப் பிடித்தார் காலிப்.*

“ஏன் மஸ்தான் இப்படி இருக்க? இந்தப் பெட்டியை என் கண்ணுல நீ காட்டியிருக்கவே வேண்டாமே... ‘போலீஸ் வந்து எடுத்துட்டு போயிட்டாங்க’ன்னு நீ சொன்னா என்னால ஒண்ணும் பண்ண முடியாது. இதை வைச்சு நீயும் உன் குடும்பமும் ஜாம் ஜாம்னு வாழலாமே? ஏன் அப்படி செய்யலை?”

“எங்கப்பா அடிக்கடி ஒண்ணு சொல்வார் பாய்...” நிதானமாக சொன்ன மஸ்தான், புகழ்பெற்ற அந்த அறிவுரையை முதல் முறையாக வாய் திறந்து சொன்னார்.

எந்த அறிவுரை ஹாஜி மஸ்தானை சிறு வயது முதல் செதுக்கியதோ, எந்த அப்பாவின் வார்த்தைகளை தன் வழிகாட்டியாக கொண்டாரோ, எதன் காரணமாக வரதராஜ முதலியார் கேட்டதும் மாஃபியாக்களின் ஐக்கிய முன்னணிக்கு ஒப்புக்கொண்டாரோ - அந்த அறிவுரையை அப்போது வாய் திறந்து சொன்னார் மஸ்தான்.

“அடுத்தவன் பொருளுக்கு ஆசைப்படாத. உன்கிட்ட ஒப்படைக்கப்பட்ட வேலையை உயிரைக் கொடுத்தாவது செய்து முடி. முடியலைனா தோல்வியை ஒப்புக்க. தண்டனையை ஏத்துக்க. கொடுத்த வாக்கை கடைசி வரை காப்பாத்து. நம்பினவங்க எது சொன்னாலும் ‘ஏன், எதுக்கு’னு கேள்வி கேட்காம அதை முடிச்சுக் கொடு. அதுக்காக உன் உயிரே போனாலும் பரவால...”

“மஸ்தான்...”

“எங்கப்பா வார்த்தையை எப்பவும் நான் மீறமாட்டேன். பத்திரமா ஊர் போய் சேருங்க...”

“மாட்டேன்...”

“பாய்...”

“ஆமாம் மஸ்தான். பழையபடி கடத்தலை தொடரப் போறோம். இனிமே நீ கூலிக்கு வேலை செய்யறவன் இல்லை. என்னோட பார்ட்னர். லாபத்துல பாதி உனக்கு. அதனோட முதல் படியா இந்தா...” என்றபடி பெட்டியில் இருந்த தங்க பிஸ்கெட்டுகளில் சரி பாதியை எடுத்து மஸ்தானிடம் கொடுத்தார்.

மறுக்காமல் அதை மஸ்தான் பெற்றுக்கொண்டார்.

அந்த நொடியில் பம்பாய் மாகாணத்தையே பின்னாளில் நடுங்க வைத்த தங்கக் கடத்தல் மன்னர் உதயமானார். மாஃபியா ராணிகளில் முதன்மையானவரான ஜெனாபாயின் தத்து தம்பியாக இவர் மாறப்போவதற்கான விதை அன்றுதான் விழுந்தது.



எந்தத் தொழிலை எப்படி நடத்துகிறோம் என்பதைவிட அதை எந்த அளவுக்கு நேர்மையாகவும், ஈடுபாட்டுடனும் செய்கிறோம் என்பதைத்தான் உலகம் கவனிக்கிறது. அதை வைத்தே ஒவ்வொரு மனிதனையும் அளவிடுகிறது.

அப்படித்தான் ஹாஜி மஸ்தானையும் பம்பாய் மாகாணமே கவனிக்க ஆரம்பித்தது.

எந்த நொடியில், 'இனி நாம் இருவரும் சரிசமமான பங்குதாரர்கள்' என்று காலிப் சொன்னாரோ, அந்த விநாடியில் மஸ்தானின் தலையெழுத்தே மாறிவிட்டது.

தங்கத்தை வாங்குபவர்களுக்கு மட்டுமல்ல, அதை விற்பவர்களுக்கும் ஓர் உண்மை தெரியும். எந்த வடிவில் இருந்தாலும் தங்கம் கலப்படமானதுதான். ஆனால், அதுவே மஞ்சள் நிற பிஸ்கெட்டாக இருக்கையில் அது பரிசுத்தமானது. அதன் மதிப்பே தனி. அதனால்தான் தங்கத்தை 'மஞ்சள் பிசாசு' என இடதுசாரிகள் அழைக்கிறார்கள்.

இந்த பிசாசைத்தான் காலிப்பும், மஸ்தானும் பம்பாய் மாகாணத்துக்கும், அங்கிருந்து இந்தியாவின் அனைத்துப் பகுதிகளுக்கும் கடத்த ஆரம்பித்தார்கள். இதன் மூலம் லட்சங்களில் ஆரம்பித்து கோடி ரூபாய் வரை சம்பாதிக்க ஆரம்பித்தார்கள்.

உதாரணமாக 1955ல், மஸ்தானின் சொத்து மதிப்பு ரூபாய் 5 லட்சம் என்கிறது காவல்துறை அறிக்கை. உண்மையில் இந்த மதிப்பு கூடத்தான் இருக்குமே தவிர குறைவாக இருக்க வாய்ப்பில்லை.

காலிப்புடன் கைகுலுக்கிய பிறகு மஸ்தான் உடனடியாக தன் துறைமுக 'கூலி' வேலையை ராஜினாமா செய்தார். போலவே பம்பாயை விட்டு மத்திய கிழக்கு நாடுகளுக்கு காலிப் பறந்தார். தன் குடும்பத்தினருடன் மகிழ்ச்சியாக வாழ்ந்தார். அங்கிருந்தபடியே கடத்தல் தொழிலிலும் முழுமையாக ஈடுபட்டார்.

ஏடன், துபாய் மற்றும் ஆப்பிரிக்க நாடுகளில் இருந்து தங்கத்தையும், விலையுயர்ந்த கடிகாரத்தையும் பம்பாய்க்கு அனுப்ப ஆரம்பித்தார். துறைமுகத்திலிருந்து அந்த 'சரக்கை' சுங்கத்துறைக்கு தெரியாமல் உள்நாட்டுக்கு கொண்டு வந்து மஸ்தான் விற்கத் தொடங்கினார்.

தொழில் ஜோராக நடந்தது. எல்லா நேரங்களிலும் மஸ்தான் தன் தந்தை சொன்ன அறிவுரைக்கு ஏற்ப 'நேர்மையாகவே' நடந்து கொண்டார். எனவே ஐம்பது சதவிகித லாபம் காலிப்புக்கு சென்று கொண்டே இருந்தது. கூடவே இடியாப்ப சிக்கலும் விருட்சமாக வளர்ந்தது.

பம்பாய் துறைமுகத்திலிருந்தே அனைத்து 'சரக்குகளையும்' இறக்கினால், சுங்க இலாகாவுக்கு சந்தேகம் வரும். காவல்துறையின்

மூக்கில் வியர்க்கும். ஒருவேளை பிடிபட்டாலும் மொத்த 'சரக்கும்' பறிபோய்விடும்.

எனவே வரைபடத்தை வைத்து என்னென்ன வழிகளில் இதிலிருந்து தப்பிக்கலாம் என மஸ்தான் யோசித்தார். ஒன்றுக்கு பதில் பல துறைமுகங்களுக்கு 'சரக்கு' வந்து சேர்ந்தால் பிரச்னை வராது; அப்படியே வந்தாலும் சமாளிக்கலாம் என்று அவர் சிற்றறிவுக்கு தோன்றியது. இதை அமல்படுத்த வேண்டுமென்றால் கூட்டு அவசியம். துறைமுகத்துக்கு ஒருவர் வீதம் உபதளபதிகள் வேண்டும்.

யாரை 'வேலைக்கு' அமர்த்தலாம்? மூளையை கசக்கியதில் சுகூர் நாராயண் பாக்கியா என்னும் பெயர் ப்ளாஷ் அடித்தது. அப்போது பம்பாய் மாகாணத்துக்கு உட்பட்டிருந்த குஜராத்திலுள்ள தாமன் துறைமுகத்தின் தவிர்க்க முடியாத சக்தியாக சுகூர் நாராயண் விளங்கி வந்தார். ஓரளவு 'நேர்மையானவர்'தான். எனவே தனது உள்நாட்டு கூட்டாளியாக இவரையே நியமிப்பது என்று மஸ்தான் முடிவு செய்தார்.

அதற்கு அச்சாரமாக சந்திப்புக்கு ஏற்பாடு செய்தார். இதற்குள் மஸ்தானின் புகழ் எட்டு திசையிலும் பரவியிருந்தது. குறிப்பாக துறைமுகத் தொழிலாளர்கள் அவரை தெய்வமாகவே கருத ஆரம்பித்திருந்தார்கள். எனவே மஸ்தான் அழைத்ததும் எந்தக் கேள்வியும் கேட்காமல் சந்திப்புக்கு வந்தார் சுகூர்.

மறைவான இடத்தில் இருவரும் தேநீரை அருந்தியபடி பேசினார்கள். எதையும் மஸ்தான் மறைக்கவில்லை. கடத்தலில் சுகூரின் பங்கு, கிடைக்கும் லாபம், ஒருவேளை சுங்க இலாகா அல்லது காவல்துறையிடம் பிடிபட்டால் என்ன செய்ய வேண்டும்... என ஒளிவு மறைவின்றி மனம் திறந்து பேசினார்.

இந்த டீலிங் சுகூருக்கு பிடித்திருந்தது. ஏற்கனவே மஸ்தான் எந்தளவுக்கு 'நேர்மையானவர்', தன் தந்தையின் அறிவுரையை எப்படியெல்லாம் கடைப்பிடிப்பவர் என்று கேள்விப்பட்டிருந்தார். அதை இப்போது கண்கூடாக பார்த்தபோது உள்ளம் கசிந்தது.

எந்த டிமாண்டும் செய்யாமல் உடனடியாக உபதளபதியாக பணிபுரிய ஒப்புக்கொண்டார்.

இந்தச் செய்தி உடனடியாக காலிப்புக்கு தெரிவிக்கப்பட்டது. பிறகென்ன... இந்திய அரசாங்கமே கிடுகிடுக்கும்வண்ணம் காரியங்கள் நடக்க ஆரம்பித்தன.

பம்பாய் துறைமுகத்தை மஸ்தானும், தாமன் துறைமுகத்தை சுகூரும் தங்கள் கட்டுப்பாட்டுக்கு கீழ் கொண்டுவந்தார்கள். சின்ன குண்டூசி கூட தங்களுக்கு தெரியாமல் அந்தந்த துறைமுகத்தைவிட்டு வெளியேறாதபடி பார்த்துக்கொண்டார்கள். ஏடனில் இருந்து 'பொருட்கள்' பம்பாய்க்கு வந்தன. மத்திய கிழக்கு நாடுகளில்

இருந்து 'சரக்குகள்' தாமனுக்கு வந்தன. ஓரிரு நாட்களில் இந்தியா முழுவதும் அவை விநியோகிக்கப்பட்டன. இதனால் மஸ்தானிடம் ஏராளமான பணம், தாராளமாக புழங்க ஆரம்பித்தது.

அதே நேரம் பளிச்சென்று ஓர் உண்மையும் அவருக்கு புலப்பட்டது. பணம் சேர சேர எதிரிகளும் அதிகரிப்பார்கள். அரசின் கரங்களும் சுற்றி வளைக்கும். இதைத் தடுக்க வேண்டுமென்றால், சமபலத்துடன் இருக்கும் மற்றவர்களுடன் நண்பர்களாக வேண்டும். அப்போதுதான் அருகில் நெருங்கவும் எதிரிகள் பயப்படுவார்கள்.

ஸோ, தன்னைப் போலவே கில்லாடிகளாகவும், மாஃபியா தலைவர்களாகவும் உருவெடுத்து வந்த இருவருடன் கூட்டணி அமைப்பது என்ற முடிவுக்கு வந்தார்.

அந்த இருவர், பதான் ஆன கரீம் லாலாவும், தமிழரான வரதராஜ முதலியாரும்.

இதே நேரத்தில்தான் சாராய கடத்தலால் வளர்ந்திருந்த வரது பாயும் தனது எல்லையை விரிவுபடுத்தவும் தங்கக் கடத்தலில் இறங்கவும் முடிவு செய்திருந்தார். இதற்காக மஸ்தானுடன் கூட்டணி அமைக்க வேண்டும் என்று தனது 'தத்து' தங்கையும், மாஃபியா ராணிகளில் முதன்மையானவருமான ஜெனாபாயிடம் சொல்லியிருந்தார். இருவருமே தனித்தனியாக இந்த கூட்டணி குறித்து ஒரே நேரத்தில் யோசித்தார்கள் என்பதுதான் ஹைலைட்.

ஆனால், இந்த இணைப்பை குறித்து முதலில் பேசியவர் வரது பாய் அல்ல. மஸ்தான்! பேசப்பட்ட இடமும் தனியிடம் அல்ல. லாக் அப்!

யெஸ், வரதராஜ முதலியாரை பம்பாய் காவல்துறை அப்போது கைது செய்திருந்தது. காரணம், திருட்டு. அப்போது பம்பாய் மாகாண அமைச்சராக இருந்த ஒருவர், வெளிநாட்டிலிருந்து ஆன்டனாவை வரவழைத்திருந்தார். சுங்க இலாகா அதை தனது கோடவுனில் வைத்திருந்தது. மறுநாள் பார்த்தால் அதை காணவில்லை. இந்த விஷயம் மட்டும் அமைச்சரின் காதுக்கு சென்றால் அவ்வளவுதான். அனைவரது வேலையும் போய்விடும்.

எனவே யார் திருடியிருப்பார்கள் என்று சல்லடையிட்டு தேடினார்கள். எந்த துப்பும் கிடைக்கவில்லை. சந்தேகத்தின் பேரில் கைது செய்யப்பட்டவர்களிடம் இருந்தும் உருப்படியான தகவல் வந்து சேரவில்லை.

வேறு வழியின்றி தாராவியில் இருந்த வரதுபாயை கைது செய்தார்கள். இவர் அதை திருடியிருக்காவிட்டாலும், யார் எடுத்திருப்பார்கள் என்று சர்வ நிச்சயமாக அறிந்திருப்பார். அதுதான் இவரன்றி ஓர் அணுவும் அசையாதே?

பிடித்து விசாரித்தார்கள். மிரட்டிப் பார்த்தார்கள். ம்ஹூம் எதுவும் பயன்படவில்லை. தனக்கு எதுவும் தெரியாது என்று

வரதுபாய் திரும்பத் திரும்ப சத்தியம் செய்தார். அடித்து கேட்கவும் காவலர்களுக்கு பயம். விஷயம் மட்டும் வெளியில் கசிந்தால் காவல்நிலையத்தையே மக்கள் அடித்து நொறுக்கிவிடுவார்கள். ஆன்டனா கிடைக்காவிட்டாலோ அமைச்சர் சீட்டை கிழித்துவிடுவார். பரிதாபமாக இறைவனிடம் அனைத்து காவலர்களும் மன்றாடினார்கள்.

அந்த வேண்டுதலுக்கு கடவுள் செவிசாய்த்திருக்க வேண்டும். ஏனெனில், அன்றைய தினம் நள்ளிரவில் விட்டத்தை பார்த்தபடி ஆசாத் காவல்நிலைய லாக் அப்பில் வரதுபாய் அமர்ந்திருந்தபோது, கதவு திறக்கும் சப்தம் கேட்டது. அலட்சியமாக திரும்பிப் பார்த்தார். இருட்டில் எதுவும் தெரியவில்லை. ஆனால், ஆஜானுபாகுவான உருவம் மட்டும் சில் அவுட்டில் தெரிந்தது. விசாரிக்க வந்திருக்கும் காவல்துறை அதிகாரியாக இருக்க வேண்டும் என்று நினைத்தார்.

ஆனால்,'க்ளக்' என்ற சப்தத்துடன் சிகரெட் பற்ற வைக்கப்பட்டது.

தன் முன்னால் புகைப்பிடிக்கும் தைரியம் எந்த அதிகாரிக்கு இருக்கிறது என்ற கேள்வியுடன் அந்த உருவத்தை வரதுபாய் ஏறிட்டார்.

இந்தியோ, உருதுவோ, ஆங்கிலமோ இல்லாமல் தூயத் தமிழில் "வணக்கம் தலைவா..." என்று மரியாதையுடன் அந்த உருவம் அழைத்தது. அத்துடன் வரதுபாய்க்கு முன்னால் இருந்த நாற்காலியிலும் அமர்ந்தது.

இது... இது... என்று யோசிப்பதற்குள் அந்த உருவமே தன்னை அறிமுகப்படுத்திக்கொண்டது.

"நான் உங்க விசிறி. என் பேரு ஹாஜி மஸ்தான்..." என்று சிரித்தது.

வரதுபாய் ஆச்சர்யத்தில் புருவத்தை உயர்த்தினார்.

மஸ்தான், நேரடியாக விஷயத்துக்கு வந்தார். "சாராய கடத்தல் போதும் தலைவரே... நாம ரெண்டு பேரும் தங்கக் கடத்தல்ல இறங்கலாம். உங்களை மாதிரியான பெரியவர் இந்த பிசினசுக்கு வந்தா, கொடிகட்டி பறக்கலாம். என்ன சொல்றீங்க?"

தான், கேட்க நினைத்த அதே டீலிங். மறுப்பேதும் சொல்லாமல் சம்மதித்தார்.

"நல்லது தலைவரே... அமைச்சருக்கு சொந்தமான ஆன்டனாவை மட்டும் கொடுத்துடுங்க. பாவம் போலீஸ்காரங்க. வேலை போயிடுமோன்னு பயப்படறாங்க. தவிர உங்க தகுதிக்கு இந்த மாதிரி சில்லரை திருட்டெல்லாம் இனி வேண்டாம்..."

வரதுபாய் ஒப்புக்கொண்டார். ஆன்டனாவையும் ஒப்படைத்தார். இருவரும் கைகுலுக்கினார்கள்.

இந்திய மாஃபியா வரலாற்றில் புதிய அத்தியாயத்தையும் எழுதினார்கள்.

இவர்கள் இருவரது கூட்டால் அதிக லாபம் அடைந்தது

*ஜெனாபாய்தான். பம்பாயே நடுங்கும் அளவுக்கு மாஃபியா ராணியாக உருவெடுத்தார்.*

*அதுவே ஜெனாபாயின் வாழ்க்கையில் துடைக்க முடியாத சோகத்துக்கும் காரணமாக அமைந்தது.*

*யெஸ், பட்டப்பகலில் ஜெனாபாயின் மகன் 'எதிரிகளால்' படுகொலை செய்யப்பட்டான். இந்த கொலைக்கு பழிக்குப் பழி வாங்குவேன் என ஜெனாபாய் சபதம் செய்தார்.*

*'கேங் வார்' வருவதற்கான அறிகுறிகள் பம்பாயில் தெரிய ஆரம்பித்தன.*

10

அந்த தவறைதான் அனைவரும் செய்தார்கள். எப்போது வரதுபாய், ஆன்டனாவை திருப்பிக் கொடுத்தாரோ அப்போது காவல்துறையை பார்த்து அவர் பயந்துவிட்டார் என்று நினைத்தார்கள். இதில், வரதுபாயின் ஆட்களும் அடக்கம்.

எனவே லாக் அப்பை விட்டு அவர் வந்ததும், அவரிடம் பேசவே பயந்தார்கள். கோபமாக இருப்பார், தங்கள் மீது எரிந்துவிழுவார், காவல்துறை அவரை பின்னி பெடல் எடுத்திருக்கும் என்றெல்லாம் ஊகித்தார்கள்.

ஆனால், இது எதுவுமே நடக்கவில்லை என்பதோ, லாக் அப் அறையில் மஸ்தானுடன் கொஞ்சம் தமிழிலும் நிறைய பார்வையிலும் அவர் ஏராளமான விஷயங்களை பேசிவிட்டார் என்றோ ஈ, எறும்புக்கு கூட தெரியாது. வரதுபாயும் அதையெல்லாம் மனம்விட்டு பகிர்ந்துகொள்ளவில்லை.

பதிலாக காவல்நிலையத்திலிருந்து சிரித்த முகத்துடன் உற்சாகமாக தன் இருப்பிடம் வந்தவர், உடனே விருந்துக்கு ஏற்பாடு செய்யச் சொன்னார். அதற்கு ஊரில் உள்ள அனைவரையும் அழைக்க வேண்டும் என்று கட்டளையிட்டார். ஜெனாபாய் உட்பட சகலருக்கும் அழைப்பு சென்றது. குறிப்பிட்ட நாளில் தடபுடலாக விருந்தும் நடந்தது.

யாரும் எதிர்பாராதவிதமாக அந்த விருந்தில் ஹாஜி மஸ்தான் கலந்துகொண்டார். இவரை தன்னருகில் வைத்துக்கொண்டே வரது பாய் வந்திருந்தவர்களை வரவேற்றார். முக்கியமானவர்களை அறிமுகப்படுத்தினார்.

இந்த விருந்தில்தான் முதன் முறையாக ஜெனாபாயும், மஸ்தானும் சந்தித்தார்கள், கைகுலுக்கினார்கள். இந்த சந்திப்பே பின்னாளில் இவர்கள் இருவரும் அக்கா - தம்பியாக உறவு பாராட்ட அச்சாரமாக அமைந்தது.

ஆனால், அன்றைய தினம் இதற்கான எந்த அறிகுறியும் தெரியவில்லை. பதிலாக ஒரேயொரு விஷயம் மட்டும் பளிச்சென்று வந்திருந்தவர்களுக்கு புரிந்தது. இனி வரதுபாய் வேறு, மஸ்தான் வேறு அல்ல என்பதுதான் அது.

இதையேதான் தனிமையில் வரதுபாயை சந்தித்தபோது ஜெனாபாயும் கேட்டார்.

"ஆமாம் ஜெனாபாய். இனி மஸ்தான் கூட சேர்ந்துதான் தொழில் பண்ணப் போறோம்..."

"என்ன பிசினஸ் பாய்?"

"தங்கக் கடத்தல்..."

"அதுதான் ஏற்கனவே மஸ்தான் அதுல கோலோச்சுகிட்டு

இருக்காரே... உங்களுக்கு அதாவது, நமக்கு இதன் மூலமா என்ன பெருசா லாபம் கிடைக்கப்போகுது?"

கேட்ட ஜெனாபாயை சிரித்த முகத்துடன் வரதுபாய் பார்த்தார். இந்தக் கேள்விதான் தன்னைச் சுற்றியிருக்கும் அனைவரது மனதிலும் இருக்கிறது என்பதை அவர் அறிவார்.

"பொறுத்திருந்து பார் ஜெனாபாய்..."

பார்த்தார்கள். அலறினார்கள். வரதுபாய் எந்தளவுக்கு புத்திசாலி, கைதேர்ந்தவர் என்பது வெட்ட வெளிச்சமானது.

டீலிங் சிம்பிள். துறைமுகத்தை விட்டு வெளியே வரும் கடத்தல் பொருட்களை வரதுபாயின் ஆட்கள் உரியவர்களிடம் சேர்க்க வேண்டும். இதற்கான கமிஷன் தொகையை மஸ்தான் அளிப்பார்.

இதன் மூலம் கணிசமாக வரதுபாய் லாபம் சம்பாதித்தார் என்பதை மறுப்பதற்கில்லை. சாராய கடத்தலை விட இந்த வேலை கொஞ்சம் உயர்வாகத்தான் இருந்தது.

ஆனால், இத்துடன் திருப்தி அடைந்துவிட்டால் அவர் பெயர் வரதராஜ முதலியார் கிடையாதே?

எனவே இன்னொரு காரியத்தில் இறங்கினார். இது நடைமுறைக்கு வந்து வெற்றி பெற்றதும் மஸ்தான் ஓடோடி வந்தார். வரது பாயை வாஞ்சையுடன் அணைத்துக்கொண்டார்.

"தலைவரே... இதுதான் உங்ககிட்ட எனக்கு பிடிச்ச விஷயமே... சாதிச்சுட்டீங்க பாய்..." என்று வாயார பாராட்டினார்.

அப்படி அனைவரும் புருவத்தை உயர்த்தி பார்க்கும் அளவுக்குத்தான் அந்தக் காரியத்தை கச்சிதமாக செய்தார்.

அதாவது, கடத்தல் பொருட்களை உரியவர்களிடம் கொண்டு போய் சேர்ப்பது தனி டிராக். கூடவே தண்டவாளம் போல் இணையான இன்னொரு செயலிலும் வரதுபாய் இறங்கினார்.

வேறொன்றுமில்லை. 'நேர்மையாக' பொருட்களை வெளிநாட்டில் இருந்து வாங்குபவர்கள் இருப்பார்கள் இல்லையா? அவர்களுக்கு வந்து சேர வேண்டிய பொருட்களை சுங்க இலாகா சரி பார்த்துவிட்டு லாரியில் ஏற்றும். அல்லது தங்கள் கோடவுனில் வைத்திருக்கும். பொருளை வாங்குபவர்கள் என்று சொல்கிறார்களோ அன்று டெலிவரி செய்யும். குறைந்தது இந்த ப்ராசஸ் முடிய ஒருநாளாவது ஆகும்.

இதைத்தான் வரதுபாய் கச்சிதமாக பயன்படுத்திக் கொண்டார்.

சுங்க இலாகா சரிபார்த்த பொருட்களை தன் ஆட்களை வைத்து திருடி அல்லது கடத்திவிடுவார். அவ்வளவுதான். பொருட்களுக்கு உரியவர் வந்து கேட்கும்போது சம்பந்தப்பட்ட சரக்கு அங்கிருக்காது. ஆனால், வந்து சேர்ந்ததற்கான அனைத்து ஆதாரங்களும் சுங்க இலாகா வசம் இருக்கும். இதை வைத்துக்கொண்டு நாக்கையா வழிக்க முடியும்?

‘நேர்மையானவர்கள்’ கத்தி கூச்சலிட்டார்கள். சுங்க இலாகாவினர் தலைமுடியை பிய்த்துக்கொண்டார்கள். பருப்பு வேகவேயில்லை. காணாமல் போன பொருட் களை கண்டுபிடிக்கவே முடியவில்லை.

பிறகென்ன? இன்ஷூரன்ஸ் கம்பெனி களத்தில் இறங்கி, துப்புத் துலக்க முயற்சித்து ஒன்றும் முடியாமல் போய் காம்பன்சேஷன் தரும்.

இதன் பிறகு வரதுபாயின் ஆட்கள் சம்பந்தப்பட்ட ‘நேர்மையானவர்களை’ சந்திப்பார்கள். ‘உங்கள் பொருள் எங்களிடம்தான் இருக்கிறது. பொருளுக்கான பணத்தை இன்ஷூரன்ஸ் கம்பெனி கொடுத்துவிட்டது. இப்போது பாதி விலைக்கு அதை உங்களிடமே விற்கிறோம். வாங்கிக் கொள்கிறீர்களா?’

கேட்டவர்களுக்கு கசக்கவா செய்யும்? எவ்வளவு பெரிய லாபம் இது... ஒப்புக்கொண்டார்கள். தங்கள் ‘நேர்மைக்கு’ கிடைத்த பரிசாக இதை கருத ஆரம்பித்தார்கள். ஒரு கட்டத்துக்கு பிறகு இந்த ப்ராசஸ், வரதுபாய் - சுங்க இலாகா - ‘நேர்மையானவர்கள்’ என திரிவேணி சங்கமமாகிவிட்டது.

இன்ஷூரன்ஸ் நிறுவனங்கள்தான் டிரவுசர் கழன்று சுற்றின. என்ன நடக்கிறது என்றே அவர்களுக்கு புரியவில்லை. பொருட்கள் வந்து சேர்கின்றன. சுங்க இலாகா அதை சரிபார்க்கிறது. பின்னர் கப்பலில் இருந்து துறைமுகத்துக்கு இறக்குகிறார்கள், கோடவுனில் அல்லது லாரியில் ஏற்றுகிறார்கள். இதுவரை பக்காவாக டாக்குமெண்ட் இருக்கிறது?

அதன் பின்னர்?

அதுதான் பில்லியன் டாலர் கேள்வியானது. எங்கேயோ தப்பு நடக்கிறது. அது என்ன?

கண்டுபிடிக்க முயற்சித்தார்கள். இன்ஷூரன்ஸ் நிறுவனத்தை சேர்ந்த ஆட்கள் அல்லும் பகலும் விழித்திருந்தார்கள். துறைமுகத்திலும், சுங்க இலாகாவுக்கு சொந்தமான கோடவுனிலும் பழியாகக் கிடந்தார்கள்.

இதையெல்லாம் பார்த்தபடியே இருந்தார் வரதராஜ முதலியார்.

“பேசாம நம்ம கூட அவங்களையும் கூட்டு சேர்த்துக்கலாமே?”

தனிப்பட்ட முறையில் தன்னிடம் கேட்ட சுங்க இலாகா அதிகாரியை உற்றுப் பார்த்தார்.

“அவசியம் இல்லை. எல்லாரோடயும் கூட்டு சேர்ந்தா கடைசில முதலுக்கே மோசமாகிடும்...”

“ஆனா, இப்ப மட்டும்...”

“சொல்ல வந்ததை தெளிவா சொல்லிட்டு போங்க...”

“அதில்ல பாய்... நம்மை சுத்தி கார்னர் பண்ணறாங்க. இப்படியே போச்சுன்னா, எப்படி தொழில் நடத்தறது?”

“என்னை நம்பறீங்கல?”

“உங்களை மட்டும்தான் நம்பறோம்...”

“அப்ப கவலைப்படாம போயிட்டு வாங்க. இன்ஷூரன்ஸ் ஆட்களால நம்மை எதுவும் செய்ய முடியாது...”

சொன்னது போலவேதான் நடந்தது. யாராலும் எதுவும் செய்யமுடியவில்லை. இன்ஷூரன்ஸ் ஆட்கள் விழித்திருக்கும்போதே பொருட்கள் திருடு போயின. அந்தளவுக்கு வரதுபாயின் ஆட்கள் திறமையானவர்களாக இருந்தார்கள்.

விஷயம் இதுதான். பொருட்களை எந்தக் காரணத்தைகொண்டும் துறைமுகத்தை விட்டு அவர்கள் வெளியே கொண்டு செல்லவில்லை. வரது பாயின் கட்டளைப்படி சுங்க இலாகாவின் கோடவுனில் இருந்து பொருட்களை எடுப்பார்கள். அதை அதே கோடவுனின் வேறொரு பக்கத்தில் வைப்பார்கள். அவ்வளவுதான்.

இது புரியாமல் பொருள் களவு போய்விட்டதாக நினைத்து துறைமுகப்பகுதியை இன்ஷூரன்ஸ் ஆட்கள் சல்லடையிட்டு சலித்தார்கள். நுழைவாயிலில் தனியார் ஆட்களை வைத்து கண்காணித்தார்கள். பொருட்களுக்கு உரியவரின் இருப்பிடங்களில், அலுவலகங்களில் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டு ஆராய்ந்தார்கள். சந்தேகப்படும்படியாக எதுவும் நடக்கவில்லை.

இதற்குள் மூன்று முதல் ஆறு மாதங்கள் வரை கழிந்துவிடும். வேறு வழியின்றி ஃபைலை மூடிவிடுவார்கள். நிவாரணத் தொகையை அளித்துவிடுவார்கள்.

இதன் பிறகுதான் அதே சுங்க இலாகாவின் கோடவுனின் இன்னொரு புறத்தில் இருந்து ‘திருடுப்’போன பொருட்களை வரதுபாயின் ஆட்கள் எடுப்பார்கள். பாதி விலைக்கு சம்பந்தப்பட்டவர்களிடம் விற்பார்கள்.

இறுதிவரை இன்ஷூரன்ஸ் நிறுவனம் இந்த வழிமுறையை தெரிந்துகொள்ளவேயில்லை!

இப்படி மஸ்தானும், வரது பாயும் தத்தம் ஏரியாக்களில் முடிசூடா மன்னர்களாகவும், செல்வந்தர்களாகவும் வளர்ந்தபோது, ஜெனாபாயும் தன்னளவில் மாஃபியா ராணியாக உயர்ந்தார். இவரது நிலையும் முன்னேறியது. பங்களாவுக்கு குடிபுகுந்தார். அந்த ஏரியாவை சேர்ந்தவர்கள் இவரை பார்ப்பதற்காக வர ஆரம்பித்தார்கள். தங்கள் குறைகளை, பிரச்னைகளை கூறி அதை தீர்த்து வைக்கும்படி மன்றாடினார்கள்.

செம்பு நிறைய நீர். ஆலமரம். ஜமுக்காளம். இது மூன்றும்தான் இல்லை. மற்றபடி தமிழ்ச் சினிமாவின் நாட்டாமை காட்சிகள் எப்படி நடக்குமோ அப்படித்தான் ஜெனாபாய் பஞ்சாயத்து செய்தார். இவரது சொல்லுக்கும், தீர்ப்புக்கும் அனைவரும் கட்டுப்பட்டார்கள்.

இதே நேரம் ஜெனாபாயின் இளைய மகனும் இளைஞனாக வளர்ந்திருந்தான். திடீர் பணக்கார வீட்டுப் பிள்ளைகள்

எப்படியெல்லாம் இருப்பார்களோ, தாம்தூம் என்று குதிப்பார்களோ, பெண் விஷயத்தில் வக்கிரமானவர்களாக நடந்துகொள்வார்களோ - அப்படியெல்லாம் அவனும் நடந்தான்.

இதனால் பாதிக்கப்பட்டவர்கள் ஸ்கெட்ச் போட்டு நட்ட நடு ரோட்டில் அவனை வெட்டிக் கொன்றார்கள்.

இதற்கு பழிவாங்கத்தான் ஜெனாபாய் சபதம் செய்தார். இதனால் பம்பாயில் கேங் வார் உருவாவதற்கான சூழல்கள் உருவாகின.

ஆனால் - அப்படி எதுவும் நடக்காதபடி ஒருவர் பார்த்துக் கொள்ள முயன்றார். அவர்தான் கரீம் லாலா. அதே... அதே... வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் ஆகியோருக்கு சமமாக பம்பாய் மாகாணத்தை ஆட்டிப் படைத்த அதே தாதாதான்.

இந்த கரீம் லாலாவின் வாழ்க்கை குறித்தும் அறிந்து கொள்ளாமல் ஓரடி கூட எடுத்து வைக்க முடியாது. ஏனெனில் முப்பெரும் பேரரசர்களாக வரதுபாய் - மஸ்தான் - கரீம் லாலா ஆகியோர் விளங்கியபோதும் தங்களுக்குள் அடித்துக்கொள்ளவில்லை. இத்தனைக்கும் மதத்தால் வேறுபட்டவர்கள். ஆனாலும் ஒற்றுமையுடன் கைகோர்த்தார்கள். இறுதி வரை ஒருவரது ஏரியாவில் மற்றவர் தலையிடாமல் ஒதுங்கி நின்றார்கள்.

இந்த அபூர்வமான கூட்டணி குறித்து தெரிந்துகொண்டால்தான் 1980களில் மும்பை மாஃபியா குழுக்களுக்குள் பூக்க ஆரம்பித்த மதச் சண்டை குறித்து அலச முடியும்.

எனவே, கரீம் லாலாவின் பயோ டேட்டாவை ஒரு எட்டு பார்த்துவிடுவோம். அதுவரை ஜெனாபாயின் பழிவாங்கும் சபதம் காத்திருக்கும். ஏனெனில் ராஜாக்கள் இல்லாவிட்டால் ராணிகள் இல்லை என்ற உண்மை மற்றவர்களை விட ஜெனாபாய்க்கு நன்றாகவே தெரியும்.

# 11

அந்தச் சண்டை காலையிலேயே தொடங்கிவிட்டது.

தெற்கு பம்பாயின் குடியிருப்புப் பகுதி அது. வாடகையை சட்டென்று உயர்த்திவிட்டார் உரிமையாளர். தன்னால் அவ்வளவு தொகையை ஒரேயடியாக உயர்த்திக் கொடுக்க முடியாது என்று மறுத்தார் குடியிருப்பவர்.

சாதாரணமாக ஆரம்பித்த பேச்சுவார்த்தை, மெல்ல மெல்ல வாக்குவாதமானது. அடுத்து கைகலப்புதான் என்று அக்கம் பக்கத்தவர் அஞ்சியபோது - நோஞ்சானாக ஒரு மனிதன் வந்தான். சதையை மீறித் தெரிந்த எலும்புகளை எக்ஸ்ரே செய்யாமலேயே எண்ணிவிடலாம். அந்தளவுக்கு புல்தடுக்கி பயில்வானாக இருந்தான். என்றாலும் அவனைப் பார்த்ததும் அனைவரும் நடுங்கினார்கள். அமைதிகாத்தார்கள்.

காரணம், அவன் பயபக்தியுடன் ஒரு பொருளை சுமந்து வந்ததுதான். அந்தப் பொருள் தங்களை நோக்கி வரவர வேடிக்கை பார்த்தவர்கள் சிதறி ஓட ஆரம்பித்தார்கள். வீட்டின் உரிமையாளர் நிற்க முடியாமல் தடுமாறினார். குடியிருப்பவருக்கு பேச்சே எழவில்லை. முகமெல்லாம் வியர்க்க, கண்களில் இருந்து கண்ணீர் பெருக அசையாமல் நின்றார்.

அந்த நோஞ்சான் மனிதன் அவர்கள் இருவரையும் ஒரு பார்வை பார்த்தான். திரும்பி நடந்தான். வீட்டின் உரிமையாளரும், குடியிருப்பவரும் சவக்களையுடன் மவுனமாக அவனைப் பின்தொடர்ந்தார்கள்...

இந்தக்காட்சிவெறும்சாம்பிள்தான்.இதுபோல்லட்சக்கணக்கான காட்சிகள் 1950 முதல் 1970களின் ஆரம்பம் வரை தெற்கு பம்பாயில் அரங்கேறின. அனைத்து சீன்களின் க்ளைமாக்ஸும் ஒன்றுதான். அது ஒரு நோஞ்சான் மனிதன். அவன் கையில் 'அந்த'ப் பொருள். இதற்கு பயந்துதான் அன்றைய பம்பாய் மக்கள் வாழ்ந்து வந்தார்கள்.

இத்தனைக்கும் அந்தப் பொருள் கத்தியோ, அருவாளோ, துப்பாக்கியோ அல்ல. வார்னிஷ் செய்யப்பட்ட சாதாரண வாக்கிங் ஸ்டிக். ஆனால், அது அசாதாரணமான மனிதருக்கு சொந்தமானது என்பதுதான் அடிவயிற்றை கலக்கும் விஷயம். அந்த மனிதர், கரீம் லாலா. மிகச் சரியாக எப்போது அவர் பம்பாய் வந்து சேர்ந்தார் என்று யாருக்கும் தெரியாது. சொல்லப்போனால் அவர் குடும்பத்தை சேர்ந்தவர்களுக்கே இது குறித்த விவரம் தெரியவில்லை. போலவே எந்த ஆண்டு, மாதம், தேதியில் பிறந்தார் என்ற தகவலும்.

எனவே, குத்துமதிப்பாக 1930களில் கரீம் லாலா, பம்பாய் வந்திருக்கலாம் என சொல்கிறார்கள். ஏனெனில், அப்போதுதான் நேபாளியர்கள், பர்மினியர்கள், சிலோனை சேர்ந்தவர்கள் என

பல திசைகளிலிருந்தும் சாரிசாரியாக மக்கள் பம்பாயில் குடியேற ஆரம்பித்தார்கள். இப்போது இருப்பது போல் அப்போது பம்பாய் மாநகரமாக இல்லை. சிதறுதேங்காய் ஆகத்தான் காட்சியளித்தது. ஆனால், ஒன்றிணைந்து நிச்சயம் பெரிய நகரமாக உருவெடுக்கும் என அனைவருமே எதிர்பார்த்தார்கள். நம்பிக்கையுடன் வந்து சேர்ந்தார்கள்.

அப்படி வந்தவர்கள்தான் காபூலிவாலாக்கள். அதாவது, ஆப்கானிஸ்தானை சேர்ந்தவர்கள். இவர்களே 'பதான்ஸ்' என்றழைக்கப்படுகிறார்கள். பம்பாயின் முகத்தை மாற்றி அமைத்ததில் இந்த 'பதான்'களுக்கு பெரும் பங்குண்டு.

இந்த 'பதான்ஸ்' நமக்கும் அறிமுகமானவர்கள்தான். 'பதானி', 'பட்டாணி' என்றெல்லாம் நாமும் அவர்களை அழைத்திருக்கிறோம். 'நம்பிள்கி, கிம்பிள்கி' என அவர்கள் பேசுவதை கிண்டல் செய்திருக்கிறோம். சைக்கிளில் வட்டி வசூலிக்க வரும் அவர்களைப் பார்த்து பயந்து ஓடியிருக்கிறோம்.

அப்துல் கரீம் கான் என்ற கரீம் லாலா அப்படி பெஷாவரிலிருந்து கண்கள் நிறைய கனவுடன் பம்பாய்க்கு வந்த 'பதான்'தான். ஏழடி உயரம். 'எல்லை காந்தி'யான கான் அப்துல் கஃபார்கானை தனது குருவாக அவர் நினைத்தார் என்று சொன்னால் இருந்த இடத்திலிருந்தே இந்த வாக்கியத்தை எழுதியவனை நோக்கி கல்லெறிவீர்கள். காரணம், நம் நாட்டின் பெருமைக்குரிய விருதான 'பாரத ரத்னா'வை பெற்ற முதல் வெளிநாட்டவர் கான் அப்துல் கஃபார்கான்தான்.

அப்படிப்பட்டவரின் சீடனாக ஒரு மாஃபியாவா என கொந்தளிப்பீர்கள். ஆனால், அதுதான் உண்மை. வார்த்தைக்கு வார்த்தை கான் அப்துல் கஃபார்கானை குறித்துத்தான் கரீம் லாலா பேசுவார்.

என்றாலும், குருநாதரை போல் சுதந்திரப் போராட்டத்தில் அவர் பங்கேற்கவில்லை. பதிலாக பம்பாயின் அழகில் தன் மனதை பறிகொடுத்தார். மலைகளும், கணவாய்களும் நிரம்பிய ஆப்கனில் தன் இளமையை கழித்தவருக்கு பம்பாயின் தோற்றமும், பொங்கி வழியும் கடலும் சொர்க்கமாக தெரிந்தது. எனவே, இனி இதுதான் என் ஊர், நாடு என்று தீர்மானித்தார்.

எல்லோரையும் போல் கரீம்கானும் பிழைப்புக்காகத்தான் பம்பாய் வந்தார். பெஷாவரில் தன்னால் அனுபவிக்க முடியாத அனைத்தையும் இங்கு அனுபவித்துவிட வேண்டுமென்றுதான் துடித்தார். அதற்காகவே தெற்கு பம்பாயின் க்ராண்ட் ரோட் ஸ்டேஷனுக்கு அருகில் இருக்கும் பெய்டா குல்லியில் ஒரு சின்ன அறையை வாடகைக்கு எடுத்தார்.

எழுத்தறிவு இல்லை. எந்தத் தொழிலிலும் முன் அனுபவம்

கிடையாது. எனவே, வேலை தேடி எங்கும் செல்ல முடியாது. அப்படியானால் 'ப்பூவா'வுக்கு வழி? சுயதொழில் செய்வதென்று தீர்மானித்தார். சிரிக்காதீர்கள். பெரும்பாலான 'பதான்ஸ்' அன்று சொந்தமாக தொழில் செய்தவர்கள்தான்.அந்தத் தொழில் வட்டிக்கு பணம் விடுவது. சுற்றிலும் இருந்தவர்கள் வாரக் கூலி வாங்குபவர்கள். எனவே, அசலையும், வட்டியையும் சனிக்கிழமை வசூலிப்பார்கள். இந்தத் தொழிலுக்கும் மூலதனம் வேண்டுமே? அதற்கு வசதி படைத்த 'பதான்'கள் உதவினார்கள். அவர்களிடமிருந்து ஒரு ரூபாய் வட்டிக்கு மற்ற 'பதான்ஸ்' பணம் வாங்குவார்கள். அதை இரண்டு அல்லது மூன்று வட்டிக்கு மற்றவர்களுக்கு கொடுப்பார்கள்.

இப்படித்தான் உடல் உழைப்பு இல்லாமல், ஆனால், பரம சவுக்கியமாக 'பதான்'கள் வாழ்ந்தார்கள்.

இந்தத் தொழிலைத்தான் கரீம்கானும் செய்தார் – கொஞ்சம் வித்தியாசமாக. தன் தெருவில் ஒரு 'சோஷியல் க்ளப்'பை தொடங்கினார். பெயருக்குத்தான் அது சமூக மன்றம். மற்றபடி நடந்ததெல்லாம் சூதாட்டம்.

யெஸ்... யெஸ்... யெஸ்... பம்பாயில் முதன்முதலில் சீட்டாட்ட கிளப்பை ஆரம்பித்தது கரீம்கான்தான். இந்த 'ஏற்பாடு'தான் கொஞ்சம் கொஞ்சமாக அரைகுறை ஆடையுடன் பெண்களின் நடனம், நதியாக பெருக்கெடுத்து ஓடும் 'சரக்கு' என வளர்ந்து இன்று 'கேசினோ'வாக உருவெடுத்திருக்கிறது.

இந்த வைபவத்துக்கு பிள்ளையார்சுழி போட்டவர் சாட்சாத் கரீம்கான்தான். ஆனால், அவர் 'க்ளப்' ஆரம்பித்த நாட்களில் இதெல்லாம் எதுவும் கிடையாது. கூரைக்கு கீழே ஆங்காங்கே கோணிகள் விரிக்கப்பட்டிருக்கும். சப்பணமிட்டோ, குத்துக்காலிட்டு அமர்ந்தோ குழு குழுவாக சீட்டாட வேண்டும்.

போதாதா? தொழிலாளர்களும், கூலியாட்களும் விடிய விடிய 'காசு'க்கு சீட்டாட்டம் ஆடினார்கள். இருந்த காலணா, அரையணாவையும் சுரண்டி 'பெட்' கட்டினார்கள்.

மொத்த பணமும் தீர்ந்த பிறகு எவரும் சோர்ந்த முகத்துடன் வெளியேற மாட்டார்களே... நிச்சயம் 'அடுத்த' ஆட்டத்தில் விட்டதை பிடித்துவிடுவோம் என்றுதானே நம்புவார்கள்? அப்படித்தான் அந்தப் பகுதி ஆண்களும் நம்பினார்கள். ஆனால், பணத்துக்கு எங்கு போவது?

அந்த நேரத்தில்தான் கரீம்கான் நுழைவார்.

வேண்டிய பணத்தை இப்பொழுதே தருகிறேன். அதற்கு இவ்வளவு வட்டி. அதைப் பிடித்துக்கொள்வேன். எஞ்சியதை வாங்கிக் கொள். சனிக்கிழமை கூலி வாங்கியதும் அசலை கொடு. யோசிக்காதே. உன்னை நான் நம்புகிறேன். உனக்கு அதிர்ஷ்டமும், திறமையும் இருக்கிறது. இன்னொரு ஆட்டம் ஆடினால் நிச்சயம்

இதுவரை எவ்வளவு பணத்தை இழந்தாயோ அதற்கு மேலாகவே பெறுவாய். என்ன சொல்கிறாய்?

சொல்வதற்கு என்ன இருக்கிறது? சூதாட்ட போதையில் அறிவு கண்ணை மறைக்க, பூம்பூம் மாடு மாதிரி உழைக்கும் மக்கள் தலையசைப்பார்கள். முடிந்தது கதை. மறுவிநாடியே ஐந்து ரூபாய் வட்டிக்கு பணம் கை மாறும். நம்பிக்கையுடன் சீட்டாடுவார்கள். சர்வ நிச்சயமாக அனைத்தையும் இழந்து வெறும் கையுடன் வீடுபோய் சேருவார்கள். சனிக்கிழமை கூலி வாங்கிக்கொண்டு வெளியே வரும்போது எதிர்பார்த்தது போலவே கரீம்கானின் ஆட்கள் வழிமறிப்பார்கள். மொத்தத்தையும் பிடுங்கிக் கொள்வார்கள். பரிதாபமாக தொழிலாளர்கள் விழிக்கும்போது 'இரக்கப்பட்டு' குடும்பம் நடத்த வட்டிக்கு பணம் தருவார்கள்...

இப்படித்தான் கரீம்கான், தன் பிழைப்பை நடத்தினார். சிறுக சிறுக வளர்ந்தார். 'சோஷியல் க்ளப்'புக்குள் நுழைய தனிக் கட்டணம். ஒவ்வொரு விளையாட்டுக்கும் தனித்தனி 'சந்தா'. இதெல்லாம் போக 'ஆன் தி ஸ்பாட்' வட்டிக்கு பணம். கேட்பானேன்... கொழித்தார். மற்ற 'பதான்' இளைஞர்களுக்கு ரோல் மாடல் ஆனார்.

அவரது இந்த 'அரிய சேவை'யை பாராட்டித்தான் 'லாலா' பட்டத்தை 'யாரோ' வழங்கினார்கள். அந்த சுபமுகூர்த்த நொடியில் கரீம்கான் மறைந்தார். கரீம்லாலா தோன்றினார். 'லாலா' என்பதற்கு பெரிய அருஞ்சொற்பொருள் எல்லாம் இல்லை. 'தல' என்று மரியாதையுடன் குறிப்பிடுவோம் அல்லவா? அப்படித்தான் 'லாலா'வும்.

ரைட். கட்டப்பஞ்சாயத்து? அது இலவச இணைப்பாக வந்து சேர்ந்தது. சூதாட்ட விடுதி என்றால் சண்டை, சச்சரவுகள் எழும். அதுபோன்ற சமயங்களில் அங்கிருக்கும் அடியாட்கள் அடித்துக் கொண்டவர்களை அலேக்காக தூக்கிக்கொண்டு மொட்டை மாடிக்கு வருவார்கள். அங்கு கயிற்றுக் கட்டிலில் கால் நீட்டி அமர்ந்திருந்த கரீம் லாலா, இருவருக்கும் இடையில் மத்தியஸ்தம் செய்வார். அப்போது பேச்சுவாக்கில் பாதிக்கப்பட்டவர், 'வீட்ல ஒரே பிரச்னைணா... வீட்டுக்காரன் தொல்ல தாங்கல... அந்த கோபத்தைத்தான் இங்க காட்டிட்டேன்... மன்னிச்சிடுணா...' என்பார்.

இதுபோன்ற பொறிகள் நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக தன் மீது பட்டுக் கொண்டே இருந்ததை கவனித்த கரீம் லாலா, சட்டென்று முடிவெடுத்தார். தன் மீது விழுந்த பொறியை ஊதி நெருப்பாக்கினார்.

வேறொன்றுமில்லை. சம்பந்தப்பட்ட வீட்டு உரிமையாளரையே

தூக்கி வரச் செய்தார். அந்த இடத்திலேயே பஞ்சாயத்து நடத்தி தீர்ப்பு வழங்கினார். இப்படி கரீம்லாலா செய்ததற்கு காரணம்,

தனது ‘க்ளப்’பில் அடிதடி நடக்கக்கூடாது என்ற நல்லெண்ணம்தான்.

ஆனால், இதுவே வருமானத்துக்குரிய ‘உப’ வழியாகவும் அவருக்கு மாறியது. சம்பந்தப்பட்ட வீட்டு உரிமையாளர்கள் கணிசமான ஒரு தொகையை கமிஷனாக கொடுத்து தங்களுக்கு சாதகமாக தீர்ப்பு வரும்படி பார்த்துக்கொண்டார்கள்.

ஆஹா... வட்டிப் பணம் என்றால் அது வர சனிக்கிழமை வரை காத்திருக்க வேண்டும். இது அப்படியில்லையே... நோகாமல், வளையாமல் உடனுக்குடன் ஒரு தொகை கிடைத்துவிடுகிறதே... என்று அகமகிழ்ந்த கரீம் லாலா, ‘க்ளப்’பை பகுதி நேரமாகவும் கட்டப் பஞ்சாயத்தை முழு நேரமாகவும் செய்ய ஆரம்பித்தார்.

விளைவு? தெற்கு பம்பாயின் அனைத்து பிரச்னைகளும் அவரைத் தேடி வந்தன. எல்லாவற்றையும் நேரடியாக விசாரிக்க வேண்டுமென்றால் அதற்கு ஒரு ஜன்மம் போதாது. என்ன செய்யலாம் என்று யோசித்தவருக்கு அடித்த ப்ளாஷ்தான் வாக்கிங் ஸ்டிக் ஐடியா.

இந்த ஐடியாவுக்கு பின்னாலும் ஒரு கதை இருக்கிறது. அதையும் பார்த்துவிடுவோம்.

# 12

“தல, நிறைய பஞ்சாயத்து உங்களைத் தேடி வருது. உங்க தீர்ப்புக்காக பிரச்னைகள் காத்திருக்கு. எல்லா இடத்துக்கும் நீங்க போக முடியாது. அதனால ஒரு யோசனை தோணுது...”

என்று தலையை சொறிந்த முராத்கானை உற்றுப் பார்த்தார் கரீம்லாலா. சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. முராத்கான் அமைதியாக இருக்க, அவர் அருகில் இருந்த யாகூப்கான் மேலே தொடர்ந்தார்.

“அது ஒண்ணும் இல்ல தல... உங்ககிட்ட இருக்கிற வாக்கிங் ஸ்டிக் மாதிரியே நிறைய வாங்குவோம். எங்க எல்லாம் பஞ்சாயத்து நடக்குதோ, எந்த இடத்துக்கெல்லாம் உங்களால போக முடியாதோ, அங்க எல்லாம் நம்ம ஆளுங்க உங்க வாக்கிங் ஸ்டிக்கை எடுத்துட்டு போகட்டும். அதைப் பார்த்து மக்கள் பயப்படுவாங்க. பஞ்சாயத்தும் சுலபமா முடியும். வர வேண்டிய கமிஷனும் வந்து சேரும். என்ன சொல்றீங்க?”

சட்டென்று சிரித்து விட்டார் கரீம் லாலா. அவர்கள் இருவரும் எதற்கு அடிபோடுகிறார்கள் என்பது அவருக்கு புரிந்தது.

காரணம், முராத்கானும், யாகூப்கானும்தான் அன்று நில புரோக்கர்களாக இருந்தார்கள். ரியல் எஸ்டேட் பிசினஸ் அப்போது உருவாகியிருக்கவில்லை. அதற்கான விதைகள் மட்டுமே தூவப்பட்டிருந்தன. அதை கச்சிதமாக பாத்தி கட்டி வளர்க்கும் பொறுப்பை அவர்கள் இருவரும் ஏற்றிருந்தார்கள். எனவே, அவர்களுக்கு கரீம் லாலாவின் உதவி தேவைப்பட்டது. கூடவே ஒவ்வொரு பஞ்சாயத்து முடிந்த பிறகும் அவருக்கு கமிஷனாக பெரும் தொகையை கொடுக்க வேண்டி இருந்தது. தர மாட்டேன் என்று சொல்லவும் முடியாது. முதலுக்கே மோசமாகிவிடும்.

எனவே, கரீம் லாலாவின் அரவணைப்பும் வேண்டும். அதே நேரம் கமிஷன் தொகையும் குறைய வேண்டும். இதற்கு என்ன செய்யலாம் என்று இருவரும் ரூம் போட்டு யோசித்தார்கள். அப்போது அவர்கள் மூளையில் எரிந்த பல்புதான் இந்த வாக்கிங் ஸ்டிக் ஐடியா.

ஏனெனில் சில நாட்களுக்கு முன்புதான் தன் ஐம்பதாவது பிறந்தநாளை கரீம் லாலா கொண்டாடியிருந்தார். ‘பாட்ஷா’ படத்தில் ரஜினிக்கு சக ‘டான்’ கள் விழா எடுப்பார்கள் இல்லையா? அது மாதிரி கற்பனை செய்யுங்கள். இந்த ஏற்பாட்டையும் அவரது ஆட்கள்தான் செய்திருந்தார்கள். உண்மையிலேயே அது அவருக்கு பொன் விழாவா என்று யாருக்கும் தெரியாது. அப்படித்தான் சொன்னார்கள்.

அதை அப்படியே பம்பாய் மக்கள் ஏற்றார்கள்.

அவ்வளவுதான்.

அந்தவிழாவில்தான் அவருக்குவாக்கிங்ஸ்டிக்பரிசளிக்கப்பட்டது. முதலில் அதைப் பார்த்து கரீம் லாலா கோபப்பட்டார்.

“கொம்புஊன்றிநடக்கிறஅளவுக்குஎனக்குஒண்ணும்வயசாகலை. உடம்புல தெம்பும் வலுவும் இருக்கு. நூறு பேரை என்னால இப்பவும் ஒரே சமயத்துல அடிக்க முடியும். பார்க்கறீங்களா?” என கர்ஜித்தார்.

“தப்பா புரிஞ்சுகிட்டீங்க தல. இந்த வாக்கிங் ஸ்டிக் உங்களுக்கு இன்னும் கம்பீரத்தைதான் தரும். யோசிச்சுப் பாருங்க. வெள்ளை சபாரி சூட். வாய்ல பீடிக்கு பதிலா பைப். காதோரம் லேசா வெள்ளை முடி. கைல வீசி நடக்க வாக்கிங் ஸ்டிக். இப்படி நீங்க வந்தா எப்படி இருக்கும்? கூடவே உங்க ஸ்டிக் உள்ள ஒரு கத்தியை மறைச்சு வைச்சோம்னு வைச்சுக்குங்க... உலகமே உங்களைப் பார்த்து அலறும்...”

தயக்கத்துடன் சொன்ன அடியாளை கட்டி அணைத்தார். அந்த நிமிடமே அவன் சொன்னபடி மாறினார். அதற்கு பிறகுதான் வாக்கிங் ஸ்டிக்கை கரீம் லாலா பயன்படுத்த ஆரம்பித்தார்.

அவரது இந்த தோற்றத்தைதான் 1950, 60களில் இந்தியாவில் இருந்த அனைத்து பணக்காரர்களும் பின்பற்றினார்கள். எம்ஜிஆர் – சிவாஜி படங்களில் எஸ்.வி.ரங்காராவ் அச்சு அசலாக இப்படித்தான் படங்களில் தோன்றுவார். வில்லன் கதாபாத்திரம் தன் கையில் இருக்கும் வாக்கிங் ஸ்டிக்கின் பிடியை இழுக்கும். உடனே ஒரு குறுவாள் தோன்றும். அதை ‘சதக்’ என்று தன் முன்னால் இருப்பவரின் வயிற்றில் குத்தும்.

இவையெல்லாமே கரீம்லாலாவிடமிருந்துகாப்பியடிக்கப்பட்டதுதான். இதற்காக அவர் ராயல்டி எல்லாம் வசூலிக்கவில்லை.

இப்படி இந்தியாவின் ஒரு சாராருக்கு முகமாக மாறிப் போன தன் தோற்றத்தை வைத்து விளையாட முராத்கானும், யாகூப்கானும் முடிவு செய்துவிட்டதை அவர் உணர்ந்தார். இதனால் தனக்கு என்ன நஷ்டம் என்று சில விநாடிகள் யோசித்தார். ஒன்றுமில்லை. மேலோட்டமாக பார்க்கும்போது கமிஷன் குறைவது போல் தோன்றும். ஆனால், மூலை முடுக்கெல்லாம் தன் வாக்கிங் ஸ்டிக் ராஜாங்கம் நடத்தும். இதன் மூலமாக வரும் தொகை நிச்சயம் இப்போது வசூலாவதை விட அதிகமாகத்தான் இருக்கும். தவிர தன் புகழும் திக்கெட்டும் பரவும். ஸ்டிக் உடையாது. ஆனால், விஷப்பாம்பும் அதைக் கண்டு மிரளும்.

அதன் பிறகு கணநேரம் கூட கரீம் லாலா தாமதிக்கவில்லை. தன் சார்பாக வாக்கிங் ஸ்டிக்கை பயன்படுத்த அனுமதி அளித்தார்.

அவ்வளவுதான். தெற்கு பம்பாயே அந்த ஸ்டிக்கை கண்டு அலறியது. ஏனெனில் அங்குதான் ‘பகடி’ சிஸ்டம் பெருமளவுக்கு அமலில் இருந்தது. டெக்னிக்கலாக பார்த்தால் ‘பகடி’ என்னும்

சொல்லுக்கு 'டர்பன்' என்றுதான் அர்த்தம். ஆனால், நடைமுறையில் அதற்கு வேறொரு பொருள் இருந்தது.

அது, வீட்டு வாடகை தொடர்பானது.

அதாவது, மாதந்தோறும் உரிமையாளருக்கு வாடகை தர வேண்டியதில்லை. பதிலாக ஒரு வருடம் அல்லது இரு வருடங்களுக்கு அந்த வீட்டை குத்தகைக்கு எடுக்கலாம். லீஸ் பணத்தை மொத்தமாக வீட்டு உரிமையாளரிடம் கொடுத்துவிட வேண்டும். இதைத்தான் 'பகடி' என்பார்கள். இது குடியிருக்கும் வீட்டுக்கு மட்டுமல்ல, கடைகளுக்கும் பொருந்தும்.

ஒருவகையில் வீட்டு அல்லது கடை உரிமையாளருக்கு இது லாபம் தரும் விஷயமாக இருந்தாலும் வேறொரு சிக்கல் தலையெடுக்க ஆரம்பித்தது. யெஸ், பம்பாய் வளர்ந்துகொண்டிருந்தது. எனவே, நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக வாடகை உயர்ந்தது. இருக்க இடம் தேடி அலைந்தவர்கள் கூடுதலாக பணம் தர முன்வந்தார்கள். அவர்களுக்கு இடம் கொடுக்கலாம் என்றால், ஏற்கனவே 'பகடி' கொடுத்து குடியேறியிருந்தவர்கள் காலி செய்ய மறுத்தார்கள்.

இவையெல்லாம் முராத்கானும், யாகூப்கானும் எதிர்கொண்ட பிரச்னைகள். இதை தீர்க்கத்தான் கரீம்லாலாவின் வாக்கிங் ஸ்டிக்கை பயன்படுத்த ஆரம்பித்தார்கள். அதற்கு பலனும் கிடைத்தது. இந்த அறுவடையை அவர்கள் இருவர் மட்டுமல்ல, கரீம்லாலாவும் அனுபவிக்க ஆரம்பித்தார்.

நட்சத்திர விடுதிக்கு அவர் உணவருந்த சென்றால், சோபாவில் தன் ஸ்டிக்கை வைப்பார். ஒருவரும் அதை தொடவும் மாட்டார்கள். அதை நகர்த்தி வைத்துவிட்டு அந்த இடத்தில் அமரவும் மாட்டார்கள். ஏதோ கரீம்லாலாவே அங்கு அமர்ந்திருப்பது போல் மரியாதை செய்வார்கள். தொழுகைக்கு செல்லும்போதும் அப்படித்தான். தூணோரம் அதை சாய்த்து வைப்பார். தூணைச் சுற்றிலும் மூன்றடி தொலைவுக்கு வெறும் காற்றுதான் இருக்கும்.

இதையெல்லாம் ஹாஜி மஸ்தான் கவனித்துக் கொண்டிருந்தார். இப்படிப்பட்ட ஒரு நபர் தனக்கு பக்கபலமாக இருந்தால் இமயமலையையே புரட்டலாம் என்று தோன்றியது. உடனே 'மீட்டிங்'குக்கு ஏற்பாடு செய்தார்.

கரீம்லாலா இதை சற்றும் எதிர்பார்க்கவில்லை. மஸ்தானின் புகழ் அவருக்கும் தெரிந்திருந்தது. ஏதோ ஒரு வகையில் தன் வாழ்க்கை மாறப்போகிறது, பல படிகள் முன்னேறப்போகிறது என்பதை உணர்ந்தார். சந்திப்புக்கு ஒப்புக்கொண்டார்.

கிராண்ட் ரோட்டிலுள்ள மசூதியில் இருவரும் சந்தித்தார்கள். அன்று வெள்ளிக்கிழமை. தொழுகை முடிந்ததும் சாதாரணமாக உலக நடப்புகளை குறித்து பேசினார்கள்.

“உங்களுக்காக விருந்து ஏற்பாடு செய்திருக்கேன்...” கரீம் லாலா அமைதியாக சொன்னார்.

“அப்படியா? வாங்க போகலாம்...”

மஸ்தானை அழைத்துக்கொண்டு தன் பங்களாவுக்கு வந்தார். மணக்கும் பிரியாணி பரிமாறப்பட்டது. பேசிக்கொண்டே சாப்பிட்டார்கள். வாய்விட்டுச் சிரித்தார்கள். ‘விஷயத்தை’ மஸ்தானாக ஆரம்பிக்கட்டும் என கரீம்லாலா காத்திருந்தார். அந்த நேரமும் வந்தது.

“கான்பாய்... உங்களோட இப்படி நண்பன் மாதிரி சிரிச்சுப் பேசறது மகிழ்ச்சியா இருக்கு. இப்ப பிசினசுக்கு வருவோம்...”

“சொல்லுங்க மஸ்தான்பாய்...”

“என்ன தொழில் நான் பண்ணறேன்னு உங்களுக்குத் தெரியும்...”

“ம்...”

“அதுக்கு உங்க உதவி வேணும்...”

“என்ன உதவி?”

“கடத்தல் பொருளை துறைமுகத்துலேந்து என் இடத்துக்கு கொண்டுவரும்போதும் அங்கிருந்து பார்ட்டிகிட்ட சேர்க்கும்போதும் பாதுகாப்புக்கு உங்க ஆட்கள் வரணும்...”

“இதனால என் ஆளுங்களுக்கு பிரச்னை வருமா?”

“வராது கரீம்பாய். உங்க ஆட்களையும்,

உங்க வாக்கிங் ஸ்டிக்கையும் எதிர்க்கிற துணிச்சல் பம்பாய்ல யாருக்கும் இல்லை...”

“சரி. எனக்கு என்ன லாபம் கிடைக்கும்?”

“பங்கு...”

“எத்தனை சதவிகிதம்?”

“அது பொருளைப் பொருத்தது...”

“சம்மதிக்கிறேன் பாய்...”

இதன் பிறகு நடந்ததெல்லாம் சரித்திரம். அது மாஃபியாக்களின் வரலாற்றிலேயே புது அத்தியாயத்தை எழுதியது.

மஸ்தானுடன் கைகோர்த்த கரீம்பாய், அப்படியே வரதராஜ முதலியாருக்கும் நண்பரானார்.

மூவரும் மூன்று விதங்களில் வளர்ந்தார்கள். ஒருவர் ஏரியாவில் மற்றவர் நுழையவில்லை. போலவே ஒருவர் செய்யும் தொழிலிலும் மற்றவர் மூக்கை நுழைக்கவில்லை. அதே சமயம் மஸ்தானுடன் இணைந்து செய்த வேலையிலும் சின்சியராக இருந்தார்கள். ஒருவர் நலனில் மற்றவர் அக்கறை செலுத்தினார்கள். மதமோ, சாதியோ, இனமோ இதற்கு தடையாக இருக்கவில்லை.

கடைசிவரை மூவரும் நண்பர்களாக இருந்தார்கள். கைகோர்த்தபடி பம்பாயை ஆட்டிப் படைத்தார்கள்.

காவல்துறை இதைப் பார்த்துக்கொண்டு சும்மா இருக்குமா?

கரீம்லாலாவுக்கு குடைச்சல் கொடுக்க முயன்றார்கள். பணத்தால் அவர்கள் அனைவரையும் கட்டிப்போட்டார். லேசான விசாரணைக்கு வந்த அதிகாரிகளுக்கு கூட கை நிறைய அள்ளி அள்ளிக் கொடுத்தார்.

பிறகென்ன? ஒருவரும் கரீம் லாலா இருந்த திசை பக்கமே காக்கி உடை அணிந்து வரவில்லை. ஆனால், ஒரே ஒருவரிடம் மட்டும் அவரது பாச்சா பலிக்கவில்லை.

இப்ராஹிம் கஸ்கர்.

தலைமை ஏட்டாக இருந்த இவர் நீதி, நேர்மை, நியாயத்துக்கு கட்டுப்பட்டவர். வட்டிக்கு பணம் விடுவதும், லஞ்சம் வாங்குவதும் மதத்துக்கு விரோதமானது என தீவிரமாக நம்புபவர். எனவே, வாய்ப்பு கிடைக்கும்போதெல்லாம் கரீம்லாலா மீது வழக்கு பதிவு செய்தார்.

இதனாலேயே கரீம்லாலாவுக்கு இவரைப் பிடித்திருந்தது. தன் சம்பளத்தில் அரை வயிற்றுக் கஞ்சி குடித்தாலும் நேர்மையாக வாழ வேண்டும் என்று நினைத்தவரை வணங்கினார். தன்னை விட வயது குறைந்தவராக இருந்தாலும் ‘இப்ராஹிம் பாய்’ என்றே இவரை அன்புடன் அழைத்தார்.

அதனால்தான் இவருக்கு இரண்டாவதாக ஆண் குழந்தை பிறந்தபோது மொத்த செலவையும் ஏற்றார். ஆர்ப்பாட்டமாக விழா நடத்தினார். அந்த விழாவில் அந்தக் குழந்தைக்கு பெயர் வைத்தது கூட கரீம்லாலாதான்.

அந்தப் பெயர்தான், தாவூத். தாவூத் இப்ராஹிம்!

இன்றும் இந்திய அரசால் தேடப்படும் குற்றவாளி அந்தக் குழந்தைதான்!

## 13

இதற்கு மேலும் இடம் சுட்டி பொருள் விளக்கம் தந்தால் இந்த நூலை படிப்பதையே நிறுத்திவிடுவீர்கள். எனவே, முறுக்கு பிழியாமல் நேரடியாக விஷயத்துக்கு வந்துவிடலாம்.

பம்பாய் மாஃபியாக்கள் எப்போது திரிவேணி சங்கமமாக சங்கமித்தார்களோ அன்று தாதாக்களின் வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்பட்டது.

வரதராஜ முதலியாரும், ஹாஜிமஸ்தானும், கரீம்லாலாவும் கைகோர்த்த நொடி, புதிய பம்பாய் உருவாக வழிவகுத்தது. சில்லரை திருடர்கள் கொள்ளையர்களாக வளர்ந்தார்கள். கொள்ளையர்கள் குறுநில மன்னர்களாக ஜம்ப் ஆனார்கள். குறுநில மன்னர்கள் அரசரானார்கள். முதலியாரும், மஸ்தானும், லாலாவும் பேரரசர்களாகவும், மூவேந்தர்களாகவும் சிம்மாசனத்தில் அமர்ந்தார்கள்.

பிடித்தது சனி. பம்பாயே திணறியது. சொல்லி வைத்தது போல் அனைவரும் 'ஏழைப் பங்காளர்களாக' காட்சியளித்ததால் காவல் துறையின் சுண்டு விரல் கூட இவர்கள் மீது படவில்லை.

இதனால் அதிகம் பயனடைந்தது ஜெனாபாய்தான். மூவருக்கும் தோழனாக இருந்தவர், முன்பே சொன்னபடி காவல்துறைக்கும் நண்பனாக விளங்கினார். நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு புர்கா அணிந்தபடி வைரத்தோடும், வைரமூக்குத்தியும் மின்ன போலீசாரின் இல்லங்களுக்குச் சென்றவர், உரிய தகவலை அவர்களுக்கு வழங்கினார். அது எறும்புக்கு கிடைத்த தீனியாக அமைந்ததால் மாஃபியாக்களுக்கு பெரிய சேதம் ஏற்படவில்லை. அதே நேரம் ஏட்டுகளுக்கு புரொமோஷன் கிடைக்கவும் அது வழிவகுத்தது.

மெல்ல மெல்ல ஒண்டுக் குடித்தனத்தில் இருந்து தனி வீட்டுக்கு மாறினார் ஜெனாபாய். அந்த தனி வீடு பின்னால் பங்களாவானது. அந்த மாளிகையும் அவருக்கே சொந்தமானது.

பசி மயக்கத்தில் சுருண்ட அவரது குழந்தைகள், எதைச் சாப்பிடுவது என்று தெரியாத அளவுக்கு சிறுவர், சிறுமிகளானார்கள். ஒரு வாரத்துக்கு ஒரு உடை என்பது மறைந்து, ஒரு நாளைக்கு மூன்று உடைகளை அணிய ஆரம்பித்தார்கள். பள்ளிக்குச் செல்லாமலேயே பாஸானார்கள். தேர்வு எழுதாமலேயே முதல் ரேங்க் எடுத்தார்கள். டீன் ஏஜில் அவர்கள் அடியெடுத்து வைத்தபோது கழுத்து நிறைய நகைகளும், கைகளில் பிரேஸ்லெட்டும் அணியத் தொடங்கினார்கள்.

மற்ற பிள்ளைகள் எப்படியோ, கமால் தர்வேஷ் இப்படித்தான் காட்சியளித்தான். ஜெனாபாயின் இளைய மகனான அவன், திடீர் பணக்காரர்களின் வாரிசுகள் என்னவெல்லாம் அட்டூழியம்

செய்வார்களோ அதையெல்லாம் செய்தான். தினவெடுத்த உடல் பெண் வாசனையை தேடியது. பாலியல் தொழிலாளர்களை தஞ்சம் அடைந்தவன் ஒரு கட்டத்துக்குப் பிறகு எதிர்படும் பெண்களை எல்லாம் தொந்தரவு செய்ய ஆரம்பித்தான். தெளியத் தெளிய குடித்தான். ஒட்டிப் பிறந்த இரட்டை வாழையாக உதட்டில் சிகரெட்டுடனேயே திரிந்தான். தன் அம்மாவுக்கு சமமாக கட்டப் பஞ்சாயத்து செய்தவன், அடிதடியிலும் இறங்கினான். அல்லக்கைகளுடனேயே பெரும்பொழுதை செலவிட்டான். இதுதான் அவன் உயிருக்கும் உலை வைத்தது.

எதிரிகள் பிறந்தார்கள். அவர்கள் மாஃபியா குழுக்களுக்குள்ளேயே இருந்ததுதான் ஹைலைட்.

வரலாறு திரும்பத் திரும்ப இந்தப் பாடத்தைத்தான் கற்றுத் தருகிறது. எந்தத் தலைவனும் பிறப்பதில்லை. உருவாகிறான். மக்கள் ஆதரவு பெற்ற பிறகே குழுவையோ, கூட்டத்தையோ ஆட்சி செய்கிறான். படிப்படியான வளர்ச்சியே நிலையான இடத்துக்கு அடித்தளம். அப்படியில்லாமல் மழையில் முளைத்த காளானாக உருவெடுக்கும் தலைவர்கள், சில நாட்களிலேயே மறைந்து போவார்கள்.

இந்த சரித்திர உண்மைதான் கமால் தர்வேஷின் கொலை வழியாகவும் நிரூபிக்கப்பட்டது.

அப்போது ஜெனாபாய் ஊரில் இல்லை. அதிகாலையிலேயே கண் விழித்த கமால் தர்வேஷ், இருள் விலகுவதற்கு முன்பே தன் வீட்டைவிட்டு வெளியே வந்தான். கூப்பிடும் தொலைவில்தான் மினரா மஸ்ஜித் இருக்கிறது. அதன் அருகில் இருக்கும் டீ கடையில் சுடச்சுட இந்நேரத்தில் தேநீர் கிடைக்கும். சோம்பல் முறித்தபடி நடந்தான்.

வாய் நமநமத்தது. சிகரெட்டை பற்ற வைத்தான். தீக்குச்சியை அணைப்பதற்கு முன்பு அந்தக் காட்சியை கண்டான்.

நான்கு பேர். அவன் வயது தான் இருக்கும். வாட்ட சாட்டமாக இருந்தார்கள். திசைக்கு ஒருவராக கால்களை விரித்து நின்றார்கள். கைக்குட்டையால் முகத்தை மூடியிருந்ததால் அடையாளம் தெரியவில்லை.

“யாருடா நீங்க? எதுவா இருந்தாலும் வெளிச்சம் வந்த பிறகு வாங்க... பேசிக்கலாம்...” என்று அவன் சொல்லி முடிப்பதற்குள் -

க்ளக் என்ற ஒலி நான்கு திசையில் இருந்தும் ஒரே நேரத்தில் எழுந்தது. பாக்கெட்டில் இருந்து கத்தியை எடுத்திருக்கிறார்கள்.

சட்டென்று அவன் மனதில் அச்சம் பூத்தது. தன் பேன்ட் பாக்கெட்டில் கைவிட்டான். ஆயுதம் இல்லை. சுற்றிலும் பார்த்தான். கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை ஒருவரும் தென்படவில்லை. அடியாட்களோ சாராய மயக்கத்தில் உறங்கிக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த வேளையில், தான் தனித்து இருப்போம் என்று இவர்களுக்கு எப்படித் தெரிந்தது? அப்படியானால் நாள் கணக்கில் தன்னை பின்தொடர்ந்து கண்காணித்திருக்கிறார்கள் என்று அர்த்தம். தன் இறப்புக்கான வேளையை குறித்திருக்கிறார்கள். யார் இவர்கள்? எதற்காக தன்னை தீர்த்துக் கட்டப்போகிறார்கள்?

தெரியவில்லை. யோசிக்கவும் நேரமில்லை. முதலில் தப்பிக்க வேண்டும். கத்துவதற்காக வாய் திறந்தான். இதைப் பின்னால் இருந்த இருவரும் ஊகித்திருக்க வேண்டும். பாய்ந்து வந்து வாயை பொத்தினார்கள். முன்னால் இருந்த இருவரும் நிதானமாக தன்னை நெருங்குவதை பயத்துடன் பார்த்தான். இரண்டு கத்திகளின் நுனிகள் அவன் கண்களை நோக்கி வந்தன.

அதன் பிறகு என்ன நடந்தது என்பது அவனுக்குத் தெரியாது. தொடர்ச்சியாக தன் உடலில் பாய்ந்த கத்திக் குத்தால் பிணமானான்.

பொழுது விடிந்தது. ஜெனாபாயின் வீட்டுக்கு அருகிலேயே அவள் மகனை யாரோ கொலை செய்திருக்கிறார்கள் என்ற செய்தி காட்டுத் தீயாக பரவியது.

வயிற்றிலும் வாயிலும் அடித்துக்கொண்டு ஜெனாபாய் வந்து சேர்ந்தாள். நடுக் கூடத்தில் கமால் தர்வேஷை கிடத்தியிருந்தார்கள்.

எத்தனை கத்திக்குத்து அவன் உடம்பில் விழுந்தது என்று தெரியவில்லை. ஆனால், உடலைச் சுற்றி போர்த்தப்பட்டிருந்த வெள்ளை உடை முழுக்க ரத்தக்கறை.

"யார் என் மகனை கொன்னது?" அடி வயிற்றில் இருந்து கத்தினாள். பதில் இல்லை.

ஆக்ரோஷத்துடன் சுற்றிலும் பார்த்தாள். மகனின் அல்லக்கைகள் முகம் நிறைய பீதியுடன் நின்றிருந்தார்கள். பாய்ந்து சென்று அனைவரையும் மாறிமாறி அறைந்தாள். அப்படியும் ஆத்திரம் தீரவில்லை.

"விட மாட்டேன். கமாலை கொன்னது யாரா இருந்தாலும் சரி... அவங்களை இதே மாதிரி நடுரோட்டுல சாகடிக்காம விட மாட்டேன். இது சத்தியம்..."

உடல் நடுங்க கர்ஜித்தபடி மயக்கமானாள். வரதராஜ முதலியாரும், ஹாஜி மஸ்தானும், கரீம்லாலாவும் அவளை தாங்கிப் பிடித்தார்கள்.

தண்ணீரை முகத்தில் தெளித்தார்கள். மயக்கம் தெளிந்தவள் மூவரையும் கண்டாள். அடக்கி வைத்திருந்த துக்கம் பீறிட்டு வெடித்தது.

"நாங்க இருக்கோம் ஜெனாபாய். தைரியமா இரு. ஸ்கெட்ச் போட்டு யார் இந்த காரியத்தை செஞ்சதுன்னு தெரியலை. ஆனா, யாரா இருந்தாலும் சரி, உலகத்துல எந்த மூலைல அவங்க இருந்தாலும் சரி பத்தே நாள்ல உன் முன்னாடி கொண்டு வந்து அவங்களை நிறுத்தறோம். உன் வெறி அடங்கற அளவுக்கு அவங்களை என்ன

வேணா செஞ்சுக்க...”

கோரசாக சொன்னார்கள். சொன்னபடியே அடுத்த பத்தாவது நாள் நான்கு இளைஞர்களை ஜெனாபாயின் முன் கொண்டு வந்து நிறுத்தினார்கள்.

அவர்களுக்கு என்ன தண்டனை வழங்க வேண்டும் என்பதை முன்பே முடிவு செய்திருந்தாள். எனவே, அதையே தீர்ப்பாக சொன்னாள்.

அந்தத் தீர்ப்புதான் இந்திய மாஃபியா ராணிகளில் முதலிடத்தை ஜெனாபாய்க்கு பெற்றுத் தந்தது.

# 14

“என் மகனை கொன்னது இவங்கதானா?” அனலை கக்கியபடி ஜெனாபாய் கேட்டாள்.

“ஆமா...” அவள் கண்களை நேருக்கு நேர் பார்த்தபடி மஸ்தான் பதிலளித்தார்.

‘சரி’ என்பதற்கு அடையாளமாக தலையசைத்தவள், தீர்ப்பு வழங்க வாயைத் திறந்தாள்.

“ஒரு நிமிஷம் ஜெனாபாய்...”

இடைவெட்டிய வரதராஜ முதலியாரை நிமிர்ந்து பார்த்தாள்.

“சொல்லுங்க பாய்...”

“உன்னுடைய தீர்ப்பால இந்த ஊருக்கு எந்த ஆபத்தும் வந்துடக் கூடாது...”

“என்னால எப்படி பம்பாய்க்கு ஆபத்து வரும்?”

“வரது பாய் ஊர்னு சொன்னது பம்பாயை இல்ல... நம்மை...” பார்வையை விலக்காமல் மஸ்தான் பதிலளித்தார்.

“புரியல மஸ்தான்...”

“புரியும்படி நான் சொல்றேன்...” அதுவரை அமைதியாக இருந்த கரீம்லாலா, நிதானமாக பேச ஆரம்பித்தார்.

அப்படி என்ன ஜெனாபாயிடம் அவர் பேசினார், விளக்கினார், புரியவைத்தார் என்று யாருக்கும் தெரியாது. ஆனால், பம்பாயின் முக்கியத்துவத்தையும் அதனால் மாஃபியாக்கள் அடையும் பலனையும் உத்தேசமாக சொல்லியிருப்பார் என்று ஊகிக்கலாம். ஏனெனில், இறுதியாக ஜெனாபாய் வழங்கிய தீர்ப்பில் சொந்த உணர்ச்சியை விட பம்பாய் நிழல் உலக தாதாக்களின் நலன்கள்தான் அடங்கியிருந்தது.

என்றாலும் நாற்காலியில் அமர வைத்து விலாவாரியாக எல்லாம் விளக்கியிருக்க மாட்டார். அதற்கான சூழலும் அப்போது இல்லை. கொந்தளிப்பின் விளிம்பில் நிற்கும் ஜெனாபாய்க்கு அதையெல்லாம் தலையசைத்து கேட்கும் பொறுமை இருந்திருக்குமா என்ன?

நெவர்.

ஆனால், இந்த நூலை படித்து வரும் நமக்கு நிதானமும், பொறுமையும் இருக்கின்றன. பரந்து விரிந்த இந்தியாவில் ஏன் மும்பையில் மட்டும் மாஃபியா ராஜாக்களும், ராணிகளும் காலம்தோறும் இருந்துகொண்டேயிருக்கிறார்கள்... என்ற கேள்வி தொண்டையில் சிக்கிய முள்ளாக நமக்குள் உறுத்திக் கொண்டே இருக்கிறது. அதற்கான பதிலை இந்த சமயத்தில் தெரிந்து கொள்ளாவிட்டால் வேறு எப்போதும் அறிய முடியாது.

ஸோ, குத்த வைத்து அமருவோம். முழுமையாக தெரிந்து கொள்வோம். அப்போதுதான் அடுத்தடுத்த மாஃபியா ராணிகளையும், ராஜாக்களையும் பற்றி அறியும்போது எந்த



திகைப்பும் நமக்கு ஏற்படாது.

இதற்காக 'இந்தியா ஒரு தீபகற்பக நாடு' என்று தொண்டையை கனைத்தபடி ஆரம்பித்தால் எங்கிருந்து இந்த நூலை படிக்கிறீர்களோ அங்கிருந்தபடியே கல்லெடுத்து எறிவீர்கள்.

ஆனால், அப்படித்தான் தொடங்க முடியும்.

மூன்று பக்கங்களும் கடல் சூழ்ந்த நிலப்பரப்பு நம் நாட்டுக்கு கிடைத்த வரம். இப்படிப்பட்ட பொக்கிஷம் இருக்கும்போது நம் நாட்டில் எத்தனை பெரிய துறைமுகங்கள் இருக்க வேண்டும்? பட், இருப்பது இரண்டுதான். ஒன்று விசாகப்பட்டினம். இன்னொன்று பம்பாய். இந்த இரண்டும்தான் இயற்கையாகவே அமைந்த பெரிய துறைமுகங்கள். மற்றவை எல்லாம் டிங்கரிங் செய்து செயற்கையாக உருவாக்கப்பட்டவை.

என்றாலும் விசாகப்பட்டினத்தால் ஒரு பயனும் இல்லை. காரணம், அது வங்காள விரிகுடாவில் தேமே என்று உருவாகியிருக்கிறது. இத்தனைக்கும் கங்கை, யமுனை, பிரம்மபுத்திரா, காவிரி, கோதாவரி, கிருஷ்ணா போன்ற பெரும் நதிகள் தம்மையே இங்குதான் அர்ப்பணித்துக்கொள்கின்றன. சங்கமிக்கின்றன.

ஸோ வாட்?

வங்காள விரிகுடா புயலால் அதிகம் பாதிக்கப்படும் பிரதேசம். இதனால் கரையோரம் மாறிக்கொண்டே இருக்கும். கிழக்குக் கரையிலிருந்து கிழக்கு நோக்கிச் சென்றாலோ படு பாதாளம். கரையருகில் பெரிய கப்பல்கள் வர இயலாது. துறைமுகம் அமைக்கப்பட வேண்டுமானால் கடற்கரையின் அடித்தளத்தில்

மண்ணைத் தோண்டித்தான் ஆழமான நீர்ப்பரப்பை உண்டாக்க வேண்டும். அப்படியே அமைத்தாலும் அதைப் பாதுகாப்பதும், பராமரிப்பதும் கடினம்.

எனவேதான் சங்க காலத்தில் இப்பகுதியில் இயங்கிய பல துறைமுகங்கள் இன்றில்லை. உதாரணம், காவிரிபூம்பட்டினம்.

அதுவே அரபிக்கடல் பக்கம் என்றால், துறைமுகத்துக்கு தோதான கரைகள் அங்கிருக்கின்றன. அதனால்தான் குஜராத்தும், பம்பாயும் ஆதிகாலம் முதலே துறைமுகத்தில் முக்கியத்துவம் பெற்றிருக்கின்றன. இதற்கு ஒரே எடுத்துக்காட்டு, லோதால் என்னும் இடத்தில் அமைக்கப்பட்ட துறைமுகம். கி.மு. 2300ம் ஆண்டிலேயே அமைக்கப்பட்ட இத்துறைமுகம் சிந்து சமவெளி நாகரிகத்துடன் இணைந்தது. மட்டுமல்ல, ஹரப்பா நாகரிகத்தின் நகர அமைப்புக்கும் சிறந்த உதாரணமாக விளங்குவது. அகமதாபாத்திலிருந்து 80 கி.மீ. தொலைவில் அமைந்திருந்த அத்துறைமுகம், அன்றைய கடல்வழி வணிகத்தை பறைசாற்றிக்கொண்டிருக்கிறது.

இந்த இடத்தில் இன்னொரு விஷயத்தையும் பார்க்க வேண்டும். உலகிலுள்ள எல்லா கடலையும் விட, மத்தியதரைக் கடலும், செங்கடலும்தான் சரித்திரத்தில் குறிப்பிடப்பட்டு புகழப்பட்டுள்ளன. கடல்வழி வணிகத்தின் ஆரம்பமே அங்குதான் நிகழ்ந்தது. இந்த இரு கடலை சுற்றித்தான் உலகின் சிறந்த நாகரிகங்கள் வளர்ந்தன.

இதன் பின்னர் கடல்வழி சரித்திரத்தை எழுதியதே அரபிக்கடலும், இந்துமாக்கடலும்தான்.

இந்த இடத்தை நோக்கி வணிகத்துக்காக முதலில் அடியெடுத்து வைத்தவர்கள், அரேபிய நாட்டு மாலுமிகள். அவர்கள் ஆரம்பித்து வைத்த கடல்வழி வணிகம் அதன் பிறகு தங்குதடையின்றி பல நூற்றாண்டுகளுக்கு தொடர்ந்தது. கிறிஸ்து பிறப்பதற்கு முன்னரே, உவரித் துறைமுகம்வரை சாலமன் காலத்தில் மேலைநாட்டு கப்பல்கள் வந்ததற்கு சான்றுகள் கிடைத்திருக்கின்றன.

அலெக்சாண்டரின் படையெடுப்பு மத்தியதரைக் கடலையும், செங்கடலையும் இணைத்தது. அப்போது உருவான அலெக்சாண்ட்ரியா துறைமுகம், உலக வணிகத்துக்கான விதையை ஊன்றியது. ஒருவகையில் குளோபலைசேஷனின் ஊற்று இதுதான் என்றும் சொல்லலாம்.

செங்கடலின் கரையிலிருந்த அலெக்சாண்ட்ரியாதான் முக்கிய துறைமுகம். ஐரோப்பியர்களின் செங்கடல் பயணம் இங்கிருந்துதான் தொடங்குகிறது. எனவே, கீழைநாட்டு வணிகத்தின் வாசலாகவும் இதுவே அமைந்தது. இங்கு வந்துதான் அனைத்து நாட்டு வணிகர்களும் இந்தியாவுடன் வணிகம் செய்ய ஆரம்பித்தார்கள்.

கி.மு. 31ல், எகிப்து, ரோம சாம்ராஜ்ஜியத்தின் கீழ் வந்தது. அதன் பிறகு அரேபிய மாலுமிகளின் ஆதிக்கத்தை ஒழித்த ரோமர்கள்,

*கடல் வணிகத்தை தங்கள் வசம் எடுத்துக்கொண்டார்கள். இந்தியத் துணைக்கண்டத்தில்சிந்துமுகத்துவாரம்வரைவந்துதமதுவணிகத்தை குஜராத், மகாராஷ்டிர கடற்கரையில் மேற்கொண்டார்கள்.*

*புரிகிறதா? கொற்கை முத்துக்களும், மிளகும் தமிழகத்தில் இருந்து குஜராத் - மகாராஷ்டிர கடற்கரைக்கு சென்று அங்கிருந்து பிற நாடுகளுக்கு ஏற்றுமதியாகின. எனவே, தமிழகத்தின் பெரிய பெரிய வணிக சாத்துகள் (நிறுவனங்கள்) அரபிக் கரையோரம்தான் அமைந்திருந்தன.*

*என்றாலும் ஒரு சிக்கல் இருந்துகொண்டே இருந்தது. அரேபியர்களும் சரி, ரோமர்களும் சரி இதற்கு தீர்வு காண முடியாமல் தவித்தார்கள்.*

*அதுதான் பருவக்காற்று.*

*எப்போது எது நடக்கும், எந்தப் பக்கம் காற்று வீசும் என்று தெரியாமல் தவித்ததால் கடற்பயணம் நீண்டதாகவும், அபாயம் நிரம்பியதாகவும் இருந்தது.*

*இதை மாற்றி அமைத்தவன் ஒரு கிரேக்க மாலுமி. ஹிப்பலஸ் என்னும் பெயர் கொண்ட அவன் கி.பி.47ல் பருவக்காற்றை குறித்து, தான் அறிந்ததை வெளியிட்டான். அதாவது, அரபிக்கடலில் தென்மேற்காக ஏப்ரல் மாதம் முதல் அக்டோபர் மாதம் வரை காற்று வீசும்; பிறகு அக்டோபர் முதல் ஏப்ரல் வரை வடகிழக்காக வீசும் என்ற உண்மையை தன் அனுபவத்தில் இருந்து கண்டறிந்து சொன்னான்.*

*தட்ஸ் ஆல்.*

*பருவக்காற்றுக்கு அவன் பெயரையே சூட்டிவிட்டு உலக வணிகர்கள் அனைவரும் அரபிக்கடலில் பயணம் செய்யத் தொடங்கினார்கள். இதனால் பயணக் காலமும் குறைந்தது. வணிகப் பரிமாற்றமும் கனஜோராக நடந்தது.*

*இப்படி வணிகம் வளரவளர உலகெங்கும் சிதறியிருந்த சிறு சிறு நாடுகள் அனைத்தும் ஒன்றிணைந்து அரசுகளாக உருவாகின. அரசுகள் பேரரசுகளாக வளர்ந்தன. மொத்தத்தில் எல்லா அரசு உருவாக்கத்துக்கு பின்னாலும் அன்றும், இன்றும் வணிகர்களே இருக்கிறார்கள் என்று இன்று சமூக ஆய்வாளர்கள் சொல்வதற்கு ஆதி சாட்சி அரபிக்கடல்தான்.*

Periplus of the Erythrean Sea *என்னும் செங்கடல் வழிகாட்டி நூல் அப்படித்தான் கட்டியங் கூறுகிறது.*

*வெயிட்... வெயிட்... சட்டையை பிடிக்காதீர்கள். 'பாடப்புத்தகம் போல் எதற்கு இந்த எழவு எல்லாம்? முடிந்தால் மாஃபியாக்கள் குறித்து சொல். இல்லாவிட்டால் பொத்திக் கொண்டு நகரு. கழுத்தை அறுக்காதே...' என்று நீங்கள் சலித்துக்கொள்வது புரிகிறது.*

*ஆனால் - எப்படிப்பட்ட சாம்ராஜ்ஜியத்தை வரதராஜ*

முதலியாரும், ஹாஜிமஸ்தானும், கரீம்லாலாவும் கட்டி ஆண்டார்கள்... அதில் எப்படி ஜெனாபாய் உட்பட பல மாஃபியா ராணிகள் குளிர் காய்ந்தார்கள்... இதையெல்லாம் ஒரே இரவில் எப்படி தாவூத் இப்ராஹிம் தனக்கு சொந்தமாக்கிக்கொண்டான்... குஜராத், கொல்கத்தா துறைமுகங்களில் இந்தளவுக்கு மாஃபியாக்கள் ஏன் உருவாகவில்லை... என்பதை எல்லாம் புரிந்துகொள்ள இந்த வரலாறு அவசியம்.

எனவே, இன்னும் ஓர் அத்தியாயம் அமைதியாக இருங்கள் ப்ளீஸ்...

15

ரைட், எதற்காக *Periplus of the Erythrean Sea* எனப்படும் 'செங்கடல் வழிகாட்டி' நூலைக் குறித்து இங்கு பார்க்க வேண்டும்?

நல்ல கேள்வி. கடல்வழி வணிகம், அதனால் பூத்த மாஃபியா ராஜ்ஜியம் குறித்து அறிய வேண்டுமானால், அவசியம் 'செங்கடல் வழிகாட்டி'யை தெரிந்துகொண்டுதான் ஆக வேண்டும்.

ஏனெனில், ஆதிகாலத்தில் எல்லா மாலுமிகளும் செங்கடல் வழியாகத்தான் இந்தியாவுக்கு வந்தனர். அந்த 'Gate Way'தான் இன்றைய மாஃபியா ஆதிக்கத்துக்கு பிள்ளையார் சுழி போட்டது.

அப்படி வர ஆரம்பித்த சகல மாலுமிகளுக்கும் அரேபியக் கடற்கரையை அடுத்து இருந்ததெல்லாம் செங்கடலாகத்தான் தெரிந்தது. எனவேதான் கி.பி. முதல் நூற்றாண்டில் கிரேக்க மாலுமியால் எழுதப்பட்ட இந்த நூலுக்கு 'செங்கடல் வழிகாட்டி' என்ற பெயர் வந்தது அல்லது வைக்கப்பட்டது.

இந்திய நாட்டின் அனைத்து துறைமுகங்களையும் அடையாளம் காட்டும் இந்நூல் உண்மையில் ஒரு பொக்கிஷம். எகிப்து நாட்டின் முஸ்ஸல் துறைமுகத்தில் ஆரம்பமாகும் இந்த வழிகாட்டி, கங்கை முகத்துவாரத்தை தாண்டும் வரை விவரிக்கிறது. பிறகு கடல்வழி பயணம் கடினம் என்று முடிக்கிறது.

இந்த நூலில் அதிகம் குறிப்பிடப்படுவது இரண்டு துறைமுகங்கள்தான். ஒன்று கட்ச் வளைகுடா. இரண்டு கொங்கணக் கரையோரம். இந்த இரண்டும்தான் முறையே இன்று குஜராத், பம்பாய் எனப்படும் மும்பையில் இருக்கும் துறைமுகங்கள்.

இந்த 'செங்கடல் வழிகாட்டி'யை அடிப்படையாக வைத்து இந்தியக்கரை வணிகம் பற்றி பிரெஞ்சு அறிஞரான ஜீன் டெலோச், '*Transport and Communications in India*' என்னும் நூலை எழுதியிருக்கிறார். அதன் இரண்டாம் பாகத்தில் காலம்தோறும் இந்த இரு துறை முகங்களும் எப்படி மாறி வந்திருக்கின்றன; வளர்ந்திருக்கின்றன; யார் யார் கட்டுப்பாட்டில் இவை இருந்திருக்கின்றன என்பதை ஆதாரங்களுடன் பட்டியலிட்டிருக்கிறார்.

இதை குறித்து சுருக்கமாக பார்த்துவிடுவோம். அப்போதுதான் தங்கக் கடத்தலில் ஹாஜி மஸ்தான் எப்படி வரதராஜ முதலியார் - கரீம்லாலா ஆகியோரின் துணையுடன் தனி ராஜாங்கம் நடத்தினார் என்பது ஓரளவுக்கு புரியும்.

கட்ச் வளைகுடா, இயற்கையாகவே சிறு கப்பல்களுக்கு நல்ல பாதுகாப்பு அளிக்கும் பிரதேசம். கடலின் ஏற்ற, இறக்க நேரங்களில் வாவணியா துறைமுகம் வரை 100 டன் எடையுள்ள கப்பல்கள் செல்ல முடியும். அதே போல் ஓகா துறைமுகம் முதல் தீவா வரை வருடம் முழுவதும் சிறிய கப்பல் போக்குவரத்து இருக்கும்.

*இதற்கு சமமாக கொங்கணக் கரையோரமும் கடல் வணிகத்தில் சிறந்திருந்தது. காரணம், இந்த இடத்தில்தான் சுலபமாக துறைமுகங்களை கட்ட முடிந்தது. மவுரியர் காலத்திலேயே சொபாரா துறைமுகம் கோலோச்சியதை அசோகரின் சாசனத்தில் இருந்து அறியலாம். தானே கி.பி.1153ல் மிகப் பெரிய துறைமுகமாக இருந்தது.*

*பிறகு இருப்பது ஜஞ்ஜிரா. இங்கிருக்கும் துறைமுகத்தை வருடத்தின் சில மாதங்களில் பயன்படுத்தவே முடியாது. என்றாலும் மிகச் சிறந்த துறைமுகம் இது. இங்கிருந்தபடிதான் கனோஜி ஆங்க்ரே என்னும் மராத்தியர், அவுரங்கசீப்புக்கு பிறகான மொகலாயர்களையும், ஆங்கிலேயர்களையும், போர்ச்சுக்கீசியர்களையும் மிரட்டி வந்தார். அயல்நாட்டினரின் குறிப்புப்படி இவர் கடற்கொள்ளையர். கிட்டத்தட்ட வரதராஜ முதலியாரும், ஹாஜிமஸ்தானும், கரீம் லாலாவும் என்னவெல்லாம் செய்தார்களோ அதையெல்லாம் அந்தக் காலத்தில் கனோஜி ஆங்க்ரேவும் செய்திருக்கிறார்.*

*ஆனால், இந்திய வரலாற்றாசிரியர்களின் எழுத்துப்படி இவர் சுதந்திர வீரர். இந்த 'லைனை' அடிப்படையாக வைத்துத்தான் சாண்டில்யன், ஆரம்பகாலத்தில் 'ஜலமோகினி' என்னும் குறுநாவலை எழுதினார். பிறகு அதையே விரிவுப்படுத்தி பிற்காலத்தில் 'ஜலதீபம்' என்னும் மூன்று பாகங்கள் அடங்கிய வரலாற்று நாவலைப் படைத்தார். இந்த இரண்டிலும் கனோஜி ஆங்க்ரேவின் வரலாறு பதிவாகியிருக்கும்.*

*இந்த ஜஞ்ஜிராவுக்கு அடுத்து இருப்பது தாபோல். இது பீஜப்பூர் ராஜ்ஜியத்தின் முக்கியத் துறைமுகம். 'செங்கடல் வழிகாட்டி' இந்தத் துறைமுகத்தைத்தான் 'பாலெபட்டமே' என்று குறிப்பிடுகிறது.*

*வெயிட்... வெயிட்... வெயிட்... இப்போது முக்கியமான சந்தேகம் ஒன்று இதை படித்துவருபவர்களுக்கு எழும். கொங்கணக் கரையோரம், சொபாரா, தானே, ஜஞ்ஜிரா, தாபோல்... இந்தப் பழங்கால துறைமுகங்கள் எல்லாம் இப்போதும் இருக்கிறதா?*

*இருக்கிறது. ஏழு தீவுகள் இணைக்கப்பட்டு எப்படி பம்பாய் உருவானதோ அப்படி இந்தத் துறைமுகங்களும் ஒன்றிணைந்து பம்பாய் துறைமுகமாகின.*

*ஓகே. இப்போது இந்த தகவல்கள் எல்லாம் எதற்கு?*

*காரணமாகத்தான். நாம் அறிந்த பக்கங்களுக்கு இடையில் அறியாத சில பத்திகளும் இருக்கின்றன. அந்தப் பத்திகளில்தான் கொல்கத்தாவை விட, பம்பாய் முக்கியத்துவம் பெற்ற கதை அடங்கியிருக்கிறது.*

*இந்த புதையுண்ட சரித்திரத்தை நம் வசதிக்காக கி.பி.1338ல் இருந்து தொடங்குவோம். காரணம் இஸ்லாமியர்களின் ஆதிக்கத்தில் இந்தப் பிரதேசம் - அதாவது, ஏழு தீவுகள் - இந்தக் காலகட்டத்தில் வந்துவிட்டன. என்றாலும் கடல்வழி வணிகம் இந்துக்களின் கைகளில்தான் அப்போது இருந்தது.*

இந்த சூழலில்தான் 1509ல் போர்ச்சுகீசியர்கள் மாஹிம் என்ற இடத்துக்கு வந்தனர். அப்போதிருந்த குஜராத் சுல்தான், மும்பை பகுதியை தனது பாதுகாப்புக்காக போர்ச்சுகீசியர்களுக்கு அளித்துவிட்டார்.

ஏறக்குறைய இந்தக் காலகட்டத்தில் ஆங்கிலேயர்களும் இந்தியாவுக்கு வந்துவிட்டனர். மும்பையின் குடாப்பகுதியை குறித்து அவர்கள் அறிந்திருந்தபோதும், கடல்வழி வணிகத்துக்கு அதுவே சிறந்த இடம் என்று கருதியபோதும், அவர்களால் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை பம்பாய் பகுதியை நெருங்க முடியவில்லை. காரணம் குடாப்பகுதியை போர்ச்சுகீசியர்கள் ஆண்டு கொண்டிருந்ததுதான். எப்படியும் கைப்பற்றிவிடலாம் என ஆங்கிலேயர்கள் தம்கட்டி முயன்று பார்த்திருக்கிறார்கள். ஆனாலும் அது தோல்வியில்தான் முடிந்திருக்கிறது.

இந்த நிலை தலைகீழாக மாற ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு ஆனது. சுபயோக சுபதினத்தில் போர்ச்சுக்கீசிய அரசிளங்குமரியான இன்பெண்டா கேதரைன், இங்கிலாந்தின் மருமகளானாள். இவள் கையில் இரண்டாம் சார்லஸ் மோதிரம் அணிவிக்க ஒரேயொரு நிபந்தனையைத்தான் விதித்தார். பம்பாயும் அதன் தீவுகளும் வரதட்சணையாக தர வேண்டும்.

இந்தியாவின் பகுதிதானே? எடுத்துக்கோ என்று போர்ச்சுகீசிய அரசரும் அளித்துவிட்டார்.

இப்படித்தான் ஏழு தீவுகளின் துறைமுகங்கள், ஆங்கிலேயரின் ஆதிக்கத்தின் கீழ் வந்தன. என்றாலும் மாப்பிள்ளையான சார்லஸ், ஒரு ஷோக்கு பேர்வழி. பம்பாய் தீவுகள் எங்கிருக்கின்றன என்று அவருக்கு தெரியாது. எனவே, குல், கரஞ்சா, கிராஸ், கிப்பட், புச்சர், எலிபெண்டா, ஹாக் ஆகிய தீவுகள் அடங்கிய இப்பகுதியை கிழக்கிந்திய கம்பெனிக்கு 50 ஆயிரம் பவுன் கடனுக்கு பதிலாக அளித்தார். தவிர அதற்கு வட்டியாக ஆறு சதவிகிதமும், வாடகைப் பணமாக பத்து பவுனுக்கு நிகரான தங்கமும் பெற்றுக்கொண்டார்.

பிறகு என்ன நடந்தது என்று சொல்லவும் வேண்டுமா?

கிழக்கிந்திய கம்பெனியின் ஆதிக்கத்தில் வந்த மும்பை, ஜாம் ஜாம் என்று வளர்ந்தது. சூரத்துக்கு தலைவராகவும், பம்பாயின் கவர்னராகவும் பொறுப்பு ஏற்றுக்கொண்ட ஜெரால்ட், "இனி இந்தத் துறைமுகம் வெறும் தேங்காய், தேங்காய் நார் போன்ற சாதாரணப் பொருட்களைக்கொண்டு மட்டும் நடக்காது. மேலும் பல பொருட்களைக் கொண்டு வணிகம் நடத்தும். காரணம், ஒரே நேரத்தில் நூறு கப்பல்களை நிறுத்தும் வசதி இந்தத்துறைமுகத்துக்கு உண்டு. கோட்டைக்கு வடக்கே 400 டன் எடை கொண்ட கப்பல்களை பராமரிக்க முடியும். காரணம் அங்கே நீரின் ஆழம் 15 அடி..." என்று அறிவித்தார்.

இத்துடன் அவர் நிறுத்தவில்லை. வேண்டிய பராமரிப்புகளையும் செய்தார். விளைவு, வணிகம் பெருகியது. பல நாட்டுக் கப்பல்கள் வர ஆரம்பித்தன. எனவே, சென்னை, கொல்கத்தாவுக்கு செல்லும் கப்பல்கள் பம்பாயை தொட்டுச் செல்ல வேண்டும் என்று கிழக்கிந்திய கம்பெனி ஆணையிட்டது. இதனால் கொல்கத்தா, சென்னை துறைமுகங்களைவிட பம்பாய் துறைமுகம் செல்வாக்கு படைத்ததாக மாறியது.

அதனால், இந்தத் துறைமுகம் வழியாக வந்து போகும் சரக்குகளின் மதிப்பு 1728ல் முன் எப்போதையும் விட உயர்ந்தது. அதாவது, ஏற்றுமதி செய்யப்பட்ட பருத்தி, மிளகு, பட்டு, விலை உயர்ந்த கற்கள் மூலமாக அந்த ஆண்டு மட்டும் ஏழு லட்சத்து 58 ஆயிரம் பவுன்களை கிழக்கிந்திய கம்பெனி ரொக்கமாக பெற்றது.

இப்படியாக அங்கே கிடைக்கும் வேலை, அதற்காக தரப்பட்ட ஊதியம் ஆகியவற்றுக்காக பல பகுதிகளில் இருந்தும் தொழிலாளர்கள் பம்பாய்க்கு வந்தனர். குறைந்த விலையில் நிலம் கிடைத்தது. இந்தப் போக்கை புரிந்துகொண்டு கிழக்கிந்திய கம்பெனி தொழிற்சாலைகளைக் கட்ட ஆரம்பித்தது.

பதினெட்டாம் நூற்றாண்டில் பம்பாய் துறைமுகம் வழியே வர்த்தகம் பெருகியது. பெரிய கப்பல்களை பராமரிக்க பதினைந்து வருடக் காலத்தில் மூன்று உலர்துறைகள் அமைக்கப்பட்டன. அரேபியா, சீனா, பெர்சியன் வளைகுடா ஆகிய துறைமுகங்களுடன் வணிகம் சீராக நடந்தது.

இந்த நேரத்தில்தான் அதுவரை ஒரு பார்வையாளராக இருந்து வந்த இங்கிலாந்து அரசுக்கு மூக்கு வியர்த்தது. 'இவ்வளவு பணம் கொழிக்கும் துறைமுகமா பம்பாய்?' என்று வியந்தவர்கள்,

கிழக்கிந்திய கம்பெனியின் வணிகச் செயல்பாட்டில் சில கட்டுப்பாடுகளை கொண்டுவந்தது.

ஏறக்குறைய இந்தக் காலத்தில் கப்பல்களை துறையில் கட்டும் சிந்தனையே யாருக்கும் எழவில்லை. கப்பல்கள் நங்கூரம் பாய்ச்சி நிற்கும். அவற்றிலிருந்து சரக்குகள் படகுகள் மூலம் துறைக்கு கொண்டுவரப்படும். இதனால் காலநேரம் அதிகமாவதை உணர்ந்தவர்கள் 1875ல் துறைகளை கட்டினர். இதனால் துரித காலத்தில் சரக்குகளை ஏற்றவும், இறக்கவும் முடிந்தது. கூடவே கிழக்கிந்திய கம்பெனி தவிர்த்து மற்ற வணிகர்களுக்கும் வணிகம் செய்யும் உரிமை தரப்பட்டது.

இந்த முறையால் 1801 - 1810ல் வருடத்துக்கு 560 லட்சமாக இருந்த வணிக மதிப்பு 1851 - 1860ல் இரண்டாயிரத்து 620 லட்சமாக உயர்ந்தது. இயந்திர புரட்சியும், நீராவிக் கப்பல்களின் வருகையும் பம்பாய் துறைமுகத்தை இன்னும் செழிப்பாக்கின.

சுருக்கமாக சொல்வதென்றால் இந்தியாவின் மேற்குப்

பகுதியை சேர்ந்த கடல்வழி வணிகம், பம்பாய் துறைமுகம் வழியாகவே நடந்தது. இதனால் பொருளாதாரம் சிறப்படைந்தது. பல புதுத்துறைகளும், உலர் துறைகளும் கட்டப்பட்டன. பளுத் தூக்கிகள், பல உபகரணங்கள் ஆகியவற்றைக்கொண்டு பம்பாய் ஒரு நவீன துறைமுகமாக வளர்ந்தது. ஏராளமான நிலங்களைத் தனக்கு சொந்தமாக்கிக்கொண்டது.

யெஸ், இந்தியாவின் துறைமுகங்களுக்குள்ளே அதிக நிலம் கொண்ட துறைமுகம் பம்பாய்தான். 1908ல் கடலின் ஆழமற்ற பகுதிகளாக இருந்த மாஜகான் சேவ்ரி பரப்பை மணல் வாரி இறைத்து நிலமாக்கிய பெருமையும் பம்பாய்க்கு உண்டு. சந்தேகமே வேண்டாம் ஏழு தீவுகளை இணைத்து இப்போது செயற்கையாக உருவாக்கப்பட்டுள்ள மும்பையின் துறைமுகப் பகுதி மொத்தமும் நீர் இறைக்கப்பட்டு மண்கொட்டப்பட்ட இடம்தான். துறைமுக பரப்பு 1800 ஏக்கர். தெற்கில் பைலட் பந்தர் முதல் வடக்கில் வடாலா வரை 15 கி.மீ. தூரம் துறைமுகத்தை சேர்ந்ததுதான்...

“பம்பாய் சரித்திரத்தை சொன்னது மூலமா எதை உணர்த்த வர்றீங்க கரீம்பாய்..?” நிமிர்ந்து பார்த்து ஜெனாபாய் கேட்டாள்.

“பழி வாங்கறதா நினைச்சு கேங்வாருக்கு விதை போடாத. இந்தத் துறைமுகத்தையே நாமதான் ஆண்டுகிட்டு இருக்கோம். அதுக்கு பாதிப்பு வந்துடக் கூடாது...”

“இவங்க நாலு பேரும் என் பையனை கொன்னிருக்காங்க...”

“பதிலுக்கு இவங்களை கொல்றதால உன் பையன் உயிரோட வந்துடுவானா? யோசி. இப்ப துறைமுகத்தோட எல்லா துறைகளும் எந்நேரமும் நிரம்பி வழியுது. துறைமுகத்துல இடம் இல்லாததால பல வணிகக் கப்பல்கள் வாரக் கணக்குல வெளிய நிக்குது. இதுக்கு மாற்றா இன்னொரு துறைமுகம் அமைக்க அரசாங்கம் முயற்சி செய்யுது. அதுவும் நம்ம கட்டுப்பாட்டுக்கு வர வேண்டாமா..?” சொன்ன வரதராஜ முதலியார் அவள் அருகில் வந்தார். “இதையெல்லாம் யோசிச்சுட்டு உன் தீர்ப்பை சொல்லு...”

“சரி. இவங்களை நான் மன்னிச்சிடறேன். ஆனா, பம்பாய்லயே இவங்க இருக்கக்கூடாது...”

“அது என் பொறுப்பு...” சொன்ன ஹாஜி மஸ்தான் அதன்படியே அவர்கள் நால்வரையும் நாடு கடத்தினார்.

இதையெல்லாம் ஜெனாபாயின் கையை பிடித்துக்கொண்டு ஒரு சிறுவன் பார்த்துக்கொண்டிருந்தான். பம்பாயின் வரலாற்றையும், பம்பாய் துறைமுகத்தின் மகத்துவத்தையும் காது கொடுத்து கேட்டவனுக்கு இதையெல்லாம் நாம் ஒருவனே ஆட்சி செய்தால் என்ன என்று தோன்றியது.

கனவுலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தான். அந்தச் சிறுவன்தான் தாவூத் இப்ராஹிம்.

# 16

‘‘மகனை கொன்ன நான்கு பேரையும் ஜெனாபாய் மன்னிச்சது பெரிய விஷயம்...’’ சிகரெட்டை பற்ற வைத்தபடி ஹாஜி மஸ்தான் சொன்னதை வரதராஜ முதலியாரும், கரீம் லாலாவும் ஆமோதித்தார்கள்.

‘‘சரி நான் கிளம்பறேன். அந்த நான்கு பேரையும் நாடு கடத்தறது தொடர்பா ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கு...’’ என்றபடி தன் காரில் ஏறினார் ஹாஜி மஸ்தான்.

“நாங்களும் புறப்படறோம்...” மற்ற இருவரும் விடைபெற்றார்கள்.

ஜெனாபாயின் மனநிலை ஒருநிலைக்கு வரும்வரை அவளை தொந்தரவு செய்ய வேண்டாம் என்று மூவரும் முடிவெடுத்திருந்தார்கள்.

வெவ்வேறு திசைகளை நோக்கி மூவரின் கார்களும் பறந்தன. பம்பாயின் மையப் பகுதியில் இருக்கும் ‘பம்பாய் சென்ட்ரலையும்’, ‘க்ராண்ட் ரோட்’ ரயில் நிலையத்தையும் மஸ்தானின் கார் கடந்தது. வெளியே எட்டிப் பார்த்தவர் அந்த இரு இடங்களுக்கும் இடைப்பட்ட சின்ன தெருவையும், அந்தத் தெருவின் முனையில் திருதிருவென விழித்தபடி நின்று கொண்டிருந்த இளம் பெண்ணையும் கண்டார்.

வலி கலந்த பெருமூச்சு அவர் நாசியில் இருந்து வெளியேறியது. வேறு வழியில்லை... பம்பாயின் பசிக்கு இரையாவதற்காகவே அந்தப் பெண் இங்கு வந்து சேர்ந்திருக்கிறாள்...

அடுத்து என்ன நடக்கும் என்பது அவருக்கு புரிந்திருந்தது. கண்களை மூடிக்கொண்டார். மஸ்தான் நினைத்தபடியேதான் அந்தப் பெண்ணுக்கு நடந்தது.

அது என்ன தெரு என்று அந்தப் பெண்ணுக்கு புரியவில்லை. சின்ன தெருதான். ஆனால், ஓரளவு அகலமாக இருந்தது. இரு பக்கங்களில் இருந்தும் வாகனங்கள் வரவும் முடியும். இடிக்காமலும் செல்ல முடியும்.

கால் வலித்தது. வலது காலை அழுத்தமாக ஊன்றியபடி இடது காலுக்கு சற்று ஓய்வு கொடுத்தாள். இன்னும் எத்தனை நிமிடங்கள் காத்திருக்க வேண்டும்? தெரியவில்லை. உடனே வருவதாக சொல்லிவிட்டு ராஜன் சென்றிருக்கிறான். வந்துவிடுவான். வர வேண்டும். வருவானா?

மனதில் அச்சம் ஊற்றெடுத்தது. பாதசாரிகளின் கண்கள் ஈக்கள் போல் தன்னை மொய்ப்பதை உணர்ந்தாள். உடலெங்கும் அருவருப்பு படர்ந்தது. உடைகளை தாண்டி உடல் சிலிர்த்தது.

குறிப்பாக திசைக்கு ஒருவராக நின்றிருந்த சில இளைஞர்கள் அவளையே இமைக்காமல் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

கலைந்த தலையும், காவி ஏறிய பற்களும், உறுத்தும் விழிகளுமாக தன்னையே அவர்கள் அலசுவதை பார்த்து குமட்டிக்கொண்டு வந்தது. என்ன கண்றாவி இது?

ஆனால், காதல் கண்றாவி இல்லை. அது ஓர் உணர்வு. உடலின் ஒவ்வொரு செல்லையும் ஊடுருவி பரவசத்தை ஏற்படுத்தும் அனுபவம். அதனால்தானே வீட்டைவிட்டு ஓடி வந்திருக்கிறாள்?

வீடு? அது தமிழகத்தில் இருக்கிறது. தேனி பக்கம். ஒன்பதாம் வகுப்பு படித்தபோது ராஜன் அறிமுகமானான். கார்பெண்டர். மர வேலைகள் செய்ய வந்தவன் அவள் மனதில் குடி புகுந்தான். வேறு வேறு சாதி. பழகக்கூடாது என்று ஊர்க் கட்டுப்பாடு இருந்தது. ஆனாலும் அவனுடன் பேசப் பிடித்திருந்தது. பழக பிடித்திருந்தது. சிரிக்க பிடித்திருந்தது. சீண்ட பிடித்திருந்தது.

என்றாலும் எல்லாவற்றையும் கிராமத்துக்கு தெரியாமல் செய்ய வேண்டியிருந்தது. அதற்காகவே தோப்புக்கு செல்ல வேண்டியிருந்தது. ஒற்றை நாடி சரீரம்தான். கசங்கிய உடைகளை அணிபவன்தான். ஆனாலும் ராஜன் அழகன். அதைவிட நல்லவன். விரல் நுனியால் கூட தன்னை தொட்டதில்லை.

அதனால்தான் பத்தாம் வகுப்பு தேர்வு முடிந்ததும் அவனை நம்பி வீட்டைவிட்டு ஓடி வந்தாள். பம்பாயில் தன் உறவினர்கள் இருப்பதாகவும், அவர்கள் தங்களை பாதுகாப்பார்கள் என்றும் கண்கலங்க சொன்னான். நம்பினாள். தன் தொழிலில் கெட்டிக்காரன். எனவே நிச்சயம் அவனுக்கு வேலை கிடைக்கும். காப்பாற்றுவான். ஒன்று அல்லது இரண்டு குழந்தைகள் பிறந்த பிறகு ஊர் திரும்பலாம். அப்போதுதான் அப்பாவும், அம்மாவும் ஏற்பார்கள். அரவணைப்பார்கள்.

நல்ல நாளா, சுப முகூர்த்த வேளையா என்று தெரியாது. ஆனால், சென்னைக்கும், அங்கிருந்து பம்பாய்க்கும் செல்ல ரயில் டிக்கெட் எடுத்துவிட்டதாக ராஜன் அறிவித்த நாளில் வீட்டைவிட்டு வெளியேறினாள். அவனாக எதுவும் சொல்லவில்லை. அவனாக எதையும் வலியுறுத்தவில்லை.

ஆனாலும் அம்மாவின் நகைகளையும், அப்பாவின் பணத்தையும் எடுத்துக்கொண்டு கிளம்பினாள். குடும்பம் நடத்துவதென்றால் சும்மாவா? வீடு பார்க்க வேண்டும். பாத்திரம், பண்டங்களை வாங்க வேண்டும். அதற்கெல்லாம் ராஜனின் உறவினர்களிடம் கையேந்த முடியுமா என்ன?

பம்பாய் ரயில்நிலையத்தில் இறங்கியதுமே அவளுக்கு பயம் வந்தது. எறும்பை போல் மனிதர்கள் ஊர்ந்து செல்வதை அப்போதுதான் பார்க்கிறாள். கலவையான மனிதர்கள். காற்றில் கரைந்த விதவிதமான மொழிகளில் எங்குமே தமிழ் வாடை அடிக்கவில்லை. ராஜனின் கையை கெட்டியாக

*பிடித்துக்கொண்டாள். அவளை ஆறுதல்படுத்தும் விதமாக தன் கைகளால் இறுக்கினான். காப்பு ஏறிய உள்ளங்கை. உழைப்பாளி. அந்த உழைப்புதான் சோறு போடப்போகிறது.*

*சுமாரான ஹோட்டலில் டிபன் வாங்கி கொடுத்தான். இந்த தெருவுக்கு அழைத்து வந்தான்.*

*"இங்கயே இரு..."*

*"தனியாவா?"*

*"இங்கதான் வாழப் போற. அப்படியிருக்கிறப்ப பயப்படலாமா? அஞ்சே நிமிஷம்தான். அத்தைக்கு நம்ம விஷயம் தெரியாது. சேர்ந்து போய் நின்னா குழம்பிடுவாங்க. பக்குவமா அவங்ககிட்ட பேசிட்டு உன்னை கூட்டிட்டு போறேன்..."*

*"ஏத்துப்பாங்களா?"*

*"உன்னை போய் யாராவது மறுப்பாங்களா?"*

*"சரி. சீக்கிரம் வந்துடு..."*

*"உடனே வந்துடறேன். அப்படியே பராக்கு பார்த்துட்டு இரு..."*

*"ராஜன்..."*

*"என்ன?"*

*"இந்தப் பையை கொண்டுபோய் அப்படியே அத்தை வீட்ல வைச்சுடு..."*

*"இதுக்குள்ள என்ன இருக்கு?"*

*"நகையும், பணமும்..."*

*''நினைச்சேன். நான்தான் இதெல்லாம் வேண்டாம்னு சொன்னேனே..."*

*"பரவால ராஜன். செலவுக்கு உதவும்..."*

*"என்னவோ போ..." என்றபடி வாங்கிக்கொண்டு சென்றான். ஐந்து நிமிடங்கள், பத்து, பதினைந்து நிமிடங்களாகின. இன்னமும் ராஜனை காணவில்லை.*

*ஏதோ மனதில் இடறியது. என்னவென்றுதான் புரியவில்லை. நகத்தை கடித்தபடி அவன் சென்ற திசையை பார்த்தாள்.*

*நல்லவேளையாக நாற்பது வயது மதிக்கத்தக்க ஒரு பெண்மணியுடன் ராஜன் வந்து கொண்டிருந்தான். அப்பாடா என்று இருந்தது. ஆனால், அவன் உருவத்துக்கும், அந்தப் பெண்மணியின் உருவத்துக்கும் நிறைய வித்தியாசமிருந்தது. சுட்டுப் போட்டாலும் இருவரும் உறவினர்கள் என்று சொல்ல முடியாது. ஒருவேளை பம்பாய் வாசம் அந்தப் பெண்மணியை மாற்றிவிட்டதோ?*

*அருகில் வந்தார்கள்.*

*"இதுதான் நீ சொன்ன பெண்ணா?" வெற்றிலையை துப்பியபடி உடைந்த தமிழில் வந்த பெண்மணி கேட்டாள்.*

*கேட்ட விதமும், பார்வையால் தன்னை ஆராய்ந்த விதமும் அவளுக்கு பிடிக்கவில்லை. ராஜனுடன் ஒன்றிக்கொண்டாள்.*

அவளை விலக்கி நிறுத்தியபடி ''ஆமாம்...'' என ராஜன் பதிலளித்தான்.

"ம்... நீ போ..."

தலையசைத்துவிட்டு ராஜன் சென்றான்.

அவளுக்கு அச்சம் வந்தது.

"ராஜன்... எங்க போற?" அவன் கையை பிடித்து நிறுத்தினாள்.

''வேலை விஷயமா ஒருத்தரை பார்க்க வேண்டியிருக்கு. அத்தையோட போ. நான் வந்துடறேன்..."

"இல்ல. நீயும் கூட வா..."

"அட... சொன்னா கேட்க மாட்டியா?" அதட்டிய பெண்மணி அவளை தன் பக்கம் இழுத்துக்கொண்டாள்.

"தைரியமா போ. பொழுது சாயறதுக்குள்ள வந்துடறேன்..." முணுமுணுத்துவிட்டு விறுவிறுவென்று ராஜன் சென்றான்.

மலங்க மலங்க விழித்தவளுக்கு அவன் கண்பார்வையை விட்டு விலகியதும்தான் தன் பையுடன் அவன் சென்றிருக்கிறான் என்பதே உறைத்தது.

''வா...'' அவளை இழுத்துக்கொண்டு அந்தப் பெண்மணி நடந்தாள். கலைந்த தலையும், காவி ஏறிய பற்களுமாக அவளை அதுவரை ஆங்காங்கே நின்றபடி அலசிக் கொண்டிருந்த தாட்டியான இளைஞர்கள் ஓர் இடைவெளியுடன் அவர்களுக்கு பாதுகாப்பாக பின்தொடர்ந்தார்கள்.

எதற்காக இந்த இளைஞர்கள் தங்களை சூழ்ந்தபடி வருகிறார்கள்? தெரியவில்லை. ஆனால், சாலையின் இரு பக்கங்களிலும் அரைகுறை ஆடையில் பல பெண்கள் நின்றிருந்தார்கள். அவள் வயதுள்ளவர்களில் ஆரம்பித்து பல தரப்பில் நின்றிருந்த அவர்கள் அனைவரும் தங்கள் உதடுகளில் அழுத்தமாக சாயம் பூசியிருந்தார்கள்.

"இது... இது... என்ன இடம்?"

"காமாத்திபுரா...."

"என்னது... ரெட் லைட் ஏரியாவா?"

"ஆமா... பம்பாயோட சொர்க்கம்..."

"நான் வரமாட்டேன்..."

"எங்க போவ?"

"ராஜனோடயே..."

''பைத்தியக்காரி. உன்னை அவன் என்கிட்ட வித்துட்டு போயிட்டான். மூடிகிட்டு வா..."

''முடியாது...'' திமிறினாள். தன்னை பிடித்திருந்த அந்தப் பெண்ணின் கையை கடித்தாள். இதை எதிர்பார்த்தது போல் அந்தப் பெண்மணி மறுகையால் அவளை ஓங்கி அறைந்தாள்.

அரணாக வந்துகொண்டிருந்த இளைஞர்களில் ஒருவன் வேகமாக அவளை நெருங்கி வந்தான். அலேக்காக அவளை தூக்கி

தன் தோளில் போட்டுக்கொண்டான். "அக்கா... நீ முன்னால போ..." என கரகரத்தான்.

"ம்..." என கர்ஜித்த அந்தப் பெண்மணி தன் இடுப்பிலிருந்து ஒரு பொட்டலத்தை எடுத்தாள். பார்ப்பதற்கு ஷாம்பூ சாஷே போலவே அது இருந்தது. பற்களால் அதன் ஓரத்தை கிழித்தவள் உள்ளேயிருந்த பொருளை தன் வாயில் அப்படியே போட்டுக் கொண்டாள். கை வீசி முன்னால் நடந்தாள்.

"காப்பாத்துங்க... காப்பாத்துங்க..." என்று அவள் அலறியதை சாலையோரம் நின்றிருந்த யாரும் சட்டை செய்யவில்லை. தன்னை தூக்கியவனின் தோளிலிருந்து குதிக்க முற்பட்டாள். பின்னால் வந்துகொண்டிருந்த மற்றவன் ஓங்கி அவள் தலையில் அடித்தான்.

மயக்கம் தெளிந்து அவள் கண்விழித்தபோது அறையொன்றில், தான் இருப்பதை உணர்ந்தாள். அறை என்றால் அறையில்லை. வீட்டுக் கழிவறை அளவுக்கு குறுகலாக இருக்கும் பொந்து. சுற்றிலும் சுவர்கள் இல்லை. பதிலாக மரச் சட்டங்கள் இருந்தன. தரையில் எந்தப் பொருளும் இல்லை. துப்புரவாக துடைக்கப்பட்டிருந்தது. ஜன்னல் இல்லாததால் காற்று இல்லை. வியர்த்தது. அப்போதுதான் அவளுக்கு உறைத்தது. அவள் உடம்பில் பொட்டு துணியில்லை.

"ஐயோ..." அலறினாள்.

"கத்தாத..." வெளியிலிருந்து குரல் வந்தது. சந்தேகமேயில்லை. தன்னை விலை கொடுத்து வாங்கிய அதே பெண்மணிதான். "யாரும் உதவிக்கு வர மாட்டாங்க. உன்னாலயும் இங்கேந்து தப்பிக்க முடியாது..."

குரல் தேய்ந்தது. சென்றிருக்க வேண்டும். பசித்தது. உணவு வரவில்லை. தாகமெடுத்தது. பொட்டு தண்ணீர் கிடைக்கவில்லை. உதடுகள் காய உணர்வற்று விழுந்தாள்.

யாரோ முகத்தில் தண்ணீர் தெளித்து வாயில் புகட்டினார்கள். மடமடவென்று நீரை விழுங்கினாள். புரை ஏறியது. இருமியபடி கண்திறந்தாள்.

அவள் முன்னால் வெள்ளைப் புடவை அணிந்தபடி ஐம்பது வயது மதிக்கத்தக்க பெண்மணி நாற்காலியில் அமர்ந்திருந்தாள்.

"உம் பேரு என்ன?"

"கங்கா..." தீனமான குரலில் பதிலளித்தாள்.

"எம் பேரும் அதுதான். ஆனா, கங்குபாய்னாதான் இங்க எல்லாருக்கும் தெரியும்..." என்றபடி புன்னகைத்தாள்.

இந்த கங்குபாய்தான் பம்பாய் மாஃபியா ராணிகளில் இரண்டாமிடத்தில் இருப்பவர் என்பதும், காமாத்திபுராவுக்கே அவர்தான் அரசி என்பதும் ராஜனை நம்பி தமிழகத்திலிருந்து வந்த கங்காவுக்கு தெரியாது.

தெரிந்தபோது அவள் பாலியல் தொழிலாளியாக மாறியிருந்தாள். மாற்றப்பட்டிருந்தாள்.

# 17

கங்குபாயின் இயற்பெயர் கங்கா ஜர்ஜீவன்தாஸ் கத்தியவாடி. சுருக்கமாக கங்கா. பூர்வீகம் குஜராத் மாநிலத்திலுள்ள கத்தியவாடி என்ற குக்கிராமம். அங்கிருந்த பெரிய வீட்டுக்கு நெருக்கமானவர்கள் என்றால் அது கங்காவின் குடும்பம்தான். காரணம், பட்டதாரிகளின் எண்ணிக்கை அவளது குடும்பத்தில்தான் அதிகம். குறிப்பாக வழக்கறிஞர்கள். அப்பாவும், அண்ணன்களும் கண்டிப்பானவர்கள். குடும்பப் பெருமையை கட்டிக் காப்பதற்காகவே பிறப்பெடுத்தவர்கள்.

ஆனால், பெண்களும் கல்வி கற்க வேண்டும் என்பதில் உறுதியாக இருந்தவர்கள். எனவே கங்காவையும் பள்ளிக்கு அனுப்பினார்கள். 1940களில் உண்மையிலேயே இது முற்போக்கான விஷயம். அதுவும் கத்தியவாடி போன்ற குக்கிராம பெண்களால் நினைத்துக்கூட பார்க்க முடியாத சுதந்திரம் இது.

என்றாலும் அவளுக்கு படிப்பை விட சினிமாவில்தான் ஆர்வம் அதிகம். அப்போது கறுப்பு - வெள்ளை படங்கள்தான் வெளியாகிக் கொண்டிருந்தன. ஆனாலும் அதில் நடித்த பெண்கள் விதவிதமான உடைகளை அணிந்திருந்தார்கள். முகத்தில் அழுத்தமாக பவுடர் பூசியிருந்தார்கள். உதட்டுச்சாயம் பளிச்சென்று தெரிந்தது. திரையில் அழுதார்கள். அடி வாங்கினார்கள், காதலித்தார்கள். காதலிக்கப்பட்டார்கள். குடும்பத்துக்காக தியாகம் செய்தார்கள். ரசிகர்களை கண்கலங்க வைத்தார்கள்.

எனவே நடிகையாக வேண்டுமென்று முடிவு செய்தாள். உடன் படித்தவர்களில் சிலர் பம்பாய்க்கு சென்று வந்தவர்கள். எனவே அவர்களிடம் பம்பாய் குறித்தும், உடனுக்குடன் ரிலீசாகும் படங்கள் குறித்தும் நாள் முழுக்க பேசினாள். திரையரங்க வாசலில் மக்கள் மணிக்கணக்கில் காத்திருப்பார்கள் என்ற செய்தியே அவளுக்கு புதுமையாக இருந்தது. பேசியதையே பேசினாள். கேட்டதையே திரும்பத் திரும்ப கேட்டாள். ஒரு கட்டத்துக்கு பிறகு தன்னையே ஒரு நடிகையாக நினைக்க ஆரம்பித்தாள். அது பலிக்க வேண்டும் என்று பிரார்த்தனை செய்தாள். 'எதிர்காலத்தில் உன்னை பார்த்து ஊரே பயப்படும். ராணி மாதிரி வாழ்வாய். பெயரும், புகழும், பணமும் கிடைக்கும்' என்று உள்ளூர் ஜோதிடர்கள் சொன்ன ஆரூடத்தை முழுமையாக நம்பினாள்.

நாளுக்கு நாள் பம்பாய் அவளை ஈர்த்துக்கொண்டே இருந்தது. ஒருமுறையாவது அந்த மண்ணை மிதித்துவிட வேண்டும் என்று துடித்தாள்.

சரியாக அந்த நேரம் பார்த்து ராம்னிக் லால் வந்து சேர்ந்தான். 28 வயதான அவனை கணக்குப்பிள்ளையாக அவள் அப்பா

நியமித்தார். சராசரியான உயரம். சராசரியான உடல்வாகு. ஆனால், சராசரியான ஆண்களை போல் இல்லாமல் ரொம்ப ரொம்ப நல்லவனாக இருந்தான். கங்காவை அவன் ஏறெடுத்தும் பார்ப்பதில்லை. தேவையில்லாமல் எதையும் பேசுவதுமில்லை. அவனுக்கு குடிநீர் தருவதும், உணவு பரிமாறுவதும் அவள் வேலை. சாதாரணமாகத்தான் அனைத்தையும் செய்தாள்.

ஆனால், அதுவே அசாதாரணமான நிகழ்வுக்கும் வித்திட்டது.

தொடக்கத்தில் அவனிடம் பெரிதாக ஈடுபாடு எல்லாம் கங்கா காண்பிக்கவில்லை. இயல்பாகத்தான் இருந்தாள். அனைத்தும் ஒருநாள் தலைகீழாக மாறியது.

அன்றைய தினம்தான் சில வருடங்கள் பம்பாயில் அவன் தங்கியிருந்தான் என்று கேள்விப்பட்டாள். இதயம் துடிக்க படபடப்புடன் அது குறித்து அவனிடம் கேட்டபோது, தோளை குலுக்கியபடி ஆம் என்றான். எந்த மண்ணை ஒரு நிமிடமாவது மிதிக்க வேண்டும் என்று கனவு கண்டாளோ, அதே மண்ணில் சில காலம் அவன் வாழ்ந்திருக்கிறான் என்ற விஷயம் அவளுக்குள் மறைந்திருந்த ஆசையை ருத்ரதாண்டவம் ஆடச் செய்தது.

அடிக்கடி அவன் முன்னால் நின்றாள். தேவையில்லாமல் பேச்சு கொடுத்தாள். அவனது பம்பாய் அனுபவத்தை நொடி வாரியாக கேட்டறிந்தாள்.

குடும்பத்தினர் புருவத்தை உயர்த்தியபோது சந்திப்பை மறைவிடத்துக்கு மாற்றினாள். சந்தித்தாள். சந்தித்தான். சந்தித்தார்கள். பேசினாள். பேசினான். பேசினார்கள்.

நெருப்பு பற்றிக்கொண்டது. மனமார அவனை காதலிப்பதாக தன் அடிமனதிலிருந்து கங்கா நம்பினாள். 'உன் புருவம் அழகு. கண்களோ அழகோ அழகு. செதுக்கப்பட்ட நாசி. சுவாசத்தில் அது துடிக்கும்போது என் இதயத்தின் சுருதி அதிகரிக்கிறது. உடலின் செழுமை ரத்த ஓட்டத்தை சூடாக்குகிறது. கற்பூரம் அடித்து சத்தியம் செய்கிறேன், இப்போதிருக்கும் நடிகைகளை விட நீயே பேரழகி. பம்பாயில் மட்டும் நீ இருந்திருந்தால் இந்நேரம் நடிகையாகியிருப்பாய்...' என்று பேசினான். ஆம், பேச மட்டும் செய்தான். மற்றபடி தன் சுண்டு விரலின் நுனியால் கூட அவளை தொடவில்லை. தொட முற்படவில்லை.

இது அவளுக்கு பிடித்திருந்தது. அவன் பேசிய விஷயங்களோ மிகவும் இதமளித்தது. 'நிஜமாவா?' என்ற அபத்தமான கேள்வியை வெட்கத்துடன் கேட்டாள். 'தூக்கத்தில் கூட நான் பொய் சொல்வதில்லை. வேண்டுமானால் என்னுடன் பம்பாய்க்கு வா. மூன்றே மாதங்களில் உன்னை நடிகையாக மாற்றி காண்பிக்கிறேன்...' அழுத்தமாக பதிலளித்தான்.

நம்பினாள். நம்பிக்கையுடன் அர்த்த ராத்திரியில் அவனுடன் பம்பாய்க்கு புறப்பட்டாள். அப்போது கங்காவுக்கு வயது பதினாறு.

விஷயம் தெரிந்தால் தன் குடும்பத்தினர் ஊர் முன்னால் தலைகுனிவார்கள். ஒருபோதும் கத்தியவாடிக்கு திரும்ப முடியாது என்பதை எல்லாம் அவள் அறிவாள். ஆனாலும் புத்திக்கு புரிந்தது மனதுக்கு தெரியவில்லை. நடிகையாகி பெயரும், புகழும் வாங்கிவிட்டால் தூற்றிய ஊரே வாய் பிளந்து பார்க்கும். அப்படியொரு காட்சியை மனக்கண்ணில் ஓடவிட்டபடியே ரயிலில் பயணம் செய்தாள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு பம்பாய் சென்ட்ரல் ரயில் நிலையத்தில் தன் வலது காலை எடுத்து வைத்து இறங்கினாள். அழுகை வந்தது. இந்த நிலத்தில் கால் பதிக்கத்தானே ஆசைப்பட்டாள்? முதல் முறையாக தன்னருகில் நின்றிருந்த ராம்னிக் லாலின் கைகளை அழுத்தமாக பற்றினாள். 'கனவை நினைவாக்கிய தோழனே முன் எப்போதையும் விட இப்போதுதான், இந்த விநாடியில்தான் உன்னை முழுமையாக நேசிக்கிறேன். உன்னருகிலேயே என்னை இருக்க விடு. என்னை விட்டு பிரியாதே...'

பற்றிய கங்காவின் கரங்களை பார்த்தான். உதட்டில் மகிழ்ச்சி வெடித்தது. அருகில் இருந்த விடுதியில் அறை எடுத்து தங்கினார்கள். இரண்டறக் கலந்தார்கள். இணைந்தபடியே உறங்கினார்கள்.

அடுத்தடுத்து வந்த நாட்களில் டிராம் வண்டியிலும், லோக்கல் ரயிலிலும் ஏறி பம்பாயை சுற்றிப் பார்த்தார்கள். இண்டு இடுக்கு விடாமல் அலசினார்கள். கண்கள் விரிய ஒவ்வொரு இடத்தையும் பார்த்தாள். பார்த்த இரவுகளில் எல்லாம் அவனுக்கு நன்றி சொன்னாள்.

தன் அப்பாவின் லாக்கரில் இருந்து கங்கா கொண்டு வந்த பணம் ஓரளவு தீரவும், பம்பாய்க்கு அவர்கள் வந்து சேர்ந்து பத்து நாட்கள் முடியவும் சரியாக இருந்தது. ராம்னிக் லால், அப்போதுதான் அந்த விஷயத்தை வெளிப்படுத்தினான்.

'இதற்கு மேல் விடுதியில் தங்க வேண்டாம். என் அத்தையின் வீடு இங்குதான் இருக்கிறது. அங்கு தங்கியபடி சினிமா முயற்சியை தொடர்வோம்...'

முதல் முறையாக அவளுக்குள் எதுவோ இடித்தது. 'பம்பாயில் உறவினர்கள் இருப்பதாக இதுவரை அவன் சொன்னதில்லையே...' வாய் திறந்து கேட்கவில்லை. பதிலாக அவன் கையை பிடித்தபடி பெட்டியுடன் புறப்பட்டாள்.

நடந்து ஒரு தெருவை அடைந்தார்கள். அரைகுறை ஆடையுடன் அந்த சாலை முழுக்க பெண்கள் நின்றிருந்தார்கள். கங்கா பயத்துடன் ராம்னிக் லாலின் விரல்களை பற்றினாள். 'ஆதரவுடன்' அதை இறுக்குவதற்கு பதில் விலக்கினான். 'எல்லோரும் பார்க்கிறார்கள்' என முணுமுணுத்தான்.

அங்கிருந்த ஒரு வீட்டுக்குள் நுழைந்தார்கள். எதிர்பட்ட மத்திய

வயது பெண்ணை 'என் அத்தை ஷீலா' என்று அறிமுகப்படுத்திவிட்டு 'காத்திரு, இதோ வந்துவிடுகிறேன்' என்று விடைபெற்றான்.

போனவன் திரும்பி வரவேயில்லை.

கொண்டு வந்து விட்ட இடம் காமாத்திபுரா என்பதும், தன்னை வரவேற்ற ஷீலா, அவனுடைய அத்தை இல்லை என்பதும், அந்த வீடு பாலியல் தொழில் செய்யும் இடம் என்பதும் அவளுக்கு புரிய சில மணி நேரங்களானது.

புரிந்தபோது தப்பிக்க முடியவில்லை. முரண்டு பிடித்தாள். அடியும், உதையும் கிடைத்தது. மறுத்தாள். பசியால் வாடினாள். உடலில் ஒரு பொட்டு துணியில்லாமல் கழிவறையில் மூன்று நாட்கள் அடைக்கப்பட்டாள். செல்கள் அனைத்தும் வலுவிழந்தபோது பாலியல் தொழிலாளியாக மாறியிருந்தாள்.

ராம்னிக் லால் சூறையாடிய அவள் உடலை நேரக்கணக்கில் பலரும் அனுபவித்தார்கள். சாராய மயக்கத்தில் ஊர் பேர் தெரியாத ஒரு வாடிக்கையாளன் 'கங்கு' என குழறியபடி தன்னை அழைத்ததையே நிரந்தரமாக்கிக் கொண்டாள். கங்காவை மறந்தாள். கத்தியவாடி வாழ்க்கையை குழி தோண்டி புதைத்தாள். அப்பாவுக்கு தெரிந்த யாரும் வாடிக்கையாளராக வந்துவிடக் கூடாது என்பது மட்டுமே அவளது அன்றாட வேண்டுதலாக மாறிப்போனது.

1795ம் ஆண்டுவாக்கில் கட்டுமானப் பணிக்காக ஆந்திராவிலிருந்து அழைத்து வரப்பட்ட கூலித்தொழிலாளர்கள் வாழ்ந்த பகுதிதான் காமாத்திபுரா... 'காம்வாலி' என்றால் இந்தியில் வேலைக்காரி என்று அர்த்தம்... அதுதான் திரிந்து காமாத்திபுரா ஆனது... ஆங்கிலேயர் ஆட்சியில் அந்தப் பகுதி ராணுவ வளையத்துக்கு உட்பட்டிருந்தது... எனவே ராணுவ வீரர்களின் காமப்பசியை போக்கும் பணிக்கு அந்தப் பகுதி பெண்கள் தள்ளப்பட்டார்கள்... இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு இடைத்தரகர்கள் புரோக்கர்களாக மாறி காமாத்திபுராவின் பெருமையை அறுபடாமல் பார்த்துக் கொண்டார்கள்...

என்ற வரலாறு எல்லாம் அவளது அனுமதியின்றியே அவளுள் பதிந்தது. சாலையில் நடக்கும்போது சுவரில் ஒட்டப்பட்டிருக்கும் சினிமா போஸ்டரை பார்ப்பாள். கண் கலங்கும். பெருமூச்சு வெளிப்படும்.

இருபத்தியிரண்டு வயதானபோது கங்கு கைதேர்ந்த பாலியல் தொழிலாளியாக மாறியிருந்தாள். திரும்பிப் பார்க்க வைக்கும் அழகிதான். அதற்காக மட்டும் வாடிக்கையாளர்கள் அவளை தேடி வரவில்லை. படுக்கையில் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்ற வித்தை அவளுக்கு தெரிந்திருந்தது. அதற்காகத்தான் கல்கத்தா, சென்னை, ஹைதராபாத், தில்லி ஆகிய நகரங்களில் இருந்தெல்லாம் 'அவள்தான் வேண்டும்' என்று கேட்டு பலரும் வந்தார்கள்.

*காரியம் முடிந்து செல்லும்போது கங்குவுக்கும் கணிசமாக 'டிப்ஸ்' வழங்கிவிட்டு சென்றார்கள்.*

*ஷீலாவின் காட்டில் பணமழை பொழிந்தது. இவள் கண்களுக்கு கங்கு அட்சயபாத்திரமாகவே தெரிந்தாள். எனவே ஒரு குறையும் அவளுக்கு வராமல் பார்த்துக்கொண்டாள்.*

*சரியாக அந்த சமயத்தில்தான் கங்குவின் அருமை பெருமைகளை தெரிந்துகொண்டு ஒரு பதான் வந்து சேர்ந்தான்.*

*ஆறடி உயரம். அகலமான தோள்கள். முழு போதையில் தள்ளாடியபடி வந்தவனை பார்த்து ஷீலா பயந்துவிட்டாள். இவன் கையில் சிக்கினால் கங்கு ரணமாகிவிடுவாளே என்று அஞ்சினாள்.*

*அச்சப்பட்டது போலவேதான் நடந்தது. வக்கிரம் பிடித்த அந்த பதான், கங்குவை நார் நாராக கிழித்துவிட்டு ஒரு பைசா கூட தராமல் வெளியேறினான். ரத்த வெள்ளத்தில் மயங்கிக் கிடந்த கங்குவை உடனடியாக ஷீலா மருத்துவமனையில் சேர்த்தாள். உடல்நலம் தேறி அவள் வீடு திரும்ப ஒரு வாரம் ஆனது.*

*அந்த ஏழு நாட்களில் கங்கு ஒரு முடிவுக்கு வந்திருந்தாள். வக்கிரம் பிடித்த அந்த பதானை தண்டிப்பது. அதற்கு ஒரு தாதாவின் உதவியை நாடுவது.*

*அந்த தாதா கரீம் லாலா.*

# 18

‘எப்போதும் நேர்மையாக நடந்து கொள்ளுங்கள். அதைப் பார்த்து சிலர் சந்தோஷப்படுவார்கள். பலர் ஆச்சர்யப்படுவார்கள்’ என்று எழுத்தாளர் மார்க் ட்வெயின் சொன்னது கங்குவுக்கும் பொருந்தும்.

உடல்நலம் தேறி மருத்துவமனையில் இருந்து திரும்பியவள், மவுனமாகவே இருந்தாள். வெளிக்காயங்கள் ஆறியிருந்தன. ஆனால், உள்காயம் தழும்பாக மாறியிருக்கிறது என்பதை ஷீலா உணர்ந்தாள். அதனாலேயே கலங்கினாள். இவளது ஆளுகைக்கு உட்பட்ட பெண்களில் கங்குதான் பேரரசி. தேடி வரும் வாடிக்கையாளர்கள் அதைத்தான் சொல்லாமல் சொல்கிறார்கள். அவளால்தான் தனக்கு மவுசு. அப்படியிருக்க அவள் முடங்கிவிட்டால்?

அச்சத்துடனேயே கங்குவை கண்காணித்தாள். வாய் விட்டு அழவில்லை. மற்றவரிடமிருந்து அனுதாபத்தையோ, ஆதரவையோ தேடவில்லை. அதற்காக கலகலப்பாகவும் பழகவில்லை. தனக்கென ஒதுக்கப்பட்டிருந்த அறையிலேயே கிடந்தாள். உணவை ஒதுக்கவில்லை. அதே நேரம் வேண்டியதை கேட்டு உண்ணவும் இல்லை.

விட்டுப் பிடிப்போம் என இரண்டு நாட்கள் அமைதியாக இருந்த ஷீலா, மூன்றாவது நாள் அவளை தேடி வந்தாள். ‘தொழில்’ நடக்க வேண்டுமே...

அது மாலை மறைந்து இரவு பூக்கும் நேரம். கங்கு இருந்த அறைக்கதவை தட்டினாள். பதிலில்லை. தள்ளினாள். திறந்து கொண்டது. நுழைந்தாள். இருட்டாக இருந்தது. தன் வலது கையை உயர்த்தியவள் சுவரை தடவினாள். ஸ்விட்ச் போர்ட் தட்டுப்பட்டது. அழுத்தினாள். விளக்கு எரிந்தது. திரும்பினாள்.

முழங்காலை கட்டியபடி கட்டிலில் அமர்ந்திருந்த கங்கு, கண் கொட்டாமல் தன்னையே பார்த்துக்கொண்டிருப்பதை கண்டதும் ஷீலாவின் அடிவயிறு சில்லிட்டது. பேசுவதற்காக வந்தவள், வார்த்தைகளை மறந்து விழித்தாள். குற்ற உணர்வு தலைதூக்க அவளை நோக்கி வந்தவள், கட்டிலில் அமர்ந்தாள். இருவருக்கும் இடையில் ஓரடிக்கும் குறைவான தூரம்தான் இருந்தது. ஆனால், அதுவே மலைக்கும் மடுவுக்குமான வித்தியாசமாக ஷீலாவுக்கு தெரிந்தது.

“கங்கு...” எச்சிலை விழுங்கியபடி பேச்சை ஆரம்பித்தாள்.

‘‘ரெண்டு நாள் விட்டுடுகா...’’ சொன்ன கங்குவின் குரல் கம்மியிருந்தபோதும், அழுத்தம் நிரம்பி வழிந்தது.

“அதில்ல மா...” என்றபடி எதையோ சொல்ல வந்த ஷீலா,

“ஐயோ...” என அலறினாள்.

காரணம் அவள் கண் முன்னால் விரிந்த காட்சி. முழங்காலை கட்டியிருந்த கங்கு அப்போது கால்களை நீட்டியிருந்தாள். இடுப்புக்கு மேலே பொட்டு துணியில்லை.

ஆனால்...

கண்களை பொத்திக்கொண்டு ஷீலா அழ ஆரம்பித்தாள். அப்படியும் அந்த காட்சியை மறைக்க முடியவில்லை.

கங்குவின் முலைக் காம்புகள் ரத்த பெருக்குடன் காணப்பட்டன...

‘‘கஸ்டமருக்கு இது பிடிக்காதுக்கா...’’ சொன்ன கங்குவை கதறலுடன் பாய்ந்து கட்டிப்பிடித்தாள்.

அந்த அணைப்பு கங்குவுக்கும் வேண்டியிருந்தது. ஷீலாவின் மார்பில் முகம் புதைத்து ஒடுங்கினாள்.

‘‘ரெண்டு நாளில்ல... நாலு நாள் கூட ஆகட்டும்... உன்னை யாரும் தொந்தரவு செய்யாதபடி பார்த்துக்கறேன்...”

ஷீலா சொல்லி முடித்ததும் விலுக்கென்று கங்கு நிமிர்ந்தாள். அணைப்பை விட்டு விலகினாள். அவள் என்ன நினைக்கிறாள் என்பது ஷீலாவுக்கு புரிந்தது. அதனாலேயே வலித்தது.

“அவன் பெரிய இடம் கங்கு... அதனாலதான் என்னால எதுவும் செய்ய முடியலை...”

“எந்த இடம்?”

பதில் சொல்லாமல் ஷீலா தலை குனிந்தாள். கங்குவும் வற்புறுத்தவில்லை. ‘‘லைட்டை அணைச்சுட்டு போக்கா...’’ துப்பட்டாவை எடுத்து தன் மார்பில் போர்த்திக்கொண்டவள் முகம் திருப்பி படுத்தாள்.

கால்கள் துவள எழுந்த ஷீலா, இயலாமையுடன் அறையை விட்டு வெளியேறினாள்.

சொன்னது போலவே அடுத்த இரண்டாம் நாள் மாலை தன்னை சிங்காரித்துக் கொண்டு வாசலுக்கு வந்தாள் கங்கு. “இல்ல... இன்னும் ஒரு நாள் போகட்டும்...’’ என்று ஷீலா தடுத்ததை காதிலேயே வாங்கிக் கொள்ளாமல் வாசல் படிக்கெட்டில் அமர்ந்தாள். சாயம் பூசப்பட்ட கீழுதட்டை கடித்தபடி சாலையில் சென்று கொண்டிருந்த ஆண்களை பார்த்து புன்னகைத்தாள்.

சூடு பிடித்தது. வாடிக்கையாளர்கள் குவிய ஆரம்பித்தார்கள். எட்டு நாட்கள் தொழில் செய்யாததற்கும் சேர்த்து இரவு, பகல் பாராமல் உழைக்கத் தொடங்கினாள். ஷீலாவின் பையும் பணத்தால் நிரம்ப ஆரம்பித்தது.

மீண்டும் கங்கு லைனுக்கு வந்துவிட்டாள் என்ற செய்தி அந்த வக்கிரம் பிடித்த பதானை எட்டியது. முட்ட முட்ட குடித்தவன் தள்ளாடியபடி ஷீலாவின் வீட்டுக்கு வந்தான்.

அப்போது நேரம் சரியாக இரவு பத்து.

கண்கள் மின்ன வந்தவனை கண்டதும் நாற்காலியில் அமர்ந்திருந்த ஷீலா துள்ளி எழுந்தாள். ரத்த பொருக்குடன் காணப்பட்ட கங்குவின் முலை காம்பு கண் முன்னால் வந்து போனது.

“வெளில போடா நாயே...” என அடிவயிற்றிலிருந்து கத்தினாள். அந்த பதான் அசையவேயில்லை. தன் கைகளால் அவனை பிடித்து தள்ள முற்பட்டாள். அடுத்த நிமிடம் தரையில் சுருண்டு விழுந்தாள்.

இடைப்பட்ட அறுபது நொடிகளில் என்ன நடந்தது என்பது மெல்ல மெல்ல ஷீலாவுக்கு புரிந்தது. கொத்தாக தன் தலைமுடியை அவன் பிடித்ததும், பளாரென்று கன்னத்தில் அறைந்து தன்னை தரையில் வீசியதும், நிழற்படங்களாக வந்து போயின.

கங்குவின் அறையை நோக்கி அவன் செல்வதை செய்வதறியாமல் பார்த்துக்கொண்டிருந்தாள்.

போதை தலைக்கேறிய நிலையிலும் அறை மாறி அவன் செல்லவில்லை. சரியாக கங்குவின் அறை முன்னால் நின்றவன், தள்ளாடும் தன் உடலை சமன்படுத்தினான். மூடியிருந்த கதவை தன் வலது காலால் எட்டி உதைத்தான். உட்புறம் மூடியிருந்த தாழ்ப்பாள் எகிறி தரையில் விழும் ஓசை அமைதியை கிழித்தது.

நுழைந்தான். கட்டிலில் கங்குவுடன் இருந்த கஸ்டமரை தன் இரு கைகளாலும் தூக்கி அறைக்கு வெளியே வீசினான்.

சத்தம் கேட்டு வந்த பெண்கள் வெலவெலத்துப் போய் அறை வாசலில் நின்றார்கள். கதவை மூடாமல், அவர்கள் அனைவரது கண்முன்னாலும் கங்குவை வேட்டையாடினான். தடுக்க வந்தவர்களின் முகத்தை சுவரில் வைத்து தேய்த்தான்.

ஷீலாவின் வீட்டை விட்டு அவன் வெளியேறியபோது இரு பெண்களின் உதடுகள் கிழிந்திருந்தன. மூன்று பெண்களின் முகங்களில் சிராய்ப்புகள் ஏற்பட்டிருந்தன.

கங்கு?

முன்பு போலவே ரத்த வெள்ளத்தில் கிடந்தாள்.

பாதிக்கப்பட்ட அனைவரையும் ஷீலா மருத்துவமனையில் சேர்த்தாள். கங்குவை தவிர மற்றவர்கள் ஒரே நாளில் திரும்பினார்கள். இம்முறையும் ஒரு வாரத்துக்கு பிறகே கங்கு வந்து சேர்ந்தாள். அவளால் நடக்க முடியவில்லை. கால்களை அகட்டியபடிதான் அடியெடுத்து வைக்க முடிந்தது.

நேராக தன் அறைக்கு செல்லாமல் ஷீலாவின் முன்னால் வந்து நின்றாள்.

“அவன் பேரு என்ன?”

“சவுகத் கான்...”

“எங்க இருக்கான்?”

“லேமிங்டன் ரோட்ல இருக்கிற தாஹிர் மன்சில்ல...”

கேட்ட கங்கு தன் அதிர்ச்சியை அப்பட்டமாக வெளிப்

படுத்தினாள். "கரீம் லாலா வீட்லயா?"

"ஆமா. அவருக்கு வலது கையா இருக்கான்..."

எதுவும் பேசாமல் தன் அறைக்குச் சென்ற கங்கு அடுத்த ஐந்து நாட்கள் வெளியில் வரவில்லை. ஆறாவது நாளில்தான் அவள் உடல் தேறியது. எடுபிடி பையனை மட்டும் தன் அறைக்கு வரவழைத்தாள். பத்து ரூபாயை தன் டிராயர் பாக்கெட்டில் நுழைத்தபடியே வெளியே வந்தவன், மூன்று மணிநேரம் கழித்து மீண்டும் கங்குவின் அறைக்கு வந்தான்.

அவள் கேட்ட தகவல் கிடைத்தது. சவுகத் கான் ஊரில் இல்லை. 'வேலை' விஷயமாக வெளியில் சென்றிருக்கிறான்.

பழையபடி நடக்க முடியாவிட்டாலும் கால்களை அகட்டி நடப்பது இப்போது குறைந்தது. பத்து நாட்களுக்குப் பின் இயல்புக்கு திரும்பினாள். மறுநாள் வெள்ளிக்கிழமை என்பதை காற்றில் படபடத்த நாள்காட்டி உணர்த்தியது.

சூரியன் உதிக்கும் வரை காத்திருந்தவள், அறையை விட்டு வெளியே வந்தாள். சுடுநீரில் தேய்த்து குளித்தாள். தலையை நன்றாக அலசினாள். தன் வாழ்நாளிலேயே முதல் முறையாக தன்னை அழகுப்படுத்திக் கொள்ள அதிக நேரம் எடுத்துக்கொண்டாள். ஷீலாவுக்கு எதுவோ புரிந்தது. ஆனால், அதை உறுதிப்படுத்திக் கொள்ள பயந்தாள். முட்டிக்கொண்டு வந்த சொற்களை சிரமப்பட்டு விழுங்கியவள் அவளது நடவடிக்கைகளையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

புதிய சுரிதாரை அணிந்தபடி தன் அறையை விட்டு வெளியே வந்த கங்கு, ஒரு நொடி ஷீலாவின் முன்னால் தயங்கி நின்றாள். பிறகு விடுவிடுவென்று வாசலுக்கு வந்தாள். மசூதியை நோக்கி நடக்க ஆரம்பித்தாள்.

மொய்க்கும் பல ஜோடி கண்கள் தன்னை மாறி மாறி பாலியல் பலாத்காரம் செய்வதை உணர்ந்தாள். உடலெங்கும் கம்பளிப் பூச்சி ஊர்ந்தது.

தெருமுனையில் ஒரு பதினாறு வயதுப் பெண், பையுடன் நின்றிருந்தாள். 'புதுச் சரக்கு'. காதலால் கசிந்துருகி வந்தவளாக இருக்க வேண்டும். தன் 'அத்தை'யிடம் பக்குவமாக சொல்லி அழைத்து வருவதாக எந்த பொறம்போக்காவது சொல்லிவிட்டு சென்றிருப்பான்.

அதென்னவோ தெரியவில்லை. காமாத்திபுராவுக்கு பெண்களை அழைத்து வரும் எல்லா மாமா பயல்களும் தங்கள் 'அத்தை' வீடு இந்த இடத்தில் இருப்பதாக சொல்லித்தான் நம்ப வைக்கிறார்கள்.

நடந்தாள். மசூதியை அடைந்தாள். இன்னும் நேரம் இருக்கிறது. சற்று தள்ளியிருந்த மரநிழலில் நின்றாள். மோப்பம்

பிடித்த ஒரு ஆண் அருகில் வந்தான்.

“நைட்டு வா...” ஒட்ட வைத்த புன்னகையுடன் முகத்தை திருப்பிக் கொண்டாள்.

ஐந்து... பத்து... பதினைந்து... நிமிடங்கள் சென்றபிறகு தொழுகை முடித்துவிட்டு கரீம்லாலா வெளியில் வந்தார். தன் ஹேண்ட் பேக்கை திறந்து கண்ணாடியை வெளியில் எடுத்த கங்கு, அதில் தன் முகத்தை பார்த்துக்கொண்டாள். கலைந்த முன்னுச்சி முடிகளை சரிப்படுத்தினாள். நெற்றியில் பூத்திருந்த வியர்வையை கைக்குட்டையால் ஒற்றி எடுத்தாள். பிறகு கண்ணாடியை பழையபடி தன் கைப்பையில் வைத்து மூடினாள்.

கரீம்லாலா அவள் இருந்த மரத்தடி பக்கம் வந்ததும், “நமஸ்தே லாலா...” என்றாள்.

பார்த்ததுமே காமாத்திபுரா பெண் என்று புரிந்தது. ‘அப்படிப்பட்டவள்’ தன்னை எதற்கு அழைக்க வேண்டும்? யாராவது பார்த்தால் என்ன நினைப்பார்கள்?

“என் பேரு கங்கு. உங்ககிட்ட கொஞ்சம் பேசணும்...”

“என்ன விஷயம்?”

“நடந்துகிட்டே பேசலாமா?”

“வேண்டாம். என் வீடு தெரியும் இல்லையா?”

“ம்...”

“அங்க வா...”

“சரி...”

தலையசைத்த கங்குவை நொடிக்கும் குறைவான நேரத்தில் பார்த்துவிட்டு நடக்க ஆரம்பித்தார். என்ன விஷயமாக இருக்கும்? யார் துணையும் இன்றி தொழுகை செய்ய தனியாகத் தான் நடந்து வருவோம் என்று தெரிந்துகொண்டு வந்திருக்கிறாளே...

யோசனையுடன் நடந்தவருக்கு சற்று இடைவெளியுடன் கங்கு தன்னை பின்தொடர்ந்து வருவதை உணர முடிந்தது. வீட்டுக்கு வந்தவர், “மாடில போய் காத்திரு...” என்று சொல்லிவிட்டு சென்றார்.

வெளியில் இருந்த படிக்கட்டு வழியாக மாடிக்கு சென்ற கங்கு, அங்கிருந்தபடி பம்பாயை பார்த்தாள். ஆசைப்பட்ட ஊர். நடிகையாக வேண்டும் என்ற கனவுடன் வந்த பிரதேசம். எல்லாம் முடிந்துவிட்டது.

கனைக்கும் சத்தம் கேட்டு திரும்பினாள்.

கைகளை துடைத்தபடி வந்த கரீம் லாலா அங்கிருந்த சோபாவில் அமர்ந்தார்.

“சொல்லு. என்ன விஷயம்?”

“உங்களுக்கு வப்பாட்டியா இருக்க விரும்பறேன்...”

19

கரீம் லாலா எதுவும் பேசவில்லை. அமர்ந்திருந்த சோபாவை விட்டு எழுந்தார். கங்குவின் அருகில் வந்தார். ஆனால், அவள் பக்கம் திரும்பாமல் பம்பாயின் வனப்பை பார்க்கத் தொடங்கினார்.

நிமிடங்கள் கரையத் தொடங்கின. இருதயத்தின் துடிப்பை தன் செவிகளில் கேட்டபடி அமைதியாக கங்கு நின்றாள். அந்த மவுனம் அவளை கொன்றுகொண்டிருந்தது. பேசாமல் திரும்பிவிடலாம் என்று நினைத்தபோது கரீம் லாலாவின் குரல் கணீரென்று ஒலித்தது.

"என்ன பிரச்னை?"

"லாலா..."

"நீ எந்த இடத்துலேந்து வர்ற... என்ன தொழில் செய்யறேன்னு எனக்கு தெரியும்..."

அனலை கக்கியபடி அவரை முறைத்தாள். அதை அவர் சட்டை செய்யவேயில்லை.

"அதை நான் தப்பு சொல்ல மாட்டேன். ஏன்னா, இந்த பம்பாய் யாரை எந்த சூழல்ல எப்படி மாத்தும்னு யாருக்குமே தெரியாது... அதுக்கு நீ மட்டுமில்ல... நானும் ஓர் உதாரணம்தான்..."

உதட்டை கடித்தாள்.

"யாரை நம்பி இந்த ஊருக்கு வந்த... அவன் உன்னை எப்படி ஏமாத்தினான்... எவ்வளவுக்கு உன்னை காமாத்திபுராவுல வித்தான்னு எனக்கு தெரியாது. தெரிஞ்சுக்கவும் விரும்பல. அதுக்கு நேரமும் இல்ல. சுத்தி வளைக்காம நேரடியா விஷயத்துக்கு வா. என்னைத் தேடி எதுக்கு வந்த?"

"அதான் சொன்னேனே லாலா..."

"என்னனு..?"

"உங்களுக்கு வப்பாட்டியா இருக்க விரும்பறேன்னு..."

அவளை நோக்கி திரும்பினார். "இங்க பாரு கங்கு... அதுதானே உன் பேரு?" தலையசைத்தாள்.

"இந்த உலகம் என்னை பத்தி என்ன சொல்லுது... நினைக்குதுன்னு எனக்கு தெரியும். அதுக்காக என்னிக்குமே நான் வருத்தப் பட்டதில்ல. ஏன்னா, அவங்கவங்க நியாயம் அவங்கவங்களுக்கு. ஆனா, முதல் முறையா என்னைப் பார்த்து நானே வெட்கப்படறேன். காரணம் நீ..."

"லாலா..."

"எத்தனையோ பேரை அடிச்சிருக்கேன். உதைச்சிருக்கேன். கொன்னுருக்கேன். ஆனா, என்னிக்குமே என் மனைவியைத் தவிர வேற எந்தப் பெண்ணையும் ஏறெடுத்தும் பார்த்ததில்ல. தொட்டதும் இல்ல. அவ்வளவு ஏன் என் மனைவியை கூட

நான் ஏமாத்தினதில்ல. இந்த விஷயம் பம்பாய்க்கே தெரியும். உனக்கும் தெரியும். அப்படியிருந்தும் என்கிட்ட இந்த கோரிக்கையை வைச்சிருக்க...”

“லாலா...”

“நான் கெட்டவன்தான் கங்கு. ஆனா, பொம்பளை பொறுக்கி இல்ல. என்கிட்ட வந்தா காரியம் நடக்கும்னு தெரிஞ்சுதானே வந்திருக்க? அப்புறம் ஏன் வப்பாட்டி அது இதுனு பேசற? இன்னொரு முறை அப்படி சொல்லி என்னை மட்டுமில்ல... உன்னையும் சேர்த்து கேவலப்படுத்திக்காத...”

சட்டென்று உடைந்த கங்கு அப்படியே கரீம்லாலாவின் காலில் விழுந்து கதறி அழுதாள்.

அவளது தோளைப் பிடித்து தூக்கி நிறுத்தியவர், அப்படியே அங்கிருந்த நாற்காலியில் அவளை அமர வைத்தார். மெல்ல மெல்ல அவள் அழுகை நின்றது.

“சொல்லு...”

சொன்னாள். சவுகத்கான் வந்தது, தன்னை பலாத்காரம் செய்தது, உடலை கிழித்தது, மருத்துவமனையில், தான் உயிருக்கு போராடி பிழைத்தது... என சகலத்தையும் கொட்டித் தீர்த்தாள்.

கேட்ட கரீம்லாலாவின் புருவம் முடிச்சிட்டது.

“அவனா இப்படி செஞ்சான்... ரொம்ப நல்லவனாச்சே..?”

“ஆமா லாலா... ரொம்ப ரொம்ப நல்லவன்...” என்றபடி கங்கு தன் சுரிதாரின் டாப்ஸை உயர்த்தினாள். “நல்லவனால மட்டும்தான் இதுமாதிரி கொடுமைப்படுத்த முடியும்...”

மைக்ரோ விநாடியில் முகத்தை திருப்பிக்கொண்டார். அவர் உடல் அதிர ஆரம்பித்தது.

கண் முன்னால் விரிந்த காட்சியை அவரால் ஜீரணிக்கவே முடியவில்லை.

“எந்த தைரியத்துல சவுகத் இப்படி செஞ்சான்..?”

“நீங்க இருக்கிற தைரியம்தான் லாலா...”

ஆக்ரோஷத்துடன் திரும்பினார். “சரி நீ போ. நான் பார்த்துக்கறேன்...”

“மாட்டேன். என் கண் முன்னாடி அவனை நீங்க தண்டிக்கணும். அப்பத்தான் நான் போவேன். அதுவரைக்கும் இங்கயே இருக்கேன்...”

“அது சரியா வராது...”

“ஏன் லாலா... நான் இங்க இருந்தா உங்க பேரு கெட்டுடும்னு பயப்படறீங்களா?”

“முட்டாள்தனமா பேசாத. எந்த இடத்துல உன்னை அவன் கொடுமைப்படுத்தினானோ அதே இடத்துலதான் அவனை தண்டிக்கணும். அப்பத்தான் மத்தவங்களுக்கும் பயம் வரும்...”

என்ன தீர்க்கமான தீர்ப்பு... கண் கலங்க கையெடுத்து கும்பிட்டாள்.

இமைகளை மூடி அதை ஏற்றார். "போ. நான் பார்த்துக்கறேன்..."

கங்கு போகவில்லை. பதிலாக தன் ஹேண்ட் பேக்கை திறந்தாள். அதனுள் கைவிட்டபடியே, "கையை நீட்டுங்க லாலா..." என்றாள்.

"என்ன விஷயம்?"

"நீட்டுங்க லாலா..."

நீட்டினார். ஹேண்ட் பேக்கிலிருந்து ராக்கி கயிற்றை எடுத்த கங்கு அதை அவர் கையில் கட்டினாள்.

"எனக்கு நினைவு தெரிஞ்ச நாள்லேந்து பல ஆண்களை பார்த்துட்டு வரேன். ரத்த உறவில்லாத எவனும் என்கிட்ட அன்பா நடந்துகிட்டதில்ல. எல்லாருமே என்னை சதைப் பிண்டமாதான் பார்த்தாங்க. பழகினாங்க. முதல் முறையா என்னை உயிருள்ள பொருளா பார்த்தது நீங்கதான். உங்களை மனசார என் அண்ணனா ஏத்துக்க நினைக்கறேன்..."

கயிற்றை கட்டி முடித்தவள், திரும்பிப் பார்க்காமல் மாடிப் படிக்கட்டில் இறங்க ஆரம்பித்தாள். அவள் செல்வதையே இயலாமையுடன் பார்த்தார். வப்பாட்டியாக இருக்க விரும்புவதாக சொன்னவள்... சில நிமிடங்களிலேயே தங்கை என்கிறாள்... எந்த அளவுக்கு மனத்தளவில் செத்திருந்தால் இப்படியொரு ஊசலாட்டம் ஏற்பட்டிருக்கும்?

உதவ வேண்டும்... அவளை காப்பாற்றியே ஆக வேண்டும். முடிவு செய்ததுடன் நிறுத்தாமல் அதை செயல்படுத்தவும் திட்டம் தீட்டினார்.

அந்த திட்டம் என்னவென்று அறியாமலேயே கங்கு தன் இருப்பிடம் வந்து சேர்ந்தாள். கரீம் லாலாவை போய் பார்த்திருக்கிறாள் என்ற தகவல் ஷீலாவை எட்டியிருந்தது. அவளாக ஏதாவது சொல்வாள் என்று நினைத்தாள். ஆனால், அவள் வாய் திறக்கவேயில்லை.அன்று மாலையே ஓர் இளைஞன் வந்தான். "லாலா அனுப்பினாரு. வீட்டு வாசல்லயே இருப்பேன். சவுகத் எப்ப வந்தாலும் எனக்கு சொல்லுங்க..." என்று மரியாதையுடன் கங்குவிடம் சொல்லிவிட்டு சென்றான்.

என்ன வலை விரிக்கப்பட்டிருக்கிறது என்பது புரிந்தது. காத்திருந்தாள். அந்த இளைஞனும் காத்திருந்தான். ஒரு வாரம் போனது. வழக்கமான வாடிக்கையாளர்களுடன் புதியதாகவும் நிறைய பேர் வந்தார்கள். வர வேண்டிய சவுகத் மட்டும் எட்டிக் கூட பார்க்கவில்லை. இத்தனைக்கும் 'தொழிலை' முன்னிட்டு வெளியூர் சென்றிருந்தவன், பம்பாய்க்கு திரும்பிவிட்டான் என்ற தகவல் வந்து சேர்ந்திருந்தது. சரி இன்றில்லாவிட்டாலும் நாளை வருவான் என்று நம்பினாள். அந்த 'நாளை' இரண்டு வாரங்கள் கழித்துத்தான் வந்தது.

சரியாக பதினைந்து நாட்களுக்கு பின் வழக்கம் போல் முட்ட

முட்ட குடித்துவிட்டு அந்த வக்கிரம் பிடித்த சவுகத் வந்தான். உடனே வாசலில் காத்திருந்த கரீம்லாலாவின் ஆளுக்கு செய்தி அனுப்பினாள். அவன் சைக்கிளில் சென்று அவரை அழைத்து வர எப்படியும் இருபது நிமிடங்களாகும். எதற்கும் அரைமணி நேரம் என்று வைத்துக்கொள்ளலாம். அதற்குள் வந்த வேலை முடிந்து இந்த பொறம்போக்கு செல்லாமல் இருக்க வேண்டும்...

எனவே முடிந்த வரை இணைப்பை தள்ளிப் போட்டாள். முன் விளையாட்டுக்கு அதிக இடம் கொடுத்தாள்.

சவுகத்துக்கு ஆச்சர்யம். முரண்டு பிடிக்காமல் இப்படி ஒத்துழைக்கிறாளே... மகிழ்ச்சியுடன் அவளது அசைவுக்கு ஏற்ப வளைந்தான். அதுவே அவனுக்கு எமனாக அமைந்தது.

புயலைப் போல் தனது டிரேட் மார்க் வாக்கிங் ஸ்டிக்குடனும், நான்கு அடியாட்களுடனும் கால் மணிநேரத்தில் அங்கு வந்து சேர்ந்தார் கரீம் லாலா. உடன் வந்த நான்கு பேரிடமும் ஹாக்கி ஸ்டிக் இருந்தது. அதனால் சவுகத்தை அவர்கள் வெளுத்து வாங்கினார்கள். இருக்கும் எலும்புகள் எல்லாம் உடைய கதறினான்.

“ஒரு தே...காக என்னை அடிக்கிறீங்களே லாலா...”

“யார்றா விலை மாது? அவ என் சகோதரிடா... ராக்கி கட்டின தங்கச்சி...” இடியென முழங்கினார்.

அந்த முழக்கம் காமாத்திபுரா முழுக்க எதிரொலித்தது. அந்த நொடியில் கங்கு, கங்குபாய் ஆனாள். மாஃபியா ராணியாக சிம்மாசனத்தில் அமர்ந்தாள்.

20

எந்த நொடியில், “கங்கு என் தங்கச்சிடா...” என்று கரீம் லாலா கர்ஜித்தாரோ அந்த விநாடியில் காமாத்திபுராவின் தலையெழுத்தே மாறிப் போனது.

எலும்புகள் அனைத்தும் உடைபட்ட நிலையில் உயிருள்ள பிணமாக விழுந்து கிடந்த சவுகத்கானை வந்த நால்வரும் தூக்கிக் கொண்டார்கள். வாக்கிங் ஸ்டிக்குடன் கரீம்லாலா முன்னால் நடக்க, அவர்கள் பின்தொடர்ந்தார்கள்.

ஷீலாவின் வீட்டு வாசலில் அவரது அம்பாசிடர் கார் நின்றிருந்தது. கரீம் லாலா வருவதைப் பார்த்ததும் மரியாதையுடன் கார் கதவை டிரைவர் திறந்தான். சுற்றிலும் ஒரு பார்வை பார்த்தவர், கதவை அறைந்து மூடினார்.

''நீ போ...'' அடிக்குரலில் கட்டளையிட்டார். தவறு செய்துவிட்டோமோ என்று பயத்துடன் அவரைப் பார்த்த டிரைவருக்கு ஏதோ புரிந்தது. ‘சரி’ என்பது போல் தலையசைத்து வணங்கினான். ஓடிச்சென்று தன் சீட்டில் அமர்ந்தான். காரை கிளப்பினான். பறந்தான்.

வாக்கிங் ஸ்டிக்கை தரையில் ஊன்றாமல் காற்றில் வீசியபடி நெஞ்சை நிமிர்த்திக்கொண்டு கரீம்லாலா நடக்க ஆரம்பித்தார். சவுகத்கானை சுமந்து வந்த அவரது அடியாட்களும் மவுனமாக அவரை பின்தொடர்ந்தார்கள்.

அந்த நள்ளிரவிலும் மொத்த காமாத்திபுராவும் கண்கொட்டாமல் இந்தக் காட்சியை வேடிக்கை பார்த்தது. வாடிக்கையாளர்கள், மாமா பயல்கள், நேற்று லைனுக்கு வந்தவர்கள், லைனிலேயே இருப்பவர்கள், வயது காரணமாக ஓய்வு பெற்றவர்கள், நடைபாதை வாசிகள்... என ஒருவர் பாக்கியில்லாமல் சகலரும் சாலையோரம் நின்றிருந்தார்கள்.

சவ ஊர்வலம்.

அப்படித்தான் அவர்கள் அனைவருக்கும் தெரிந்தது. தெரிய வேண்டும் என்பதற்காகவே சின்ன சந்துகூட விடாமல் காமாத்திபுராவின் மூலை முடுக்கெல்லாம் கரீம்லாலா நடந்தார்.

மாடியில் நின்றபடி இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தாள் கங்கு. வெந்து தணிந்த உடலை, கிழிந்த போர்வை மூடியிருந்தது. அடிவயிற்றில் இருந்து பொங்கிய உணர்வை, உணர்ச்சியை அவள் அடக்கவேயில்லை. அடக்கவும் விரும்பவில்லை. கண்கள் வழியே அவைகள் வழிந்து தன் கன்னத்தை நிரப்பட்டும் என விட்டுவிட்டாள்.

உடன் பிறந்த சகோதரர்கள் செய்யாதது; இந்த உலகுக்கு, தான் வர காரணமாக இருந்த தகப்பன் கனவிலும் செய்யத் துணியாதது; நல்லவர்கள், புனிதர்கள், கடவுளின் அவதூதர்கள்

என ஒழுக்கவாதிகளாக பெயரெடுத்த ஒருவரும் தன் வாழ்நாளில் செய்ய முற்படாதது...

ஆனால், கரீம் லாலா செய்திருக்கிறார். அவளது தன்மானத்தை காப்பாற்றியிருக்கிறார். எதற்காக? அவளது வேண்டுகோளுக்காக.

உடலை விற்று பிழைப்பவளுக்கும் சுய மரியாதை உண்டு என்பதை அந்த கடத்தல்காரர்தான், தெற்கு பம்பாயின் தாதாதான் உணர்ந்திருக்கிறார். அவளது கவுரவத்தை காப்பாற்ற தனது வலது கையையே அடித்து நொறுக்கியிருக்கிறார். இனி யாரும் அவளது உடலை அவள் அனுமதியில்லாமல் தொடக்கூடாது என்று எச்சரிப்பதற்காக இதுவரை வந்திராத ஆசியாவின் மிகப்பெரிய சிவப்பு விளக்கு பகுதிக்கு வந்திருக்கிறார். ஒரு இடம் பாக்கியில்லாமல் தன் பாதம் படும்படி நடந்துகொண்டிருக்கிறார்...

இருந்த இடத்தில் நின்றபடியே கையெடுத்து அவரை கும்பிட்டாள். இனம் புரியாத உணர்வுடன் தன் அறைக்கு வந்தவள், அப்படியே படுக்கையில் விழுந்தாள்.

எப்போது உறங்கினாள் என்று தெரியாது. ஆனால், கண்விழித்தபோது உலகமே மாறியிருந்தது.

அங்கிருக்கும் வயதான கிழவிக்கு அவளைப் பிடிக்காது. முன்னாள் பாலியல் தொழிலாளியான அந்தக் கிழவி அவளைப் பார்க்கும் போதெல்லாம் எரிந்து விழுவாள். கண்களை உருட்டி உருட்டி எரிப்பாள். இந்தியில் இருக்கும் சகல கெட்ட வார்த்தைகளாலும் அவளைத் திட்டுவாள்.

அப்படிப்பட்ட கிழவி, உறங்கி எழுந்து வந்த அவளைப் பார்த்து முதல் முறையாக புன்னகைத்தாள். பல் தேய்க்கவும், முகம் கழுவவும் தன் கையால் பணிவிடை செய்தாள். வேறு ஏதேனும் வேண்டுமா என பவ்யமாக கேட்டாள்.

அந்தக் கிழவி என்றில்லை... மொத்த காமாத்திபுராவுமே அப்படித்தான்.

அவளிடம் பயம் கலந்த மரியாதையுடன் நடந்து கொண்டது.

கங்குவுக்கு சிரிப்பு வந்தது. ஷீலாவை பார்க்கவோ பாவமாக இருந்தது. இனி அந்த வீட்டின் 'அக்கா', தான் அல்ல என்பதை உணர்ந்தவள் போல் ஷீலா கைகால்கள் நடுங்க நின்று கொண்டிருந்தாள்.

என்ன பேசினாலும் இவள் பதற்றம் குறையாது. செய்கைதான் ஆறுதல் படுத்தும். எனவே ஷீலாவை கட்டிப் பிடித்தாள். "அரைமணி நேரத்துல தயாராகிடறேன்கா. அதுக்கு அப்புறம் கஸ்டமரை அனுப்பு..." என்று சொல்லிவிட்டு சென்றாள்.

ஷீலா இறக்கும் வரை கங்கு இப்படித்தான் நடந்துகொண்டாள். ஒருபோதும் இவளைத் தாண்டிச் செல்ல முயலவில்லை. இந்தத் திருப்தி தந்த நிறைவினாலோ என்னவோ அடுத்த மூன்று ஆண்டுகளில் ஷீலா மறைந்தாள்.

அதன் பிறகு கங்குவை தேடி 'கார்வாலி' பதவி வந்தது. 'கார்வாலி' என்னும் சொல்லுக்கான அர்த்தத்தை இந்தி அகராதியில் தேடுவதை விட காமாத்திபுராவுக்கு என்றே ஸ்பெஷலாக இருக்கும் அகராதியில் இருந்து அறிவதுதான் பொருத்தமாக இருக்கும்.

காரணம், நடைமுறை ரீதியாக அந்த சொல் வாழ்வது அங்குதான்.

காமாத்திபுராவில் ஏகப்பட்ட அடுக்குமாடிகள் கொண்ட வீடுகள் உண்டு. இந்த அடுக்குமாடி வீட்டை, இப்போது நாம் பார்க்கும் அபார்ட்மென்ட்டுடன் ஒப்பிட முடியாது. அது வேறு ரகம்.

இந்த அடுக்குமாடி வீடுகள் ஒவ்வொன்றும் பல தளங்களை கொண்டது. ஒவ்வொரு தளத்திலும் குறைந்தது ஐம்பது படுக்கைகள் கொண்ட தனித்தனி தடுப்புகள் இருக்கும். அதாவது, ஐம்பது முதல் அறுபது பெண்கள் வரை ஒரு தளத்தில் இருப்பார்கள். இந்தப் பெண்களையும், ஐம்பது படுக்கைகளை கொண்ட அந்தத் தளத்தையும் எந்த பெண் நிர்வகிக்கிறாளோ அவள்தான் 'கார்வாலி'.

இந்த 'கார்வாலி' பதவியை அவ்வளவு சுலபத்தில் அடைந்துவிட முடியாது. பாலியல் தொழிலில் அனுபவமும், அடிதடிக்கு அஞ்சாத மன உறுதியும் எந்தப் பெண் பெற்றிருக்கிறாளோ அவளே அதற்கு தகுதியுடையவள்.

ஆண்கள் வெறும் 'மாமா பயல்கள்'தான். புதிய வாடிக்கையாளர்களை அழைத்து வருவதும், புதிய பெண்களை 'லைனு'க்கு கொண்டு வருவதும், வேறு வம்பு தும்புகள் வராமல் காவல் காப்பதும்தான் அவர்கள் பணி.

இன்னும் அழுத்தமாக சொல்வதென்றால் எந்த 'கார்வாலி' யையும் நியமிக்கமாட்டார்கள். பதிலாக தேர்தல் நடத்தித்தான் தேர்ந்தெடுப்பார்கள். எந்த தளத்தின் சார்பாக ஒரு பெண் தேர்தலில் நிற்கிறாரோ, அந்தத் தளத்தைச் சேர்ந்த பாலியல் தொழிலாளர்கள் ஓட்டுப்போடுவார்கள்.

இப்படி தேர்ந்தெடுக்கப்படும் 'கார்வாலி', தான் இறக்கும் வரை அந்தப் பதவியில் இருப்பார். கிடைக்கும் சலுகைகளை அனுபவித்தபடி வாழ்வார்.

வெகு அபூர்வமாகவே ஒரு 'கார்வாலி' உயிருடன் இருக்கும் போது அவர் வகித்த பதவிக்கு தேர்தல் நடக்கும்.

இப்படி ஒரு அடுக்குமாடி வீட்டில் எத்தனை தளங்கள் இருக்கிறதோ அத்தனை 'கார்வாலி'கள் இருப்பார்கள். ஒரு 'கார்வாலி'யின் விஷயத்தில் இன்னொரு 'கார்வாலி' தலையிட மாட்டார். தலையிடவும் கூடாது. அதே போல் ஒரு பெண் எந்த 'கார்வாலி'யின் பராமரிப்பில் இருக்கிறாளோ அவளிடம் மட்டும்தான் தனக்கு வேண்டியதை கேட்டுப் பெறவேண்டும். அது

உணவாகவோ, உடுக்கும் உடையாகவோ அல்லது வேறு மருத்துவ செலவாகவோ இருக்கலாம்.

மற்றபடி அந்த குடியிருப்பில் இருக்கும் மற்ற 'கார்வாலி'களை நேரில் சென்று சந்திக்கக்கூடாது. எதேச்சையாக பார்த்தால் புன்னகைக்கலாம். 'நலமா அக்கா?' என குசலம் விசாரிக்கலாம். அதைத் தாண்டி நெருங்கவோ, நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவோ கூடாது.

இந்த 'கார்வாலி'கள் அனைவருக்கும் தலைவியாக 'படே கார்வாலி' இருப்பார். இவரது கட்டுப்பாட்டில்தான் சம்பந்தப்பட்ட அடுக்குமாடி வீடு இருக்கும்.

அதாவது, 'கார்வாலி'கள் ராணி என்றால், 'படே கார்வாலி' மகாராணி.

இந்த 'படே கார்வாலி'யும் நியமிக்கப்படுவதில்லை. தேர்தல் மூலம்தான் தேர்ந்தெடுக்கப்படுகிறார். இந்தப் பதவிக்கு 'கார்வாலி'களாக இருந்து அனுபவம் பெற்றவர்கள் மட்டுமே போட்டியிட முடியும். இவர்களுக்கு ஓட்டுப் போடும் உரிமையும் அந்தக் குடியிருப்பில் உள்ள 'கார்வாலி'களுக்கே உண்டு. பார்வையாளர்களாகக்கூட அங்கிருக்கும் பாலியல் தொழிலாளர்கள் கலந்துகொள்ள முடியாது.

சரி, காமாத்திபுராவில் அடுக்குமாடிக் குடியிருப்பு மட்டும்தான் இருக்கிறதா?

இல்லை. தனித்தனி பொந்துகளும் உண்டு. ஒவ்வொரு பொந்தும் ஒரு வீடு என்று வைத்துக்கொள்வோம். ஐம்பது வீடுகளுக்கு (பொந்துகளுக்கு) ஒரு 'கார்வாலி' இருப்பார். ஏழு 'கார்வாலி'க்கு தலைவியாக ஒரு 'படே கார்வாலி' ஆட்சி செய்வார்.

இப்படி மையப்படுத்தப்பட்ட அரசாங்கம் போல்தான் காமாத்திபுரா இயங்கியது; இயங்கியும் வருகிறது.

இவர்களுக்கான தேர்தல் எப்படி நடக்கிறது, யார் தலைமையில் நடைபெறுகிறது என்பதெல்லாம் ரகசியம். ஆனால், 'படே கார்வாலி'களுக்கு என்று ஒரு சங்கமும், அந்த சங்கத்தை பம்பாய் (மும்பை) நிழலுலக தாதாக்கள் வழிநடத்துவதும் நிஜம்.

சுருக்கமாக சொல்வதென்றால், காமாத்திபுரா என்பது வெறும் சிவப்பு விளக்கு பகுதி அல்ல. அது ஒரு ராஜ்ஜியம்.

அவர்களுக்கு என்று தனி அரசாங்கம், அரசமைப்பு உண்டு. பம்பாயிலேயே அந்தப் பகுதி இருந்தாலும் மகாராஷ்டிர மாநிலத்தின் சட்டதிட்டங்கள் அதற்கு பொருந்தாது.

இந்த தனி ராஜ்ஜியத்தின் 'கார்வாலி'யாகத்தான் தேர்தல் மூலம் கங்கு தேர்ந்தெடுக்கப்பட்டாள். பம்பாயே நடுங்க ஆரம்பித்தது.

காரணம், அப்போது இந்தியப் பிரதமராக இருந்த பண்டிதர் ஜவஹர்லால் நேரு, அவளைப் பார்க்க விரும்பியதுதான்.

21

**தே**ர்தல் என்பது பெயருக்குத்தான். ஆனால், போட்டியின்றி 'கார்வாலி'யாக கங்கு தேர்ந்தெடுக்கப்பட்டாள் என்பதுதான் நிஜம். அது சரி. கரீம் லாலாவின் தத்து சகோதரியை எதிர்த்து போட்டியிட யாருக்கு துணிச்சல் வரும்?

ஆனால், 'கார்வாலி'யாக உயர்ந்த பிறகு கங்குவின் நடவடிக்கைகள் மாறியது பாருங்கள்... அதுதான் மாஃபியா ராணிகளின் சரித்திரத்தில் அவளுக்கு அழியாத இடத்தை பெற்றுத் தந்தது.

இன்றும் காமாத்திபுராவில் பேசப்படும் விஷயமாகத்தான் அந்த நிகழ்வு இருக்கிறது. இந்த சம்பவத்துக்கான முன்னுரை எல்லாம் சென்ற சில அத்தியாயங்களில் நாம் பார்த்ததுதான்.

வட மாநிலத்திலுள்ள ஒரு குக்கிராமத்தை சேர்ந்த பதினாறு வயது பெண். பெயர் மது. தன் ஊருக்கு வந்த இளைஞனை கண்டதும் காதலிக்கிறாள். வீட்டை விட்டு ஓடி வருகிறாள். பம்பாய்க்கு அவளை அழைத்து வருகிறான். ஒரு லாட்ஜில் தங்குகிறார்கள். ஒரு வாரம் போனதும் தன் அத்தை வீட்டுக்குப் போகலாம் என்று சொல்லி காமாத்திபுராவுக்கு அழைத்து வருகிறான். விற்றுவிட்டு கம்பி நீட்டிவிடுகிறான்...

இம்மி பிசகாமல் காலம்தோறும் எப்படி நடக்கிறதோ அப்படியேதான் மதுவின் விஷயத்திலும் நடந்தது. தனக்கு நேர்ந்த அவலத்தை உணர்ந்த மது, அதிர்ந்துபோனாள். 'நத் உத்தார்னா' வைபவத்துக்கு உடன்பட மறுத்தாள்.

பாலியல் தொழிலாளர்கள் வாழ்க்கையில் 'நத் உத்தார்னா' என்பது முக்கியமான சடங்கு. அந்த இடத்துக்கு வருவதற்கு முன்பு அவர்களது கன்னித்தன்மை பறிபோயிருக்கலாம் அல்லது வெர்ஜினாகவே இருக்கலாம். அதைக் குறித்து காமாத்திபுரா கவலைப்படாது.

ஆனால், தங்கள் பகுதிக்கு வந்ததும் முதல் வாடிக்கையாளருடன் அந்தப் பெண் தனி அறைக்கு செல்வது முக்கியம். இந்த 'முதல்'தான் அதிகாரப்பூர்வமாக அவள் பாலியல் தொழிலாளியாக மாறுகிறாள் என்பதற்கு அடையாளம். இதைத்தான் 'நத் உத்தார்னா' என்பார்கள். ஒருவகையில் 'முதலிரவு' சடங்குடன் இதை ஒப்பிடலாம்.

இந்த 'நத் உத்தார்னா' வைபவம் ஏல முறையில்தான் நடக்கும். வாடிக்கையாளர்களுக்கு இப்படியொரு 'புது சரக்கு' வந்திருப்பதாக செய்தி போகும். யார் முதலில் அனுபவிப்பது என்பதற்கு போட்டி எழும். இதைப் பயன்படுத்திக்கொண்டு ஏலம் விடுவார்கள். அதிக தொகை கொடுப்பவரே அன்றைய 'நத் உத்தார்னா'வின் நாயகன்.

ஆனால், ஒருபோதும் இந்த சடங்குக்கு உடன்படும் பெண்ணை

பலாத்காரம் செய்ய மாட்டார்கள். அதற்கு முன்பே 'கார்வாலி'யும், 'படே கார்வாலி'யும் அடி, உதை, பட்டினி என சித்தரவதை செய்து அந்தப் பெண்ணை 'தயார்' செய்திருப்பார்கள். மனதளவில் பலவீனப்படுத்தி அவளது தன்னம்பிக்கையை சிதறடித்திருப்பார்கள். இதுதான் காமாத்திபுராவின் நடைமுறை.

இதற்கு அடிபணியத்தான் மது மறுத்தாள். அடித்தார்கள். உதைத்தார்கள். நிர்வாணப்படுத்தி அடைத்து வைத்தார்கள். பட்டினி போட்டார்கள்.

சூடு வைத்தார்கள். ம்ஹூம். எதற்கும் மது அசையவில்லை.

திரும்பத் திரும்ப சொந்த ஊருக்கு செல்வதாக புலம்பினாள்.

இந்த விஷயம் கங்குவின் காதுகளுக்கு சென்றது. சம்பந்தப்பட்ட கார்வாலிக்கு உதவும்படி உத்தரவு வந்தது. உடனே மதுவை சந்திக்க கங்கு சென்றாள்.

இருட்டு அறையில் மதுவை பார்த்ததுமே கங்குவுக்கு பழைய நினைவுகள் வந்தது. பெருமூச்சுடன் அவள் முன்னால் அமர்ந்தாள்.

"ஏன் முரண்டு பிடிக்கிற? பேசாம சொல்றதை கேளு..."

"முடியாது. இந்தத் தொழிலை செய்ய மாட்டேன்..."

"வேறென்ன செய்யப் போற?"

"சொந்த ஊருக்கு போகப் போறேன்..."

"அங்க யார் இருக்காங்க?"

"என் அப்பா, அம்மா, அண்ணன்கள்..."

"அவங்க எல்லாம் உன்னை ஏத்துப்பாங்களா?"

"நிச்சயம் ஏத்துப்பாங்க. என் மேல அவங்களுக்கு பாசம் அதிகம்..."

"பாசமா? முட்டாள். எப்ப நீ எவன் கூடயோ வீட்டை விட்டு ஓடி வந்தியோ அப்பவே அவங்க மானம், மரியாதை போய் ஊர் முன்னாடி தலைகுனிஞ்சு நின்னிருப்பாங்க. உன்னையும் கை கழுவியிருப்பாங்க..."

"எங்கப்பா, அம்மா அப்படி செய்ய மாட்டாங்க. அவங்களுக்கு என் மேல அன்பு அதிகம்..."

"பைத்தியக்காரி. உன் வயசுலதான் நானும் இந்த இடத்துக்கு வந்தேன். ஒரு பொறம்போக்குதான் என்னையும் ஏமாத்தினான். அப்ப ஒரு பொண்ணு உன்னை மாதிரியேதான் முரண்டு பிடிச்சா. எப்படியோ தப்பிச்சு ஊருக்கு போனா. அதுக்குப் பிறகு என்ன நடந்தது தெரியுமா?"

கண் கொட்டாமல் பார்த்தாள் மது. அவள் முன்னால் குனிந்தபடி கங்கு தொடர்ந்தாள்.

"காதும் காதும் வைச்சா மாதிரி அந்தப் பொண்ணை பெத்தவங்களே கொன்னு புதைச்சுட்டாங்க. கவுரவ கொலை. இதுதான் யதார்த்தம்..."

“பரவால நானும் அப்படியே சாகறேன்...”

“மது...”

“கத்தாதீங்க. இப்படியொரு தொழிலை செஞ்சு வாழறதை விட சாகறது மேல். இப்பவே சாப்பிடாம பாதி செத்துட்டேன். இன்னும் கொஞ்ச நாள்தான். முழுசாவே இறந்துடுவேன்...” என்றபடி முகத்தை திருப்பிக்கொண்டாள்.

சற்று நேரம் அங்கு அமைதி நிலவியது. கங்கு மவுனமாக அவளையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

“அப்ப உங்க வீட்ல உன்னை ஏத்துப்பாங்கன்னு நம்பறியா?”

“ஆமா...”

“ஒருவேளை ஏத்துக்கலைனா...”

“இந்த பரந்த உலகத்துல வேற எங்கயாவது போவேன். ஏதாவது வேலை செஞ்சு பிழைச்சுப்பேன். ஆனா, சத்தியமா உடம்பை வித்து மட்டும் வாழமாட்டேன்...” மதுவின் குரலில் உறுதி தெரிந்தது.

சட்டென்று கங்கு எழுந்தாள். கதவைத் திறந்தாள். “மதுவோட துணி எங்க இருக்கு?”

வாசலில் நின்றிருந்த கார்வாலி துணியை எடுத்து கொடுத்தாள். அதை வாங்கியவள், “இந்தா போட்டுக்க...” என்று மதுவிடம் கொடுத்தாள்.

“அப்ப ‘நத் உத்தார்னா’வுக்கு ஏற்பாடு செஞ்சுடலாமா?” கார்வாலியின் குரலில் ஆவல் தெரிந்தது.

“இப்போதைக்கு வேண்டாம். கதவு திறந்தே இருக்கட்டும். மது மேல ஒரு கண்ணை வை. நான் கொஞ்சம் வெளில போயிட்டு வரேன்...”

வெளியேறிய கங்கு நேராக கரீம் லாலா வீட்டுக்குச் சென்றாள். அவளைப் பார்த்ததும் அடியாட்கள் மரியாதையுடன் ஒதுங்கிக் கொண்டார்கள்.

“சொல்லு கங்கு. ஏதாவது பிரச்னையா?” கரீம்லாலாவின் குரலில் அன்பு வழிந்தது.

“நீங்க இருக்கிறப்ப யார் வாலாட்டுவாங்க? அதெல்லாம் ஒண்ணுமில்ல பாய். எனக்கொரு உதவி வேணும்...”

“என்ன...”

“உங்க ஆட்கள்ல நம்பகமான ரெண்டு பேர் வேணும்...”

“எதுக்கு?”

“ஒரு கிராமத்துக்கு போயிட்டு வரணும்...”

“புரியல...”

“புதுசா ஒரு பொண்ணு வந்திருக்கா. அவளுக்கு தொழில் செய்ய விருப்பமில்ல. சொந்த ஊர் போக விரும்பறா. பத்திரமா அவளை கூட்டிட்டுப் போய் விடணும். அதுக்குத்தான் கேட்கறேன்...”

“அவசியம் இதை செய்யணுமா கங்கு?”

“ஆமா பாய். உடம்பை வித்து பிழைக்கறதும் ஒரு தொழில்தான். அது நல்லதா, கெட்டதான்னு கேட்டா சொல்லத் தெரியல. ஆனா, விருப்பமில்லாம ஒரு பெண்ணை இதுல ஈடுபடுத்தறது தப்பில்லையா? வேற தொழில் செஞ்சு பிழைச்சுக்க விரும்பறா. அதை ஏன் நாம தடுக்கணும்..?”

கண் கலங்க கேட்ட கங்குவை நோக்கி நடந்து வந்த கரீம் லாலா, அவளது உச்சந்தலையை ஆதரவுடன் தடவினார். “உன்னைப் பார்த்தா பெருமையா இருக்கு. விருப்பம் போல செய்...”

சொன்னதுடன் நிற்காமல் இரு அடியாட்களையும் அவளுடன் அனுப்பி வைத்தார்.

அவர்களுடன் மது இருந்த இடத்துக்கு வந்த கங்கு, தன்னிடம் இருந்த பணத்தை எடுத்துக் கொடுத்தாள்.

“இவங்க ரெண்டு பேரும் உன் கூட வருவாங்க. ஒருவேளை உங்க வீட்ல உன்னை ஏத்துக்கலைனா வேற ஊருக்கு போ. இந்தப் பணத்தை வைச்சு வேற தொழில் செஞ்சு பிழைச்சுக்க. அப்படியும் முடியலைனா நேரா இங்க வா. ஒரு மூலைல இருந்துக்க. மூணு வேளையும் உனக்கு நான் சோறு போடறேன். பயப்படாத. ‘தொழில்’ செய்யச் சொல்லி உன்னை எப்பவும் வற்புறுத்த மாட்டேன். ஆனா, சாகணும்னு மட்டும் நினைக்காத. போயிட்டு வா...”

அனுப்பி வைத்தாள்.

காமாத்திபுராவே ஆச்சர்யத்துடன் இதை பார்த்தது. அது மட்டுமல்ல, இன்று வரை நெகிழ்ச்சியுடன் பேசியும் வருகிறது.

இந்த நிகழ்ச்சிக்கு பிறகுதான் வெறும் கங்கு, ‘கங்கு பாய்’ ஆனாள். தப்பு. இனி ‘ள்’ இல்லை. ‘ர்’தான். ஆனார்.

மது என்று இல்லை. உயிருடன், தான் வாழ்ந்த வரையில், ‘கார்வாலி’யில் இருந்து ‘படே கார்வாலி’யாக உயர்ந்து பதினேழு ஆண்டுகள் காமாத்திபுராவின் மகாராணியாக வாழ்ந்த வரையில்...

எந்தப் பெண்ணையும் வலுக்கட்டாயமாக தொழிலில் அவர் ஈடுபடுத்தியதில்லை. சொந்த ஊர் திரும்ப நினைத்தவர்களை தகுந்த பாதுகாப்புடன் அனுப்பி வைத்தார். வேறு தொழில் செய்து பிழைக்க விரும்பியவர்களுக்கு பணம் கொடுத்து உதவினார்.

அது மட்டுமா?

முதல் முறையாக காமாத்திபுராவில் இருக்கும் பெண்களுக்கு மருத்துவ சிகிச்சைக்கு ஏற்பாடு செய்தார். தன்னார்வத் தொண்டு நிறுவன உதவியுடன் வாரம்தோறும் மருத்துவ முகாம் நடத்தினார். பாலியல் நோயால் பாதிக்கப்பட்ட பெண்களுக்கு தகுந்த சிகிச்சை அளித்தார். பாலியல் தொழிலாளர்களுக்கு பிறந்த பிள்ளைகளுக்கு என்றே ஒரு பள்ளியை ஆரம்பித்தார். படிக்க வைத்தார். ஓய்வு பெற்ற பாலியல் தொழிலாளர்களுக்கு கூடை பின்ன கற்றுக் கொடுத்தார். தெய்வம்.

இப்படித்தான் அன்றும், இன்றும் அந்தப் பகுதியே அவரை கொண்டாடுகிறது. இப்போதும் காமாத்திபுராவில் இருக்கும் அனைத்து அறைகளிலும் கங்குபாயின் புகைப்படம் இருக்கிறது. அங்கிருக்கும் பெண்கள் தினமும் அவரது படத்துக்கு பூ வைக்கிறார்கள். பொட்டு வைத்து அலங்கரிக்கிறார்கள். தொழில் செய்வதற்கு முன்பு வணங்குகிறார்கள்.

ஏனெனில், இழிதொழில் செய்பவர்களாகத்தான் சமூகம் அவர்களை பார்க்கிறது. ஆனால், அவர்களுக்கும் சுயமரியாதை உண்டு. சுயகவுரவம் உண்டு என்பதை உணர்ந்தவரும், உணர்த்தியவரும் கங்குபாய்தான். அவர்களது பிள்ளைகளை வளர்த்து ஆளாக்கியதோடு, அவர்களது ஆரோக்கியத்திலும் முழுக் கவனம் செலுத்தியது அவர் மட்டும்தான்.

எனவேதான் அந்த சிவப்பு விளக்கு பகுதியின் கண்கண்ட கடவுளாக கங்குபாய் திகழ்கிறார்.

அவரது அருமை பெருமைகளைப் பற்றி அப்போது இந்தியாவின் பிரதமராக இருந்த ஜவஹர்லால் நேரு கேள்விப்பட்டார். சந்திக்க விரும்புவதாக தகவல் அனுப்பினார்.

இந்தியாவே அதிர்ந்து குலுங்கியது. காரணம், இந்தியாவின் உயர்ந்த பொறுப்பில் இருக்கும் ஒருவர் முதல் முறையாக ஒரு பாலியல் தொழிலாளியை சந்தித்தது அப்போதுதான்.

# 22

கங்குபாயை இந்தியப் பிரதமர் ஜவஹர்லால் நேரு சந்தித்து விருந்து கொடுத்தது எப்படி தலைப்புச் செய்தியானதோ அப்படித்தான் பொதுக்கூட்டம் ஒன்றில் அவர் பேசியதும் நாடு முழுக்க மிகப்பெரிய அதிர்வலையை ஏற்படுத்தியது.

அந்த பொதுக்கூட்டம் நடந்தது 1960களின் தொடக்கத்தில். அன்றைய இந்தியப் பெண்களின் நிலை குறித்து ஆராய்வதற்காக தன்னார்வத் தொண்டு நிறுவனம் ஒன்று அந்தக் கூட்டத்துக்கு தேசிய அளவில் ஏற்பாடு செய்திருந்தது. அனைத்து மாநிலங்களை சேர்ந்த பேராசிரியர்களும், சமூக ஆய்வாளர்களும் சிறப்புரை நிகழ்த்துவதற்காக அழைக்கப்பட்டிருந்தார்கள்.

கூடவே கங்குபாய் பேசுவதற்கும் வாய்ப்பு வழங்கியிருந்தார்கள்.

அதுதான் சர்ச்சையையும் ஏற்படுத்தியது. ‘காமாத்திபுராவை சேர்ந்த ஒரு பெண்ணை எப்படி இந்த முக்கியமான கூட்டத்துக்கு அழைக்கலாம்’ என்ற முணுமுணுப்பு பரவலாக எழுந்தது. நாளிதழ்கள் இது தொடர்பாக தலையங்கங்கள் எழுதின. மக்கள் கருத்தை வெளியிட்டன.

இதையெல்லாம் கங்குபாயும் படித்தார். மனம் வலித்தபோதும் அந்தக் கூட்டத்தில் பேசுவதிலிருந்து அவர் பின்வாங்கவில்லை.

கூட்ட நாளன்று அதிகாலையிலேயே எழுந்தார். குளித்து முடித்தார். வெள்ளை நிற புடவையையும் வெள்ளை ஜாக்கெட்டையும் அணிந்தார். நிதானமாக நிகழ்ச்சி நடைபெறும் இடத்துக்கு வந்து சேர்ந்தார்.

அவரை பார்த்ததும் அங்கிருந்தவர்களின் புருவங்கள் உயர்ந்தன. கூட்டத்துக்கு ஏற்பாடு செய்திருந்த தன்னார்வத் தொண்டு நிறுவனத்தினர் மட்டுமே புன்னகையுடன் அவரை வரவேற்றார்கள். இருக்கையில் அமர வைத்தார்கள்.

நேரம் செல்லச்செல்ல கங்குபாய்க்கு பதற்றம் அதிகரித்தது. எவ்வளவு ஏளனமாக தன்னை பார்க்கிறார்கள் என்பதை உணர உணர உடலெங்கும் கம்பளி பூச்சிகள் ஊர்ந்தன. குமட்டல் எடுத்தது. பேசாமல் ஓடிவிடலாமா என்றுகூட ஒரு கணம் தோன்றியது.

ஆனால், அப்படி செய்யக்கூடாது. அது ஒட்டுமொத்தமாக பாலியல் தொழிலாளர்களையும் கேவலப்படுத்தியது போல் ஆகிவிடும். எனவே கால் கட்டைவிரலை அழுத்தமாக ஊன்றி தன் படபடப்பை குறைத்தார். நீண்ட மூச்சுகளால் தன்னை நிதானப்படுத்திக்கொண்டார். மற்றவர்கள் பேசுவதை செவி கொடுத்து கேட்டார்.

“இப்போது காமாத்திபுராவின் மகாராணி உரை நிகழ்த்துவார்...” என ஒலிபெருக்கியில் அறிவித்தார்கள்.

கால்கள் நடுங்க எழுந்தார். தன் முதுகுக்கு பின்னால் எழுந்த சலசலப்பை உணர்ந்தபடியே மேடை நோக்கி நகர்ந்தார். முன்பை விட கால்கள் நடுங்கின. நல்லவேளையாக சேலை அதை மறைத்திருந்தது. உதடுகள் துடிக்க, நாசி அதிர வலதுகாலை எடுத்து வைத்து மேடை மீது ஏறினார். மைக் முன்னால் நின்றபோது அவர் முன்னால் கத்தியவாடு கிராமம்தான் விரிந்தது. குஜராத்திலுள்ள குக்கிராமம். சிறு வயதில் அவர் ஓடியாடி விளையாடிய இடம். சினிமா கனவை விதைத்த நிலம். ராம்நாயக் என்னும் அரக்கனை காதலிக்க காரணமாக இருந்த க்ஷேத்திரம். அப்பா, அம்மா, உடன் பிறந்தவர்கள், ஊர் மக்கள்...

"இங்கு குழுமியிருக்கும் சகோதர, சகோதரிகளுக்கு அன்பு வணக்கம்..." எவ்வித பதற்றமும் இன்றி கணீரென்று பேச ஆரம்பித்தார்.

"உங்கள் மனதில் என்ன ஓடுகிறது என்று எனக்குத் தெரியும். நான் பாலியல் தொழிலாளிதான். உடம்பை விற்றுப் பிழைப்பவள்தான். இந்த சமூகத்தை அழிக்கும் நச்சுப் பாம்புதான். இந்தியாவுக்கே அவமானத்தை தேடித்தரும் காமாத்திபுராவில் வசிக்கும் மகாராணிதான். மெத்தப் படித்தவர்கள் அமர்ந்திருக்கும் இந்த சபையில் பேச எனக்கு எந்த அருகதையும் இல்லை. ஆம்... நான் அவமானச் சின்னம்தான்..."

சட்டென்று கூட்டம் அமைதியானது. கங்குபாய் பேசுவதை உற்றுக் கவனிக்க ஆரம்பித்தது. பார்வையால் ஒரு கணம் அனைவரையும் அளந்துவிட்டு தொடர்ந்தார்.

"ஆனால், ஏன் பாலியல் தொழிலாளர்கள் உருவானார்கள் என்று எப்பொழுதேனும் யோசித்திருக்கிறீர்களா? எங்களுக்கு மட்டும் உங்களைப் போல் படித்து பேராசிரியர்களாகவும், ஆய்வாளர்களாகவும் ஆக வேண்டும் என்று ஆசை இல்லையா என்ன? இருக்கிறது. ஆனால், அது கைகூடவில்லை. காரணம், இந்த சமூகம். உங்களை அறிவாளிகளாக உருவாக்கிய அதே சமுதாயம்தான் எங்களையும் உருவாக்கியிருக்கிறது என்பதை ஒருபோதும் மறக்காதீர்கள்.

எந்தப் பெண்ணும் விருப்பப்பட்டு பாலியல் தொழில் செய்வதில்லை. செய்யவும் முடியாது. ஏதோ ஓர் ஆணால் - அது அப்பாவாகவோ, அண்ணனாகவோ, கணவனாகவோ அல்லது காதலனாகவோ இருக்கலாம் - ஏமாற்றப்பட்டுத்தான் காமாத்திபுராவுக்கு வந்து சேர்கிறாள். அதன் பிறகு அவளுக்கு வேறு வாய்ப்பு வழங்கப்படுவதில்லை. அந்த சாக்கடையில் உழல வேண்டும் என்றுதான் கட்டாயப்படுத்துகிறார்கள். முடியாது என்று ஊர் திரும்புபவர்களை அள்ளி அரவணைக்க, ஆதரவு தர எத்தனை பேர் தயாராக இருக்கிறீர்கள்? இதெல்லாம் உங்களுக்கு அவமானமாக தெரியாதபோது நாங்கள் மட்டும் ஏன் எங்களை

சமூகத்தை அழிக்கும் நச்சுப் பாம்பாக உணர வேண்டும்? விஷத்தை கக்குபவர்கள் குடும்பப் பெண்களாக வாழும் நீங்கள்தானே?

ஒரு நாளைக்கு குறைந்தது ஏழு அல்லது எட்டு ஆண்களை நாங்கள் திருப்திப்படுத்த வேண்டும். முடியும் என்றா நினைக்கிறீர்கள்? காதலுடன் எந்த ஆணும் எங்களை அணைப்பதில்லை. தனது வக்கிரத்தை தீர்த்துக்கொள்ளத்தான் எங்களைத் தேடி வருகிறான். அடி, உதைகள் எங்களுக்கு சகஜம். உங்களுக்கு இருக்கும் அதே உடல், எலும்புகள்தான் எங்களுக்கும் இருக்கின்றன. ஆனால், உங்களைப் போல் எங்களால் மறுக்க முடியாது. மறுத்தால் ஒருவேளை உணவு கூட கிடைக்காது.

உங்களைப் போலவே எங்களுக்கும் குடும்பம் இருக்கிறது. நாங்களும் தாய்மார்கள்தான். பிறந்த குழந்தையை வளர்த்து ஆளாக்கும் பொறுப்பு எங்களுக்கும் இருக்கிறது. அதற்காகத்தான் இவ்வளவு இழிவையும் சகித்துக்கொள்ள வேண்டியிருக்கிறது.

இந்தியாவுக்கே அவமானத்தை தேடித் தருகிறது என காமாத்திபுராவைகேவலமாகபேசுகிறீர்களே... உங்களிடம்ஒரேயொரு கேள்வி. பம்பாய் தெருக்களில் எந்த பெண்ணாவது ஆண்களால் பலாத்காரம் செய்யப்பட்டதாக கேள்விப்பட்டிருக்கிறீர்களா? அப்படியொரு சம்பவம் நடந்திருக்கிறதா?

இல்லை. இல்லவே இல்லை. ஏன்? காரணம், நாங்கள். காமாத்திபுராவில் வசிக்கும் நாங்கள்தான் பம்பாய் தெருக்களில் பெண்கள் சுதந்திரமாக நடமாட காரணம். தங்கள் வக்கிரத்தை தீர்த்துக்கொள்ள எங்களைத் தேடி ஆண்கள் வருவதால்தான் சாலையில் செல்லும் எந்தப் பெண்ணையும் அவர்கள் தொந்தரவு செய்வதில்லை. இப்படி பம்பாய் பெண்கள் அனைவரும் கற்புடன் வாழ காரணமாக இருக்கும் காமாத்திபுராவையா இந்தியாவின் அவமானச் சின்னமாக கருதுகிறீர்கள்? உண்மையில் நாங்கள்தான் இந்த தேசத்தின் பெருமைக்குரிய ஆத்மாக்கள்.

இந்த உண்மையை முதலில் புரிந்து கொள்ளுங்கள். கல்லூரிகளில், மருத்துவமனைகளில், பள்ளிகளில், அரசு அலுவலகங்களில் நீங்கள் பணிபுரிவது போல்தான் நாங்களும் வேலை பார்க்கிறோம். ஆம், உடம்பை விற்பதும் ஒரு தொழில்தான். எப்படி ஒரு சமூகத்துக்கு ஆசிரியர்கள், மருத்துவர்கள் தேவையோ அப்படி பாலியல் தொழிலாளர்களும் தேவை. இல்லாவிட்டால் நகர தெருக்களில் குற்றங்கள்தான் தலைவிரித்தாடும்.

எதிரிகள் நம் நாட்டில் ஊடுருவாமல் இருப்பதற்காக எல்லைகளில் ராணுவ வீரர்கள் காவல் காக்கிறார்கள். இரவு, பகல் பாராமல் வேலை செய்கிறார்கள். பனியிலும், மழையிலும், வெயிலிலும் நனைகிறார்கள். எதிரிகளின் துப்பாக்கிச் சூட்டுக்கு பலியாகிறார்கள். அவர்களது தியாகத்தை போற்றுகிறீர்கள்.

கொண்டாடுகிறீர்கள். உயரிய விருதெல்லாம் கொடுத்து கவுரவிக்கிறீர்கள்.

ஆனால், அவர்களுக்கு சமமாக உள்நாட்டில் வன்முறை வராமல் காவல் காக்கும், அரணாக நிற்கும், விழுப்புண்களை ஏற்கும் எங்களை உதாசீனப்படுத்துகிறீர்கள். காறி உமிழ்கிறீர்கள். இந்த இரட்டை வேடமும், நயவஞ்சக கபட நாடகமும் எதற்கு?

நீங்கள் படித்த கல்வியும், நீங்கள் கடைப்பிடிக்கும் பண்பாடும் இதைத்தான் உங்களுக்கு கற்றுத்தந்திருக்கிறது என்றால் அப்படிப்பட்ட கல்வியும், பண்பாடும் எங்களுக்கு தேவையே இல்லை.

ஒரு சமூகம் ஆரோக்கியமாக இயங்க வேண்டுமானால், பாலியல் தொழில் சட்டப்பூர்வமாக இயங்க வேண்டும். உரிய மரியாதை பாலியல் தொழிலாளர்களுக்கும் வழங்கப்பட வேண்டும்.

இந்த நிலை எப்போது ஏற்படுகிறதோ அப்போது எங்களுக்கான மரியாதை எங்களைத் தேடி வரும். அதுவரை நாங்கள் அவமானச் சின்னமாக, நச்சுப் பாம்பாகவே இருந்துவிட்டு போகிறோம்.

ஆனால், ஒன்றை மறக்காதீர்கள். உண்மையில் நீங்கள்தான் சமூகத்தின் அவமானச் சின்னமாக, நச்சுப் பாம்பாக இருக்கிறீர்கள். நெஞ்சை நிமிர்த்தி சொல்கிறேன் நான் காமாத்திபுரா பெண்தான். காமாத்திபுராவின் மகாராணிதான். நன்றி வணக்கம்...”

சொல்லிவிட்டு மேடையை விட்டு இறங்கினார். ஒரு நிமிடம் வரை அரங்கம் அமைதியாக இருந்தது. அதன் பிறகு அமர்ந்திருந்த அனைவரும் எழுந்து நின்று தட்டிய கைத்தட்டலில் மொத்த தேசமும் அதிர்ந்தது.

மிகைப்படுத்தல் எல்லாம் இல்லை. மறுநாள் அனைத்து நாளிதழ்களிலும் கங்குபாயின் உரைதான் முதல் பக்க செய்தி. நெஞ்சின் அடியாழத்திலிருந்து அவர் பேசிய பேச்சு, அனைவரையும் சுட்டது.

இந்த நிகழ்வுக்கு பிறகு கங்குபாய் வெள்ளைப்புடவை, ஜாக்கெட்தான் அணிந்தார். கரீம் லாலா எப்படி பக்கபலமாக இருந்தாரோ அப்படி காவல்துறையும் அவருக்கு துணையாக இருந்தது.சவுகத்கானால், தான் பட்ட வேதனையை மற்ற காமாத்திபுரா பெண்கள் ஒருபோதும் அனுபவிக்கக் கூடாது என்பதில் உறுதியாக இருந்தார்.

பெண்ணுடன் உறவு கொண்ட உரிய பணத்தை கொடுக்காமல் யாரும் செல்லக்கூடாது என்று கட்டளையிட்டார். அதுபோல் செல்லும் ஆண்கள், கட்டி வைத்து உதைக்கப்பட்டார்கள்.

சீர்திருத்தம். சீர்திருத்தம். சீர்திருத்தம். அவ்வளவுதான். மொத்த பாலியல் தொழிலாளர்களும் கங்கு பாயை தெய்வமாக தொழ ஆரம்பித்தார்கள்.

அதனால்தான் அவரை அழைத்து தனிப்பட்ட முறையில்

விருந்தளித்தார் இந்தியப் பிரதமர் நேரு. "எங்கள் தொழிலை சட்டப்பூர்வமாக்குங்கள். எங்கள் குழந்தைகள் படிக்க பள்ளியொன்றை கட்டிக் கொடுங்கள்..." என்ற இரு கோரிக்கைகளை வைத்தார்.

முதலாவது கோரிக்கையை நிராகரித்த நேரு, இரண்டாவதை உடனடியாக அமல்படுத்தினார். கங்குபாயின் கனவும் நிறைவேறியது.

இன்று காமாத்திபுராவில் இயங்கும் பள்ளி, அவரால் வந்ததுதான்.

இந்த மகத்தான பெண்மணிக்கு ஒரு சல்யூட்.

இதோ தாவூத் இப்ராஹிம் வளர ஆரம்பித்து விட்டான். ஹாஜி மஸ்தானை கொல்ல வேண்டும் என்று துடித்துக் கொண்டிருக்கிறான். அவனது கையை பிடித்தபடி முதல் மாஃபியா ராணியான ஜெனா பாய் நடந்துகொண்டிருக்கிறார்.

அந்த ரத்த சரித்திரம்தான் இனி...

பம்பாயிலேயே அவருக்கு மட்டும்தான் அன்று இரண்டு பென்ஸ் கார்கள் இருந்தன.

"நல்லா எக்ஸர்ஸைஸ் செய்யறீங்க போலிருக்கு..."

கவிழ்த்த தலையை அவர்கள் நிமிர்த்தவேயில்லை.

"எதுக்கு இப்படி பயப்படறீங்க? சும்மா நிமிர்ந்து பாருங்க..."

பார்த்தார்கள். ஆறடி உயர வாட்டசாட்டமான மனிதரை... திரண்டு எழுந்த அவர் மார்பை... அவர்களையும் அறியாமல் கண்கள் கலங்கின.

"ச்சூ. எதுக்கு இப்ப அழறீங்க?"

பதிலில்லை. சொல்லும் நிலையில் அவர்களும் இல்லை.

"கார் பிடிச்சிருக்கா? பென்ஸ் கார். அதை உங்களுக்கே தரேன். எடுத்துக்குங்க. ஆனா, ஒரு போட்டில நீங்க என்னை ஜெயிக்கணும்..."

மூவருக்கும் நாக்கு உள்ளிழுத்துக்கொண்டது. யாருடன் யார் போட்டியிடுவது? இதற்கு பேசாமல் தலைகீழாக தொங்கவிட்டு முதுகுத் தோலை உரித்துவிடலாமே...

"முந்நூறு தண்டால். அதுவும் ஏக் தம்முல எடுக்கணும். கேப்பே விடக் கூடாது. இந்த இலக்கை நான் முதல்ல தொட்டேனா நீங்க தோத்துட்டதா அர்த்தம். என்ன சொல்றீங்க?"

மறுக்கவா முடியும்? முடியாது என்று சொல்லும் நிலையிலா அவர்கள் இருக்கிறார்கள்?

உதட்டை கடித்தபடி தலையசைத்தார்கள். இந்த பந்தயத்தில் அவர்களால் ஜெயிக்க முடியாது. வெற்றி பெறவும் கூடாது. எப்போதுமே தெய்வம்தான் கோப்பையை வெல்லும். வெல்ல வேண்டும். தோற்றாலும் பிரச்னை. வென்றாலும் சிக்கல். ஆப்பு தேடி வரவில்லை. ஓரமாக இருந்ததை எடுத்து சொருகிக் கொண்டிருக்கிறோம். தலையெழுத்து. சாலையில் அப்படியா ஆர்ப்பாட்டமாக நடக்க வேண்டும்?

"ஆரம்பிக்கலாமா? பொசிஷனுக்கு வாங்க..."

கட்டளை பிறந்தது.

சட்டையை கழற்றிவிட்டு கைகளை தரையில் ஊன்றினார்கள்.

"ஒன்... டூ... த்ரீ..."

போட்டி ஆரம்பமானது. ஐம்பதுக்கு மேல் மூவராலும் தாக்குப் பிடிக்க முடியவில்லை. வாய் வழியாக மூச்சு விட்டவர்கள் நாக்குத் தள்ளி கீழே விழுந்தார்கள்.

ஆனால் – அந்த பென்ஸ் காருக்கு சொந்தக்காரர் நிறுத்தவேயில்லை. சீரான வேகத்துடன் ஓய்வே எடுக்காமல் தொடர்ந்து தண்டால் எடுத்தார். முந்நூறை கடந்து நானூறை தொட்டு...

ம்ஹூம். விடவில்லை. தொடர்ந்து எடுத்தார். வியர்வையில் மார்பகங்கள் பளபளத்தன. ஐந்நூறு முடிந்த பிறகே எழுந்தார். மூச்சு வாங்க தரையில் மல்லாந்து படுத்திருந்தவர்களை பார்த்தார்.

“எழுந்திருங்க...” எழுந்தார்கள்.

பளீரென்று மூவருக்கும் அறை விழுந்தது. கண் முன்னால் பூச்சி பறக்க மலங்க மலங்க விழித்தார்கள்.

“நாம உடம்பை வளர்க்கறது எதுக்கு தெரியுமா? போலீசை மிரட்ட. மக்கள் பார்த்து பயந்து ஓட இல்ல. நம்மை பார்த்தா அவங்களுக்கு மரியாதைத்தான் வரணும். கையெடுத்து கும்பிடணும். ‘இவங்க நாசமா போகணும்’னு என்னிக்கி அவங்க நினைக்கறாங்களோ அன்னிக்கி நம்ம பிசினஸ் காலி. நாமளும் செத்தோம். புரிஞ்சுதா?”

தலையசைத்தார்கள்.

“இன்னொரு முறை ரோட்ல உடம்பை காட்டிட்டு தெனாவட்டா நீங்க போகறதை பார்த்தேன்... அங்கயே கொன்னுடுவேன். போங்க...”

கர்ஜித்தார். தலைதெறிக்க மூவரும் வெளியே வந்தார்கள்.

இதுதான் அந்த பென்ஸ் காருக்கு சொந்தமானவரின் இயல்பு. பெயர் அஹமத்கான் என்கிற பாஷு என்கிற பாஷு தாதா.

இப்படித்தான் அழைக்கவேண்டும். ‘பாஷு தாதா’. அப்படித்தான் அழைக்கவும் பட்டார். உடற்பயிற்சி செய்வது அவருக்கு பிடிக்கும். காலை, மதியம், மாலை, இரவு என நேரம் காலம் பார்க்காமல் தண்டால் எடுப்பார். ஜீன்ஸ் பேன்ட். அரைக்கை சட்டை. இதுதான் அவரது டிரெஸ் கோட். அவர் முழுக்கை சட்டை அணிந்து யாருமே பார்த்ததில்லை. பார்க்கவும் முடியாது. தன் கைகளில் பிதுங்கும் ஆம்ஸை காட்ட அவருக்கு பிடிக்கும். எனவே, இறுக்கமாகத்தான் சட்டை அணிவார். உள்ளே பனியன் இருக்காது. முதல் இரண்டு பட்டன்கள் எப்போதும் திறந்திருக்கும். புலி நகத்தாலான தங்கச் செயின் இரு பக்க மார்புகளுக்கு இடையில் புரளும்.

சுதந்திரத்துக்குப் பிறகு பஞ்சம் பிழைக்க பம்பாய் வந்தவர்களில் பாஷு தாதாவும் ஒருவர். சொந்த ஊர் எதுவென்று யாருக்கும் தெரியாது. தெற்கு பம்பாயின் நல் பஜார், கேட்வாடி, கிராண்ட் ரோட் பகுதிகளில் 1950களின் இறுதியில் இருந்தவர்கள் நிச்சயம் ஒரு சிறுவனை பார்த்திருக்கலாம். எந்த வேலை கொடுத்தாலும் அதை செய்துகொண்டு தன் வயிற்றை நிரப்பிக்கொண்டிருந்த அந்த சிறுவன்தான் பின்னாளில் கடத்தல் மன்னராக, பாஷு தாதாவாக உருவெடுத்தார்.

இந்த வரலாற்றை அவசியம் நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனெனில் பாஷு தாதாவும் தங்கத்தைதான் கடத்தினார்.

ஆனால் - ஹாஜிமஸ்தானுக்கு இல்லாத ஒரு சிறப்பு பாஷு தாதாவுக்கு உண்டு. அதுதான் உடல் பலம். ஹாஜிமஸ்தான் தன் கடத்தல் தொழிலுக்கு பாதுகாப்பு தர வரதராஜ முதலியாரையும் கரீம்லாலாவையும் அணுகினார்.

ஆனால், பாஷு தாதா, தன் கடத்தல் தொழிலுக்கு தானே

பாதுகாப்பு அரணாக திகழ்ந்தார்.

அதனால்தான் தொங்கிரியின் அசைக்க முடியாத சக்தியாக உருவெடுத்தார். அவரது சாம்ராஜ்ஜியத்தை அழிக்கத்தான் இப்ராஹிம் கஸ்கர் என்னும் ஹெட் கான்ஸ்டபிள் முயன்றார். அதனால் விளைந்த விபரீதம்தான் பம்பாயின் ரத்த சரித்திரமாக உருவெடுத்தது.

காரணம், இப்ராஹிம் கஸ்கரின் மகனாக தாவூத் இப்ராஹிம் பிறந்ததுதான். வாருங்கள். பாஷு தாதாவின் வரலாற்றை தெரிந்து கொள்வோம்.

24

ஆயிரத்தில் ஒருவன். அஹமத்கானை அப்படித்தான் சொல்ல வேண்டும். பஞ்சம் பிழைக்க 1950களின் இறுதியில் இந்தியாவின் பல பகுதிகளில் இருந்தும் ஆயிரக்கணக்கானவர்கள் பம்பாய் மாகாணத்துக்கு வந்து சேர்ந்தார்கள்.

அவர்களில் அஹமத்கானும் ஒருவன். அநேகமாக அப்போது அவனுக்கு வயது பன்னிரண்டு இருக்கலாம். வந்தாரை வாழ வைக்கும் பம்பாய், அவனையும் வரவேற்றது, அரவணைத்தது. ஆனால், சோறு கிடைக்கத்தான் படாதபாடு பட வேண்டியிருந்தது. டீ கடையில் க்ளாஸ் கழுவினான். டிபன் கடையில் எச்சில் இலையை எடுத்தான். அப்படியும் பசியுடன்தான் தினமும் படுக்கையில் விழுந்தான்.

நள்ளிரவில் விழிப்புத் தட்டும். பசி குடலை தின்னும். குவளை குவளையாக தண்ணீரை குடிப்பான். வானத்தில் இருக்கும் நட்சத்திரங்களை எண்ணுவான். பசி மயக்கம் உறக்கத்துக்கும் விழிப்புக்கும் இடையில் அவனை பந்தாடும். தெருவோரக் கடைகளில் சுடப்படும் சப்பாத்திகளில் ஒன்றை கூட முழுமையாக எந்த வேளையும் அவன் உண்டதில்லை. கிடைக்கும் வருவாய் அதற்கு வழிவகுக்கவும் இல்லை.

அந்த நாட்களில் சைக்கிள்தான் பெரும்பாலானவர்களின் வாகனம். எனவே பஞ்சர் போடவும், காற்று அடிக்கவும், ஓவர் ஆயில் செய்யவும், செயினை டைட் பண்ணவும் தெரு எங்கும் பல கடைகள் முளைத்திருந்தன. அவற்றில் ஒன்றில் வேலைக்கு சேர்ந்தான். சைக்கிள் மெக்கானிக்கை கசடற கற்றான். ஆனால், இந்தக் கல்வியும் அவனது பசி மயக்கத்தை போக்கவில்லை.

ஒருநாள் கால்கள் துவள ஷாலிமார் டாக்கீஸ் பக்கமாக நடந்து கொண்டிருந்தான். அப்போதுதான் அந்த மார்வாடிப் பெண்ணை பார்த்தான். அவள் கையில் தோலினாலான ஒரு பை இருந்தது. அதற்குள் நிச்சயம் பணம் இருக்கும் என்று ஊகித்தான். வயிறு காலியாக இருந்தது.

எனவே, திருடுவது என்று முடிவு செய்து சுற்றிலும் பார்த்தான். ஆட்கள் நடமாட்டம் இருந்தது. ஆனால், மற்றவர்களை குறித்து கவலைப்படும் நிலையில் எந்த நேர்மையாளனும் அங்கில்லை. இதுதான் சரியான சந்தர்ப்பம்.

மெல்ல அந்த மார்வாடி பெண்ணின் அருகில் சென்றான். எதிர்பாராத தருணத்தில் அவளது ஹேண்ட் பேக்கை இழுத்தான். கையோடு வந்தது. அவ்வளவுதான். தலைதெறிக்க ஓடினான்.

“திருடன்... திருடன்...” என்று அவள் கூச்சலிட்டாள். பல கால்கள் அவனை துரத்த ஆரம்பித்தன. ஆனால், யாராலும் அவனை

நெருங்க முடியவில்லை. அவன் கண் முன்னால் சாலைகளோ, கட்டிடங்களோ, மனிதர்களோ தெரியவேயில்லை. சுடச்சுட அடுக்கி வைக்கப்பட்டிருந்த சப்பாத்திகள்தான் சின்னதும் பெரியதுமாக அவன் முன் விரிந்தன. அதுதான் ஓடும் வலுவையும் அவனுக்கு கொடுத்தன.

ஆனால் - நல் பஜார் பக்கம் வசமாக சிக்கிக்கொண்டான். அதுவும் அவனைப் பிடித்தது அந்தப் பகுதியின் கான்ஸ்டபிள். ஓங்கி அவர் அறைந்த அறையில் சுருண்டு விழுந்தான்.

அதற்குள் அவனை துரத்தி வந்த மார்வாடிப் பெண்ணும், மற்றவர்களும் அந்த இடத்தை நெருங்கிவிட்டார்கள். அவனிடம் இருந்த ஹேண்ட்பேக்கை பிடுங்கி அந்தப் பெண்ணிடம் கொடுத்தார்கள். பையை திறந்து சரிபார்த்தாள். உள்ளே கட்டுக் கட்டாய் பணம் இருந்தது. கண்கள் வெறிக்க அதை அஹமத்கான் பார்த்துக் கொண்டிருந்தான்.

அவள் எண்ணிக்கொண்டிருந்தது பணத்தை அல்ல. அவன் சாப்பிட வேண்டும் என்று விரும்பிய சப்பாத்திகளை...

பணம் சரியாக இருப்பதாக சொன்ன அந்த பெண், ஒரு நோட்டை எடுத்து அந்த கான்ஸ்டபிளிடம் புன்னகையுடன் கொடுத்துவிட்டு சென்றாள்.

பணம் இருந்தால் காவலர்களை வாங்கலாம் என்ற உண்மை அவனுக்கு புரிந்தது.

திருடிய குற்றத்துக்காக தொங்கிரியில் உள்ள ரிமாண்ட் ஹோமில் அவனை அடைத்தார்கள். அந்த சிறுவர் சீர்திருத்தப் பள்ளியில் அவனுக்கு கொடுக்கப்பட்ட பணி, தண்ணீர் தவலைகளை தூக்குவது.

ஆரம்பத்தில் இதை சாதாரணமாகத்தான் நினைத்தான். ஆனால், மூன்று சுற்றுகளுக்கு மேல் தண்ணீரை சுமக்க முடியவில்லை. பிணத்தை தூக்குவது போல் அது கனத்தது. இதற்காக இந்த வேலையை செய்ய முடியாது என்று அவனால் சொல்லவும் முடியாது. அப்படி முரண்டுபிடித்தால் உணவு கிடைக்காது. இருட்டு அறையில் அடைத்து பட்டினி போடுவார்கள்.

இதை சமாளிக்கத்தான், அதாவது, தண்ணீர் தவலைகளை தூக்கத்தான் அவன் உடற்பயிற்சி செய்ய ஆரம்பித்தான். தண்டாலை பழகியது அப்படித்தான். ஒரு கவளம் உணவுக்காக அவன் செய்ய ஆரம்பித்த பயிற்சி, ஒரு கட்டத்துக்கு பிறகு அவனது விருப்பத்துக்குரிய செயலாக மாறியது.

அழகான இளம் பெண்ணை விழுந்து விழுந்து காதலிப்பது போல் உடற்பயிற்சியை நேசிக்கத் தொடங்கினான். புடைத்த புஜங்களை பார்க்கப் பார்க்க அவனுக்கே அவன் மீது ஆசை பெருகியது. அதே நேரம் திமிரையும் கொடுத்தது.

ஒருமுறை குறைவான உணவை தனக்கு அளித்ததற்காக சிறையில் இருக்கும் சமையல்காரனிடம் சண்டைக்கு போனான். வாய்த் தகராறு முற்றி கைகலப்புக்கு சென்றது. ஆத்திரத்தில் சமையல்காரனை ஓங்கி அடித்துவிட்டான். பதிலுக்கு இரும்புக் கழியால் அவனை அடிக்க சமையல்காரன் பாய்ந்தான்.

அது எவ்வளவு பெரிய தவறு என்பதை அதன் பின்னர்தான் உணர்ந்தான்.

உடலும், மனமும் உறுதிப்பட்ட நிலையில் அந்த இரும்புக் கம்பியை பிடுங்கிய அஹமத்கான், அதை தன் இரு கைகளாலும் வளைத்து தூக்கி எறிந்தான்.

மிகைப்படுத்தப்பட்ட செய்தி எல்லாம் இல்லை. போலீஸ் ரிக்கார்டிலேயே இந்த சம்பவம் பதிவாகி இருக்கிறது.

மொத்த சிறையும் இதை வேடிக்கை பார்த்தது. தன் கண் முன்னால் நடந்த நிகழ்ச்சியை சமையல்காரனால் நம்பவும் முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை.

உடல் வலிமை எந்தளவுக்கு பயம் கலந்த மரியாதையை சக மனிதர்கள் மத்தியில் ஏற்படுத்தித் தரும் என்பதை கண்கூடாக பார்த்தான் அஹமத்கான்.

இதற்காக அவனுக்கு தண்டனை கிடைத்தது. விடுதலை ஆக வேண்டியவன், கூடுதலாக ஓராண்டு சிறைவாசம் அனுபவித்தான்.

ஆனால் – அதுதான் அவன் வாழ்க்கையை அடியோடு மாற்றியது. பலசாலியான அவனுடன் வேறு சில இளைஞர்கள் நெருங்கிப் பழக ஆரம்பித்தார்கள். பம்பாயில் எப்படி பிழைக்க வேண்டும் என்பதை அவனுக்கு கற்றுத் தந்தார்கள்.

வாழ்க்கையை முழுமையாக புரிந்துகொண்ட அஹமத், தனது பதினெட்டாவது வயதில் விடுதலையானான். இதற்குள் சிறையில் ஒரு குழுவை உருவாக்கி இருந்தான். அந்தக் குழுவுக்கு அவனே தலைவனாகவும் மாறியிருந்தான்.

சிறையை விட்டு வெளியே வந்தவர்கள், வேலை தேடி எங்கும் செல்லவில்லை. யாரிடமும் கைகட்டி வேலைப் பார்க்க அவர்களுக்கு விருப்பமில்லை.

அஹமத் கான் தலைமையில் ஒன்று திரண்ட அவர்கள் தனியாக களத்தில் இறங்கினார்கள்.

எலக்ட்ரானிக்ஸ் பொருட்களை திருடுவது. பம்பாய் துறைமுகத்தில் இருந்து எந்தெந்த லாரிகள், எந்தெந்த நேரங்களில் புறப்படுகின்றன, எந்தத் திசையில் பயணிக்கின்றன, எங்கு போய் சேர்கின்றன, செல்லும் வழி எது என்பதையெல்லாம் துல்லியமாக கணக்கிட்டார்கள்.

அந்த கணக்கை வைத்து அஹமத்கான் தன் ராஜ்ஜியத்தை உருவாக்கத் தொடங்கினான்.

மறைவான இடத்தில் நின்றுகொள்வார்கள். லாரி வரும்போது பாய்ந்து ஏறுவார்கள். அங்கிருக்கும் பொருட்களை அபகரிப்பார்கள்.

சமீபத்தில் வெளியான 'நெடுஞ்சாலை' படத்தில் இப்படி ஓடும் லாரியில் இருந்து பொருட்களை திருடுவதை காண்பித்திருப்பார்கள். இந்தியா முழுக்கவே 1960களில் இப்படிப்பட்ட திருட்டுகள் நடந்தன. இதற்கெல்லாம் பிள்ளையார் சுழி போட்டது அஹமத்கான்தான்.

இப்படி திருடிய பொருட்களை மொஹத்தா மார்க்கெட்டில் அஹமத் விற்றான். தன் வாழ்க்கையில் முதல் முறையாக ஆயிரக்கணக்கில் சம்பாதித்தான்.

கையில் பணம் சேர ஆரம்பித்ததும், தன் கனவை நினைவாக்கிக் கொண்டான். அதுதான் வயிறு நிறைய சாப்பிடுவது. கூடவே மலபார் ஹில்ஸில் ஒரு ப்ளாட்டையும், ஆடம்பரமான கார்களையும் வாங்கினான். சமூகத்தில் அவன் அந்தஸ்து உயர்ந்தது.

அஹமத்கான் மெல்ல மெல்ல டான் ஆகி பாஷு என்று அழைக்கப்பட்டு பாஷு தாதாவாக உருவெடுத்தான்.

என்றாலும் இரண்டு காரியங்களை மட்டும் அவர் - ஆம், இனி 'அவன்' என்று அழைக்க முடியாது. அப்படி ஒருமையில் அழைத்தால், மாஃபியாக்கள் கண்ணை குத்துவார்கள்! - நிறுத்தவேயில்லை.

ஒன்று உடற்பயிற்சி செய்வது. இரண்டாவது ஓடும் லாரியில் இருந்து பொருட்களை திருடுவது. இதனாலேயே 'dock rat' (துறைமுக எலி) என்ற செல்லப்பெயர் அவருக்கு கிடைத்தது.

எலெக்ட்ரானிக்ஸ் பொருட்களில் தொடங்கி தங்கக் கடத்தல் வரை படிப்படியாக பாஷு தாதா உயர்ந்தார். கிடைத்த பணத்தில் பம்பாயிலும், ஹைதராபாத்திலும் சொத்துகளை வாங்கிக் குவித்தார்.

கூடவே காவல்துறையை பழிவாங்கவும் அவர் தவறவில்லை. பசி மயக்கத்தில் அறியாமல், தான் திருடிய போது அவர்கள்தானே மிகப்பெரிய தண்டனையை கொடுத்தார்கள்? எனவே, அவர்களை கதற வைத்தார்.

இதற்காக அவர் கையாண்ட முறைதான் வித்தியாசமானது.

பணத்துக்காக காவலர்கள் என்ன வேண்டுமானாலும் செய்வார்கள் என்பதைத்தான் கண்ணுக்கு நேராக பார்த்திருக்கிறாரே... எனவே திடீரென்று விருந்துக்கு அந்தப் பகுதி காவலர்களை அழைப்பார். பெரும்பாலான காவலர்கள் எலும்புத் துண்டுக்கு ஆசைப்பட்டு வருவார்கள்.

அந்த விருந்து மண்டபத்தில் ஒரேயொரு நாற்காலிதான் இருக்கும். அதில், பாஷு தாதா மட்டும் அமர்வார். மற்றவர்கள் விருந்து முடியும் வரை நிற்கத்தான் வேண்டும். எதையோ நினைத்துக்கொண்டது போல் ஒரு காவலரை அழைப்பார். அவரிடம் மெல்லிய குரலில் பேசுவார். அவர் என்ன சொல்கிறார் என்பதை கேட்பதற்காக அந்த காவலர் குனிவார். இந்தக் காட்சியை

பார்ப்பவர்களுக்கு ஏதோ பாஷு தாதா முன்பு அந்தக் காவலர் கைகட்டி வாய் பொத்தி நிற்பது போல் தெரியும்.

அதே போல் விதவிதமான உணவுகளை விருந்து சமயத்தில் பரிமாறுவார். ஆனால், குடிக்க தண்ணீர் வைக்க மாட்டார். விக்கல் எடுத்து சில நிமிடங்கள் அவர்கள் தவித்த பிறகே தண்ணீர் கொடுப்பார்.

இதற்காக வந்திருந்த காவலர்களால் முகத்தை சுளிக்கவும் முடியாது. காரணம், விருந்து முடிந்து அவர்கள் செல்லும்போது விலையுயர்ந்த பரிசுப் பொருட்களை கொடுப்பார். மட்டுமல்ல அவர்கள் வீட்டு விசேஷங்களுக்கு கணிசமான தொகையையும் அன்பளிப்பாக கொடுப்பார்.

எனவே, பாஷு தாதா ஆடிய ஆட்டத்துக்கு எல்லாம் காவலர்களும் வளைந்து கொடுத்தார்கள். இதை பயன்படுத்திக்கொண்டு அவரும் அவர்களை முடிந்த அளவு அவமானப்படுத்தினார்.

என்றாலும் ஒரேயொரு காவலரை மட்டும் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. பணத்துக்கு மயங்காத அந்தத் தலைமை ஏட்டுதான் இப்ராஹிம் கஸ்கர். தாவூத் இப்ராஹிமின் அப்பா. இவரை பழிவாங்க பாஷு தாதா முடிவு செய்தார்.

25

சொன்னால் வாய்விட்டு சிரிப்பீர்கள் அல்லது கல்லெடுத்து வீசுவீர்கள். என்றாலும் சொல்லாமல் இருக்க முடியவில்லை. உண்மை அப்படி.

அந்தக் காலத்தில் - அதாவது, பாஷு தாதா பம்பாய் மாகாணத்தில் கடத்தல்காரராக உருவெடுத்த நேரத்தில் விரல்விட்டு எண்ணக் கூடிய இஸ்லாமியர்கள்தான் ஹெட் கான்ஸ்டபிள் ஆக இருந்தார்கள். மற்றவர்கள் எல்லாம் பிற மதத்தினர்தான். என்றாலும் விஷயம் இது அல்ல.

இப்படி தலைமை காவலர்களாக இருப்பவர்கள்தான் காவல்துறையிலேயே சக்தி படைத்தவர்கள். தெளிவாக சொல்வதென்றால் இவர்களே டெபுடி கமிஷனர் ஆஃப் போலீசை விட அதிகாரம் படைத்தவர்கள்.

இந்த 'பவரை' பயன்படுத்தித்தான் இப்ராஹிம் கஸ்கர், மாஃபியாக்களின் கண்களில் விரல்விட்டு ஆட்டினார்.

இத்தனைக்கும் கரீம்லாலா, ஹாஜி மஸ்தான், வரதராஜ முதலியார், ஜெனாபாய் போன்ற தாதாக் களுக்கு நெருக்கமானவராகத்தான் இருந்தார். இவர் வீட்டு நல்லது கெட்டதுகளில் மாஃபியாக்கள் பங்கேற்றிருக்கிறார்கள். என்றாலும் தனது எல்லைக்கு உட்பட்ட பகுதிகளில் எந்தக் குற்றமும் நடக்க இப்ராஹிம் கஸ்கர் அனுமதிக்கவில்லை.

அப்படித்தான் பாஷு தாதாவுக்கும் அணை போட்டார். தங்கமோ, வைரமோ, எலெக்ட்ரானிக்ஸ் பொருட்களோ கடத்தாதபடி பார்த்துக் கொண்டார்.

இது பாஷு தாதாவுக்கு எரிச்சலை ஏற்படுத்தியது. காரணம், எந்த ஏரியாவில் அவர் ஆட்சி செய்தாரோ... எந்த நிலப்பரப்பில் தனி ராஜாங்கம் நடத்தி வந்தாரோ... அந்தப் பகுதியின் தலைமை ஏட்டாகத்தான் இப்ராஹிம் இருந்தார்.

அவரைச் சுற்றிலும் ஆட்கள் இருந்தார்கள். தலைமைக் காவலர்கள் முதல் அரசு அதிகாரிகள் வரை பலரும் பணி ஓய்வு பெற்ற பிறகு அவரிடமே கைகட்டி சேவகம் புரிந்தார்கள். குறுநில மன்னர்களாக வரி வசூலித்தபடி அவரது ராஜாங்கத்தை பார்த்துக் கொண்டார்கள்.

இப்படி பலர் பக்கபலமாக இருந்தாலும் இப்ராஹிமை மட்டும் யாராலும் எதுவும் செய்ய முடியவில்லை.

இதை இப்படியே விட்டால் தலையில் துண்டுதான் போட வேண்டும். என்ன செய்யலாம் என்று யோசித்தார். உலகிலுள்ள எல்லோருக்குமே ஒரு விலை உண்டு. விலையில்லா மனிதன் அரை மனிதன். இது அனுபவம் கற்றுத் தந்த பாடம். எனில், இப்ராஹிமின்

விலை என்ன? பொருளா... பணமா... உறவா... பெண் தொடர்பா... அல்லது...

மண்டையை குடைந்தவருக்கு சட்டென்று விழிப்பு தட்டியது. ரஹிம்.

இவனை எப்படி மறந்தோம்?

சட்டென்று தன் பென்ஸ் காரை எடுத்துக் கொண்டு கிளம்பினார்.

ரஹிம் இருக்கும் இடம் அவருக்கு தெரியும். சில மாதங்களுக்கு முன்புதான் பம்பாய் துறைமுகத்தில் அவனை கண்டார். 'தொழில்' விஷயமாக அங்கு சென்றபோது பார்வையில் தட்டுப்பட்டான். சராசரியான உயரம். அழுக்கேறிய உடை. கலைந்த தலைமுடி. கவனத்தை ஈர்க்கும் வகையில் தென்பட வில்லை. ஆனால், அழிக்க முடியாத நிகழ்வை அன்று அரங்கேற்றினான்.

பென்ஸ் காரின் முன்பக்கம் சாய்ந்தபடி அப்போது கடலை பார்வையிட்டுக் கொண்டிருந்தார். அவர் முன்னால் ஆட்கள் கைகட்டியபடி நிலவரங்களை சொல்லிக் கொண்டிருந்தார்கள். அதை காதில் வாங்கியபடியே தலையசைத்தவர் சட்டென்று தன் கையை உயர்த்தி யாரும் எதுவும் பேச வேண்டாம் என்று செய்கை செய்தார்.

அவர் பார்வை பதிந்த இடத்தை மற்றவர்கள் பார்த்தார்கள்.படகு ஒன்று கரை தட்டியது. தன் வயதுள்ள ஒருவனை கைத்தாங்கலாக மற்றவன் இறக்கிக் கொண்டிருந்தான். பழுப்பேறிய பைஜாமா மடித்து விடப்பட்டிருந்தது. வெகு ஜாக்கிரதையாக சக மனிதனை இறக்கியவன் தன் தோள் மீது அந்த மனிதனை சுமந்து கொண்டு வெளியேறினான். யாரையோ அழைத்து "வீட்ல விட்டுடு..." என்று ஒப்படைத்தான்.

இந்தக் காட்சி பாஷு தாதாவின் மனதில் ஒரு புள்ளியாக பதிந்து மரமாக வளர்ந்தது. பம்பாய் துறைமுகத்தில் இதுபோன்று அவர் கண்டதில்லை. காரணம், மனிதர்கள் வேட்டையாடும் இடம் அது. யாரும் யாருக்காகவும் பரிதாபப்பட மாட்டார்கள். ஒன்று வேட்டையாட வேண்டும் அல்லது வேட்டையாடப்பட வேண்டும். இதுதான் பம்பாய் துறைமுகத்தின் இயல்பு. விதி.

இதற்கு கட்டுப்பட்டுத்தான் மனிதர்கள் அங்கு வாழ்ந்தார்கள். வழி தவறிய ஆட்டை அன்றுதான் கண்டார்.

"அவன் யாரு?"

"நம்ம இப்ராஹிம் கஸ்கரோட தோஸ்த்... பேரு ரஹிம்..."

"கூப்பிடு..."

அழைத்தார்கள். அருகில் வந்தான். பாஷு தாதா என்று தெரிந்ததும் மடித்திருந்த பைஜாமாவை கீழே இறக்கினான். ஆனால், கை கட்டவில்லை.

"தூக்கிட்டு போனவனுக்கு உடம்பு சரியில்லையா?"

*"இல்லை. குடிச்சிருந்தான்..."*

*"கடலுக்கு குடிச்சுட்டு போகக்கூடாதுன்னு தெரியும்ல..."*

*"போன பிறகுதான் குடிச்சான்..."*

*"தடுக்கலையா?"*

*"அப்ப நான் அங்க இல்லை..."*

*"எதனால நடுக்கடல்ல குடிச்சான்?"*

*பதில் பேசாமல் ரஹிம் மவுனமாக நின்றான்.*

*"அவன் உன் நண்பனா?"*

*"இல்லை..."*

*"சொந்தமா?"*

*சில நிமிடங்களுக்கு பிறகு "ஆமா. நெருங்கின சொந்தம்..." என்றான்.*

*"எந்த வகைல..."*

*"என் மனைவியோட முன்னாள் கணவன்..." என்று சொல்லிவிட்டு ரஹிம் அமைதியாகச் சென்றான்.*

*இது அடுத்த ஆச்சர்யம். உடன் வசிக்கும் அல்லது கைப்பற்றிய பெண்களின் மாஜி உறவுகளை யாரும் பொருட்படுத்துவதில்லை. அதற்கான அவகாசமும் அங்கில்லை. நேரம் பார்த்து கதையை முடிப்பதுதான் வாடிக்கை.*

*அப்படியிருக்க இந்த மனிதன் வேறு மாதிரியாக இருக்கிறான். இவனுக்கான இடம் பம்பாய் துறைமுகப் பகுதி அல்ல. ஆனால், அங்கு வாழத்தான் சபிக்கப்பட்டிருக்கிறான். இது சாத்தானின் செயல் அல்ல. வயிற்றின் கட்டளை.*

*பழைய நினைவுகளை அசைபோட்டபடி துறைமுகத்துக்குள் நுழைந்தவர், அங்கிருக்கும் தன் பொறுப்பாளரை அழைத்தார். ரஹிம் குறித்து விசாரித்தார்.*

*எதிர்பார்த்தது போலவே தகவல்கள் வந்து கொட்டின. இப்ராஹிமும், ரஹிமும் பால்யகால நண்பர்கள். இன்றும் அவர்களது நட்பு தொடர்கிறது. ஒருவர் வார்த்தையை மற்றவர்கள் தட்ட மாட்டார்கள்.*

*ஆனால் - ஒருவேளை உணவுக்கே ரஹிம் சிரமப்படுகிறான். அவனுக்கு உதவ இப்ராஹிம் தயாராக இருக்கிறான். என்றாலும், அதை ஏற்கத்தான் அவன் விரும்பவில்லை.*

*இதுபோதும். ரஹிமின் வறுமை, தனக்கு கிடைத்த வரம். அதுவேதான் இப்ராஹிமை அழிக்கும் ஆயுதம்.*

*அதன் பின்னர் பாஷு தாதா சிறிதும் யோசிக்கவில்லை. உடனே ஆட்கள் மூலம் அவனை வரவழைத்தார். அந்த இடத்திலேயே வேலை போட்டுக் கொடுத்தார்.*

*"மாசம் ஐந்நூறு ரூபா சம்பளம். சம்மதமா?"*

*அந்தநாட்களில்இதுபலஆயிரங்களுக்குசமம்.யாருக்குத்தான் கசக்கும்.*

“பூரண சம்மதம். ஆனா...” நிறுத்தினான்.

“சொல்லு ரஹிம்...”

“என்னை நண்பனா நடத்தினீங்கன்னா என் உயிரையே கொடுப்பேன் பாஷு தாதா. அதுவே என்னை அடிமையா நடத்துனீங்கன்னா உங்க உயிரை எடுக்கவும் தயங்க மாட்டேன்...”

“எனக்குத் தேவை தோஸ்த்தான் ரஹிம். அடிமை இல்லை...” சொன்னதுடன் நிற்காமல் தன் மார்புடன் அவனை இறுக அணைத்துக்கொண்டார்.

கண் கலங்கினான். கண் கலங்கினார். கண் கலங்கினார்கள்.

அதன் பிறகு நடந்தது எல்லாம் விசித்திரம். பாஷு தாதாவின் வரலாற்றிலேயே எந்தப் பணியாளருக்கும் வழங்கப்படாத சலுகைகள் அவனுக்கு வழங்கப்பட்டன. இது சக அடியாட்களிடம் புகைச்சலை ஏற்படுத்தினாலும் பொறாமையாக யார் மனதிலும் வளரவில்லை.

அவரது வீட்டுக்கும், ‘தொழில்’ நடக்கும் இடத்துக்கும் தலை நிமிர்ந்தபடிதான் வந்து போனான்.

ரஹிம் ஜெயித்துவிட்டான் என்றுதான் அனைவரும் நினைத்தார்கள்.

ஆனால் - அவன் போக்கிலேயே சென்று அவனை வீழ்த்தியது பாஷு தாதாதான்.

ஆம், யாரிடம் அடிமையாக இருக்கமாட்டேன் என்று சொன்னானோ அதே பாஷு தாதாவின் கால்களில்தான் அவ்வப்போது வீழ்ந்தான்.

தவறு. ஸ்கெட்ச் போட்டு விழ வைத்தார்.

பாஷு தாதாவுக்கு ஒரு குணம் உண்டு. எந்த ஒரு விஷயத்துக்காகவும் தலைகுனிய மாட்டார். சின்ன பொருள் விழுந்தாலும் தன் கையால் அதை எடுக்க மாட்டார். அவரது ஷூ லேசை கூட அடியாட்கள்தான் தரையில் அமர்ந்து போடுவார்கள்.

இந்த விஷயம் ரஹிமுக்கும் தெரியும். எனவே, எப்போதாவது ‘லேஸ்’ கட்டாமல் அவர் வந்தால், அது பொது இடமாக இருந்தாலும் சரி, சற்றும் யோசிக்காமல் குனிந்து அந்தக் கயிற்றை முடிச்சிடுவான்.

இப்படி அடிக்கடி நடந்தது.

என்றாலும், வேண்டுமென்றேதான் பாஷு தாதா தன்னிடம் அப்படி நடந்துகொள்கிறார்... இதன் மூலம் அவர் காலடியில் தன்னை விழ வைக்கிறார் என்ற உண்மை மட்டும் அவனுக்கு உரைக்கவே இல்லை!

இப்படி எல்லாம் சரிவர சென்ற நேரத்தில்தான் - ரஹிமை வைத்தே இப்ராஹிமை வீழ்த்த முகூர்த்தம் குறித்தார்.

## 26

இப்ராஹிம் கஸ்கர் வளர்ந்தது தொங்கிரியில். என்றாலும், அவரது பூர்வீகம் வேறு.

மகாராஷ்டிர மாநிலம் ரத்னகிரி மாவட்டத்திலுள்ள மும்கா கிராமம்தான் அவரது சொந்த ஊர். அப்பா ஹசன் கஸ்கர் சாதாரண முடிவெட்டும் கடையை தொங்கிரியில் உள்ள சர் நல் பகுதியில் நடத்தி வந்தார். அந்தக் கடையின் பெயர் 'நாஸ் ஹேர் கட்டிங் சலூன்'.

உடனே ரிவால்விங் சேர், ஆளுயர சதுரமும் செவ்வகமுமான கண்ணாடிகள், முகத்தை பளபளப்பாக்கும் க்ரீம்கள், தலை மேல் சுழலும் காற்றாடி என்றெல்லாம் கற்பனை செய்ய வேண்டாம். 1920களில் இவையெல்லாம் சாத்தியமும் இல்லை. அந்தளவுக்கு வசதியானவராக ஹசன் கஸ்கரும் இல்லை. கரையானை போல் வறுமை அரிக்கும் ஏழைக் குடும்பம். முடிவெட்டினால்தான் சாப்பாடு. ஷேவிங் செய்தால்தான் கஞ்சி.

இதைக் குறித்து என்றுமே ஹசன் கஸ்கர் வருத்தப்பட்டதில்லை. யாரிடமும் குடும்ப நிலையை சொல்லி புலம்பியதில்லை. உழைத்து சாப்பிடுகிறோம் என்ற பெருமிதமே இவருக்கு தன்னம்பிக்கையை கொடுத்தது. மகிழ்ச்சியாக வாழ வைத்தது. தன் குழந்தைகளுக்கும் இந்த ஒழுக்கத்தையும், மத நம்பிக்கைகளையுமே விதைத்தார்.

இப்ராஹிமையும் சேர்த்து இவருக்கு மொத்தம் நான்கு பிள்ளைகள். அஹமத், மெஹ்மூத், இஸ்மாயில் ஆகியோர் மற்ற மூவர். பள்ளி நேரம் போக மற்ற பொழுதுகளில் பிள்ளைகள் விளையாட செல்லமாட்டார்கள். கடைக்குத்தான் வருவார்கள். அப்பாவுக்கு உதவியாக சின்னச் சின்ன காரியங்களை செய்வார்கள்.

இந்த விஷயத்திலும் இப்ராஹிம் கெட்டி. தரையில் விழுந்து கிடந்த முடிகளை பெருக்குவது, அப்பா சொன்னால் வாடிக்கையாளர்களுக்கு டீ வாங்கித் தருவது, கத்திரிக்கோலையும், கத்தியையும் துடைத்து வைப்பது... என எந்நேரமும் சுறுசுறுப்பாகவே இருந்தார். படிப்பிலும் இதையே காண்பித்ததுதான் இப்ராஹிமின் பலம். நாள்தோறும் வீட்டுப் பாடங்களை முடித்துவிடுவார். தேர்வு எழுதி வெற்றி பெற்றுவிடுவார். அதேநேரம் தொழுகைக்கு செல்லவும் மறந்ததில்லை. அல்லாவைத்தான் முழுமையாக நம்பினார். தன்னையும் பூரணமாக அல்லாவிடமே ஒப்படைத்தார்.

இதனால்தான் அவருக்கு பம்பாய் காவல்துறையில் வேலை கிடைத்தது. மற்ற சகோதரர்கள் தினக்கூலியிலும், வாரக் கூலியிலும் அல்லாடிக்கொண்டிருக்க, இப்ராஹிம் மட்டும் அரசாங்க ஊழியராக உயர்ந்தார். மட்டுமல்ல, தொங்கிரியில் வீடு எடுத்து தங்கியதும் அவர் மட்டும்தான். மற்ற சகோதரர்கள் ரத்னகிரியில் உள்ள கேத் கிராமத்துக்கு இடம் பெயர்ந்தார்கள்.

சின்ன வயதில் எப்படி ஒழுக்கவாதியாகவும், கடவுள் நம்பிக்கை கொண்டவராகவும், நேர்மையாகவும் இருந்தாரோ... அப்படித்தான் தலைமை ஏட்டாக உயர்ந்த பிறகும் இப்ராஹிம் வாழ்ந்தார். அரசாங்க பணி எந்தவிதத்திலும் அவரது ஆளுமையை மாற்றவில்லை.

சம்பளத்தை தவிர வேறு வழியில் அவர் சம்பாதித்ததில்லை. எனவே அவரது குடும்பமும் வறுமையில்தான் வாடியது. என்ன... தன் அப்பா மற்றும் சகோதரர்களை விட ஒரு படி வசதியாக வாழ்ந்தார் என்று வேண்டுமானால் சொல்லலாம். அதற்காக நாள்தோறும் மூன்று வேளை வயிறார சாப்பிட்டார் என்று அர்த்தமில்லை. அப்படியான சொர்க்க வாழ்வு அவருக்கு அமையவுமில்லை. எல்லா அரசாங்க ஊழியருக்கும் இருக்கும் சாபக்கேடு, அவரையும் நிழலாக தொடர்ந்தது. மாதத்தின் முதல் பத்து நாட்கள் இருவேளையும், அடுத்த பத்து நாட்கள் ஒன்றரை வேளையும், கடைசி பத்து நாட்கள் கஞ்சியும் குடித்து குடும்பத்தை காப்பாற்றினார்.

என்றாலும், இப்படியாவது தன்னால் வாழ முடிகிறதே என்று மகிழ்ச்சியடைந்தார். அதற்காக அல்லாவுக்கு ஐந்து வேளையும் நன்றி சொன்னார்.

கூடவே இன்னொரு காரியத்தையும் தன் வாழ்நாள் முழுக்க செய்தார். அதுதான் தன்னை விட பரம ஏழைகளாக இருப்பவர்களுக்கு உதவுவது. நம்புங்கள். வீட்டில் ஆயிரம் பணத்தட்டுப்பாடு இருந்தபோதும் மாதாமாதம் தன் சம்பளத்தில் ஒரு பகுதியை ஏழைகளுக்காக செலவிட அவர் தயங்கியதேயில்லை. பசி என்று யார் வந்தாலும் சோறு போட்டார். துணி வாங்கிக் கொடுத்தார். அடித்தட்டு குழந்தைகள் படிக்க தன்னால் இயன்ற அனைத்தையும் செய்தார்.

போலவே வழக்கு பதிவு செய்யாமல் ஏழை மக்களுக்கு நியாயம் கிடைக்க பலவிதங்களில் முயன்றார். கணவன் - மனைவி பிரச்னை, சொத்து தகராறு ஆகியவற்றை இரு தரப்புக்கும் சேதாரம் இல்லாதபடி தீர்த்து வைத்தார். அதனாலேயே அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் அவரை தலையில் தூக்கி வைத்துக் கொண்டாடினார்கள்.

ஏறக்குறைய இதே காலகட்டத்தில்தான் வரதராஜ முதலியாரும், ஹாஜிமஸ்தானும், கரீம்லாலாவும் பம்பாயின் தாதாக்களாக உயர்ந்திருந்தார்கள். இவர்கள் மூவரின் தர்பாருக்குள்ளும் முன்னறிவிப்பு இன்றி நுழையும் அதிகாரமும், துணிச்சலும் இப்ராஹிம் கஸ்கருக்கு மட்டுமே உண்டு. வாசலில் காவலுக்கு நிற்கும் அடியாட்கள் கூட அவரை தடுக்க மாட்டார்கள். அவ்வளவு ஏன் பம்பாயை கூறு போட்டு ஆண்ட மூன்று தாதாக்களுமே அவரைப் பார்த்தால் எழுந்து நின்றார்கள் அல்லது அடக்கமாக அமர்ந்தார்கள். அவர் முன்னால் மட்டும் மூவருமே குரலை உயர்த்த மாட்டார்கள் என்பது செய்தியல்ல. சரித்திரம். இந்த மரியாதை அவர் வாழும்

வாழ்க்கையால்தான் அவருக்கு கிடைத்தது என்பதுதான் முக்கியம்.

இந்த சலுகையை ஒருபோதும் தன் சுயநலத்துக்காக அவர் பயன்படுத்திக் கொண்டதில்லை. போலவே தேவையும், அவசியமும் இல்லாமல் மூவரின் இடத்துக்கும் சென்றதில்லை. தனக்காக எதுவும் செய்ய மூவரும் தயாராக இருக்கிறார்கள் என்பது மற்றவர்களை விட இப்ராஹிம் கஸ்கருக்கு நன்றாகவே தெரியும். ஆனாலும், அதை பயன்படுத்திக் கொண்டதில்லை. சட்டத்துக்கு புறம்பாக அவர்கள் செய்யும் காரியங்களுக்கு துணை போனதில்லை. தகுந்த ஆதாரம் கிடைக்கும்போது மூவரின் ஆட்களையும் கைது செய்து முட்டிக்கு முட்டி தட்டவும் தயங்கியதில்லை.

'இப்ராஹிமின் விசாரணை தனியாக இருக்கும்' என காவல்துறையிலேயே பெருமையாக சொல்வார்கள். அந்தளவுக்கு சட்ட நடவடிக்கைகளில் கண்டிப்பானவர். இன்று 'என்கவுண்டர் ஸ்பெஷலிஸ்ட்' என சொல்கிறார்கள் இல்லையா... அப்படி அந்தக் காலத்தில் பெயர் வாங்கியவர்தான் இப்ராஹிம்.

இத்தனையும் தாண்டி அவரிடம் முப்பெரும் மாஃபியாக்களும் நட்பாக பழகினார்கள். காரணம், அவரது ஆளுமை. முதன் முதலில் அவரை 'பாய்' என்று அழைத்தது கரீம் லாலாதான். மரியாதையும், அன்பும், பிரியமும் காரணமாக லாலா வைத்த அந்தப் பெயர் நிலைத்துவிட்டது. அதன் பிறகு அனைவருமே அவரை 'இப்ராஹிம் பாய்' என்றே அழைக்கத் தொடங்கினார்கள்.

தன் பணிக்காலத்தில் தொங்கிரி தவிர, கொலபா, மஹிம், மலபார் ஹில் ஆகிய பகுதிகளில் தலைமை ஏட்டாகவும், சில ஆண்டுகள் போக்குவரத்து காவலராகவும் பணியாற்றியிருக்கிறார். ஓய்வு பெறுவதற்கு முன் பம்பாய் க்ரைம் பிராஞ்சில் வேலை பார்த்தார்.

அந்நாட்களில் பம்பாயில் ஒரேயொரு க்ரைம் பிராஞ்ச்தான் இருந்தது. அதுவும் கமிஷனர் ஆபீசில். சக்திபடைத்த காவலர்கள்தான் இதற்கு நியமிக்கப்படுவார்கள். இவர்களுக்கு என்று ஒதுக்கப்பட்ட அறையில் அமர்ந்தபடி பம்பாயின் க்ரைம் ரேட்டை வெகுவாக குறைக்க இப்ராஹிம் திட்டமிட்டிருக்கிறார்.

ஆனால் - எந்த க்ரைம் பிராஞ்ச் ஊழியராக அவர் இருந்தாரோ... எந்த அறையில் இருந்தபடி பம்பாயில் குற்றங்கள் நடைபெறாமல் பார்த்துக்கொண்டாரோ... அதே அறையில் இருந்தபடிதான் பின்னாளில் அவர் மகன் தாவூத் இப்ராஹிமுக்கு எதிராக அதே க்ரைம் பிராஞ்ச் வியூகம் வகுத்தது என்பது முரண். *Life is Stranger than Fiction.*

உண்மையில் தன் மகனுக்கு தாவூத் என்று அவர் பெயர் வைக்கக் காரணம் இருந்தது. சயீத் இஸ்லாமியர்களை எங்கு பார்த்தாலும் கையெடுத்து கும்பிடுவது அவரது வழக்கம். அதற்கு காரணமிருக்கிறது. இஸ்லாமியர்களுக்குள் சயீத் பிரிவினர் சற்று

மேம்பட்டவர்கள். ஏனெனில், அவர்கள் நபிகள் நாயகத்தின் உறவுமுறையை சேர்ந்தவர்கள். எனவே அவர்களுக்கு மரியாதை செலுத்த என்றுமே அவர் தயங்கியதில்லை.

அப்படிப்பட்ட சயீத் பிரிவை சேர்ந்த ஒரு பெரியவரை பல ஆண்டுகளுக்கு முன் இப்ராஹிம் சந்தித்தார். அந்த பெரியவரின் பெயர், நிராலே ஷா பாபா. அவர், 'உனக்கு ஆறு மகன்கள் பிறப்பார்கள். அதில் இரண்டாவது மகன் செல்வந்தனாகவும், புகழ்பெற்றவனாகவும் திகழ்வான்' என்று சொல்லியிருந்தார்.

இந்த சம்பவம் நடந்தபிறகுதான் அவருக்கு முதல் மகன் பிறந்தான். சபீர் என்று அவனுக்கு பெயரிட்டார். இவனுக்கு இரண்டு வயதானபோது அவர் மனைவி அமினா, இரண்டாவது முறையாக கருவுற்றார். அப்போது அவர்கள் தெற்கு பம்பாயின் புறநகர் பகுதியான டெம்கர் மொஹல்லாவில் பத்துக்கு பத்து அறை கொண்ட ஒண்டுக் குடித்தனத்தில் வசித்துவந்தார்கள்.

மலபார் ஹில்ஸ் பகுதியில் போக்குவரத்தை அவர் ஒழுங்குபடுத்திக் கொண்டிருந்தபோது இரண்டாவது மகன் பிறந்திருப்பதாக செய்தி வந்தது. உயரதிகாரிகளிடம் சொல்லிவிட்டு தன் மனைவியை பார்க்க விரைந்தார். அவர் மனம் முழுக்க சயீத் பெரியவர் சொன்ன வாக்குதான் எதிரொலித்துக்கொண்டிருந்தது.

ஓடிச்சென்று தன் மனைவியை பார்த்து அவள் நெற்றியில் முத்தமிட்டார். அருகிலேயே அப்போதுதான் ஜனித்திருந்த இரண்டாவது மகன் படுத்திருந்தான். அவனைப் பார்த்ததுமே 'தாவூத்' என்று தன்னையும் அறியாமல் அழைத்தார். அதையே அவனுக்கு பெயராக சூட்டுவது என்று முடிவு செய்தார்.

ஏனெனில் புனித குரானிலும் சரி, பைபிளின் பழைய ஏற்பாட்டிலும் சரி... தாவூத் என்கிற டேவிட் சக்தி படைத்தவன். இறைவனின் தூதன். வெறும் கையால் இரும்பை வளைக்கும் அளவுக்கு பலம் பொருந்தியவன். அவன் பாடினால் குயில் கூட மெய்மறந்து கேட்கும். விலங்குகளின் தோழன். பறவைகளின் நண்பன். மனிதர்களின் பாதுகாவலன்.

இதுபோல் தன் இரண்டாவது மகனும் விளங்குவான் என்று இப்ராஹிம் பரிபூரணமாக நம்பினார். அதனால்தான் தாவூத் என அவனுக்கு பெயரிட முடிவு செய்தார். பெயர் சூட்டும் விழா நடத்த அவரிடம் பணமில்லை. எனவே கரீம் லாலாதான் முழு செலவையும் ஏற்றுக்கொண்டார். அத்துடன் தன் வாயாலேயே 'தாவூத் இப்ராஹிம்' என அந்த குழந்தைக்கு பெயரிட்டார்.

ஆனால் – வளர்ந்த பிறகு அந்தக் குழந்தைதான் தனக்கு எதிரியாக மாறப்போகிறது என்று அப்போது கரீம்லாலாவுக்கு தெரியாது.

# 27

“இதுதான் இப்ராஹிமோட பயோ டேட்டாவா?” பற்களுக்குள் சிக்கியிருந்த உணவுத் துணுக்கை எடுத்தபடியே கேட்டார் பாஷு தாதா.

“ஆமா...” பதிலளித்த ரஹிம், தயங்கி நின்றான்.

“என்ன?”

“இப்ராஹிம் ஒரு நெருப்பு. நல்லது, கெட்டதுங்கிற பாகுபாடு எப்படி ‘தீ’க்கு கிடையாதோ அப்படித்தான் அவனும். அவனை அழிக்கணும்னு நினைக்காதீங்க. அப்புறம் நீங்களே சாம்பலாகிடுவீங்க...”

“மிரட்டறியா ரஹிம்?”

“இல்லை பாஷு தாதா. உண்மையை சொன்னேன்...” என்றபடி ரஹிம் வெளியேறினார்.

கொந்தளிக்கும் உள்ளத்துடன் சென்றவனின் முதுகை பார்த்துக் கொண்டிருந்தார் பாஷு தாதா. ரஹிமின் கூற்றில் நிஜம் இருந்தது. அதனாலேயே சுட்டது.

அப்படியானால் தலைமை ஏட்டாக இருக்கும் இப்ராஹிம் கஸ்கரை அடிபணிய வைக்கவே முடியாதா? பம்பாய் மாகாணத்தையே மிரட்டி என்ன பயன்... கடத்தல்காரனாக பெயர் வாங்கி என்ன லாபம்... சாதாரண காவலனை ஒன்றும் செய்ய முடியவில்லையே...

நொடிக்கும் குறைவான நேரத்தில் மீண்டார். நிச்சயம் வழியில்லாமல் இருக்காது. எங்காவது இப்ராஹிம் சறுக்குவான். தேவை அமைதி. அதுவும் மீனுக்காக காத்திருக்கும் கொக்கை போன்ற பொறுமை. வசமாக அவன் சிக்கும்போது லபக் என்று பிடித்து அடிமையாக்கிவிட வேண்டும்.

முடிவுக்கு வந்த பாஷு தாதா, காத்திருக்க முடிவு செய்தார். அதற்கு பலனும் கிடைத்தது. எதிர்பாராத தருணத்தில் இப்ராஹிம் கஸ்கர் தலைக்குப்புற கவிழ்ந்தார்.

அதற்குள் அவருக்கு ஏராளமான குழந்தைகள் பிறந்து விட்டார்கள். சபீர், தாவூத் ஆகியோருக்கு பிறகு அனீஸ், நூரா, இக்பால், முஸ்தகீம், ஹுமாயூன் என ஐந்து பிள்ளைகளும், சைடன், ஹசீனா, ஃபர்ஹானா, மும்தாஜ் என நான்கு பெண்களும் அடுத்தடுத்து ஜனித்தார்கள். மூத்தவள் சாய்தா வேறு வளர்ந்திருந்தாள்.

இப்ராஹிமை பொறுத்தவரை குழந்தைகள், அல்லா கொடுத்த வரம். எனவே பிறந்த அனைத்து செல்வங்களையும் மனமுவந்து ஏற்றுக்கொண்டார். குடும்பம் பெருகியது. வருமானம் போதவில்லை. கையூட்டு வாங்க தன்மானம் இடம் தரவில்லை. பன்னிரண்டு குழந்தைகளை வளர்ப்பதென்பது சாதாரண விஷயமா என்ன?

கிடைத்திருக்கும் செய்திகளும், ஆதாரங்களும் சொல்வது ஒன்றே ஒன்றுதான். அனைத்து குழந்தைகளும் காலையும், இரவும் மட்டுமே சாப்பிட்டார்கள். அதுகூட அரை வயிற்றுக்குத்தான். இடைப்பட்ட வேளையில் தண்ணீர் தவிர வேறு உணவை அவர்கள் உட்கொள்ளவில்லை. அதை கொடுக்கும் நிலையில் இப்ராஹிமும் இல்லை.

இப்படி, வாழ்வதே கடினமாக இருந்தபோதும் தன் பிள்ளைகள் படிக்க வேண்டும் என்பதில் மட்டும் பிடிவாதமாக இருந்தார். ஆண் பிள்ளைகளை அருகிலிருந்த முனிசிபாலிட்டி பள்ளிக்கு அனுப்பியவர், பெண்களை உருது மீடியம் படிக்க வைத்தார்.

ஆனால் - இரண்டாவது மகனான தாவூத்தை மட்டும் நாக்பதாவில் இருந்த அஹ்மத் செயிலர் ஹை ஸ்கூலில் சேர்த்தார். ஆங்கில மீடியம். அவரது சக்திக்கு அப்பாற்பட்ட விஷயம். கட்டணமும் எக்கச்சக்கம்.

என்றாலும், நிராலே ஷா பாபா தன்னை ஆசீர்வதித்து சொன்ன வாசகங்களை எப்போதும் அசைபோட்டார். தாவூத், செல்வந்தனாக திகழ்வான். புகழ்பெற்று விளங்குவான். எனவே, அவனுக்கு ஆங்கில அறிவு அவசியம். அதை கொடுக்க வேண்டியது தன் கடமை என்பதில் உறுதியாக இருந்தார். அதற்காகவே அவ்வளவு சிரமத்துக்கு இடையிலும் அவனை படிக்க வைத்தார். சாலை பாதுகாப்பு பணியிலும் அவனை ஈடுபடுத்தினார்.

எல்லாம் நல்லபடியாக போய்க்கொண்டிருந்தபோதுதான், 1966ம் ஆண்டு விடிந்தது.

எந்த சறுக்கலுக்காக பாஷு தாதா காத்திருந்தாரோ, அதுவும் அந்த ஆண்டுதான் நிகழ்ந்தது.

ஒரு கொலை குற்றத்தை சரிவர விசாரிக்கவில்லை... குற்றவாளிகள் தப்பிக்க காரணமாக இருந்தார்கள் என்று குற்றம்சாட்டப்பட்டு சில காவலர்கள் இடைநீக்கம் செய்யப்பட்டார்கள்.

அதில், முதன்மையானவர் இப்ராஹிம் கஸ்கர்.

அதிர்ந்துவிட்டார். இப்படி நடக்கும் என்று அவர் துளியும் எதிர்பார்க்கவில்லை. வெறித்தபடி பல நிமிடங்கள் அந்த சஸ்பென்ஷன் ஆர்டரையே பார்த்தார். ஏற்கனவே உணவின்றி குடும்பம் தள்ளாடிக் கொண்டிருக்கிறது. இந்நிலையில் கிடைக்கும் சம்பளமும் இல்லாமல் போனால்..?

நினைக்க நினைக்க அவரது உடலெல்லாம் அதிர்ந்தது. துவண்டு போய் வீடு திரும்பியவர் மனைவியிடம் விஷயத்தை சொன்னார். அமினா கெட்டிக்காரி. கணவரை தேற்றியதுடன், இனிவரும் காலங்களை எதிர்கொள்வதற்கான வழிகளையும் திட்டமிட்டாள்.

அதில், பிரதானமானது செலவை குறைப்பது. அதன் முதல் படி, தாவூத்தின் படிப்பை நிறுத்துவது. இப்ராஹிமுக்கு இதில் உடன்பாடில்லை.

ஆனாலும், வேறு வழி தெரியவில்லை. வேலை இல்லா காலத்தில் பள்ளிக் கட்டணத்தை எப்படி செலுத்த முடியும்? மனைவியின் முடிவுக்கு கட்டுப்பட்டார். ஆனால், விஷயம் தெரிந்த கிசிறி தஸ்தகிர் பர்ஹுன் மல்கி கோபம் கொண்டார்.

“தப்பு பண்ணற இப்ராஹிம். பையன் படிப்பை நிறுத்தாத. அவன் தடம் மாறிடுவான். அப்புறம் அவனை வழிக்கு கொண்டு வரவே முடியாது. பம்பாயோட இன்னொரு முகம் அவனை தத்து எடுத்துக்கும். அந்த உலகத்துக்குள்ள போயிட்டானா பின்னாடி யாராலும் அவனை மீட்கவே முடியாது...”

“என் பையன் அப்படியெல்லாம் போகமாட்டான் சார்...” நம்பிக்கையுடன் சொன்ன இப்ராஹிம்,

மகனின் நடவடிக்கைகளை கண்காணிக்க ஆரம்பித்தார்.

இதை தாவூத்தும் உணர்ந்தான். அதனாலேயே தன் மகிழ்ச்சியை கட்டுப்படுத்தினான். வெளியே அதைக் காட்டிக் கொள்ளவேயில்லை. தனக்கும் வருத்தம் இருப்பதாகவே நடமாடினான்.

இத்தனைக்கும் படிப்பை அவன் நிறுத்தியபோது அவனுக்கு வயது பத்துதான். உள்ளூர துள்ளிக் குதித்தான். அப்பாடா... இனி பள்ளிக்கு செல்ல வேண்டாம். வீட்டுப் பாடங்களை கண் விழித்து செய்ய வேண்டாம். தேர்வு எழுதச் சொல்லி யாரும் கட்டாயப் படுத்த மாட்டார்கள். மதிப்பெண் குறைந்தால் அப்பா அடிக்க மாட்டார். முக்கியமாக விளையாடலாம். தெருப்பிள்ளைகளுடன் ஊர் சுற்றலாம்.

ஆனால், கண்கொத்திப் பாம்பாக அப்பா கண்காணிக்கிறாரே என்ன செய்வது?

பாஷு தாதா அதற்கு முற்றுப்புள்ளி வைத்தார். ரஹிம் மூலமாக இப்ராஹிமுக்கு வேலை போனதை அறிந்தவர், உடனே அவரை தேடி வந்தார்.

“என்கிட்ட வேலை பாரு. கவர்மென்ட் சம்பளத்தை என்னால தர முடியாது. அதுக்காக ஒண்ணுமே தரமாட்டேன்னு நினைக்காத. ஓரளவு மரியாதையான தொகையை தரேன்...”

“முடியாது பாஷு...”

“பயப்படாத. உன்னை கடத்தல் தொழில்ல ஈடுபடச் சொல்லலை. கணக்கு எழுது. போதும்...”

இதில் தவறு இருப்பதாக இப்ராஹிமுக்கு தெரியவில்லை. ஒருவேளையாவது சாப்பிட வேண்டாமா? எனவே, சம்மதித்தார். ஃபைலை தூக்கிக்கொண்டு சுங்க இலாகாவுக்கும், துறைமுகத்துக்குமாக அலைந்தார்.

இந்த விதமாக பாஷு தாதா ஜெயித்தார். தன் முன்னால் இப்ராஹிமை கைகட்டி நிற்கும்படி செய்தார்.

அப்பா வேலைக்கு செல்ல ஆரம்பித்ததும் தாவூத் விளையாடச் சென்றான். ஜேஜே ஏரியாவில் இருந்த அனைத்து சிறுவர்களும் அவனுக்கு நண்பர்களாக மாறினார்கள்.

கிரிக்கெட் அறிமுகமானதும் அதன் மீது அவன் அபரிதமாக காதல் கொண்டதும் இந்த நேரத்தில்தான். மட்டுமல்ல, முதன் முதலில் வழிப்பறி கொள்ளையில் அவன் இறங்கியதும் அப்போதுதான்.

மும்பையின் மாஃபியா கிங் ஆக தாவூத் இப்படித்தான் உருவாக ஆரம்பித்தான்.

# 28

நீண்ட யோசனைக்குப் பிறகுதான் அந்த முடிவுக்கு இப்ராஹிம் கஸ்கர் வந்தார்.

வீடு மாற வேண்டும். வேறு வழியில்லை. சம்பளம் வராத நிலையில் கிடைக்கும் வருமானத்தில் டெம்கர் மொஹல்லாவில் குடும்பம் நடத்த முடியாது. எனவே தன் மனைவி அமினாவிடம் தன் முடிவை தெரியப்படுத்தினார். குடும்பத்தை பராமரிப்பவளுக்கு உள்ள நிலை புரியாதா என்ன? மறுபேச்சு பேசாமல் சம்மதித்தாள்.

முசாஃபீர்கானாவில் இருந்த பக்மோடியா தெருவுக்கு குடிபெயர்ந்தார்கள். அதை வீடு என்று சொல்ல முடியாது. கற்களால் எழுப்பப்பட்ட ஓர் அறை. அவ்வளவுதான். அதற்குள்தான் பன்னிரண்டு குழந்தைகளுடன் அவரும், அவர் மனைவியும் இருந்தார்கள். வசித்தார்கள். உறங்கினார்கள்.

மொத்த குடும்பமும் இந்த மாற்றத்தை ஏற்க மாதங்களானது. ஆனால், தாவூத்தும் அவன் அண்ணன் சபீரும் சட்டென்று அந்த இடத்துக்கு ஏற்ப தங்களை மாற்றிக்கொண்டார்கள். சொல்லப் போனால் அவர்கள் எதையெல்லாம் எதிர்பார்த்தார்களோ அதெல்லாம் அந்த இடத்தில் கிடைத்தது.

காரணம், முசாஃபீர்கானாவுக்கு சரித்திரத்தில் இருந்த பெயர்தான். சப்ளையர்.

அந்தக் காலத்தில் பம்பாய் மாஃபியாக்களுக்கு அடியாளாக இருந்தவர்கள் அனைவருமே முசாஃபீர்கானாவை சேர்ந்தவர்கள்தான்.

அந்த நிலப்பரப்பில் டிரெயினிங் எடுத்துக்கொண்டவர்கள்தான். அடியாளுக்கான நேர்முகத் தேர்வில் பங்கேற்பவர் அந்த இடத்தை சேர்ந்தவர்களாக இருந்தால் உடனே அவர்களுக்கு முன்னுரிமை தரப்படும். அந்தளவுக்கு பக்காவான ஏரியா அது.

இத்தனைக்கும் பெரிய அளவில் க்ரைம் எல்லாம் அங்கு நடக்காது. கொலை செய்யும் அளவுக்கு யாரும் போக மாட்டார்கள். பிக்பாக்கெட், திருட்டு, வழிப்பறி மாதிரியான சின்னச் சின்ன குற்றங்கள்தான் அங்கு நடைபெறும்.

ஆனால் - பெரிய பெரிய க்ரைம்களுக்கான அத்தனை அடித்தளமும் அங்குதான் போடப்படும். குறிப்பாக பத்து முதல் பதினைந்து வயதுக்கு உட்பட்ட சிறுவர்கள்தான் இந்தச் செயல்களில் ஈடுபடுவார்கள். எனவே பிஞ்சிலேயே பழுத்திருப்பார்கள். போலீசில் சிக்கி அடி உதை வாங்கி உடம்பையும் மனதையும் தயார் செய்து வைத்திருப்பார்கள்.

எனவே பதினாறு, பதினேழு வயதாகும்போது வரதராஜ முதலியாரையோ, ஹாஜி மஸ்தானையோ, கரீம் லாலாவையோ,

பாஷு தாதாவையோ சந்தித்து அவர்கள் குழுவில் இணைந்துவிடுவார்கள்.

இப்படி அடியாட்களை உற்பத்தி செய்யும் இடமாக இருந்த முசாஃபீர்கானாவில்தான் தாவூத்தும், சபீரும் வளர்ந்தார்கள்.

அதிகாலையில் அப்பா புறப்பட்டு சென்றதும் தெருவுக்கு வருவார்கள். தங்களைப் போன்று இருக்கும் சிறுவர்களுடன் 'ஜமா' சேருவார்கள். ஊர் சுற்றுவார்கள். விளையாடுவார்கள். புழுதியில் புரண்டு சண்டை போடுவார்கள். இருட்டியதும் வீடு திரும்புவார்கள். அப்பா முன்னால் நல்ல பிள்ளையாக காட்டிக் கொள்வார்கள்.

இப்படித்தான் நாட்களும், வாரங்களும், மாதங்களும், ஆண்டுகளும் கழிந்தன.

தாவூத்தின் உடல் மொழியும் மாற ஆரம்பித்தது. பள்ளிக்குச் சென்ற காலத்தில் ஆசிரியர்களுக்கு அடங்கிய சிறுவனாக இருந்தான். எனவே அவன் உடலும் பெரியவர்களை பார்க்கும்போது அனிச்சையாக மரியாதை செலுத்தியது. குரல் உயர பேச மாட்டான். கேட்க விரும்புவதையும் ஒன்றுக்கு பத்து முறை யோசித்து பவ்யமாக கேட்பான்.

இவை அனைத்தும் தலைகீழாக மாற ஆரம்பித்தது. சட்டையின் முதல் இரண்டு பட்டன்கள் எப்பொழுதும் திறந்திருந்தன. உடல் நிமிர்ந்தது. பெரியவர்களை அலட்சியமாக பார்க்கத் தொடங்கினான். யார் என்ன கேட்டாலும் பதில் சொல்லாமல் தவிர்த்தான். எதிர்த்து பேசுவது இயல்பானது. வயது வித்தியாசம் இல்லாமல் அனைவரையும் ஒருமையில் அழைத்தான். சாதாரண சொற்களை கூட குரலை உயர்த்தியே சொன்னான். தெனாவட்டு உடல் முழுக்கவும் படர்ந்தது. பரவியது. கண்களில் குரோதமும், நயவஞ்சகமும் எட்டிப் பார்த்தது.

கூடவே இன்னொரு விஷயமும் வேரூன்றி வளர்ந்தது. அதுதான் பணவெறி.

துட்டு இருந்தால்தான் சகலமும் நடக்கும். மிட்டாய் வாங்குவது முதல் சினிமாவுக்கு செல்வது வரை சகலமும் நிறைவேறும். சக டிரவுசர் நண்பர்கள் பணமிருப்பவர்களிடம்தான் குழைவார்கள். கைகட்டி நிற்பார்கள். எடுபிடி வேலை பார்ப்பார்கள். காசு இருப்பவனே வாழத் தகுதியுள்ளவன். பணமில்லாதவன் எப்பொழுதுமே அடிமைதான்.

எனவே அதை 'சம்பாதிக்க' முடிவு செய்தான். அதற்கு என்ன செய்வது என்று யோசித்தான்.

கிட்டத்தட்ட தாவூத்தின் நிழலாகவே மாறியிருந்த சபீர், இதற்கு உடன்பட்டான்.

இப்படி தங்கள் இரு பிள்ளைகளும் திசை மாறிச் செல்கிறார்கள்

என்ற விஷயம் இப்ராஹிம் கஸ்கருக்கும், அமினாவுக்கும் தெரியாமல் போனதுதான் மிகப்பெரிய சோகம். தங்களுக்கான கவலைகளில் மூழ்கியிருந்தவர்களுக்கு, புதிய உலகில் தாவூத்தும், சபீரும் அடியெடுத்து வைத்திருக்கும் விஷயமே எட்டவில்லை. புரிந்தபோதோ எல்லாமே கைமீறி போயிருந்தது.

அப்போது தாவூத்துக்கு வயது 14. மத நம்பிக்கைகளும், சம்பிரதாயங்களும், கல்வியறிவும் முற்றிலுமாக அவனிடமிருந்து உதிர்ந்திருந்த காலம் அது. டிரவுசர் பாக்கெட்டில் கைவிட்டபடி சாலையில் நடந்துகொண்டிருந்தவன் - சட்டென்று நின்றான். ஓரிடத்தையே உற்றுப் பார்த்தான். பின்னர் சுற்றிலும் தன் பார்வையை சுழலவிட்டான். யாரும் எதையும் கவனிக்கும் நிலையில் இல்லை என்பதை உணர்ந்ததும் மீண்டும் அதே இடத்தில் தன் கண்களை பதித்தான்.

நாற்பது வயது மதிக்கத்தக்க ஒரு நபர், ரோட்டில் நின்றபடி பணத்தை எண்ணிக்கொண்டிருந்தார். எந்தப் பணத்தை சம்பாதிப்பதற்காக சில நாட்களாக அவன் யோசித்துக்கொண்டிருந்தானோ, எந்த காசு வந்தால் சக நண்பர்கள் மத்தியில் மரியாதை கிடைக்கும் என்று எதிர்பார்த்தானோ - அந்தப் பணம் சற்றுத் தொலைவில் எண்ணப்பட்டுகொண்டிருந்தது.

அதன் பிறகு நொடிப்பொழுதும் அவன் தாமதிக்கவில்லை. பாய்ந்தான். அந்த நபரை நெருங்கினான். பணத்தை பிடுங்கினான். திரும்பிப் பார்க்காமல் ஓடினான்.

கிட்டத்தட்ட மூன்று கிலோ மீட்டருக்கு அப்பால்தான் மூச்சு வாங்க நின்றான். யாரும் தன்னை பின்தொடரவில்லை என்பதை கவனித்தவனின் உதடுகளில் புன்னகை பூத்தது. கைகளில் கசங்கியிருந்த பணத்தை சரியாக மடித்து பாக்கெட்டில் வைத்தான்.

இனி, தான்தான் ராஜா.

வீறுநடை போட்டவன், அன்றிரவு வீடு திரும்பினான். அவனது வருகைக்காகவே இப்ராஹிம் காத்திருந்தார். அதற்குள்ளா அப்பா வீடு திரும்பி விட்டார்? யோசித்து முடிப்பதற்குள். அறை விழுந்தது. அடுத்து அடி. பிறகு பெல்டால் விளாசல்.

தாவூத் கதறவில்லை. தப்பித்து ஓடவில்லை. மவுனமாக அனைத்து அடிகளையும் வாங்கினான். மனதுக்குள் மட்டும் 'இந்த விஷயம் எப்படி அப்பாவுக்கு தெரிந்தது?' என்ற கேள்வி சுற்றிச் சுற்றி வந்தது.

அதற்கான விடையையும் அவரே அளித்தார்.

"என் ஃபிரெண்ட் கிட்டேந்து பணத்தை திருடியிருக்கான் அமினா. அவன் வந்து என்கிட்ட சொன்னப்ப அப்படியே நான் நொறுங்கிப் போயிட்டேன். இவனை எப்படியெல்லாம் வளர்க்கணும்னு நினைச்சேன். கனவு கண்டேன். அத்தனையும் இப்படி நாசமாகிடுச்சே..."

சொல்லிச் சொல்லி அடித்தார். புலம்பிப் புலம்பி தீர்த்தார். இமைகளை சிமிட்டாமல் அவரையே தாவூத் பார்த்தான்.

“இனிமே இப்படி செய்வியா... சொல்லு... இனிமே இப்படி செய்வியா..?” களைப்புடன் இப்ராஹிம் கேட்டார்.

“மாட்டேன். இனிமே உங்க நண்பர்கள்கிட்ட திருட மாட்டேன்...” மனதில் வெடித்த பதிலை அப்படியே விழுங்கினான்.

“வாயைத் திறக்கறானா பாரு... அமினா இவனை கண்டிச்சு வை...'' அறை மூலையில் பெல்ட்டை வீசிவிட்டு இப்ராஹிம் வெளியேறினார்.

அதுவரை பொறுமையாக இருந்த அமினா, பாய்ந்து தன் மகனை அணைத்துக்கொண்டாள். அவள் கண்களில் இருந்து கண்ணீர் பெருகியது.

“ஏன்டா... ஏன் இப்படி மாறின? உங்கப்பா நேர்மையான போலீஸ். அவரோட மகனா பிறந்து நீ இப்படி செய்யலாமா? உனக்கு என்னடா குறை வைச்சோம்...”

அம்மாவின் மார்பில் சற்று நேரம் ஒடுங்கி இருந்தவன், அவளை விலக்கிவிட்டு வெளியே வந்தான். அவன் சென்றபிறகுதான் அவ்வளவு அடி வாங்கியும் அவன் வாய்விட்டு அழவேயில்லை என்பது அமினாவுக்கு உறைத்தது. எங்கு சென்றிருக்கிறான் என்று தெரியாமல் தவித்தாள்.

தாவூத் சென்ற இடம் மட்டும் தெரிந்திருந்தால் இப்ராஹிமும், அமினாவும் சுதாரித்திருப்பார்கள். பாதை மாறிச் செல்பவனை தடுத்து நிறுத்தியிருப்பார்கள்.

ஆனால், அதற்கெல்லாம் காலம் அனுமதிக்கவேயில்லை. அப்பாவிடம் அடி வாங்கிய வலியுடன் வீட்டை விட்டு வெளியேறிய தாவூத், நேராக ஒரு பெண்மணியை தேடிச் சென்றான். அவள் மடியில் விழுந்தான். அதுவரை அடக்கி வைத்திருந்த அழுகையை கொட்டித் தீர்த்தான்.

அவன் முதுகை ஆதரவாக வருடியபடி அவனுக்கு ஆறுதல் சொன்னாள் அந்தப் பெண்மணி.

அவள்தான் பம்பாய் மாஃபியா ராணிகளில் முதலிடத்தில் இருப்பவள். இந்தத் தொடரின் தொடக்கத்தில் நாம் பார்த்தவள். வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் - கரீம் லாலா ஆகியோரின் தத்து சகோதரி. மாஃபியாவாக இருந்தபடியே போலீசுக்கும் உளவு வேலை பார்த்தவள்.

ஜெனாபாய்.

# 29

ஜெனாபாய் மீது ஆயிரம் விமர்சனங்கள் இருக்கலாம். மாஃபியாக்களுக்கும், போலீசுக்கும் இடையில் டபுள் கேம் ஆடினார் என்று ஆதாரங்களுடன் அம்பலப்படுத்தலாம்.

ஆனால் - தாவீத் இப்ராஹிமை பொறுத்தவரை நல்ல தத்து அம்மாவாகத்தான் அவர் நடந்துகொண்டார் என்பதில் மாற்றுக் கருத்தில்லை. அதனால்தான் சொந்த தாயான அமினாவை விட ஜெனாபாயை அதிகம் தாவூத் நேசித்தான். பசிக்கு அவர் சோறு போட்டார், இளம் வயதில் தாய்ப்பால் கொடுத்தார் என்பதெல்லாம் எந்தளவுக்கு நெகிழ்ச்சியான விஷயங்களோ அதே அளவுக்கு அவனது ஆளுமையை தீர்க்கமாக வளர்த்தார் என்பதும்.

ஆட்களை எப்படி மிரட்டுவது, கண்ணசைவில் எப்படி கட்டளையிடுவது, மாமூலை எந்த விதத்தில் வசூலிப்பது... என்பதை எல்லாம் தாவூத் கசடற கற்றான். நிற்க அதற்குத் தக என பின்னாளில் மும்பையை ஆட்டிப் படைத்தான்.

எதை எதிர்பார்த்து அன்று ஜெனாபாயை தேடிச் சென்றானோ, என்ன கிடைக்க வேண்டும் என்று அவர் மடியில் படுத்து அழுதானோ - அவை எல்லாம் கிடைத்தன. அழுதவனை தட்டிக் கொடுத்தார். சமாதானப்படுத்தினார். ஆனால், வாய் தவறி கூட நீ செய்தது தவறு என்று கண்டிக்கவில்லை. அவரது செய்கைகள் ஒவ்வொன்றும் எப்படி சிக்காமல் காரியங்களை முடிக்க வேண்டும் என்பதைத்தான் மவுனமாக கற்றுத் தந்தன.

அதற்கு பிறகு எப்பொழுதுமே அவன் சிக்கவில்லை. அப்பாவிடம் அடி வாங்கவில்லை. செய்ய வேண்டிய காரியங்களை, மற்றவர்களை வைத்து செய்து முடிக்கும் வித்தையை கற்றுத் தேர்ந்தான்.

இதற்கு ஏற்பவே நண்பர்களையும் சலித்து தேர்ந்தெடுத்தான்.

தாவூத் வாழ்ந்த மும்கா கிராமத்துக்கு ஏராளமான இஸ்லாமிய சிறுவர்கள் அறுபதுகளின் இறுதியிலும் எழுபதுகளின் தொடக்கத்திலும் அகதிகளாக வந்து சேர்ந்தார்கள். அவர்களில் கொங்கணி இஸ்லாமிய சிறுவர்களும் அடக்கம். பின்னாளில் அலி பாய் ஆக மாறிய அன்றைய அலி அப்துல்லா அந்துலே அப்படி வந்து சேர்ந்தவன்தான். தாவூத்தின் குழுவில் இணைந்தவன்தான்.

குழு?

ஆம், பதினைந்து வயதில் தனக்கென்று ஒரு 'கேங்'கை சின்னதாக உருவாக்கியிருந்தான். அதில் அவனது அண்ணன் சபீர், சித்தப்பா மகன்கள் தவிர அயூப், ரஷித் ஆகியோரும் இருந்தார்கள். இவர்களில் ஒருவனாக அலி அப்துல்லா அந்துலேவும் ஐக்கியமானான்.

இதற்குள் இப்ராஹிம் மீண்டும் காவல்துறையில் சேர்ந்திருந்தார். இந்த முறை பம்பாய் க்ரைம் பிராஞ்சில் அவருக்கு பணி. ஆனாலும் தாவூத்திடம் அவர் பேச்சுவார்த்தை வைத்துக்கொள்ளவில்லை.

அவனது எந்த நடவடிக்கையும் அவருக்கு பிடிக்கவில்லை. எனவே அமினா மூலமாகவே, தான் பேச வேண்டிய விஷயங்களை பேசினார். அம்மா மூலமாகவே தாவூத்தும் பதில் அளித்தான்.

ஒரு கட்டத்தில் அமினாவுக்கும் இது தாங்க முடியாத துயரமாக மாறியது.

“உன் அப்பா ஒரு போலீஸ். ஆனா, உன்னோட செய்கை எல்லாம் அவரோட பெயரை கெடுக்கிற மாதிரியே இருக்கு. ஏன்டா இப்படி இருக்க?”

“நான் சரியாத்தான் இருக்கேன். உன் புருஷன்தான் பிழைக்கத் தெரியாம இருக்கார். பணம்தான்மா முக்கியம். கையில நாலு காசு இருந்தாதான் உலகம் மதிக்கும். அந்த நிலைக்கு நான் வருவேன். அப்ப உன் புருஷனே என்னை ஏத்துப்பார்...”

ஏற்கவில்லை. இறுதிவரை இப்ராஹிம் தன் மகனின் நடவடிக்கைகளுக்கு அங்கீகாரம் வழங்கவில்லை. ஆனால், மொத்த குடும்பமும் தாவூத்தின் சொல்லுக்கு கட்டுப்பட்டது. சபீர் மூத்த பிள்ளையாக இருந்தாலும் தன் தம்பி முன்னால் கைகட்டி நின்றான். தன் உடன்பிறந்தவர்களுக்கு புதிது புதிதாக உடைகளையும், நகைகளையும் தாவூத் வாங்கிக் கொடுத்தான். அவர்களை யார் மிரட்டினாலும் தட்டிக் கேட்டான். தன் சகோதரிகளை யார் கிண்டல் செய்தாலும் அவர்கள் முகரையை பெயர்த்தான்.

விளைவு, மொத்த குடும்பமும் எது செய்தாலும் அவனிடம் சொல்லிவிட்டே செய்ய ஆரம்பித்தது. இதை இப்ராஹிம் உணரவேயில்லை என்பதுதான் சோகம். பெயரளவுக்குத்தான், தான் குடும்பத் தலைவராக இருக்கிறோம் என்பதை அவர் தெரிந்து கொள்வதற்குள் காலம் கடந்திருந்தது.

யெஸ், அடுத்த ஆறு மாதங்களில் மாமூல் வசூலிக்கும் தாதாவாக தாவூத் உயர்ந்திருந்தான். இதற்கு பிள்ளையார் சுழி போட்டது பொஹ்ராஸ்.

உயர் நடுத்தர குடும்பத்தை சேர்ந்த இந்த சமூகத்தினர், அக்ரிபாதா - முஸாஃபிர்கானா பகுதிகளுக்கு உட்பட்ட நாக்பாதாவில் இருக்கும் காதா பார்சி ஜங்ஷன் முதல் க்ளாரி ரோடு வரை கடைகளை வைத்திருந்தார்கள். கண்ணாடியையும் உணவுப்பொருட்களையும் விற்று வந்தார்கள். டிராவல்ஸ் அண்ட் டூரிசத்தில் கொடி கட்டி பறந்தார்கள்.

அவர்கள் அனைவரையும் தன் ராஜ்ஜியத்தின் கீழ் தாவூத் கொண்டு வந்தான். அவனது ஆட்களை பார்த்ததுமே மறுபேச்சு பேசாமல் மாமூல் தர ஆரம்பித்தார்கள்.

கிடைத்த தொகையில் ஒரு பகுதியை தனியாக எடுத்து வைத்த தாவூத், எஞ்சிய தொகையை அனைவருக்கும் சமமாக பிரித்துக் கொடுத்தான்.

இப்படி அவன் தனியாக ஒரு அமவுன்ட்டை எடுத்து வைப்பது அவனது குழுவை சேர்ந்தவர்களுக்கு தெரியும். அவர்கள் கண்முன்னால்தான் ஒவ்வொரு முறையும் அப்படி செய்தான்.

சரி, தலைவனாக இருப்பதால் தனக்கான கமிஷனை எடுத்துக் கொள்கிறான் போல என்றுதான் சபீர் உள்பட சகலரும் நினைத்தார்கள்.

ஆனால் - உண்மை தெரிந்தபோது மொத்தக் குழுவும் ஆடிப் போனது. அவர்கள் கனவிலும் நினைத்துப் பார்க்காத காரியத்தை தாவூத் செய்தான்.

அந்தச் செயலே அசைக்க முடியாத டான் ஆக அவனை உயர்த்தியது.

காரணம், அப்படி ஒவ்வொரு முறையும் மாமூல் வாங்கும்போதும் எடுத்து வைத்த தொகையை கொண்டு மொஹாத்தா மார்க்கெட்டில் ஒரு கடையை வாடகைக்கு எடுத்தான்.

நம்மூரில் பர்மா பஜார் எப்படியோ, அப்படி மொஹாத்தா மார்க்கெட். வெளிநாட்டுப் பொருட்கள் சல்லீசான விலையில் அங்கு கிடைக்கும்.

அந்த இடத்தில் கடை எடுத்த தாவூத், வெளிநாட்டு கைக்கடிகாரங்களை அங்கு விற்க ஆரம்பித்தான். இதற்குள் அவனது குழு, பத்து சிறுவர்கள் கொண்ட 'கேங்' ஆக மாறியிருந்தது. அனைவருமே 16 வயதுக்கு உட்பட்டவர்கள்தான்.

அந்தக் கடையை தாவூத் நடத்திய விதம்தான் மொத்த பம்பாயையும் அவன் பக்கம் திரும்பிப் பார்க்க வைத்தது. மட்டுமல்ல இந்தக் கடைதான் இன்றும் ரகசியமாக தெற்காசியாவில் இயங்கி வரும் 'D' கார்ப்பரேட் நிறுவனத்தின் முன்னோடி. 'D'? தாவூத் இப்ராஹிம் என்பதன் சுருக்கம்.

## 30

மொஹாத்தா மார்க்கெட்டில் தாவூத் எடுத்த கடை அப்படியொன்றும் பெரிய இடம் அல்ல. ஐந்தடி அகலமும், பத்தடி நீளமும் கொண்ட பொந்துதான். ஆனால், அதுதான் சகல நெளிவு சுளிவுகளையும் அவனுக்கு கற்றுக் கொடுத்தது.

வெளிநாட்டுக் கைக்கடிகாரங்களை அங்கு விற்றார்கள். அந்த நாட்களில் இந்திய, குறிப்பாக பம்பாய் இளைஞர்களின் அந்தஸ்தை குறிக்கும் அடையாளமாக கைகளில் கட்டப்படும் வாட்சுகளே இருந்தன. இதை அப்போது வெளிவந்த இந்தி, தமிழ், தெலுங்கு, மலையாளம் உள்ளிட்ட இந்திய தேசிய மொழிப் படங்களிலும் காணலாம். அதுவும் ஃபாரீன் வாட்ச் அணிந்தவர்கள் மேன்மக்களாகவே கருதப்பட்டார்கள்.

இந்த மனநிலையைத்தான் தாவூத்தின் குழு கச்சிதமாக பயன்படுத்திக்கொண்டது.

கடையில் தாவூத் மட்டுமே இருப்பான். அவனது குழுவை சேர்ந்தவர்கள் மொஹாத்தா மார்க்கெட் சாலைகளில் சிதறியிருப்பார்கள். அங்கு வரும் அல்லது அந்தப் பக்கமாக வரும் இளிச்சவாயர்களை சரியாக அடையாளம் காண்பார்கள்.

ஆடம்பரத்துக்கு ஆசைப்படும் குணம் யார் கண்களில் தென்படுகிறதோ... யார் ஈ நுழைவது கூட தெரியாமல் வாயைப் பிளந்தபடி கடைகளில் விற்கப்படும் வெளிநாட்டுப் பொருட்களை பார்க்கிறார்களோ அவர்கள் அருகில் தாவூத்தின் ஆட்கள் செல்வார்கள். கண்களால் அலசி எடை போடுவார்கள். அவர்களை மடக்க ஸ்கெட்ச் போடுவார்கள். பின்னர் மெல்ல பேச்சு கொடுப்பார்கள்.

"ஃபாரீன் வாட்ச் வாங்க வந்தீங்களா?"

சம்பந்தப்பட்ட நபர் உஷாராவார். ஏமாற்றுப் பேர்வழிகள் மொஹாத்தா மார்கெட்டில் நடமாடுவதாகவும், அவர்களிடம் ஏமாற வேண்டாம் என்றும் சக நண்பர்கள் கூறிய அறிவுரை எல்லாம் அந்த நேரத்தில் நினைவுக்கு வரும். உடலை விறைத்து, முகத்தை இறுக்கமாக்கி பதிலே சொல்லாமல் நகர்வார்கள்.

இது போதும், பலியாடு சிக்கிவிட்டது என்று தாவூத்தின் ஆட்கள் உணர.

அதன்பின் ஓர் இடைவெளியுடன் அந்த நபர்களை பின் தொடர்வார்கள். தப்பித்தவறிக் கூட பேச்சு கொடுக்க மாட்டார்கள்.

'அப்பாடா ஏமாற்றுப் பேர்வழிகளிடமிருந்து தப்பிவிட்டோம்' என்று அந்த நபரும் இறுக்கம் தளர்ந்து இயல்பாவார். ஆசைபெருக வெளிநாட்டுப் பொருட்களை பார்க்க ஆரம்பிப்பார். கூட்டமாக இருக்கும் கடைகளை எட்டிப் பார்ப்பார். மற்றவர்கள் வாங்கும்



அயிட்டங்களை இயலாமையுடன் ஆராய்வார். தனக்குப் பின்னாலேயே வந்து நிற்கும் தாவூத்தின் ஆட்களை பொருட்படுத்த மாட்டார்.

பொறுக்க முடியாதபோது “இந்த வாட்ச் என்ன விலை?” என்று விசாரிப்பார். கடைக்காரரர் சொல்லும் விலை அவருக்கு ஏமாற்றம் அளிக்கும். அவ்வளவு பணம் தன்னிடம் இல்லையே என்று தவிப்பார். இருக்கும் பணத்துக்கு வாட்ச் கிடைக்குமா என்று கேட்பார். “அந்தப் பணத்துக்கு லோக்கல் கடிகாரம் கூட கிடைக்காது. வந்துட்டானுங்க...” என கடைக்காரரர் சலித்துக் கொள்வார். அதை காதில் கேட்டபடியே கண்களில் நிராசையுடன் அடுத்த கடையை நோக்கி நகர்வார்.

குறிப்பிட்ட நபர் எந்த விலைக்கு கடிகாரத்தை கேட்கிறார் என்பதை குறித்துக்கொள்ளும் தாவூத்தின் ஆள், அந்த இடத்தை விட்டு நகர்ந்துவிடுவான். இவனது வருகைக்காகவே அங்கிருக்கும் பானிபூரி கடையில் இன்னொரு இளைஞன் காத்திருப்பான். “ஐந்நூறுக்கு படியும்...” என அவனுக்கு மட்டும் கேட்கும் விதத்தில் முணுமுணுத்துவிட்டு அங்கிருந்து சென்றுவிடுவான்.

இதன் பின்னர், பானிபூரி கடையில் இருந்த இளைஞன், சம்பந்தப்பட்ட நபரை பின்தொடர்வான். ஒவ்வொரு கடையிலும் அவர் பேரம் பேசும்போது அவருக்கு பின்புறமோ அல்லது

பக்கவாட்டிலோ நின்றுகொள்வான்.

கிட்டத்தட்ட அவர் முழுமையாக தோற்றுப்போகும் கணத்தில் பேச்சு கொடுப்பான்.

"ஃபாரீன் வாட்ச் வாங்க வந்தீங்களா?"

இந்த முறை அந்த நபர் உடலை விறைத்துக்கொள்ளவோ, முகத்தை இறுக்கமாக வைத்துக்கொள்ளவோ மாட்டார்.

அவரையும் அறியாமல் "ஆமாம்..." என்று பதில் சொல்வார்.

"அப்ப என் கூட வாங்க..."

"எங்க?"

"நல்ல கடைக்கு கூட்டிட்டுப் போறேன். இவங்க எல்லாம் ஏமாற்றுப் பசங்க. கொஞ்சம் அசந்தீங்கன்னா உங்க தலைல மிளகாய் அரைச்சுடுவாங்க..."

"தேங்க்ஸ். ஆனா, நான் வரலை..."

"ஏன் சார்..."

"என்கிட்ட அவ்வளவு பணமில்லை..."

"எவ்வளவு இருக்கு..?"

"ஐந்நூறு..."

"வாட்ச்சோட விலையே அவ்வளவுதானே?"

"என்னது..?"

"ஆமா சார்..."

"பொய் சொல்லாத. ஒண்ணுக்கு பத்து கடைல விசாரிச் சுட்டேன். எல்லாருமே இரண்டாயிரம் ரூபா சொல்றாங்க..."

"பொய் சார். அடுத்தவன் காசை இப்படித்தான் கொள்ளையடிக்கிறாங்க..."

"நீ என்னப்பா சொல்ற?"

"நிஜத்தை சொல்றேன் சார். உண்மைலயே ஒரு ஃபாரீன் வாட்ச்சோட விலை ஐயாயிரம் ரூபா. அந்த விலைக்கு வித்தாதான் கட்டுப்படியாகும். அப்படித்தான் வெளில விக்கறாங்க. ஆனா, மொஹாத்தா மார்க்கெட் அப்படியில்லை. இங்க விக்கறது பூரா கள்ளக்கடத்தல் அயிட்டங்கள். ஐந்நூறு ரூபாய்க்கே ஒரிஜினல் கிடைக்கும்..."

"உன்னை எப்படி நான் நம்பறது?"

"சார், உங்களைப் பார்க்கும்போதே நீங்க எப்பேர்பட்ட உஷாரான ஆளுன்னு தெரியுது. ஆரம்பத்துலேந்து உங்களை கவனிச்சுட்டுத்தான் இருக்கேன். யார்கிட்டயும் நீங்க ஏமாறலை. அப்படிப்பட்ட உங்களை என்னால மட்டும் எப்படி சார் ஏமாற்ற முடியும்..?"

"...."

"பயப்படாம என்கூட வாங்க. பொருளை காட்டறேன். பிடிச்சிருந்தா வாங்குங்க. இல்லைனா போயிடுங்க..."

"சரி, உனக்கு எவ்வளவு கமிஷன் வேணும்?"

"ஒரு பைசா கூட வேண்டாம் சார். எங்கப்பா மாதிரியே நீங்க இருக்கீங்க. அதனாலதான் ஹெல்ப் பண்ண வந்தேன். கடைக்காரன் என் ஃபிரெண்டுதான். நான் சொன்னா கேட்பான்..."

"என்னால நம்பவே முடியலை..."

"பொருளை பாருங்க... அப்படியே அசந்துடுவீங்க. ஆனா, ஒண்ணு சார். தயவுசெஞ்சு இவ்வளவு கம்மி ரேட்டுக்கு நீங்க வாட்ச் வாங்கினதை மட்டும் யார்கிட்டயும் சொல்லாதீங்க. உங்க குடும்பத்துல கூட மூச்சுவிடாதீங்க. அப்புறம் எல்லாரும் வந்து கேட்டா என்னால வாங்கித் தர முடியாது. தவிர, இது ஸ்மக்லிங் கூட்ஸ். போலீசுக்கு விஷயம் தெரிஞ்சதுன்னா நீங்களும் மாட்டிப்பீங்க..."

"அது எனக்கும் தெரியும் தம்பி... கவலைப்படாத. யார்கிட்டயும் சொல்ல மாட்டேன்..."

"அது போதும் சார்..." என்றபடி தங்கள் கடைக்கு அவரை அழைத்துச் செல்வான். தாவூத் அவர்களை வரவேற்பான். "பாய்... ஃபாரீன் வாட்ச் வேணும்..."

தாவூத் எடுத்துக் காட்டுவான். பார்க்கும்போதே வாடிக்கையாளரின் கண்கள் விரியும்.

அழைத்துச் சென்ற இளைஞன் அவருக்கு கேட்கும் விதத்தில் மெல்ல குனிந்து தாவூத்திடம் கிசுகிசுப்பான். "நமக்கு தெரிஞ்ச கஸ்டமர். ரொம்ப குளோஸ். மத்தவங்களுக்கு சொல்ற ரேட்டை இவருக்கு சொல்லக்கூடாது..."

"அப்ப நீயே விலையை சொல்லு..."

"ஐந்நூறு ரூபா..."

"உனக்காக சம்மதிக்கறேன். ஆனா, அவர் வெளில போய் யார்கிட்டயும் இந்த விலையை சொல்லக்கூடாது..."

"சத்தியமா மாட்டேன். தம்பி என்கிட்ட எல்லாத்தையும் சொல்லிட்டான்..." சட்டென்று பதிலளிப்பார் அந்த நபர்.

"அப்படீன்னா சரி. இந்த மாடல் உங்களுக்கு பிடிச்சிருக்கா?"

"ம்..."

"பேக் பண்ணிடலாமா?"

"ம்..."

அழகாக பேக் செய்து தாவூத் கொடுப்பான்.

"தேங்க்ஸ் பாய்..." என்றபடி அவருடன் அந்த இளைஞன் வெளியே வருவான்.

"ரொம்ப நன்றி தம்பி..." நெகிழ்வார்.

"இருக்கட்டும் சார். பத்திரமா போயிட்டு வாங்க. வழில எங்கயும் இதை பிரிக்காதீங்க. போலீஸ் கண்ல பட்டீங்கன்னா அவ்வளவுதான். கேள்வியே கேட்காம உங்களை பிடிச்சு ஜெயில்ல போட்டுடுவாங்க. அப்புறம் உங்க மானம், மரியாதை எல்லாம் போயிடும். இந்த அவமானம் தாங்காம உங்க மனைவி, குழந்தைங்க எல்லாம் தற்கொலை பண்ணிப்பாங்க. அதனால வீட்டுக்குப் போய் பிரிங்க..."

"சரி தம்பி... அப்படியே செய்யறேன்..."

சொன்னது போலவே வீட்டுக்கு சென்று பார்சலை பிரிப்பார். ஆனால் - அதற்குள் அவர் பார்த்த, அவர் தேர்ந்தெடுத்த கடிகாரம் இருக்காது.

பதிலாக கருங்கல் இருக்கும்.

தான் ஏமாந்த இந்த விஷயத்தை வீட்டிலும், வெளியிலும் அவரால் சொல்ல முடியாது.

'ஏமாளி' பட்டம் கிடைக்கும். வாழ்நாள் முழுக்க கேலி செய்தே நோகடிப்பார்கள். காவல்துறையில் புகார் அளித்தாலோ, கடத்தல் பொருளை வாங்கிய குற்றத்துக்காக முதலில் அவரைத்தான் கைது செய்வார்கள்.

எனவே, அமைதியாக இருந்துவிடுவார். நல்லவேளையாக இரண்டாயிரம், மூன்றாயிரம் என்று ஏமாறாமல் வெறும் ஐந்நூறைத்தானே பறிகொடுத்தோம் என தன்னைத்தானே சமாதானம் செய்துகொள்வார்.

இப்படித்தான் தாவூத், தன் குழுவினருடன் சேர்ந்து சம்பாதிக்க ஆரம்பித்தான். இதெல்லாம் நடந்தபோது அவனுக்கு வயது 16.

கிடைத்த பணத்தை சரியாக பங்கிட்டான். தன்னை நம்பி, தன்னுடன் இருக்கும் மற்றவர்களுக்கு ஒழுங்காக சம்பளம் கொடுத்தான். விழா நாட்களில் போனஸை அள்ளி வழங்கினான்.

தன் வீட்டையும் அவன் ஏமாற்றவில்லை. குடும்பத்தினருக்கு தாராளமாகவே செலவு செய்தான். சகோதரர்களுக்கும், சகோதரிகளுக்கும் அள்ளி இறைத்தான்.

அமினாவுக்கு ஏதோ புரிந்தது. ஆனால், தட்டிக் கேட்க முடியவில்லை. பிள்ளைகள் அனைவரும் தாவூத்துக்கு கட்டுப்பட்டவர்களாக இருந்தார்கள். எனவே அவ்வப்போது முணுமுணுப்பதுடன் நிறுத்திக்கொண்டாள்.

இப்ராஹிம் கஸ்கர், இதையெல்லாம் உணரும் நிலையில் இல்லை. வேலை வேலை என்று அலைந்து கொண்டிருந்தார். அதற்கு ஏற்பவே க்ரைம் பிராஞ்ச் பணி அவரை அசையவிடாமல் கட்டிப் போட்டது.

இப்படி கடை மூலம் சம்பாதிக்க ஆரம்பித்த தாவூத், அடுத்த கட்டத்துக்கு நகர்ந்தான்.

அதுதான் அரசியல்.

இதை அவனாக தேடிச் செல்லவில்லை. பழம் நழுவி பாலில் விழுவது போல் அதுவாக அவனை தேடி 1972ல் வந்தது.

இதற்கு காரணமாக இருந்தவர், பாஷு தாதா. உடற்பயிற்சி செய்து தன் உடலை வலுவாக்கி வைத்திருந்தாரே... தாவூத்தின் தந்தையான இப்ராஹிம் கஸ்கரை பழிவாங்க வேண்டுமென்று துடித்தாரே... அதற்காகவே இப்ராஹிமின் நண்பரான ரஹிமை தன் வலது கையாக சேர்த்துக்கொண்டாரே... அவரேதான்.

அப்போது பம்பாயில் கால்பந்து விளையாட்டுக்குத்தான் மவுசு அதிகம். கிரிக்கெட் எல்லாம்

அப்போது பிரபலமாகவில்லை. போட்டி நடக்கும்போது ரேடியோவை டியூன் செய்து வர்ணனைகளை கேட்பதும், ஆரவாரம் செய்வதும் சர்வசாதாரணமான நிகழ்வு.

இதற்கு பாஷு தாதாவும் விதிவிலக்கல்ல. அவருக்கு ஃபுட்பால் பிடிக்கும். ஓய்வுநேரத்தில் ஆடுவார். அதைவிட மேட்சை நேரில் பார்க்க முதல் ஆளாக செல்வார். அப்படித்தான் ஒருமுறை கால்பந்து போட்டியைக் காண மைதானத்துக்கு சென்றார். போட்டி தொடங்கியது. தன்னை மறந்து ஆட்டத்தை கவனிக்க ஆரம்பித்தார்.

சரியாக அந்த நேரத்தில்தான் ரஹிம் அவர் அருகில் வந்தார். குனிந்து அந்தத் தகவலை அவரிடம் சொன்னார்.

“தாதா... தேர்தல் வரப்போகுது...”

# 31

பாஷா தாதா திரும்பாமல் புன்னகைத்தார். “அது எல்லாருக்கும் தெரிஞ்ச விஷயம்தானே ரஹிம்? மகாராஷ்டிரா மாநிலத்துக்கு சட்டமன்ற தேர்தல் வருதுன்னு ஊர் முழுக்க தெரியுமே...”

“உண்மைதான் தாதா. ஆனா...”

“ஆனா?”

“மவுலானா முரண்டு பிடிக்கிறார்...”

பாஷா தாதாவின் புன்னகை மறைந்தது.

சட்டென்று ரஹிமை நோக்கி திரும்பினார். “என்ன சொல்ற?”

“ரொம்ப நேர்மையா இருக்கணும்னு நினைக்கிறார்...”

“அதுக்காக?”

“நம்மை கட்டம் கட்டப் பார்க்கிறார்...”

“சரி நான் பார்த்துக்கறேன்...” என்று சொன்னதற்கு அப்பால் பாஷா தாதா எதுவும் பேசவில்லை. மவுனமாக கால்பந்து போட்டியை ரசிக்க ஆரம்பித்துவிட்டார். ரஹிமும் நிலமையை புரிந்துகொண்டு அங்கிருந்து நகர்ந்துவிட்டார்.

தாதா மனதில் என்ன ஓடுகிறது என்பது ரஹிமுக்கு தெரியும்.

உமர்காதி தொகுதி, பாஷா தாதாவின் தாயகம். அவர் வாழ்வது அந்தத் தொகுதியில்தான். எனவே எப்பொழுதும் தனக்கு வேண்டியவர் சட்டமன்ற உறுப்பினராக வேண்டும் என்றுதான் நினைப்பார். கணக்கிடுவார். காய்களை நகர்த்துவார். வெற்றி பெற வைப்பார்.

அப்படித்தான் மவுலானா ஜியா உல் தின் புக்காரி - சுருக்கமாக மவுலானாவை கடந்த தேர்தலில் எம்.எல்.ஏ. ஆக்கினார். தனக்கு விசுவாசமாக இருப்பார் என்று நம்பினார். தொடக்கத்தில் அப்படி இருக்கவும் செய்தார்.

ஆனால் - சமீப காலமாக மவுலானா குறித்து முரண்பாடாகவே தகவல்கள் கசிகின்றன. அவரது ஆட்கள் நாள்தோறும் குறைகளை அடுக்கிய வண்ணமே இருந்தார்கள். இப்போது ரஹிம், வெட்ட வெளிச்சமாக்கிவிட்டார். போதும். இதற்கு மேல் மவுலானாவின் சேவை உமர்காதி தொகுதிக்கு தேவையில்லை. முடிவெடுத்தார். அதை செயல்படுத்தினார்.

வேட்பாளர் பட்டியலை அப்போதைய முஸ்லிம் லீக் கட்சி வெளியிட்டபோது அதில், மவுலானாவின் பெயர் இடம்பெறவில்லை. உமர்காதி தொகுதிக்கு வேறொருவர் நிறுத்தப்பட்டார்.

இதை மவுலானா எதிர்பார்க்கவில்லை என்று சொல்ல முடியாது. என்றாலும் அறிவிப்பு வெளியானபோது இவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. இதற்கெல்லாம் காரணம் பாஷா தாதாதான் என்பது யாரும் சொல்லாமலேயே புரிந்தது. ஒரு ரவுடியின் கட்டுப்பாட்டுக்குள் உமர்காதி தொகுதி இருப்பதை

ஜீரணிக்க முடியவில்லை. தவிர, தனிப்பட்ட முறையில் இதை தனக்குக் கிடைத்த அடியாகவும் கருதினார்.

எனவே பதிலுக்கு அடிக்க முடிவு செய்தார். இதற்காக மவுலானா தேர்ந்தெடுத்த ஆயுதம், இப்ராஹிம் கஸ்கர்!

பல இஸ்லாமிய இளைஞர்கள் தாவூத் இப்ராஹிம் பின்னால் செல்வதையும், அவனது வாக்குக்கு கட்டுப்பட்டு நடப்பதையும் சில வருடங்களாகவே மவுலானா கவனித்துக்கொண்டுதான் இருக்கிறார். எதற்கும் துணிந்த இந்த இளைஞர்களை மட்டும் நம் பக்கம் திருப்பிவிட்டால் பாஷு தாதாவின் கண்களில் விரல்விட்டு ஆட்டலாம். இதற்காக பெரிதாக மெனக்கெட வேண்டியதில்லை. இப்ராஹிம் கஸ்கருக்கும், பாஷு தாதாவுக்கும் இருக்கும் பகை கலந்த நட்பு ஊரறிந்த ரகசியம்தான். அந்தக் கனலை விசிறி விட்டால் போதும்.

கொழுந்துவிட்டு எரியும். தாதாவும் சாம்பலாவார்.

இந்த முடிவுக்கு வந்ததுமே நேராக இப்ராஹிமை தேடிச் சென்றார்.

"வணக்கம் பாய்..."

"வாங்க மவுலானா... என்ன இந்தப் பக்கம்?"

"உங்க உதவி எனக்கு வேணும்..."

சொன்னவரை உற்றுப் பார்த்தார் இப்ராஹிம். நல்ல மனிதர். மத சடங்குகளில் தீவிர பற்றுள்ளவர். அதற்காக மற்ற சமயத்தை சேர்ந்தவர்களை குறை சொல்பவரில்லை. வேளை தவறாமல் தொழுகை செய்பவர். மக்களுக்கு நல்லது செய்ய துடிப்பவர். அப்படிப்பட்டவருக்கு தன்னால் என்ன உதவி செய்ய முடியும்?

"புரியலையே..."

"விளக்கமாவே சொல்லிடறேன். இந்தமுறை எனக்கு சீட் தரலை..."

"கேள்விப்பட்டேன்..."

"காரணம் பாஷு தாதா..."

இப்ராஹிம் எதுவும் பேசாமல் அமைதியாக இருந்தார். மவுலானாவே தொடர்ந்தார்.

"உமர்காதிக்கு நான் நல்லது பண்ணறது தாதாக்கு பிடிக்கலை..."

"ம்..."

"திட்டம் போட்டு என்னை ஓரம் கட்டிட்டார்..."

"புரியுது. இதுக்கு நான் என்ன செய்ய முடியும்?"

"என்னை வெற்றி பெற வைக்க முடியும்..."

"என்ன சொல்றீங்க மவுலானா?"

"நான் சுயேச்சையா நிற்கப்போறேன்..."

"வாழ்த்துகள். ஆனா, என்னால பிரசாரத்துல ஈடுபட முடியாது. என் வேலை அதுக்கு அனுமதிக்காது..."

"தெரியும் பாய்..."

“அதுமட்டுமில்லை. பண உதவி செய்யற நிலைலயும் நானில்லை...”

“அதுவும் தெரியும் இப்ராஹிம்...”

‘‘அப்புறம்? அதிகாரத்தை பயன்படுத்தி பணக்காரங்க கிட்டேருந்து நிதி வசூல் பண்ணித் தர சொல்றீங்களா?”

“கோபப்படாதீங்க பாய். உங்களைப் பத்தி மத்தவங்களை விட எனக்கு நல்லாவே தெரியும். உங்க நேர்மையை பக்கத்துல இருந்து பார்த்தவன் நான். அப்படியிருக்கும்போது இது மாதிரியான காரியத்தை செய்யச் சொல்வேனா?”

“பிறகு உங்களுக்கு என்னதான் வேணும்?”

“உங்க மகன் தாவூத்...”

“என்னது?”

“ஆமாம் பாய். அவன் எனக்காக பிரசாரம் செய்யணும்...”

“அவன் ரொம்ப சின்ன பையன்...”

“உங்களுக்குத்தான். வெளியுலகுக்கு அவன் மீசை முளைச்ச இளைஞன். பதினாறு, பதினேழு வயசாகுது. அவன் பின்னாடி முஸ்லிம் இளைஞர்கள் நிக்கறாங்க. அவன் எது சொன்னாலும் அவங்க கேட்கறாங்க. இப்படிப்பட்ட இள ரத்தம்தான் சமூகத்துக்குத் தேவை. அப்பத்தான் பாஷு தாதா மாதிரியான ரவுடிகளோட கொட்டத்தை அடக்க முடியும். இந்திய இறையாண்மையை காப்பாற்ற முடியும். என்ன சொல்றீங்க..?”

மறுக்கும் நிலையில் இப்ராஹிம் இல்லை.

தன் மகனை பற்றி அரசல் புரசலாக ஏதேதோ கேள்விப்பட்டு இதுநாள் வரை மனவருத்தத்தில் இருந்தார். ஆனால், அவனுக்குள் இருக்கும் நல்ல குணத்தை மவுலானா பெருமையாக பேசுகிறார். புகழ்கிறார். ஒருவேளை இவருடன் சுற்றினால் அவன் திருந்தக் கூடும். ‘உலகமே உன் மகன் பேச்சுக்கு கட்டுப்படும்’ என்று பாபா சொன்ன அருள்வாக்கு இப்படித்தான் பலிக்கும் போலிருக்கிறது...

“சரி. அவனை நாளை உங்க வீட்டுக்கு அனுப்பறேன்...”

சொல்லிவிட்டாரே தவிர அவ்வளவு சுலபத்தில் தாவூத்தை இதற்கு இணங்க வைக்க முடியவில்லை. மகனை வரச்சொல்லி தகவல் அனுப்பினார். வரவில்லை. வேலை முடிந்து அன்று விரைவாகவே வீடு திரும்பினார். அவனது வருகைக்காக காத்திருந்தார்.

முடிந்தவரை வீடு திரும்புவதை தாவூத் தள்ளிப்போட்டான். என்ன விஷயமாக அப்பா தன்னை சந்திக்க விரும்புகிறார் என்று தெரியாமல் குழம்பினான். ஒருவேளை வெளிநாட்டுக் கடிகாரங்களை காட்டி, தான் ஏமாற்றுவதை கண்டுபிடித்துவிட்டாரோ... அதை கண்டிக்கத்தான் அழைக்கிறாரோ என சஞ்சலப்பட்டான்.

சரி, எதுவாக இருந்தாலும் பார்த்துக்கொள்ளலாம் என்று வீட்டுக்கு வந்தான். தொலைவிலேயே அப்பா காத்திருப்பது தெரிந்தது. மூச்சை இழுத்துப் பிடித்தபடி அருகில் சென்றான்.

“கூப்பிட்டீங்களா?”

“அஞ்சு மணி நேரத்துக்கு முன்னாடி...”

‘‘மன்னிச்சிடுங்க. கடைல யாரும் இல்லை. அதான் வர முடியலை...”

“ம்... வியாபாரம் எப்படி போகுது...”

“ஓரளவு நல்லாவே போகுது...”

“ஏமாத்தறேன்னு கேள்விப்பட்டேன்...”

‘‘வேண்டாதவங்க அப்படி கிளப்பிவிட்டிருக்காங்க. ஆதாரத்தோட யாராவது அப்படி புகார் கொடுத்திருக்காங்களா?”

“இல்லை...”

“அப்ப புரளியை நம்பாதீங்க...”

“நம்பியிருந்தேன்னா இந்நேரம் வாய்ல பேசிக்கிட்டு இருக்க மாட்டேன். பெல்ட்டால விளாசியிருப்பேன்...”

“அதுதான் உங்களுக்கு கைவந்த கலையாச்சே...”

“என்ன கிண்டலா..?”

“நிஜம் கிண்டலா தெரிஞ்சா அதுக்கு நான் பொறுப்பில்லை...”

“நல்லா பேசக் கத்துகிட்ட...”

“இதுதான் என் வியாபாரத்துக்கான மூலதனம்...”

“அது மவுலானாவுக்கு வேண்டுமாம். நாளைக்கு அவரைப் போய் பாரு...”

தாவூத் விழித்தான். பொறுமையாக மவுலானா என்ன எதிர்பார்க்கிறார் என்பதை இப்ராஹிம் அவனுக்கு புரிய வைத்தார்.

சில நிமிடங்கள் யோசித்தவன், நேராக ஜெனாபாயை தேடிச் சென்றான்.

விவரம் கேட்டதுமே “இந்த சான்ஸை விட்டுடாதே...” என்றாள் ஜெனாபாய். அவள் கண்களையே தாவூத் உற்றுப் பார்த்தான்.

“உன் நல்லதுக்குத்தான் சொல்றேன். அதிகாரம் ஒரு போதைன்னு மத்தவங்க சொல்வாங்க. அதையெல்லாம் நம்பாத. உண்மைல அதிகாரம்தான் உலகத்துலயே சிறந்த சக்தி. அதை மட்டும் நீ அடைஞ்சிட்டேனா போதும். உன் முன்னாடி எல்லாரும் கைகட்டி நிப்பாங்க. நீ என்ன சொன்னாலும் கேட்பாங்க...”

“நிஜமாத்தான் சொல்றீங்களா?”

“என்னை உன் அம்மாவா நினைக்கிறே இல்லையா?”

“ஆமா...”

“அப்ப மவுலானாவுக்காக பிரசாரம் செய்...”

செய்தான். தன் குழுவினருடன் சேர்ந்து உமர்காதி தொகுதி முழுக்க சுற்றினான். ஒரு சந்து விடாமல் அலைந்தான். துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தான். ஊர்வலமாக தாங்கள் செல்லும்போது போக்குவரத்து நின்றதை பார்த்தான். காவல்துறையை சேர்ந்தவர்கள் தங்களுக்கு பாதுகாப்பு அளிப்பதை

கவனித்தான். பைசா வாங்காமல் தேனீர் கொடுக்க கடைக்காரர் முன்வந்ததை மனதில் குறித்துக்கொண்டான். மரியாதையுடன் மக்கள் தங்களிடம் பேசியதை அசை போட்டான். சாமான்யர்களின் வணக்கத்தை ஏற்றான். செல்வந்தர்களின் அச்சத்தை பார்த்து புன்னகைத்தான்.

உண்மைதான். இந்த உலகிலேயே பெரிய சக்தி அதிகாரம்தான். ஒருவர் பாக்கியில்லாமல் அனைவரையும் அதுதான், அதுவேதான், அது மட்டும்தான் ஆட்டிப்படைக்கிறது. பெரியப் பெரிய பலசாலிகள் கூட சிரம் தாழ்த்தி இதற்கு முன்புதான் மண்டியிடுகிறார்கள்.

இந்த அதிகாரம் எனக்கு வேண்டும். நானே அதிகாரமாக வேண்டும்.

இந்த முடிவுக்கு தாவூத் வந்தது அப்போதுதான். அதனாலேயே மவுலானா ஒவ்வொரு நாளும் போதித்த நீதி, நேர்மை, கத்தரிக்காய், புடலங்காய் எல்லாம் சகித்துக்கொண்டான். ஒருபோதும் இவரைப் போல் வாழக்கூடாது என்ற எண்ணம் நாள்தோறும் அவனுக்குள் வேரூன்றிக்கொண்டேயிருந்தது.

ஆனால், ஒருவிஷயம்தான் அவனுக்கு புரியவில்லை. பாஷு தாதா ஆதரிக்கும் வேட்பாளரை எதிர்த்து மவுலானா போட்டியிடுகிறார். எனில், கோபப்பட வேண்டிய முதல் ஆள் அவர்தான். நியாயமாகப் பார்த்தால் தங்கள் பிரசாரத்தை அவர் தடுக்க வேண்டும். குறைந்தபட்சம் ஊர்வலத்தையாவது கலைக்க வேண்டும்.

அப்படி எதுவும் பாஷு தாதா செய்யவில்லை. சொல்லப் போனால் தங்களை ஒரு பொருட்டாகவே அவர் மதிக்கவில்லை. இப்படி சிலர் நடமாடுகிறார்கள் என்பதைக்கூட தன் நினைவின் அடி ஆழத்திலிருந்து அழித்தவரை போலவே தென்பட்டார்.

இது ஏன்?

இதற்கான விடை, தேர்தல் நடக்கும் வரை தாவூத்துக்கு கிடைக்கவில்லை. முடிவு தெரிந்த போதுதான் பதிலும் கிடைத்தது.

மவுலானா டெபாசிட்டை இழந்தார். பாஷு தாதா ஆதரித்த வேட்பாளர்தான் அதிக வாக்கு வித்தியாசத்தில் வெற்றி பெற்றார். மட்டுமல்ல, 1972க்கு பிறகு மவுலானா இருக்கும் இடம் தெரியாமல் மறைந்தார்.

பொளேர் என அவனுக்கு உறைத்தது. அதிகாரத்தை, பவரை ஒருபோதும் நேர்வழியில் பெறவோ அடையவோ முடியாது. குறிப்பாக சொல்ல வேண்டுமானால் இதற்கு மக்கள் ஆதரவு தேவையே இல்லை. மக்கள், வெறும் மாக்கள்தான்.

சொன்னதை செய்வார்கள். கைகாட்டும் திசையில் நடப்பார்கள். என்ன... சொல்வதற்கும், கை காட்டுவதற்கும் பயத்தை விதைக்க வேண்டும். ரத்தத்தின் ஒவ்வொரு அணுவிலும் அச்சம் ஊற்றெடுக்க

என்னவெல்லாம் செய்ய வேண்டுமோ அதையெல்லாம் தூவ வேண்டும். பெயரை கேட்டாலே நரம்புகள் நடுங்கும் வகையில் காரியங்களை நிகழ்த்த வேண்டும்.

இதையெல்லாம் சாதித்துவிட்டால் போதும்... அதிகாரம் இருக்கும் இடம் தேடி வரும். மற்றபடி 'நல்ல மனிதர்' இமேஜ் காது குடையக்கூட உதவாது...

இந்தப் பாடத்தைத்தான் பதினேழு வயது தாவூத் இப்ராஹிமுக்கு தன்னையும் அறியாமல் பாஷு தாதா கற்றுக் கொடுத்தார். அதை அவனும் கசடற கற்றான். அதன் விளைவைத்தான் இன்று வரை நாம் அனுபவித்துவருகிறோம்.

32

எந்தப் பாடத்தை தாவூத்துக்கு தன்னையும் அறியாமல் பாஷு தாதா கற்றுத் தந்தாரோ அந்தப் பாடத்தால் அவரே பாதிக்கப்பட்டார். இதற்காக மாதக் கணக்கில் அவர் காத்திருக்க வேண்டிய அவசியமே ஏற்படவில்லை. தேர்தல் முடிவுகள் அறிவிக்கப்பட்ட சில நாட்களிலேயே தனது எதிரி யார் என்பதை தாதா கண்டுகொண்டார்.

இதற்கான அச்சாரம் அன்றுதான் தூவப்பட்டது.

அதிகாலையிலேயே எழுந்துவிட்ட தாவூத், தன் வீட்டிலிருந்து புறப்பட்டான். நடந்தல்ல. மோட்டார் சைக்கிளில். தேர்தல் வேலை பார்த்ததற்கு கிடைத்த சன்மானம். தனது உடல் உறுப்புகளில் ஒன்றாகவே அந்த வாகனத்தை கருத ஆரம்பித்திருந்தான். சீட்டில் நிமிர்ந்து உட்காருவான். காற்றை ஊடுருவும் வேகமும், தடதடவென ஒலிக்கும் சைலன்சரும் தனது இருப்பை மற்றவர்களுக்கு உணர்த்துவதாக கருதினான். கருதவும்பட்டான்.

இடைப்பட்ட நாளில் முஸாஃபிர்கானா ஏரியாவிலும், பாக்மோடியா தெருவிலும் அசைக்க முடியாத சக்தியாக உருவெடுத்திருந்தான். சின்ன பையன்தான். அரும்பு மீசை. பதினேழு வயது. ஆனாலும் ஏரியா பயப்பட்டது. வட்டாரம் வளைந்து கொடுத்தது.

நாகபதாவுக்குள் வேகத்தை குறைக்காமல் வலது பக்கம் திரும்பியவன்... சட்டென்று பிரேக் பிடித்தான். அதிர்ச்சியுடன் ஏறிட்டான். ரத்தம் சொட்டச் சொட்ட கரீம் சித்திக் ஓடிவந்து கொண்டிருந்தான். நெருங்கிய சகா. குழுவில் ஒருவன்.

“என்ன ஆச்சு?”

வாய் வழியே மூச்சுவிட்டபடி நின்ற சித்திக் பேச்சு வராமல் தடுமாறினான்.

“எங்கயாவது விழுந்தியா?”

இல்லை என்று தலையசைத்தான்.

“வண்டி ஏதாவது மோதிடிச்சா?”

மறுத்தான்.

“அப்புறம் எப்படி இந்த காயம் ஏற்பட்டுச்சு?”

“அடிச்சிட்டாங்க தாவூத் பாய்...”

“என்னது?” சைட் ஸ்டாண்ட் போட்டபடி வேகமாக வண்டியை விட்டு இறங்கினான். “யாரு?”

“ஹமீது...”

“நீ என் ஆளுன்னு தெரிஞ்சுமா?”

“அதனாலத்தான் அடிச்சான் பாய்...”

தாவூத்தின் கண்கள் தகதகவென நெருப்பை கக்கின.

அந்தப் பகுதியை சேர்ந்தவர்கள்தான் ஹமீதும், மஜீத்தும்.

இருவரும் சகோதரர்கள். பதான்கள். ஹமீது ஓர் அடாவடி பேர்வழி. வாட்டசாட்டமான உருவம். மற்றவர்களை மிரட்டுவதும் பயமுறுத்துவதும்தான் அவனது பொழுதுபோக்கு. மஜீத், போதைக்கு அடிமையானவன்.

இருவரையுமே தாவூத்துக்கு பிடிக்காது. ஒழித்து கட்ட வேண்டும் என்றுதான் நினைப்பான். ஆனால், சகோதரர்கள் இருவரும் பாஷு தாதாவின் அடியாட்களாக இருந்தார்கள். பாஷுவின் மீது தாவூத்துக்கு இனம் புரியாத பாசம் உண்டு. காரணம், அவனது அப்பாவுக்கும் அவருக்கும் இருந்த நட்பு, உறவு. அதனாலேயே ஹமீதையும் மஜீத்தையும் விட்டு வைத்திருந்தான்.

இனி அப்படியிருக்க முடியாது. தனது ஆள் என்று தெரிந்தும் சித்திக் மீது கைவைக்க என்னத் திமிர் இருக்க வேண்டும்? சகோதரர்களின் கொட்டத்தை நசுக்க வேண்டும். விஷயம் தெரிந்தால் பாஷு தாதாவே தன்னை ஆதரிப்பார்.

"ஏறு..."

பின் சீட்டில் சித்திக் அமர்ந்தான். வண்டி வேகமாக ஹமீதின் வீட்டை நோக்கி பறந்தது. வாசலில் நிறுத்திவிட்டு இருவரும் இறங்கினார்கள். புயலென நுழைந்தார்கள். எதிர்பட்ட ஹமீதை கேள்வியே கேட்காமல் பளாரென்று அறைந்தான். "மா...சோத்..."

"தாவூத் பாய்..." ஹமீது அலறினான்.

"என்னடா பாய்..." கொத்தாக சட்டையை பிடித்தான். "எவ்வளவு தைரியம் இருந்தா என் ஆள் மேல கை வைப்ப..." எட்டி உதைத்தான்.

சுவரில் மோதி விழுந்த ஹமீது பயத்துடன் எழுந்தான். "தப்பா புரிஞ்சுகிட்டீங்க பாய்..." குழறினான்.

"எதுடா தப்பு..?" சித்திக்கை இழுத்து முன்னால் நிறுத்தினான். "எப்படி ரத்தம் வருதுன்னு பாரு..."

"இவன் என்ன செஞ்சான் தெரியுமா?"

"எது செய்தாலும் என்கிட்ட சொல்லியிருக்கணும். இவன் என் ஆளு. இவனை அடிக்கிற உரிமை எனக்குத்தான் உண்டு. அதை விட்டுட்டு நீயே உதைப்பியா... அந்தளவுக்கு உனக்கு துணிச்சல் வந்துடுச்சா?" சரமாரியாக அறைந்தான்.

ஹமீதின் உதடு கிழிந்தது. கண்களின் முன்னால் பூச்சிகள் பறந்தன. நிலைத்தடுமாறி கீழே விழுந்தான்.

"எழுந்திரு..."

கட்டளைக்கு அடிபணிந்து தட்டுத் தடுமாறி நின்றான். சட்டைகள் கிழிந்திருந்தன. பைஜாமாவுக்குள் கால்கள் நடுங்க ஆரம்பித்தன. வாயிலிருந்து ரத்தம் ஒழுக தாவூத்தை ஏறிட்டான். எலும்புகளுக்குள் அச்சம் ஊடுருவியது. தன் இறப்பை தாவூத்தின் கண்களில் கண்டான்.

"தொங்கிரியோட பிஸ்தான்னு உனக்கும் மஜீத்துக்கும் நினைப்பா?

உங்க இரண்டு பேரையும் இத்தனை நாள் விட்டு வைச்சது எதுக்காக? உங்க அடாவடிக்கு பயந்தா? இல்லை. பாஷு தாதாவுக்காக. அவர் முகத்துக்காகத்தான் போனா போகட்டும்னு உங்களை நடமாட அனுமதிச்சேன். இனி அப்படி இருக்க முடியாது. எப்ப என் ஆள் மேலயே கைவச்சியோ... அப்பவே இந்த ஏரியால வாழற தகுதி உனக்கு இல்லாம போயிடுச்சு. நியாயமா பார்த்தா உன்னை கொன்னிருக்கணும். ஆனா, பாஷு தாதா மேல இருக்கிற மரியாதை அதை தடுக்குது. இன்னும் ஒரு மணிநேரம்தான் டைம். அதுக்குள்ள நீயும் மஜீத்தும் இங்கிருந்து போயிடணும். இல்லைனா...”

முடியை பிடித்து சாய்த்தான். “உயிரோட சமாதி கட்டிடுவேன்...” பிடியை தளர்த்தியவன் சித்திக்கை நோக்கி திரும்பினான். “வா...”

இருவரும் வெளியேறுவதை மங்கலாக ஹமீது கண்டான். தடதடவென மோட்டார் சைக்கிள் புறப்பட்டு செல்லும் ஓசை அவன் செவியை அறைந்தது. கண்களை மூடினான். எண்ணங்கள் அலை அலையாக மனதில் எழுந்தன. எப்படியும் இந்த விஷயம் பாஷு தாதாவின் செவிகளை எட்டப் போகிறது. மூன்றாம் மனிதர் மூலமாக தகவல் செல்வதற்கு பதில் தானே அவரிடம் நடந்ததை சொல்லிவிட்டால்..?

சட்டென்று இமைகளை பிரித்தான். கால்களை மடித்து சிரமப்பட்டு எழுந்தான். இருளடைந்த கண்களுடன் தன் வீட்டை விட்டு வெளியே வந்தான்.

கிழிந்த ஆடை. கலைந்த தலைமுடி. வாயிலிருந்து ரத்தம். மேலாடையில் சிவப்புக் கறை.

இந்தத் தோற்றத்துடன் சாலையில் ஹமீது நடப்பதை அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் திகிலுடன் பார்த்தார்கள். இதெல்லாம் தாவூத்தின் கைங்கரியம் என்பது அவர்களுக்கு புரிந்திருந்தது. அச்சத்துடன் சாலையோரம் ஒதுங்கினார்கள்.

உடலில் இருக்கும் அத்தனை சக்திகளையும் திரட்டி பாஷு தாதாவின் வீடு இருந்த தெருவுக்குள் ஹமீது நுழைந்தான். பார்த்த மற்ற அடியாட்கள் ஓடி வந்தார்கள்.

“என்னடா ஆச்சு? யார் உன்னை அடிச்சது?”

“தாதா இருக்காரா...”

“ம். ரேடியோல புட்பால் மேட்ச் கேட்டுகிட்டு இருக்காரு...”

அவர்களை எல்லாம் விலக்கிவிட்டு வாசல் படியில் ஏறினான். கால் தடுக்கியது. தாங்கிப் பிடிக்க அடியாட்கள் வந்தார்கள். தன் கைகளால் அவர்களை விலக்கிவிட்டு ஹாலுக்கு சென்றான்.

கண்களை மூடியபடி பிரம்பு நாற்காலியில் பாஷு தாதா அமர்ந்திருந்தார். அவர் அருகில் இருந்த ரேடியோவிலிருந்து கால்பந்தாட்ட வர்ணனைகள் வந்து கொண்டிருந்தன. உதடுகளில் புன்முறுவல். கைவிரல்களால் தாளம். போட்டியை அனுபவித்து

கேட்டுக் கொண்டிருந்தார்.

"தாதா..." உடைந்த குரலில் ஹமீது அழைத்தான்.

"யாரு?"

பதிலில்லை.

"என்ன விஷயம்னு கேட்கறேன்ல..." சலித்தபடி கண்களை திறந்தவர் சட்டென்று நாற்காலியை விட்டு எழுந்தார். பாய்ந்து ஹமீதின் அருகில் சென்றார். "என்னடா கோலம் இது?"

"தாவூத் அடிச்சுட்டான் தாதா..."

அவர் புருவம் சுருங்கியது.

"உங்களுக்கான எச்சரிக்கையாம் இது..."

இமைக்காமல் அப்படியே நின்றார். உள்ளுக்குள் எரிமலை வெடித்தது. என்ன நடக்கிறது இங்கே? சில மாதங்களுக்கு முன்பு மவுலானா முரண்டு பிடித்தார். தேர்தலில் தன்னை எதிர்த்து சுயேட்சையாக நின்றார். இருந்த இடம் தெரியாமல் அந்த ஆளை அப்புறப்படுத்தியாகிவிட்டது. ஆனாலும், மவுலானா தன்னை எதிர்த்ததை இன்னமும் ஜீரணிக்க முடியவில்லை.

இப்போது தாவூத். சின்ன பையன். வாட்ச் கடை நடத்தி பிழைப்பை நடத்துபவன். மவுலானாவுக்காக வாக்கு சேகரித்தவன். மோட்டார் சைக்கிளில் இப்போது தெனாவெட்டாக வலம் வருபவன்.

அப்படிப்பட்ட சுண்டெலி தன்னை நோக்கி விரலை நீட்டுவதா? இந்த விஷயம் மக்களுக்கு தெரிந்தால்..? அது என்ன தெரிந்தால்... அதுதான் தெரிந்துவிட்டதே. இன்னும் என்ன சந்தேகம். ரத்தம் சொட்டச் சொட்ட ஹமீது என்ன ரகசியமாகவா தன்னை நாடி வந்தான்? அனைவரும் பார்க்கும்விதமாகத்தானே வந்திருக்கிறான்.

இதை அப்படியே விடக்கூடாது. நாள்தோறும் உடற்பயிற்சி செய்வதும், அடிக்கடி மெர்சிடிஸ் காரில் வலம் வருவதும், கால்பந்தாட்ட போட்டிகளை மக்களோடு மக்களாக அமர்ந்து பார்ப்பதும் சும்மா கடமைக்காக அல்ல. தன் இருப்பை மக்களுக்கு உணர்த்துவதற்காக. அதன் வழியாக அவர்களுக்குள் இருக்கும் அச்சத்தை விசிறி விடுவதற்காக. பயம் இருக்கும்வரைதான் தன்னை மதிப்பார்கள். இல்லையெனில் பிறந்த குழந்தையும் எட்டி உதைக்கும்.

"ரஹிம்..." கர்ஜித்தார்.

"தாதா..." என்றபடி ஓடி வந்தார்.

"இப்ராஹிம் கஸ்கரை நான் பார்க்கணும். கூடவே... அவன் பேரென்ன... அதான் தாவூத்தோட அண்ணன்... ம்... சபீர்... அவனையும் வரச் சொல்..."

அடுத்த அரைமணி நேரத்தில் இருவருமே பாஷு தாதாவின் முன்னால் நின்றார்கள்.

"வேலைக்கு போகலையா இப்ராஹிம்?" நிதானமாக கேட்டார்.

"தாதா கூப்பிட்டதா தகவல் வந்தது. அதான் ஓடிவந்தேன்..."

"என் மேல அவ்வளவு மரியாதையா?"

"என்ன இப்படி கேட்டுட்டீங்க தாதா. இக்கட்டான நேரத்துல என் குடும்பத்துக்கு கை கொடுத்தது நீங்கதானே?"

"அதையெல்லாம் இன்னுமா நினைச்சுட்டு இருக்கிற?"

"சாகற வரைக்கும் மறக்க மாட்டேன் தாதா..."

"ஆனா, உன் பையன் எல்லாத்தையும் மறந்துட்டான் இப்ராஹிம்..." குரலை உயர்த்தினார் பாஷு தாதா. "என் காசுலதான் நீங்க சோறு தின்னீங்க. இல்லைனா பீயை தின்னுட்டு பிச்சை எடுத்திருப்பீங்க..."

அடிபட்ட வலியுடன் இப்ராஹிம் நின்றார். சபீருக்கோ 'பீயை தின்னிருப்பீங்க...' என்ற வாக்கியம் செருப்பால் அடித்தது போலிருந்தது.

"உன் பையன் எனக்கு சவால் விடறான். நான் யாருன்னு தெரியும்ல? அவன்கிட்ட சொல்லி வை. உன் முகத்துக்காக இந்த முறை அவனை விட்டுடறேன். இன்னொரு முறை அவன் என் வழில குறுக்கிட்டானா... கொளுத்திடுவேன். திரும்பவும் நீங்க எல்லாம் பீயைத்தான் தின்னணும். அதுவும் என் பீயை. புரிஞ்சுதா? போ..."

தலைகுனிந்தபடி வெளியேறினார்கள்.

"நீங்க பேசினது தப்பு தாதா..." தைரியத்தை வரவழைத்தபடி ரஹிம் வாய் திறந்தார்.

"எனக்கே அறிவுரை சொல்றியா?"

"இல்லை. இனி இப்படி செய்யாதீங்கன்னு சுட்டிக் காட்டறேன்..."

"தாவூத் என் ஆள் மேல கைவச்சிருக்கான்..."

"அதுக்கு அவனை கூப்பிட்டு கண்டிங்க. எதுக்காக இப்ராஹிமை திட்டறீங்க?"

"ரஹிம்..."

"அதுவும் பீயை தின்னிருப்பீங்கன்னு சொன்னதெல்லாம் தப்பு தாதா. இப்ராஹிம் யாருன்னு உங்களுக்கே தெரியும். நேர்மையான மனுஷன். இதுவரைக்கும் தன் வாழ்நாள்ல இப்படிப்பட்ட வார்த்தை எல்லாம் என் நண்பன் கேட்டதேயில்லை..."

"இப்ப கேட்டுட்டான் இல்லையா? அதுபோதும். நீ போய் உன் வேலையை பாரு..."

"பார்க்கத்தான் போறேன் தாதா. ஆனா, போகறதுக்கு முன்னாடி ஒரேயொரு வார்த்தை. நாக்குதான் உங்களுக்கு எதிரி. அதை மட்டும் கட்டுப்படுத்தலைனா பின்னாடி ரொம்பவே வருத்தப்படுவீங்க..."

பட்டார். பாஷு தாதா அதிகமாகவே, தான் உதிர்த்த வார்த்தைக்காக அனுபவித்தார். ஏனெனில் சபீர் மூலமாக நடந்ததை அறிந்த தாவூத், பொங்கி எழுந்தான்.

பம்பாய் மாஃபியாக்களுக்குள் முதல் முறையாக ரத்த ஆறு ஓட அந்த 'பீயை தின்னிருப்பீங்க...' என்ற வாக்கியம்தான் காரணமாக அமைந்தது.

# 33

“யாரு தாவூத்தா... என்னை மாதிரி சாதாரண ஆட்களை தேடியும் நீ வருவியா... ஆச்சர்யமா இருக்கு... வா... வா...” மலர்ச்சியுடன் வரவேற்றாள் ஜெனாபாய். அவள் முகமே பிரகாசமாக மாறியிருந்தது. தலையைச் சுற்றி மூடியிருந்த முந்தானையை சரி செய்தாள்.

அவளது முன் நெற்றியில் பூக்க ஆரம்பித்திருந்த வெள்ளை முடிகளை ஒரு நொடி தாவூத் உற்றுப் பார்த்தான்.

“ரொம்ப சந்தோஷமா இருக்கு. தொங்கிரி முழுக்க உன்னைப் பத்தித்தான் பேச்சு. எந்தப் பக்கம் போனாலும் யாராவது ஒருத்தன் இன்னொருத்தன் கிட்ட உன் பெருமையை சொல்லிகிட்டு இருக்கான். நீ சாதிச்சுட்ட தாவூத்... சரி, என்ன சாப்பிடற?”

“எதுவும் வேண்டாம்...”

“சும்மா பிகு பண்ணாத. சுடச்சுட பிரியாணி இருக்கு. இரு கொண்டு வரேன்...” சமையலறையை நோக்கி நகர்ந்தாள். அவளுக்கு எல்லாமே அதிசயமாக இருந்தது. இத்தனைக்கும் அவளது ஆலோசனைப்படித்தான் தேர்தல் பிரசாரத்தில் தாவூத் ஈடுபட்டான். ஆனால், அந்த சின்ன நூலை பிடித்தபடி மடமடவென உச்சிக்கு செல்வான் என்பதை அவளே எதிர்பார்க்கவில்லை.

தேர்தல் முடிந்து மாதங்கள் ஆகிவிட்டன. மவுலானா தோற்றுவிட்டார். இருந்த இடம் தெரியாமல் மறைந்துவிட்டார். என்றாலும் அவருக்காக தாவூத் உருவாக்கிய இளைஞர் கழகம் அப்படியே கலையாமல் இருந்தது. சொல்லப் போனால் முன்பை விட வலுவாக மாறியிருந்தது. இந்தப் படையை பார்த்து தொங்கிரியே நடுங்கியது.

ரமலான், பக்ரீத் என எந்தப் பண்டிகை வந்தாலும் சரி... இளைஞர் கழகத்தினர் சந்து பொந்து விடாமல் சுற்றினர். ஒவ்வொரு வீட்டுக் கதவையும் தட்டினர். வலுக்கட்டாயமாக நன்கொடையை வசூலித்தனர். விழா நாளில் முக்கியமான சாலைகளின் சந்திப்பில் பந்தல் கட்டி ஏழைகளுக்கு பிரியாணி விருந்து படைத்தனர்.

இவை அனைத்துக்கும் பின்னால் தாவூத் இருந்தான். இது வெளிப்படையாகவே அனைவருக்கும் தெரிந்திருந்தது. குறிப்பாக ஏழைகளுக்கு. தங்கள் வீட்டுப் பெண்ணுக்கு நிக்காஹ் முடிக்க வேண்டுமா? நேராக அவன் முன்பு நின்றார்கள். வயது வித்தியாசம் பாராமல் அவனை வணங்கினார்கள். பணமில்லை என முறையிட்டார்கள்.

பகுதி ஆட்கள் அனைவரும் அவனுக்கு தெரிந்தவர்கள்தான். எனவே தன் முன்னால் கோரிக்கையுடன் நிற்பவர், உண்மையிலேயே வசதி குறைவானவர் என்றால் உடனே தன் ஆட்கள் பக்கம் திரும்புவான். அவனது கண் அசைவுக்காகவே ஹனிஃப் குட்டா,

சையத் ரஸி என்கிற ரஜ்ஜி தயாராக நிற்பார்கள். இமைகளை மூடி அவன் திறக்க வேண்டியதுதான் பாக்கி. சட்டென்று வெளியேறுவார்கள்.

ஹனிஃப் குட்டா தலைமையிலான அணி செல்வந்தர்களின் கடைகளை முற்றுகையிடும். இருப்பவர்கள் தடுக்க மாட்டார்கள். எதுவும் பேசவும் மாட்டார்கள். நேராக கடைக்குள் நுழைவார்கள். கல்லாவை திறப்பார்கள். வேண்டிய தொகையை எடுத்துக் கொண்டு வெளியேறுவார்கள்.

ரஜ்ஜி தலைமையிலான அணி பணக்காரர்களின் வீட்டுக்குள் நுழையும். தொகையை வசூலிக்கும்.

அதிகபட்சம் ஐந்து மணி நேரங்களுக்குள் கோரிக்கை வைத்தவருக்கு தேவையான பணம் கிடைத்துவிடும். ஜாம் ஜாம் என்று தன் மகளுக்கு நிக்காஹ் நடத்துவார். சரியாக முகூர்த்த நேரத்துக்கு தன் பரிவாரங்களுடன் தாவூத் செல்வான். மணமக்களை ஆசீர்வதிப்பான்.

பதினேழு வயது இளைஞன் வாழ்த்துவதா... என்று யாரும் முணுமுணுக்கவில்லை. காரணம், அனைவருக்குமே தெரியும். தங்கள் முன்னால் படையுடன் நிற்பவன் அரும்பு மீசைக்காரனல்ல. தங்கள் தலைவன் என்று.

இதெல்லாமே ஜெனாபாய் அறிவாள். அதனால்தான் தாவூத்தை பார்க்கும் போதெல்லாம் அவள் முகம் மலரும். எந்தவொரு தாய்க்குமே தன் மகனின் வளர்ச்சி தித்திக்கத்தானே செய்யும்? அதே பொங்கி வழியும் பாசத்துடன்தான் பிரியாணியை எடுத்துக் கொண்டு வந்தாள்.

ஆனால் - வந்தபோது எப்படியிருந்தானோ அப்படியே இறுக்கமாக தாவூத் அமர்ந்திருந்தான். அலைச்சல் காரணமாக அப்படி தெரிகிறான் என்று தொடக்கத்தில் அலட்சியப்படுத்தியது போல் இப்போது நினைக்க முடியவில்லை.

என்ன பிரச்னை?

அவன் அருகில் அமர்ந்தாள். "சாப்பிடு..."

"எனக்கு வேண்டாம்..."

"சொல்றதை கேளு. எதுவா இருந்தாலும் பசியோட பேச வேண்டாம். வயிறு காய்ந்திருந்தா புத்தி வேலை செய்யாது. உண்மையாவே என்னை நீ மதிக்கறேன்னா சாப்பிடு..." சொன்ன ஜெனாபாயை வெறித்தான். பதில் பேசாமல் தட்டை வாங்கி உண்ண ஆரம்பித்தான்.

அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். கிருதா வளர ஆரம்பித்திருந்தது. இன்னும் சில வருடங்களில் அது தாடியாக உருமாறிவிடும். கன்னங்கள் லேசாக சதைப் போட்டிருந்தன. பார்வை தீர்க்கமாக இருந்தது. என்றாலும் புருவங்கள்

முடிச்சிட்டிருந்தன. எதையோ சுமந்துகொண்டிருக்கிறான். அது என்ன என்பது வெளியேறும்போதுதான் தெரியும். காத்திருந்தாள்.

சாப்பிட்டு முடித்ததும் கை கழுவிட்டு வந்தான்.

"இப்ப சொல்லு..."

இதற்காகவே காத்திருந்தது போல் தாவூத் அனைத்தையும் கொட்டித் தீர்த்தான். கரீம் சித்திக்கை ஹமீது அடித்தது... பதிலுக்கு ஹமீதை, தான் மிரட்டியது... இதை அறிந்து பாஷு தாதா தன் தந்தையையும் அண்ணனையும் அழைத்தது... பிறகு அந்த வார்த்தை...

"அப்படியா சொன்னான்?" ஜெனாபாய் அதிர்ந்தாள்.

"ஆமா. சரியா அதே வார்த்தைதான். 'பீயை தின்னிருப்பீங்க...' இதைத்தான் திரும்பத் திரும்ப சொல்லியிருக்கார். 'கார்' என்ன 'கார்...' சொல்லியிருக்கான்..." பற்களை கடித்து மூச்சை இழுத்துப் பிடித்தவன் தொடர்ந்தான்.

"வாப்பாவுக்கும் எனக்கும் எப்பவுமே சரிப்பட்டு வராது. அவரை எனக்கு சுத்தமா பிடிக்காது. அதுக்காக அவரை என்னால வெறுக்க முடியாது. ஏன்னா, அவர் நல்லவர். நேர்மையா வாழணும்னு நினைக்கிறவர். அவருக்கு வேலை போனப்ப ஆதரிச்சதா சொல்றானே... சும்மாவா சம்பளம் கொடுத்தான்? எவ்வளவு வேலைகளை அவனுக்காக முடிச்சுக் கொடுத்தார்? அவர் மட்டும் இல்லைனா அவனால குறுகிய காலத்துல அவ்வளவு கடத்தல் பொருட்களை வித்திருக்க முடியுமா? இதையெல்லாம் மறந்துட்டு ஏதோ பிச்சை போட்ட மாதிரி பேசறானே... அவனை எப்படி சும்மா விட முடியும்?"

"என்ன பண்ணப் போறே?"

"தெரியல. ஆனா, ஏதாவது செய்யணும்..."

"ம்..."

"அவன் பின்னாடி பெரிய ஆள் பலம் இருக்கு. அதை மீறி அவன் சட்டையை பிடிக்கணும். அது எப்படீன்னுதான் யோசிச்சுட்டு இருக்கேன்..."

"முடிவு செய்துட்டியா?"

"ஆமா..."

"பாஷு தாதா உன்னை சும்மா விடமாட்டார்..."

"தெரியும். என்னை அவன் பத்து அடி அடிக்கட்டும். கவலை இல்லை. ஆனா, பதிலுக்கு நான் அவனை ஒரு அடி... ஒரேயொரு அடி அடிக்கணும். அடிப்பேன்..." நிமிர்ந்து அவளைப் பார்த்தான். "உங்ககிட்ட சொல்லாம எதையும் நான் செய்ததில்லை. இப்ப இங்க வந்தது கூட ஆலோசனை கேட்டு இல்ல. தகவலா சொல்லிட்டு போகத்தான்..."

"அப்ப சரி. போயிட்டு வா..."

"அம்மா..."

“இங்க பாரு தாவூத். உன் மேல எனக்கு நம்பிக்கை இருக்கு. நீ எது செய்தாலும் அதுக்கு பின்னாடி வலுவான காரணம் இருக்கும்னு உறுதியா நம்பறவ நான். இப்ப இல்ல. எப்பவுமே. என்கிட்ட சொல்லிட்டு செய்யணும்னு நினைச்ச பாரு. அது போதும். கிளம்பு...”

எழுந்தான். வெளியேறவில்லை. பதிலாக சட்டென்று அவள் கால்களை தொட்டு வணங்கினான். ஜெனாபாய்க்கு கண்கள் கலங்கிவிட்டது. அவனை எழுப்பி அவனிரு கன்னங்களையும் பற்றினாள். வேறு எதுவும் சொல்லவில்லை. தலையசைத்துவிட்டு மவுனமாக வாசலுக்கு வந்தவன், தனது இரு சக்கர வாகனத்தில் ஏறி அமர்ந்தான்.

“தாவூத்...”

அவளை ஏறிட்டான்.

“ஒரு விஷயம்...”

“சொல்லுங்க...”

‘‘கோபப்படறது மனித சுபாவம். ஆனா, யார் மேல கோபப்படறோம்கறது முக்கியம். அதைவிட அந்த கோபத்தை எந்த இடத்துல என்ன மாதிரி வெளிப்படுத்தப் போறோம்கறது ரொம்பவே முக்கியம். ஏன்னா, அதுலதான் நம்ம கோபத்தோட வலிமையே அடங்கியிருக்கு...”

“ம்...”

“காட்டாறு அடிச்சுக்கிட்டு போகும். ஆனா, அதே வெள்ளத்தை சரியான பாதைல திருப்பினா அறுவடை கிடைக்கும்...”

“புரியுது...”

“நல்ல செய்தியை எதிர்பார்க்கறேன்...”

சொல்லிவிட்டு திரும்பிப் பார்க்காமல் தன் வீட்டுக்குள் நுழைந்து மறைந்தாள். வண்டியை கிளப்பிய தாவூத், சீரான வேகத்தில் சென்றான். ஜெனாபாய் கூறிய வார்த்தைகளே அவன் மனதில் எதிரொலித்துக் கொண்டிருந்தது. தன்னையும் அறியாமல் ஜும்மா மசூதி அருகே வண்டியை நிறுத்தினான். மனமும் வயிறும் கனத்திருந்தது. அருகிலிருந்த கடையில் சோடா வாங்கினான். மசூதியை பார்த்தபடியே குடித்தான்.

சட்.

மின்னலைப் போல் அந்தத் திட்டம் அவனுக்குள் இறங்கியது. தன்னையும் அறியாமல் புன்னகைத்தான். நேராக தன் வாட்ச் கடைக்கு வந்து சேர்ந்தான்.

யாரிடமும் எதுவும் பேசவில்லை. புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக அவன் ஆட்களும் அவனை தொந்தரவு செய்யவில்லை. ஆனால், ஓரமாக நின்றிருந்த சபீருக்கு மட்டும் இருப்புக் கொள்ளவில்லை. தன் தம்பி ஏதோ விபரீதத்துக்கு வித்திடுகிறான் என்று மட்டும் புரிந்தது.

வாய்விட்டு எதுவும் கேட்க முடியவில்லை. பயம். நகத்தைக் கடித்தபடி தாவூத்தையே பார்த்துக்கொண்டிருந்தான்.

சூரியன் மறைந்து இருள் சூழ ஆரம்பித்தது. வழக்கமான வேலைகள் வழக்கத்துக்கு மாறாக மெதுவாக நடந்தன. ஒருவழியாக கடையை பூட்ட வேண்டிய நேரமும் வந்தது.

அப்போதுதான் தாவூத் மவுனத்தை கலைத்தான். சகாக்களை அழைத்து தன் திட்டத்தை சொன்னான்.

முதல் எதிர்ப்பு சபீரிடமிருந்து வந்தது. "வேண்டாம்..."

"ஏன்?"

"பாஷு தாதா நம்மை நசுக்கிடுவார்..."

"வாய்ப்பில்லை. அவனால ஒண்ணும் செய்ய முடியாது..."

"நான் அப்படி நினைக்கலை..."

"அப்ப வேறென்ன செய்யலாம்னு நீயே சொல்லு..."

"பேசாம தாதாவை போய் சந்திக்கலாம்..."

"சந்திச்சு?"

"நம்ம தரப்பை எடுத்துச் சொல்லலாம்..."

"அதுக்கு பேசாம பீயை திங்கலாம்..." தாவூத் வெடித்தான். "உனக்கு பயமா இருந்தா நீ இதுல கலந்துக்காத. நாங்க பார்த்துக்கறோம்..." பதிலுக்கு ஏதோ சொல்ல வாயைத் திறந்த சபீர், கப்பென்று அடங்கினான். கடைக்கு வெளியே அவன் பார்வை நிலைகுத்தி நின்றது. என்ன விஷயம் என்று அந்தத் திசைக்கு தன் கண்களை திருப்பிய தாவூத், புருவத்தை உயர்த்தினான். அங்கே ரஹிம் நின்றுகொண்டிருந்தார்.

"வாங்க..." இயல்பான தொனியில் அழைத்தான்.

"சபீர் சொல்றதுதான் சரி தாவூத். என் கூட வா. பாஷு தாதாகிட்ட நான் பேசறேன்..."

"தேவையில்லை..."

"தாவூத்..."

"இங்க பாருங்க. என் வாப்பாவுக்கு நீங்க நண்பர். அதனாலதான் உங்களுக்கு மரியாதை தரேன். அதுக்காக உங்க பேச்சை நான் கேட்பேன்னு அர்த்தமில்லை..."

"நான் என்ன சொல்ல வரேன்னா..."

"எதுவும் சொல்ல வேண்டாம். வீட்ல தேடிகிட்டு இருப்பாங்க. நேரத்தோட போய்ச் சேருங்க..." தன் ஆட்கள் பக்கம் முகத்தை திருப்பினான்.

"சொன்னது நினைவுல இருக்குல..."

"ம்..."

"அப்ப சரி. நாளை சந்திப்போம்..."

ரஹிம் அங்கிருப்பதையே பொருட்படுத்தாமல் கடையை பூட்டினான். சபீருடன் தன் வீட்டுக்கு வந்து சேர்ந்தான். பெயருக்கு

மூன்று ரொட்டிகளை சாப்பிட்டான். உறங்கினான்.

பொழுது விடிந்தது. நிதானமாக எழுந்தான். பல் தேய்த்து காலைக்கடன்களை முடித்தான். கஞ்சியை குடித்தான். சபீரின் உடல் முழுக்க பதற்றம் நிரம்பி வழிவதையும், அவன் கைகள் நடுங்குவதையும் பார்த்தும் பார்க்காதது போல் "கடைக்கு போயிட்டு வரேன்..." என்று அம்மாவிடம் தகவல் சொல்லிவிட்டு வண்டியை கிளப்பினான். சபீர் ஓடிவந்து பின்னிருக்கையில் ஏறிக் கொண்டான்.

"நீ கடைக்கு போ..."

"இல்ல. நானும் வரேன்..."

தாவூத் மறுக்கவில்லை. வண்டியை நேராக ஜும்மா மசூதி பக்கம் திருப்பினான். அண்ணனின் இதயம் அதிவேகமாக துடிப்பதை தன் முதுகு வழியே உணர்ந்தான்.

"இப்பவும் ஒண்ணும் கெட்டுடலை. ரொம்ப பயமா இருந்தா நீ வர வேண்டாம்..."

"பயப்படறதா யார் சொன்னது?"

"இதோ உன் குரலே சொல்லுதே..."

"இந்த நடுக்கத்துக்கு காரணம் வண்டியோட ஸ்பீடு..."

அதன் பிறகு இருவரும் எதுவும் பேசவில்லை. நேற்று எந்தக் கடையில் சோடா குடித்தானோ அந்தக் கடை வாசலில் தன் வண்டியை தாவூத் நிறுத்தினான்.

சாலையின் இரு பக்கங்களிலும் அவனது ஆட்கள் நின்றிருந்தார்கள். ஸ்டாண்ட் போட்ட பின் மசூதியை ஆராய்ந்தான். ஓரமாக மெர்சிடிஸ் கார் நின்றிருந்தது. பாஷு தாதா உள்ளேதான் இருக்கிறார்.

"ஏழு சோடா..." கடைக்காரரை நோக்கி ரஜ்ஜி குரல் கொடுத்தான். தாவூத் மனதுக்குள் அந்த எண்ணிக்கையை குறித்துக்கொண்டான். பாஷு தாதா தவிர ஆறு பேர் வந்திருக்கிறார்கள். அந்த ஆறு பேரும் அவரது மெய்க்காப்பாளர்கள். கணக்கு சரியாக இருக்கிறது. தன்னையும், சபீரையும் சேர்க்காமல் தன்னிடமும் ஆறு பேர் இருக்கிறார்கள்.

தன் முன் நீட்டப்பட்ட சோடாவை வாங்கியபடி தன் சட்டையின் வலது கை பக்கத்தை மூன்று முறை மடித்தான். அவனது குழுவை சேர்ந்த மூன்று பேர் வலப்பக்கம் சென்றார்கள். பின் சட்டையின் இடது கை பக்கத்தை மூன்று முறை மடித்தான். எஞ்சிய மூவரும் இடப்பக்கம் நகர்ந்தார்கள்.

மசூதியை பார்த்தபடியே அவர்கள் அனைவரும் கொஞ்சம் கொஞ்சமாக சோடாவை குடித்தார்கள். ரஜ்ஜி தன் கையில் இருந்த கடிகாரத்தை பார்த்தான். நொடிக்கும் குறைவான நேரத்தில் தாவூத்தின் கண்களை நோக்கினான். பின் தன் சட்டைக் காலரை உயர்த்தினான்.

அடியாட்கள் சூழ பாஷு தாதா மசூதியை விட்டு வெளியே வந்தார். தன் காரை நோக்கி நகர்ந்தார். காருக்கும் அவருக்கும் பத்தடி தொலைவு இருக்கும்போது - "படீர்". சோடா பாட்டில் ஒன்று பறந்து வந்து அவர் தலையில் மோதியது. நெற்றியில் வழியும் ரத்தத்துடன் திரும்பிப் பார்த்தார்.

உடைந்த சோடா பாட்டிலுடன் கண்களில் வெறி மின்ன தாவூத் இப்ராஹிம் நின்று கொண்டிருந்தான்.

34

செய்வதறியாமல் திகைத்து நின்றார் பாஷு தாதா. தலை வலித்தது. தொட்டுப் பார்த்தார். ரத்தம் வழிந்தது. நிமிர்ந்து பார்த்தார். பார்த்துக் கொண்டேயிருந்தார்...

கண்களில் கொலை வெறியுடன் தாவூத் நின்றிருந்தான். கைகளில் சோடா பாட்டில். ஐந்தரையடி உயரம். அதற்கேற்ற வற்றிய உடல்வாகு. அரும்பு மீசை. கன்னங்களில் லேசாக பரு. மார்பு எலும்புகள் அப்பட்டமாக தெரிந்தன.

இவனா... இந்தப் பொடியனா தன்னை அடித்தது? அவரால் நம்ப முடியவில்லை. நம்பாமல் இருக்கவும் முடியவில்லை. உடற்பயிற்சி செய்து வலுவேற்றியிருந்த அவரது உடல், அதிர்ந்தபடி இருந்தது. அரைக்கை சட்டையில் புடைத்த புஜங்களும், பட்டன் போடாததால் பளீரென்று தெரிந்த மார்புகளும் அந்த நேரத்தில் அபத்தமாக காட்சியளித்தன. ஒரு நோஞ்சான் முன்பு இந்த பலம் தோற்று நிற்கும் என கனவிலும் அவர் நினைத்ததில்லை.

சுற்றிலும் பார்த்தார். ஈக்கள் போல் ஆங்காங்கே மக்கள் சிதறியிருந்தனர். பதுங்கியிருந்தனர். அனைவருமே அவருக்கு தெரிந்தவர்கள்தான். அவரைப் பார்த்து பயந்தவர்கள்தான். தொண்டையை கனைத்தாலே சிறுநீர் கழிப்பவர்கள்தான்.இவை எல்லாம் கடந்த காலம். அல்லது முற்பிறவியிலா?

இப்போது... இந்த நிமிடம்... இந்த நொடியில் அவர் ராஜா இல்லை. தாதா இல்லை. வெற்றுக் காசு. செல்லாத நோட்டு. சீட்டுக் கட்டை போல் அவரது பிம்பம் மடமடவென்று சரிந்து கொண்டிருக்கிறது. தவறு. அனைவரும் பார்க்கும் வகையில் சரிய வைக்கிறான். தனது அஸ்திவாரத்தையே சிமென்ட் போட்டு மூடுகிறான்.

யாரை சிறுவன் என்று நினைத்தாரோ... அவன்தான் இத்தனையும் செய்கிறான். செய்துகொண்டிருக்கிறான். எங்கிருந்து இந்த தைரியம் அவனுக்கு வந்தது..?

படீர்.

மேற்கொண்டு யோசிப்பதற்குள் அடுத்த சோடா பாட்டில் அவர் மீது விழுந்தது.

தன்னையும் அறியாமல் வலியில் கத்தினார். 'அம்மா... நாலா பக்கமும் இந்த மூன்று எழுத்துகளும் எதிரொலித்தன. கொஞ்சநஞ்சம் ஒட்டிக்கொண்டிருந்த மரியாதையும் அத்துடன் காற்றில் கரைந்தது. பாஷு தாதாவின் அடியாட்கள் திருதிருவென விழித்தார்கள். அவர்களுக்கு உதார் விட்டுத்தான் பழக்கம். பயந்து நடுங்குபவர்களை எட்டி உதைப்பதுதான் வழக்கம். நேரடியாக இதுபோல் சண்டையிட்டதில்லை. அதற்கான வாய்ப்பும் அவர்களுக்கு கிடைத்ததில்லை.

இப்போது என்னடா என்றால் சரமாரியாக சோடா பாட்டிலும், கற்களும் அவர்கள் மீது விழுகிறது. வீசுபவர்களை நோக்கி ஓரடி கூட எடுத்து வைக்க முடியவில்லை. மழையைப் போல் தாக்குதல் தொடர்கிறது. இந்த நிலையில் யார் பெயரை சொல்லி ஊரையே மிரட்டினார்களோ, அந்த பாஷு தாதாவே ரத்த வெள்ளத்தில் மிதக்கிறார்.

என்ன செய்வது? மூளை வேலை செய்யவில்லை.

"தாதாவை சுத்தி நில்லுங்க..." எவனோ கத்தினான்.

உடனே அவரைச் சுற்றி அரணமைத்தார்கள்.

"காருக்கு கொண்டு போங்க..."

போனார்கள்.

"கார்ல ஏத்துங்க..."

ஏற்றினார்கள்.

"ஸ்டார்ட் பண்ணுங்க. இந்த இடத்தை விட்டு போயிடலாம்..."

சாவியை திருகியதுமே வண்டி உறுமியது. கண்ணாடி வழியே திரும்பிப் பார்த்தார்கள். தாவூத்தின் ஆட்கள் காரை நோக்கி கற்களையும், பாட்டிலையும் வீசியபடி ஓடி வந்தார்கள். சட்டை முழுக்க ரத்தம் வழிய பாஷு தாதா அமைதியாக அமர்ந்திருந்தார். கார் புறப்பட்டது.

''பயந்துபோய் எங்கடா ஓடற..? பீயை திங்கவா..?'' அடிவயிற்றிலிருந்து தாவூத் கத்தியது துல்லியமாக அவர் காதில் விழுந்தது. கண்களை மூடிக்கொண்டார்.

ஒரு புள்ளியாக அவர் அமர்ந்திருந்த கார் மறைந்தது.

"சரியான பொட்டையா இருக்கான்... இவனைப் பார்த்தா பயந்தோம்?" சட்டைக் காலரை உயர்த்தியபடி ரஜ்ஜி சிரித்தான்.

தாவூத் எதுவும் பேசவில்லை. அவன் கண்கள் மட்டும் தீப்பிழம்பாக சிவந்திருந்தன. சபீர் அருகில் வந்தான். வியர்வை வடியும் முகத்துடன் தன் தம்பியை ஏறிட்டான். "சரி. வா போகலாம்..."

"எங்க..?" அடிவயிற்றிலிருந்து தாவூத் உறுமினான்.

"நம்ம இடத்துக்கு..."

"எதுக்கு?"

"அதான் பாஷு தாதாவை அடிச்சாச்சே..."

"இல்லை... பாதிதான் அடிச்சிருக்கோம்..."

"என்னடா சொல்ற?"

"முழுக்க அடிக்காம இங்கிருந்து நாம நகரப் போறதில்லை..."

"வேண்டாம் தாவூத். சொல்றதைக் கேளு..."

"வாயை மூடு. இப்ப அவன் அடிபட்ட பாம்பு. இப்படியே விட்டுடக் கூடாது. அது நமக்குத்தான் ஆபத்து..."

"அதனால?"

"அவன் எழுந்திருக்கறதுக்குள்ள திருப்பி அடிக்கணும்..."

“எப்படி?”

“சொல்றேன்...” என்றபடி ரஜ்ஜியை நோக்கி திரும்பினான். தன் வண்டி சாவியை கொடுத்தான். “பைக்கை எடு...”

தாவூத்தின் ஆட்கள் தங்கள் வண்டியை நோக்கி ஓடினார்கள். சைட் ஸ்டாண்டை விலக்கினார்கள். ஸ்டார்ட் செய்தார்கள். ரஜ்ஜிக்கு பின்னால் தாவூத் அமர்ந்தான். எதையோ சொல்ல வந்த சபீர், மவுனமாகி பின்னால் வந்த பைக்கில் ஏறினான்.

“டெம்கர் மொஹல்லா பக்கம் போ...” தாவூத் வழிகாட்ட நான்கு பைக்குகளும் சீறிப் பாய்ந்தன.

வழியில் ஒரு கடை முன்னால் நிறுத்தச் சொன்னான். அது என்ன கடை என்று ரஜ்ஜி பார்த்தான். விளையாட்டுப் பொருட்களை விற்கும் கடை.

‘‘பாய்...’’ தாவூத் அழைத்ததும் ஒரு நடுத்தர மனிதன் கடைக்குள்ளிருந்து வந்தான்.

“எட்டு ஹாக்கி ஸ்டிக்...”

இரண்டு நிமிடங்களில் அவன் கேட்ட பொருட்கள் கிடைத்தன.

“எவ்வளவு?”

“இருக்கட்டும் தாவூத்...”

சொன்ன கடைக்காரரின் தோளைத் தட்டினான். “தங்கச்சிக்கு எப்ப நிக்காஹ்?”

“அடுத்த மாசம்...”

“நாளைக்கா என்னை வந்து பாரு...”

“ம்...”

‘‘நேரா ஜிம்முக்கு போ...’’ தாவூத் கட்டளையிட்டான். ஆக்சிலிரேட்டரை முறுக்கிக்கொண்டிருந்த ரஜ்ஜிக்கு அவன் நோக்கம் புரிந்தது. உற்சாகத்துடன் பாஷு தாதாவுக்கு சொந்தமான உடற்பயிற்சி கூடத்தை நோக்கி வண்டியை செலுத்தினான். ஜிம் பூட்டியிருந்தது.

“பூட்டை உடை...” உடைத்தார்கள்.

அனைவரிடமும் ஹாக்கி ஸ்டிக்கை கொடுத்தான். ‘‘ஒரு பொருளைக் கூட விடக்கூடாது. எல்லாத்தையும் அடிச்சு நொறுக்குங்க...”

இதற்காகவே காத்திருந்தது போல் அவர்கள் அந்த இடத்தை தரைமட்டமாக்கினார்கள். எல்லா கருவிகளையும் உடைத்தார்கள். சுவர் முழுக்க கண்ணாடியை பாஷு தாதா பதித்திருந்தார். அந்தக் கண்ணாடிகள் தூள் தூளாகின.

சத்தம் கேட்டு அக்கம் பக்கத்தில் இருந்தவர்கள் ஓடி வந்தார்கள். வாயைப் பிளந்தபடி பார்த்தார்கள். தாவூத்தை தடுக்கும் தைரியம் யாருக்கும் வரவில்லை.

காரியம் முடிந்ததும் சாலைக்கு வந்தான். வேடிக்கை பார்த்தவர்கள்

முன்னால் கம்பீரமாக நின்றான். "இனி யாரும் பாஷு தாதாவுக்கு மாமூல் கொடுக்க வேண்டாம். புரிஞ்சுதா?"

ஒருவரையொருவர் பார்த்தபடி தலையசைத்தார்கள். ஹாக்கி ஸ்டிக்கை சுழற்றியபடியே அந்த இடத்தை விட்டு தாவூத் அகன்றான்.

இதற்குள் இந்த சம்பவம் பம்பாய் முழுக்க பரவிவிட்டது. காவல்துறையும் விழித்துக்கொண்டது.

பொதுவாகவே அரசுத் துருப்புகளுக்கு ஒரு குணம் உண்டு. பெரிய மனிதர்கள் மேல் கைவைக்க மாட்டார்கள். ஆனால், அதே பெரிய மனிதர் வேறு விஷயத்தில் அடி வாங்கினால் போதும். பரபரவென்று களத்தில் இறங்கிவிடுவார்கள். இம்மி பிசகாமல் இதையேதான் பாஷு தாதா விஷயத்திலும் கடைப்பிடித்தார்கள். கடத்தல் குற்றத்துக்காக அவரை கைது செய்து சிறையில் அடைத்தார்கள். செய்யாத குற்றத்துக்கான தண்டனையையும் சேர்த்து அவர் அனுபவித்தார். விடுதலையாகி வந்த அவரை பம்பாயில் ஒருவரும் மதிக்கவில்லை. அதன் பிறகு அவர் பம்பாயிலும் வசிக்கவில்லை. சொந்த ஊரான ஐதராபாத்துக்கு இடம்பெயர்ந்தார். தன் எஞ்சிய வாழ்நாளை ஆந்திராவிலேயே கழித்தார்.

இப்படியாக பாஷு தாதாவின் அத்தியாயம் பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றில் முடிந்த நேரம் - ஜெனாபாய்க்கு ஒரு பார்சல் வந்தது. பிரித்துப் பார்த்தவள் மகிழ்ந்து போனாள். வைர நெக்லஸ் ஒன்று அவளுக்கு பரிசாக வழங்கப்பட்டிருந்தது. அத்துடன் ஒரு சிறு குறிப்பும்.

'வாக்களித்தபடி தொழில் போட்டியாளனை அப்புறப்படுத்தியதற்கு நன்றி அக்கா...' அனுப்பியது..?

வேறு யார்? ஹாஜி மஸ்தான்தான்!

35

தனக்கு அனுப்பப்பட்ட பரிசை பார்த்து மகிழ்ந்ததும், துள்ளிக் குதித்ததும் ஜெனாபாய் மட்டுமல்ல... அந்தப் பரிசை அவளுக்கு மனமுவந்து அனுப்பிய ஹாஜி மஸ்தானும்தான். கள்ளக் கடத்தல் தொழிலில் தனக்கு போட்டியாக இருந்த பாஷு தாதா அப்புறப்படுத்தப்பட்டதில் அவர் எல்லையில்லா மகிழ்ச்சி அடைந்தார்.

இனி, தான் வைத்ததுதான் சட்டம் என அவர் மேற்கொண்ட நடவடிக்கைகள் ஒரு கட்டத்தில் அவருக்கு எதிராகவே திரும்பின. இதற்கெல்லாம் காரணம், ஒன்றே ஒன்றுதான். அது, தாவூத் இப்ராஹிமை மறந்தது அல்லது குறைத்து எடை போட்டது. அப்போது தாவூத் வளர்ந்துவந்த இளைஞன்தான்.

ஆனால் – அடித்தட்டு மக்களின் நம்பிக்கையை பெற்றிருந்தான். அவர்களது இன்ப, துன்பங்களில் பங்கேற்க ஆரம்பித்திருந்தான்.

எல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம், அரும்பு மீசைக்காரனான அவன், வஸ்தாதாக வலம் வந்த பாஷு தாதாவை இருந்த இடம் தெரியாமல் விரட்டியிருந்தான். காவல்துறையாலோ ஏன் ஹாஜி மஸ்தானாலோ கூட செய்ய முடியாத அந்த செயலை வெறும் ஆறு இளைஞர்களைக் கொண்டு நடத்திக் காட்டியிருந்தான். சில சோடா பாட்டில்களும், பல கற்களும், விரல் விட்டு எண்ணக் கூடிய ஹாக்கி ஸ்டிக்ஸும் இதற்கு போதுமானதாக இருந்தன.

இந்த விஷயத்தைத்தான் ஹாஜி மஸ்தான் பொருட்படுத்தாமல் விட்டிருந்தார்.அதன் பலனைத்தான் பாஷு தாதா சுத்தமாக பம்பாய் மக்களின் நினைவிலிருந்து துடைத்தெறியப்பட்ட சில ஆண்டுகள் கழித்து அனுபவித்தார்.

1974ம் ஆண்டு டிசம்பர் 4ம் தேதி அடக்க முடியாத கோபத்துடன்தான் தாவூத்துக்கு விடிந்தது. அன்றைய தினம்தான் அவனது இரு நண்பர்கள் தாக்கப்பட்டிருந்தார்கள். அபு பக்கரும், இஜாசும் வெறும் தோழர்கள் மட்டுமல்ல. அவனது இரு கைகள். அடிபட்ட சிறுத்தையாக தவித்தான். தன் கடைக்குள் சுற்றிச் சுற்றி வந்தான்.

“கொஞ்சம் இப்படி உட்காரு...”

சொன்ன தன் அண்ணன் சபீரை ஏறிட்டான். “எதுக்கு?”

“உன் கோபம் அடங்க வேண்டாமா?”

“ஏன் அடங்கணும்?”

“எதுக்காக இப்படி விதண்டா வாதமா பேசற?”

“வேற எப்படி பேசணும்?”

“தாவூத்... உனக்கு என்ன ஆச்சு?”

“இன்னும் என்ன ஆகணும்..?” வெடித்தான். “பாரு... நல்லா

பாரு... இவங்க இரண்டு பேரையும் எப்படி அடிச்சு காயப்படுத்தி யிருக்காங்கன்னு...”

“யாருன்னு கண்டுபிடிப்போம்...”

“எல்லாம் கண்டுபிடிச்சாச்சு...”

“என்னடா சொல்ற? யார் இதை செஞ்சது?”

“பதான்ஸ்...”

“பதான்ஸா..?” எச்சிலை விழுங்கிய சபீர் சுதாரித்தான். “சரி எனக்கு தெரிஞ்ச பதான்ஸ்கிட்ட விசாரிக்கறேன்...”

“என்னன்னு? ஒரு ரூபாய்க்கு குச்சி ஐஸ் கிடைக்குமான்னா..?”

“டேய்...”

“கத்தாத. இத்தனை வருஷங்களா நீயும்தானே பம்பாய்ல இருக்க? உனக்குத் தெரியாதா பதான்ஸ் எல்லாம் யாருக்கு கட்டுப்பட்டவங்கன்னு...”

தெரிந்திருந்தது. ஆனாலும், அந்தப் பெயரை உச்சரிக்க சபீர் பயந்தான். மையமாக தலையை மட்டும் “ம்...” என அசைத்தான்.

“ஹாஜி மஸ்தான்...” தாவூத் பற்களை கடித்தான். “எல்லாம் அந்த கிழவன் வேலைதான்...”

“ஆனா, ஏன் அவர் அப்படி செய்யணும்?”

சபீர் கேட்ட இந்தக் கேள்விதான் தாவூத்தின் மனதிலும் சுற்றிச் சுற்றி வந்தது. அவர் விஷயத்தில் என்றுமே தலையிட்டதில்லையே... அப்படியிருக்க அவரது ஆட்கள் ஏன் அபு பக்கரையும் இஜாசையும் தாக்க வேண்டும்?

விடை தெரியாத கேள்வி. அவனுக்கு மட்டுமல்ல, பம்பாய் காவல்துறைக்கும் இதற்கான பதில் இன்றுவரை கிடைக்கவில்லை. அவ்வளவு ஏன்... ஹாஜி மஸ்தானுக்கே பிற்காலத்தில் அன்று ஏன் தாவூத்தின் நண்பர்களை அடிக்கச் சொன்னோம் என்று தெரியவில்லை. மூளையை கசக்கிப் பார்த்தும் திருதிருவென விழிக்கத்தான் செய்தார்.

“கொழுப்புதான்... வேறென்ன...” நீண்ட யோசனைக்குப் பின் கண்கள் இடுங்க தாவூத் சொற்களை உதிர்த்தான்.

அங்கிருந்த அவன் ஆட்கள் எதுவும் பேசவில்லை. அமைதியாக அவனையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். விபரீதம் நடப்பதற்கான ஆரம்பம் இது என்று புரிந்த சபீரின் மனம் மட்டும் திக் திக் என அடித்துக்கொண்டது.

மெல்ல தன் இருக்கையில் தாவூத் அமர்ந்தான். அவன் முன்னால் இருந்த டேபிளில் அன்றைய மராத்தி, இந்தி நாளிதழ்கள் அடுக்கப்பட்டிருந்தன. எடுத்து பிரித்தான். அனைத்து தின பத்திரிகைகளிலும் சினிமா நட்சத்திரங்களுடன் ஹாஜி மஸ்தான் புன்னகைக்கும் படம் வெளியாகியிருந்தது. பேப்பரை கசக்கி தூர எறிந்தான்.

“இவனெல்லாம் எப்படி தாதாவா ஆனான்?” தன் ஆட்களை நோக்கி கேட்டான். “உடம்புல வலு கிடையாது. ஒட்டடைக் குச்சி மாதிரி இருக்கான். லேசா தட்டினாலே விழுந்துடுவான்.... ஆனா, பாரு... பம்பாயோட கள்ளக் கடத்தல் பிஸ்தா இவன்தான். தங்கத்துலேந்து இதோ நாம விக்கற ஃபாரின் வாட்ச் வரைக்கும் எல்லா எலெக்ட்ரானிக்ஸ் பொருட்களும் இவன் மூலமாதான் சந்தைக்கு வருது... நினைச்சாலே அவமானமா இருக்கு. வெளிநாட்டு தாதா எல்லாம் பம்பாயை பத்தி என்ன நினைப்பாங்க? டான்னா ஒரு கெத்து வேண்டாம்...” புருவத்தை உயர்த்தியவன் கால் மேல் கால் போட்டபடி அமர்ந்தான்.

“எல்லாம் அந்த மதராஸி வரதராஜ முதலியார் கொடுக்கிற தைரியம்...” ரஜ்ஜி சொல்லி முடிப்பதற்குள் கன்னத்தில் பளீரென்று அறை விழுந்தது.

கண்களில் பூச்சி பறக்க தன் முன்னால் நின்றிருந்த தாவூத்தை பரிதாபமாக பார்த்தான்.

“வரதுபாய்னு சொல்லு...” ஆட்காட்டி விரலை அவன் முன்னால் உயர்த்தியபடி தாவூத் கர்ஜித்தான். “மரியாதை... மரியாதை வேணும். வரதுபாயை யாருன்னு நினைச்ச? சிங்கம். மதராஸ்லேந்து அனாதையா ஓடி வந்து இன்னிக்கு பம்பாயே நடுங்கற அளவுக்கு அவர் உயர்ந்திருக்காருன்னா... அது சாதாரண விஷயமில்லை. நம்ம எதிரிதான். யார் இல்லைன்னு சொன்னது. அதுக்காக கண்டபடி பேசக் கூடாது. அது நம்ம தொழிலுக்கே நாம செய்யற அவமரியாதை. புரிஞ்சுதா?”

கன்னத்தை தடவியபடி ரஜ்ஜி தலையசைத்தான். “இப்ப நம்ம குறி ஹாஜி மஸ்தான்தான். அந்த நோஞ்சானை முதல்ல தட்டி வைப்போம்...”

ரஜ்ஜியை அறைவதற்காக எழுந்த தாவூத், மீண்டும் தன் நாற்காலியில் அமர்ந்தான்.

“வேண்டாம் தாவூத்... அமைதியா இரு. நீ நினைக்கிற அளவுக்கு மஸ்தான் ஒண்ணும் சாதாரண ஆள் இல்ல...” சபீர் தடுத்தான்.

“பிஸ்தாவாவே இருக்கட்டும். அதனால என்ன? இங்க பாரு சபீர்... இன்னிக்கி இந்த ஏரியா நம்மை மதிக்குது. பாஷு தாதாவை விரட்டினதால நம்மை பார்த்து பயப்படறாங்க. ஆனா, இது போதாது. மொத்த பம்பாயும் நம்ம கண்ட்ரோலுக்கு வரணும். அப்புறம் இந்தியாவே நம்மைப் பார்த்து பயப்படணும். பிறகு உலகமே நம்ம காலடில விழுந்து கிடக்கணும்...”

“தாவூத்...”

“இது... இதுதான் வேணும். சொன்னதுமே பயந்து போய் கத்தற பார்த்தியா... இந்த அலறல் மக்கள்கிட்டேந்து வரணும். தாவூத்தோட ஆட்கள் மேல கைய வைச்சா என்ன நடக்கும்னு

எல்லாருக்கும் தெரியணும். எல்லாத்துக்கும் பயந்து பயந்து சாகாத. நிமிர்ந்து நில்லு. பெருசா எதுவும் நடக்காது. ஒண்ணு நாம அடிப்போம். இல்லைனா அடி வாங்கு வோம். அவ்வளவுதான். ஆனா, ஒண்ணு. எத்தனை அடி வாங்கறோம்னு முக்கியமில்லை. திருப்பி எத்தனை அடி அடிக்கிறோம்கறதுதான் முக்கியம். எப்பவுமே நமக்கு சமமா இருக்கிறவங்க கூடயோ இல்லை நம்மை விட வலு குறைவானவங்க கிட்டயோ மோதவே கூடாது. அதனால ஒரு பயனும் இல்லை. நம்மை விட பலசாலியா யார் இருக்கானோ அவனைத்தான் நம்ம எதிரியா கருதணும். ஏன்னா, அதுதான் நம்மை உலகுக்கு அடையாளம் காட்டும். என்னிக்குமே நண்பன் யாருன்னு நம்ம நிழலுக்கு கூட சொல்லக் கூடாது. ஆனா, எதிரி யாருன்னு பிறக்கப் போற சிசுவுக்குக் கூட தெரியப்படுத்தணும். எப்பவும் இதை மறக்காத...”

அண்ணனிடம் சொன்னவன் தன் ஆட்களை நோக்கி திரும்பினான். “நல்லா கவனிங்க. மஸ்தான் இந்த ஆட்டம் போடக் காரணம், அந்த ஆள்கிட்ட இருக்கிற மூணு பவர். ஒண்ணு, ஆள் பலம். வரதுபாயும் கரீம்லாலாவும் இந்த விஷயத்துல அந்த நோஞ்சானுக்கு ஆதரவா இருக்காங்க. அடுத்து செல்வாக்கு. இந்த இரண்டு விஷயத்துலயும் இப்போதைக்கு நாம கை வைக்க வேண்டாம். மூணாவதா இருக்கறது பணபலம். இதைத்தான் நாம ஓங்கி அடிக்கணும். அப்பத்தான் மஸ்தானுக்கு வலிக்கும். மிரண்டு போவான். தவிர, நமக்கும் பணம் கிடைக்க வேண்டாமா? எத்தனை நாளுக்குத்தான் அம்பதுக்கும் நூறுக்கும் அல்லாடறது? அதனால நம்முடைய உடனடி டார்கெட் ‘அங்காடியா’. சரிதானே? யாருக்கும் எந்த சந்தேகமும் இல்லையே?”

இல்லை. ஒருவருக்கும் எந்தக் கேள்வியும் எழவில்லை. தாவூத் எதை குறிவைக்கிறான் என்பது அனைவருக்குமே தெளிவாக புரிந்தது.

‘அங்காடியா’ என்பது அந்தக் காலத்தில் பம்பாய் மக்களிடம் ரகசியமாக புழங்கிய சங்கேத சொல். அதாவது, பணப் பட்டுவாடா. ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்கு நான்கு சக்கர வாகனத்தில் பணத்தை கொண்டு செல்வார்கள். இதையே மாமூல் பணத்தின் இன்னொரு வெர்ஷனாகவும் சொல்லலாம். இந்தத் தொகை மார்வாடிகள் தங்களையும், தங்கள் தொழிலையும் காப்பாற்றிக் கொள்ள தாதாக்களுக்கு மாதா மாதம் கட்டும் கப்பம்.

“அப்ப சரி. நாளைக்கு மஸ்ஜித் பந்தர்லேந்து மஸ்தான் வீட்டுக்கு - அதாவது, மலபார் ஹில்லுக்கு - கார்ல ‘அங்காடியா’ வருது. அதை எடுத்துடலாம். மறைவான இடத்துல இந்தக் காரியத்தை நாம செய்யப் போறதில்லை. பட்டப் பகல்ல எல்லார் கண்முன்னாடியும் பணத்தை எடுக்கப்போறோம்...”

*“செய்துடலாம்...” ரஜ்ஜி முன்மொழிய சபீரை தவிர மற்றவர்கள் வழிமொழிந்தார்கள்.*

*“இந்த ‘அங்காடியா’ மூலமா நமக்கு கிடைக்கப்போற தொகை எவ்வளவு தெரியுமா..?”புன்னகையுடன் அனைவரையும் பார்த்த தாவூத், மெல்ல அந்தத் தொகையை சொன்னான்.*

*“அஞ்சு லட்சம் ரூபாய்..!”*

36

"அஞ்சு லட்ச ரூபாயா?" கோரசாக தாவூத்தின் ஆட்கள் வாயைப் பிளந்தார்கள்.

"ஆமா..." சிரித்த முகம் மாறாமல் பதிலளித்தான். "யாருக்கும் எந்த சந்தேகமும் இல்லையே?"

"எனக்கு இருக்கு..." நடுக்கத்துடன் சபீர் குரல் கொடுத்தான்.

"எதிர்பார்த்தேன். என்ன?"

"நீ நினைக்கிற மாதிரி இது சுலபமான காரியம் இல்லை..."

"எப்படி சொல்ற?"

"நீங்க நினைக்கிற மாதிரி 'அங்காடியா' மாமூல் பணமில்லை..."

"ம்..."

"அது நகை வியாபாரிங்க ஒரு இடத்துலேந்து இன்னொரு இடத்துக்கு கொள்முதலுக்காக கொண்டு போற பணம். இதுக்கு பாதுகாப்பு தர்றது மஸ்தான் வேலை. இதுக்குத்தான் கமிஷன் கிடைக்கும்..."

"இதுதான் உன் சந்தேகமா சபீர்?"

கேட்ட தம்பிக்கு எந்த பதிலையும் சொல்லாமல் தலை குனிந்தான். அருகில் வந்த தாவூத் தன் அண்ணனின் தோள் மீது கை போட்டான்.

"நீ சொன்னது எதுவுமே எங்களுக்கு தெரியாதுன்னு நினைச்சியா? அப்படியும் ஏன் நாங்க 'அங்காடியா'வை மாமூல் பணம்னு சொல்றோம் தெரியுமா?"

"..."

"அந்த மொத்த கொள்முதல் பணத்தையும் நமக்கான கமிஷனா - அதாவது, மாமூலா வாங்கப் போறோம்.

அதனாலதான்..."

"புரியலை..."

"விளக்கமாவே சொல்லிடறேன். இப்ப பம்பாய்ல இருக்கிற வங்கிப் பரிவர்த்தனை வியாபாரிங்களுக்கு சாதகமா இல்லை. இந்த விஷயத்தை நாம திரும்பத் திரும்ப அம்பலப்படுத்துவோம். அதுக்காக நமக்குத் தெரிஞ்சு வர்ற எல்லா 'அங்காடியா'வையும் கொள்ளை அடிப்போம்..."

"இதனால நமக்கென்ன லாபம்?"

"நல்லா கேட்டப்போ. அப்படி செய்தாதான் நாளைக்கு நாம தனியா பேங்க் ஆரம்பிக்கிறப்ப நம்மை நம்பி பணம் போடுவாங்க..."

"என்னது நாம வங்கி ஆரம்பிக்கப் போறோமா?"

"ஏன் தொடங்கக் கூடாதா? பார்த்துகிட்டே இரு சபீர். உலக நாடுகள்ல இருக்கிற எல்லா மாஃபியா குழுக்களோடயும் கை கோர்க்கப் போறோம். பண டிரான்சாக்ஷனுக்கு ஏகப்பட்ட



வங்கிகளை ஆரம்பிக்கப் போறோம்...''

"கேட்க நல்லாத்தான் இருக்கு. ஆனா, இதெல்லாமே நாளைக்கு நாம கொள்ளையடிச்சாதானே நடக்கும்?''

தாவூத்தின் உதட்டில் பூத்திருந்த புன்னகை மறைந்தது. "என்ன சொல்ற?''

"ஒருபோதும் மஸ்ஜித் பந்தர்லேந்து மஸ்தான் வீட்டுக்கு வர்ற 'அங்காடியா'வை நம்மால கைப்பற்ற முடியாது...''

"எடுத்துட்டா?''

"காலம் முழுக்க உனக்கு அடிமையா இருக்கேன்...''

"நல்லா யோசிச்சு சொல்லு சபீர்...''

"யோசிக்க வேண்டியது நீதான். நானில்லை...''

"சவால்?''

"சவால்!''

அதன் பிறகு தாவூத் எதுவும் பேசவில்லை. "நாளைக்கு காலைல சந்திப்போம்...''

"எங்க?'' அபுபக்கர் கேட்ட கேள்வி, மற்றவர்களின் கண்களிலும் எதிரொலித்தது.

"எல்லாரும் கடைக்கு வந்துடுங்க...'' என்றபடி தன் புல்லட்டை நோக்கி சென்றான். சபீர் அவனை பின்தொடர்ந்தான்.

'அங்காடியா'வை எந்த இடத்தில் கொள்ளையிடப் போகிறோம் என்பதை தாவூத் யாரிடமும் சொல்லவில்லை. மற்றவர்களும் அதை கேட்கவில்லை. சின்னதோ பெரியதோ அனைத்து மாஃபியா குழுக்களிலும் பிற குழுவை சேர்ந்தவர்கள் ஊடுருவியிருந்தார்கள்.

இந்த உளவை ‘டிப் மில்லி’ என சங்கேத மொழியில் மாஃபியாக்கள் தங்களுக்குள் அழைத்துக் கொள்வார்கள். அந்த வகையில் தாவூத் இப்ராஹிமை சேர்ந்த ஒரு ‘டிப் மில்லி’ மஸ்தான் குழுவில் இருந்தான். அவன் வழியாகத்தான் இந்த ஐந்து லட்ச ரூபாய் பரிவர்த்தனையே தெரியவந்தது. அதேபோல் தன் குழுவிலும் மஸ்தானின் ‘டிப் மில்லி’ இருக்கலாம் என சந்தேகித்தான்.

அதனால்தான் கொள்ளையிடும் இடத்தை சொல்லவில்லை. இதை அபுபக்கர் உட்பட அனைவருமே அறிந்திருந்ததால் இது குறித்து கவலைப்படவில்லை.

ஆனால் – ‘ஒருபோதும் மஸ்ஜித் பந்தர்லேந்து மஸ்தான் வீட்டுக்கு வர்ற ‘அங்காடியா’வை உங்களால எடுக்க முடியாது...’ என சபீர் சொன்ன வாசகம் மட்டும் தொண்டையில் சிக்கிய முள்ளாக உறுத்திக்கொண்டிருந்தது. ஏனெனில் அந்த வழி முழுக்க மக்கள் நிரம்பியிருந்தார்கள். நள்ளிரவிலும் நடமாட்டம் இருக்கும் என்றால் பகலில் எப்படி கூட்டம் பிதுங்கும்? அப்படியிருக்கும்போது எந்த இடத்தில் அதை கைப்பற்ற முடியும்?

எவ்வளவு யோசித்தும் யாருக்கும் விடை கிடைக்கவில்லை. அதற்காக சோர்வடையவும் இல்லை. எப்படியும் தாவூத் சரியானபடி திட்டத்தை வகுத்திருப்பான் என முழுமையாக நம்பினார்கள்.

அந்த உறுதி மறுநாள் ஆட்டம் கண்டது.

சொன்னபடி அபுபக்கர், யூசப்கான், இஜாஸ் ஜிங்கி, ஆசிஸ் டிரைவர், அப்துல் முத்தாலிப், சையத் சுல்தான், ஷேர்கான் ஆகிய ஏழு பேரும் வாட்ச் கடைக்கு வந்தார்கள்.

அவர்களுக்கு முன்பாகவே வந்திருந்த தாவூத், தன் நாற்காலியில் அமர்ந்திருந்தான். சற்றுத் தள்ளி கையை பிசைந்தபடி சபீர் நின்றிருந்தான். தம்பி எந்த சிக்கலிலும் மாட்டிக் கொள்ளக் கூடாதே என்ற பதைபதைப்பு அவனது ஒவ்வொரு அசைவிலும் தெரிந்தது. முந்தைய தினம் அவன் சவால் விட்டது கூட தடுத்து நிறுத்தத்தான். ஆனால், அது பூமராங் ஆகி தம்பியை உசுப்பிவிட்டது போலாகிவிட்டது.

“சாப்பிட்டீங்களா?” தன் ஆட்களை வரவேற்றபடி தாவூத் கேட்டான்.

“ம்...” கோரசாக பதிலளித்தார்கள்.

தன் பார்வையால் சையத் சுல்தானையும், ஷேர்கானையும் அளவிட்டான். முகத்தில் திருப்தி மலர்ந்தது. தன் ஆட்களிலேயே அவனுக்கு பிடித்தவர்கள் அவர்கள் இருவரும்தான். அவன் வயதுதான் அவர்களுக்கும். இருபதுகளில் அடியெடுத்து வைத்திருந்தார்கள்.

இதில், சையத் சுல்தான் பரந்து விரிந்த தோள்களை கொண்டவன். ஆறடி உயரம். பாஷு தாதா போலவே உடற்பயிற்சி செய்வதில் இவனுக்கும் விருப்பம் அதிகம். அது திரண்ட புஜங்களில்

எதிரொலித்தது. 'மிஸ்டர் பம்பாய்' பட்டம் பெற்றவன். 'மிஸ்டர் இந்தியா' கனவில் மிதப்பவன். ஆணழகன். பெண்களின் கனவுகளை நீக்கமற ஆட்சி செய்பவன். இவன் வந்து நின்றாலே எதிரில் இருப்பவர்கள் நடுங்குவார்கள். அந்தளவுக்கு ஆகிருதி.

ஷேர்கான், வேறு மாதிரி. உடல் வலுவை விட குரல் வலு அதிகம். தொண்டையிலிருந்து கத்தினால் இடி இடித்தது போல் இருக்கும். அந்தளவுக்கு சத்தம் போடக்கூடியவன்.

மற்ற ஐவரும் கூட லேசுப்பட்டவர்கள் அல்ல. ஒவ்வொரு விதத்தில் ஒவ்வொருவரும் திறமையானவர்கள். இந்தக் கூட்டுத்தான் தாவூத்தின் வரம். பலம். கண்களால் சிரித்தபடி நாற்காலியிலிருந்து எழுந்தான்.

"சரி, வாங்க போகலாம்..."

கடையை பூட்டிவிட்டு கிளம்பினார்கள்.

முன்னால் சென்ற தாவூத்தை வண்டியில் பின் தொடர்ந்தார்கள்.

சரியாக கார்னாக் பந்தர் ஏரியாவில் தன் புல்லட்டை தாவூத் நிறுத்தினான். பின்னால் வந்த அவன் ஆட்களின் முகத்தில் ஈயாடவில்லை. மனதிலிருந்த நம்பிக்கையும் உறுதியும் ஆட்டம் கண்டது. 'மஸ்தான் பாதுகாப்புடன் வரும் 'அங்காடியா'வை கொள்ளையிட ஏற்ற இடம் இது இல்லையே...'

ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.

சிக்கலான நிலப்பரப்பு அது. பம்பாயின் புகழ்பெற்ற மூன்று மார்க்கெட் அடுத்தடுத்து அங்குதான் இருந்தது. மூன்று சந்தைகளும் கூடும் திரிவேணி சங்கமமாகவும் கார்னாக் பந்தரை சொல்லலாம்.

மொஹத்தா மார்க்கெட், மனிஷ் மார்க்கெட், க்ராஃபோர்ட் மார்க்கெட் ஆகிய மூன்றுமே ஒவ்வொரு விதத்தில் பெயர் பெற்றவை. ஹோல்சேல் முதல் ரீடைல் வரை மொத்த பம்பாய்க்கும் இங்கிருந்துதான் சகல பொருட்களும் சப்ளையாகின்றன. மக்கள் நடமாட்டமல்ல, மக்கள் வெள்ளம் நிரம்பிய பகுதி. சைக்கிளை கூட தள்ளிக்கொண்டுதான் செல்ல முடியும்.

இப்படிப்பட்ட பிரதேசத்தில் அதிகம் போனால் பிக்பாக்கெட் அடிக்க முயற்சிக்கலாம். அப்போது கூட தப்பி ஓடும்போது பிடித்துவிடுவார்கள். அப்படியிருக்க ஊர்ந்து வரும் காரில் இருக்கும் பணத்தை எப்படி கொள்ளையிட முடியும்? அதுவும் மஸ்தான் பாதுகாப்புடன் வரும் வண்டியை சுற்றி வளைத்தால் டின் கட்டிவிட மாட்டார்களா?

அவநம்பிக்கையுடன் தாவூத்தை பார்த்தார்கள். அவன் முகம் இறுக்கமாக இருந்தாலும் தெளிவாகவே இருந்தது. அனைவரையும் தன்னருகில் அழைத்தான். நிதானமாக பேசினான். சுற்றிலும் கூச்சலாக இருந்ததால் தன் குழுவினரைத் தாண்டி அவன் குரல் செல்லவில்லை.

“தனியிடத்துல கொள்ளையடிக்கறது வீரம் இல்லை. இந்த இடத்துல எல்லாரும் பார்க்கும்போது மஸ்தான் பாதுகாக்கிற பணத்தை நாம எடுக்கணும். அப்பத்தான் அந்த நோஞ்சானை விட நாம சக்தி வாய்ந்தவங்கன்னு மக்களுக்கு புரியும். நம்மளைப் பார்த்து நடுங்குவாங்க. காலம் முழுக்க நம்ம பெருமையை பேசுவாங்க. தவிர...”

நிறுத்திய தாவூத் அவர்கள் அனைவரது கண்களுடனும் தன் பார்வையை கலந்தான். தைரியத்தை கடத்தினான். பிறகு அழுத்தமாக சொன்னான். “பாதுகாப்புக்கு வர்ற ஆட்கள் இந்த இடத்துலதான் அலட்சியமா இருப்பாங்க. இத்தனை பேருக்கு முன்னாடி வாலாட்டற துணிச்சல் எவனுக்கும் இல்லைனு நினைப்பாங்க. அந்த எண்ணத்தைத்தான் நாம தவிடுபொடியாக்கணும். என்னை நம்புங்க. ஜெயிக்கப் போறது நாமதான்...”

அவனது ஒவ்வொரு சொல்லும் கல்வெட்டாக அவர்கள் மனதில் பதிந்தது. தலையசைத்தார்கள்.

“அங்க இருக்கு பார்த்தீங்களா கார்னாக் பந்தரோட மேம்பாலம். இரண்டு பேர் இரண்டு மூலைல அங்க நில்லுங்க. இன்னொரு ரெண்டு பேர் மேம்பாலத்துக்கு அந்தப் பக்கம் போங்க. முஸாஃபிர்கானா முடிஞ்சு இந்த பிரிட்ஜ் தொடங்கற இடத்துல நில்லுங்க. மத்த மூணு பேரும் என் கூட வாங்க...”

“பிரிட்ஜ் மேலதான் காரை மடக்கப் போறோமா?” சையத் சுல்தான் கேட்டான்.

“சொல்றேன். சபீர் நீ இதுல கலந்துக்க வேண்டாம். இங்கயே இரு. மத்தவங்களுக்கு எல்லாம் நான் சொன்னது புரிஞ்சுது இல்லையா? பொருட்களை எடுத்துட்டு அவங்கவங்க பொசிஷனுக்கு போங்க...”

அனைவரும் நகர்ந்தார்கள். தங்கள் வாகனத்தில் இருந்த இரும்புக் குழாயையும், நாட்டுத் துப்பாக்கியையும் எடுத்துக் கொண்டார்கள். மக்கள் பார்வையில்படாதபடி அதை மறைத்தார்கள். தங்களுக்கென்று ஒதுக்கப்பட்ட இடங்களை நோக்கி நகர்ந்தார்கள்.

ஐந்து நிமிடங்களுக்குள் கார்னாக் பந்தர் மேம்பாலம் தாவூத்தின் கட்டுப்பாட்டுக்குள் வந்தது. மேம்பாலத்தின் எந்தப் பக்கத்திலிருந்து எந்த வாகனம் வந்தாலும் அவனது ஆட்களின் பார்வையில் படாமல் அது செல்லாது. அந்தளவுக்கு எவருக்கும் சந்தேகம் வராதபடி ஸ்கெட்ச் போட்டு இருபக்கமும் ஆட்களை நிறுத்தியிருந்தான்.

மேம்பாலத்தின் நடுவில் மற்ற மூவருடன் தாவூத் நின்று கொண்டான்.

நிமிடங்கள் கரைந்தன. ‘அங்காடியா’வை சுமந்து வரும் காருக்காக காத்திருந்தார்கள். வெயில் மெல்ல மெல்ல ஏறிக் கொண்டிருந்தது.

மதியம் மணி இரண்டு. கார்னிக் பந்தர் மேம்பாலத்திலிருந்து

க்ராஃபோர்ட் மார்க்கெட் வழியாக பி.டி.மெல்லோ ரோட்டுக்கு செல்லும் பாதையில் குறிப்பிட்ட அந்தக் கார் வந்தது. 'அங்காடியா' பணம் அதில்தான் இருந்தது. பின்னிருக்கையில் பணப்பையுடன் இரு மார்வாடிகள். முன்னிருக்கையில் டிரைவருக்கு அருகில் மஸ்தானின் அடியாள்.

ஊர்ந்து வந்த அந்த வாகனம் மேம்பாலத்தை கடக்கும் வரை தாவூத்தும் அவன் ஆட்களும் காத்திருந்தார்கள். சரியாக மொஹமத் அலி சாலையில் அது திரும்ப முற்படும்போது – எந்த சமிக்ஞையும் இன்றி ஒரே நேரத்தில் தாவூத்தும் அவன் ஆட்களும் அந்த காரின் மீது பாய்ந்தார்கள். சையத் சுல்தான் ஸ்டியரிங் வீலை கண்ணாடி வழியே கைவிட்டு வளைத்தான். அதிர்ந்த டிரைவர் பிரேக் பிடித்தான். ஷேர்கான் பின்பக்க கதவைத் திறந்து மார்வாடிகளின் முகத்தில் குத்தினான். தாவூத், டிரைவரை இழுத்துப் போட்டு ஓங்கி அறைந்தான்.

சரியாக அப்போதுதான் அந்த சம்பவம் நடந்தது.

எங்கிருந்தோ ஓடி வந்த மஸ்தானின் ஆட்கள் கையில் துப்பாக்கியுடன் தாவூத்தையும் அவன் ஆட்களையும் சுற்றி வளைத்தார்கள்.

# 37

**சொ**தப்பியது என்னவோ தாவூத்தான். 'அங்காடியா'வை சுமந்து வந்த காரை தன் தலைமையில் அவன் சுற்றி வளைத்திருக்கக் கூடாது. அந்த எண்ணமும் அவனுக்கு இல்லை. வாட்டசாட்டமாக இருந்த சையத் சுல்தானையும், இடி போன்ற குரலை கொண்ட ஷேர் கானையும்தான் முன்னால் நிறுத்த வேண்டும் என மனதுக்குள் திட்டமிட்டிருந்தான்.

ஆர்வக்கோளாறில் அது பிசகிவிட்டது. தன்னையும் அறியாமல் அவனே முன்னால் வந்து நின்றுவிட்டான். என்றாலும், பின்வாங்காமல் வேகமாக செயல்பட்டான். டிரைவரை இழுத்துப் போட்டு ஓங்கி அறைந்தான். இந்த முதல் செயலும் முதல் தாக்குதலும் அவன் ஆட்களுக்கு பலத்தை கொடுத்தது. அவர்களும் தங்கள் பங்குக்கு செயல்பட்டார்கள். ஷேர்கான், பின்னிருக்கையில் இருந்த இரு மார்வாடிகளின் முகத்திலும் ஓங்கி ஒரு குத்துவிட்டான். டிரைவருக்கு அருகில் பாதுகாப்புக்காக அமர்ந்திருந்த மஸ்தானின் அடியாளை தன் பங்குக்கு சையத் சுல்தான் பதம் பார்த்தான்.

திட்டத்துக்கு மாறாக நடந்தாலும் வெற்றி பெற்றுவிட்டோம். 'அங்காடியா' பணத்தை கைப்பற்றி விட்டோம் என தாவூத் நினைத்த நேரத்தில்தான் - அந்த சம்பவம் நடந்தது.

எங்கிருந்தோ ஓடி வந்த மஸ்தானின் ஆட்கள் கையில் நாட்டுத் துப்பாக்கியுடன் அவர்களை சுற்றி வளைத்தார்கள்.

யாராக இருந்தாலும் அந்த இடத்தில் பயந்து தான் ஆக வேண்டும். ஏனெனில் சுற்றி வளைத்தவர்கள் முப்பது வயதை கடந்தவர்கள். வாட்டசாட்டமானவர்கள். அடிதடிக்கு பெயர் போனவர்கள். வரதுபாய், கரீம்லாலா, ஹாஜி மஸ்தான் என பம்பாயின் மூன்று பெரிய தாதாக்களின் கூட்டத்தையும் சேர்ந்தவர்கள்.

இவர்களோ இருபதுகளில் அடியெடுத்து வைத்திருப்பவர்கள். பெரிய தலைகளுடன் மோதி பழக்கமில்லாதவர்கள்.

ஆனால் - அந்த நேரத்தில்தான், தான் யாரென்பதை தன் ஆட்களுக்கே தாவூத் நிரூபித்தான். பின்னாளில் ஒட்டுமொத்த தெற்காசிய நாடுகளையும் தன் கட்டுப்பாட்டுக்குள் அவன் கொண்டு வந்தது ஒரேயொரு குணத்தால்தான். அந்தப் பண்பைத்தான் அன்றும் வெளிப்படுத்தினான்.

அதுதான் துரிதமாக செயல்படுதல். நேரத்துக்கு தகுந்தபடி போர் முறையை மாற்றி வடிவமைத்தல். எதிரிகள் எந்த ஆயுதத்தை பயன்படுத்துகிறார்களோ அதற்கு தகுந்தபடி தனக்கான ஆயுதத்தை உருவாக்குதல். இதைத்தான் அப்போதும் செய்தான். தன் முதுகுக்கு பின்னால் செருகியிருந்த துப்பாக்கியை மைக்ரோ நொடியில் எடுத்தவன் அதை மார்வாடிகளின் நெற்றியை நோக்கி குறிபார்த்து வைத்தான்.

தலைவனின் செயலை புரிந்து கொண்ட சையத் சுல்தானும், ஷேர் கானும் தங்கள் பங்குக்கு துப்பாக்கியை எடுத்து காரில் இருந்தவர்கள் முன்னால் நீட்டினார்கள். இதை சற்றும் எதிர்பார்க்காத மஸ்தானின் ஆட்கள் என்ன செய்வது என்று தெரியாமல் திகைத்தார்கள்.

அந்த சூழலை தனக்கு சாதகமாக தாவூத் பயன்படுத்திக் கொண்டான். முகத்தை திருப்பாமல் குரல் கொடுத்தான். “அசையாம அப்படியே நில்லுங்க. ஓரடி நீங்க எடுத்து வைச்சாலும் இவங்க பிணமாகிடுவாங்க... சையத், நம்ம ஆட்கள்ல ஒருத்தனை முன்னால வரச் சொல்லு...” இளைஞன் ஒருவன் வந்து நின்றான்.

“நம்மை சுத்தி வளைச்சவங்க எந்த வண்டில வந்திருக்காங்க...”

“ஒரு கார்... ரெண்டு புல்லட்...”

“உன்கிட்ட துப்பாக்கி இருக்குல?”

“ம்...”

“எல்லா வண்டிகளோட டயரையும் சுட்டுட்டு நீங்க இடத்தை காலி பண்ணுங்க...”

கட்டளைக்கு அடிபணிந்தான். பணிந்தார்கள். டமால்... டமால்... என பின்னால் இருந்து ஓசைகள் கேட்டன. தாவூத் திரும்பவேயில்லை. வியர்த்து வழியும் மார்வாடிகளின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். மேம்பாலத்தின் இரு பக்கங்களிலும் கூட்டம் சேர ஆரம்பித்தது. துப்பாக்கி ஓசை மூன்று மார்க்கெட்டுகளிலும் எழுந்த கூச்சலை அடக்கியது. எங்கும் மவுனம். நிசப்தம். அச்சம். கார்னர் பந்தரில் நின்றிருந்த சபீருக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. நிற்பதா அல்லது ஓடுவதா என்று தீர்மானிக்க முடியாமல் குழம்பினான். அங்கிருந்த அனைவரும் தன்னையே பார்ப்பது போல் பிரமை. யாரோ சட்டையை பிடித்தார்கள். திமிறியபடி திரும்பினான். தாவூத் சொன்னபடி மஸ்தானின் ஆட்கள் வந்த வாகனங்களின் டயரை சுட்டவன் நின்றிருந்தான். என்ன ஏது என்று கேட்பதற்குள் “வா...” என்றபடி ஓட ஆரம்பித்தான். புரிந்து கொண்டு சபீரும் பின்தொடர்ந்தான். பக்கவாட்டில் இருந்த சின்ன சந்துக்குள் நுழைந்தார்கள். மறைவதற்கு முன் திரும்பி மேம்பாலத்தை பார்த்தான். ஒரு புள்ளியாக துப்பாக்கியை ஏந்தியபடி தாவூத் நின்றிருப்பது தெரிந்தது. தம்பி எப்படியும் தப்பித்துவிடுவான் என உள்ளுணர்வு சொல்லவே தன் கால்களின் வேகத்தை அதிகரித்தான். சபீர் நினைத்தபடிதான் நடந்தது.

“சையத்...” தாவூத் குரல் கொடுத்தான். “இந்த வண்டிக்கு பாதுகாப்பா வந்த மஸ்தான் ஆளோட காலை சுட்டுட்டு வண்டில ஏறு...” கட்டளையிட்டது டன் நிற்காமல் தானும் பின்னிருக்கையில் ஏறினான். “ஷேர்கான், டிரைவரை கிளப்பச் சொல்லு...”

டிரைவர் புத்திசாலி. மற்றவர்கள் சொல்வதற்கு முன் தானாகவே வண்டியை கிளப்பினான். பின்னிருக்கையில் இருந்த இரு

மார்வாடிகளுக்கும் அஸ்தியில் ஜுரம் கண்டது. தங்களை இடித்தபடி இந்தப் பக்கம் தாவூத்தும் அந்தப் பக்கம் சையத் சுல்தானும் அமர்ந்திருந்ததை செய்வதறியாமல் சகித்துக்கொண்டார்கள். அனிச்சையாக அவர்கள் கரங்கள் தங்களிடமிருந்த பெட்டிகளை கெட்டியாக பிடித்துக்கொண்டன.

டிரைவருக்கு வழிகாட்டியபடி திரும்பிப் பார்த்த ஷேர் கான் நிம்மதியுடன் பெருமூச்சு விட்டான். "யாரும் நம்மை பின்தொடரலை..."

"தெரியும். மஸ்தானோட ஆட்களுக்கு வேகமா ஓடி பழக்கமில்லை. வயசாகிடுச்சு இல்லையா? ஆனா, நாம இளைஞர்கள்..." புன்னகையுடன் தாவூத் நிறுத்தினான். சையத் சுல்தானும், ஷேர் கானும் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள். தங்கள் தலைவன் என்ன சொல்ல வருகிறான் என்பது அவர்களுக்கு புரிந்தது.

"அதனால..." என்று தாவூத் நிறுத்தவும், அதிக மக்கள் நடமாட்டம் இல்லாத இடத்துக்கு கார் வந்து சேரவும் சரியாக இருந்தது.

தலையசைத்த ஷேர்கான், தன்னிடமிருந்த துப்பாக்கியை தலைகீழாக பிடித்தான். மரப்பட்டையால் டிரைவரின் தலையில் ஓங்கி அடித்தான். அலறலுடன் பிரேக் பிடித்த ஓட்டுநர் அப்படியே ஸ்டியரிங் வீல் மீது சாய்ந்தான். மயக்கமானான்.

அதே காரியத்தை மார்வாடிகளுக்கு செய்ய சையத் சுல்தான் கையை ஓங்கினான்.

"வேண்டாம்..." தடுத்த தாவூத், அவர்களிடமிருந்த பெட்டியை பிடுங்கினான். "இவங்களுக்கு கார் ஓட்டத் தெரியாது. பயப்படாம வா..."

கிளம்பினார்கள். ஓடினார்கள். மறைந்தார்கள்.

சபீருடன் சேர்ந்து முன்பே தலைமறைவாகிவிட்ட தனது ஆட்கள் எங்கிருப்பார்கள் என தாவூத் நினைத்தானோ அந்த இடத்தை அடுத்த பத்தாவது நிமிடத்தில் சையத் சுல்தான், ஷேர்கான் ஆகியோரோடு அடைந்தான். எதிர்பார்த்தது போலவே அவர்கள் அங்கிருந்தார்கள். மூச்சு வாங்க பெட்டியை திறந்தவன் பணத்தை எண்ணச் சொன்னான்.

எண்ணிய அவன் ஆட்கள் அதிர்ச்சியுடன் அவனைப் பார்த்தார்கள்.

"என்ன விஷயம்?"

"நாம நினைச்ச மாதிரி இதுல ஐந்து லட்ச ரூபாய் இல்ல..."

"அப்புறம்?"

"நாலு லட்சத்து 75 ஆயிரம் ரூபாய்தான் இருக்கு..."

"மீதி இருபத்தஞ்சாயிரம் எங்க போச்சு?"

"தெரியலை..."

"சரி. நாம இங்க இருக்க வேண்டாம். நிச்சயம் போலீஸ் நம்மைத்

தேடும். எல்லாரும் பிரிஞ்சுப் போயிடுங்க. மொத்தமா அடங்கினதும் நாம சந்திச்சு பங்கு போட்டுக்கலாம். சபீர், நீ என் கூட வா...”

ஏழு பேரும் திசைக்கு ஒருவராக பறந்தார்கள்.

ஆனால் - நிலமையை சமாளித்து ‘அங்காடியா’வை வெற்றிகரமாக கைப்பற்றிய தாவூத் கூட ஒரு விஷயத்தை புரிந்துகொள்ளவில்லை.

அந்த விஷயம்தான் பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றிலேயே புதிய திருப்பத்தை ஏற்படுத்தியது.

யாரை சீண்ட இந்த கொள்ளையை திட்டமிட்டானோ... யார் தன் ஆட்களை அடித்ததால் கொதித்தெழுந்து திருப்பி அடிக்க முற்பட்டானோ... யாரை தாதாக்களின் வரலாற்றிலிருந்தே துடைத்தெறிய வேண்டும் என்று சபதம் செய்தானோ... யார் பணத்தை எடுத்தால் அந்த நபர் தலைக்குப்புற கவிழ்வார் என்று கனவு கண்டானோ - அந்த ஹாஜி மஸ்தானுக்கு சொந்தமான பணமல்ல அது!

பதிலாக பம்பாய் மாநகர கூட்டுறவு வங்கிக்கு சொந்தமானது! அதற்கு பாதுகாப்பாக தன் ஆட்களை அனுப்பியதுதான் மஸ்தான் செய்த வேலை!

எனவே, இந்த வழிப்பறியால் ஹாஜி மஸ்தானின் சாம்ராஜ்ஜியம் குண்டூசி முனையளவுக்குக் கூட ஆட்டம் காணவில்லை. மாறாக புலியை பிடிக்கப் போய் குரங்கைப் பிடித்த கையாக கடைசியில் தாவூத்தான் பொறியில் சிக்கினான்.

இந்த உண்மை பணத்தை பறிகொடுத்த இரு மார்வாடிகளும் காவல்நிலையத்துக்கு சென்று புகார் கொடுத்த பிறகுதான் உலகுக்கே தெரியவந்தது.

அவ்வளவுதான். பிதோனி காவல் நிலையமே அதிர்ந்துவிட்டது. கடந்த பத்தாண்டுகளில் இவ்வளவு பெரிய வங்கிக் கொள்ளை நடந்ததேயில்லை. உயரதிகாரிகள் அனைவரும் பதறியடித்து ஓடி வந்தார்கள். வழக்கை பதிவு செய்தார்கள். அந்த வழக்கு எண்: CR No. 725 / 74.

மறுநாள் பம்பாயில் வெளியான அனைத்து நாளிதழ்களின் தலைப்புச் செய்தியிலும் தாவூத்தே இடம் பிடித்தான்.கேள்விப்பட்ட இப்ராஹிம் கஸ்கர் நிலைகுலைந்தார்.

ஒழுக்கத்துக்கு பெயர்போனவர். நீதி நியாயங்களுக்கு கட்டுப்பட்டவர். மத சம்பிரதாயங்களில் இருந்து விலகாதவர். மொத்தத்தில் நல்ல மனிதர் என்று அவரைக் குறித்து ஊர் சொல்கிறது. புகழ்கிறது. அப்படிப்பட்ட தனக்கு பிறந்த தாவூத், இப்படி செய்துவிட்டானே... இனி எப்படி ஊரில் தலைகாட்ட முடியும்? நண்பர்களை எப்படி எதிர்கொள்வது? உயரதிகாரிகளுக்கு என்ன பதில் சொல்வது?

அப்படியே இடிந்துபோய் அமர்ந்துவிட்டார். சின்னச் சின்ன

திருட்டுகளையும் ஏமாற்றுக் காரியங்களையும் தன் மகன் செய்கிறான் என்பது அவருக்குத் தெரியும். அதை எல்லாம் வயசுக் கோளாறு என்றே நினைத்தார். நிச்சயம் ஒரு நாள் அவன் திருந்துவான்... தன்னைப் போல் ஒழுக்க சீலனாக மாறுவான் என்று நம்பினார்.

அதெல்லாமே வீணாகிவிட்டது. சீட்டுக் கட்டுப் போல் அவரது கனவுகள் அனைத்தும் சரிந்துவிட்டன.வங்கிப் பணம் என்பது அரசாங்கத்துக்கு சொந்தமல்லவா..? ஏழைகளின் சேமிப்பல்லவா அது..? அதைப் போய் கொள்ளையடித்திருக்கிறானே... அந்தளவுக்கா தாவூத் சீரழிந்துவிட்டான்..?

நினைக்க நினைக்க அவர் மனம் ஆறவேயில்லை. தன்னைப் பார்த்து கையெடுத்து கும்பிட்ட அடித்தட்டு மக்கள் இனி தன் முகத்தை பார்த்ததுமே காறி உமிழ்வார்கள். அல்லா மன்னிக்கவே மாட்டார்.

துக்கம் பீறிட்டது. அழுகை வந்தது. சஸ்பெண்ட் ஆகி முடங்கியிருந்த காலத்திலும் ஒருவரும் அவரைக் குறித்து தப்பாக பேசியதில்லை. காவல்துறையை சேர்ந்த உயரதிகாரிகளும் மரியாதையுடனேயே அவரை நடத்தினார்கள்.

இனி அப்படி செய்வார்களா? வாய்ப்பேயில்லை. தனக்கு புகழைத் தேடித் தரவேண்டிய தன் மகன், அழிக்கமுடியாத கரும்புள்ளியை தன் முகத்தில் குத்திவிட்டான்.

நேராக அதிகாரிகளிடம் சென்றார். ''சட்டப்படி என்ன நடவடிக்கை வேணாலும் எடுங்க. தலைமை ஏட்டா என் கடமையை நான் செய்வேன். அவனை கைது செய்யறது என் பொறுப்பு...''

சொன்னதுடன் நிற்கவில்லை. செயலிலும் இறங்கினார். சபீரையும் தாவூத்தையும் சல்லடை யிட்டு தேடினார். அடுத்த மூன்று நாட்கள் இருவரும் வீட்டுக்கே வரவில்லை. எங்கிருக்கிறார்கள் என்றும் தகவல் கிடைக்கவில்லை.

அதற்குள் தாவூத்தின் கூட்டாளிகள் சிக்கிவிட்டார்கள். லாக்கப்பில் அவர்களை பெண்டு நிமிர்த்தியபோதும் தங்கள் தலைவன் இருக்கும் இடம் அவர்களுக்கு தெரியவில்லை.

தனக்கு தெரிந்த நெட் ஒர்க்கில் இப்ராஹிம் முயற்சித்தார். நல்ல செய்தியும் கிடைத்தது. பைகுலாவில் பதுங்கியிருக்கிறான்...

போதாதா? போலீஸ் படையுடன் அங்கு சென்றவர் சபீரையும் தாவூத்தையும் கையும் களவுமாக பிடித்தார். அந்த இடத்திலேயே தன் பெல்ட்டால் அவர்கள் இருவரையும் வெளுத்து வாங்கினார்.

இந்த அடியும் இதற்கு பிறகு நடந்த சம்பவமும்தான் ஒரு 'டான்' பிறக்கவே காரணமாக அமைந்தது. ஆம், தாவூத் இப்ராஹிம் என்கிற 'டான்' ஜனித்தது அந்த நொடியில்தான்.

# 38

சபீரை விட இளைய மகன் தாவூத்தைதான் வெளுத்து வாங்கினார் இப்ராஹிம் கஸ்கர். அனைத்துக்கும் காரணம் அவன்தானே? மொத்த நிகழ்வின் சூத்திரதாரி தன் மகனாகவா இருக்க வேண்டும்?

சபீரும், தாவூத்தும் அலறினார்கள். உடன் வந்த காவலர்களுக்கே அதை பார்க்க சகிக்கவில்லை. இப்ராஹிமை தடுக்க முற்பட்டார்கள். யார் பேச்சையும் கேட்கும் நிலையில் அவர் இல்லை. தன் தோள்பட்டை வலிக்கும் அளவுக்கு பெல்ட்டால் அடித்தவர் சில நொடிகள்தான் இளைப்பாறினார். அதன் பிறகு, ''ரெண்டு பேரையும் ஜீப்புல ஏத்துங்க...'' என்று கட்டளையிட்டுவிட்டு வெளியே வந்தார். டிரைவர் சீட்டுக்கு அருகில் அமர்ந்தார்.

அடுத்த எட்டாவது நிமிடம் காவல்நிலையத்தின் வாயிலில் அந்த ஜீப் நின்றது. இறங்கி பின்பக்கம் சென்றவர், இருவரையும் தரதரவென இழுத்துக்கொண்டு உள்ளே நுழைந்தார். காவல்துறை உயரதிகாரிகளின் முன்னால் அவர்களை கிடத்தினார்.

“வாக்கை நிறைவேத்திட்டேன். சட்டப்படி என்ன செய்யணுமோ செஞ்சுக்குங்க...'' சொல்லிவிட்டு திரும்பிப் பார்க்காமல் வெளியேறிவிட்டார்.

இந்தக் காட்சி காவல்துறை உயரதிகாரிகளை பாதித்தது. சட்டத்தை மீறிய தன் மகன்களை தானே பிடித்து வந்து ஒப்படைத்திருக்கிறாரே... என்ற எண்ணம் அனைவர் மனதிலும் வேர்விட்டு வளர்ந்தது. இதுவே அவர் மீதான மரியாதை ஒரு படி அதிகமாகவும் காரணமாக அமைந்தது.

தங்கள் பங்குக்கு அவர்களும் சபீரையும் தாவூத்தையும் பெண்டு நிமிர்த்தினார்கள்.

ஆனால், இவையெல்லாம்தான் தாவூத்தின் பெருமையை பம்பாய் முழுக்க பரவ வைத்தது என்பதை ஒருவரும் அறியவில்லை. நகரெங்கும் தாவூத் பேசப்பட்டான். அவன் அடித்த கொள்ளை ஒட்டுமொத்த பம்பாயின் புருவத்தையும் உயரவைத்தது. டான் பிறந்தான்.

நாட்களும் மெல்ல மெல்ல அசைந்தன. நகர்ந்தன. ஜனவரி மாதமும் வந்து சேர்ந்தது. குளிரும் பம்பாயை தாக்கியது.

சோம்பலான ஒரு மதிய நேரம். தொங்கிரி காவல் நிலையத்தில் இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹா அமர்ந்திருந்தார்.

பொதுவாக இதுபோன்ற நேரங்களில் சந்தர்ஸ்ட் சாலையை கடக்கும் ரயிலின் ஓசையை கேட்டுக்கொண்டிருப்பார். அல்லது சந்தர்ஸ்ட் சாலையிலிருக்கும் ரயில்நிலைய வாசலில் ஒலிக்கும் இரைச்சலை சகித்தபடி இருப்பார்.

அன்றைய தினம் அப்படி இருக்க முடியவில்லை. காரணம், தலைமை ஏட்டான திலீப் மனே அவர் முன்னால் நின்றிருந்தார்.

"என்ன விஷயம்?"

"வழக்கமானதுதான்..."

திலீப் என்ன சொல்கிறார் என்பது புரிந்தது. ஆனாலும் கேட்டார். "இந்த முறை யாரு?"

"பேக்கரில வேலை பார்க்கிறவன்..."

ரன்பீர் லிக்ஹாவுக்கு எரிச்சல் வந்தது. அன்றைய தினமே அது மூன்றாவது புகார். எல்லோருமே சொல்லி வைத்தது போல் பதான்களுக்கு எதிராகவே அணிதிரண்டார்கள். காவல் நிலையத்தை முற்றுகையிட்டார்கள். வந்தவர்கள் அனைவரும் அடித்தட்டு ஏழை மக்கள். வாழ்க்கையை நடத்த பதான்களிடம் வட்டிக்கு பணம் வாங்காமல் இருக்க முடியவில்லை. குறிப்பிட்ட தேதியில் வட்டி வந்து சேராதபோது பதான்கள் சட்டத்தை தங்கள் கைகளில் எடுத்துக்கொண்டார்கள். பாதிக்கப்பட்டவர்களை அடித்தார்கள் அல்லது அவர்கள் வீட்டு பாத்திரங்களை வீதியில் வீசி எறிந்தார்கள். இது சென்ற மாத நிலவரம். இந்த மாதம் இன்னும் ஒரு படி மேலே போய் கடன் வாங்கியவரை கடத்திச் செல்லும் நிலைக்கு வந்துவிட்டார்கள்.

இதெல்லாம் தவறல்லவா? பதான்கள் ஏன் இப்படி இருக்கிறார்கள்?

அழைத்து பேசிப் பார்த்தார். புத்திமதிகளை சொன்னார். ம்ஹூம். யார் காதிலும் எதுவும் ஏறவில்லை. தங்கள் நடவடிக்கைகளையும் நிறுத்திக்கொள்ளவில்லை. பம்பாயில் பெருகிவரும் இந்த பதான்களின் அட்டகாசத்தை எப்படி அடக்குவது? மற்ற ஏரியா போலீஸ் ஸ்டேஷனை விட தொங்கிரி காவல்நிலையம்தான் இதனால் அதிகம் பாதிக்கப்பட்டது. ஸ்டேஷனின் தலைவலியாக அதுவே மாறிப்போனது.

"என்ன செய்யட்டும்?" திலீப்பின் கேள்வி ரன்பீர் லிக்ஹாவின் சிந்தனையை கலைத்தது.

"முஸாபீர்கானா போய் இப்ராஹிம் கஸ்கரை கூட்டிட்டு வா..."

"அவர்தான் ரிடையர் ஆகிட்டாரே?"

"அதனால என்ன? பதான்கள் கிட்ட பக்குவமா அவராலதான் பேச முடியும்..."

இன்ஸ்பெக்டர் சொன்னபடியே இப்ராஹிமை கையோடு திலீப் அழைத்து வந்தார்.

"சொல்லுங்க... நான் என்ன செய்யணும்?" அமைதியாக கேட்டார் இப்ராஹிம். ஓய்வுபெற்ற பிறகு அவரது நாட்கள் இப்படித்தான் கழிகின்றன. காவல்துறைக்கு அவரது சேவை இப்போதும் தேவைப்படுகிறது. சொல்லப் போனால் முன்பைவிட அதிகமாகவே. இதை அவரும் உணர்ந்திருந்தார். அதனாலேயே

மகிழ்ச்சியோடு தன்னால் இயன்ற உதவிகளை செய்தும் வந்தார்.

"பதான்களோட கொட்டம் தாங்க முடியலை பாய்..." ரன்பீர் லிக்ஹாவின் குரலில் கவலை தெரிந்தது.

"ம்..."

"நீங்கதான் கரீம் லாலாகிட்ட பேசணும். நீங்க சொன்னா கேட்பாரு..."

"லாலா ரொம்ப நல்ல மனுஷன் இன்ஸ்பெக்டர். என்ன அவர் கூட இருக்கிற பதான்கள்தான் அடாவடித்தனம் பண்ணறாங்க. இதனால லாலா பேரும் கெட்டுப்போகுது. இப்ப எல்லாம் லாலா பேச்சை கூட அவங்க கேட்கறதில்லை..."

"நீங்களே இப்படி சொல்லிட்டா எப்படி பாய்... உங்களைத்தான் மலை போல நம்பியிருக்கேன்..."

"சரி என்னால முடிஞ்சதை நான் செய்யறேன்..."

சும்மா வாய் வார்த்தைக்கு இப்படி இப்ராஹிம் சொல்லவில்லை. உண்மையிலேயே அதற்கான அனைத்து முயற்சிகளையும் செய்தார்.

என்றும் அவரைப் பார்த்ததுமே திறக்கும் கரீம் லாலா வீட்டு கதவுகள் அன்றும் அவர் வருகையை முன்னிட்டு அகலமாக விரிந்தன. வாசலுக்கு வந்து லாலா வரவேற்றார். உள்ளே அழைத்துச் சென்றார். நாற்காலியில் அமர்ந்ததுமே சுற்றி வளைக்காமல் வந்த விஷயத்தை இப்ராஹிம் சொல்லிவிட்டார்.

"சரி, கவலைப்படாமபோங்க. பசங்களை அடக்கி வைக்கறேன்..."

"நன்றி லாலா..."

வாக்குத் தந்தபடி பதான்களை லாலா கண்டித்தாரா என்று தெரியாது. ஆனால், பதான்கள் திருந்தவில்லை. அடித்தட்டு ஏழை மக்களை அவர்கள் கொடுமைப்படுத்துவதும் நிற்கவில்லை.

இப்ராஹிம் கஸ்கரும் தொங்கிரி காவல் நிலையத்துக்கும் கரீம் லாலாவின் வீட்டுக்கும் நடையாய் நடந்தார். எல்லா முறையும் வரவேற்புக்கு குறைவில்லை. விருந்தோம்பலிலும் பிசிறு ஏற்படவில்லை. முன்பு என்ன சொன்னாரோ அதையே ஒவ்வொரு முறையும் லாலா வார்த்தை மாறாமல் சொன்னார்.

ஆனால், பதான்களின் கொடுமை மட்டும் நிற்கவில்லை. அமீர் ஸாதா, அலாம்ஸெப் ஆகியோரின் அடாவடிகள் தொங்கிரி காவல்நிலையத்தையே கிடுகிடுக்க வைத்தன.

இதற்கெல்லாம் சிகரமாக ஒரு சம்பவம் நடந்தது. ஆறரை அடி உயரும் அதற்கேற்ற உடல்வாகும் கொண்ட அமித்கான் என்னும் பதான் திடீரென்று ஒருநாள் காவல் நிலையத்துக்குள் புகுந்தான். அங்கிருந்த மேஜை நாற்காலிகளை எல்லாம் அடித்து நொறுக்கினான். காவலர்களால் கையை பிசைந்தபடி இதையெல்லாம் பார்க்கத்தான் முடிந்தது.

இதற்குள் ரன்பீர் லிக்ஹாவின் நம்பிக்கையும் தவிடுபொடியானது.

யாரை நம்பினாரோ அந்த இப்ராஹிம் கஸ்கராலேயே இதை தடுக்க முடியவில்லை என்னும்போது மற்றவர்களால் என்ன செய்ய முடியும்?

பம்பாய் பத்திரிகைகள் அனைத்தும் தொங்கிரி காவல்நிலையத்துக்கு உட்பட்ட ஏரியாவில் பதான்களால் நிகழ்ந்து வரும் கொடுமைகளை அப்பட்டமாக எழுதி, 'இன்ஸ்பெக்டர் இதையெல்லாம் பார்த்துக்கொண்டு சும்மா இருக்கலாமா' என கண்டித்தன.

கையறு நிலையில் அப்படியே தலையில் கைவைத்து ரன்பீர் லிக்ஹா அமர்ந்துவிட்டார். நிச்சயம் 'ஏன் நடவடிக்கை எடுக்கவில்லை' என கேள்வி கேட்டு அதிகாரிகளிடமிருந்து கடிதம் வரும். சஸ்பென்ட் செய்யப்படலாம். சொல்வதற்கில்லை. நல்ல பெயர் வாங்குவதற்காக டிஸ்மிஸ் செய்தாலும் செய்துவிடுவார்கள். தடுக்கவும் முடியாது. அவ்வளவுதான். இருண்ட எதிர்காலத்தை எதிர்கொள்ள வேண்டியதுதான். வேலை போனால் குடும்பத்தை எப்படி நடத்துவது? பிள்ளைகளை யார் படிக்க வைப்பார்கள்..?

சிலந்தி வலையாக தன்னைச் சுற்றி, தானே கேள்விகள் எழுப்பி அதற்கு பதில் தெரியாமல் சோர்ந்து போய் அவர் அமர்ந்திருந்தபோது - அவர் அறைக் கதவு திறந்தது.

யார் வருகிறார்கள் என்று புரிந்தது. அதனாலேயே ரன்பீர் திரும்பவில்லை.

தட்டிவிட்டு வராமல் அல்லது அனுமதி வழங்காமல் அவர் அறைக்குள் நுழையும் உரிமை ஒருவருக்கு மட்டுமே உண்டு. மொஹமத் இக்பால் நடிக். சுருக்கமாக நடிக். 'ராஸ்தார்' என்னும் உருது வாரப் பத்திரிகையின் ஆசிரியர்.

அப்போது பம்பாயில் சின்னதும் பெரியதுமாக ஏராளமான பத்திரிகைகள் வந்துகொண்டிருந்தன. ஒவ்வொன்றும் ஒவ்வொரு ஏரியாவை மையமாக வைத்து இயங்கி வந்தன. அந்த வகையில் 'ராஸ்தார்', தொங்கிரியில் புகழ்பெற்றது. தாதாக்களின் கொடுமைகளை அந்த வார இதழ் தன்னால் முடிந்தவரை அம்பலப்படுத்திவந்தது.

அந்த வாரப் பத்திரிகையின் வெளியீட்டாளர், ஆசிரியர், க்ரைம் ரிப்போர்ட்டர் எல்லாமே நடிக்தான். பகுதி நேர செய்தியாளராக தன் வாழ்க்கையை தொடங்கியவர் குறுகிய காலத்தில் சொந்தமாக பத்திரிகை தொடங்கிவிட்டார். அன்றைய தினத்தில் அனைத்து செய்தியாளர்களின் கனவும் பத்திரிகை ஒன்றை ஆரம்பிப்பதாகத்தான் இருந்தது. அந்த வகையில் 'ராஸ்தாரை' தொடங்கியபோது நடிக்குக்கு வயது 26தான்.

பத்திரிகையின் உள்ளடக்கமும் செய்தியை பிரசுரிக்கும் விதமும் பலத்த வரவேற்பை பெறவே, இதழ் தொடங்கப்பட்ட

சில மாதங்களிலேயே அது முதல்நிலைக்கு வந்தது. மனிதரும் 30 வயதுக்குள் கார், பங்களா என செட்டிலாகிவிட்டார்.

அப்படிப்பட்ட நடிக்தான், அன்று ரன்பீர் லிக்ஹாவின் அறைக் கதவை திறந்துகொண்டு வந்தார்.

"என்ன சார் தலைல கை வைச்சு உட்கார்ந்திருக்கீங்க? டிரான்ஸ்ஃபர் கிடைச்சுடுச்சா?"

"அப்படி கிடைச்சிருந்தா பரவாயில்லையே... சந்தோஷமா போயிருப்பேனே..."

"ஏன் சார் சலிச்சுக்கறீங்க?"

"வேற என்ன பண்ணச் சொல்றீங்க நடிக்? இந்த ஸ்டேஷனோட பிரச்னை என்னன்னு உங்களுக்குத் தெரியும்ல?"

"ம்..."

"மேலிடத்துலேந்து விசாரணைக்கு வரப்போறாங்களாம். என்ன செய்யறதுன்னு தெரியலை. இப்ராஹிம் கஸ்கர் என்னை காப்பாத்துவார்னு நினைச்சேன். ஆனா, அவராலயும் எதுவும் செய்ய முடியலை. கையை விரிச்சுட்டார்..."

"அங்கதான் நீங்க தப்பு பண்ணிட்டீங்க இன்ஸ்பெக்டர்..."

"என்ன நடிக் சொல்ற?"

"உண்மையை சொல்றேன்..."

"அதான் என்ன உண்மை..."

"பதான்களை அடக்க நீங்க இப்ராஹிமை அனுப்பியிருக்கக் கூடாது..."

"வேற யாரை அனுப்பியிருக்கணும்?"

"இன்னொரு இரும்பை..."

"புரியும்படியா சொல்லு நடிக்..."

"இதுல புரியறதுக்கு என்ன இருக்கு இன்ஸ்பெக்டர்... 'ஷோலே' படம் பார்த்தீங்கல..."

"விளையாடறீங்களா? என்னைப் பார்த்தா உங்களுக்கு எப்படித் தெரியுது? சினிமா பத்தி பேசற நேரமா இது..."

"கோவப்படாதீங்க. காரணமாத்தான் கேட்கறேன். 'ஷோலே' பார்த்தீங்களா?"

"பார்த்தேன்..."

"அதுல கை வெட்டப்பட்டு சால்வை போர்த்திகிட்டு திரியற தாகூர் பல்தேவ்சிங் ஒரு இடத்துல ஒரு வசனம் சொல்வார்... நினைவுல இருக்கா..? பம்பாய் முழுக்க எல்லாருமே அந்த டயலாக்கைத்தான் இப்ப சொல்லிட்டு இருக்காங்க..."

"..."

"அதையேதான் உங்களுக்கு நான் சொல்றேன்... 'இரும்பை இரும்பாலதான் அடிக்கணும்'. நீங்க அப்படி செய்யலை. அதனாலதான் இப்ப அவஸ்தைப்படறீங்க..."

*“சுத்தி வளைக்காம நேரடியா விஷயத்துக்கு வா நடிக்...”*

*“உங்களோட பிரச்னை பதான்ஸ்தானே?”*

*“ஆமா...”*

*“அந்த ராட்சஷங்க யார் பேச்சையும் கேட்க மாட்டாங்க. கரீம் லாலாவாலயே அவங்களை அடக்க முடியலை. அவருக்கும் வயசாகிட்டு வருதில்லையா..?”*

*“...”*

*“இந்த சமயத்துல புள்ள பூச்சியான இப்ராஹிமை அனுப்பினா வேலைக்கு ஆகுமா? நீதி, நேர்மை, நியாயம்னு அவர் பேசறதை கேட்கிற நிலையிலா பதான்ஸ் இருக்காங்க?”*

*“சரி நடிக், அப்ப யாரை அனுப்பணும்னு சொல்ற?”*

*“அதான் சொன்னேனே இன்னொரு இரும்பைனு...”*

*“அததான் கேட்கறேன்யா... யாரு அந்த இரும்பு?”*

*“தாவூத்...”*

*“என்னது?”*

*“தாவூத் இப்ராஹிம் கஸ்கர்...”*

# 39

“என்ன விளையாடறியா நடிக்?” ரன்பீர் லிக்ஹா சீறினார். “நானே என்னடா பண்ணறதுன்னு தலையை பிச்சுகிட்டு இருக்கேன்... இந்த நேரத்துல வந்து காமெடி செய்துகிட்டு...”

“நான் விளையாடலை இன்ஸ்பெக்டர். உண்மையைத்தான் சொன்னேன்...”

“எதுயா உண்மை... பதான்ஸை எதிர்த்து தாவூத்தை களம் இறக்கறதா?”

“ஆமா...”

“அவன் பொடியன் நடிக்...”

“ஆனா, தைரியமானவன்... இன்னிக்கி பம்பாய் முழுக்க அவனை பத்திதான் பேசிகிட்டு இருக்காங்க...”

ரன்பீர் லிக்ஹா எதுவும் சொல்லவில்லை. தன் முன்னால் அமர்ந்திருந்த நடிக்கை உற்றுப் பார்த்தார். பார்வையை விலக்காமல் அவரும் அதை எதிர்கொண்டார்.

“பம்பாயை கதிகலங்க வைச்ச வங்கி கொள்ளை உங்களுக்கு நினைவுல இருக்குன்னு நினைக்கறேன்...”

நன்றாகவே நினைவில் இருந்தது. ரன்பீர் லிக்ஹாவால் அதை எப்படி மறக்க முடியும்? அந்த சம்பவத்துக்கு பிறகு தொங்கிரி முழுக்க தாவூத்தின் பேச்சுக்கு மதிப்பு அதிகரித்திருப்பதையும், அடித்தட்டு மக்கள் தங்கள் பிரச்னைகளுக்கு தீர்வு காண அவனை நாடி செல்வதையும் அறிந்தே இருந்தார். என்றாலும் இதில் அவருக்கு உடன்பாடு ஏற்படவில்லை. அந்த வங்கி கொள்ளை ஒரு விபத்து. அதை வைத்து அவனை பெரிய ஆளாக எப்படி மதிப்பிட முடியும்? அடிப்படையில் அவன் வாட்ச் கடை நடத்துபவன். அதில் ஏமாற்றி பணம் சம்பாதிப்பவன். தெருச் சண்டைக்கு பெயர் போனவன். வழிப்பறியும் உண்டு என கேள்வி.

அனைத்துக்கும் மேல் இப்போதுதான் இருபது வயதை எட்டிப் பிடித்திருப்பவன். உயரமும் குறைவு. உடல் வலுவும் அப்படியொன்றும் சொல்லிக்கொள்ளும் அளவுக்கு கிடையாது. அப்படிப்பட்டவனால் சர்வசக்தி வாய்ந்த பதான்ஸை எப்படி எதிர்க்க முடியும்? ஆறடிக்கு அதிகமாகவே பதான்ஸ் வளர்ந்திருக்கிறார்கள். உடலையும் அதற்கு ஏற்ப உருவாக்கிக்கொண்டிருக்கிறார்கள். சாதாரணமாக அவர்கள் தெருவில் நடந்தாலே ஒதுங்கி வழிவிட தோன்றுகிறது. காரணம் பயம். மக்களுக்கு மட்டுமல்ல. காவல்துறைக்கும். அதனால்தான் அடக்க சிரமப்படுகிறோம்.

இதுதான் உண்மை. நிஜம். யதார்த்தம். மதம்கொண்ட காட்டு யானை போல் நடமாடும் பதான்ஸை வீழ்த்த சின்னஞ்சிறு பாலகனால் முடியாது.

அளவுக்கு அதிகமான பிம்பம் தாவூத்தை குறித்து உருவாகியிருக்கிறது. க்ரைம் ரிப்போர்ட்டரான நடிக், அதை நம்புகிறார். அதன் அடிப்படையில் இந்த யோசனையை முன்வைத்திருக்கிறார். உதவ வேண்டும் என்ற அவரது துடிப்பை குறைசொல்ல முடியாது. அதற்காக அவர் பேச்சை நம்பி நெருப்பிலும் குதிக்க முடியாது. க்ரைம் ரிப்போர்ட்டரும் கற்பனையும் ஒட்டிப் பிறந்த இரட்டை வாழைகள். அவர்களை அப்படியே நம்புவது தற்கொலைக்கு சமம். காவல்துறையின் பாலபாடம் இது.

"சினிமாவை ரசிக்கலாம் நடிக். அதை அப்படியே வாழ்க்கைல பொருத்த முடியாது..." எழுந்து நின்று தன் பேன்ட்டை சரிசெய்து கொண்ட ரன்பீர் லிக்ஹா புன்னகைத்தார்.

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக நடிக், தன் நாற்காலியை பின்னுக்கு தள்ளிவிட்டு எழுந்தார். "ஆனா, வாழ்க்கைலேந்துதான் சினிமா உருவாகுது. இதை மறக்காதீங்க. ஏரியா செய்திகளை ரைட்டர்கிட்டேந்து வாங்கிட்டேன். அப்ப நான் கிளம்பறேன்..."

"ம்..."

"திரும்பவும் சொல்றேன்... இரும்பை இரும்பாலதான் அடிக்க முடியும்..."

வெளியேறிய நடிக்கை சலனமில்லாமல் பார்த்தார். தலையை உலுக்கிக்கொண்டு தன் வேலையில் ஆழ்ந்தார்.

எப்படி யோசித்தும் பதான்ஸின் கொட்டத்தை அடக்க வழி தெரியவில்லை. நாளுக்குநாள் புகார்கள் அதிகரித்தபடியே இருந்தன. நாளிதழ்களும் வாரப் பத்திரிகைகளும் போலீசின் இயலாமையை சுட்டிக் காட்டி சிரித்தன. மேலிடத்திலிருந்து தினமும் கேள்வி கேட்டார்கள். மூன்று முறை காவல்நிலையத்துக்கும் வந்து சென்றுவிட்டார்கள். "இதுவரை என்ன செய்திருக்கீங்க?" என்ற கேள்வியையே திரும்பத் திரும்ப கேட்டார்கள். "அடக்கிடுவோம் சார்..." என்பதையே வார்த்தை - வாக்கியம் மாறாமல் இவரும் சொன்னார். கேட்பவருக்கும் சொல்பவருக்கும் அலுக்கவில்லை.

ஆனால், மக்கள் மத்தியில் ஒருவகையான கொந்தளிப்பு கனன்று கொண்டிருந்ததை ரன்பீர் லிக்ஹா உணர்ந்திருந்தார். விரைவில் நடவடிக்கை எடுக்காவிட்டால் அது வன்முறையில் போய் முடியும். ஏற்கனவே இப்போது காவல்துறைக்கு கெட்ட பெயர். இந்நிலையில் கலவரமும் வெடித்துவிட்டால் கேட்கவே வேண்டாம். பெயர் கெட்டுவிடும். அது, பதவி உயர்வில் எதிரொலிக்கும்.

பலத்த யோசனையுடன் ஒருநாள் மாலை காதாபர்ஸி சந்திப்பிலிருந்து ஜேஜே மருத்துவமனையை நோக்கி தன் ஜீப்பில் வந்துகொண்டிருந்தார். டிரைவர் இல்லை. வீட்டுக்கு அனுப்பி விட்டார். தன்னந்தனியாக வண்டி ஓட்டுவது அவருக்கு பிடிக்கும். சிந்திக்க அதுவே நல்ல தருணம் என்பது அவர் அனுபவம் கற்றுத் தந்த பாடம்.

அதேபோல் காற்றை ஊடுருவியபடி வண்டியில் வந்தபோது சட்டென்று அவரது கவனம் தடைப்பட்டது.

காரணம் டிராஃபிக் ஜாம்.

பொதுவாக அந்த நேரத்தில் அந்த சாலையில் போக்குவரத்து நெரிசல் ஏற்படாது. இன்று வழக்கத்துக்கு மாறாக அப்பகுதியே காட்சியளித்தது. சைக்கிளால் கூட நகர முடியவில்லை என்னும்போது போலீஸ் ஜீப் எம்மாத்திரம்?

டிரைவர் சீட்டில் இருந்தபடியே எட்டிப் பார்த்தார். எதுவும் தெரியவில்லை. ஆனால், இருபதடி தள்ளி மக்கள் கூட்டமாக குழுமியிருப்பது மட்டும் புரிந்தது. சுற்றிலும் தன் பார்வையை சுழலவிட்டார். சாலையோரம் வேடிக்கை பார்ப்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்திருந்தது. அனைத்தையும்விட அவர்கள் முகத்தில் தென்பட்ட மகிழ்ச்சிதான் அவரை யோசிக்க வைத்தது.

“பலே... பலே... சபாஷ்... அப்படிப் போடு...” என நான்கு புறத்திலிருந்தும் குரல்கள் ஒலித்துக்கொண்டிருந்தன.

ஏதேனும் வித்தை காட்டுகிறார்களா? போக்குவரத்துக்கு இடைஞ்சலாக இப்படி நடுரோட்டில் குழுமி இருப்பது தவறாயிற்றே...

டிரைவர் சீட்டை விட்டு இறங்கியவர், “விலகு... விலகு...” என குரல் கொடுத்தபடியே கூட்டத்துக்குள் ஊடுருவினார். சம்பந்தப்பட்ட பகுதியை அடைந்தார்.

அங்கு தென்பட்ட காட்சி அவர் எலும்பை சில்லிட வைத்தது. மக்கள் வட்டமாக குழுமியிருந்தார்கள். நடுவில் ஒரு சிறுவன். அல்லது இளைஞனா? ஏதோ ஒன்று. சுமாரான உயரம். படுசுமாரான உடல்வாகு. அரும்பு மீசைக்கும், அடர்த்தியான மீசைக்கும் இடைப்பட்ட அளவில் ரோமங்கள் உதட்டுக்கு மேலே முளைத்திருந்தன.

அவனுக்கு முன்னால் ஆறரை அடி உயரமும் அதற்கேற்ற ஆகிருதியும் கொண்ட ஒரு பதான் தள்ளாடிக்கொண்டிருந்தான். எப்படியும் நாற்பதுக்கு மேல் வயதிருக்கும். ஜிப்பாவும், உதடுகளும் கிழிந்திருந்தன. வாயிலிருந்து ரத்தம் கொட்டிக்கொண்டிருந்தது.

தன் இரு உள்ளங்கையையும் இறுக்கி முறுக்கியபடி சரமாரியாக அந்த பதானின் முகத்தில் இளைஞன் குத்திக்கொண்டிருந்தான்.

“இன்னும் ஒரு அடி...”

“அப்படித்தான்... குத்து...”

“விடாத...”

கூட்டம் ஆர்ப்பரித்தது. ஒருவர் கூட பதானுக்கு ஆதரவாக இறங்கவில்லை. சொல்லி வைத்ததுபோல் இளைஞனைத்தான் ஊக்குவித்தார்கள்.

ரன்பீர் லிக்ஹாவுக்கும் பதான்களை பிடிக்காதுதான். சொல்லப் போனால் இப்போது அவர் சந்தித்து வரும் பிரச்னைகளின்

காரணமாக தன் அடி மனதிலிருந்து அந்த இனத்தையே வெறுத்தார். என்றாலும் நேருக்கு நேர் ஒரு பதான் அடி வாங்குவதை அவரால் ரசிக்க முடியவில்லை. அதுவும் சட்டத்தை தன் கையில் எடுத்துக் கொண்டு யாரோ ஒரு இளைஞன் அடிப்பது எந்த விதத்தில் நியாயம்?

பாய்ந்து சென்று இளைஞனை பிடித்தார். மேற்கொண்டு அந்த பதான் அடிவாங்காமல் தடுத்தார்.

"தப்பு பதான் மேலதான் சார்..." கூட்டத்திலிருந்து ஒருவன் குரல் கொடுத்தான்.

"ஆமா... நானும் பார்த்தேன்..." கோரசாக குரல் ஒலித்தது.

"அவன் ஈட்டிக்காரன்... என் வாரக் கூலி எல்லாத்தையும் பிடுங்கி என் குடும்பத்தையே நடுத்தெருவுல நிறுத்தினவன்..." வயதான ஒரு பாய் தழுதழுத்தார்.

"அதுக்காக நீங்களே தண்டிப்பீங்களா? அப்புறம் போலீஸ் எதுக்கு இருக்கு..?" ரன்பீர் லிக்ஹா கர்ஜித்தார்.

"போலீஸ் தன் கடமையை செஞ்சா ஏன் இப்படி நடக்கப் போகுது?" பின்புறமிருந்து எவனோ முணுமுணுத்தான்.

"அதானே... இதுவரைக்கும் எத்தனை புகார் கொடுத்திருப்போம்... என்ன நடவடிக்கை எடுத்திருப்பீங்க?" அடையாளமற்று ஒலிக்க ஆரம்பித்த குரல், குரல்களாகி அவரை முற்றுகையிட்டன.

விபரீதத்தை உணர்ந்த ரன்பீர், "சரி... சரி... எல்லாரும் கலைஞ்சு போங்க..." என்றார்.

"அப்ப அந்த இளைஞனை நீங்க கைது செய்யக்கூடாது..."

"மாட்டேன்..."

"நம்பலாமா?"

"நூறு சதவிகிதம்..."

கூட்டம் கலையத் தொடங்கியது.

"டேய் எழுந்திரு..."

இதற்காகவே காத்திருந்தது போல் அந்த பதான் தடுமாறியபடி எழுந்தான்.

"போ..."

ரன்பீரின் பிடியில் இருந்த இளைஞனை பார்க்காமல் விட்டால் போதுமென்று அந்த பதான் வெளியேறினான்.

தன் பிடியை தளரவிட்டார் ரன்பீர். "உன் பேரென்ன?"

"தாவூத்..."

"என்னது?"

"தாவூத் இப்ராஹிம் கஸ்கர்..."

நெஞ்சை நிமிர்த்தியபடி சொன்னவனை வியப்புடன் பார்த்தார். இவன்தானா அவன்? நடிக் சொன்ன 'இரும்பை இரும்பாலதான் அடிக்கணும்' என்ற 'ஷோலே' பட டயலாக் காரணமில்லாமல் அப்போது நினைவுக்கு வந்தது. நடிக் ஏன் அப்படி சொன்னார்

*என்பதும் புரிந்தது.*

*கிடைத்த இரும்பை பயன்படுத்த முடிவு செய்தார்.*

*“உங்கப்பா ஹெட் கான்ஸ்டபிள்தானே?”*

*“ஆமா...”*

*“நடுரோட்டுல ஒரு பதானை அடிச்சிருக்கியே... உனக்கு பயமா இல்லையா?”*

*“இல்லை...”*

*“ஏன்?”*

*“என்னை பார்த்துத்தான் மத்தவங்க பயப்படணும். நான் யாரைப் பார்த்தும் அஞ்சமாட்டேன்...”*

*“சரி, வண்டில ஏறு...”*

*“எங்க?”*

*“சொல்றேன்...”*

*வண்டியை நோக்கி நடந்தார். நடந்தான்.*

*டிராஃபிக் ஓரளவு ஒழுங்குப்பட்டிருந்தது. டிரைவர் சீட்டில் ஏறி அமர்ந்தார். அவருக்கு பக்கத்து இருக்கையில் அமர்ந்த தாவூத், சற்று தள்ளி நின்றிருந்தவனை கைதட்டி அழைத்தான்.*

*“நான் வர லேட்டாகும்னு வீட்ல சொல்லிடு...”*

*இடுப்பை வளைத்தபடி அந்த நபர் தலையசைத்தான்.*

*இந்த காட்சி உண்டாக்கிய ஆச்சர்யத்தை வெளிக்காட்டாமல் ரன்பீர், வண்டியை கிளப்பினார். இவனுக்கு பயமென்றால் என்னவென்றே தெரியாதா?*

*“பதான்ஸோட சண்டை போட பிடிக்குமா?”*

*“பிடிக்கும்னு இல்லை...”*

*“அப்புறம்?”*

*“நான் சண்டை போடலைனா அவங்க என்னை அழிச்சிடுவாங்க...”*

*“தெரியுதுல?”*

*“நல்லாவே...”*

*“அப்ப நான் சொல்றா மாதிரி செய்...”*

*“என்ன?”*

*“சண்டையோட முடிவை போலீசுக்கு சாதகமா மாத்திடு...”*

*“புரியலை...”*

*“போலீஸ் சார்பா பதான்ஸை நீ ஏன் அடிக்கக்கூடாது?”*

*தாவூத் திரும்பி அவரை உற்றுப் பார்த்தான். இந்த அதிகார மாற்றம் அவனுக்கு பிடித்திருந்தது. சட்டத்துக்கு உட்பட்டு சட்டத்தை மீறுவது...*

*டான் பிறப்பதற்கான நொடி நெருங்க ஆரம்பித்தது.*

*“என்ன பதிலையே காணும்?”*

*“வண்டியை நிறுத்துங்க?”*

*“ஏன்..?”*

"ஜேஜே ஹாஸ்பிடல் வந்தாச்சு. என் வீடு இங்கேந்து பக்கம்தான்..."

"நான் கேட்டதுக்கு இன்னும் பதில் சொல்லலையே?"

''யோசிச்சு சொல்றேன்...'' குதித்தபடி இறங்கிய தாவூத், விசிலடித்தபடி நடக்கத் தொடங்கினான்.

பார்த்தார். பார்த்துக்கொண்டேயிருந்தார்.

டான் பிறந்துவிட்டான் என்பது ரன்பீர் லிக்ஹாவுக்கு நன்றாக புரிந்தது.

40

யோசித்து சொல்கிறேன் என்று சொல்லிவிட்டு சென்ற தாவூத் இப்ராஹிம் அதன் பிறகு எதுவும் சொல்லவுமில்லை. இன்ஸ்பெக்டரை தொடர்பு கொள்ளவுமில்லை.

ஓரளவு ரன்பீர் லிக்ஹா இதை எதிர்பார்க்கவே செய்தார். ஏனெனில் ஏதேனும் சொல்வான் என்று ஒரு சதவிகிதம்தான் நம்பினார். மற்றபடி அவருக்குமே இந்த ஆபரேஷனில் சந்தேகமிருந்தது. பதான்ஸை எதிர்ப்பது என்றால் சும்மாவா? சின்னப் பையன்தானே அவன் பயப்படுவதிலும் அர்த்தமிருக்கிறது என மவுனமாக இருந்துவிட்டார்.

உண்மையில் தாவூத் அச்சப்படவில்லை. பதான்ஸ் மீது அவனுக்கும் கோபம் இருந்தது. அவர்களை அப்புறப்படுத்த வேண்டும்,

கொட்டத்தை அடக்க வேண்டும் என்பதில் அவனுமே உறுதியாக இருந்தான். ஆனால், அதற்கு லிக்ஹா சொல்லும் வழிமுறை சரியாக இருக்காது என்பது அவன் எண்ணம்.

தாவூத்தின் மன ஓட்டத்தை ஓரளவு புரிந்து கொண்டவர் இக்பால் நடிக்தான். அவன் மீது அவருக்கு நம்பிக்கையிருந்தது. பெரிய ஆளாக வருவான் என திடமாக நம்பினார். தொடர்ச்சியாக க்ரைம் ரிப்போர்ட்டராக இருந்ததால் அவன் மீது அவருக்கு சார்பு இருந்தது. எனவே, தனது ஆலோசனைப்படி அவனும் ரன்பீர் லிக்ஹாவும் கூட்டு சேரவில்லை என்ற வருத்தம் இருந்தாலும் அதை வெளியே காட்டிக்கொள்ளவில்லை.

சொல்லப்போனால் முன்பை விட அதிகமும் அவனுடன் நெருக்கமானார். இதனால் லாபமும் அடைந்தார். நஷ்டத்தையும் அனுபவித்தார்.

என்ன... இழப்பின் அளவுதான் பெரியதாக இருந்தது. வீரத்துக்கும் பொறுப்பற்ற தனத்துக்குமான மெல்லிய கோட்டை அவர் புரிந்து கொள்ளவில்லை. இதற்காக அவர் கொடுத்த விலை அதிகம்.

லாபம் என்றால்... அது மளமளவென்று உயர்ந்த சர்க்குலேஷன். இதற்கு தாவூத்தும் அவன் கூட்டாளிகளும் பெருமளவு உதவினார்கள். தொங்கிரியின் வஸ்தாதாக அவன் வளர்ந்ததால் மக்கள் அவனுக்கு பயந்தார்கள். அவனது ஆட்களிடம் தங்கள் குறைகளை பட்டியலிட்டார்கள். பதான்ஸால் ஏற்பட்ட சேதத்தை பகிர்ந்துகொண்டார்கள். அடகுக் கடையில் கிசுகிசு பாணியில் பல விஷயங்களை பேசினார்கள்.

அனைத்தையும் கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் நடிக்கிடம் வந்து கொட்டினார்கள். செய்தியின் உண்மைத் தன்மையை ஆராயாமல் அவரும் அதை பிரசுரித்தார். தாவூத்தையும் அவனது ஆட்களையும் அந்த அளவுக்கு அவர் நம்பியதுதான் இதற்கு காரணம்.

இதனால் அவ்வப்போது அவருக்கு மிரட்டல் வரும். தங்களைப் பற்றி பொய்ச்செய்தி வெளியிட்டிருக்கிறார் என குற்றம் சாட்டப்பட்ட பதான்கள் முஷ்டியை உயர்த்துவார்கள். அதில் முக்கியமானவர்கள் அமிர்ஸாதா, அயூப் லாலா அலாம்ஷேப் ஆகியோர். இக்பால் நடிக்கால் அம்பலப்படுத்தப்பட்ட பதான்களில் இந்த மூவரும் முக்கியமானவர்கள்.

எனவே, நடிக்கை வீழ்த்தும் நேரத்துக்காக காத்திருந்தார்கள். சிம் கார்ட் நழுவி செல்போனில் பொருந்திய கதையாக அதற்கான வாய்ப்பும் விரைவில் வந்து சேர்ந்தது. தன்னையும் அறியாமல் இதற்கு தாவூத் உதவினான் என்பதுதான் யாருமே எதிர்பார்க்காத திருப்பம்.

கடந்த சில நாட்களாகவே தாவூத்தின் மனதில் ஒரு விஷயம் உறுத்திக்கொண்டேயிருந்தது. அதுதான் அதிகாரம்.

பணம் வருகிறது. சாலையில் நடந்தால் மக்கள் வணங்குகிறார்கள். புல்லட்டில் பறந்தால் ஒதுங்கி வழிவிடுகிறார்கள்.

ஆனால் - இதெல்லாம் போதாது. அரசியல் அதிகாரம் வேண்டும். அதற்கு என்ன செய்வது?

சட்டென்று பாஷு தாதாவின் நினைவு வந்தது. அவரது ராஜ்ஜியத்தை அவன்தான் அழித்தான். அது சில ஆண்டுகளுக்கு முன்பு நடந்த வரலாறு. அதற்கு முன்புவரை அவர்தான் ராஜா. அவர் வைத்ததுதான் சட்டம். அவர் கைகாட்டும் நபர்தான் சட்டமன்ற, நாடாளுமன்ற உறுப்பினர். டீ கடை மாஸ்டரை அவரால் எம்.எல்.ஏ. ஆக்க முடிந்தது. பிச்சைக்காரனை கவுன்சிலராக உயர்த்த முடிந்தது. அவரை பகைத்துக்கொண்ட எந்த அரசியல்வாதியும் வாழ்ந்ததாக சரித்திரமில்லை.

இதற்கு உதாரணம் மவுலானா புகாரி. சிட்டிங் எம்.எல்.ஏ. ஆக இருந்தவர் தேர்தலில் படுதோல்வி அடைந்தார். காரணம், இவரை எதிர்த்து பாஷு தாதா வேறொரு வேட்பாளரை நிறுத்தியதுதான். இதையெல்லாம் கண்கூடாக அவனே பார்த்திருக்கிறான். மவுலானாவின் தோல்விக்கு சாட்சியாகவும் விளங்கியிருக்கிறான்.

எனவே, பாஷு தாதாவின் பாதையில் செல்ல முடிவெடுத்தான். தனது ஆள்காட்டி விரல் யாரை சுட்டிக் காட்டுகிறதோ அந்த நபர் பதவிக்கு வரவேண்டும். அப்போதுதான் தனது அந்தஸ்து உயரும். அதிகாரத்தின் சுவையை பூரணமாக ருசிக்க முடியும்.

அதன் பிறகு துளியும் அவன் தாமதிக்கவில்லை. நேராக இக்பால் நடிக் முன்னால் வந்து நின்றான்.

“என்ன விஷயம் தாவூத்?”

“இந்த வருஷம் நாடாளுமன்ற தேர்தல் வருது...”

“ஆமா. சுதந்திரத்துக்குப் பிறகு வர்ற ஆறாவது தேர்தல். நம்ம பத்திரிகைல கூட அதைப்பத்தி செய்தி வெளியிடப்போறோம். ஏதாவது ஸ்கூப் இருக்கா?”

"இருக்கு..."

"சொல்லு... சொல்லு... முதல் பக்கத்துல வெளியிடலாம்..."

"முதல் பக்கத்துலதான் வெளியிடணும்..."

"நீ சொல்லி எப்ப நான் செய்யாம இருந்திருக்கேன்?" அவனை நேருக்கு நேர் பார்த்து நடிக் சிரித்தார். "முதல்ல நியூஸை சொல்லு..."

"சுயேட்சையா ஒரு வேட்பாளர் நிக்கப் போறார்..."

"இது வழக்கமா நடக்கறதுதானே?"

"வழக்கத்துக்கு மாறா இந்த சுயேட்சை ஜெயிக்கப் போறார்..."

"அப்படியா சொல்ற?"

"ஆமா..."

"அப்ப சரி. அவர் பெயரைச் சொல்லு.

போட்டோவோட வெளியிடலாம்..."

"நடிக்..."

"என்னது?"

"இக்பால் நடிக். அவர்தான் சுயேட்சை வேட்பாளர்..."

அதிர்ச்சியும் ஆச்சர்யமும் ஒன்றுசேர அவனை இமைக்காமல் பார்த்தார். "என்ன தாவூத் சொல்ற..."

"உண்மையைத்தான் சொல்றேன். நீங்க தேர்தல்ல நிக்கறீங்க. உங்களை ஜெயிக்க வைக்கிறது என் பொறுப்பு..."

அவர் மனம் அலைபாய ஆரம்பித்தது. தராசின் முள் இருபக்கமும் ஊசலாடியது. கண்களை மூடி ஒரு நிமிடம் யோசித்தார். ஏரியாவில் அவர் பிரபலமாகத்தான் இருக்கிறார். பத்திரிகை விற்பனையும் ஜோராக இருக்கிறது. இருக்கும் கட்சி மீது மக்கள் நம்பிக்கை இழந்திருக்கிறார்கள். எனவே, தன்னை ஆதரிக்க வாய்ப்பிருக்கிறது. பக்கபலமாக தாவூத் நிற்பதாக சொல்கிறான். சந்தேகமேயில்லை. அவனது செல்வாக்கு தன்னை வெற்றி பெற வைக்கும். பதவிக்கு வந்ததும் முதல் வேலையாக பதான்ஸை ஒரு வழி பண்ண வேண்டும்.

தாவூத் சார்பாக முள் வந்து நின்றது.

கண்களை திறந்தார். "சரி..."

"இதுபோதும் பாய். மத்ததை நான் பார்த்துக்கறேன்..."

சொன்னபடியே தாவூத் பார்த்துக்கொண்டான். அவனது ஆட்கள் நாயாய் பேயாய் உழைத்தார்கள். ஏரியா முழுக்க சுற்றிச் சுற்றி வந்தார்கள். யாருக்கு ஓட்டுப்போட வேண்டும் என்பதை திரும்பத் திரும்ப மக்களிடம் சொன்னார்கள். வேட்பு மனுவை ஊர்வலமாக சென்று நடிக் தாக்கல் செய்தார். தேர்தல் நாளும் வந்தது. அதனை அடுத்து முடிவும் அறிவிக்கப்பட்டது.

தாவூத்தால் முன்னிறுத்தப்பட்ட நடிக், 1977ம் வருட நாடாளுமன்ற தேர்தலில் படுதோல்வி அடைந்தார். அவருக்கு விழுந்த வாக்குகள் வெறும் 800தான். பாரதீய லோக்தால் கட்சியை சேர்ந்த ராஜதா ரத்தன்சிங் கோகுல்தாஸ் அதிக வாக்கு வித்தியாசத்தில் வெற்றி

பெற்றார்.

இந்த படுதோல்வியை நடிக் ஏற்றுக்கொண்டார். ஒன்றும் பிரச்னையில்லை என தன் வேலையை பார்க்க ஆரம்பித்துவிட்டார்.

ஆனால் - தாவூத்தால் இதை ஜீரணிக்க முடியவில்லை. தன்னால் முன்னிறுத்தப்பட்ட வேட்பாளர் வெற்றி பெறவில்லை என்றால்... அது, தானே தோற்றதற்கு சமம். என்னதான் மக்கள் தன்னைப் பார்த்து பயந்தாலும், மரியாதை செலுத்தினாலும் ஒரு பொருட்டாக தன்னை மதிக்கவில்லை. அதாவது, பாஷு தாதா அளவுக்கு, தான் இன்னும் வளரவில்லை.

நிஜம் தாவூத்தின் முகத்தில் அறைந்தது. உறக்கத்தை கெடுத்தது.

அதே உண்மை, பதான்களை செயல்பட வைத்தது. தொடர்ந்து தங்களை அம்பலப்படுத்தி வரும் இக்பால் நடிக்கின் செல்வாக்கு எந்த அளவுக்கு இருக்கிறது என்பதை தேர்தல் காட்டிவிட்டது. நடிக், பின்னால் இருக்கும் தாவூத் ஒரு செல்லாக்காசு என்பதையும் உணர்த்திவிட்டது.

இனி என்ன... நடிக்கை அழிக்க வேண்டியதுதான்.

அமிர்ஸாதா, அயூப் லாலா, அலாம்ஜேப் ஆகிய மூன்று பதான்களும் ரகசிய இடத்தில் குழுமி திட்டமிட்டார்கள். அவர்களது ஆத்திரத்தை கிளப்பும் விதமாக ஒரு சம்பவமும் நடந்தது.

இப்ராஹிம் ரஹிமத்துல்லா சாலையில் இருக்கும் சாவ்லா கெஸ்ட் ஹவுஸ் புகழ்பெற்றது. கடத்தல் பொருட்களை அங்குதான் பதான்கள் மறைத்து வைப்பார்கள்.

அப்படித்தான் தங்கத்தையும் அங்கு பதுக்கியிருந்தார்கள். அதை எடுப்பதற்காக ஒருநாள் அமிர்ஸாதா, தன் ஆட்களுடன் அங்கு சென்றான். திகைப்புடன் நின்றுவிட்டான். காரணம், அந்த கெஸ்ட் ஹவுஸில் ஓர் இளம் தம்பதி தங்கியிருந்தார்கள். புதிதாக மணமானவர்கள் என்பது அவர்களை பார்த்ததுமே புரிந்தது. பெண், பார்க்க லட்சணமாக இருந்தாள். அவள் கண்களில் பூத்திருந்த ஆர்வமும், கன்னங்களில் படர்ந்திருந்த செம்மையும், உடலெங்கும் பரவியிருந்த இளமையும் அமிர்ஸாதாவையும், அவன் ஆட்களையும் வெறிகொள்ள வைத்தது.

அந்த இடத்திலேயே அவளை மாறிமாறி பாலியல் வன்புணர்வு செய்தார்கள். தடுக்க வந்த கணவனின் கழுத்தை அறுத்து கொன்றார்கள். இந்த நிகழ்வை அறிந்த இக்பால் நடிக், கொதித்து எழுந்தார். தனது பத்திரிகையில் ஆதாரத்துடன் செய்தி வெளியிட்டார். காவல்துறையின் மெத்தனத்தை கண்டித்தார்.

‘ரஸ்தார்’ உருது பத்திரிகையில் வெளியான அந்தச் செய்தியே காவலர்களுக்கு போதுமானதாக இருந்தது. விரைந்து சென்று அமிர்ஸாதாவையும், அயூப் லாலாவையும், சயீத்தையும் வேறு சிலரையும் கைது செய்தார்கள்.

ஏற்கனவே நடிக் மீது கடுங்கோபத்தில் இருந்த அமிர்ஸாதா, இப்போது கொதி நிலைக்கு சென்றான். சிறையில் அவன் அனுபவித்த ஒவ்வொரு கொடுமையும் அவனுக்குள் எரிந்துகொண்டிருந்த நெருப்பை விசிறிக்கொண்டே இருந்தன. சில மாதங்களுக்கு பிறகு அலாம்ழேப் வழக்கறிஞர் மூலமாக அவர்களுக்கு பெயில் வாங்கினான்.

வெளியில் வந்த அமிர்ஸாதாவும், அயூப் லாலாவும் தங்கள் கூட்டாளிகளுடன் பிஜடி காம்பவுண்டில் இருந்த கேரம் க்ளப்பில் அலாம்ழேப்பை சந்தித்தார்கள்.

“இதுக்கு மேலயும் இக்பால் நடிக்கை விட்டு வைக்கக்கூடாது...” அமிர்ஸாதா பற்களை கடித்தான்.

“அதை நானும் மறுக்கலை. ஆனா...”

அலாம்ழேப் இழுத்தான்.

“என்ன ஆனா?” அயூப் லாலா இடையில் புகுந்தான்.

“நீங்க பெயில்ல வந்திருக்கீங்க. இன்னும் விடுதலை ஆகலை. இப்ப நாம என்ன செய்தாலும் அது உங்களுக்கு எதிராத்தான் திரும்பும்...”

அலாம்ழேப் சொல்வதில் உண்மை இருப்பதை மற்றவர்கள் உணர்ந்தார்கள். என்றாலும் அதை ஏற்கும் நிலையில் அவர்கள் இல்லை.

“அதுக்காக விரலை சூப்பிகிட்டு இருக்கணுமா?” அமிர்ஸாதா மேஜையை ஓங்கி தட்டினான். “அவசியமில்லை. சின்னதா ஒரு காரியம்

பண்ணலாம்...” அலாம்ழேப்பின் சிரிப்பில் கள்ளத்தனம் வழிந்தது.

“என்ன?”

“வா. சொல்றேன்...”

அலாம்ழேப்பை பின்பற்றி சென்றவர்கள் அந்த நள்ளிரவில் ‘ரஸ்தார்’ அலுவலகம் முன்பு நின்றார்கள். எது சின்ன காரியம் என்பது சட்டென்று அனைவருக்கும் விளங்கியது. தாமதிக்காமல் அதை முடித்தார்கள்.

‘ரஸ்தார்’ சூறையாடப்பட்டது. மேஜை, நாற்காலிகள் அடித்து நொறுக்கப்பட்டன.

செய்தி அறிந்த இக்பால் நடிக், உடனடியாக தொங்கிரி காவல்நிலையத்துக்கு சென்றார். பிஜடி காம்பவுண்டில் இருக்கும் கேரம் க்ளப், சமூக விரோதிகளின் புகலிடமாக இருப்பதாகவும் அதை உடனடியாக மூட வேண்டும் என்றும் புகார் கொடுத்தார். இதுதான் சரியான நேரம் என இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹாவும் அந்த க்ளப்புக்கு சீல் வைத்தார்.

இதனை அடுத்து அந்த நள் ிரவும் வந்தது.

1977, ஆகஸ்ட் 17. அதிகாலை மணி மூன்று.

இக்பால் நடிக்கின் வீட்டுக் கதவு தட்டப்பட்டது.

# 41

ஆழ்ந்த உறக்கத்தில் இருந்த இக்பால் நடிக், புரண்டு படுத்தார். எங்கோ தொலைவில் கதவு தட்டப்படும் ஓசை கேட்டது. கனவிலும் இதென்ன தொல்லை..?

புரண்டு படுத்தவர் யாரோ தன்னை உலுக்குவதை அறிந்து சிரமத்துடன் இமைகளை பிரித்தார். சயிதாவின் முகம் பேயறைந்தது போல் காணப்பட்டது. அவரது அருமை மனைவி. வயது 22தான் இருக்கும். பம்பாய் நகரத்துக்கு அப்போதுதான் வந்திருந்தாள்.

"என்ன சயிதா... உடம்புக்கு ஏதாவது பிரச்னையா?" தூக்க கலக்கத்தில் கேட்டார்.

"இல்லைங்க..."

"அப்புறம்?"

"யாரோ கதவைத் தட்டறாங்க..."

துள்ளியபடி எழுந்தார். 'தடதட'வென்று கதவைத் தட்டும் சத்தம் இப்போது செவிப்பறையை கிழித்தது. அருகில் இருந்த கடிகாரத்தை எடுத்துப் பார்த்தார். அதிகாலை மணி 3.05. இந்த நேரத்தில் யாராக இருக்கும்?

"இரு... யாருன்னு பார்க்கறேன்..."

"வேண்டாம்ங்க. எனக்கு பயமா இருக்கு. நீங்க போலீசுக்கு போன் பண்ணுங்க..."

"பைத்தியம். யார் என்ன செய்துடப் போறாங்க? நான் பத்திரிகை ஆசிரியர். அதெல்லாம் ஒண்ணும் நடக்காது..." பைஜாமாவின் நாடாவை முடிச்சிட்டபடி கொடியில் தொங்கிக்கொண்டிருந்த துண்டை எடுத்து தன் மார்பில் போர்த்திக்கொண்டார். வாசல் விளக்கையும், ஹால் விளக்கையும் எரியவிட்டவர், கதவைத் திறந்தார். புன்னகையுடன் சயீத் நின்றிருந்தான். மனதுக்குள் அலாரம் அடித்தது.

"என்ன விஷயம்?"

"பாய் உங்களை கூட்டிட்டு வரச் சொன்னார்..." 'பாய்' என்று அவன் குறிப்பிட்டது அமிர்ஸாதாவை. அது இக்பால் நடிக்குக்கும் புரிந்தது. அதனாலேயே எச்சரிக்கை அடைந்தார்.

"சரி, பொழுது விடிஞ்சதும் வரேன்னு சொல்லு..."

"இல்ல... இப்பவே வரணும்..."

"மணி என்னன்னு தெரியுமா?"

"தெரிஞ்சதுனாலதான் உங்களை பார்க்கப் பிரியப்படறார்..."

"என்ன விளையாடறீங்களா?"

"இல்லை. ஆட்டத்தை முடிக்க நினைக்கறோம்..."

"சயீத்..."

"இங்க பாருங்க நடிக், 'பாய்' உங்க மேல கோபமா இருக்கார்.

இப்ப வந்தீங்கன்னா, பேசி தீர்த்துக்கலாம். இல்லைனா...”

“இல்லைனா?”

“பல விபரீதங்களை நீங்க சந்திக்க வேண்டியிருக்கும்...”

“மிரட்டலா?”

“கோரிக்கை...”

அவனை உற்றுப் பார்த்தார். பார்வையை விலக்காமல் அவனும் அதை எதிர்கொண்டான்.

“சரி இரு... ஜிப்பாவை போட்டுட்டு வரேன்...”

உள்ளே வந்தவர், ஜிப்பாவை அணிய ஆரம்பித்தார்.

“நிஜமாவே போகப் போறீங்களா?” சயிதாவின் குரல் நடுங்கியது.

“ஆமா...”

“வேண்டாம்... போகாதீங்க... என் மனசுக்கு என்னவோ சரியா படலை...” சயிதா அவரை தடுத்தார்.

“தலையை சீவிடுவாங்கன்னு நினைக்கறியா?” சிரித்தபடி அவளை அணைத்தார். “அப்படியெல்லாம் எதுவும் நடக்காது. என் பின்னாடி தாவூத் இருக்கான். இவங்களால என்னோட ஒரு ரோமத்தை கூட புடுங்க முடியாது. கதவை தாழ்ப்பாள் போட்டுட்டு நிம்மதியா தூங்கு. அதிகபட்சம் அரை மணிநேரத்துல வந்துடுவேன்...”

வெளியில் வந்தவர், திரும்பி சயிதாவை பார்த்தார். “விளக்கை அணைச்சுடு. சயீத்... வா போகலாம்...”

நிதானமாக இருட்டில் நடந்தார். மனைவியின் அச்சம் அவருக்கு சிரிப்பை வரவழைத்தது. ‘பாவம்... சின்னப் பெண்...’ என்று மனதில் ஓடிய எண்ணம் - சட்டென்று பொசுங்கியது.

காரணம், ஒரு சிகரெட் ஒளி. இரண்டு வீடுகள் தள்ளி ஒளிர்ந்த அந்த நெருப்புப் பொட்டு இவர்களைப் பார்த்ததும் அணைந்தது. அமிர்ஸாதா நேரில் வந்திருக்கிறானா?

“வணக்கம் பத்திரிகை ஆசிரியரே...” என்றபடி அந்த உருவம் அருகில் வந்தது. இல்லை. இது அயூப். இன்னொரு ஆபத்தான பதான்.

தனக்குள் மலர்ந்த நம்பிக்கைகள் அனைத்தும் கருகுவதை இக்பால் நடிக் உணர்ந்தார்.

“முரண்டு பிடிச்சாரா?” அவர் தோளில் கை போட்டபடி சயீத்திடம் கேட்டான்.

“ம்ஹுூம். கூப்பிட்டதுமே வந்துட்டார்...”

“நம்ம தோஸ்த் ஆச்சே...” அவரை இறுக அணைத்தான்.

நரம்புகள் கூசியது. அதை வெளியில் காட்டிக்கொள்ளவில்லை. மவுனமாக அவர்கள் மூவரும் பிஜடி காம்பவுண்டுக்கு வெளியில் இருந்த பெட்ரோல் பங்க் அருகில் வந்தார்கள். இவர்களை பார்த்ததும் கார் கதவு திறந்தது.

“ஏறிக்குங்க பத்திரிகை ஆசிரியரே...”

தடதடக்கும் இதயத்துடன் காரில் ஏறினார். அடுத்த கணம், அவர்

முகத்தில் குத்து விழுந்தது. "ஏய்..." என்றபடி இறங்க முயன்றார். அதற்குள் கார் வேகமெடுத்து பறந்தது.

எத்தனை நொடிகள் அல்லது நிமிடங்கள் அல்லது மணித்துளிகள் பயணம் செய்தார் என்று தெரியாது. ஆனால், பயண நேரம் முழுக்க இக்பால் நடிக்குக்கு அடி விழுந்துகொண்டே இருந்தது. சயீத்தும், அயூப்பும் மாறிமாறி அவர் முகத்திலும் உடம்பிலும் குத்தினார்கள். அறைந்தார்கள்.

எலும்புகளை உடைத்தார்கள். அலற முடியாதபடி வாயில் துணி வைத்து அடைத்தார்கள்.

க்ராண்ட் ரோட்டிலுள்ள காதர் பில்டிங்கை அடையும் வரை இது தொடர்ந்தது. அமிர்ஸாதாவின் அலுவலகம் அங்குதான் இருந்தது. கார் நின்றதும் இக்பால் நடிக்கை அலேக்காக தூக்கிக் கொண்டு அமிர்ஸாதா முன்பு கிடத்தினார்கள்.

நடிக்கின் கோலத்தை பார்த்ததுமே அமிர்ஸாதாவின் முகம் சிவந்தது. ''அறிவில்ல... ஒரு பத்திரிகை ஆசிரியரை இப்படியா போட்டு வெளுப்பீங்க? கூட்டிட்டு வாங்கடான்னா தூக்கிட்டு வந்திருக்கீங்க...'' கர்ஜித்தவன், அவர் வாயிலிருந்த துணியை எடுத்தான். நாசியிலிருந்து ஒழுகிய ரத்தத்தை துடைத்தான். "சாரி சார்... பசங்க செஞ்சதுக்கு நான் மன்னிப்பு கேட்டுக்கறேன்..."

'பரவாயில்லை...' என்பது போல் நடிக் தலையசைத்தார்.

''அடிங்க... தலையசைக்கறான் பாரு... ஏன்டா டேய், இப்படியெல்லாம் உன்கிட்ட கெஞ்சுவேன்னு நினைச்சியா?'' காலால் அவரை எட்டி உதைத்தான். நிற்க முடியாமல் கீழே சரிந்தார். முடியை கொத்தாக பிடித்து அவரை தூக்கினான். சயீத்தையும், அயூப்பையும் பார்த்து காறி துப்பினான்.

"ஒரு வேலையை ஆரம்பிச்சா அதை முழுசா முடிக்கணும்..." பற்களை கடித்த அமிர்ஸாதா பளாரென்று நடிக்கை அறைந்தான். "இந்நேரம் காலை ஒடிச்சிருக்க வேண்டாமா? முட்டாள்களா..." என்றவன் அவரது முடியை உலுக்கினான்.

''பேப்பரும் பேனாவும் கைல கிடைச்சா என்ன வேணா எழுதுவியா? எங்களை என்ன மாக்கான்னு நினைச்சியா? தாவூத் உனக்கு பக்கபலமா இருந்தா நாங்க பயந்துடுவோமா?" தாடையில் மாறிமாறி குத்தினான்.

அவரது பற்கள் உடைந்து சிதறின. சிறையில் தாங்கள் அனுபவித்த அனைத்து சித்திரவதைகளுக்கும் காரணமான நடிக்கை ஆசைத்தீர பழிதீர்த்துக்கொண்டார்கள்.

பூஞ்சை உடம்பு. எனவே அதிக நேரம் அவரால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. மயக்கம் அவரை இறுக அணைத்தது. சரிந்தார்.

"பாய்... செத்துட்டான்னு நினைக்கறேன்..." அவரது சுவாசத்தை சரிபார்த்தபடி சயீத் சலித்துக்கொண்டான்.

"தூத்தேறி. நாலு அடியிலயே பொசுக்குன்னு போயிட்டானே. சரி கொண்டு போய் கடாசிட்டு வாங்க..." அமிர்ஸாதாவின் குரலில் எரிச்சல் தெரிந்தது.

சயீத்தும் அயூப்பும் அவரை தூக்கினார்கள். பழையபடி காரில் கிடத்தினார்கள். மஹிம் பகுதியில் அவரை விட்டெறிந்தார்கள். மறைந்தார்கள்.

எத்தனை நேரம் அல்லது நாட்கள் அங்கேயே கிடந்தார் என்று தெரியாது.

ஆனால் - அவர் கண்விழித்தபோது சூரியன் உதிக்கத் தொடங்கியிருந்தான். நாற்றம் குடலை புரட்டியது. உடம்பின் ஒவ்வொரு அணுவும் பூரணமாக வலியை வெளிப்படுத்தியது. கிழிந்திருந்த இமைகளைத் திறந்தார். காய்ந்த ரத்தம் நரம்பை சுண்டி இழுத்தது. சுற்றிலும் மனிதக் கழிவுகள். மூத்திரத்துக்கு மத்தியில், தான் மிதந்துக்கொண்டிருப்பதை உணர்ந்தார்.

எழுந்திருக்கவோ, கைகளை அசைக்கவோ, கால்களை ஊன்றவோ, குரல் கொடுக்கவோ முடியவில்லை. கூப்பிடும் தொலைவில் மரணம் காத்திருந்தது. இறப்பை குறித்து அவர் அஞ்சவில்லை.

அதற்காக இப்படி அனாதையாக சாகவும் விரும்பவில்லை. எஞ்சியிருந்த அனைத்து சக்திகளையும் ஒன்றுதிரட்டினார். படுத்தபடியே நகர ஆரம்பித்தார். உடலெங்கும் மலம் அப்ப ஆரம்பித்தது. தரையில் ஊறியிருந்த சிறுநீர் அவர் உடலில் திட்டுத் திட்டாக பரவின. அருவருப்பு அடைய இது நேரமில்லை.

இன்ச் பை இன்ச் ஆக நகர்ந்து சாலைக்கு வந்தார். அதன் பிறகு உடல் வேலை செய்ய மறுத்தது. அல்லாவை தொழுதபடியே கண்களை மூடினார். முற்றிலுமாக நினைவிழந்தார்.

அந்தப் பக்கமாக இருசக்கர வாகனத்தில் வந்த ஒரு போக்குவரத்து காவலர் யாரோ சாலையில் விழுந்து கிடப்பதைப் பார்த்து வண்டியை நிறுத்தினார். குற்றுயிராக கிடந்தவர் இக்பால் நடிக் என்று அறிந்ததும் துரிதமாக செயல்பட்டார்.

அடுத்த அரைமணி நேரத்தில் ஜே.ஜே.மருத்துவமனையில் சேர்க்கப்பட்டார். செய்தி அறிந்து அவர் மனைவி சயிதா அலறியடித்து ஓடி வந்தாள்.

மருத்துவர்கள் தங்களால் முடிந்த அனைத்தையும் செய்தார்கள். என்றாலும் சிகிச்சை பயனளிக்கவில்லை. 'ரஸ்தார்' உருது பத்திரிகையின் ஆசிரியரான இக்பால் நடிக், இறந்துவிட்டார்...

முறைப்படி அவரை அடக்கம் செய்வதற்கான அனைத்து உதவிகளையும் இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹா முன்னின்று செய்தார். இந்த படுகொலையை நிகழ்த்தியவர்கள் பதான்கள்தான் என்பது தெளிவாக தெரிந்தது. சயிதாவின் வாக்குமூலமும் அதையே எதிரொலித்தது.

ஆனால் – போதுமான சாட்சிகள் கிடைக்கவில்லை. இரண்டு நாட்களாக, தாங்கள் ஊரிலேயே இல்லை என சயீத்தும் அயூப்பும் அமிர்ஸாதாவும் சாதித்தார்கள். வெளியூரில் இருந்ததற்கான ஆதாரங்களையும் சமர்ப்பித்தார்கள்.

இம்முறையும் பதான்கள் தப்பப் போகிறார்களா? அந்த படுபாவிகளை அடக்கவே முடியாதா? இக்பால் நடிக்கை புதைத்த இடத்தில் சலனமின்றி ரன்பீர் லிக்ஹா நின்றார்.

அப்போது யாரோ அலறியடித்தபடி ஓடிவரும் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தார். தாவூத்.

“சொந்த ஊருக்கு போயிட்டு வர்றதுக்குள்ள இப்படி ஆகிடுச்சே...” தன் தலையில் அடித்துக் கொண்டவனை அணைத்துக்கொண்டார். அழுது முடிக்கும் வரையில் அவனை தட்டிக் கொடுத்தார். கதறல் விசும்பலான தருணத்தில் அவனை விலக்கினார்.

“இப்ப சொல்லு தாவூத்... என்ன முடிவு எடுத்திருக்க? பதான்ஸை இதுக்கு மேலயும் சும்மா விடப்போறியா... இல்லை இக்பால் நடிக்கை கொன்றதுக்கு பழி வாங்கப் போறியா?”

சிவந்த கண்களுடன் இன்ஸ்பெக்டரை உற்றுப் பார்த்தான் தாவூத்.

“பழி வாங்கப் போறேன்...” அழுத்தம் திருத்தமாக சொன்னான்.

ரஜினிகாந்த் நடிப்பில் மாபெரும் வெற்றி பெற்ற ‘பாட்ஷா’ படம் நினைவில் இருக்கிறதா? சரண்ராஜ் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் ஒரு காலை மண்டியிட்டபடி ரஜினி சபதம் செய்வாரே –

அந்தக் காட்சி, தாவூத் இந்த இடத்தில் செய்த சபதத்திலிருந்துதான் எடுக்கப்பட்டது!

# 42

ஏறக்குறைய பத்தாண்டுகள் வரை அதாவது 1987 வரை பம்பாய் மாஃபியா உலகில் இந்தக் கேள்விதான் சுற்றிச் சுற்றி வந்தது. விவாதங்களும் சர்ச்சைகளும் இதனைச் சுற்றியே அரங்கேறின.

'இக்பால் நடிக், படுகொலை செய்யப்பட்டதற்கு பழிவாங்கும் விதமாகத்தான் தாவூத் இப்ராஹிம் கொலைகள் செய்ய ஆரம்பித்தானா?'

'ஆம்' என்பது சகலருக்கும் தெரியும். ஆனாலும் வேறு பதில் கிடைக்குமா என பலரும் பல கால்கட்டங்களில் அலசி ஆராய்ந்திருக்கிறார்கள்.

ஏனெனில் தாவூத், வாட்ச் கடையில் ஏமாற்றியிருக்கிறான். வழிப்பறி செய்திருக்கிறான். மாமூல் வசூலித்திருக்கிறான். வியாபாரிகளை மிரட்டியிருக்கிறான்.

ஆனால், யாரையும் கொலை செய்ததில்லை. பம்பாயில் ரத்த ஆறு ஓடும்படி செய்யவில்லை.

அதாவது தனது 22வது வயது வரை. அதன் பிறகுதான் மாறிப் போனான். பம்பாயின் தலையெழுத்தையும் மாற்றி எழுதினான். கொலை செய்வதையும் மாஃபியாக்களின் வழிமுறைகளில் ஒன்றாக மாற்றினான்.

இதற்கு வித்திட்டது இக்பால் நடிக் படுகொலை செய்யப் பட்டதும் அதனை தொடர்ந்து அவர் அடக்கம் செய்யப்பட்ட இடத்தில் அவன் 'பழி வாங்கப்போவதாக' சபதமிட்டதும்தான் என்பதில் மாற்றுக் கருத்தில்லை.

அப்போது அவனுடன் இருந்த இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹாதான் செய்தியை கசியவிட்டாரா அல்லது தாவூத்தின் ஆட்களே பறையடித்து தெரியப்படுத்தினார்களா என்று தெரியாது.

'பதான்ஸின் கொட்டத்தை தாவூத் அடக்கப்போகிறான்... இக்பால் நடிக் இறந்ததற்கு காரணமாக கருதப்படும் சயீத்தையும் அயூப்பையும் இந்த உலகத்தை விட்டே விரட்டப்போகிறான்...' என்ற தகவல் காட்டுத் தீயாக பம்பாய் முழுக்க பரவியது.

இதை அறிந்த சயீத்தும் அயூப்பும் தலைமறைவானார்கள். அவர்கள் இருவரும் எங்கிருக்கிறார்கள் என்ற தகவல் யாருக்கும் தெரியவில்லை. அவர்களது அடியாட்களும் கூட பேந்தபேந்த விழித்தார்கள். பொங்கும் எரிமலையாக தாவூத் நடமாடத் தொடங்கினான். எப்படியும் அவர்கள் இருக்கும் இடத்தை கண்டுபிடித்தே ஆகவேண்டும் என்பதில் உறுதியாக இருந்தான்.

இதையெல்லாம் ஒருவன் கவனித்தபடி இருந்தான்.

அவன்தான் காலித். பெயரில் இருக்கும் கம்பீரம் உருவத்திலும் உண்டு. வயது 30. கிராண்ட் ரோட்டில் இருந்த ஒரு வைர வியாபாரியை

மிரட்டி பணம் பறிக்க முயன்ற வழக்கு இவன் மீது இருந்தது. இது தொடர்பாக சில இளைஞர்களையும் காவல்துறை கைது செய்திருந்தது. அவர்கள் அனைவரும் காலித்தின் ஆட்கள்தான்.

என்றாலும் இவன் மீது காவலர்களின் சுண்டுவிரல் கூட படவில்லை. காரணம், சம்பவம் நடந்த இடத்தில் காலித் இல்லை. திட்டம் தீட்டிக் கொடுத்தது இவன்தான் என்பது போலீசுக்கு தெரியும். அறிந்து என்ன புண்ணியம்? அதை நிரூபிக்க சாட்சி இல்லையே.

இப்படி எண்ணற்ற சம்பவங்கள் 1977 வாக்கில் காலித் குறித்து தொங்கிரியில் உலவிவந்தன.

எல்லாமே வழிப்பறி அல்லது திருட்டு அல்லது பண வசூல் தொடர்பானவைதான். எனவே கண்காணித்தபடியே இவனை காவல்துறை விட்டுவைத்திருந்தது.

இவனைப் போன்ற இளைஞர்களின் லட்சியமாக அன்று இருந்தது ஒன்றே ஒன்றுதான். அது தாவூத்தின் நண்பனாக வேண்டும் என்பது. இவனுக்கும் அதே ஆசை இருந்தது. ஒரு படி மேலாகவே. தாவூத்தின் ஆட்களில் ஒருவனாக மாறினால் மட்டும் போதாது. அவனது உள்வட்டத்தில் ஒருவனாக – நம்பிக்கைக்கு உரியவனாக மாற வேண்டும்.

சரியான சந்தர்ப்பத்துக்காக காத்திருந்தவன், இதை பயன்படுத்திக் கொள்ள முடிவு செய்தான்.

இக்பால் நடிக் இறந்த இருபதாவது நாள் தாவூத் முன்னால் நின்றான். அப்போது சபீரும் உடனிருந்தான்.

"என்னைப் பார்க்கணும்னு விரும்பினியாமே?" அலட்சியத்துடன் தாவூத் வினவினான்.

''ஆமா...'' அவன் கண்களை நேருக்கு நேர் பார்த்தபடி பதிலளித்தான்.

"என்ன விஷயம்?"

"உங்களுக்கு உதவ விரும்பறேன்..."

"எந்த விஷயத்துல?"

"சயீத்தையும் அயூப்பையும் அழிக்க நினைக்கிற விஷயத்துல..."

"நல்லது. உன்னைப் பத்தி நானும் கேள்விப்பட்டிருக்கேன். நீ கூட இருக்கறது எனக்கு பலம்தான்..."

"நன்றி தாவூத்..."

"அதை செயல்ல காட்டு..."

இவ்வளவு சுலபத்தில் அவன் ஒப்புக்கொள்வான் என காலித் எதிர்பார்க்கவில்லை. முகம் நிறைய மகிழ்ச்சியுடன் விடைபெற்றான்.

"தப்புப் பண்ணுற தாவூத்..." சபீரின் குரலில் கவலை தெரிந்தது. அது அண்ணனுக்கே உரிய அக்கறை.

"இல்ல. எப்பவும் போல இப்பவும் சரியான முடிவைத்தான்

எடுத்திருக்கேன்...”

“எது? காலித்தை நம் பக்கம் சேர்த்ததா?”

“ஆமா...”

“முட்டாள்தனமா பேசாதே. இவன் யாரு தெரியுமா?”

“தெரியும்...”

“என்ன தெரியும்?”

“போன வருஷம் நம்மால விரட்டியடிக்கப்பட்ட பாஷு தாதாவோட வலது கைதான் இவன்...”

கடகடவென்று சிரித்த தம்பியை பிரமிப்புடன் பார்த்தான் சபீர்.

“ஒரு விஷயத்தை புரிஞ்சுக்க சபீர். வைரத்தை வைரத்தாலதான் அறுக்கணும். எந்த நோக்கத்துக்காக காலித் நம் பக்கம் சேர விரும்பறான்னு தெரியாது. ஒருவேளை பழி வாங்கவும் சந்தர்ப்பம் பார்க்கலாம். அதைப்பத்தி எனக்கு கவலையில்லை. ஆனா, இப்ப இவன் நமக்கு தேவை. பயன்படுவான்...”

“எப்படி?”

“நீயே பாரு...”

பார்த்தான். நடு ரோட்டில் ரத்தம் சொட்டச் சொட்ட அயூப்பை தரதரவென்று காலித் இழுத்து வந்த அந்த வரலாற்றுச் சிறப்புமிக்க சம்பவத்தை... இதனை அடுத்து தாவூத் விஸ்வரூபம் எடுத்ததை...

# 43

“நாம என்ன செய்யப் போறோம் காலித்?” தாவூத்திடம் பேசிவிட்டு வந்தவனிடம் அவன் ஆட்கள் கேட்டார்கள்.

‘‘சயீத்... அயூப்... இந்த ரெண்டு பதான்ஸையும் அழிக்கப் போறோம்...”

“யாரு அவங்க?”

“இக்பால் நடிக்கை படுகொலை செஞ்சவங்க...”

“இதை ஏன் நாம செய்யணும்?”

சட்டென்று காலிப் நின்றான். கேள்வி கேட்டவனை உற்றுப் பார்த்தான். மற்றவர்களின் முகத்திலும் இதே வினா எதிரொலித்ததை அவனால் உணர முடிந்தது.

“சொல்லு காலிப்... இவன் கேட்டதுல என்ன தப்பு இருக்கு? இக்பால் நடிக், நம்மைப்பத்தியும் தப்புத் தப்பா எழுதியிருக்காரு...”

‘‘அவருக்கு தாவூத்தைதான் ரொம்ப பிடிக்கும். அவனை உயர்த்திப் பேச நம்மை மட்டம் தட்டியிருக்காரு...”

“நியாயமா பார்த்தா பாஷு தாதாவை கொன்ன தாவூத்தைதானே நாம பழிவாங்கணும்?”

“அதை விட்டுட்டு தாவூத்துக்கு நாம உதவலாமா?”

“பாஷு தாதாவோட ஆன்மா நம்மை எப்படி மன்னிக்கும்?”

அடுக்கடுக்காக தன் ஆட்கள் கேட்ட கேள்விகளுக்கு காலிப் உடனடியாக பதிலளிக்கவில்லை. பதிலாக புன்னகைத்தான். சில விநாடிகள் தன் தாடையை தடவியவன் அவர்கள் அனைவரது பார்வையையும் நேருக்கு நேர் சந்தித்தான்.

“கரெக்ட். நமக்கு மன்னிப்பு கிடைக்காதுதான். ஆனா, இந்தக் கேள்விக்கு மட்டும் பதில் சொல்லுங்க. தாவூத்தை எப்படி அழிக்கறது? யார்கிட்டயாவது திட்டம் இருக்கா?”

நிதானமாக கேட்டவனுக்கு என்ன பதில் சொல்வதென்று தெரியாமல் விழித்தார்கள்.

“பதில் சொல்லத் தெரியலை இல்லையா? அப்ப பேசாம என் பின்னாடி வாங்க...”

“காலிப்...”

“என்ன காலிப்? தாவூத் யார்னு தெரியுமில்லையா? இன்னி தேதிக்கு அவன்தான் முக்கியமான தாதா. வயசுல சின்னவன்தான். ஆனா, தொங்கிரியே அவனைப் பார்த்து பயப்படுது. கையெடுத்து கும்பிடுது. கூடிய சீக்கிரத்துல பம்பாயோட நம்பர் ஒன் தாதாவா அவன்தான் மாறப்போறான்...”

“ஆனாலும்...”

“நியாய தர்மத்தை பத்தி எந்த அடியாளும் பேச முடியாது. கூடாது. பாஷு தாதா நமக்கு படியளந்தாரு. சும்மாவா அதை செய்தாரு? அவருக்காக நாம எவ்வளவு காரியங்களை செய்திருக்கோம்.

அதுக்கு கூலி கொடுத்தார். அவ்வளவுதான். இப்ப அவர் இல்லை. அதனால இன்னொரு தாதாகிட்ட வேலை பார்க்கப்போறோம். இதுல என்ன தப்பு இருக்கு?"

"..."

"நமக்கு வேற வேலை தெரியாது. மூட்டை தூக்கி பிழைக்க முடியாது. போலீஸ் நம்மை பிடிக்க காத்திருக்கு. நம்ம மேல ஏகப்பட்ட கேஸ் இருக்கு. இதுலேந்து தப்பிக்கணும்னா தாவூத்தோட இணையறதுதான் ஒரே வழி. அதுக்கு அவனோட நம்பிக்கையை நாம பெறணும். இதை செய்யணும்னா யாரை அழிக்க அவன் சபதம் செய்திருக்கானோ அவங்களை அவனுக்கு முன்னாடியே நாம போட்டுத் தள்ளணும். நல்லா யோசிச்சுத்தான் இந்த முடிவுக்கு வந்திருக்கேன். உங்களுக்கு சம்மதம்னா என் கூட வாங்க. இல்லைனா இங்கயே... இந்த இடத்துலயே பிரிஞ்சிடலாம். யாரையும் கட்டாயப்படுத்த நான் விரும்பலை..."

பிசிறில்லாமல் தெளிவாக காலிப் பேசினான். அதிலிருந்த உண்மை அங்கிருந்தவர்களின் உள்ளத்தை தைத்தது. யாராலும் அதை மறுக்க முடியவில்லை. ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். கண்களால் பேசிக்கொண்டார்கள். கைகோர்த்தார்கள். காலிப்புக்கு துணையாக சயீத்தையும் அயூப்பையும் அழிக்க புறப்பட்டார்கள்.

ஆனால், இந்தக் காரியத்தை எப்படி செய்வது? திக்குத் தெரியாத காட்டில் அலைவது போலிருந்தது. தங்களை கொல்ல தாவூத் காத்திருக்கிறான் என்று தெரிந்ததுமே சயீத்தும், அயூப்பும் தலைமறைவானார்கள். எங்கிருக்கிறார்கள் என்ற விவரம் அவர்களைச் சேர்ந்தவர்களுக்கே தெரியவில்லை.

அதற்குள் பம்பாய் முழுக்க இந்த விவரம் காட்டுத் தீயாக பரவிவிட்டது. தாவூத்துடன் காலிப் இணைந்திருக்கிறான்... சல்லடையிட்டு அவர்கள் தேடிக் கொண்டிருக்கிறார்கள். எந்நேரமும் இரு பதான்களின் உயிரும் பிரியலாம்... ஆனால், எப்படி எந்த இடத்தில் இந்தச் சம்பவம் நிகழும்? அதுதான் மர்மமாக இருந்தது.

"கவலையே வேண்டாம். என்கிட்ட ஒரு திட்டமிருக்கு..." தன் இடத்தில் சப்பணமிட்டு அமர்ந்தபடி காலிப் பேசினான். அடியாட்கள் அவனைச் சுற்றி அமர்ந்திருந்தார்கள். அனைவரது கைகளிலும் சிகரெட் எரிந்துகொண்டிருந்தது. நடுவில் காலியாகும் தறுவாயில் ஆல்கஹால் கோப்பை.

"என்ன அது?"

"சயீத்தும், அயூப்பும் இப்ப தனித்தனியா இருக்காங்க..."

"ம்..."

"இதுதான் நமக்கு சரியான நேரம். ஏன்னா, அவங்க ஒண்ணு சேர்ந்துட்டாங்கன்னா அவங்களை வீழ்த்தறது கொஞ்சம் கஷ்டம்..."

"எல்லாம் சரிதான் காலிப். ஆனா, அவங்க ரெண்டு பேரும்

இப்ப எங்க இருக்காங்கன்னு தெரியலையே...”

“எனக்குத் தெரியும்...”

சொன்ன காலிப்பை வியப்புடன் பார்த்தார்கள். அதை அலட்சியம் செய்தபடி தொடர்ந்தான்.

“நல்லா கவனிங்க. இதுவரை தொங்கிரியை விட்டு ரெண்டு பேரும் வெளியேறலை. முடியவும் முடியாது. ஏன்னா, எல்லையோரம் தாவூத் தன் ஆட்களை நிறுத்தியிருக்கான். அவங்க கண்ணுல மண்ணைத் தூவிட்டு அவங்களால தப்பிக்க முடியாது. அது சாத்தியமும் இல்லை...”

“ம்...”

“தவிர அயூப் ஒரு பொம்பளை பொறுக்கி...”

சட்டென்று அங்கிருந்தவர்களின் கண்கள் ஒளிர்ந்தன. அதை கவனித்தபடியே காலிப் பேசினான்.

“அவனால பெண் வாசனை இல்லாம ரெண்டு நாள் கூட இருக்க முடியாது...”

“அட ஆமா...”

“ஆனா, கடந்த ஒரு வாரமா எந்தப் பெண்ணையும் அவன் தொடலை...”

“...”

“அவன் இயல்புக்கு இது அதிகம். அதனால இன்னிக்கோ நாளைக்கோ ஏதாவது க்ளப்புக்கு வருவான்...”

அதன் பிறகு காலிப் விளக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. அங்கிருந்த அனைவருக்கும் தெளிவாக அவன் சொல்ல வருவது புரிந்தது. உடனே களத்தில் இறங்கினார்கள். திசைக்கு ஒருவராக பிரிந்தார்கள். தொங்கிரியில் இருந்த அனைத்து க்ளப்புகளையும் கண்காணித்தார்கள்.

காலிப்பின் கணிப்பு வீண்போகவில்லை. எதிர்பார்த்தது போலவே அன்றிரவு ஒரு க்ளப்புக்கு அயூப் வந்தான். அரைகுறை ஆடையில் ஏதோ ஒரு பாட்டுக்கு நடனமாடிக்கொண்டிருந்த பெண்ணை ரசித்தான். இதுவரை அவன் அனுபவிக்காத மலர். சப்புக் கொட்டியபடி அவளது அங்கங்களை அளக்கத் தொடங்கினான்.

ஒளியை விட வேகமாக இந்தத் தகவல் காலிப்பை அடைந்தது. தன் பரிவாரங்களுடன் குறிப்பிட்ட அந்த க்ளப்புக்கு சில நிமிடங்களில் வந்து சேர்ந்தான்.

க்ளப்பை சுற்றிலும் அவன் ஆட்கள் நின்றுகொண்டார்கள். கழுத்தை அசைத்து தனக்குத்தானே சொடக்கு போட்டுக்கொண்ட காலிப், நிதானமாக க்ளப்புக்குள் நுழைந்தான்.

நடனத்தை ரசித்துக்கொண்டிருந்த அயூப்பின் அருகில் சென்றவன், அவன் சுதாரிப்பதற்குள் ஓங்கி அறைந்தான்.

உடல் பலத்திலும் சரி, மன தைரியத்திலும் சரி... காலிப்பும்

அயூப்பும் சமமானவர்கள்தான்.

ஆனால் - தாவூத்துக்கு பயந்து எப்போது மறைந்து வாழ ஆரம்பித்தானோ, அப்பொழுது அயூப்பின் தைரியம் எல்லாம் வற்றிவிட்டது.

இந்த நிலை காலிப்புக்கு ஏற்படவில்லை. தாவூத்தின் நம்பிக்கையை பெற வேண்டும் என்பதே இவனுக்கு நோக்கமாக இருந்தது. எனவே கிடைத்த சந்தர்ப்பத்தை கச்சிதமாக பயன்படுத்திக்கொண்டான்.

அடி என்றால் அப்படியொரு அடி. இதற்கு முன் அயூப் அப்படி யாரையும் அடித்ததுமில்லை. அடி வாங்கியதுமில்லை.

ஆனால், அன்று வாங்கினான். காலிப்பின் கண்களில் தெறித்த வெறி, அவனை நிலைகுலையச் செய்தது. தடுக்கவும் காப்பாற்றவும் வந்த அவன் ஆட்களை காலிப்புடன் வந்தவர்கள் கவனித்துக் கொண்டார்கள்.

தன் இறுதிக் காலம் நெருங்குவதை அயூப் உணர்ந்தான்.

என்றாலும் அது இவ்வளவு கொடூரமாக இருக்கும் என்று அவன் நினைத்துக்கூட பார்க்கவில்லை.

எதிர்கால வாழ்க்கையை எண்ணியபடி தன் இடுப்பிலிருந்து கத்தியை காலிப் எடுத்தான். நிதானமாக அயூப்பை தரையில் படுக்க வைத்தான். இரு பக்கமும் கால்களை போட்டு அமர்ந்தவன், அவன் முகத்தில் கத்தியால் கோடு கிழிக்கத் தொடங்கினான். பிறகு உடலில்...

அயூப்பின் கதறல், அந்த க்ளப்பை தாண்டி தொங்கிரி முழுக்க எதிரொலித்தது.

ம்ஹூம். காலிப் அதை பொருட்படுத்தவேயில்லை. எத்தனை கோடுகளை போட முடியுமோ அத்தனை கோடுகளையும் அவன் உடம்பில் கிழித்தான். அப்படியும் காலிப்பின் வெறி அடங்கவில்லை.

ரத்தம் சொட்டச் சொட்ட படுத்திருந்த அயூப்பின் தலைமுடியை கொத்தாகப் பிடித்தான். சாலையில் இழுத்துக்கொண்டே சென்றான். அந்த நள்ளிரவில் நடமாடிக் கொண்டிருந்த ஒன்றிரண்டு மக்களும் அச்சத்துடன் ஒதுங்கி நின்று இதை வேடிக்கை பார்த்தார்கள்.

எப்போது அயூப் இறந்தான் என்பது காலிப்புக்கு தெரியாது.

ஆனால், தாவூத் முன்பு அவன் உடலை வீசியபோது அயூப் சடலமாகி இருந்தான்.

“சபாஷ் காலிப் சபாஷ்...” மகிழ்ச்சியில் மலர்ந்த முகத்துடன் அவனை தாவூத் கட்டிப்பிடித்தான். எஞ்சியிருந்தது சயீத்.

இவனை எப்படி கொல்வது?

“இதுக்கும் ஒரு ஐடியா இருக்கு...” தாவூத் முன்பு கைகட்டியபடி காலிப் சொன்னான்.

“என்ன?”

“சயீத்துக்கு இன்னொரு பேரு உண்டு. அது ‘சயீத் பாட்லா...’”

"ம்..."

"'பாட்லா'ன்னா பாட்டில்னு அர்த்தம்..."

"மேல சொல்லு..."

"அந்தளவுக்கு சயீத் குடிகாரன். பாட்டில் பாட்டிலா குடிப்பான். இதனாலயே தொந்தியும் ஏகத்துக்கு வளர்ந்திருக்கும்..."

"ம்..."

"அயூப்பை நாம கொலை செய்த விவரம் இந்நேரம் அவனை எட்டியிருக்கும். அடுத்தது நாமதான்னு புரிஞ்சிருக்கும். இந்தப் பயத்தை போக்க சாராயக்கடையைத் தேடிப் போயிருப்பான்..."

"ம்..."

"ஆனா, கண்ணுக்கு தட்டுப்படற 'பாரு'க்குள்ள போக மாட்டான். அவனுக்குன்னு ஒரு கடை இருக்கும். அந்தக் கடை எங்க இருக்குனு எனக்குத் தெரியும்..."

"அப்ப வா போகலாம்..."

"இல்லை தாவூத். நீங்க வர வேண்டாம். நாங்க பார்த்துக்கறோம்..."

"ஏன் என்னை ஏதாவது செய்துடுவான்னு பயப்படறியா?" பதில் சொல்லாமல் காலிப் தலைகுனிந்தான்.

"அவனால என்னை எதுவும் செய்ய முடியாது. வா..."

"அதில்லை தாவூத்... இந்த வேலையை நான் முடிக்கணும்னு விரும்பறேன்..."

"அவ்வளவுதானே? சரி. நான் வேடிக்கை பார்க்கறேன்..."

அதன் பிறகு காலிப் எதுவும் பேசவில்லை. அனைவருமாக குறிப்பிட்ட அந்த 'பாரு'க்கு வந்து சேர்ந்தார்கள். எதிர்பார்த்தது போலவே சயீத் அங்கு முட்ட முட்ட குடித்துக்கொண்டிருந்தான்.

சற்றுத் தள்ளியிருந்த மேஜையில் கால் மேல் கால் போட்டபடி தாவூத் அமர்ந்தான். அவனைச் சுற்றிலும் ஆட்கள் நின்று கொண்டார்கள்.

எந்தக் கத்தியால் அயூப்பின் உடலில் கோடு போட்டானோ - அதே கத்தியை உருவியபடி சயீத் முன்னால் காலிப் நின்றான்.

44

சயீத் சுதாரிக்க சில நிமிடங்களானது.

தொடக்கத்தில் அவன் கண் முன்னால் தெரிந்தது வலது கையில் கத்தியை ஏந்தியபடி நின்ற ஓர் உருவம்தான். தவறு இரண்டு பேர். அல்ல... அல்ல... மூன்று பேர். திடுக்கிட்டவன் தலையை உலுக்கியபடி கண்களை கசக்கினான். ஒருவன்தான். ஒரேயொருவன்தான். இவனும் ஊர் பேர் தெரியாதவன் அல்ல. காலிப்.

ஏறியிருந்த போதை அப்படியே இறங்கியது. கண்களில் அச்சத்தின் சாயை படர ஆரம்பித்தது. கருவிழியை காலிப்பிடம் இருந்து விலக்கியவன் அதை இரு பக்கமும் சுழல விட்டான்.

அவன் அமர்ந்திருந்த இடத்திலிருந்து அறுபது டிகிரி கோணத்தில் வலப்பக்கமாக நான்கு பேர் அமரும் மேஜை இருந்தது. அதில் ஒரேயொரு நாற்காலியில் மட்டும் தாவூத் உட்கார்ந்திருந்தான். சலனமற்ற முகம். ஆனால், பார்வை மட்டும் தன் உயிர்குலையை ஊடுருவிக் கொண்டிருந்ததை அந்த குண்டு பல்பு வெளிச்சத்திலும் சயீத்தால் உணர முடிந்தது.

தாவூத்தை சுற்றிலும் வாட்டசாட்டமான அடியாட்கள் கைகளை கட்டியபடி நின்றிருந்தார்கள். அவர்கள் அனைவரையும் பார்த்திருக்கிறான். எந்நேரமும் தாவூத்துடனேயே திரிவார்கள். தாவூத்துக்காக எதையும் செய்வார்கள். திமிறிய புஜங்கள்தான் அவர்களது அடையாளம்.

எலும்புகள் சில்லிட அப்படியே தன் கருவிழியை இடப்பக்கம் திருப்பினான். பாஷு தாதாவுடன் சுற்றிய அல்லக்கைகள் குறிப்பிட்ட கோணங்களில் சிதறி அமர்ந்திருந்தார்கள்.

மற்றபடி வேறு யாரும் அந்த 'பாரில்' இல்லை. குடித்துக் கொண்டிருந்தவர்கள் எப்போது வெளியேறினார்கள் என்றும் தெரியவில்லை. 'பாரின்' உரிமையாளரும் கண்ணுக்கு தட்டுப்படவில்லை.

எச்சிலை விழுங்கியபடி மீண்டும் காலிப்பை பார்த்தான். முகத்தில் உணர்ச்சியில்லை. கண்கள் மட்டும் பளபளப்புடன் மின்னியது.

நிற்பது, தான் அறிந்த காலிப் அல்ல. மரணம். அதுவும் அயூப்புக்கு ஏற்பட்டது போலவே கொடூரமான சாவு தனக்கு ஏற்படப் போகிறது. தட்டுப்படும் அனைத்து உறுப்புகளையும் ஒன்று வெட்டுவான் அல்லது கோடு கிழிப்பான்.

கூடாது. அயூப் போல் இதை அனுமதிக்கக்கூடாது. என்ன செய்யலாம்?

முகத்தில் எந்த வார்த்தைகளும் பிரதிபலிக்காதபடி நாற்காலியில் சாய்ந்தான். மேஜைக்கு அடியில் யாரும் கவனிக்காத தருணத்தில் தன்



கைகளை இடுப்புக்கு கொண்டு சென்றான். ஒட்டிப்பிறந்த இரட்டை வாழையாக தன்னுடனேயே இருக்கும் கத்தியை உருவினான்.

சடாரென்று எழுந்தான். பொடீர் என தரையில் விழுந்தான். பற்கள் சிதறின. கண் முன்னால் பூச்சிகள் பறந்தன. உதட்டோரம்

கசிந்த குருதி, நாக்கிலிருந்த நரம்புகளுக்கு வேலை தந்தன.

என்ன நடந்தது? எப்படி கீழே விழுந்தோம்?

கைகளை ஊன்றியபடி தள்ளாடும் கால்களுடன் எழுந்தான்.

எந்த இடத்தில் காலிப் நின்றிருந்தானோ - அதே இடத்தில் அப்படியே சிலையாக இருந்தான். மற்ற அடியாட்களும் இடத்தைவிட்டு அசையவில்லை.

ஆனால் - ஒற்றை நாற்காலியில் அறுபது டிகிரி கோணத்தில் அமர்ந்திருந்த தாவூத் மட்டும் இப்போது

அங்கில்லை. பதிலாக அருகில்... மிக அருகில் புன்னகைத்துக் கொண்டிருந்தான்.

மின்னலை விட வேகமாக, ஒளியை விட விரைவாக செயல்பட்டு தன்னை வீழ்த்தியிருக்கிறான். உடலெல்லாம் கண்களாக எப்போதும் விழிப்புடன் இருக்கும் எச்சரிக்கை உணர்வுதான் தாவூத்தை இந்தளவுக்கு உயர்த்தியிருக்கிறது.

வாயிலிருந்து ரத்தம் ஒழுக சயீத் ஏறிட்டான். தாவூத் எதுவும் பேசவில்லை. அமைதியாக முன்பு அமர்ந்திருந்த இடத்துக்குச் சென்றான்.

சரியாக பழையபடி கால் மேல் கால் போட்டபடி அமர்ந்தான். தொண்டையை கனைத்தான்.

அடுத்த நொடி, நடுங்கும் கைகளில் வறுத்த கோழியுடன் 'பார்' உரிமையாளன் இருட்டிலிருந்து வெளிப்பட்டான். கொண்டு வந்த தட்டை மேஜையில் வைத்துவிட்டு அகன்றான்.

அமர்ந்திருந்த நாற்காலியை மேஜைக்கு அருகில் முன்னோக்கி இழுத்த தாவூத், நிதானமாக அந்தக் கோழியை ருசிக்க ஆரம்பித்தான்.

சயீத்துக்கு ஒன்றும் புரியவில்லை. காலிப் உட்பட யாரும் தன்னை அடிக்கவும் இல்லை. இருந்த இடத்தை விட்டு நகரவுமில்லை. ஒருவேளை தன்னை மன்னித்துவிடப் போகிறார்களா?

இருமியபடி வாசல் பக்கமாக ஓரடி எடுத்து வைத்தான்.

சகல அடியாட்களும், தாங்கள் இருந்த இடத்திலிருந்து அதே போல் ஓரடி நகர்ந்தார்கள். பயத்துடன் நடப்பதை சயீத் நிறுத்தினான்.

பதிலுக்கு அவர்களும் அவனை நோக்கி வராமல் நின்றார்கள்.

மூச்சு விடும் சப்தம் கூட கேட்காமல் 'பார்' அமைதியாக இருக்க, வறுத்த கோழியை தாவூத் உண்ணும் ஒலி மட்டும் இடியாக சயீத்துக்குள் இறங்கிக்கொண்டிருந்தது.

நீண்ட ஏப்பத்துக்கு பிறகு சாப்பிடுவதை தாவூத் நிறுத்தினான். அவன் முன்னால் இருந்த தட்டில் சதைத்துணுக்குகளுடன் எலும்புகள் நொறுங்கிக் கிடந்தன. அடியாள் கொண்டு வந்து வைத்த தண்ணீரால் தன் கைகளை கழுவினான். எஞ்சிய நீரை ஒரே மூச்சில் பருகி முடித்தான். இன்னொரு அடியாள் நீட்டிய துணியால் கைகளையும் வாயையும் துடைத்துக்கொண்டவன்,

பழையபடி தன் நாற்காலியை பின்னோக்கி நகர்த்தினான்.

கால் மேல் கால் போட்டபடி அமர்ந்தான். முன்பு வலது காலின் மேல் இடது கால் இருந்தது.

இப்போது இடதின் மேல் வலது. அதன் பிறகு தாவூத் தாமதிக்கவில்லை. நெஞ்சை தடவியபடி கண்களால் காலிப்புக்கு ஏதோ செய்தி சொன்னான்.

இதற்காகவே காத்திருந்தது போல் காலிப்பும் ஆட்களும் செயல்பட்டார்கள். இடைப்பட்ட நேரத்தில் என்ன செய்ய வேண்டும் என்ற முடிவுக்கு வந்திருந்த சயீத், அதன்படி செயல்பட்டான்.

எப்படியும் காலிப்பின் கையில் இருக்கும் கத்தி, காற்றை கிழித்தபடி தன்னை நோக்கி வரும் என்பதை ஊகித்திருந்தவன், நொடிக்கும் குறைவான நேரத்தில் குனிந்தான். கத்தி வீச்சிலிருந்து தப்பினான். தான், அமர்ந்திருந்த மேஜையை முன்னோக்கி தள்ளி காலிப்பை தடுத்து நிறுத்தினான்.

ஏற்கனவே அடியாட்கள் எங்கெங்கு அமர்ந்திருக்கிறார்கள், நின்றிருக்கிறார்கள் என்பதை கணக்கிட்டிருந்ததால் எந்தப் பக்கம் நகர்வார்கள் என தோராயமாக கணிக்க முடிந்தது. அதற்கு மாற்றாக ஓட வேண்டிய திசை - கோணங்களும் மனதுக்குள் பதிந்திருந்ததால் அதன்படி சயீத் நகர்ந்தான். வாசல் பக்கமும் பின்புறமும் நிச்சயம் ஆட்களை தாவூத் நிறுத்தியிருப்பான். எனவே அந்தப் பக்கம் ஓடுவது சவக்குழியில் விழுவதற்கு சமம்.

ஒரே மாற்று, இடப்பக்கம் இருக்கும் ஜன்னல் கதவு. ஓராள் பாய்ந்து வெளியேறும் அளவுக்கு அது அகலமானது. அதற்கு எதிர்திசையில் ஓடுவது போல் போக்குக் காட்டிய சயீத், சட்டென்று திரும்பி ஜன்னலை அடைந்தான். யோசிக்காமல் குதித்தான். தரையில் குவித்து வைக்கப்பட்டிருந்த கற்கள் அவன் உள்ளங்காலை பதம் பார்த்தது. அதை பொருட்படுத்தாமல் இருட்டில் ஓடத் தொடங்கி...'னான்' என முடிப்பதற்குள் -அவன் முகத்தில் கத்தி பாய்ந்தது.

"ஐயோ..." என அலறியபடி தரையில் விழுந்தான். மறைவிலிருந்து வெளிப்பட்ட ஆட்கள் அவனை சூழ்ந்து நின்றார்கள். ஓடி வராமல், அதே நேரம் விரைந்து வந்த தாவூத் தன் காலால் அவனை எட்டி உதைத்தான்.

"தொங்கிரியோட ஒவ்வொரு அங்குலமும் எனக்கு தெரியும்டா நாயே. வழக்கமா எந்த 'பாரு'க்கு நீ குடிக்க வருவ... அந்த 'பார்' எப்படியிருக்கும்... இதுக்கு முன்னாடி அங்க நீ சண்டை போட்டிருக்கியா... போட்டிருந்தனா அப்ப எப்படி செயல்பட்டிருப்ப... எந்த வழில தப்பியிருப்பேன்னு எல்லாம் தெரிஞ்சுக்காம உனக்கு ஸ்கெட்ச் போட்டிருப்போம்னு நினைக்கறியா?" கர்ஜித்தான்.

சாராயத்தால் நிரம்பியிருந்த வயிறு வலித்தது. கத்திக் குத்தும்

உதைகளும் சரமாரியாக விழுந்தன. சயீத்தின் உடலை பதம் பார்த்தன.

"காலிப்..."

"சொல்லுங்க தாவூத் பாய்..." என்றபடி

முன்னால் வந்தான்.

"இவனையும் கொல்ல நீதானே ஆசைப்பட்ட? முடிச்சுடு..."

கண்களில் வெறியுடன் கத்தியை உயர்த்தினான் காலிப்.

அது இறங்குவதற்குள் எஞ்சியிருந்த சக்திகளை ஒன்றுதிரட்டிய சயீத், உருண்டபடியே நகர்ந்தான். தம்பிடித்து எழுந்து ஓடினான்.

தனக்கு பின்னால் பல ஜோடி கால்கள் துரத்தி வருவதை அவனால் உணர முடிந்தது. கொஞ்சம் கொஞ்சமாக அவை நெருங்கி வரவும் செய்தன.

'ம்ஹூம். இவர்களிடம் சிக்கினால் உடலை கூறு போட்டுவிடுவார்கள். சாவு உறுதி. அதற்காக இன்னொரு அயூப் ஆக மரணமடையக் கூடாது. பம்பாய் நாளிதழ்களில் அச்சாகப் போகும் தனது சடலத்தின் புகைப்படத்தில் அளவுக்கு மீறி கத்திக் குத்து இருந்தால் அது பதான்ஸ்களுக்கே அவமானம். அப்படிப்பட்ட ஓர் இழுக்கை, அவர்களின் தலைவனாக இருந்த, தானே தேடித் தந்தால் எப்படி....

ஒரேயொரு இடத்தைத் தவிர வேறு எங்கு சென்றாலும் தாவூத்தும், காலிப்பும் பிடித்துவிடுவார்கள். இவர்களால் நெருங்க முடியாத இடம் ஒன்றே ஒன்றுதான். அது மட்டும்தான் இந்த நேரத்தில் என்னைக் காப்பாற்றும்...'

முடிவுக்கு வந்த சயீத், குறிப்பிட்ட அந்த இலக்கை குறி பார்த்து ஓடினான்.

எதிர்பார்த்தது போலவே நள்ளிரவிலும் அந்த இடம் பரபரப்புடன் இயங்கிக் கொண்டிருந்தது. மூச்சு வாங்க திறந்திருந்த கதவின் வழியே நுழைந்தான்.

துரத்தி வந்தவர்கள் பின்வாங்கியிருந்தார்கள். அதற்கு அடையாளமாக அப்போது எந்த காலடி ஓசையும் அவன் செவியில் விழவில்லை.

கிழிந்த உதடுகளும், தொங்கும் சதைகளுமாக ரத்தம் சொட்டச் சொட்ட சயீத் நிமிர்ந்து பார்த்தான்.

ரன்பீர் லிக்ஹா, சிரித்த முகத்துடன் அவன் முன்னால் நின்றிருந்தார்.

"இன்ஸ்பெக்டர்... என்னைக் காப்பாத்துங்க..." என்றபடி அவர் காலில் விழுந்தான்.

அந்தக் காட்சியைப் பார்த்து தொங்கிரி போலீஸ் ஸ்டேஷனே நகைத்தது.

# 45

சரியான சமயம் இதுதான். இதை பயன்படுத்திக் கொள்ளாவிட்டால் தன்னை விட முட்டாள் வேறு யாரும் இருக்க மாட்டார்கள். புன்னகையுடன் கவனமாக வலை விரிக்க ஆரம்பித்தார் இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹா.

''யாருப்பா நீ? உன்னை யாரு இப்படி அடிச்சாங்க..?'' இருந்த இடத்தை விட்டு அசையாமல் கொக்கி போட்டார்.

உதட்டிலிருந்து ரத்தம் வழிய அவரை சயீத் நிமிர்ந்து பார்த்தான். தலை வலித்தது. பிளந்திருக்கவும் வாய்ப்பிருக்கிறது. என்றாலும் சிரமப்பட்டு சுவர் பக்கம் திருப்பினான். மங்கலான கறுப்பு வெள்ளை புகைப்படங்கள் பல அங்கு ஒட்டப்பட்டிருந்தன. அதில் தன் உருவமும் இருக்கலாம். தவறு... இருக்கிறது. ஒட்டச் சொன்னவர் ரன்பீர் லிக்ஹாதான். அதில் சந்தேகமேயில்லை. போலவே இதுநாள் வரை அவர் தேடி வந்த குற்றவாளியும்,

இப்போது கதறிய படி அவர் காலடியில் விழுந்து கிடப்பவனும் தானேதான்.

ஆனாலும் தெரியாதது போல் நடந்துகொள்கிறார். தன் வாயிலிருந்தே அனைத்தையும் வரவழைக்க முயல்கிறார். வேறு வழியில்லை. வெளியில் சென்றால் தாவூத்தும் காலிப்பும் கண்டம் துண்டமாக வெட்டி விடுவார்கள். உயிர் பிழைக்க வேண்டுமானால் ஒப்புதல் வாக்குமூலம் அளித்துத்தான் ஆக வேண்டும்.

அதுநாள் வரை விதியை அவன் நம்பியதில்லை. இப்போதோ விதியைத் தவிர வேறு எதையும் நம்புவதாக இல்லை. எதிரிகள் மட்டுமல்ல... சூழலும் ஒரு மனிதனை வீழ்த்த ஸ்கெட்ச் போடத்தான் செய்கிறது.

''உன்கிட்ட ஒரு கேள்வி கேட்டேன்...'' தொண்டையை கனைத்தார் ரன்பீர் லிக்ஹா.

"ம்..." என்று தலையசைத்த சயீத், எழுந்து கொள்ள முற்பட்டான். முடியவில்லை. சறுக்கி விழுந்தான்.

"கான்ஸ்டபிள்... தூக்கி நிற்க வைங்க..."

கட்டளைக்கு அடிபணிந்து விரைந்து வந்த கான்ஸ்டபிள், சயீத்தை தூக்கி நிறுத்தினான். மரமேஜையில் கை ஊன்றியபடி நின்றவன் தன் வாய் வழியே மூச்சு விட்டான்.

அவனைப் பார்த்தபடியே காவலருக்கு கண் ஜாடை காட்டினார். புரிந்துகொண்ட கான்ஸ்டபிள், பானையிலிருந்து நீரை கொண்டு வந்து அவனிடம் கொடுத்தார்.

"குடி..."

இமைகளை மூடித் திறந்த சயீத், டம்ளரை வாங்கினான். இரு முறை நீரை விழுங்கினான். புரை ஏறியது. இருமினான். ரத்தம்

கொட்டியது. வாங்கிய டம்ளரை மேஜை மீது வைத்துவிட்டு கையால் வாயை துடைத்துக்கொண்டான்.

"இப்ப சொல்லு..."

தன்னையே உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த ரன்பீர் லிக்ஹாவின் கண்களை சில விநாடிகள் நேருக்கு நேர் சந்தித்தான். விநாடிக்கும் குறைவான நேரத்தில் இமைகளை மூடினான். பெருமூச்சு வெளிப்பட்டது. தலையை உலுக்கியபடி நிதானத்துக்கு வந்தான்.

"என் பேரு சயீத்..."

"முழுப் பேரே அதுதானா?"

"இல்லை. சயீத் பட்லா..."

"ம்..."

"நானொரு பதான்..."

"ம்..."

"'ரஸ்தார்' உருது பத்திரிகையோட ஆசிரியர் இக்பால் நடிக்கை கொன்னது நான்தான்..."

"எதுக்காக அவரை கொலை செஞ்ச?"

சட்டென்று பதில் சொல்வதை நிறுத்திவிட்டு ரன்பீர் லிக்ஹாவை பார்த்தான்.

"என்னை ஏன் பார்க்கற? பதில் சொல்லு..."

"உங்களுக்கு தெரியாதா?"

"தெரியாது..."

ஒருதுளியாக ஒட்டிக் கொண்டிருந்த நம்பிக்கையும், திமிரும் உதிர சயீத் நிலைகுலைந்தான். உண்மையிலேயே இந்த இன்ஸ்பெக்டர் பெரிய ஆள்தான். அவருக்கு தெரியும்... புரியும்... என்று நினைத்து எதையும் இனி பேச முடியாது. அதை அவர் அனுமதிக்கவில்லை. ஆதியோடு அந்தமாக இதுவரை, தான் செய்த அனைத்துக் குற்றங்களையும் தன் வாயாலேயே சொல்லச் சொல்கிறார்.

சற்றுத் தள்ளி, தான் பேசுவதை குறிப்பெடுத்துக்கொண்டிருந்த ரைட்டரை பார்த்தான். அதன் பிறகு அவன் யோசிக்கவும் இல்லை. தாமதிக்கவுமில்லை. தன் சரித்திரத்தையே கடகடவென்று ஒப்பிக்கத் தொடங்கினான். பிறந்தது, வளர்ந்தது, சின்னச் சின்ன திருட்டுகளில் ஈடுபட்டது, வழிப்பறி, கொள்ளை, கொலை, கடத்தல், பாலியல் வன்புணர்வு...

எதையும் மறைக்காமல் நூற்று இருபது நிமிடங்களில் சொல்லி முடித்தான். இடையில் ஒரேயொரு முறை மட்டும் பேசுவதை நிறுத்திவிட்டு தண்ணீர் குடித்தான். மற்றபடி தடையில்லாமல் கொட்டி முடித்தான்.

அவனது வேகத்துக்கு சமமாக ரைட்டரும் எழுதிக்கொண்டே வந்தார். ரன்பீர் லிக்ஹா, இருந்த இடத்தை விட்டு அசையவும் இல்லை. நாற்காலியில் அமரவும் இல்லை.

மெல்ல மெல்ல பொழுது விடிய ஆரம்பித்தது. சயீத்தை இழுத்துச் சென்று நீதிமன்றத்தில் நிறுத்தினார்கள். நீதிபதி முன்பு மீண்டும் ஒருமுறை சுருக்கமாக ஒப்புதல் வாக்குமூலம் அளித்தான்.

அதுவரை அவன் செய்த அனைத்துக் குற்றங்களுக்கும் சேர்த்து பதினான்கு ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டது.

இறுகிய முகத்துடன் சிறைக்குச் சென்ற சயீத், அங்கிருந்து தப்பிக்கவும் முயலவில்லை. சக கைதிகளிடம் சிரித்து பேசவும் இல்லை. அமைதியாக வாழ்ந்தான். சிறையில் நடமாடினான். தனக்கென ஒதுக்கப்பட்ட வேலைகளை செய்தான். சிறைச்சாலை வார்டனுக்கு அவனைப் பார்க்கப் பார்க்க அதிர்ச்சிதான் ஏற்பட்டது. பம்பாயை நடுங்க வைத்த தாதா அவன்தான் என்பதை அவரால் நம்ப முடியவில்லை. பதான்களின் தலைவனாக மாநகரத்தையே நடுங்க வைத்தவன் இவ்வளவு அமைதியாகவா இருப்பான்?

இந்தக் கேள்விக்கு இறுதிவரை வார்டனுக்கு விடை கிடைக்கவில்லை.

பதினான்கு ஆண்டுகளுக்குப் பிறகு சயீத், விடுதலையானபோது பதான்ஸ் மட்டுமல்ல பம்பாயும் அவனை மறந்திருந்தது. பத்தோடு பதினொன்றாக, எந்தவித அடையாளமும் இல்லாமல் சோற்றுக்கு சிங்கி அடித்து ஒரு நாள் அனாதையாக இறந்துபோனான்.

சயீத் இறந்தது கூட தாவூத்துக்கு தெரியாது. ஆனால் - அவன் தொங்கிரி காவல் நிலையத்துக்குள் உயிர் பிச்சை கேட்டு நுழைந்ததை செய்வதறியாமல் அன்றைய நள்ளிரவில் பார்த்துக்கொண்டிருந்தான். துரத்தி வந்தது எல்லாம் வீணானது குறித்த எரிச்சல் தாவூத்தின் உடலை தீயாக சுட்டது.

"ஒரு வார்த்தை சொல்லு தாவூத். போலீஸ் ஸ்டேஷனுக்குள்ள புகுந்து அவனை வெட்டிட்டு வரேன்..."

கண்கள் சிவக்க அனுமதி கேட்ட காலிப்பை ஏற இறங்க பார்த்தான்.

''சும்மா உதாருக்கு சொல்றேன்னு நினைச்சியா? டேய் வாங்கடா...'' தன் ஆட்களை அழைத்தான்.

"நில்லு காலிப். அதுக்கு அவசியமில்லை..."

"ஏன் பாய்..."

''அந்த போலீஸ் ஸ்டேஷன்ல இன்ஸ்பெக்டரா இருக்கறது யாருன்னு தெரியும்ல?''

எதற்காக இந்தக் கேள்வி என்பது போல் தாவூத்தை பார்த்தான். "ரன்பீர் லிக்ஹாதானே?"

"ஆமா. அவரும் நம்மாள்தான்..."

"தொங்கிரிக்கே இந்த விஷயம் தெரியுமே தாவூத்? அதனாலதானே உள்ள புகுந்து வெட்டிட்டு வரேன்னு சொன்னேன்..."

"அது சொந்த செலவுல சூன்யம் வைக்கிற மாதிரி..."

“என்ன சொல்ற தாவூத்...”
“உண்மையை சொல்றேன் காலிப். இன்ஸ்பெக்டர் ரன்பீர் லிக்ஹா நம்ம தோஸ்த்தான். ஆனா...”
“ஆனா?”
“அவர் நம்மோட பழகறது பதான்ஸை அழிக்க மட்டும்தான். அதுக்காக மட்டும்தான் நம்ம கூட கூட்டு சேர்ந்திருக்கார்...”
“ம்...”
“அயூப்பை அழிச்சாச்சு. இப்ப சயீத்தே அவர் முன்னால போய் நின்னுட்டான்...”
“ம்...”
“இதுக்கு மேல நம்ம உதவி அவருக்கு தேவைப்படாது. அதனால நம்மை கிட்ட சேர்க்க மாட்டார்...”
“தாவூத்...”
“எப்பவும் போலீஸ்காரங்ககிட்ட பழகும்போது எச்சரிக்கையா இருக்கணும் காலிப்... அவங்க ரெண்டு பக்கமும் கூர்மையா இருக்கிற கத்தி மாதிரி. நடுவுலதான் அதை பிடிக்கணும். இல்லைனா நம்மையே பதம் பார்த்துடும்...”
“அப்ப சயீத்தை கண்டுக்க வேண்டாம்னு சொல்றியா?”
“இல்ல... இனிமே அந்த வேலையை ரன்பீர் லிக்ஹா பார்த்துப்பாருன்னு சொல்றேன்...”
“அதாவது, அவனை நாம மறந்துடணும்...”
“ஆமா. இக்பால் நடிக்கை கொன்னவங்களை எப்படி பழி வாங்க நாம துடிக்கிறோமோ... அப்படித்தான் அவரும் துடிக்கிறார். அதனால சயீத்தை வெளில விடமாட்டார். என்ன... சட்டத்துக்கு உட்பட்டு அவனுக்கு தண்டனை வாங்கிக் கொடுப்பாரு. அவ்வளவு தான். எப்படி பார்த்தாலும் அவனோட சாஃப்டர் முடிஞ்சாச்சு...”
“அப்ப நம்ம வேலையை நாம பார்ப்போம்னு சொல்றியா?”
“ஆமா...”
“சரி நாங்க கிளம்பறோம்...”
“எங்க?”
“இதென்ன கேள்வி தாவூத்... எங்க இடத்துக்குத்தான்...”
“இனிமே உங்க இடம் முஸாஃபீர்கானா...”
“தாவூத்...”
“என் வீட்டு பக்கத்துல உங்களுக்கு ஒரு வீடு பார்த்துட்டேன். அங்க வந்து தங்கிக்குங்க...”
கண் கலங்க தாவூத்தை அணைத்துக்கொண்டான் காலிப். அத்துடன் அன்றிரவே தன் ஆட்களுடன் முஸாஃபீர்கானா வந்து சேர்ந்தான்.
பாஷு தாதாவுக்கு எப்படி அவர்கள் விசுவாசமாக இருந்தார்களோ - அப்படி தாவூத்தின் கட்டளைக்கு அடிபணிந்தார்கள்.

*மெல்ல மெல்ல தாவூத், ஒரு தலைவனாக உருவெடுக்கத் தொடங்கினான்.*

*ரஜினிகாந்த்தின் ப்ளாக் பஸ்டர் படமான 'பாட்ஷா' நினைவில் இருக்கிறதா? அதில், சாதாரண மாணிக்கம், பாட்ஷா ஆக மாறிய பிறகு ஒரு கற்கோட்டைக்கு முன்னால் நாற்காலியில் தாடியுடன் அமர்ந்திருப்பார். அவர் அருகில் ஆளுயர நாய் ஒன்று அமைதியாக அமர்ந்திருக்கும். மும்பையை சேர்ந்த சின்னச் சின்ன தாதாக்கள் முதல் பெரிய பெரிய டான் வரை வரிசையில் நின்று ரஜினியின் கையை முத்தமிட்டுவிட்டு செல்வார்கள்.*

*இந்தக் காட்சியும் முஸாஃபீர்கானாவுக்கு காலிப் வந்த பிறகு தாவூத்தின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றத்திலிருந்து 'உருவிய' சீன்தான். அச்சு அசலாக அப்படித்தான் தாவூத்தின் கையில் மற்றவர்கள் முத்தமிட்டார்கள்.*

*நியாயமாகப் பார்த்தால் இந்த நிகழ்வையும், வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் - கரீம்லாலா ஆகியோரின் வீழ்ச்சியையும், தாவூத்தின் எழுச்சியையும்தான் அடுத்து நாம் இந்தத் தொடரில் பார்க்க வேண்டும்.*

*போலவே 'மாஃபியா ராணிகள்' என தலைப்பு வைத்துவிட்டு கடந்த பல அத்தியாயங்களாக எதற்காக பெண் தாதாக்கள் குறித்து பேசாமலேயே இருக்கிறோம் என்பதற்கும் விளக்கம் அளிக்க வேண்டும்.*

*ஏனெனில் வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் - கரீம் லாலா ஆகியோரின் தத்து சகோதரியும் - தாவூத் இப்ராஹிமின் வளர்ப்புத் தாயும் - பம்பாய் (மும்பை) மாஃபியா உலகின் முதல் பெண் தாதாவுமான ஜெனாபாயை அப்படியே அந்தரத்தில் விட்டுவிட்டு எங்கெங்கோ சென்றிருக்கிறோம்.*

*அதையெல்லாம் கொஞ்சம் கொஞ்சமாக இனி பார்க்கலாம். காரணம், தாவூத் பம்பாயை தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்த பிறகுதான் 'மாஃபியா ராணிகளே' வரிசையாக பம்பாயில் உருவானார்கள்.*

*இதற்கெல்லாம் முன்பு ஒரேயொரு விஷயத்தை சுருக்கமாகவாவது பார்த்தாக வேண்டும், அதுதான் RAW-வின் தோற்றம். அப்போதுதான் எமர்ஜென்ஸியையும், மிசாவையும், காஃபிபோஸா (COFEPOSA) வையும் புரிந்துகொள்ள முடியும். காரணம், மும்மூர்த்திகளான வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் - கரீம் லாலா ஆகியோர் இருந்த இடம் தெரியாமல் நசுக்கப்பட்டதும், தாவூத் இப்ராஹிம் விஸ்வரூபம் எடுத்ததும் பெண் தாதாக்கள் சாரிசாரியாக உருவானதும் இதன் பிறகுதான்.*

*எனவே- 'ரா ரா ராமைய்யா...'*

46

அது சரி. கம்பன் வீட்டுக் கட்டுத்தறியே கவிபாடும்போது சாணக்கியர் பிறந்த மண் மட்டும் நாக்கை வழித்துக்கொண்டா இருக்கும்?

நெவர். ஒட்டிப் பிறந்த இரட்டை வாழைகள் போல்தான் இந்தியாவும் உளவு நிறுவனங்களும். கிறிஸ்து பிறப்பதற்கு முன்பே ஒற்றர்களை எப்படி ஒரு நாட்டின் மன்னன் உருவாக்க வேண்டும்; அவர்களை எப்படி நிறுவனத்தின் கீழ் கொண்டு வரவேண்டும்; இதன் வழியாக எப்படி அண்டை நாடுகளை வீழ்த்த வேண்டும் என்பதையெல்லாம் விலாவாரியாக தனது 'அர்த்த சாஸ்திர' நூலில் கவுடில்யர் எனப்படும் சாணக்கியர் விளக்கியிருக்கிறார். சொல்லப் போனால் உளவு நிறுவனங்கள் குறித்த உலகின் முதல் கோனார் நோட்ஸ் இதுதான்.

இதை கடைப்பிடித்ததால்தான் மகதப் பேரரசே உருவானது. அதாவது, அதுவரை தனித்தனி ராஜ்ஜியங்களாக சிதறிக் கிடந்த பல குட்டிக் குட்டி நிலப்பரப்புகள் ஒன்றிணைந்து சாம்ராஜ்ஜிய அந்தஸ்தை முதல் முறையாக அடைந்ததற்கு காரணம் 'அர்த்த சாஸ்திரம்'தான்.

இதன் பிறகு மௌரிய - சாளுக்கிய - ராஷ்டிரகூட - லொட்டு - லொடுக்கு என பல பெயர்களில் இந்த 'அகண்ட பேரரசு' வழங்கப்பட்டு மொகலாய பேரரசில் முடிந்தது தனிக்கதை.

'நச்'சென்று சொல்வதாக இருந்தால் ஒற்றர்கள் இல்லையேல் அரசு இல்லை. உளவு நிறுவனங்கள் இல்லையேல் சாம்ராஜ்ஜியம் இல்லை. காரணம், அண்டை நாடுகளை கண்காணிக்கவும், எதிரி நாட்டில் குழப்பம் விளைவிக்கவும், நட்பு நாடுகள் பகையாக மாறாதபடி பார்த்துக்கொள்ளவும், உள்நாட்டுக்குள் ஆளும் தரப்புக்கு ஆதரவான கருத்தியல் உருவாகவும் உளவாளிகளும் அவர்களை ஒருங்கிணைக்கும் நிறுவனங்களும் தேவை.

முன் தோன்றிய மூத்த குடியான தமிழகமும் இதற்கு விதிவிலக்கல்ல. உதாரணம் திருக்குறள்.

'ஒற்றும் உரைசான்ற நூலும் இவையிரண்டும்
தெற்றென்க மன்னவன் கண்'.

– என தெளிவாக சொல்லியிருக்கிறார் வள்ளுவர்.

கவனிக்க. சாணக்கியரும் சரி, வள்ளுவரும் சரி புதிதாக எதையும் உருவாக்கவில்லை. ஏற்கனவே புழக்கத்தில் இருந்த விஷயத்தை ஒருங்கிணைத்து நூலாக்கியிருக்கிறார்கள். எனவே உளவு - ஒற்று அறிவது குறித்த விதை மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே இந்தியாவில் தூவப்பட்டிருக்க வேண்டும். அது வளர்ந்து விருட்சமாக ஆண்டுகள் ஆகியிருக்கிறது. அவ்வளவுதான்.

கல்கி, சாண்டில்யன், கௌதம நீலாம்பரன் உட்பட பல




ஜாம்பவான்களது சரித்திர நாவல்களில் கட்டாயம் ஒற்றர்கள் ஒரு பாத்திரமாக வருவார்கள். இரு நாட்டுக்கு இடையிலான யுத்தம் இந்த உளவாளிகள் கொடுக்கும் தகவலால்தான் நடைபெறும் அல்லது முற்றுப் பெறும். அனைவருக்கும் தெரிந்த எடுத்துக்காட்டு, ‘பொன்னியின் செல்வன்’ நாவலில் வரும் ஆழ்வார்கடியன் கேரக்டர். சோழ அமைச்சர் அனிருத்த பிரும்மராயரின் ஒற்றர்படையை சேர்ந்தவர்தான் ஆழ்வார்கடியன் என்பது அப்புதினத்தின் டுவிஸ்ட்களில் ஒன்று.

இப்படி ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நம்நாட்டில் ஒற்றர் படை இயங்கி வந்தாலும் அவை தனிச்சிறப்பை பெறவில்லை. மன்னர்களும் குறைந்த சதவிகித மான்யத்தையே இவர்களுக்கு அல்லது இவைகளுக்கு என்று ஒதுக்கினார்கள். ராஜபுத்திரர்களை அழிக்க முற்பட்ட மொகலாயர்களின் காலம் வரை இதுதான் நிலை.

இதை அடியோடு மாற்றியவர்கள் ஆங்கிலேயர்கள்தான்.

அதுவரை 'மனிதர்களை' கொண்டு மட்டுமே உளவு வேலைகள் நடத்தப்பட்டன. 'அந்த மனிதர்களும்' கட்டுக்கோப்பான அமைப்பாக மாற்றப்படவில்லை.

ஆங்கிலேயர்கள் இந்த விஷயத்தில்தான் அட்வான்ஸாக செயல்பட்டார்கள். ஒவ்வொரு பகுதியிலும் உளவாளிகளை நியமித்தார்கள். 'காட்டிக் கொடுப்பவர்களுக்கு' சிறப்புப் பதவிகள் வழங்கி கவுரவித்தார்கள். வளர்ந்துவரும் தொழில்நுட்பத்தை சாதகமாகநுழைத்தார்கள். அதனால்தான் அவர்களால் தொடர்ந்து சில நூற்றாண்டுகளுக்கு நம் நாட்டை ஆளமுடிந்தது.

இந்திய தேசிய காங்கிரஸ் பிறந்த அதே ஆண்டில்தான் - அதாவது, 1885ல்தான் - அதிகாரப்பூர்வமாக உளவுத்துறையும் லேட்டஸ்ட் வெர்ஷனாக இந்தியாவில் தோன்றியது. சிம்லாவில் இருந்த பிரிட்டிஷ் இந்திய ராணுவத் தளபதியான சார்லஸ் மெட்காஃப் மேக்கரீன் இந்த நிறுவனத்தை தொடங்கினார். காரணம் இந்தியாவை ரஷ்யா ஆக்கிரமிக்கலாம் என்ற அச்சம் அப்போதைய ஆங்கிலேய அரசுக்கு இருந்ததுதான். எனவே ஆப்கானிஸ்தானில் நிலைகொண்டிருந்த ரஷ்ய துருப்புகளை கண்காணிக்கும் பணி இந்நிறுவனத்துக்கு ஒதுக்கப்பட்டது.

இந்த இடத்தில் பனிப்போர் காலத்திலும் ஆப்கனை ரஷ்யா ஆக்கிரமித்தது... இதனை எதிர்த்து மத்திய கிழக்கு நாடுகளில் இருந்த இளைஞர்கள் போர்க்கொடி உயர்த்தியது... அமெரிக்கா அவர்களுக்கு ஆயுதங்கள் வழங்கி கொம்பு சீவியது... அல் கொய்தா பிறப்பு... ஓசாமா பின்லேடன் வரலாறு... என அடுத்தடுத்த நிகழ்வுகளை உங்கள் மனதில் ஃப்ளாஷ் கட்டில் ஓடவிடுங்கள்.

முடிந்ததா?

நல்லது. 1885ல் தோன்றிய உளவு அமைப்பு 1921ல் 'இந்திய அரசியல் புலனாய்வுப் பிரிவு'(Indian Political Intelligence) என்ற நிறுவனமாக மாறியது. ஸ்காட்லாண்ட் யார்ட், எம்.ஐ.5 போன்ற வெளிநாட்டு உளவு நிறுவனங்களுடன் இதற்கு 'நல்ல கொடுக்கல் வாங்கல்' இருந்தது என்பது சரித்திரம்.

1947ல் இந்தியா சுதந்திரம் அடைந்த பின்னர், உள்துறை அமைச்சகத்தின் கீழ் இப்போதைய ஐபி (Intelligence Bureau) உருவானது. உள்நாட்டு - அயல்நாட்டு உளவுப் பணிகளை கவனிப்பது இதன் முதன்மையான வேலை. இந்த அமைப்பின் முதல் தலைவர் சஞ்சீவி பிள்ளை. 'காந்தி படுகொலைக்கு' பிறகு பி.என்.முல்லிக், ஐபியின் தலைமைப் பொறுப்பை ஏற்றார். இவர் காலத்தில்தான் இந்தியாவின் சக்தியாக ஐபி மாறியது.

இந்திய போலீஸ் சர்வீஸ் மற்றும் ராணுவ அதிகாரிகளைக் கொண்டு ஐபி செயல்பட்டு வருகிறது. இந்திய தூதரக அதிகாரிகள் மற்றும் நீதிபதிகள் பதவியேற்புக்கான பாதுகாப்புப் பணிகளை

*கவனிப்பதும், காவல் துறைக்கும் மற்ற உளவுப் பிரிவுக்கும் தகவல் கொடுப்பதும் இதன் முக்கியப் பணிகள்.*

*ஆனால், ஐபி அதிகாரிகள் சீனாவில் இருந்தபோதும் அவர்களால் போர் நடவடிக்கையை முன்கூட்டியே அறிய முடியவில்லை. 1962ல் இந்தியா மீது திடீரென்று சீனா போர் தொடுத்தபோதுதான் ஐபி-யின் போதாமை இந்திய அரசுக்கு புரிந்தது.*

*இந்த இயலாமை அடுத்த மூன்றாண்டுகளில் வெட்ட வெளிச்சமானது. அதுதான் 1965ல் நடந்த இந்திய - பாகிஸ்தான் போர்.*

*சுதந்திரம் அடைந்து இருபதாண்டுகள் ஆன பிறகும் அந்நியர் களை கண்காணிக்க இந்திய அரசு அக்கறை காட்டவில்லை என்பது கவலைகொள்ள வேண்டிய விஷயம்.*

*பிரதமராக பொறுப்பேற்ற பின் இந்திரா காந்தி அப்படித்தான் நினைத்தார். ராணுவத் தளபதி ஜெனரல் சௌத்ரி சொன்ன ஆலோசனையை ஏற்றார். புதிய உளவு நிறுவனத்தை தொடங்கினார்.*

*அதுதான் 'ஆய்வு மற்றும் பகுப்பாய்வு பிரிவு'. சுத்தமான ஆங்கிலத்தில் Research and Analysis Wing. சுருக்கமாக RAW. இதன் முதல் இயக்குநராக ஆர்.என்.கவ் நியமிக்கப்பட்டார்.*

*ஓகே. இந்த 'ரா'வில் முக்கியமாக யார் யாரெல்லாம் பணியாற்றுகிறார்கள்?*

*முதலில் சோர்ஸ் (Source) உளவாளிகளுக்கு தகவல் கொடுப்பவர்கள்தான் சோர்ஸ். இவர்கள் 'ரா'வின் நேரடி ஊழியர்கள் கிடையாது. எதிரியிடத்தில் இருக்கும் கறுப்பு ஆடு. இவர்களுக்கு மாதச் சம்பளம் கிடையாது. கொடுக்கும் தகவல்களை பொறுத்து கமிஷன்.*

*அவ்வளவுதான்.*

*ஆனால், இவர்களிடமிருந்து தகவல் பெறும் களப்பணியாளர்கள் சந்தேகத்தோடுதான் எப்போதும் இவர்களை அணுகுவார்கள்.*

*ஒரு 'சோர்ஸை' மட்டும் நம்பமாட்டார்கள். ஒரே இடத்தில் ஒருவர் அறியாமல் இன்னொருவர் என்ற அடிப்படையில் இரண்டு, மூன்று 'சோர்ஸை' களப்பணியாளர்கள் வைத்திருப்பார்கள்.*

*களப்பணியாளர்கள் (Field Officers) 'ரா'வின் கதாநாயகர்கள் இவர்கள்தான்.*

*எதிரிகளின் இடத்துக்குள் ஊடுருவுவது இவர்கள் பணி. எனவே ஆபத்து நிறைந்த வேலை. ஸோ, தங்களை தற்காத்துக் கொள்ளத் தெரிந்தவர்களையே - மார்ஷியல் ஆர்ட்ஸ் உட்பட சகல கலைகளிலும் வல்லுநர்களாக இருப்பவர்களையே - இந்தப் பணியில் அமர்த்துவார்கள். இதற்காக ஐபி, காவல்துறை, ராணுவம் போன்ற அமைப்பில் வேலை செய்பவர்களை ஒன்றுக்கு பலமுறை*

ஆராய்ந்து தேர்ந்தெடுப்பார்கள்.

எடுத்ததுமே களப்பணியாளர்களாக மாறமுடியாது. முதலில் துணை களப்பணி அதிகாரி(Assistant Field Officer).ஒருவகையில் காவல்துறையில் இருக்கும் இன்ஸ்பெக்டருக்கு சமமான பணி என்று சொல்லலாம். களப்பணி மேலாளருக்கு உதவியாக தகவல் திரட்டிக் கொடுப்பது, மேலாளர் கொடுக்கும் தகவலை தலைமை அலுவலகத்துக்கு கொடுப்பது... இவையெல்லாம் துணை களப்பணி அதிகாரியின் வேலை.

புரியும்படி சொல்வதென்றால், 'விஸ்வரூபம்' படத்தில் கமலுக்கு உதவியாக ஆப்கானிஸ்தானில் ஒரு தாடிக்கார இளைஞர் கஞ்சாவுக்கு பதிலாக டிரான்ஸ்மீட்டரை ஒரு பையில் வைப்பார் இல்லையா? அவர்தான் துணை களப்பணி அதிகாரி.

அப்படியானால் கமல்? அவர் களப்பணி அதிகாரி. ஜேம்ஸ் பாண்ட் படங்களில் வரும் சாகச வேலைகளை எல்லாம் இந்த ஃபீல்ட் ஆபீசர்ஸ் செய்ய வேண்டும். ஆனால், ஜேம்ஸ் பாண்டுக்கு கிடைப்பது போல் ஜட்டி அணிந்த பெண்கள் எப்போதும் இவர்களுக்கு கிடைக்க மாட்டார்கள்.

குறைந்தது எட்டு ஆண்டுகள் துணை களப்பணி அதிகாரியாக திறமையை காட்டினால்தான் களப்பணி அதிகாரியாக முடியும்.

அதே போல் ஐந்து வருடங்கள் களப்பணி அதிகாரியாக பணிபுரிந்தால்தான் மூத்த களப்பணி அதிகாரியாக முடியும். 'விஸ்வரூபம்' சேகர் கபூர் கதாபாத்திரம் மாதிரி. கட்டளைகள் இடுவதும், பிராஜக்டுகளுக்கான தலைமைப் பொறுப்பை ஏற்பதும் இந்த களப்பணி அதிகாரிகள்தான்.

## தகவல் ஆய்வாளர்கள் (Analyst Officers)

களப்பணியாளர்களுக்கு கிடைக்கும் தகவல் எல்லாம் சரியாக இருக்கும் என்று சொல்ல முடியாது. திசை திருப்புவதற்காக எதிரி நாடுகள் தவறான தகவல்களையும் பரப்புவார்கள். எனவே களப்பணியாளர்கள் கொண்டு வரும் தகவல்களை சரிபார்த்து உறுதி செய்து மேலாளர்களுக்கு கொடுக்கும் பணி, தகவல் ஆய்வாளர்களுடையது. போலவே சேகரிக்கப்பட்ட முந்தைய தகவல்களை களப்பணியாளர்களுக்கு கொடுப்பதும் இவர்கள்தான்.

இது ஆபத்தில்லாத வேலை. களத்தில் இறங்க வேண்டும் என்று அவசியமில்லை. கம்ப்யூட்டர் முன்பு அமர்ந்திருந்தால் போதும்.

இவர்களுக்கு இடையிலும் ஜூனியர் இன்டலிஜன்ஸ் ஆபீசர், அசிஸ்டென்ட் சென்ட்ரல் இன்டலிஜன்ஸ் ஆபீசர், சென்ட்ரல் இன்டலிஜன்ஸ் ஆபீசர் என அனுபவத்துக்கு தகுந்தபடி பதவிகள் உண்டு.

இவர்கள் அனைவருக்கும் கடைநிலையில் டைப்பிஸ்ட், டேட்டா என்ட்ரி ஆப்பரேட்டர்கள் உண்டு. ஆனால், இந்த கடைநிலை

ஊழியர்களை ஒருபோதும் எதிரிகளால் 'ஸோர்ஸ்' ஆக்க முடியாது. காரணம், யாருக்காக என்ன வேலை பார்க்கிறோம், எதை கம்போஸ் பண்ணுகிறோம் என்பதே இவர்களுக்கு தெரியாது. அந்தளவுக்கு 'ரா'வுடன் துண்டிக்கப்பட்டிருக்கிறார்கள்.

## இயக்குநர் (Director)

'ரா'வின் நிர்வாகப் பொறுப்பில் இருப்பவர் இவர்தான். இந்தப் பதவிக்கும் காவல்துறை அல்லது ராணுவத்தில் உயர் பொறுப்பில் இருந்தவர்களைத்தான் தேர்ந்தெடுப்பார்கள்.

அதிகம் மெனக்கெட வேண்டாம். ஜேம்ஸ் பாண்ட் படங்களில் கவுன் அணிந்த பாட்டி அடிக்கடி 'இங்கு போ... இதை கொண்டு வா...' என அவருக்கு கட்டளையிடுவார் இல்லையா? அந்த கவுன் பாட்டி போன்றுதான் 'ரா'வின் இயக்குநர்.

களப்பணியாளர்களுக்கு என்ன செய்ய வேண்டும், இலக்கு எது, எந்த வேடத்தில் செல்ல வேண்டும், என்ன தகவலை கொண்டு வர வேண்டும்... என்பதையெல்லாம் கட்டளையிடும் பணி இயக்குநருடையது.

## துறை வல்லுநர்கள்

இன்றைய நவீன உலகுக்கு தகுந்தபடி உருவாக்கப்பட்ட பிரிவினர் இவர்கள். ஃபேஸ் புக், கையெழுத்தை சரிபார்ப்பது, ஹேக்கர்ஸ், இத்யாதி இத்யாதி என அனைத்துக்கும் தனித்தனி துறைசார் வல்லுநர்கள் உண்டு.

இதுதான் உத்தேசமாக 'ரா'வின் நெட்ஒர்க். ஆனால், இந்தப் பிரிவுகளுக்கு தேவையான ஆட்களை நாளிதழில் விளம்பரம் கொடுத்து,

நேர்காணல் செய்தெல்லாம் எடுக்க மாட்டார்கள். ஏற்கனவே அரசுப் பணிகளில் இருப்பவர்களை சலித்து எடுத்து பயிற்சி அளிப்பார்கள்.

முக்கியமான விஷயம், 'ரா' முழு வேகத்தில் இயங்க ஆரம்பித்த பிறகுதான் அண்டை நாடுகளுடன் எந்தப் போரும் நடைபெறவில்லை என்பது.

இதிலிருந்தே 'ரா' எவ்வளவு திறமையாக செயல்படுகிறது என்பதை புரிந்துகொள்ளலாம்.

நிற்க. 'மாஃபியா ராணிகள்' தொடருக்கும் 'ரா'வுக்கு என்ன சம்பந்தம்?

இருக்கிறது. அதைத்தான் 1973 இறுதியில் மகாராஷ்டிர மாநில முதல்வரான வி.பி.நாயக், இந்திய பிரதமரான இந்திரா காந்தியிடம் சொல்லிக்கொண்டிருந்தார்.

"மேடம், குஜராத்திலும் பம்பாயிலும் மாஃபியாக்கள் அதிகரித்து விட்டார்கள். கைதேர்ந்த 'ரா' அமைப்பினால் கூட மாஃபியாக்களின் செயல்பாட்டை முடக்க முடியவில்லை. அந்தளவுக்கு அவர்களது

நெட்ஒர்க் வலுவாக இருக்கிறது...”

*“சரி, இதற்கு என்ன செய்யலாம் என்று நினைக்கிறீர்கள்?”*

கேட்ட பிரதமருக்கு முதல்வர் சொன்ன பதில்: *“கடுமையான சட்டம்...”*

*“சரி. கொண்டு வருவோம்...”*

இதனையடுத்து அமலுக்கு வந்ததுதான் *The Maintenance of Internal Security Act.*

சுருக்கமாக *MISA.*

# 47

**உ**ச்சரிக்கும்போதே எச்சரிப்பது போல் ஒலிக்கும் சட்டம்தான் ‘உள்நாட்டுப் பாதுகாப்பு பராமரிப்பு சட்டம்’ *(The Maintenance of Internal Security Act.).* சுருக்கமாக மிசா *(MISA).*

இது அரசியல் தொடர் அல்ல. அப்படியிருந்தால் இந்தச் சட்டம் இந்தியச் சட்ட செயலாக்கப் பிரிவினருக்கு அதிக அதிகாரங்களை கொடுக்கும் விதமாகவும், அதன்மூலம் நிச்சயமற்ற குற்றக் காரணங்கள் ஏதுமின்றி எந்தவொரு தனிநபரையும் கைது செய்து அவரது செயல்பாடுகளை முடக்கவும், அவரது உடைமைகளை பிடி ஆணை இல்லாமல் பறிமுதல் செய்யவும் வழிவகுத்ததை குறித்தும் உரையாடியிருக்கலாம்.

போலவே இந்திய அரசியலமைப்பின் 39வது திருத்தச் சட்டமாக 9வது அட்டவணையில் இச்சட்டம் சேர்க்கப்பட்டதையும், இச்சட்டம் சேர்க்கப்படுவதற்கு முன், சட்ட வடிவை நீதிமுறைமையின் பரிசீலணைக்கு அனுப்பாமலேயே அமல்படுத்தப்பட்டதை குறித்தும் விவாதித்திருக்கலாம்.

ஆனால், இது பம்பாய் (மும்பை) மாஃபியா குறித்த வரலாறு. பெண் மாஃபியாக்களின் வாழ்க்கை வழியே ஆண் தாதாக்களின் சரித்திரத்தையும் தெரிந்துகொள்ளும் முயற்சி. எனவே ‘மிசா’வின் பூரணத்துவத்தை இங்கு பார்ப்பதும் ஆராய்வதும் சரியல்ல.

அதற்காக ‘மிசா’ குறித்து சுருக்கமாகக் கூட தெரிந்துகொள்ளாமல் அடுத்தடுத்த அத்தியாயங்களுக்கும் செல்ல முடியாது. கூடாது.

ஏனெனில் ‘மிசா’ முதன் முதலில் 1971ல் அமலுக்கு வந்ததே மாஃபியாக்களை ஒடுக்கத்தான். அதற்காகத்தான் 1950ல் இருந்த ‘தடுப்புக்காவல் சட்டத்தை *Preventive Detention Act* சற்றே நீட்டித்து - டிங்கரிங் செய்து ‘மிசா’வாக கொண்டுவந்தார்கள்.

சந்தேகத்துக்குஇடமின்றி அப்போது – அதாவது, 1971காலகட்டத்தில் - இந்திய மாஃபியாக்கள் விஸ்வரூபம் எடுத்திருந்தார்கள். குஜராத்தும், மகாராஷ்டிர மாநிலமும் இவர்களிடம் சிக்கி கந்தலாகி யிருந்தது. பம்பாயை தலைமையிடமாகக் கொண்டு ஒட்டுமொத்த இந்தியாவையே ஆட்டிப் படைத்தார்கள்.

மத்திய கிழக்கு நாடுகளுடன் - குறிப்பாக துபாய் - இவர்களுக்கு நேரடி தொடர்பிருந்தது. கடத்தல் பொருட்கள் அங்கிருந்து மானாவாரியாக வந்து சேர்ந்தன. குஜராத்திலிருந்து கேரளா வரை கடற்கரையோரமாகவே வழித்தடங்கள் அமைக்கப்பட்டன. கடல் வழியிலும் வான்வழியிலும் பக்காவாக ‘ஹைவேஸ்’ உருவாகின. மாஃபியாக்களின் வழிகாட்டுதலில் கடத்தல்காரர்கள் இந்த ‘நேஷனல் ஹைவேஸில்’ டோல்கேட் அமைத்து ஒட்டுமொத்த இந்தியாவுக்கும் கடத்தல் பொருட்களை சப்ளை செய்தனர்.




அன்றைய மெட்ராஸ் இவர்களுக்கான முக்கிய கேந்திரம். பெங்களூர், எந்தவித தொந்தரவும் இன்றி சந்தித்து உரையாடுவதற்கான ஸ்தலம். சுருக்கமாக சொல்வதெனில் இந்தியாவின் முக்கிய துறைமுகங்கள் அனைத்தும் வரதராஜ முதலியார், ஹாஜி மஸ்தான், கரீம் லாலாவின் நேரடிக் கட்டுப்பாட்டின் கீழ் இயங்கின.

இவர்களுக்கு என தனி சங்கேத மொழிகள் உருவாகின. இவர்களுக்காகவே துபாயில் பன்னாட்டு வங்கிகள் தொடங்கப்பட்டன. நம்புங்கள் கடத்தல் பொருட்களுக்கான இன்சூரன்ஸ் கம்பெனிகளும் அங்கு முளைத்தன. இவர்களுக்கு என தனி கொடவுன், இந்திய தாய்த்திரு நாட்டில் மடமடவென கட்டப்பட்டன. கறுப்பு பண முதலைகளும் கடத்தல்காரர்களும் கைகோர்த்தார்கள். மாஃபியாக்களின் தளபதிகளாக மாறினார்கள்.

இப்படி ஆக்டோபாஸாக கிளை விட்டு பரவியிருந்த மாஃபியாக்களை ஒடுக்கத்தான் 'மிசா' சட்டம் 1971ம் ஆண்டு ஜூலை 2ம் தேதி அமலுக்கு வந்தது.

அப்போதைய மத்திய அரசு எந்தக் காரணம் கொண்டும் இச்சட்டத்தை எதிர்க்கட்சிகளை ஒடுக்கவோ, சாமான்ய மக்களுக்கு எதிராகவோ பயன்படுத்த மாட்டோம் என உறுதியளித்தது.

ஆனால் - அடுத்த சில ஆண்டுகளிலேயே அந்த வாக்குறுதி காற்றில் பறந்தது தனிக்கதை.

அரசியல் களத்தில் தெற்காசியாவிலும், இந்தியாவிலும் நிகழ்ந்த மாற்றங்கள் இதற்கு காரணமாக அமைந்ததை மறுப்பதற்கில்லை. 1971ல் நடந்த இந்திய - பாகிஸ்தான் போர், அதனை தொடர்ந்து உருவான பங்களாதேஷ் நாடு...

எல்லாமே இதனுடன் தொடர்புடையதுதான். ஏனெனில் வங்காள தேசத்தின் பிரதமரான ஷேக் முஜிபூர் ரஹ்மானும் அவரது குடும்பத்தை சேர்ந்த பெரும்பாலானவர்களும் திடீரென்று கொல்லப்பட்டது இந்தியாவில் அதிர்வலையை ஏற்படுத்தியது. இதை உளவுத்துறை அமைப்பான 'ரா' கூட முன்கூட்டியே மோப்பம் பிடிக்கவில்லை என்பது அன்றைய இந்திய பிரதமரான இந்திரா காந்தியை நிலைகுலைய வைத்தது. ஒருவேளை 'இந்தியா'விலும் இதுபோல் 'படுகொலைகள்' நடக்கலாமோ என அஞ்சினார். '*Relatives of Wives Association*' என 'ரா' அமைப்பை சஞ்சய் காந்தி கிண்டல் அடித்தது இதனால்தான்.

தவிர, இந்திய நிலவியலும் அப்போது உருமாறியிருந்தது. 1970 - 71ல் நாடெங்கும் நல்ல மழை. விளைச்சலும் அமோகம். ஆனால், அதற்கடுத்த ஆண்டே கடும் வறட்சி. விலைவாசி உயர்வும், அத்தியாவசிய பொருட்களின் விலையேற்றமும் ஒட்டுமொத்த தேசத்தையும் புரட்டிப்போட்டது. ஊழல் மலிந்தது. நாடெங்கும் உணவுக்கான போராட்டங்கள் அரங்கேறின.

'நீதிமன்றங்கள் ஆளும் கட்சியின் கொள்கைக்கு ஏற்பவே செயல்பட வேண்டும்' என அன்றைய இந்திய பிரதமர் வெளிப்படையாக கருத்து சொல்லும் அளவுக்கு நீதிமன்றமும் ஆளும் தரப்பும் முரண்பட்டு நின்றன. இதன் உச்சமாக 1975ம் ஆண்டு ஜூன் 12ம் தேதி, அலகாபாத் உயர்நீதிமன்றம் அளித்த தீர்ப்பை சொல்லலாம். அப்போதைய இந்திய பிரதமர் தேர்தலில் ஊழல் செய்தார் என்றும், எனவே அவர் வெற்றி பெற்றது செல்லாது என்றும், அடுத்த ஆறு ஆண்டுகளுக்கு தேர்தலில் நிற்க அவருக்கு தகுதியில்லை என்றும் தீர்ப்பு வழங்கியது. இதனை அடுத்துத்தான் இந்தியாவில் அவசர நிலை பிரகடனம் அறிவிக்கப்பட்டது. இவை எல்லாம் இந்த நூலுக்கு தொடர்பில்லாத விஷயம் என்பதால் அதை எல்லாம் ஸ்கிப் செய்துவிடலாம்.

புரிந்துகொள்ள வேண்டிய விஷயம் இரண்டு. ஒன்று, 'மிசா'வின் சட்டங்கள் அடிக்கடி திருத்தப்பட்டு எந்த நோக்கத்துக்காக அது அமல்படுத்தப்பட்டதோ அதற்கு நேர் எதிரான கட்டத்துக்கு அது நகர்ந்தது என்பது.

அடுத்தது, 'மிசா' சட்டத்தால்தான் ஹாஜி மஸ்தான் கைது செய்யப்பட்டார் என்பது.

தாவூத் இப்ராஹிமின் முகத்தில் நிரந்தரப் புன்னகையை ஒட்ட வைத்தது இந்தக் கைதுதான்.

# 48

அவசியம் இந்த விஷயத்தை பார்த்துத்தான் ஆகவேண்டும். ஏனெனில் இப்போது பார்க்காமல் வேறெப்போதும் அதைக் குறித்து கவனிக்க முடியாது.

அது, ஹாஜி மஸ்தான் கைது தொடர்பானது. ஒரு சாரார் 'மிசா' சட்டத்தின் கீழ்தான் அவர் கைது செய்யப்பட்டதாக சொல்கிறார்கள்.

இன்னொரு சாரார் இல்லை... இல்லை... 'மிசா' அமலுக்கு வந்தபோது அவர் தலைமறைவாகிவிட்டார். அதன் பிறகு வந்த 'காபிபோசா'தான் அவரை பொறியில் சிக்கவைத்து சிறையில் அடைத்தது என்கிறார்கள்.

இந்த இரண்டில் எது உண்மை?

தெரியவில்லை. ஆனால், 'மிசா'வுக்கு அடுத்து 'காபிபோசா' சட்டம் இயற்றப்பட்டு அது அமலுக்கு வந்த பிறகே கடத்தல்காரர்களும் மாஃபியாக்களும் ஒடுக்கப்பட்டார்கள் என்பது வரலாறு.

மட்டுமல்ல, 'மிசா'வின் கீழ் மஸ்தான் கைதானதாக சத்தியம் செய்பவர்கள் கூட, 'காபிபோசா'வை மறுக்கவில்லை. 90 நாட்கள் 'மிசா'வின் கீழ் சிறையில் அடைக்கப்பட்ட ஹாஜி மஸ்தான், அடுத்த இரண்டு வருடங்களுக்கு ஜாமீன் கூட கிடைக்காமல் இருந்ததற்கு காரணம் 'காபிபோசா'தான் என ஒப்புக்கொள்கிறார்கள். இத்தனைக்கும் மஸ்தானின் ஜாமீனுக்காக வழக்காடியவர் அன்றும் இன்றும் பிரபல வழக்கறிஞராக இருக்கும் ராம் ஜெத்மலானி!

எனவே, 'காபிபோசா'வின் கீழே மஸ்தான் கைது செய்யப்பட்டதாக கருதுவதில் பிழையொன்றுமில்லை. அந்தப் பார்வையிலேயே இந்த அத்தியாயத்தையும் பார்க்கலாம். இதற்கு 'வானதி' பதிப்பகம் சார்பாக வெளிவந்த - சி.வி.நரசிம்மன் எழுதிய - 'மூன்றாவது கண்: காவல் புலனாய்வுத் துறையிலிருந்து ஒரு பார்வை' என்னும் நூல் பெருமளவு உதவவும் செய்கிறது (முதல் பதிப்பு: 1996).

சுதந்திரம் பெற்றதும் இந்திய அரசு நடத்திய முதல் தேர்வின் வழியாக 1948ல் இவர் இந்திய காவல் பணியில் (Indian Police Service) நியமிக்கப்பட்டவர் என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் அந்த நூலின் 10வது சேப்டரை (பக்கம் 79 முதல் 87 வரை) அப்படியே இங்கு காபி பேஸ்ட் செய்யலாமா?

பம்பாய் ஒரு காலத்தில் கடத்தல்காரர்களின் தொழில் கேந்திரமாக இருந்துவந்தது எல்லோருக்கும் தெரியும்.

மக்கள் தொகை மிகுந்த, போக்குவரத்து வசதிகள் மிக்க, தொலைத் தொடர்பு வழிவகைகளுக்குச் சிறந்த, எல்லாவற்றுக்கும் மேல் பரந்த கடற்கரையைக் கொண்ட பம்பாயைத்தலைமை அகமாகக் கொண்டு, பலர் அன்று ஏகபோகமாகக் கடத்தல் தொழில் நடத்தி வந்தார்கள்.

*இந்தத் தொழிலின் பின்னணியில் சில முக்கிய நபர்கள் இருந்தார்கள். அவர்களின் பெயர்கள் அடிக்கடி கஸ்டம்ஸ் இலாகாவின் fileகளில் குறிப்பிடப்பட்டு வந்தன. மூன்று பேர் அதில் மிக முக்கியமானவர்கள். ஹாஜி மஸ்தான், குஜராத்தை சேர்ந்த பாக்கியா (BAKIA), குஜராத்தை சேர்ந்த இன்னொரு ஆள் - பெயர் நினைவுக்கு வரவில்லை.*

*இம்மூவரின் அட்டகாசம் அன்று அரசுக்கு பெரும் தலைவலி. கையாட்களையும் ஏஜென்ட்களையும் கொண்டு, வெகு ரகசியமாகவே இவர்கள் 'தொழில்' நடக்கும். பின்னணியில் மட்டுமே இயங்கும் இவர்களை சட்டத்தின் பிடியில் கொணர்ந்து தண்டிப்பது சாத்தியமில்லாமலிருந்தது. காரணம், கிடைக்கிற ஆதாரங்களைக் கொண்டு, அந்த கையாட்களைத்தான் மடக்க முடியுமே தவிர, 'தலைவர்கள்' தப்பிவிடுவார்கள். 'மிசா' போன்ற வலுவான சட்டங்கள் கூட, பொதுஜன அமைதிக்குப் பங்கம் விளைவிப் போரை அடக்க உதவுமே தவிர, 'கடத்தல்' விஷயத்தில் உதவாது.*

*வேறென்ன செய்து இவர்களைப் பிடிப்பது? கள்ளக் கடத்தலால் கறுப்புப் பணப் புழக்கம் அதிகரிக்கிறது. தவிர, அந்நிய செலாவணி இருப்பு பெருமளவில் பாதிக்கப்பட்டு நாட்டின் பாதுகாப்புக்கே இடைஞ்சல் உருவாகிறது. ஆக, நம் அரசியல் சாசனப்படி 'கடத்தலை தடுக்க பிரத்யேகமாக ஒரு தடுப்புக் காவல் சட்டம் உருவாக்கலாம்' என்று சட்ட வல்லுநர்கள் சொன்னார்கள்.*

*சாதாரணமாக கடத்தல் போன்ற பொருளாதாரக் குற்றங்களைக் கவனிக்க வேண்டிய பொறுப்பு, நிதித்துறையினுடையதுதான். ஆனால், இது வெளியே தெரியாமல், மிக ரகசியமாகச் செயல்படுத்த வேண்டிய விஷயம் என்பதால், பிரதமர் இந்திராகாந்தி, இந்தத் தடுப்புக் காவல் சட்டத்தைக் கொண்டு வந்து செயல்படுத்தும் பொறுப்பை, உள்துறை வசம் ஒப்படைத்தார்.*

*உள்துறைச் செயலாளர் முகர்ஜி, கூடுதல் செயலர் சீனிவாசவரதன், இணைச் செயலரான நான், தவிர பிரதமரின் நேரடிச் செயலாளர். எங்கள் நால்வரைத் தவிர இப்படி ஒரு சட்டம் வரப் போகிற செய்தி - உள்துறையிலேயே கூட வேறு யாருக்கும் தெரியாது!*

*நாங்கள் செயல்படத் தொடங்கினோம். 'மிசா'வைவிட பலமான, சக்திவாய்ந்த ஒரு சட்டத்தைக் கொண்டுதான் கடத்தல்காரர்களை ஒடுக்க முடியும் என்று தெரிந்தவுடன் 'COFEPOSA' கொண்டு வரப்பட்டது. மிக ரகசியமாக. Conservation of foreign exchange and prevention of smuggling activities Act என்கிற மிக நீளமான பெயரின் சுருக்கம்தான் 'COFEPOSA'.*

*இந்த 'COFEPOSA' வின்படி, கடத்தல் தொழிலில் ஈடுபட்டிருப்பதாக நாம் சந்தேகிப்பவரை கைது செய்து, கோர்ட் விசாரணை இன்றி, தடுப்புக் காவலில் ஓராண்டு வரை சிறை வைக்க முடியும்!*



இப்படி 'வசதிகள்' மிக்க ஒரு சட்டம் வரப் போகிறது என்பதை வெளியே தெரியவிடாமல், நாங்கள் நால்வர் மட்டும் செயல்பட்டு, மிக ரகசிய மாக வைத்திருந்தோம். காரணம், மற்ற சட்டங்கள் போல செய்தித்தாள்களில், இதர மீடியாக்களில் இதுவும் அறிவிக்கப்பட்டு விட்டால், பட்சிகள் பறந்துவிடுமே?

செப்டம்பர் 1974.

பிரதமர் ஒப்புதல் பெற்று குடியரசுத் தலைவரின் அவசரப் பிரகடனம் மூலம் திடீரென்று ஒருநாள்'COFEPOSA' வை அமலுக்கு வரச் செய்தோம். நாடெங்கிலும் உள்ள கடத்தல் புள்ளிகள் இரவோடு இரவாக கைது செய்யப்பட்டனர்.

மிக முக்கியமான அந்த இரு குஜராத் கடத்தல்காரர்களும் உடனே கைது செய்யப்பட்டனர். ஹாஜி மஸ்தான் மட்டும் தப்பித்து விட்டார்.

எங்களுக்கு சற்று ஏமாற்றம்தான். இவர்கள் கைதாகிவிட்ட விஷயம் எப்படியோ தெரிந்து, மஸ்தான் பம்பாயை விட்டு நீங்கி விட்டது தெரியவந்தபோது, எல்லா மாநிலங்களுக்கும் அவசரத் தகவல் பறந்தது. வேட்டை முடுக்கிவிடப்பட்டது. நாட்டிலிருந்து வெளியேறுவதற்கான கடல், தரை, விமான வழிப்பாதைகள் அனைத்திலும் காவல் துறையினரைக் குவித்தோம்.

பம்பாயை விடுத்தால், மஸ்தானின் அடுத்த புகலிடம் - உள்நாட்டில் - பெங்களூராக இருக்கலாம் என்று எங்களுக்கு தகவல் கிடைத்தது. பெங்களூர் காவல் துறையை உஷார்படுத்திவிட்டுக் காத்திருந்தோம்.

முன்னதாக உள்துறைச் செயலாளர் என்.கே.முகர்ஜி, ஒலிம்பிக் பாஷையில் என்னைக் கேட்டது அடிக்கடி ஞாபகத்துக்கு வந்து கொண்டிருந்தது.

"என்ன நரசிம்மன்! குஜராத் கடத்தல் மன்னர்கள் இருவரைக் கைது செய்து, வெண்கல, வெள்ளி மெடல்கள் வாங்கிவிட்டீர்கள். தங்கமெடல் எப்போது வாங்கப்போகிறீர்கள்?"

நான் எதிர்பார்த்தது போலவே, பெங்களூர் போலீசார், மஸ்தானை ஒரு வாரத்திற்குள் கைது செய்துவிட்டனர். தகவல் வந்தவுடன் முகர்ஜிக்கு போன் செய்தேன்.

"சார், தங்கமெடல் கிடைத்துவிட்டது!"

அந்தச் சட்டம் கொண்டு வந்து, செயல்படுத்தி, அன்று பம்பாயில் கடத்தலை பெருமளவு ஒடுக்க முடிந்ததற்கு, நாங்கள் நால்வரும் இணைந்து ஒரே கருத்துடன் செயல்பட்டதுதான் முக்கியக் காரணம்.

குடியரசுத் தலைவரின் அவசர பிரகடனமாக முதலில் வெளிவந்த 'COFEPOSA', பிறகு பார்லிமென்ட்டில் சட்டமாக இயற்றப்பட்டது. அதுவரை உள்துறை கவனித்துவந்த இவ்விஷயத்தைப் பின் முறைப்படி நிதித்துறை ஏற்றுக்கொண்டு, இன்றுவரை கவனித்து வருகிறது.

'COFEPOSA' பற்றிச் சொல்லும்போது, இதே போன்ற இன்னொரு சட்டம் கொண்டுவரப்பட்ட சூழலை விவரிக்கத் தோன்றுகிறது.

அது, FCRA என்கிற Foreign Contribution Regulation Act. 1976ல் கொண்டு வரப்பட்ட இச்சட்டம், வந்த புதிதில் மிகப் பரபரப்பாகப் பேசப்பட்ட ஒன்று. காரணம், வெகு நுட்பமானது.

1960களின் பிற்பகுதியில் ஏராளமான வெளிநாட்டுப் பணம் நம் நாட்டில் நுழைந்து, இங்குள்ள சில அரசியல் கட்சிகளுக்குக் கிடைத்திருப்பதாக பரவலாக, பலமான வதந்தி உலவ ஆரம்பித்தது.

அந்நிய சக்திகள் மூலம் இங்கே பணம் பெறப்படுகிறது; அதுவும் அரசியல் கட்சிகளில் என்றால் - விஷயம், தேசத்தின் சுய மரியாதைக்கு பங்கம் விளைவிக்கக் கூடியது. தவிர, நாட்டின் பாதுகாப்புக்கே ஆபத்து விளைவிக்கக் கூடியது! எந்த ஒரு சுதந்திர நாடும் இதை அனுமதிக்காது.

அந்த வகையில், இந்த விவகாரம் பார்லிமென்ட்டில் வெடித்த போது, உள்துறை அமைச்சர், ''இன்டலிஜென்ஸ் ப்யூரோ இதனை விசாரித்து, எந்த அளவுக்கு அயல்நாட்டுப் பணம் நம் நாட்டில் ரகசியமாக நுழைந்து, அரசியல் கட்சிகளால் பெறப்பட்டிருக்கிறது என்பதை உடனே கண்டறிந்து, அறிக்கை அளிக்கும்; அதன் பேரில் மேல் நடவடிக்கைகள் தொடங்கப்படும்'' என்று அறிவித்தார்.

அதன்படி, ஐபியின் ரகசியப் புலனாய்வு தீவிரமாக நடக்க ஆரம்பித்து, மிக விரைவில் அறிக்கை தயாரானது! அயல்நாட்டுப்

பணம், நம் நாட்டு அரசியலில் புகுந்து விளையாட ஆரம்பித்திருப்பது வெட்டவெளிச்சமானது.

உடனே இதைக் கவனித்தாக வேண்டிய அவசியத்தை உணர்ந்து, கொண்டு வரப்பட்டதுதான் அந்நியச் செலாவணி கட்டுப்பாட்டுச் சட்டம். சுருக்கமாக FCRA. இந்தச் சட்டத்தை வடிவமைக்கும் பணியை உள்துறையில் நான் ஏற்றேன். அது நான் உள்துறையில் சேர்ந்த புதிது.

ஆயினும் மாநில போலீஸ் துறையில் இருந்தவனாதலால் சட்ட ஒழுங்கு முதல் கடத்தல், கொலை, கொள்ளை வரை, பலவிதமான குற்றங்களையும் எதிர்கொண்ட அனுபவம் - field experience என்பார்கள் - இருந்ததால் அந்தச் சட்ட வடிவமைப்புப் பணியிலும் என்னால் விரைவாகச் செயல்பட முடிந்தது.

எமர்ஜென்சிக்கு முன்பு கொண்டு வரப்பட்டு, எமர்ஜென்சி சமயம் அமல்படுத்தப்பட்ட FCRA சட்டப்படி, வெளிநாட்டிலிருந்து பணம் பெறுவதை முழுவதுமாகத் தடைசெய்யாவிட்டாலும், ஓரளவுக்குக் கட்டுப்படுத்த முடிந்தது. இந்த வகையில், இது தொடர்பான நபர்களை மூன்று பிரிவாகப் பிரித்தோம்.

1. எக்காரணம் கொண்டும் வெளிநாட்டு நிதி ஏற்கக் கூடாதவர்கள்.

2. முறையான அரசு அனுமதிக்குப் பின் ஏற்கக் கூடியவர்கள்.

3. ஏற்றுக்கொண்டபின், அரசுக்கு அறிவிக்கக் கடமைப் பட்டவர்கள்.

அரசியல் கட்சிகள், கட்சி நிர்வாகிகள், எம்.பி.க்கள், எம்.எல்.ஏ.க்கள், நீதிபதிகள், பத்திரிகைத் துறையினர், இதர அனைத்து அரசு அதிகாரிகளும் முதல் பிரிவில் அடங்குவர். அதாவது, எக்காரணம் கொண்டும் வெளிநாட்டிலிருந்து இவர்கள் எந்த வகையிலும் பண உதவி பெறக்கூடாது.

இரண்டாவது பிரிவில், அரசியல் நோக்கம் கொண்ட - ஆனால், அரசியலில் நேரிடையாக ஈடுபடாத நிறுவனங்கள் அடங்கும். இந் நிறுவனங்கள் யாவை என்று அவ்வப்போது மத்திய அரசு பிரகடனம் செய்யும்.

கல்வி நிறுவனங்கள், அறக் கட்டளைகள் போன்றவை மூன்றாவது பிரிவைச் சேருகின்றன. அதாவது, நிதி பெற்றபின் தகவல் தர வேண்டியவை.

இப்படி சட்டம் வகுக்கப்பட்டு, செயல்பட ஆரம்பித்தவுடன் நல்ல பலன் இருந்தது.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் அமைச்சர்களுக்கு செயலகத்தின் உயர்மட்ட அதிகாரிகள்தான் மிகப் பெரும் உதவிபுரிபவர்களாக இருப்பார்கள்.

ஒரு பிரச்னையை அரசியல் ரீதியிலும் நிர்வாக ரீதியிலும் எப்படியும் அணுகி, மிகத் துல்லியமான தீர்வுகளைக் கண்டறிந்து

*நீதி, நேர்மை, பொதுநலம் இவைகளுக்குப் பங்கம் ஏற்படாமல் செயல்படச் செய்பவர்கள் செயலாளர்கள்தான்!*

*படித்து முடித்தாயிற்றா? ஓ.கே. இதுதான் விஷயம். 'மிசா'வோ - 'காபிபோசா'வோ - ஹாஜி மஸ்தான் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டார்.*

*எனில், வரதராஜ முதலியாரும், கரீம் லாலாவும், தாவூத் இப்ராஹிமும் இந்த 'மிசா' - 'காபிபோசா' காலங்களில் என்ன ஆனார்கள்?*

## 49

பெட்டிப் பாம்பாக அடங்கியிருப்பார்கள் என்றுதானே நினைக்கிறீர்கள்? அதுதான் இல்லை.

இத்தனைக்கும் சுனாமியாக ‘மிசா’வும், ‘காபிபோசா’வும், ‘தேசிய பாதுகாப்பு சட்டமும்’ இந்தியா முழுக்க பாயத்தான் செய்தது. எனவே கரீம் லாலாவும், வரதராஜ முதலியாரும், தாவூத் இப்ராஹிமும் மட்டும் என்ன நிம்மதியாக மூன்று வேளை சாப்பிட்டு, உறங்கி ஹாய் ஆகவா இருந்திருப்பார்கள் என்று தோன்றத்தான் செய்யும்.

ஆனால் - ஒரேயடியாக அப்படித்தான் நடந்தது என்று சொல்ல முடியாது.

கோழி அமுக்குவது போல் இவர்களையும் பிடித்து சிறையில் அடைக்கத்தான் செய்தார்கள். பம்பாயில் உள்ள ஆர்தர் ரோடு ஜெயில், தானே மத்திய சிறை, புனேயில் இருந்த எரவாடா, அவுரங்காபாத்தில் இருந்த ஹர்சூல்... என்ன அனைத்துச் சிறைச்சாலைகளும் கடத்தல்காரர்களாலும், வழிப்பறி திருடர்களாலும், லோக்கல் - நேஷனல் தாதாக்களாலும் நிரம்பிவழியத்தான் செய்தன.

இந்திய வரலாற்றிலேயே முதல் முறையாக பாராளுமன்றத்தில் ஹாஜி மஸ்தான், யூசுஃப் படேல், சுகூர் பாகியா ஆகிய கடத்தல்காரர்களின் பெயர்கள் உச்சரிக்கவும்பட்டன.

எமர்ஜென்சியை இந்திய பிரதமரான இந்திராகாந்தி காலில் வெந்நீரை கொட்டிக்கொண்டது போல் அவசர அவசரமாக கொண்டு வந்ததற்கு பின்னால் ஆயிரம் அரசியல் காரணங்கள் இருக்கலாம். இருக்கிறது. எதிர்க்கட்சிகளை பழிவாங்க ‘மிசா’ பயன்படுத்தியிருக்கலாம். பயன்படுத்தியிருக்கிறார்.

என்றாலும் தேசம் முழுக்க கடத்தல்காரர்களும், மாஃபியாக்களும், கறுப்புப் பண முதலைகளும் இதனால் ஒடுக்கப்பட்டார்கள் என்பதை மறுப்பதற்கில்லை.

ஙிut ... இதனால் அதிகமும் பாதிக்கப்பட்டவர் ஹாஜி மஸ்தான்தான். ‘மிசா’வும், ‘காபிபோசா’வும் அடுத்தடுத்து அவர் மீது பாய்ந்தன. இனி வெளியே செல்லவே முடியாது என்று அவர் துவளும் அளவுக்கு சிறை வாழ்க்கை தொடர்ந்தது.

இந்த நிலை கரீம் லாலாவுக்கும், வரதராஜ முதலியாருக்கும் ஏற்படவில்லை.

ஏனெனில் ‘அரசாங்க ரிக்கார்ட்’படி இருவரும் கடத்தல்காரர்கள் அல்ல. வெறும் ‘கூரியர் சர்வீஸ்’ நடத்தியவர்கள்தான். எனவே ‘மிசா’வும், ‘காபிபோசா’வும் இவர்கள் மீது பாயவேயில்லை.

பதிலாக ‘தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்’ சிறை வாழ்க்கையை அனுபவித்தார்கள். இந்த ஒரு சட்டத்திலேயே கரீம் லாலா

துவண்டுவிட்டார். போதும் போதாததற்கு காவலர்கள் தோன்றும் போதெல்லாம் இவரை அழைத்துச் சென்று லத்தியால் மசாஜ் செய்தார்கள். எனவே வாழ்க்கையை அஸ்தமித்துவிட்டதாகத்தான் இருவரும் நினைத்தார்கள். இந்த வருத்தத்தில் தாடி வளர்த்தாரா என்பதற்கான குறிப்புகள் கிடைக்காததால் திட்டவட்டமாக அப்படி சொல்ல முடியவில்லை. ஒருவேளை வளர்த்திருக்கலாம். விட்டத்தை வெறித்தபடி இரவை கழித்திருக்கலாம். யார் கண்டது?

ஆனால், வரதுபாய் அப்படியில்லை. பலே கில்லாடி. தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் சிறைக்கு சென்றவர் செய்த முதல் காரியமே தன்னைப்போல் யார் யாரெல்லாம் கைதாகி இருக்கிறார்கள் என்பதை கணக்கெடுத்ததுதான்.

ஒவ்வொருவரும் இந்தியாவின் எந்தப் பகுதியை சேர்ந்தவர்கள்... எந்த கடத்தல்காரர்களுக்கு தளபதியாக செயல்பட்டவர்கள்... எந்த 'சரக்கை' கூரியர் சர்வீஸ் செய்தவர்கள்... அவர்களது கஜபுஜ பராக்

கிரமம் என்ன... என்பதையெல்லாம் 'ஏ' டூ 'இசட்' தொகுத்தார். அதிலிருந்து சிலரை மட்டும் தேர்ந்தெடுத்தார்.

பக்குவமாக அவர்களை அணுகி பேசினார்.

தங்களுக்குள் ஒரு சிண்டிகேட்டை உருவாக்கினார்.

எதற்கு?

'பிசினஸை' தொடரத்தான்!

மிகைப்படுத்தப்பட்ட செய்தி எல்லாம் இல்லை. உண்மையிலேயே வரதராஜ முதலியார் தேசிய பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் அடைக்கப்பட்டபோது அப்படித்தான் செய்தார்.

முதுகெலும்பே உடைந்ததுபோல் ஹாஜி மஸ்தான் - கரீம் லாலா உட்பட ஒட்டு மொத்த இந்தியாவிலும் இருந்த கடத்தல்காரர்களும் அவர்களது ஏஜென்ட்டுகளும் துவண்டபோது - துடிப்புடன் செயல்பட்டவர் சாட்சாத் 'நம்ம' வரதுபாய்தான். சிறையில் 'சிண்டிகேட்' அமைத்தவர், கம்பிகளை எண்ணியபடி பொழுதை கழிக்கவில்லை.

பதிலாக தேங்கியிருந்த கடத்தல் சரக்குகளை (கள்ள)சந்தைக்கு எப்படி கொண்டு செல்வது என்று ஆராய்ந்தார். அதன்படியே 'வெளி' ஆட்கள் மூலம் செய்யவும் செய்தார்.

என்ன... தங்கம் மாதிரியான பெரிய பெரிய 'பொருட்களை' அவரால் 'உரிய' இடத்தில் சேர்க்கவில்லை. ஜட்டி, வாட்ச் மாதிரியான அயிட்டங்களை மட்டும் பக்காவாக மார்க்கெட்டுக்கு கொண்டு வந்தார். 'வரதுபாய் கிட்ட ஒரு வேலையை ஒப்படைச்சா போதும். எவ்வளவு கிடுக்கிப்பிடி இருந்தாலும் அதை முடிச்சுக் கொடுத்துடுவார்' என்ற பெயரை தக்கவைத்துக் கொண்டார்.

இருந்தாலும் இது ஆலை இல்லா ஊரில் இலுப்பைப் பூ சர்க்கரை கதைதான்.



மொத்தத்தில் கடத்தல்காரர்கள் - மாஃபியாக்கள் - ஏஜென்ட்டுகள் - கூரியர் சர்வீஸ் ஆட்கள் ஒடுக்கப்பட்டார்கள். அவ்வளவுதான்.

எமர்ஜென்சி அமலுக்கு வந்த ஒரு வாரத்தில் பம்பாய் காவல்துறை கமிஷனராக நியமிக்கப்பட்ட எஸ்.வி.தன்கிவாலா, உள்துறை அமைச்சகத்துக்கு எழுதிய கடிதத்தில் - *'The anti smuggling drive made*

*the business of smuggling goods not only hazardous but also expensive. As many as 288 smugglers, including their top men like Haji Mastan and Yusuf patel, were detained and the property of 177 smugglers was attached ...'*என்று குறிப்பிட்டது நூற்றுக்கு நூறு உண்மை.

ஹாஜி மஸ்தானும், கரீம் லாலாவும் ஏறக்குறைய இரண்டு ஆண்டுகள் சிறையில் வாடினார்கள்.

கிட்டத்தட்ட தங்கள் வாழ்க்கையே முடிவுக்கு வந்துவிட்டதாக கருதினார்கள். புறச்சூழலும் அதை மெய்ப்பிக்கும் விதமாகத்தான் இருந்தன.

இனி அரசு துருப்புகளை எதிர்க்க முடியாது என்பதை உணர்ந்தவர்கள் இனி வெளிக்காற்றை சுவாசிக்கவே முடியாதோ என அஞ்சினார்கள்.

எமர்ஜென்சி காலம் முழுக்க சிறைக் கம்பிகளை எண்ணுவதைத் தவிர அவர்களுக்கு வேறு ஆப்ஷன் கிடைக்கவில்லை.

தேர்தல் நடந்த மத்தியில் ஆட்சி மாற்றம் ஏற்பட்ட பிறகுதான் கண்காணா தொலைவில் சின்னதாக வெளிச்சம் தெரிந்தது. அதை பயன்படுத்திக்கொள்ள முடிவு செய்த ஹாஜி மஸ்தானும், கரீம் லாலாவும் தங்களுக்கு நெருக்கமானவர்களுடன் கலந்தாலோசித்து ஒரு முடிவுக்கு வந்தார்கள்.

அதை ஜெயப்ரகாஷ் நாராயணன் மூலமாக அன்றைய பிரதமர் மொரார்ஜி தேசாய்க்கும் தெரியப்படுத்தினார்கள்.

'திருந்தி வாழ முடிவு செய்கிறோம். இனி, எந்தக் காரணம் கொண்டும் கடத்தல் தொழிலில் ஈடுபட மாட்டோம்...' என கைப்பட எழுதிக் கொடுத்தார்கள்.

மத்திய அமைச்சரவை இதை ஏற்றது. இருவரும் விடுவிக்கப்பட்டார்கள்.

ரைட்.

வரதுபாய்?

முன்பே சொன்னபடி அவர் லுலுலாய்க்குதானே கைது செய்யப்பட்டார். 'பெரிய' குற்றங்கள் எதுவும் அவர் மீது இல்லாததால் கைதான சில மாதங்களிலேயே ஜாமீன் கிடைத்தது. வெளியே வந்தார்.

தாவூத் இப்ராஹிம்?

பொடிப்பயல். அப்படித்தான் அன்றைய மாநில - மத்திய நிர்வாகம் நினைத்தது. எனவே தாவூத்தை 'ஜீப்பில்' அவர்கள் ஏற்றவில்லை. தாவூத்தும் தானாக ஜீப்பில் ஏறி, 'நானும் ரவுடிதான்...' என கூக்குரலிடவில்லை. அண்ணன் சபீருடன் சேர்ந்து 'ரொம்ப ரொம்ப சின்ன கேஸில்' கைதான தாவூத், கைதான வேகத்தில் சிறையை விட்டு வெளியே வந்தான்.

இது சரியா? ஒருமையில் அழைக்கலாமா?

'வந்தார்' என மரியாதையுடன் குறிப்பிடுவதுதானே முறை?

சோம்பல் முறித்தபடி சிறையை விட்டு தாவூத் வெளியே வந்தபோது 'இந்த' குழப்பம் இருக்கவே செய்தது.

எண்பதுகளில் வெளிவந்த தமிழ்ச் சினிமாவை நினைவில் கொண்டு வாருங்கள். ரஜினியோ, கமலோ சிறுவனாக சிறைக்கு செல்வார்கள்.

கட் - டு 'மத்திய சிறைச்சாலை' என்ற போர்ட் மிளிரும். மதில் உயர கதவுக்குள் அடங்கியிருக்கும் சின்னக் கதவை வாசலில் துப்பாக்கியுடன் நிற்கும் வயதான காவலர் திறப்பார். குனிந்தபடி இளைஞனாக வெளியே வருவார்கள்.

ரஜினி என்றால் பேன்ட்டுக்கு மேல் முழுக்கை பனியன். சட்டையை கழுத்தில் சுற்றியிருப்பார். கமல் என்றால் முழுக்கை சட்டையை பேன்ட்டுக்குள் 'இன்' செய்திருப்பார்.

வெளியே வந்ததும் வானத்தை பார்ப்பார்கள். வலப்பக்கமும் இடப்பக்கமும் தங்கள் பார்வையை திருப்புவார்கள். பிறகு விசிலடித்தபடி தங்களுக்காக வாசலில் காத்திருக்கும் நண்பர்களை நோக்கிச் செல்வார்கள். கட்டிப்பிடித்து பஞ்சு அருணாச்சலம் அல்லது தேவர் கதை இலாகா எழுதிய வசனத்தை பேசுவார்கள்.

கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் தாவூத்தும் சபீரும் அப்படித்தான் வெளியே வந்தார்கள். வாசலில் அவர்களுக்காக காத்திருந்த அடியாட்களை கட்டிப்பிடித்தார்கள். தங்கள் இடம் நோக்கி சென்றார்கள்.

அரசாங்க ரிக்கார்ட் படி தாவூத் 'சின்னப் பையன்'. 'பெட்டி' கேஸ் தவிர பெரிதாக அவன் மீது ஏதுமில்லை. சராசரி உயரம். ஆஜானுபாகுவான தோற்றமும் இல்லை. எனவே மாஃபியாவாக அவன் உருவெடுப்பான் என்று யாரும் நினைக்கவில்லை. எனவே 'ஒருமையிலேயே' விளித்தார்கள்.

ஆனால் - இனி, பம்பாயை ஆளப்போவது, தான்தான் என்பது அவனுக்கு தெரிந்திருந்தது. ஹாஜி மஸ்தான், கரீம் லாலாவுக்கு ஏற்பட்ட கதி அவனது நம்பிக்கையை வலுப்படுத்தியது. வரதராஜ முதலியார் வயதானவர். அதிக நாட்கள் தாக்குப் பிடிக்க மாட்டார். எனவே பம்பாய், இனி தன் ஆளுகைக்கு உட்பட்டதுதான் என அந்த இருபத்தோரு வயது இளைஞன் தீர்மானமாக நினைத்தான்.

அவன் அடியாட்களும் அப்படியே நம்பினார்கள்.

அந்த கனவு மயக்கத்திலேயே தன் வீட்டுக்கு சென்றான். அப்பாவின் கோபத்தை பொருட்படுத்தாமல், அம்மாவின் அழுகையை லட்சியம் செய்யாமல் வயிறு முட்ட சாப்பிட்டான். படுக்கையில் விழுந்தான். உறங்கினான்.

தனக்கொரு எதிரி, ஏறக்குறைய தன் வயதிலேயே, முளைத்திருக்கிறான் என்பதை அப்போது தாவூத் அறியவில்லை.

அது, 1977ம் ஆண்டின் குளிர்காலம்.

பம்பாயின் இன்னொரு மூலையில் இருந்த அந்தக் கடை அடித்து நொறுக்கப்பட்டிருந்தது. யார் செய்தார்கள்? விடை தெரியாமல் மக்கள் குழம்பி நின்றார்கள்.

குறிப்பாக ஒரு மர மேஜை - நாற்காலி. அதில் அமர்ந்தபடிதான் அனைத்து கட்டப்பஞ்சாயத்துகளையும் ஒரு மனிதன் அதுவரை நடத்தி வந்தான். குடும்பங்கள் பிரியவும், தற்கொலை செய்து கொள்ளவும், நடு ரோட்டுக்கு வரவும் அந்த மேஜை - நாற்காலிதான் காரணம். கந்துவட்டியில் பணம் கொடுக்கப்பட்டதும் பெறப்பட்டதும் அங்கிருந்துதான். அது டீ கடை பென்ச் மட்டுமல்ல. ஓர் அதிகாரத்தின் குறியீடு. அப்படிப்பட்ட மேஜையும், நாற்காலியும்தான் இரு பாகங்களாக பிளக்கப்பட்டிருந்தன. அருகிலேயே அதுவரை அந்த மேஜை - நாற்காலியை சொந்தம் கொண்டாடிய மனிதன் இறந்து கிடந்தான்.

தப்பு கொலை செய்யப்பட்டிருந்தான். இந்த செயலை செய்த இளைஞனுக்கு அப்போது அதிகபட்சம் வயது இருபத்தியிரண்டு தான் இருக்கும். பின்னாளில் தாவூத்துக்கு சிம்ம சொப்பனமாக விளங்கப் போகிறவன் இவன்தான்.

அவன் பெயர், அருண் குலாப் அஹிர். சுருக்கமாக அருண் காவ்லி.

50

காக்காய் உட்கார பனம்பழம் விழுந்த கதைதான்.

சரியாக சென்ற மாதம்தான் 'டேடி'

இந்திப் படத்தின் படப்பிடிப்பு தொடங்கியிருக்கிறது. முழுக்க முழுக்க அருண் காவ்லியின் வாழ்க்கையை அடியொற்றி எடுக்கப்படும் படம் அது. கதையின் நாயகனாக, அருண் காவ்லியை நினைவுப்படுத்தும் தோற்றத்தில், அர்ஜுன் ராம்பால் நடிக்கிறார். எழுதி, இயக்குபவர் கவுரவ் பவுதன்கர்.

இந்த நேரம் பார்த்துத்தான் இந்தத் தொடரில் அருண் காவ்லி அறிமுகமாகிறார்.

என்ன செய்ய... *Life is Stranger than Fiction* இல்லையா?

முழுப்பெயர், அருண் குலாப் அஹிர். 'காவ்லி' என்பது இனத்தின் பெயர். டிங்கரிங் செய்து அது ஒரு சாதி என்றும் சொல்லலாம். யாரும் தேடி வந்து அடிக்க மாட்டார்கள். 'யாதவர்களின்' உட்பிரிவு. எனவே பகவான் கிருஷ்ணருடன் தங்கள் பயோ டேட்டாவை இணைப்பதில் இவர்களுக்கு அலாதியான ப்ரியம்.

அருண் காவ்லியின் பூர்வீகம் மத்திய பிரதேச மாநிலத்தில் உள்ள கந்த்வா. பிழைப்புக்காக மகாராஷ்டிரா மாநிலத்துக்கு இடம் பெயர்ந்தவர்கள். பைகுலா பகுதியில் குடியேறியவர்கள்.

உடன் பிறந்தவர்கள் நான்கு சகோதரர்கள், இரு சகோதரிகள் என மொத்தம் ஆறு பேர். அப்பாவும், அம்மாவும் மில் தொழிலாளர்கள். மகாராஷ்டிர மாநிலத்தைசேர்ந்த பெரும்பாலான அடித்தட்டு மக்கள் 1950, 60, 70, 80களில் மில் தொழிலாளர்களாகத்தான் இருந்தார்கள். அந்தளவுக்கு அன்றைய பம்பாய் ஆலைத் தொழிலாளர்களால் நிரம்பியிருந்தது.

இதைக் குறித்து அன்றைய மார்க்சிய அறிஞர்கள் தலையணை சைசுக்கு புத்தகமாக எழுதித் தள்ளியிருக்கிறார்கள்.

ஒவ்வொரு ஆலைகளிலும் மார்க்சிய தொழிற்சங்கங்கள் வலுவாக இருந்தன. இதை முறியடிக்கத்தான் ஆளும் தரப்பு இன - மத அடையாளங்களை ஊக்குவித்தது. பால் தாக்கரேவை உயர்த்திப் பிடித்தது. சிவசேனா கட்சி உருவாகவும் அந்தக் கட்சி சார்பான தொழிற்சங்கம் வலுப்பெறவும் இந்த ஆளும் தரப்பின் பிரித்தாளும் சூழ்ச்சியே காரணம்...

என்றெல்லாம் டிரவுசர் கிழியும் அளவுக்கு கோட்பாட்டுடன் விவரித்திருக்கிறார்கள். அதற்குள் நாம் நுழைய வேண்டாம். இப்படி ஒரு 'பார்வை' இருக்கிறது என்று தெரிந்து கொண்டால் போதுமானது.

அப்படியே பொடி தூவுவது போல் ஒரு ஃப்ளாஷ் பேக்கை ரீவைண்ட் செய்வோம்.

1980களில் நுஸ்லிவாடியாவின் 'பாம்பே டையிங்'கும் திருபாய் அம்பானியின் 'விமலும்' முட்டி மோதி கட்டிப் புரண்டு...

நினைவுக்கு வருகிறதா? குட். இந்திய கார்ப்பரேட் உலகிலேயே முதல் முறையாக கொலை முயற்சி எல்லாம் அப்போது நடந்தது. இதற்கெல்லாம் கூட இரு தரப்பு மில் ஆலைகளில் நடந்த பிரச்னை அல்லது சிக்கல் அல்லது ஏதோ ஒன்றுதான் காரணம் என ஒரு பேச்சு அடிபடுகிறது.

சம்பந்தமேயில்லாமல் இந்த சைட் டிராக்கை ஓட விட காரணம், பம்பாயையும், மில் தொழிலாளர்களையும் பிரிக்க முடியாது என்பதை அழுத்தம்திருத்தமாக சொல்லத்தான். அப்படியே இந்த ஆலைத் தொழிலாளர்களைத்தான் மாஃபியாக்கள் பகடைக் காயாக பயன்படுத்தினார்கள் என்பதையும் கல்வெட்டில் பொறிக்கத்தான்.

ரைட். வண்டியை திருப்பி 'நம்ம' ரூட்டுக்கு விடுவோம்.

அப்பாவும் அம்மாவும் எவ்வழியோ, அருண் காவ்லியும் அவ்வழி.

யெஸ், 20 வயதுக்குள்ளாகவே இவரும் மகா லட்சுமியில் உள்ள 'சக்தி மில்ஸில்' தொழிலாளியானார். ஆனால், நீண்ட நாட்களுக்கு இங்கு நிலைக்கவில்லை. காரணம், தொழிலாளிக்கு உரிய திறமை இல்லாததுதான். இந்த விஷயத்தில் மனிதர் கொஞ்சம் அசடு.

எனவே 'டை கேஸ்டிங்' துறைக்கு கப்பென்று மாறினார். முதலில் கோத்ரேஜ் நிறுவனத்திலும் பிறகு பாய்ஸிலும் இந்த டிபார்ட்மென்டில் பணிபுரிந்தார்.

இங்குதான் முதன் முதலில் ஒரு ஆளுடன் மோதினார். அவர் பெயர் பாலா மபன்கர். அவரும் ஆலைத் தொழிலாளிதான். ஆனால், சிவசேனாவின் பின்புலம் உள்ளவர்.

ஆக, சிவசேனாவுக்கும் அருண் காவ்லிக்கும் தொடக்கம் முதலே ஏழாம் பொருத்தம்தான்.

அதன் விளைவுதான் இப்போது ஆயுள் தண்டனை கைதியாக இவர் சிறையில் இருப்பது.

பம்பாயின் - தப்புத் தப்பு. இந்த இடத்தில் மும்பை என்றுதான் குறிப்பிட வேண்டும் - புறநகர் பகுதியான காட்கோபரை சேர்ந்த சிவசேனா கவுன்சிலரான கமலாகர் ஜம்சான்டேகர் உட்பட 14 பேரை 2008, மார்ச் மாதம் கொடூரமாக சுட்டுக் கொன்ற குற்றத்துக்காக இந்த தண்டனையை இப்போது அருண் காவ்லி அனுபவித்து வருகிறார்.

ஸோ, சிவசேனாவுடன் அருண் காவ்லி மல்லு கட்டியதற்கு பின்னால் நெடிய வரலாறு இருக்கிறது. அது 'சும்மா' சட்டென்று தோன்றிய குமிழ் அல்ல. அதன் தொடக்கப்புள்ளி, 1970களில் மையம் கொண்டிருக்கிறது. அதாவது, பாய்ஸ் நிறுவனத்தில் தன்

சக தொழிலாளியான பாலா மபன்கருடன் மோதியதில் இருந்து ஆரம்பிக்கிறது.

ஓகேவா?

இதன் பிறகு கூடுதல் சம்பளம் கிடைக்கிறது என்பதற்காக கன்ஜுர் மார்க் பகுதியில் இருந்த 'க்ராம்டன் அண்ட் கிரீவ்ஸ்' நிறுவனத்தில் சேர்ந்தார்.

பின்னாளில் இவரது வலது கையாக மாறிய சதாசிவ் பாவ்லே என்கிற சதா மாமாவை இவர் சந்தித்தது இந்த காலகட்டத்தில்தான்.

அதை விட முக்கியமான விஷயம், ராம் நாயக்கின் அன்பை இவர் பெற்றதும், பெரும்பொழுதுகளை அவருடன் கழிக்கத் தொடங்கியதும், தாதாவாக உருவாகி மாஃபியாவாக வளர்ந்ததும் இந்த இடத்திலிருந்துதான்.

எதற்கு முறுக்கு பிழிய வேண்டும்? ஒரே வாக்கியத்தில் இப்படி சொல்லலாம்.

தன் குருவாக ராம் நாயக்கை இவர் தத்து எடுத்தது இந்த வேலை மாற்றத்துக்கு பிறகுதான்.

உண்மையில் ராம் நாயக்கை பள்ளிப் பருவத்திலிருந்தே அருண் காவ்லிக்கு தெரியும். ஆனால், நெருங்கிப் பழகியதில்லை காரணம், பள்ளியில் அருண் காவ்லிதான் சீனியர். ராம்நாயக் ஜூனியர்.

பைகுலாவில் உள்ள பக்ரி அடாவில் இருக்கும் பஞ்சாயத்து பள்ளியில்தான் இருவரும் படித்தார்கள். ஆனால், ஏழாம் வகுப்பில் இருந்தபோதே ராம் நாயக் படிப்பதை நிறுத்திவிட்டார். என்றாலும் வழியில் பார்த்தால், 'ஹாய்... ஹலோ...' சொல்வார்கள். கொஞ்சமாக புன்னகைப்பார்கள்.

நெருங்கியது கன்ஜுர் மார்க் பகுதியில் இருந்த 'க்ராம்டன் அண்ட் கிரீவ்ஸ்' நிறுவனத்தில் அருண் காவ்லி சேர்ந்த பிறகுதான்.

இதற்குள் பைகுலா பகுதியின் தாதாவாக ராம் நாயக் உருமாறியிருந்தார்.

பம்பாயின் மாஃபியா வரலாறு மட்டுமல்ல... உலக தாதாக்களின் சரித்திரமும் 'க்ளிஷே'தான். நாடறிந்த வஸ்தானதை யாரும் எதிர் பாராத சமயத்தில் ஒரு பொடியன் எதிர்ப்பான். வீழ்த்துவான். மறு கணமே தாதாவாக மாறுவான்.

'மாற்றம் ஒன்றே மாறாதது...' என்றவக்கணையாக பேசுவதெல்லாம் இந்த விஷயத்தில் பல்குத்த கூட உதவாது. குண்டூசி முனையளவுக்கு கூட மாறாமல் நடக்கும் - நடந்துகொண்டிருக்கும் - நடக்கப் போகும் நிகழ்வு - மாஃபியாக்களின் உதயம்தான்.

எவ்வளவு முக்கினாலும் இதைத் தாண்டி வேறு ஒன் லைனே கிடைக்காது. ராம் நாயக்கும் அப்படி உருவானவர்தான்.

குந்தன் டூபே, பரஸ்நாத் பான்டே, மோகன் சர்மால்கர் ஆகியோர் பைகுலா பகுதியின் மும்மூர்த்திகள். சாராய பிசினஸ் முதல்

ஆட்களை கடத்தி பணம் பறிப்பது வரை சகலமும் அந்தப் பகுதியை பொறுத்தவரை இந்த மூவரின் கைவண்ணம்தான். இவர்களின் பின்புலம் என்ன... எந்த சுபயோக முகூர்த்தத்தில் நண்பர்களாகி கூட்டாக தொழில் செய்ய ஆரம்பித்தார்கள் என்பதெல்லாம் இங்கு வேண்டாம். அந்த ரிஷி மூலத்தை பார்க்க ஆரம்பித்தால் அடுத்த யுகமே தொடங்கிவிடும்.

எனவே மூவரும் 'பிசினஸ் பார்ட்னராக' இருந்து பைகுலா பகுதியை அலற வைத்துக் கொண்டிருந்தார்கள் என்ற இடத்திலிருந்து ராம் நாயக்கின் தோற்றத்தை பார்க்கலாம்.

யானை செவியில் புகுந்த எறும்பாக, இந்த மூவருக்கும் போட்டியாக ராம்நாயக் முளைத்தார். தன் பங்குக்கு சாராய பசினஸை ஆரம்பித்தார்.

இப்படி இதுவரை அப்பகுதி மக்கள் யாரும் செய்ததில்லை என்பதால் மூவரும் ஆத்திரம் அடைந்தார்கள். ஏனெனில் குந்தன் டூபேவும், பரஸ்நாத் பான்டேவும் ஆளுக்கு ஒரு சாராய கடையுடன் கூடிய 'பாரை'க்கு நடத்தி வந்தார்கள் என்றால் - மோகன் சர்மால்கர், ஆல்கஹாலை சப்ளை செய்பவராக இருந்தார்.

இதற்கு மாறாக ராம்நாயக், சொந்தமாக 'பாருடன்' கூடிய சாராயக் கடையை நடத்தியதுடன், ஆல்கஹால் சப்ளையையும் எவர் உதவியும் இன்றி, தானே கவனித்துகொண்டார்.

இப்படி அடி மடியிலேயே கை வைத்தால் மும்மூர்த்திகளும் சும்மா இருப்பார்களா?

ஸ்கெட்ச் போட்டு ராம்நாயக்கை போட்டுத் தள்ள நாள் குறித்தார்கள்.

அதற்குள் ராம் நாயக் முந்திக் கொண்டார். நல்ல நாளாக பார்த்து குந்தன் டூபேயின் தலையை சீவினார்.

இதற்குக் காரணம், தொழில் போட்டி அல்ல. பர்சனல் வென்ஜன்ஸ்.

இந்த சம்பவம் நடப்பதற்கு சில நாட்களுக்கு முன்னர்தான் ராம் நாயக்கின் தம்பியான உமாகாந்த் நாயக்கை தனியிடத்துக்கு வரவழைத்து குந்தன் டூபே கொன்றார். ஏனெனில் இவரது தங்கையான புஷ்பா டூபேயை ராம் நாயக்கின் இன்னொரு தம்பியான அர்விந்த் காதலித்தார். இந்த நேசத்துக்கு உமாகாந்த் நாயக் துணை நின்றார்.

இந்த தனிப்பட்ட விரோதத்தைத்தான் ராம்நாயக் சமயம் பார்த்து தீர்த்துக்கொண்டார்.

எஞ்சி நின்றது பரஸ்நாத் பான்டே.

மோகன் சர்மால்கரை அவ்வளவு பெரிய ஆளாக ராம்நாயக் நினைக்கவில்லை. பரஸ்நாத் பான்டேவும், குந்தன் டூபேயும் இல்லாவிட்டால் இந்த சர்மால்கர் பல் பிடுங்கிய பாம்பு என்பதை நன்றாகவே அறிந்திருந்தார்.

*ஸோ, குந்தன் டூபேயின் கதையை முடித்த கையோடு பரஸ்நாத் பான்டேவுக்கு நாள் குறித்தார்.*

*இம்முறை தனியாக இந்த செயலை செய்ய ராம்நாயக் விரும்பவில்லை.*

*தனது நண்பர்களாக மாறியிருந்த அருண் காவ்லியையும், பாபு ரெஷிமையும் கூட்டு சேர்த்துகொண்டார்.*

*இதனை அடுத்து நடந்ததுதான் சென்ற அத்தியாயத்தின் இறுதியில் நாம் பார்த்த சம்பவம்.*

*அது, 1977ம் ஆண்டின் குளிர்காலம்.*

*பைகுலா பகுதியில் இருந்த அந்தக் கடை அடித்து நொறுக்கப்பட்டிருந்தது. குறிப்பாக ஒரு மர மேஜை - நாற்காலி.*

*அதில் அமர்ந்தபடிதான் அனைத்து கட்டப்பஞ்சாயத்துகளையும் பரஸ்நாத் பான்டே அதுவரை நடத்திவந்தார்.*

*அதைத்தான் அருண் காவ்லி சரிபாதியாக பிளந்தார். பரஸ்நாத் பான்டேவையும் கொன்றார்.*

*விவரம் அறிந்த காவல்துறை 'அப்பாடா...' என நிம்மதியடைந்தது. ஏனெனில், பரஸ்நாத் பான்டே மீது கை வைக்கமுடியாமல் போலீசார் தவித்துக்கொண்டிருந்தார்கள்.*

*என்றாலும் சட்டம் தன் கடமையை செய்ய வேண்டாமா?*

*ராம்நாயக்கையும், அருண் காவ்லியையும் கைது செய்து சிறையில் அடைத்தார்கள்.*

*ஆனால் - ஒரே மாதத்தில் அருண் காவ்லி வெளியே வந்துவிட்டார்.*

*எப்படி..? இதுவரை யாருக்கும் தெரியாது. சிறைக்குள் காவல்துறையுடன் என்ன புரிந்துணர்வு ஒப்பந்தம் செய்து கொண்டார்..? காற்றும் அறியாத பரம ரகசியம்.*

*மொத்தத்தில் கொலை குற்றத்துக்காக தேசிய பாதுகாப்பு சட்டத்தின் கீழ் கைதான அருண் காவ்லி, சில நாட்களிலேயே வெளியே வந்தார் என்பது மட்டும் உண்மை.*

*ராம்நாயக்?*

*பல மாதங்கள் சிறைக்குள்தான் இருந்தார். என்றாலும் தனிமையில் வாடவில்லை. மகிழ்ச்சியாகத்தான் பொழுதை கழித்தார்.*

*குறிப்பாக சொல்ல வேண்டுமானால் தனக்கான 'காட் ஃபாதரை' அவர் கண்டறிந்தது சிறையில்தான்.*

*அந்த 'காட் ஃபாதர்' - வரதராஜ முதலியார்.*

*இளைஞரான ராம்நாயக்கை வரதுபாய்க்கு ரொம்பவே பிடித்துவிட்டது. சிறையில் இருப்பதால் பதுக்கி வைத்திருந்த கடத்தல் பொருட்களை உரிய இடத்தில் சேர்க்க முடியாமல் திண்டாடினார்.*

*அப்போது கைகொடுத்தது ராம்நாயக்தான். அத்துடன் சிறைக்கும் இவர் அமைத்த 'சிண்டிகேட்'டுக்கும் அவர்தான் துணை நின்றார்.*

*எனவே பச்சக் என்று தன் சீடராக ராம் நாயக்கை ஏற்றுக்*

கொண்டார். சிறையிலேயே 'தொழில்' நுணுக்கங்களையும் கற்றுக் கொடுத்தார்.

ராம்நாயக் மூலமாக வரதுபாய்க்கு இன்னொரு தளபதி கிடைத்தார்.

அவர் யாரென்று சொல்லவும் வேண்டுமா?

அதே... அதே அருண்காவ்லிதான்.

இந்த முக்கூட்டுதான் பிறகு இந்து மாஃபியா *Vs* இஸ்லாமிய மாஃபியா என பம்பாயே இரண்டுபடக் காரணம் என்பதை அப்போது வரதராஜ முதலியார் உணரவில்லை.

51

சிறையிலும் வாக்கிங் செல்லும் உரிமை வரதராஜ முதலியாருக்கு இருந்தது.

அப்படி ஒருநாள் காலாற நடக்கும் போதுதான் ராம்நாயக்கை சந்தித்தார். தொடக்கம் புன்னகையில் இருந்தாலும் அறிமுகம் சாப்பிடும்போதுதான் ஏற்பட்டது.

தனதுஇளமைக்காலத்தைநினைவுப்படுத்தும் தோற்றத்துடன் ராம்நாயக் இருந்ததும், துறுதுறுவென ஓரிடத்தில் நிற்காமல் அவர் சுற்றிச்சுற்றி வந்ததும், சக தாதாக்களுடனும் மாஃபியாக்களுடனும் கலகலவென சிரித்துச் சிரித்து பேசியதும் வரதுபாயை கவர்ந்தது.

அழைத்து பேசினார். தோளில் கை போட்டபடி பயோ டேட்டாவை கேட்டார்.

எதையும் மறைக்காமல் ராம்நாயக் சொன்னார். தன் வாழ்க்கைப் புத்தகத்தின் பக்கங்களை படிக்க அனுமதி கொடுத்தார்.

ஒட்டிக்கொண்டார்கள். கைகோர்த்தபடி வலம் வந்தார்கள். சிறையில் இருந்தபடியே வரதுபாய் பழையபடி 'கூரியர்' சர்வீஸ் செய்யவும் ராம்நாயக் உதவிய பிறகு ஓருடல் ஈருயிர் ஆனார்கள்.

இந்த பந்தம் விடுதலையான பிறகும் தொடர்ந்தது.

எதற்கெடுத்தாலும் அவரை அழைக்க ஆரம்பித்தார் வரதுபாய். அப்படி செல்லும் போதெல்லாம் அருண்காவ்லியையும் கையோடு கூட்டிச் சென்றார் ராம்நாயக்.

வரதுபாயின் அனுபவங்கள் இவ்விருவருக்கும் பல்கலைக்கழக பாடங்களாக அமைந்தன. தனது 'கஸ்டமர்களை' இந்த இளைஞர்களுக்கு அறிமுகப்படுத்தினார். சின்னச் சின்ன வேலைகளுக்கு இனி தன்னைத் தேடி வரவேண்டாம் என்றும் நேரடியாக இவர்களை தொடர்புகொண்டு முடிக்கும்படியும் செவிவழியாக செய்தி அனுப்பினார்.

போதாதா?

வரதராஜ முதலியாரின் வாடிக்கையாளர்கள் மெல்ல மெல்ல ராம்நாயக் - அருண்காவ்லி பக்கம் சாயத் தொடங்கினார்கள். இவரும் அதை பெரிதுபடுத்தவில்லை; கண்டுகொள்ளவில்லை.

ஒருவகையில் ஊக்குவிக்கவே செய்தார். மெல்ல மெல்ல இந்த இரு இளைஞர்களும் வளர ஆரம்பித்தார்கள். பைகுலா பகுதியை தாண்டியும் அவர்கள் புகழ் பரவியது.

எதிர்பட்டால் விலகி இந்த இளைஞர்களுக்கும் வழிவிட வேண்டும்... யதேச்சையாக எங்கு பார்த்தாலும் 'வணக்கம்' தெரிவிக்க வேண்டும்... என்பதையெல்லாம் யாரும் சொல்லாமலேயே பம்பாய் வாழ் பெருங்குடி மக்கள் தங்கள் மனதின் அடி ஆழத்தில் உணரத் தொடங்கிய நேரத்தில்தான் - அவுட் கோயிங் கட் ஆன நொடியில்

சட்டென்று ஆயிரம் ரூபாய்க்கு ரீ சார்ஜ் ஆனதுபோல் அருண் காவ்லியின் வலது கையில் ரோஜா பூ ஒன்று முளைத்தது.

யெஸ், மன்மதனின் அம்பு குறி பார்த்து அவர் இதயத்தை தைத்தது. காதல் மயக்கமும் அவரை சூழ்ந்தது.

இதை சற்றும் எதிர்பார்க்காத ராம்நாயக்கும், பாபு ரெஷிமும் அதிர்ந்துபோனார்கள். நல்லவிதமாக சொல்லிப் பார்த்தார்கள். குரலை உயர்த்தி எச்சரித்தார்கள். சுருதியை குறைத்து கெஞ்சினார்கள். சட்டையை பிடித்து மிரட்டினார்கள்.

ம்ஹூம். தன் காதல் முடிவிலிருந்து அருண் காவ்லி பின்வாங்கவேயில்லை.

"கட்டினா அந்தப் பெண்ணைத்தான் கட்டுவேன்..."

சகாக்கள் தவித்துப்போனார்கள். இந்த டுவிஸ்டை அவர்கள் எதிர்பார்க்கவேயில்லை. எல்லாம் இப்போதுதான் கைகூடி வருகிறது.

மேக மூட்டம் சூழ்வது போல் பம்பாய் முழுக்க தங்கள் மூவர் குறித்தான அச்சம் மெல்ல மெல்ல சூழ்ந்து வருகிறது. இந்த நேரம் பார்த்து கைதவறி கண்ணாடி டம்ளரை உடைப்பது போல் அருண் காவ்லி ஏன் இந்த வேண்டாத உணர்ச்சியில் சிக்கி அனைத்தையும் நாசப்படுத்துகிறார்?

விடை கிடைக்கவேயில்லை. குறிப்பாக 'அந்தப்' பெண் மீது எப்படி அருணுக்கு மையல் வந்தது என்ற விஷயம். ராம்நாயக்கும் சரி, பாபு ரெஷிமும் சரி அடிப்படையில் காதலுக்கு எதிரிகள் அல்ல. சொல்லப்போனால் முகம் தெரியாத பெண்ணை மணப்பதை விட, தெரிந்த - அறிந்த பெண்ணை மணமகளாக தேர்ந்தெடுப்பதே மேல் என்ற எண்ணம்கொண்டவர்கள்தான்.

ஆனாலும் - அருண்காவ்லியின் காதலை எதிர்த்தார்கள்.

காரணம், அந்தப் பெண்தான். அவள் பெயர், ஸுபைதா முஜாவார்!

'போயும் போயும் ஓர் இஸ்லாமிய பெண்ணையா மணப்பது..?'

இதை வாய்விட்டு கேட்கவும் செய்தார்கள்.

"யாரை வேணா கட்டிக்க. நாங்களே அதுக்கு துணை நிக்கறோம். ஆனா, முஸ்லீம் பொண்ணு வேண்டாம்..."

"ஏன்?"

"நமக்கு சரிப்பட மாட்டாங்க..."

"எதை வைச்சு அப்படி சொல்றீங்க?"

"காரணம் உனக்கே தெரியும்..."

"தெரியல. அதனாலதான் கேட்கறேன்..."

"நடிக்காத..."

"அப்படீன்னா என்னனு கூட எனக்கு தெரியாது..."

"த்தோடா. இப்ப நீ பேசற பார்த்தியா... இதுதான் உலகமகா நடிப்பு..."



“சரி. அப்படியே இருக்கட்டும்...”

“அருண்...”

“கத்தாத ராம்நாயக். எனக்கு ஸுபைதாவை பிடிச்சிருக்கு. அவதான் என் மனைவி...”

“வேண்டாம் அருண்... சொல்றதை கேளு...”

“எதுக்கு கேட்கணும்?”

“நம்ம எதிர்காலம் நல்லா இருக்க வேண்டாமா?”

“அதுக்கும் இதுக்கும் என்ன சம்பந்தம்?”

“இருக்கு. ஸுபைதாவை நீ கட்டிகிட்டா நிச்சயமா எல்லாமே பாழாகும்...”

"எப்படி...?"

"என்ன நீ ஒண்ணுமே தெரியாத மாதிரி கேட்கற? இங்க பார்... முஸ்லீம்கள்தான் பம்பாயை ஆட்டிப் படைக்கிறாங்க. எல்லா இல்லீகல் பிசினஸ்லயும் அவங்களே ஆதிக்கம் செலுத்தறாங்க. மத்திய கிழக்கு நாடுகள்ல அவங்க மதத்தை சேர்ந்தவங்கதான் இருக்காங்க. அதனாலதான் தங்க கடத்தல் பிசினஸ்ல தங்களோட இந்திய ஏஜென்ட்டா முஸ்லீம்களையே நியமிக்கறாங்க. வரது பாயையே எடுத்துக்க. அவர் பெரிய வஸ்தாதுதான். ஆள்பலம் இருக்குதான். ஆனா, ஹாஜி மஸ்தானுக்குதான் கூரியர் சர்வீஸ் பண்ணறார்... ஏன்?"

அருண்காவ்லி அமைதியாக அவரையே பார்த்துக் கொண்டிருந்தார். இதை தனக்கு சாதகமாக பயன்படுத்திக்கொள்ள முடிவு செய்த ராம்நாயக் தொடர்ந்தார்.

"ஏன்னா வரதுபாய் ஒரு இந்து. அதனாலதான் கோல்ட் ஸ்மக்லிங்குல அவரால நுழையவே முடியலை. வெறும் அல்லக்கையாதான் இருக்காரு. இப்படி சொல்றது தப்புத்தான். ஆனா, வேற வார்த்தை கிடைக்கலை. வேணும்னா மரியாதையா 'தளகர்த்தர்'னு சொல்லலாம். அதுக்கு மேல அவரைப் பத்தி குறிப்பிட முடியுமா? மஸ்தானுக்கு இருக்கிற மரியாதை அவருக்கு ஏன் உயர் மட்டத்துல இல்லை?"

"..."

"நாம இப்படி சொல்றதை வரதுபாயே ஏத்துக்க மாட்டாருன்னு எனக்குத் தெரியும். மஸ்தான் அவரை தன் கூடப்பிறந்த சகோதரராதான் பார்க்கறாரு... தனக்கு சமமாதான் அவரை நடத்தறாரு. தொழில்லயும் சமபங்கு கூட்டாளியாதான் வைச்சிருக்காரு. ஆனா, அந்த மதநல்லிணக்கம் எல்லாம் இனிமே நாக்கை வழிக்கக்கூட பயன்படாது. அவங்க காலம் வேற. நாம வாழற சூழல் வேற. இன்னிக்கி நிலமையே தலைகீழா மாறியிருக்கு. அதுக்கு தகுந்த மாதிரிதான் நாமும் மாறணும்..."

"..."

"இப்ப கூட பாரு... முஸாஃபீர்கானால யாரோ தாவூத்தாம்... அவன் அப்பா பேரு இப்ராஹிமாம்... நம்ம வயசுதான் அவனுக்கு இருக்கும். ஆனா, நம்மை விட இப்பவே பேரு வாங்கிட்டான். அவனைப் பார்த்தா எல்லாருமே பயப்படறாங்க.

ஏன் தெரியுமா?"

"அவனும் ஒரு முஸ்லீம்..." நிதானமாக பதிலளித்தான் அருண் காவ்லி.

"தெரியுதுல? அப்புறம் எதுக்கு முஸ்லீம் பெண்ணை கட்டிக்கணும்னு நினைக்கற?

விட்டுடு..."

*"..."*

*"நாளைக்கு நமக்கு எதிரியா களத்துல நிக்கப்போறவன் தாவூத்தான். நிச்சயம் துபாய்ல இருக்கிறவங்க அவனைத்தான் அடுத்த கூட்டாளியா தேர்ந்தெடுப்பாங்க. என்னதான் நம்மகிட்ட திறமை இருந்தாலும் நம்மை பக்கத்துல கூட சேர்க்கமாட்டாங்க. பலத்தை விட மதத்துக்குத்தான் என்னிக்குமே வலு ஜாஸ்தி. இதை தாண்டி தாவூத்துக்கு சமமா நாமளும் வளரணும்னா நம்ம மதத்தை சேர்ந்தவங்களை ஒண்ணுசேர்த்து நமக்கு பின்னாடி நிக்க வைக்கணும். புரிஞ்சுதா?"*

*"ம்..."*

*"அப்பாடா. போய் வேலையை பாரு. நல்ல பெண்ணா பார்த்து நானே கட்டி வைக்கறேன்..."*

*"வேண்டாம்..."*

*"என்னடா சொல்ற. அந்தப் பெண்ணையே நினைச்சுட்டு தனி மரமா இருக்கப் போறியா?"*

*"இல்லை..."*

*"அப்புறம்?"*

*"அந்தப் பெண்ணைத்தான் கல்யாணம் செய்துக்கப் போறேன்..."*

*"டேய்..."*

*"இங்க பாரு ராம்நாயக். நீ சொன்ன எதையும் நான் மறுக்கலை. நமக்கு ஆதரவா இந்துக்களை ஒன்றுதிரட்டினாதான் நாம சர்வைவல் ஆக முடியும்கறதை ஏத்துக்கறேன். ஆனா..."*

*"ஸுபைதாதான் உன் மனைவி. அப்படித்தானே?"*

*"ஆமா. நம்ம தொழிலுக்கு அவதான் சரியானவ. அவளை மாதிரி ஒருத்தி எனக்கு மனைவியா வந்தாதான் என்னால... யார் அவன்..? ஏதோ பேர் சொன்னியே... யெஸ்... தாவூத்... அவனை மாதிரியானவங்களை எதிர்க்க முடியும்..."*

*"எப்படி இவ்வளவு தீர்மானமா சொல்ற? ஸுபைதா கூட பழகியிருக்கியா?"*

*"இல்ல. சொல்லப்போனா பேசினது கூட இல்லை..."*

*"அப்புறம் எதை வைச்சு இந்த முடிவுக்கு வந்த?"*

*"என் பார்வை தப்புப் பண்ணாது..."*

*அருண் காவ்லி சொன்னது மெய்தான்.*

*இத்தனைக்கும் ஸுபைதா முஜாவார் அவர் இருக்கும் பகுதியை சேர்ந்தவள்தான். பூர்வீகம் பூனாவில் உள்ள வாட்கான். பஞ்சம் பிழைக்க வந்து பைகுலாவில் செட்டில் ஆன குடும்பம்.*

*பக்கத்து பக்கத்து வீடு என்று சொல்ல முடியாது. அதற்காக ஐந்து கிலோ மீட்டர் தூரம் என்றும் விலக்க முடியாது. கூப்பிடும் தொலைவுதான்.*

*என்றாலும் இதுவரை அருண் காவ்லி ஒரு வார்த்தை கூட*

ஸுபைதாவுடன் பேசியதில்லை. சிரித்ததில்லை. வெறும் பார்வைதான்.

அதுகூட ஒன் சைட்தான். வைத்த கண் வாங்காமல் அவள் போகும் போதும் வரும்போதும் பார்ப்பது அருண் காவ்லிதான். அந்தப் பெண் அவரை ஏறெடுத்தும் பார்த்ததில்லை.

இந்த விஷயம் ராம்நாயக்குக்கும் தெரியும். அதனால்தான் தன் புத்திமதி அருண் காவ்லியின் தலையில் ஏறவில்லை என்று தெரிந்ததும் கேள்வியை மாற்றிப் போட்டார்.

"அந்தப் பொண்ணும் உன்னை விரும்புதா?"

"தெரியாது..."

"அப்புறம் எப்படி அருண்..?"

''இங்க பாரு. ஜிலேபி பிழியாத. ஸுபைதா என்னை விரும்பினாலும் விரும்பலைனாலும் அவதான் என் பொண்டாட்டி. முடிஞ்சா ஹெல்ப் பண்ணு. இல்லைனா தள்ளி நில்லு. நானே பார்த்துக்கறேன்..."

எப்படி விட முடியும்? நண்பராயிற்றே?

அருண் காவ்லியை அழைத்துக்கொண்டு ஸுபைதாவின் வீட்டுக்கு சென்றார். அங்கு அவர்களுக்கு அதிர்ச்சி காத்திருந்தது.

யெஸ், ஸுபைதாவுக்கு வேறொரு இடத்தில் திருமணம் நிச்சயமாகியிருந்தது!

"இப்ப என்ன அருண் செய்யறது..?"

"பொண்ணை தூக்கிடலாம்..." சர்வ சாதாரணமாகத்தான் அருண் காவ்லி இந்த வார்த்தையை உச்சரித்தார். கேட்ட ஸுபைதாவின் வாப்பாவுக்குத்தான் மயக்கம் வந்தது.

இவரும் அதே பகுதியை சேர்ந்தவர்தானே? அருண் காவ்லியின் வளர்ச்சியை கண்ணுக்கு நேராக பார்த்து வருபவர்தானே? தன் விருப்பத்தை அடைய எந்த எல்லைக்கும் செல்ல இந்த இளைஞர்கள் தயங்க மாட்டார்கள் என்பது தெரியாதா என்ன?

"இல்லை... அப்படியெல்லாம் எதுவும் செஞ்சிடாதீங்க..." என அவசரமாக மறுத்தார்.

"அப்புறம்?" ராம்நாயக் கேட்டார்.

"நானே என் பொண்ணை இந்த தம்பிக்கு கட்டி வைச்சுடறேன்..."

"எதுக்கும் ஸுபைதாகிட்ட ஒரு வார்த்தை கேட்டுடுங்க..."

"அவசியமில்லை..."

கடைசிவரை அருண் காவ்லியை மணக்க ஸுபைதாவுக்கு சம்மதமா என்று யாரும் கேட்கவேயில்லை.

ஆர்ப்பாட்டமாக திருமணம் நடந்தது. "சரி. நீ ஆசைப்பட்டது நிறைவேறிடுச்சு. இப்ப என் விருப்பத்தை பூர்த்தி செய்..." ராம் நாயக் அடுத்த புல்லட்டை குறி பார்த்தார்.

"என்ன?"

“உன் பொண்டாட்டியை மதம் மாத்திடு...”

“என்ன சொல்ற..?”

“சொன்னதை செய் அருண்... அவளை இந்துவா கன்வர்ட் செஞ்சுடு...”

யோசித்த அருண் காவ்லிக்கு அது சரியான யோசனையாக பட்டது. மணமேடையிலேயே ஸுபைதாவை ‘இந்து’வாக மாற்றினார். ‘ஆஷா’ என்ற புதிய பெயரையும் சூட்டினார்.

இவை எல்லாம் அந்தப் பெண்ணின் விருப்பத்துடன்தான் நடந்ததா என்று தெரியவில்லை.

ஆனால் - ஒருவரும் எதிர்பார்க்காத அளவுக்கு ஜாடிக்கு ஏற்ற மூடியாக ஸுபைதா என்கிற ஆஷா மாறிப்போனாள்.

ஆம், எந்த வகையில் எல்லாம் இந்தப் பெண் தனக்கு துணையாக இருப்பாள் என்று அருண் காவ்லி நம்பினாரோ... எதிர்பார்த்தாரோ... அப்படியெல்லாம் அவள் நடந்துகொண்டாள். தன் கணவர் வெளியில் சென்ற போது, சிறையில் இருந்தபோது எல்லாம் அவரது குழுவை பராமரித்தது அவள்தான்.

அதாவது - அதே... அதே... மாஃபியா ராணிகளில் ஒருவராக ஜோதியில் ஐக்கியமானாள்(ர்)!

52

எல்லாம் கரீம் லாலாவால் வந்த வினை. 'வாட்ஸ் அப்' குரூப் போல துணைக்கு ஜான்க்ரஸ் கான் இருக்கிறார்தான். இவரது பூர்வீகமும் ஆப்கானிஸ்தானில் உள்ள ஸ்வாட் கிராமம்தான். அடிப்படையில் பெஷாவரை 'தாயகமாக' கொண்ட கரீம் லாலா போலவே இவரும் பதான்தான்.

என்றாலும் ஹாஜி மஸ்தானுடனான நட்பு, அதை தொடர்ந்து தெற்கு பம்பாயின் வஸ்தாதாக கரீம் லாலா உருவெடுத்த விதம், நிமிடங்கள் தோறும் கொட்டிய கப்பம்... எல்லாமுமாக சேர்ந்து பதான்ஸ்களின் ரோல் மாடலாக லாலாவை மாற்றிவிட்டது.

இதன் விளைவைத்தான் பம்பாய் 1960களின் இறுதியில் சந்தித்தது.

பெரிய லார்ட் லபக்குதாஸ் போலவே எல்லா பதான்களும் நடமாட ஆரம்பித்தார்கள். எதிர்படும் அடித்தட்டு மக்களிடமிருக்கும் நயா பைசாவை கூட விட்டு வைக்காமல் சுரண்டினார்கள். பெண்களை பலாத்காரம் செய்தார்கள். சாலையில் நடமாடவே முடியாத நிலை பம்பாய்வாசிகளுக்கு ஏற்பட்டது. எதிர்த்து கேட்பவர்களை அறைந்தார்கள். பதான்ஸின் அருமை பெருமைகளை பட்டியலிட்டார்கள்.

மன்னராக ஆட்சி செய்த பதான்ஸ், தளபதிகளாக பதவி ஏற்று நாட்டை காப்பாற்றிய பதான்ஸ், தங்கள் இனத்தை காப்பாற்ற அரசர்களையே எதிர்த்த பதான்ஸ்... என புள்ளி விவரங்களுடன் 'பதான்ஸ்' டேட்டாவை லிஸ்ட் போட்டார்கள். வாழும் உதாரணமாகத் திகழும் கரீம் லாலாவை சாஷ்டாங்கமாக வணங்கினார்கள்.

மொத்தத்தில் எந்த மாத்திரையாலும் தீர்க்க முடியாத தலைவலியாக பம்பாய் போலீசுக்கு இவர்களே மாறிப் போனார்கள்.

மாஃபியா சர்க்கிளிலும் இவர்களது அட்டூழியம் குறித்தே விவாதிக்கப்பட்டன.

ஆனால் - என்ன முடிவு எடுப்பது, இவர்களை எப்படி தடுப்பது என்றுதான் யாருக்குமே தெரியவில்லை. ஒருவரைத் தவிர.

அவர் ஹாஜி மஸ்தான். பதான்ஸ் மீது அவருக்கும் கடுப்பு இருந்தது. அது கோபமாக உருவெடுத்ததற்கு காரணம், யூசுப் படேல்.

இத்தனைக்கும் மஸ்தானின் முன்னாள் கூட்டாளிதான் இந்த யூசுப் படேல். என்றாலும் சில கணக்குகளை தீர்க்க வேண்டியிருந்தது.

அதற்கு பதான்ஸை பயன்படுத்த முடிவு செய்தார். இதன் மூலம் யூசுப் படேலும் அழிவார். பதான்ஸின் பயங்கரம் குறித்து மீடியாவிலும் செய்தி வரும். ஒரே டிக்கெட்டில் இரண்டு படங்கள்.

அதற்காகவே 'சுபாரி'க்கு ஏற்பாடு செய்தார். ஆனால், அழைப்பு பதான்ஸ்களுக்கு மட்டும்தான். ரைட். அதென்ன 'சுபாரி'?



குத்துமதிப்பாக 'வெற்றிலை பாக்கு' என அர்த்தம் சொல்லலாம். பட், எந்த இடத்தில் இந்த 'சுபாரி' சொல் பயன்படுத்தப்படுகிறது என்பதைப் பொறுத்து இதன் பொருள் மாறும்.

உதாரணமாக தமிழர்களின் வீட்டு விசேஷங்களில் விருந்து சாப்பாட்டை சாப்பிட்ட பின் வெற்றிலை பாக்கு போடுவார்கள். இது ஒரு வகை.

இதே வகையைத்தான் வட இந்தியாவிலும் ஏறக்குறைய பின்பற்றுகிறார்கள். என்ன... கூடவே பான் மசாலாவும் கலக்கப்பட்டிருக்கும்.

மொத்தத்தில் இந்திய மக்களை பொறுத்தவரை சந்தோஷமாக உணவருந்திய பின் ஜீரணத்துக்காக மெல்வதுதான் வெற்றிலை பாக்கு.

தமிழ் சினிமா என்றால் நிலா வெளிச்சத்தில் கயிற்றுக் கட்டிலில்

படுத்திருக்கும் நாயகனுக்கு வெற்றிலையில் சுண்ணாம்பு தடவி நாயகி கொடுப்பார். சொல்லி வைத்தது போல் முந்தானை ஒரு பக்கமாக ஒதுங்கும். க்ளோசப்பில் கேமராவும் இதை டீடெயில் ஆக பதிவு செய்யும். கிறக்கத்துடன் ஹீரோ வெற்றிலையை மெல்லுவார். மழை பெய்யத் தொடங்கும். இளையராஜாவின் மெலடியும் ஆரம்பிக்கும். ஹஸ்கி வாய்ஸில் பெரும்பாலும் எஸ்.ஜானகி, 'ம்... ம்... ஹா...' என முனகுவார்.

ஏனெனில் 'அந்த' மேட்டருக்கு எழுச்சியூட்டும் சக்தி வெற்றிலை பாக்குக்கு உண்டு என்பது காலம்தோறும் நிலவி வரும் நம்பிக்கை. பாட்டி வைத்தியத்துக்கும் இதுவே அடிப்படை.

ஆனால் - பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றில் 'சுபாரி' என்பதற்கான அர்த்தம் வேறு.

ஒரு சிக்கலான காரியத்தை முடிக்க வேண்டும் என ஒரு மிகப்பெரிய தாதா நினைத்தால்...

ஊரிலிருக்கும் அனைத்து குட்டி தாதாக்களுக்கும், அடியாட்களுக்கும் 'சுபாரி'க்கான அழைப்பு செல்லும்.

குறிப்பிட்ட நாளில் குறிப்பிடப்பட்ட இடத்தில் அழைப்பு வந்தவர்கள் அனைவரும் ஆஜராவார்கள்.

தடபுடலாக விருந்து நடக்கும். ஊர்வன, பறப்பன, பாய்வன, மிரள்வன... என இருக்கும் அனைத்து அசைவப் பொருட்களும் திகட்டத் திகட்ட பரிமாறப்படும்.

நடக்க முடியாத அளவுக்கு சாப்பிட்டு முடித்தப் பின் வந்தவர்கள் அனைவரும் வெள்ளைத் துணியால் மூடப்பட்ட கூடாரத்தினுள் குழுமுவார்கள். வட்டமாக அமர்வார்கள்.

ஒரு சிப்பந்தி வெற்றிலை - பாக்கை தாம்பாளத் தட்டில் ஏந்தி வருவார். அதை நடுவில் வைப்பார்.

உடனே அதை யாரும் எடுக்க மாட்டார்கள். மவுனமாக அதையே பார்த்தபடி அமர்ந்திருப்பார்கள். பிறகு விருந்துக்கு அழைப்பு விடுத்த பெரிய தாதாவின் வலது கை எழுந்து நின்று தொண்டையை கனைத்தபடி பேச ஆரம்பிப்பார்.

'இந்தச் செயலை முடிக்க வேண்டும்... அல்லது இன்னாரை போட்டுத் தள்ள வேண்டும்... இதில் இன்னின்ன ரிஸ்க் இருக்கிறது... இதை மீறி யார் இந்தச் செயலை செய்கிறார்களோ அவர்களுக்கு 'நம் தலைவர்' இவ்வளவு தொகையை பரிசாக வழங்குவார்...'

அடுத்த நொடி அங்கே அமைதி நிலவும். மறு விநாடி வட்டமாக அமர்ந்திருந்தவர்கள் சலசலவென தங்களுக்குள் பேசிக் கொள்வார்கள். குறிப்பிட்ட அசைன்மென்ட்டை தங்களால் முடிக்க முடியுமா என அலசுவார்கள். சாதக பாதகங்களை கணக்கிடுவார்கள்.

முடிவு எட்டப்படவில்லை என்றால், பரிசுத் தொகை உயர்த்தப்படும். இதன் பின்னர் நிச்சயம் யாராவது ஒருவர் 'இந்தச்

செயலை நான் முடிக்கிறேன்...' என்றபடி எழுந்து நிற்பார்கள் அல்லது கையை உயர்த்துவார்கள்.

உடனே அப்படி சொன்னவரிடம் பொறுப்பு ஒப்படைக்கப்படும்.

அதன் பிறகே சிப்பந்தி கொண்டு வந்து வைத்த தட்டில் இருந்து அனைவரும் வெற்றிலை பாக்கை எடுத்து மெல்ல ஆரம்பிப்பார்கள். இதுதான் மாஃபியாக்களின் அகராதியில் 'சுபாரி'க்கான பொருள். இதில் குறிப்பிட வேண்டிய விஷயம் - வந்திருந்த அனைவருக்கும் என்ன நடக்கப்போகிறது... யார் அந்தக் காரியத்தை செய்யப் போகிறார்கள் என்பது தெரியும்.

ஆனால் - யாரும் யாரையும் காட்டிக் கொடுக்க மாட்டார்கள். போலீசுக்கு தகவல் அனுப்ப மாட்டார்கள்.

முடிந்தால் 'காரியத்தில்' இறங்குபவருக்கு உதவலாம். இல்லையென்றால் ஒதுங்கி இருக்க வேண்டுமே தவிர எந்தக் காரணத்தை கொண்டும் சம்பந்தப்பட்டவரை தடுத்து நிறுத்தக் கூடாது.

அப்படி செய்தால் - செய்பவரின் பரம்பரை மொத்தமாக இருந்த இடம் தெரியாமல் அழிக்கப்படும்.

இந்த ஜென்டில்மேன் அக்ரிமென்ட்டுக்கு உட்படுபவர்களே 'சுபாரி'க்கு அழைப்பு வந்ததும் செல்வார்கள்.

இந்த இடத்தில் 'நாயகன்' படத்தின் காட்சி நினைவுக்கு வந்தால், உடனே காலரை உயர்த்திக்கொள்ளுங்கள்.

யெஸ்... யெஸ்... யெஸ்...

கோட், சூட் அணிந்தபடி ஜனகராஜை அழைத்துக்கொண்டு கமல் ஒரு விருந்துக்கு செல்வார். அங்கு - 'நடுக்கடலில் நின்று கொண்டிருக்கும் கப்பலில் இருந்து சரக்கை இறக்கிக்கொண்டு வர வேண்டும்... ஆனால், கஸ்டம்ஸ் கெடுபிடி அதிகமாக இருக்கிறது... யார் இதை முடித்துக் கொடுக்கிறீர்கள்..?'

என்று கேட்டதும் கமல் தன் கையை உயர்த்துவார். பொறுப்பு அவரிடம் வழங்கப்படும். உடனே தட்டில் இருக்கும் பாக்கை எடுத்து தன் வாயில் போடுவார்.

இதனை தொடர்ந்து 'நிலா அது வானத்து மேலே...' பாடல் ஒலிக்கும். கமலும் சரக்கை உப்பு மூட்டையில் கலந்துகொண்டு வந்து சேர்ப்பார்.

இந்த டெக்னிக் வரதராஜ முதலியார் பயன்படுத்தியது என்ற 'பேச்சு' அடிபடுகிறது. எந்தளவுக்கு அது உண்மை என்று தெரியாது. அந்த ஆராய்ச்சி இங்கு அவசியமும் இல்லை.

கமல் விருந்தில் பங்கேற்றதும், பாக்கை எடுத்து வாயில் போட்டுக் கொண்டதும்தான் இங்கு முக்கியம்.

இதுதான் 'சுபாரி'.

உடனே உலகப்புகழ்பெற்ற 'அந்த' தில்லி

டீ பார்ட்டியும் 'சுபாரி'தானா என்று கேட்காதீர்கள்!

ரைட், இப்படியொரு வழக்கத்தை யார் - எப்போது மாஃபியா உலகில் அறிமுகப்படுத்தினார்கள் என்று தெரியவில்லை.

ஆனால் - செவிவழியாக உலவும் ஒரு நாட்டுப்புற கதைதான் இதற்கெல்லாம் வித்திட்டது என்று கிசுகிசுக்கிறார்கள்.

இனக்குழு சமுதாயம் ஒன்று பம்பாய் நிலப்பரப்பை ஆட்சி செய்த காலத்தில் பீம் என்னும் மன்னன் இருந்தானாம். எதிரிகளை அழிக்க அவன் இப்படித்தான் தன் படைவீரர்களுக்கு விருந்து வைப்பானாம். உண்டு முடித்ததும் அச்சு அசலாக இதே போல் கோரிக்கை வைத்து பரிசுத் தொகையை அறிவிப்பானாம்.

இந்தக் கதையை கேட்டு வளர்ந்த ஒரு ஜீவன்தான் இதை மாஃபியா உலகில் கொண்டு வந்து சேர்த்தது என்பது பரவலான நம்பிக்கை.

என்றாலும் வெளியுலகுக்கு இப்படியொரு 'சுபாரி' நிகழ்ச்சி மாஃபியாக்கள் மத்தியில் நடக்கிறது என்பதை ஸ்பீக்கர் வைத்து அறிவித்த பெருமை ஹாஜி மஸ்தானையே சேரும்.

யூசுப் படேலை அழிக்க வேண்டும் என்று முடிவு செய்தவர், 'சுபாரி'க்கு ஏற்பாடு செய்தார். அழைப்பு பம்பாயை சேர்ந்த பதான்ஸ்களுக்கு மட்டும் வழங்கப்பட்டது.

முக்கியமான அனைத்து பதான்ஸ்களும் இந்த விருந்தில் கலந்து கொண்டார்கள். முட்ட முட்ட சாப்பிட்டார்கள். வெள்ளை கூடாரத்தினுள் நுழைந்து வட்டமாக அமர்ந்தார்கள்.

ஹாஜி மஸ்தானின் நம்பிக்கைக்கு உரியவர் நடுவில் வந்து நின்றார். 'அசைன்மென்ட்டை' சொன்னார். பரிசுத் தொகையான ரூபாய் பத்தாயிரத்தை எடுத்துக்காட்டினார்.

இரு இளைஞர்கள் கையை உயர்த்தினார்கள். வெற்றிலை பாக்கை எடுத்து மென்றார்கள். மஸ்தானின் காலைத் தொட்டு வணங்கிவிட்டு வெளியேறினார்கள்.

இவர்கள் இருவருமே பாகிஸ்தானை பூர்வீகமாக கொண்ட பதான்ஸ். யூசுப் படேலை பின்தொடர்ந்தார்கள். எந்தெந்த இடங்களுக்கு அவர் செல்கிறார் என்று பார்த்தார்கள். யார் யார் உடனிருக்கிறார்கள் என்று ஆராய்ந்தார்கள். துல்லியமாக ஸ்கெட்ச் போட்டார்கள். 'ஆளை' கொல்வதற்காக நாள் குறித்தார்கள்.

அந்த தேதி, நவம்பர் 22, 1969ம் ஆண்டு. அது ரம்ஜானையொட்டிய மாதம். மினரா மசூதிக்கு செல்வது யூசுப் படேலின் வழக்கம். தொழுகை முடிந்து அவர் வெளியே வரும் நேரம் இந்த பதான்ஸுக்கு மனப்பாடமாகி இருந்தது.

எனவே மசூதி வாசலில் அவரை சுட்டுத்தள்ள முடிவு செய்தார்கள். நோன்பு சமயத்தில் இஸ்லாமியர்கள் வன்முறையில் இறங்கவும் மாட்டார்கள்... ஆயுதங்களையும் கையில் ஏந்த மாட்டார்கள் என்பது இவர்களது சாதகமாக இருந்தது.

*குறிப்பிட்ட தேதியில் மினரா மசூதி வாசலில் காத்திருந்தார்கள். தொழுகை முடித்து வெளியே வந்த யூசுப் படேல், தன் நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். அவரது பாதுகாவலர்கள் கண்கொத்திப் பாம்பாக சுற்றிலும் தங்கள் பார்வையை சுழலவிட்டார்கள்.*

*அறிமுகமில்லாத இரு இளைஞர்கள் - அதுவும் பதான்ஸ் - தங்கள் 'பாஸை'யே கவனித்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.*

*உள்ளுணர்வு எச்சரித்தது. யூசுப் படேலின் காதை கடித்தார்கள்.*

*அவரும் தலையை திருப்பி அவர்கள் இருவரையும் பார்த்தார். வித்தியாசமாகத்தான் தெரிந்தது. ''மசூதி வாசல்ல எதுவும் நடக்காது...'' என்றார் அலட்சியமாக.*

*"இருந்தாலும் நாம எச்சரிக்கையா இருக்கறது நல்லது..."*

*"சரி. மூணு நிமிஷத்துல கிளம்பிடலாம்..."*

*மூன்று நிமிடங்கள் அவருக்கு வேண்டுமானால் குறைவாக இருக்கலாம். ஆனால் அவரைக் கொல்ல வந்த இளைஞர்களுக்கு அந்த அவகாசமே போதுமானதாக இருந்தது.*

*என்ன... ஏது என்று சுதாரிப்பதற்குள் - துப்பாக்கியை எடுத்தார்கள். யூசுப் படேலை நோக்கி சரமாரியாக சுட்டார்கள்.*

*இப்படி நடக்கலாம் என முன்பே எதிர்பார்த்த ஒரு பாதுகாவலர், பாய்ந்து அனைத்து குண்டுகளையும் தன் மார்பில் ஏந்தினார். அந்த இடத்திலேயே மரணமடைந்தார். இவரையும் தாண்டி இரு குண்டுகள் யூசுப் படேலை துளைக்கவே செய்தன. என்றாலும் அவை தோளில் பாய்ந்ததால் உயிர் தப்பிவிட்டார்.*

*மசூதி வாசலில் குழுமியிருந்தவர்கள் இரு இளைஞர்களையும் சுற்றி வளைத்தார்கள். காவல்துறைக்கு தகவல் தெரிவித்தார்கள்.*

*இதனை அடுத்துத்தான் ஹாஜி மஸ்தான் நடத்திய 'சுபாரி' வெளிச்சத்துக்கு வந்தது. மாஃபியாக்கள் மத்தியில் நிலவும் இந்த 'அசைன்மென்ட் ப்ராசஸ்ஸும்' அனைவருக்கும் தெரியவந்தது.*

*தொடர்ந்து மஸ்தானும், கரீம் லாலாவும், வேறு சிலரும் கைதானதும், சில மாதங்களிலேயே வெளியே வந்ததும் பழைய கதை.*

*இதையெல்லாம் இந்த அத்தியாயத்தில் விலாவாரியாக பார்க்க என்ன காரணம்?*

*அடுத்தடுத்து நடந்த 'சுபாரி'கள்தான்!*

*அதில் ஒன்றில்தான் புகழ்பெற்ற அந்த க்ரைம் ரிப்போர்ட்டரின் உயிருக்கு குறி வைக்கப்பட்டது.*

*அவர், எம்.பி.ஐயர். பிடிஐ நிருபர். துணிச்சலுடன் பம்பாய் மாஃபியாக்கள் குறித்து இண்டு இடுக்கு விடாமல் எழுதிய முதல் நபர். அவர் எழுதிய குறிப்புகள்தான் இன்றுவரை பம்பாய் நிழலுலக தாதாக்களின் ஆரம்ப காலம் குறித்து யார் எழுதினாலும் 'ரெஃபரன்ஸ்' ஆக இருக்கிறது. இந்த 'மும்பை மாஃபியா: ராஜாக்களும் ராணிகளும்' நூலுக்கும் அவரே பிரம்மா!*

# 53

அந்தச் செய்தி இடியாகத்தான் இறங்கியது. என்ன செய்வது என்று தெரியாமல் ஸ்பெஷல் பிராஞ்ச் திருதிருவென விழித்தது. ஏற்கனவே பல் பிடுங்கப்பட்ட பாம்பு.

இத்தனைக்கும் பம்பாய் காவல்துறையின் ஒரு பிரிவாகத்தான் இவர்கள் செயல்பட்டு வந்தார்கள். என்றாலும் செல்லாக் காசாகத்தான் இவர்களை பம்பாய் காவல்துறையே நடத்தியது.

துறைக்குள்ளும் மரியாதை இல்லை. வெளியிலும் 'கெத்து' காட்ட முடிவதில்லை. பழிவாங்கும் நடவடிக்கையாகவே பம்பாய் காவலர்கள் இந்தத் துறைக்கு மாற்றப்பட்டார்கள். மாதம் பிறந்தால் சம்பளம் வரும். மற்றபடி சூடு தேய்த்தபடி நாற்காலியில் அமர்ந்து பல் குத்திக்கொண்டிருக்க வேண்டியதுதான். வேறு எந்த ஆணியும் பிடுங்க முடியாது. இதெல்லாம் 1970களின் நிலவரம்.

ஆங்கிலேயர் ஆட்சியில் அப்படியில்லை. ரூம் போட்டு யோசித்த பின்னரே ஸ்பெஷல் பிராஞ்ச் என்ற பிரிவை பம்பாய் மாகாண காவல்துறைக்குள் பிரிட்டிஷார் ஏற்படுத்தினார்கள். நோய்க்கு மருந்து தருவதைவிட, நோய் வராமல் தடுப்பதிலேயே கவனம் செலுத்தினார்கள். அதற்காகவே இந்தப் பிரிவை ஏற்படுத்தினார்கள்.

சுதந்திரத்துக்கு பிறகு உருவான இந்திய அரசுக்கு வேறு அஜெண்டா இருந்தது. ரவுண்டு கட்டி அடித்த பிரச்னைகளில், க்ரைம் முக்கிய பங்கு வகித்தது. உச்சந்தலையில் அமர்ந்து கொட்டிக் கொண்டே இருந்தது. எனவே 'க்ரைம் பிராஞ்ச்' என்கிற 'க்ரைம் இன்வெஸ்டிகேஷன் டிபார்ட்மென்ட்'டுக்கே - சி.ஐ.டி - அதிக முக்கியத்துவம் கொடுத்தது.

எனவே பம்பாய்க்கு சுற்றுலா வரும் வெளிநாட்டவரை கண்காணிக்கும் பொறுப்பு மட்டுமே ஸ்பெஷல் பிராஞ்சுக்கு வழங்கப்பட்டது.

வாங்குகிற சம்பளத்துக்கு கொஞ்சமாவது வேலை பார்க்கலாம் என்று ஸ்பெஷல் பிராஞ்சை சேர்ந்த எந்த புண்ணியவானோ நினைத்திருக்கிறார். கருமமே கண்ணாக பணிபுரியவும் ஆரம்பித்திருக்கிறார்.

இதனை அடுத்துதான் அந்த செய்தியை கண்டறிந்தார்.அதுதான் ஒட்டுமொத்த துறைக்கும் தலை வேதனையாக அமைந்துவிட்டது.

'வாட் டூ டூ?' என தலை மீது கைவைத்து அமர்ந்த ஸ்பெஷல் பிராஞ்ச், ஒருவழியாக சுயநினைவுக்கு வந்தது. காலம் தாழ்த்தாமல் பம்பாய் காவல்துறையின் செவியில் தங்களுக்கு கிடைத்த - தாங்கள் கண்டறிந்த - செய்தியை ஓதியது.

அவ்வளவுதான். தலைவலி பம்பாய் போலீசுக்கு டிரான்ஸ்ஃபர் ஆனது. என்ன செய்வது... என்ன செய்வது... என மீட்டிங் போட்டு

மீட்டிங் போட்டு ஆலோசித்தார்கள். தேநீர் கோப்பைதான் காலியாகிக் கொண்டே இருந்ததே தவிர உருப்படியாக யாருக்கும் எந்த யோசனையும் தோன்றவில்லை.

விஷயம் இதுதான். வெளிநாட்டிலிருந்து அயூப்கான் பம்பாய் வந்திருக்கிறான். எதற்கு?

தெரியாது.

யார் அழைத்தது?

தெரியாது.

என்ன செய்யப் போகிறான்?

தெரியாது.

ஆனால், ஏதோ விபரீதம் நடக்கப்போகிறது என்பது மட்டும் தெளிவாக அனைவருக்கும் புரிந்தது.

ஏனெனில் அயூப்கான், ஒரு பதான். முழுப்பெயர் அயூப் கான் லாலா. கொடூரமானவன், அயோக்கியன், பஞ்சமா பாதகன், கொலைகாரன்... இத்யாதி... இத்யாதி... என ஒரு 'கெட்டவனை' குறிப்பிட தமிழில் என்னென்ன சொற்கள் இருக்கிறதோ - அது அத்தனையும் நினைவுக்கு கொண்டு வாருங்கள். அயூப் கானை பார்த்து உச்சரியுங்கள். அப்படியும் அவனது 'ஆளுமை' முழுமையடையாது.

அந்தளவுக்கு பயங்கரமானவன்.

இப்படிப்பட்டவன் எதற்காக பம்பாய் வந்திருக்கிறான்?

சின்ன க்ளூ கூட காவல்துறையை சேர்ந்த அப்பாடகர்களுக்கு கிடைக்கவில்லை. ஏற்கனவே மாநகரை பதான்கள் நாறடித்துக் கொண்டிருக்கிறார்கள். 'இவர்களை அடக்க துப்பில்லையா?' என மக்கள் ஆவேசத்துடன் போலீசாரை எங்கு பார்த்தாலும் கேட்க ஆரம்பித்திருந்தார்கள்.

இந்த சூழலில்தான் வலது காலை எடுத்து வைத்து அயூப்கான் பம்பாய்க்குள் நுழைந்திருக்கிறான். ஷீரடி பாபா விட்ட வழி என்று போலீசாரால் சும்மா இருக்க முடியவில்லை. 'ஏதாச்சும் செய்யணும் பாஸ்...' என பற்களை கடித்தார்கள். ஆனால், என்ன செய்வதென்றுதான் ஒருவருக்கும் தெரியவில்லை.

உண்மையில் அயூப்கானை வரவழைத்து கரீம் லாலா. அழைக்கச் சொன்னது ஹாஜி மஸ்தான்.

காரணம், எம்.பி.ஐயர். பி.டி.ஐ நிருபர். பம்பாய் க்ரைம் ரிப்போர்ட்டர்களின் ரோல்மாடல். எதற்கும் விலை போகாதவர். பம்பாய் மாஃபியாக்கள் குறித்து தொடர்ச்சியாக முதன் முதலில் துணிவுடன் பதிவு செய்தவர் இவர்தான்.

குறிப்பாக வரதராஜ முதலியார் - ஹாஜி மஸ்தான் - கரீம் லாலா கூட்டணியினரின் முகத்திரையை கிழித்ததில் இவருக்கு முக்கிய பங்குண்டு.



எனவேதான் இவரை 'அப்புறப்படுத்த' ஹாஜி மஸ்தான் நினைத்தார்.

இந்த வைபவத்துக்கு 'ஏதோ தன்னால் முயன்ற சிறு உதவி' என்ற அடிப்படையில் அயூப்கானை வரவழைத்தார் கரீம்லாலா.

ஒட்டுமொத்த பதான்ஸின் ஐகான் அழைக்கும்போது எப்படி அயூப்கானால் மறுக்க முடியும்?

பம்பாய் வந்தவர், தன் குருவான கரீம் லாலாவின் காலைத் தொட்டு கும்பிட்டார்.

'ஆயுதம்' வந்துவிட்ட செய்தி, ஹாஜி மஸ்தானுக்கு அறிவிக்கப்பட்டது.

பிறகென்ன? தடபுடலாக 'சுபாரி'க்கு ஏற்பாடு செய்யப்பட்டது.

ஆனால் - சிறப்பு விருந்தினர் அயூப்கான் மட்டும்தான். அவனைத் தவிர விருந்தில் பங்கேற்றவர்கள் வரதுபாய், ஹாஜி மஸ்தான், கரீம் லாலா என மும்மூர்த்திகள்தான்.

அவனுக்கு பிடித்த அத்தனை அயிட்டங்களும் பரிமாறப்பட்டன. வயிறார சாப்பிட்டான். சத்தமாக ஏப்பம் விட்டான்.

அழைத்த நோக்கத்தை சொன்னார் ஹாஜி மஸ்தான். கூடவே 'சிறப்பு' பரிசையும். நொடியும் தாமதிக்காமல் காரியத்தை கச்சிதமாக முடித்துத் தருவதாக ஒப்புக்கொண்டான். பேசிய

தொகையில் எண்பது சதவிகிதத்தை முன் பணமாக மஸ்தான் கொடுத்தார்.

மகிழ்ச்சியுடன் பெற்றுகொண்டான். மடமடவென்று செயலில் இறங்கினான். நம்பிக்கையான பதான்ஸை தன்னுடன் இணைத்துக் கொண்டான்.

இவர்கள் முதல்நிலை உதவியாளர்கள். தங்களுக்கான அல்லக்கைகளை தேர்ந்தெடுக்கும் பொறுப்பு இவர்களுடையது. அந்த அல்லக்கைகள் எம்.பி.ஐயரின் நடவடிக்கைகளை கண்காணிப்பார்கள்.

அதே... அதே... 'பூஜை' படத்தின் வில்லன் அன்ன தாண்டவம் எப்படி கூலிப்படைகளை லேயர் லேயராக ஆபரேட் செய்வானோ -

அப்படி அயூப்கான் செயல்பட்டான்.

ஸோ, ஐயரை ஆராய்பவர்களுக்கு, தங்களை இந்த காரியத்தில் இறக்கியது யார் என்று கடைசிவரை தெரியவே தெரியாது.

எப்பொழுதெல்லாம் கக்கூஸ் போகிறார் என்பது முதல் எம்.பி. ஐயரின் சகல நடமாட்டங்களும் அயூப்கானுக்கு வந்து சேர்ந்தன. அந்த குறிப்பை எல்லாம் கண்ணில் விளக்கெண்ணெய் விட்டு அலசினான்.

ஒரு குறிப்பு - ஒரேயொரு விஷயம் - அவனுக்கு உதவும் வகையில் இருந்தது. அதுதான் ஐயரின் அம்பாசிடர் கார்மோகம்.

எங்கு சென்றாலும் தன்னுடைய அம்பாசிடர் காரில்தான் சென்றார். குறிப்பாக லாங் டிரைவ் என்றால் அவருக்கு குலோப் ஜாமூன் சாப்பிடுவது மாதிரி.

உள்ளூர் என்றால் 40 கி.மீ. ஸ்பீட். வெளியூர் செல்வதென்றால், போக்குவரத்தை கடந்த பின் 60 கி.மீ. வேகம். இதுதான் ஐயரின் பாலிசி.

இது போதும். இதை வைத்து மங்காத்தாவே ஆடிவிடலாம்.

விசிலடித்த அயூப்கானுக்கு மேலும் மகிழ்ச்சி அளிக்கும் தகவல் வந்து சேர்ந்தது.

வரும் வார இறுதியில் பம்பாயிலிருந்து கோவாவுக்கு செல்கிறார் ஐயர். அதுவும் அவருக்கு பிடித்த காரில். செல்ஃப் டிரைவிங்.

போதாதா?

மூன்றாம் கட்ட அடியாளை வைத்து ஒரு மெக்கானிக்கை விலைக்கு வாங்கினான். நீண்ட தூர பயணத்துக்கு முன் தன் காரை சர்வீஸுக்கு விடுவது எம்.பி.ஐயரின் வழக்கம். அதன்படி கோவா செல்வதற்கு முன் வண்டியை பழுதுபார்க்க ஷெட்டில் விட்டார்.

குறிப்பிட்ட தொலைவுக்கு பின் பிரேக் பிடிக்காமல் இருக்க என்ன செய்ய வேண்டுமோ அதை அந்த மெக்கானிக் செய்து முடித்தான். பொழுது விடிந்தது.

திட்டமிட்டபடி கோவாவுக்கு புறப்பட்டார் ஐயர். சீரான

இடைவெளியில் அயூப்கான் அவரை பின்தொடர்ந்தான். பம்பாயின் போக்குவரத்து நெரிசலை கடந்த பின் ஸ்பீடா மீட்டர் முள் நாற்பதிலிருந்து மெல்ல மெல்ல அறுபதை நோக்கி நகர ஆரம்பித்தது.

*45... 50... 55...*

பின்னால் இருந்து சீறி வந்த ஒரு கார் ஓவர்டேக் செய்ய முயன்றது.'ப்ளடி... ஒருத்தனும் ரூல்ஸை மதிக்கறதில்லை...' முணுமுணுத்தபடி பிரேக் பிடித்தார்.

ஷாக் ஆனார்.

கார் நிற்கவில்லை. வேகமும் குறையவில்லை.திடுக்கிட்ட ஐயர், பிரேக்கை தம்பிடித்து அழுத்தினார்.பயனில்லை.

நெற்றி வியர்க்கத் தொடங்கியது. கண்களில் மரணபயம் பரவ ஆரம்பித்தது. காரும் அலைபாய்ந்தது.

பின்தொடர்ந்து வந்த அயூப்கான் இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் இதழ்களில் புன்னகை பூத்தது. எதிர்பார்த்த விநாடி எப்போது வரும் என காத்திருந்தான். வந்தது.

எதிர்திசையிலிருந்து வந்துகொண்டிருந்த வாகனத்தின் மீது மோதாமல் இருப்பதற்காக தன் அம்பாசிடரை திருப்பினார் ஐயர்.

அது மட்டும்தான் அவருக்கு தெரியும். அதன் பிறகு சாலையோரம் நின்றிருந்த மரத்தின் மீது தன் கார் மோதியதோ – அந்த வேகத்தில் தன் மார்பு ஸ்டியரிங் வீலில் படாரென்று அறைந்ததோ – அதிர்ச்சியில் தன் உயிர் பிரிந்ததோ – எதுவுமே ஐயருக்கு தெரியாது.

ஆனால் – இவை எல்லாம் அயூப்கானுக்கு தெரியும்.

அவரது மரணத்தை அணு அணுவாக தரிசித்தான். அவரது உயிர் பிரிந்துவிட்டதா என்பதை ஒன்றுக்கு இருமுறை சரிபார்த்தான். பிறகு கரீம் லாலாவுக்கு செய்தி அனுப்பினான். அதை அப்படியே ஹாஜி மஸ்தானுக்கு அவர் 'ஃபார்வர்ட்' செய்தார்.

எம்.பி.ஐயரின் மரணம் பம்பாயையே அதிர வைத்தது.

இது விபத்து அல்ல... படுகொலை என்பது அனைவருக்கும் தெரிந்திருந்தது. இதற்கு காரணம் மஸ்தான் என்பதும் சகலருக்கும் புரிந்திருந்தது.

ஆனால் – அதை நிரூபிக்க போதுமான சாட்சிகள் கிடைக்காததால் 'ஆக்சிடென்ட்' என்றே ஃபைலை மூடினார்கள்.

ஹாஜி மஸ்தான் வாய்விட்டு சிரித்தார். வரதுபாயிடமும், கரீம் லாலாவிடமும் தன் மகிழ்ச்சியை பகிர்ந்துகொண்டார்.

பம்பாய் பத்திரிகையாளர்கள் கொதித்து எழுந்தார்கள். என்றாலும் தங்கள் கண்டனங்களை பதிவு செய்ய அஞ்சினார்கள். தங்களுக்கு ஏற்படவிருக்கும் 'விபத்திலிருந்து' தங்களை தற்காத்துக் கொள்ள முயன்றார்கள்.

போலீசாருக்கு பைத்தியம் பிடிக்காத குறை. முக்கி முக்கிப்

*பார்த்தும் அவர்களால் மாஃபியாக்களுக்கு - குறிப்பாக பதான்ஸ்களுக்கு - எதிராக துரும்பை கூட அசைக்க முடியவில்லை.*

*விளைவு? அவர்களை கையாலாகாதவர்களாகவே மக்கள் பார்க்க தொடங்கினார்கள்.*

*அதற்கு ஏற்பவே இந்தி சினிமாவும் இந்தக் காலகட்டத்தில் வெளியாக ஆரம்பித்தது. சொல்லி வைத்தது போல் அனைத்து கமர்ஷியல் திரைப்படங்களின் க்ளைமாக்ஸிலும் போலீசார் வந்தார்கள். மற்றபடி அவர்கள் எதற்கும் உதவாத 'டம்மி பீஸ்தான்' என்ற கருத்து காற்றை விட வேகமாக பரவியது.*

*இதையெல்லாம் விட முக்கியமான விஷயம் - தங்களுக்கு எதிரான பத்திரிகையாளரை பம்பாய் மாஃபியாக்கள் 'அமைதியாக அப்புறப்படுத்துவார்கள்' என்ற பயம் அனைவர் மனதிலும் வேரூன்றியதுதான்.*

*யெஸ், மாஃபியாக்களால் படுகொலை செய்யப்பட்ட முதல் பத்திரிகையாளர் எம்.பி.ஐயர்தான்.*

*ஹாஜி மஸ்தானால் பற்ற வைக்கப்பட்ட இந்த நெருப்புதான் இன்றுவரை கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருக்கிறது.*

*தங்களுக்கு 'ஆகாத' நிருபர்களை 'போட்டுத் தள்ளுவது' தாதாக்களுக்கு சர்வ சாதாரணமான நிகழ்வாகி இருக்கிறது.*

*மொத்தத்தில் 1970களின் முடிவில் இப்படித்தான் பம்பாய் காட்சியளித்தது.*

*தௌசண்ட் வாலா பட்டாசாக பதான்கள் ரவுண்டு கட்டி அடித்தார்கள்.*

*கரீம்லாலா அவர்களுக்கு காட் ஃபாதராக விளங்கினார்.*

*ஹாஜி மஸ்தானும், வரதுபாயும், லாலாவுக்கு பக்கபலமாக நின்றார்கள்.*

*கையறு நிலையில் காவல்துறை தவித்தது.*

*இதற்கெல்லாம் எப்படி முடிவு கட்டுவது... யார் தங்களை காப்பாற்ற வருவார்கள் என பம்பாயின் அடித்தட்டு மக்கள் பிரார்த்தனை செய்தபோது - தாவூத் இப்ராஹிம் இருபதுகளின் மத்தியில் இருந்தான்.*

*1980ம் ஆண்டு ஜுலை மாதமும் பிறந்தது.*

# 54

பிரபுதேவா இயக்கத்தில் விஜய் நடித்த 'போக்கிரி' படம் நினைவில் இருக்கிறதா?

அதில் பேச்சுவார்த்தைக்காக இரு தரப்பு தாதாக்கள் பின்னி மில்ஸில் ஒன்று கூடுவார்கள்.

ஒரு தரப்பு, ஆனந்தராஜ் தலைமையிலானது. மறு தரப்பு, அலி பாய் என்கிற பிரகாஷ்ராஜுக்கு சொந்தமானது. 'மீட்டிங்'கில் பிரகாஷ்ராஜ் பங்கேற்க மாட்டார். பதிலாக அவர் தரப்பு ஆட்கள் கலந்துகொள்வார்கள். அவர்களில் ஒருவராக விஜய்யும் பங்கேற்பார்.

'ஏரியா' பிரித்துக் கொள்வது தொடர்பான அந்த மீட்டிங் அடிதடியில் முடியும்.

குழந்தைகள் 'கேப்' வெடித்து தீபாவளியை கொண்டாடுவது போல் கையில் கிடைத்த துப்பாக்கியால் இஷ்டத்துக்கு ஆனந்தராஜ் தரப்பினரை விஜய் சுட்டுத் தள்ளுவார்.

மின்சாரம் துண்டிக்கப்படும். ஃப்ளாஷ் வெளிச்சத்தில் நிலவரம் கலவரமாகும். நினைவின் அடுக்குகளில் இருந்து இந்த சீன்ஸை தோண்டி எடுத்து ஓடவிட்டு பார்த்துவிட்டீர்களா? சமத்து. விஷயத்துக்கு வருவோம்.

தாதாக்கள் மத்தியில் 'இப்படியான மீட்டிங்ஸ்' ஃபேமஸ்.

ஆனால் - இதற்கெல்லாம் பிள்ளையார் சுழி போட்டது ஹாஜி மஸ்தான்தான்.

யெஸ்... யெஸ்... யெஸ்... இந்திய மாஃபியாக்களின் வரலாற்றிலேயே முதல் முறையாக இரு தரப்பு 'டான்'களையும் பேச்சு வார்த்தைக்கு அழைத்தது மஸ்தான் பாய்தான்.

1980ம் ஆண்டு ஜூலை மாதம் இந்த வைபவம் நடந்தது.

அதுவும் புகழ்பெற்ற 'பைடூல் சூரூர்' மாளிகையில்.

ம்க்கும். அதென்ன 'புகழ்பெற்ற?' ஆமாம் பாஸ். போகிற போக்கில் சும்மா குன்சாக எல்லாம் அடித்து விடவில்லை. நிஜமாகவே வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த பகுதிதான்.

கொஞ்சம் விவரமாகவே பார்க்கலாம். முன்பு குன்றாக இருந்த பிரதேசம் என்று கற்பூரம் அடித்து சத்தியம் செய்தாலும் யாரும் நம்ப மாட்டார்கள். அந்தளவுக்கு பம்பாய் வார்டன் ரோட்டையொட்டிய பகுதி இந்த சம்பவம் நடந்த காலத்தில் மாறியிருந்தது.

கான்க்ரீட் வனங்கள் கொத்துக் கொத்தாக முளைத்திருந்தன. முளைத்துக்கொண்டிருந்தன. எல்லாமே ஹைடெக். அடித்தட்டு மக்கள் மட்டுமல்ல, உயர் நடுத்தர மக்களாலும் சுண்டு விரலைக் கூட நுழைக்க முடியாத ஏரியா.

காரணம், பிரிட்டிஷ் கவர்னர்ஸ். ஹாஜி அலியிலிருந்து நேப்பியன் ஸீ சாலைக்கு செல்லும் வழியில்தான் ஆங்கிலேயர் காலத்தில்



பம்பாய் மாகாண கவர்னராக நியமிக்கப்பட்டவர்கள் வசித்து வந்தார்கள். வீட்டிலிருந்து பார்த்தால் கடல் தெரியும். ஜன்னல்களை மூடினாலும் காற்று வரும். மரக்காடுகளை ஊடுருவும் சூரிய ஒளி உடலை தழுவும்.

இப்படி பஞ்ச பூதங்களும் நல்ல பிள்ளைகளாக ஆட்சி செய்யும் இடம் யாருக்குத்தான் பிடிக்காமல் போகும்?

அதனால்தான் சுதந்திரம் அடைந்த பிறகும் இந்த மாளிகையில் வசிக்க மகாராஷ்டிர கவர்னர்கள் விரும்பினார்கள்.

பணத்தில் குளித்து, ரூபாய் நோட்டுகளில் படுக்கும் கனவான்களும் இங்கிருந்த நிலங்களுக்கே ஆசைப்பட்டார்கள். அதனாலேயே பேரம் பேசாமல் ஸ்கொயர் ஃபீட் ஆக வாங்கித் தள்ளினார்கள்.

அதிநவீன வீடுகளை கட்டிக்கொண்டு குடிபோனார்கள்.

அப்படி சென்றவர்களில் ஹாஜி மஸ்தானும் ஒருவர்.

தங்கக் கடத்தலில் முத்துக்குளித்தவரால் மாபெரும் அரண்மனையை கட்ட முடிந்தது. 'பைடூல் சூரூர்' என அதற்கு பெயர் சூட்டவும் முடிந்தது.

வீட்டுக்கு பின்புறம் ஓர் அறையை தனக்கே தனக்கு என உருவாக்கிக் கொண்டார் - அதுவும் கண்ணாடியில்!

கரெக்ட். 1970 - 80 வாக்கில் எடுக்கப்பட்ட இந்தி, தமிழ், தெலுங்கு ஆக்‌ஷன் படங்களில் எல்லாம் வில்லனின் அறையாக கண்ணாடி ரூமையே காட்டுவார்களே... அதற்குள் குஷன் நாற்காலியில் சாய்ந்து அமர்ந்தபடி டான் புகை பிடிப்பாரே...

இதற்கெல்லாம் கூட இன்ஸ்பிரேஷன் 'நம்ம' மஸ்தான் பாய்தான்.

ரைட். கம்மிங் டூ த பாயின்ட் - மீட்டிங்குக்கு ஹாஜி மஸ்தான்

ஏற்பாடு செய்ய காரணம் இருந்தது.

எப்படி தொடங்கியது என்றெல்லாம் தெரியாது.

ஆனால் – பதான்ஸ் *Vs* பதான்ஸ் அல்லாதவர்கள் என பம்பாய் தாதாக்கள் இரண்டுபட்டு கிடந்தார்கள். முட்டுச் சந்து முதல் நான்கு வழி சாலை வரை எங்கு பார்த்தாலும் அடித்துக்கொண்டார்கள். ரத்தத்தை சிந்தினார்கள். தத்தம் ஆட்களை பறிகொடுத்தார்கள்.

லாலிபாப் சப்பியபடி இதையெல்லாம் காவல்துறை வேடிக்கைப் பார்த்தது. குளிர் காய்ந்தது.

இதனால் பெருமளவுக்கு நஷ்டத்தை அனுபவித்தவர் ஹாஜி மஸ்தான்தான். ஏனெனில் பதான்ஸின் தலைவராக இருந்தவர் அவரது வலது கையான கரீம்லாலா.

இவர்களை எதிர்க்கும் கூட்டத்துக்கு – அதாவது, பதான்ஸ் அல்லாதவர்களுக்கு – தலைவராக...

ம்ஹூம். வேண்டாம். தலைவனாக என ஒருமையிலேயே அழைக்கலாம். இன்னும் மரியாதையாக அழைக்கும் அளவுக்கு 'அவன்' வளரவில்லை. குறிப்பாக ஹாஜி மஸ்தான், கரீம்லாலா, வரது பாய் ஆகியோரை விட அப்பாட்டகராக 'அவன்' மாறவில்லை...

தாவூத் இப்ராஹிம் விளங்கினான்.

இதுதான் மஸ்தானுக்கு நம்பமுடியாத விஷயமாக இருந்தது. அவர் பார்த்து வளர்ந்த பொடியன். ஏதோ, கில்லி ஆடுவான்... பம்பரம் விடுவான்... என நினைத்திருந்தார்.

பார்த்தால் – பதான்ஸை நாயடி பேயடி அடித்துக் கொண்டிருக்கிறான். அதுவும் நட்ட நடு சாலையில், மொத்த ஜனங்களும் வேடிக்கை பார்க்கும்போது.

போதும் போதாததற்கு காவல்துறை வேறு அவன் பின்னால் இருந்தது. ஆயிரம்தான் இருந்தாலும் அவர்களது செல்லப் பிள்ளையல்லவா அவன்?

சும்மாவா... அவர்களில் ஒருவராக, தலைமை ஏட்டாக, க்ரைம் பிராஞ்ச் உறுப்பினராக இருந்த இப்ராஹிம் கஸ்கரின் மகனல்லவா?

இதுதான்... இந்த இடம்தான்... ஹாஜி மஸ்தான், கரீம் லாலாவின் தூக்கத்தை கெடுத்தது.

இப்ராஹிம் கஸ்கர் யாரோ அல்ல. அவர்களது நண்பர். நலம் விரும்பி. காவல்துறையில் பணிபுரிந்தாலும், நீதி, நேர்மை, நியாயம், வெங்காயம் என சவுண்ட் விட்டாலும் அணுக்கமாகவே திகழ்ந்த தோழன்.

அப்படிப்பட்டவரின் மகன் தங்களுக்கே சிம்ம சொப்பனமாக மாறுகிறான் என்பதை அவர்களால் ஜீரணிக்க முடியவில்லை.

இதற்கெல்லாம் முடிவு கட்டவும், 'நல்லபடியாக' ஏரியாவை பிரித்துக் கொடுக்கவும்தான் இந்த மீட்டிங்குக்கு ஹாஜி மஸ்தான் ஏற்பாடு செய்தார்.

அதாவது, அப்படியொரு தோற்றத்தை ஏற்படுத்தினார்!

குறிப்பிட்ட நாளன்று பம்பாய் தாதாக்கள் மஸ்தானின் மாளிகையை நோக்கி வர ஆரம்பித்தார்கள்.

மஜீத் காலியா, ஹுசைன் சோம்ஜி, திலீப் அசிஸ், ஹானிஃப் மொஹ்தாரம் ஆகியோருடன் கரீம்லாலா வந்து சேர - சபீர், அனிஸ் மற்றும் தன் 'படை'யினருடன் தாவூத் இப்ராஹிம் நுழைய -அமிர்ஸாதா, அலாம்ஸேப், ஷேஷ்ஸாதா, ஸமத்கான் என பதான்களின் தளபதிகள் 'உள்ளேன் ஐயா' என குரல் கொடுக்க - மாஃபியா ராணிகளில் முதன்மையான வரும், ஹாஜி மஸ்தான் - கரீம்லாலா - வரதுபாய் ஆகியோரின் தத்து சகோதரியும், தாவூத்தின் வளர்ப்புத் தாயுமான ஜெனாபாய் அனைவருக்கும் 'ஹலோ' சொல்ல - மீட்டிங் ஆரம்பித்தது.

வெள்ளை ஜிப்பா. காலோடு ஒட்டிய வெள்ளை பைஜாமா. வாயில் இறக்குமதி செய்யப்பட்ட 555 சிகரெட் என தன் டிரேட் மார்க் காஸ்டியூமில் நடுநாயகமாக அமர்ந்திருந்த ஹாஜி மஸ்தான் பேச ஆரம்பித்தார்.

"தெருல நாய்கள் சண்டை போடறது மாதிரி நமக்குள்ள நாமே அடிச்சுக்கக் கூடாது. ஏன்னா ரத்தம் சிந்தறது எந்த பிசினஸுக்கும் ஆபத்தானது. குறிப்பா நமக்கு..."

சொல்லிவிட்டு அங்கிருந்த ஒவ்வொருவரின் கண்களையும் சில விநாடிகள் உற்றுப் பார்த்தார். யாருடைய கவனமும் சிதறாதபடி கட்டிப் போட்டார். அங்கிருந்த அனைவரும் தன்னுடைய கட்டுப்பாட்டுக்கு வந்துவிட்டார்கள் என்பதை உணர்ந்ததும் - தொடர்ந்தார்.

"நாமெல்லாம் யாரு..? சொல்லுங்க நாம யாரு..?"

அனைவரும் அவரையே பார்த்தார்கள்.

"ஒரே இனம், மதம், ஒரே தொழிலைத்தான் செய்துட்டு இருக்கோம். நம்முடைய பொது எதிரி இந்திய அரசாங்கம்தான். நான் சொல்றது சரிதானே?" தலையசைத்தார்கள்.

"அப்புறம் எதுக்காக பதான்ஸ் - பதான்ஸ் அல்லாதவர்கள்னு நமக்குள்ள பிரிஞ்சு சண்டை போடணும்? இதனால யாருக்கு ஆதாயம்னு எப்பவாவது யோசிச்சிருக்கீங்களா?"

"..."

"நாம வெட்டிக்கிட்டு சாகறதை பார்த்து பம்பாய் போலீஸ் சந்தோஷப்படுது. இதெல்லாம் நமக்குத் தேவையா? இரண்டு தரப்பிலும் இதுவரைக்கு எத்தனையோ பேர் செத்திருக்காங்க... அடிப்பட்டு ஆஸ்பத்திரில அட்மிட் ஆகியிருக்காங்க... அவங்க எல்லாம் யாரு? நம்மால உருவாக்கப்பட்டவங்க. அவங்களை எல்லாம் லைனுக்கு கொண்டு வர நாம எத்தனை ஆண்டுகள் பயிற்சி தந்திருக்கோம்...

எவ்வளவு பணத்தை வாரி இறைச்சிருக்கோம்... இதெல்லாம் இப்படி வீணாகணுமா?"

"..."

"நான் சொல்லித்தான் உங்களுக்கு தெரியணும்னு இல்லை. நீங்க எல்லாருமே விஷயம் தெரிஞ்சவங்கதான். அதனாலதான் உங்க ஒவ்வொருவரை பார்த்தும் போலீஸ் பயப்படுது. ஆனா, என்ன பயன்? அல்ப விஷயத்துக்காக ஒருத்தருக்கு ஒருத்தர் அடிச்சிக்கறீங்க... இதெல்லாம் சரியான்னு நீங்களே யோசிச்சுப் பாருங்க..."

கடிகாரத்தில் விநாடி முள் நகரும் ஓசை துல்லியமாக கேட்டது. தங்களுக்கே கேட்காதபடி ஒவ்வொருவரும் சுவாசித்தார்கள். அமைதி அந்த இடத்தை ஆக்ரமித்தது.

சபீர் அதை கலைத்தான்.

"மஸ்தான் பாய்... நீங்க சொல்ற எதையும் நாங்க மறுக்கலை. நாம எல்லாருமே ஒரே மதத்தை சேர்ந்தவங்க, அதனாலயே சகோதரர்கள்னு எங்களுக்கும் தெரியும். ஆனா..."

"ஆனா?" புகைத்தபடியே மஸ்தான் புருவத்தை உயர்த்தினார்.

"அண்ணன் தம்பியா இருக்கறதாலயே அவங்க எங்களுக்கு ஆப்பு வைக்கறதை பார்த்துட்டு நாங்க சும்மா இருக்கணுமா?"

"பொத்திக்கிட்டுத்தான் இருக்கணும்..."

அமிர்ஸாதா குரலை உயர்த்தினான். "என்ன சொன்ன?" சபீர் சீறினான். "நிஜத்தை சொன்னேன். எங்களைப் பார்த்து பொறாமைப்படறதுல ஒரு அர்த்தமும் இல்லை. நாங்க யார் தெரியும்ல... பதான்ஸ். ஒரு காலத்துல பம்பாயை ஆட்சி செய்தவங்க. அதனால எங்களுக்கு நீங்க அடங்கித்தான் இருக்கணும்..."

"இல்லைனா என்ன செய்வீங்க? போட்டுத் தள்ளிடுவீங்களா?"

நாற்காலியை விட்டு அசையாமல் தாவூத் குரலை உயர்த்தினான். மீட்டிங்குக்கு வந்திருந்த அனைவரும் அவனையே பார்த்தார்கள். இருந்த இடத்தை விட்டு நகரவில்லை. அசையவில்லை. கண்கள் மட்டும் சிவந்திருந்தன.

நாசியின் வழியே புகையை வெளியேற்றியபடி தாவூத்தையே பார்த்தார் ஹாஜி மஸ்தான்.

"ஆமா. அதைத்தான் செய்வோம்..." தன் நாற்காலியை பின்னுக்கு தள்ளியபடி அமிர்ஸாதா எழுந்தான்.

கரீம்லாலாவை பார்த்தார் ஹாஜி மஸ்தான். புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக அமிர்ஸாதாவை பார்த்து லாலா முறைத்தார்.

உதட்டைக் கடித்தபடி தன் நாற்காலியில் பழையபடி அமிர்ஸாதா அமர்ந்தான்.

"இப்படி நீ பேசின ஒரு காரணத்துக்காகவே உன்னை பொலி போடலாம். அதுவும் இப்ப, இங்க, இந்த இடத்துல. ஆனா, லாலா பாய்க்காக பார்க்கறேன். இவரை நீ என்னவா நினைக்கறேன்னு

எனக்கு தெரியாது. ஆனா, எனக்கு இவர் அண்ணன். இவர் வீட்ல சோறு தின்னுருக்கேன். அந்த மரியாதை என் நெஞ்சுல இருக்கு. உன்னை மாதிரி புறம்போக்குக்காக இவரை புண்படுத்த விரும்பலை...” தாவூத்தின் குரல் நிதானமாக ஒலித்தது.

“என்னடா... திமிரா? விட்டா எங்களுக்கே பாடம் நடத்திடுவ போல... வாடா... வா... இப்ப இந்த இடத்துலயே கணக்கை தீர்த்துக்கலாம். மஸ்தான்பாயோ, லாலாபாயோ ஒண்ணும் சொல்ல மாட்டாங்க...”

சொன்னவனை இமைக்காமல் பார்த்தான் தாவூத். “பயப்படறியா..?” கேட்டுவிட்டு நக்கலாக சிரித்தான் அமிர்ஸாதா.

அவ்வளவுதான். தாவூத் தன் கையை பிடித்து தடுப்பதையும் பொருட்படுத்தாமல் சபீர் எழுந்தான். கோபத்தில் அவன் கன்னங்கள் அதிர்ந்தன.

மீட்டிங்குக்கு வந்திருந்த அனைவரும் வைத்த கண் வாங்காமல் சபீரையும், பிறகு தாவூத்தையும் பார்த்தார்கள்.

ஹாஜி மஸ்தான் எதுவும் சொல்லாமல் அடுத்த சிகரெட்டை பற்ற வைத்தார்.

நொடிக்கும் குறைவான நேரத்தில் ஜெனாபாயின் கண்களை தாவூத் சந்தித்தான்.

பிறகு தன் நாற்காலியை விட்டு எழுந்தான்.

55

மயான அமைதி.

மூச்சு விடவே அங்கிருந்தவர்கள் பயந்தார்கள்.

ஸ்லோ மோஷனில், தான் அமர்ந்திருந்த நாற்காலியை பின்னுக்கு தள்ளிவிட்டு தாவூத் எழுந்ததை - எழுந்துகொண்டிருந்ததை - எழுந்து நின்றதை -பார்த்தார்கள். பார்த்தபடியே இருந்தார்கள்.

என்ன நடக்கப்போகிறது? தெரியவில்லை.

ஆனால் – தங்கள் இதயம் ஹை ஸ்பீடில் துடிக்கத் தொடங்கியதை ஒவ்வொருவரும் தத்தம் செவியில் கேட்டார்கள். அப்படி கேட்டதை தங்கள் நெற்றியில் பூக்க ஆரம்பித்த வியர்வையின் வழியே உலகுக்கு அறிவித்தார்கள்.

அமிர்ஸாதாவின் கண்களில் அச்சம் படர்ந்தது. கரீம் லாலாவின் எச்சரிக்கையையும் மீறி இடுப்புப் பக்கம் தன் கைகளை கொண்டு சென்றான். துப்பாக்கியை கொண்டு வந்திருக்கிறானா?

வாயிலில் இஞ்ச் பை இஞ்ச் ஆக பரிசோதித்த அடியாட்கள் எப்படி இதை பறிமுதல் செய்யாமல் விட்டார்கள்?

ஒருவேளை அவர்களில் சிலரை தன் பக்கம் இழுத்துக் கொண்டிருக்கிறானா?

எனில், தாவூத்திடமும் ஆயுதம் இருக்குமே... இவனும் தன் பங்குக்கு 'செக்கிங்' செய்பவர்களை விலைக்கு வாங்கியிருப்பானே... பதிலுக்கு இவனும் டிக்கரை அழுத்தினால்...

கேள்விகள். வினாக்கள்.

விடை தேடும் நிலையில் ஒருவரும் இல்லை. எந்த நொடியிலும் தோட்டாக்கள் சீறலாம். சுற்றிலும் இருக்கும் கண்ணாடிகளில் ரத்தம் தெறிக்கலாம். உயிரும் பிரியலாம். பிரியவும் போகிறது.

எனில் – யார் யாருடைய உயிர்?

சீட்டு குலுக்கி பார்க்க முடியாது. குண்டு மழை பொழியும்போது இருப்பவர்கள் நனைந்துதான் ஆக வேண்டும்.

உள்ளங்கால் வியர்க்க ஜெனாபாயை பார்த்தார்கள். தடுக்க முடியுமா என பார்வையால் கெஞ்சினார்கள்.

அந்த வேண்டுகோளை கரீம் லாலா பக்கம் ஜெனாபாய் திருப்பினாள். குழம்பினாள்.

காரணம், சிலையாக அமர்ந்திருந்தார் லாலா.

உடல் சில்லிட சட்டென்று மஸ்தானை பார்த்தாள்.

அசையவில்லை. எழுந்திருக்க முற்படவில்லை. கைகளை அசைக்கவில்லை. எப்படி அமர்ந்தாரோ அப்படியே, அதே நிலையில் மஸ்தான் இருந்தார்.

வலக்கையின் ஆள்காட்டி விரலுக்கும், நடு விரலுக்கும் இடையில் சிகரெட் புகைந்துகொண்டிருக்க... சில கணங்களுக்கு முன் அவர்



இழுத்த நிகோடின், நாசியின் வழியே நேர்க்கோட்டில் வெளியேறிக் கொண்டிருந்தது.

ஆக, தடுக்கும் நிலையில் மூத்தவர்களும் இல்லை.

கையறு நிலையில் அனைவரது பார்வையும் தாவூத்திடம் நங்கூரமிட்டது.

அவன் நகர நகர அவர்களது கருவிழிகளும் பின்தொடர்ந்தன.

அமிர்ஸாதா காத்திருந்தான். அவன் கரங்கள் இடுப்பை விட்டு நகரவில்லை. எந்த மைக்ரோ நொடியிலும் தன் ஆயுதத்தை அவன் எடுக்கக்கூடும் என்பதற்கான அறிகுறிகள் தென்பட்டன.

தாவூத் யாரையும் கவனிக்கவுமில்லை.

பொருட்படுத்தவுமில்லை. அவ்வளவு ஏன் இடுப்புப் பக்கமோ பேன்ட் பாக்கெட்டிலோ தன் கைகளை நுழைக்கவுமில்லை.

சாதாரணமாக நடந்தான். மஸ்தானை குறி பார்த்து நகர்ந்தான்.

கழுத்தை வளைக்கவில்லை. திருப்பவில்லை. இமைக்கவில்லை. கவனித்தார். வருபவனை எதிர்கொண்டார். விரல்களுக்கு

இடையிலும், நாசியின் நுனியிலும் புகை வந்துகொண்டிருந்தது.

ஹாஜி மஸ்தானை நெருங்கிய தாவூத், எதுவும் பேசாமல் அவரது விரல்களில் இருந்த சிகரெட்டை எடுத்தான்.

திரும்பினான்.

நீளமான மேஜையின் நடுவில் ஆஷ்ட்ரே இருந்தது.

அதனருகில் வந்தவன், சிகரெட்டின் நுனியில் கனென்று கொண்டிருந்த நெருப்பை தன் கட்டை விரலாலும், ஆள்காட்டி விரலாலும் திருகினான். பொசுக்கினான்.

பொடிப் பொடியாக சாம்பல் உதிர்ந்தது. நிமிர்ந்தான்.

"நெருப்பை எப்படி கையாளணும்... எந்த நேரத்துல அதை வெறுங்கையால அணைக்கணும்னு எங்களுக்கு தெரியும். யாரும் பாடம் நடத்த வேண்டியதில்லை..." குரலை உயர்த்தாமல் நிதானமாக பேசியவன் அமிர்ஸாதாவின் கண்களை உற்றுப் பார்த்தான்.

"நாங்களும் உப்பு போட்டு சோறு திங்கறவங்கதான். சவாலுக்கு சவால்னு சவடால் அடிக்க எங்களுக்கும் தெரியும். ஆனா, நாங்க பேச மாட்டோம். செய்வோம். பார்க்கறியா?"

கேட்டவன் என்ன ஏது என்று மற்றவர்கள் சுதாரிப்பதற்குள் செயலில் இறங்கினான். தன் இடுப்பிலிருந்து எப்போது துப்பாக்கியை எடுத்தான் என்று தெரியாது.

ஆனால் – அதன் நுனி, அமிர்ஸாதாவின் நெற்றியை தடவிக் கொண்டிருந்தது.

"ஒரே அழுத்துதான். மூளை சிதறிடும். தெரிஞ்சுதா..?"

துப்பாக்கியை பழையபடி தன் பேன்ட்டில் சொருகினான்.

"இப்படி செய்ய எனக்கு ஒரு செகண்ட் கூட தேவைப்படாது. உன்னை மாதிரி லாலாகிட்ட அனுமதி கேட்டுகிட்டு இருக்க மாட்டேன். முடிவு பண்ணினதுமே போட்டு தள்ளிட்டு போய்கிட்டே இருப்பேன். ஆனா, இப்ப இந்த இடத்துல அதை செய்ய விரும்பலை. ஏன் தெரியுமா?"

மஸ்தானின் அருகில் வந்தான். "நம்மை மதிச்சு பெரிய மனுஷன் கூப்பிட்டிருக்கார். அவரை அவமானப்படுத்த விரும்பலை. நீ கேப்மாறின்னு எனக்கு தெரியும். இருந்தாலும் மரியாதையை கத்துக்க. குறிப்பா பெரியவங்க பேசும்போது குறுக்க புகுந்து சவுண்ட் விடாத..."

கைகளை உயர்த்தி தன் சட்டையை சரிசெய்தவன், கழுத்தை இப்படியும் அப்படியும் வளைத்து சொடக்கு எடுத்தான். வந்த வழியே திரும்பி தன் நாற்காலியில் அமர்ந்தான்.

யாரும் எதுவும் பேசவில்லை. அவர்களையும் அறியாமல் 'அப்பாடா' என பெருமூச்சு விட்டார்கள். இனி அசம்பாவிதம் எதுவும் நடக்காது என்பதே அவர்களுக்கு போதுமானதாக இருந்தது.

இதற்கு மாறாக அமிர்ஸாதாவும், அவனுடன் இருந்த பதான்ஸும்

வேகமாக சுவாசித்தார்கள். அவர்களது நாசிகள் அதிர்ந்தன. எதிர்த்து பேச துடித்தார்கள்.

ஆனால், அதனால் ஒரு பயனும் இல்லை என்பது புரிந்தது. சூழலை தனக்கு சாதகமாக தாவூத் திருப்பிவிட்டான். அனைவரது நம்பிக்கையையும் பெற்றுவிட்டான். இந்த நேரத்தில் என்ன பேசினாலும், செய்தாலும் அது தங்களுக்கு எதிராகத்தான் திரும்பும்.

உதட்டை கடித்தபடி தலைகுனிந்தார்கள். சமாதானக் கொடியை பறக்கவிட்டார்கள்.

இதை எல்லாம் கவனித்தபடி மஸ்தான் சிகரெட் பாக்கெட்டை எடுத்தார். அதிலிருந்து ஒன்றை எடுத்து பற்ற வைத்தார். கரீம் லாலாவையும், ஜெனாபாயையும் மாறிமாறி பார்த்தார்.

அவர் மனதில் ஓடிய அதே எண்ணத்தைதான் அவர்களும் பிரதிபலித்தார்கள்.

இதுவரை பேசியது தாவூத்தான். என்றாலும் அவர்கள் அறிந்த தாவூத் இவன் இல்லை. புதியவன். இருபத்தைந்து வயதுக்குள் பக்குவப்பட்டவன்.

சூழ்நிலையை கையாளத் தெரிந்தவன். சந்தேகமே இல்லை. நாளை பம்பாயை ஆட்சி செய்யப்போகிறவன் இவன்தான். அதற்கான அனைத்து அறிகுறிகளும் பேச்சில், செயலில் தெரிகிறது...

வாய் வழியாக புகைவிட்டபடியே லாலாவுக்கு ஜாடை காட்டினார்.

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக கரீம்லாலா எழுந்தார். தொண்டையை கனைத்தார்.

"என்ன இப்ப ஓ.கேதானே?" என பதான்ஸை பார்த்தார். அமிர்ஸாதா ஆமோதிக்கும் விதமாக தலையசைத்தான்.

"ம்க்கும். இப்ப தலையை தலையை ஆட்டு. சின்ன விஷயம்... பேசினா தீர்ந்துடப் போகுது. அதை விட்டுட்டு தெருவுல குஸ்தி போட்டீங்களே...

சரி சரி... ரெண்டு பேரும் எழுந்திருங்க..."

தாவூத்தும், அமிர்ஸாதாவும் ஒரே நேரத்தில் எழுந்தார்கள்.

"இப்படி வாங்க..."

வந்தார்கள்.

"கையை குலுக்குங்க..."

குலுக்கினார்கள்.

"இருங்க... எங்க போறீங்க?"

நின்றார்கள்.

"இந்தா இங்க வா..."

அடியாள் ஒருவன் வந்தான்.

மஸ்தானை சுட்டிக்காட்டி "பாயோட ரூம்ல நம்ம புனித நூல் இருக்கு. அதை கொண்டு வா..."

சென்றவன், மூன்றாவது நிமிடத்தில் திரும்பினான்.

அவனிடமிருந்து புனித நூலை வாங்கினார்.

“தாவூத், அமிர்ஸாதா... நல்லா கவனிங்க. முன்னாடியே பாய் சொன்னதுதான். திரும்பவும் சொல்றேன். நாம எல்லாரும் ஒரே மதத்துக்காரங்க. நமக்குள்ள நாம அடிச்சுகிட்டா அது எதிரிகளுக்குத்தான் சாதகமா முடியும். புரிஞ்சுதா?”

அமைதியாக நின்றார்கள்.

“நீங்க ரெண்டு பேரும் தோஸ்த்தாகிட்டீங்கன்னு தெரியும். ஆனாலும் அது கடைசி வரைக்கும் நீடிக்கணும். அதனால...” என்றபடி புனித நூலை நீட்டினார். “இனிமே நாங்க சண்டை போட மாட்டோம்னு இது மேல சத்தியம் செய்ங்க...”

கரீம்லாலா இப்படி சொன்னதும் தாவூத் அந்த இடத்தை விட்டு நகர்ந்தான்.

“தாவூத்...” லாலா கத்தினார்.

அதை காதில் வாங்காதது போல் தன் இடத்துக்கு சென்றவன், சபீரையும், அனிஸையும், தன் ஆட்களையும் எழுப்பினான்.

என்ன செய்ய நினைக்கிறான் என்று தெரியாமல் அனைவரும் திகைத்தார்கள். திரும்பவும் வேதாளம் முருங்கை மரம் ஏறிவிட்டதா? மிரட்சியுடன் கவனித்தார்கள்.

ஒரு குழுவாக தன் படையுடன் லாலாவின் அருகில் வந்தான். முதல் ஆளாக புனித நூலின் மேல் தன் வலது கையை வைத்தான். அவ்வளவுதான். மடமடவென்று சபீரும், அனிஸூம், மற்றவர்களும் தங்கள் வலக்கையை வைத்தார்கள்.

“என்னடா... உனக்கு வேற தனியா சொல்லணுமா?”

கரீம் லாலா கத்திய பிறகுதான் அமிர்ஸாதா சுயநினைவுக்கு வந்தான். வேகமாக தன் ஆட்கள் பக்கம் திரும்பினான். அதற்குள் அவர்களே விழுந்து அடித்து ஓடி வந்திருந்தார்கள்.

தங்கள் பங்குக்கு அவர்களும் அந்த புனித நூலின் மீது தங்கள் வலக்கையை வைத்தார்கள்.

“நான் சொல்றதை அப்படியே சொல்லுங்க...”

சொல்வதற்காக காத்திருந்தார்கள்.

“இனி நாங்க சண்டை போட மாட்டோம்...”

திருப்பி சொன்னார்கள்.

“ஒருத்தரை ஒருத்தர் அடிச்சுகிட்டு ரத்தம் சிந்த மாட்டோம்...” எதிரொலித்தார்கள்.

“இது சத்தியம்...”

கோரஸ் அடங்கியது.

மறுகணம் ஹாஜி மஸ்தான் எழுந்து நின்று கைதட்டினார். அவரைத் தொடர்ந்து மற்றவர்களும்.

முணுமுணுப்பு, பேச்சு சத்தம், சிரிப்பு... என அந்த இடத்தின்

சூழலே மாறியது.

"ரைட். பார்ட்டியை தொடங்கிடலாமா?"

"நீ வந்ததே அதுக்குத்தான்னு தெரியும்.

அலையாத..."

"த்தோடா. நீ மட்டும் எதுக்கு வந்த? சூச்சூ போகவா..."

"ஏய்..."

"ஹோய்..."

வேடிக்கை. கலகலப்பு. கட்டிப் பிடித்தல். அரவணைப்பு. செல்ல அடி. குட்டு. டீ. பிஸ்கெட். நாட்டு சாராயம். வெளிநாட்டு மது. உணவு. பாட்டு. டான்ஸ்...

தாவூத் அமைதியாக எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருந்தான்.

"சாப்பிடலை?" சிக்கன் பீஸை வாயில் போட்டபடி சபீர் கேட்டான்.

"பசிக்கலை..."

"அப்படி தெரியலையே..?" சுற்றிலும் பார்த்துவிட்டு குரலை தாழ்த்தினான். "என்ன யோசனை..?"

"..."

"அமிர்ஸாதாவை எப்படி போட்டுத் தள்ளறதுன்னா?"

"இல்ல..."

"அப்புறம்?"

"ஒண்ணுமில்ல. நீ போ..."

"முடியாது. சொல்லு. எதைப் பத்தி சிந்திக்கறே?"

"அதுதான் எதுவுமில்லைனு சொல்லிட்டனே..."

"இதை யாராவது கேணையன் கிட்ட சொல்லு. நம்புவான்..."

"சபீர்..."

"மெதுவா... மெதுவா பேசு..."

"..."

"உன்னை எனக்கு தெரியும். மறைக்காதே. சொல்லு. என்ன விஷயம்?"

"பச். நத்திங். நீ போ..."

"முடியாது..."

"தொந்தரவு பண்ணாத சபீர்..."

"எதை தொந்தரவு செய்யக்கூடாது..?"

"..."

"யோசனையையா?"

திரும்பி சபீரை உற்றுப் பார்த்தான். "ஆமா..."

"சரி. நான் போறேன்..."

"ம்..."

"உண்மையை சொன்னதும்..."

“சபீர்...”

“அலுத்துக்காத. என்ன விஷயம்னு சொல்லு...”

தெரிந்து கொள்ளாமல் நகர மாட்டான் என்று புரிந்தது. தலையை கோதியபடி தாவூத் முணுமுணுத்தான்.

“மஸ்தானை பத்திதான் யோசிச்சுட்டு இருக்கேன்...”

சபீருக்கு புரை ஏறியது. இருமியபடி தண்ணீர் குடித்தான்.

“என்னடா சொல்ற...”

“உண்மையை...”

“எந்த உண்மையை?”

“மஸ்தான் நம்மை அழைச்சதை...”

“ஏன் அதுக்கென்ன?”

‘‘அதுக்கென்னவா...’’ பற்களை கடித்தான். ‘‘நடந்தது சமாதானத்துக்கான மீட்டிங்குன்னு நினைக்கறியா?”

“பின்ன..?”

“முட்டாள். இது மஸ்தான் நடத்தற நாடகம்...”

“என்னது..?”

‘‘எதுக்கு இப்படி அதிர்ச்சி அடையற? தாவூத் சொல்றது சரிதான்...”

நடுவில் ஒலித்த பெண்குரலை கேட்டு இருவரும் திரும்பினார்கள். திகைத்தார்கள்.

புன்னகையுடன் அவர்களுக்கு பின்னால் ஜெனாபாய் நின்றிருந்தாள்!

# 56

“என்ன... குண்டை தூக்கி போடறீங்க?” வாயிலிருந்த சிக்கன் துண்டுகள் சிதற சபீர் அதிர்ந்தான்.

“வேறென்ன செய்ய சொல்ற?” ஜெனாபாய் அளவுக்கு மீறி மலர்ந்தாள்.

“ம்ஹூம். இப்படி மறைமுகமா எல்லாம் பேசாதீங்க. நான் டியூப் லைட்...”

“அதான் தெரியுமே!”

“அம்மா ப்ளீஸ். விளையாட இது நேரமில்லை...”

“அதுக்கு என் உடம்புல தெம்பும் இல்லை...”

“ம்மா...”

“ஓ.கே. ஓ.கே. கேளு...”

“அதான் கேட்டுட்டோமே? வெட்டு ஒண்ணு துண்டு ரெண்டுன்னு போட்டு உடைங்க...”

“ஏற்கனவே உடைச்சாச்சே...”

“அதாவது... இதுவரைக்கும் நடந்ததெல்லாம் டிராமா. அப்படித்தானே?”

“ஆமா...”

“எதுக்காக இந்த நாடகம்?” அதுவரை அமைதியாக இருந்த தாவூத், தன் வளர்ப்புத் தாயின் கண்களை நேருக்கு நேர் சந்தித்தபடி கேட்டான்.

அவனையே கண்கொட்டாமல் பார்த்தாள். நெஞ்சம் விம்மியது. தான், பார்த்து வளர்ந்த குழந்தை. எடுத்து வளர்த்த பாலகன்.

தன் கையால் உணவு உண்டவன். தன் மடியில் உறங்கியவன். வாப்பா அடித்தபோது ஆறுதலுக்கு தன்னை தஞ்சமடைந்தவன்.

பொக்கை வாயுடனும் பார்த்திருக்கிறாள். பால்பல் உதிரும்போதும் கண்டிருக்கிறாள். கடைவாய் பல்லினால் எலும்புகளை கடித்து உண்பதையும் ரசித்திருக்கிறாள்.

கபடமில்லாத கண்கள். குறும்புப் பார்வை. கழிவிரக்கம் சொட்டிய தருணம். இயலாமையை வெளிப்படுத்திய கணம். கனவில் சஞ்சரித்த நொடிகள். தெனாவெட்டுடன் அலைந்த நொடி...எல்லா உணர்வுகளையும் வெளிப்படுத்தியது இதே கண்கள் தான். அதுவேதான் இப்போது ஆழ்கடலின் அமைதியுடன் இருக்கிறது. உள்ளுக்குள் சுனாமி இருப்பதை அது ஒரு துளி கூட வெளிப்படுத்தவில்லை.

இதுதான் தாவூத். இவன்தான் நான் கனவு கண்ட மகன். இவனே இந்த மாஃபியா உலகின் பேரரசன்.

“இன்னும் கொஞ்ச நேரத்துல நீயே புரிஞ்சுப்ப...” அவனது முன்னுச்சி முடிகளை கலைத்தாள்.

“ஏன் நீங்க சொல்லக்கூடாதா?”

*"அது தப்பாகிடும்..."*

*"யாருக்கு?"*

*"நம்ம உறவுக்கு..." சொன்ன ஜெனாபாய் சுற்றிலும் பார்த்தாள். எல்லா 'டான்'களும் ஆடிப்பாடி தங்கள் மகிழ்ச்சியை வெளிப்படுத்திக் கொண்டிருந்தார்கள்.*

*தாவூத் பக்கம் திரும்பாமல் அங்கிருந்தவர்களை பார்த்தபடியே இயல்பான தொனியில் தொடர்ந்தாள்.*

*"இந்த இடம் ரகசியம் பேசறதுக்கான இடமில்லை. எல்லாரும் நம்மை கவனிக்கிறாங்க..."*

*"புரியுது..." சபீர் பக்கம் திரும்பிய தாவூத், தனக்கு பின்னால் நின்றிருந்த ஜெனாபாய்க்கு மட்டும் கேட்கும் வகையில் முணுமுணுத்தான்.*

*"இந்த நாடகத்தால எனக்கென்ன லாபம்?"*

*"இங்க நீ வந்தது..."*

*சபீரும் தாவூத்தும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள்.*

*"நான் லாலா பக்கம் போறேன்..."*

*"ம்..."*

*"மஸ்தான் என்ன சொன்னாலும் கேளு..."*

*"கேட்கறதோட அவர் சொல்றதையும் செய்யறேன்..."*

*சட்டென்று தாவூத்தை நெருங்கி அவன் நெற்றியில் முத்தமிட்டாள். விலகினாள். அகன்றாள்.*

*"அவங்க என்ன சொல்றாங்க?"*

*"எனக்கு பசிக்குது. வா. சாப்டுகிட்டே பேசலாம்..."*

*உணவின் அருகில் சென்ற தாவூத், தட்டை எடுத்தான். தனக்கு வேண்டியதை போட்டுக் கொண்டான். சற்று தள்ளியிருந்த நாற்காலியில் கால் மேல் கால் போட்டபடி அமர்ந்தான். நிதானமாக சாப்பிட ஆரம்பித்தான்.*

*அவன் அருகில் அமர்ந்த சபீருக்கு இருப்பு கொள்ளவில்லை. "இப்ப சொல்லு..."*

*"நாம இருக்கறது தொங்கிரில..."*

*"ம்..."*

*"அடிப்படைல நாம தெரு பொறுக்கிங்க..."*

*"என்ன இப்படி சொல்ற?"*

*"உண்மை அதுதானே? சின்னச் சின்ன ஏமாற்று வேலைகளை செய்யறோம். போலீஸ் சுட்டிக்காட்டற பதான்ஸை அடிக்கிறோம். குறிப்பிட்ட ஏரியாவுல மாமூல் வாங்கறோம். தொங்கிரிக்குள்ள பஞ்சாயத்து பண்றோம். இதைத் தாண்டி நமக்கு என்ன மதிப்பு இருக்கு?"*

*சாப்பிடுவதை மறந்துவிட்டு தன் சகோதரனையே சபீர் வெறித்தான்.*

“என்ன அப்படி பார்க்கிற? நான் சொல்றது சரிதானே?”

“ஆனா...”

“ஆனா ஆவன்னா எல்லாம் இல்லை. கரெக்ட்டா தப்பா?”

“கரெக்ட்...”

“அப்படிப்பட்ட நம்மை ஏன் தொங்கிரிக்கு மறுமுனைல இருக்கிற இந்த இடத்துக்கு மஸ்தான் கூப்பிடணும்?”

“பதான்ஸோட சண்டை போட வேண்டாம்னு சொல்லத்தான்...”

“உன் மூஞ்சி. அதுக்கு நம்மையும் அமிர்ஸாதாவையும் மட்டும் கூப்பிட்டா போதுமே? எதுக்காக பம்பாய்ல இருக்கிற எல்லா ‘டான்’ஸையும் அழைக்கணும்... மீட்டிங் அரேஞ்ச் செய்யணும்?”

“என்னடா சொல்ற?”

“ஜெனாபாய் சொன்னதை உனக்கு டிரான்ஸ்லேட் செய்யறேன். அவ்வளவுதான். நம்மால மஸ்தானுக்கு ஏதோ ஒரு காரியம் ஆக வேண்டியிருக்கு. பிரதி உபகாரமா மத்த டான்ஸுக்கு சமமா ‘உங்களையும் மதிக்கறேன்’னு நம்மை பார்த்து சொல்லாம சொல்றார். மத்த மாஃபியாக்களுக்கும் இதை புரியவைக்கிறார்...”

“ம்...”

“இந்த வாய்ப்பை மிஸ் பண்ணாதேன்னு அம்மா சொல்லிட்டு போறாங்க...”

“அதாவது இந்த சான்ஸை பயன்படுத்தி நம்மை முன்னேற சொல்றாங்க. அப்படித்தானே?”

“அப்பாடா. ஸ்விட்ச் போட்ட பல நிமிஷங்களுக்கு பிறகு இப்பவாவது பல்பு எரியுதே!”

தாவூத்தின் தோளில் செல்லமாக சபீர் குத்தினான். விலகுவது போல் பாசாங்கு செய்தபடி வலப்பக்கம் திரும்பினான் தாவூத். அங்கே மரத்தின் அடியில் உணவருந்திகொண்டிருந்தான் அமிர்ஸாதா. சபீரின் பார்வையும் அதே இடத்தில் பதிந்தது.

“இவனை எப்ப போட்டுத்தள்ளலாம்...”

“அதை மட்டும் செய்யவே கூடாது சபீர்...”

“ஏன்?”

“புனித நூல் மேல சத்தியம் செய்திருக்கோம். அதை மறக்காதே...”

“அப்ப சமாதானமா போகலாம்னு சொல்றியா?”

“ஆமா. இப்ப நாம இருக்கிற நிலைக்குதான் இவன் எதிரி. அதுவே அடுத்தடுத்த நிலைக்கு நாம உயர்ந்துட்டா இந்த அமிர்ஸாதா எல்லாம் வெறும் சாதா. சொல்றதுக்கில்லை. நாம சொல்ற வேலையை கூட இவன் செய்யலாம்...”

சிரித்தான். சிரித்தார்கள்.

சத்தம் கேட்டு இவர்கள் பக்கம் திரும்பிய அமிர்ஸாதாவின் கண்கள் சில நொடிகள் இடுங்கின. பிறகு தன் பங்குக்கு தானும் சிரித்தான்.

இதையெல்லாம் பார்த்துக்கொண்டிருந்த கரீம்லாலா, திருப்தியுடன் ஹாஜி மஸ்தானை ஏறிட்டார்.

"பசங்க தோஸ்த்தாகிட்டாங்க..."

"ம்..."

"இப்ப அவங்களை கூப்பிட்டு உங்க கோரிக்கையை சொல்லலாமே?"

"பொறு. மத்தவங்க போகட்டும்..."

"அதுவும் சரிதான்..."

கரீம் லாலா நிம்மதியுடன் தன் கைகளை உயர்த்தி சோம்பல் முறித்தார்.

ஜெனாபாய் எதுவும் பேசவில்லை. சாப்பிடுவதில் கவனம் செலுத்தினாள்.

ஆட்டம் பாட்டம் கொண்டாட்டம் முடிந்து ஒவ்வொருவராக வந்தார்கள். மஸ்தானின் வலது கையில் முத்தமிட்டார்கள். விடைபெற்றார்கள்.

"வா... நாமளும் போகலாம்..." கழுவிய கையை துடைத்தபடி சபீர் அழைத்தான்.

"நம்மை இருக்க சொல்றார்..."

"யாரு?"

"லாலா..."

"எப்ப சொன்னார்..?"

"சொல்லிகிட்டே இருக்கார்..."

புருவத்தை உயர்த்தி தாவூத் ஜாடை காட்டிய இடத்தை பார்த்தான்.

மஸ்தானுக்கு அருகில் நின்றிருந்த கரீம்லாலா இவர்களை பார்த்து புன்னகைத்துக் கொண்டிருந்தார்.

"இந்த கட்டளை நமக்கு மட்டும்தானா?"

"பதான்ஸ்களுக்கும்தான்..."

"ஓ... நாடகத்தோட க்ளைமாக்ஸா?"

தாவூத்தின் உதடுகளில் புன்னகை பூத்தது.

"வாழ்க்கைலயே முதல் முறையா இப்பத்தான் சட்டுன்னு ஒரு விஷயத்தை புரிஞ்சுகிட்டிருக்கே!"

"ம்க்கும்..."

மகிழ்ச்சியான மனநிலையுடன் இருந்தவர்களை கண்களால் அருகில் அழைத்தார் லாலா.

இதே அழைப்பு அமிர்ஸாதாவுக்கும் சென்றது.

இரண்டு தரப்பினரும் இருதிசைகளில் இருந்து மஸ்தானை நோக்கி வந்தார்கள்.

அவர்களை ஊடுருவியபடி சிகரெட்டை பற்ற வைத்தார்.

"இனிமே சண்டை போட மாட்டீங்களே?" லைட்டரை

அணைத்துவிட்டு ஹாஜி மஸ்தான் சிரித்தார்.

"சத்தியத்தை மீறமாட்டோம்..."

தாவூத் சொன்னதை அமிர்ஸாதா தலையசைத்து ஆமோதித்தான்.

"இதை எப்படி நான் நம்பறது?" நாசி வழியே நிகோடினை வெளியேற்றினார்.

தாவூத் தனக்குள் சிரித்துக் கொண்டான். சந்தேகம் வராதபடி கச்சிதமாக காய்களை நகர்த்துகிறார். இந்த வித்தையை கற்க வேண்டும். அதற்கு முதல்படி, அவர் இழுப்புக்கு செல்வது.

சென்றான்.

"என்ன செய்தா நம்புவீங்க?"

சிகரெட்டை ஆழமாக இழுத்தார். அமிர்ஸாதாவை ஆராய்ந்தார். தாவூத் மீது தன் பார்வையை பதித்தார். "இணைஞ்சு வேலை பார்ப்பீங்களா?"

"பார்க்கிறோம்..." சட்டென்று அமிர்ஸாதா பதிலளித்தான்.

"யாரை போட்டுத் தள்ளணும்?" ஒவ்வொரு சொல்லுக்கும் அழுத்தம் கொடுத்து நிதானமாக கேட்டான் தாவூத்.

வாய் வழியே புகைவிட்டபடி எழுந்து நின்றார் மஸ்தான். "வெளியேற்றினா போதும்..."

"யாரை..?" சபீர் படபடத்தான்.

"ஒரு கூட்டத்தை..."

"நீங்க சொல்லியுமா அவங்க கேட்கலை?" அமிர்ஸாதா கண்களை விரித்தான்.

"ஆமா. கைகோர்த்துகிட்டு நீங்க ரெண்டு பேரும் போனாதான் அவங்க வெளியேறுவாங்களாம்..." இடைமறித்த கரீம்லாலா வாய்விட்டு சிரித்தார்.

சின்னதாக உதட்டை அசைத்து அதை எதிரொலித்தார் ஹாஜி மஸ்தான். ஜெனாபாய், தன் வளர்ப்பு மகனையே பார்த்துக் கொண்டிருந்தாள். மஸ்தானை தவிர வேறு யாரையும் தாவூத் பார்க்கவில்லை. "அவங்க எங்க இருக்காங்க பாய்?"

"பெல்லாசிஸ் ரோடுல..."

"பம்பாய் சென்ட்ரல் பக்கத்துலயா?"

அமிர்ஸாதா இடைமறித்தான்.

"ஆமா..."

"சிலியாஸை சொல்றீங்களா?"

கேட்ட தாவூத்தை அளவிட்டபடியே புகையை வெளியேற்றினார். எதிர்பார்த்ததை விட ஆபத்தானவன். சின்ன கீறல் போதும். ரோட்டையே போட்டு விடுவான். எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

"ம்..."

"சரி நாங்க பார்த்துக்கறோம்..."

“எப்ப களத்துல இறங்கறீங்க?”

“இப்ப...” சொன்ன அமிர்ஸாதா, தன் புதிய நண்பனை பார்த்தான்.

‘ஓ.கே’ என்பதற்கு அறிகுறியாக இமைகளை மூடித் திறந்தான் தாவூத்.

“முடிச்சுட்டு சொல்லுங்க...”

“அதுக்கு அவசியமில்லை லாலா. அரை மணிநேரத்துல நாங்க பெல்லாசிஸ் ரோட்டுக்கு போயிடுவோம். அதுக்கு பிறகு அதிகபட்சம் ஒரு மணி நேரம். அவ்வளவுதான்...”

“அப்ப ஒன்றரை மணி நேரத்துக்கு பிறகு அங்க நாங்க வந்தா காரியம் முடிஞ்சிருக்கும். அப்படித்தானே தாவூத்?”

“ஆமா...”

சொன்னவன் லாலாவுக்கு கை குலுக்கினான். மஸ்தானின் விரல்களில் முத்தமிட்டான்.

அமிர்ஸாதா உட்பட மற்றவர்களும் அப்படியே விடைபெற்றார்கள். வாக்களித்தபடி கச்சிதமாக காரியத்தை முடித்தார்கள். சிலியாஸ் என்பவர்கள் குஜராத்தை சேர்ந்த இஸ்லாமிய பழங்குடியினர். பம்பாயில் செட்டிலானவர்கள். இவர்களை ‘அந்த’ இடத்திலிருந்து வெளியேற்ற பல வருடங்களாக ஹாஜி மஸ்தான் முயற்சித்து கொண்டிருந்தார்.

ஆனால் - மாபெரும் கடத்தல்காரர் என்று எந்த அளவுக்கு பெயர் வாங்கியிருந்தாரோ - அதே அளவுக்கு உடல் பலம் இல்லாதவர் என்ற புகழையும் ஈட்டியிருந்தார்.

எனவே சிலியாஸ் குழுவினர் அவரது கண்களில் விரல்விட்டு ஆட்டினார்கள். மஸ்தானுக்கு எதிரானவர்களுடன் கூட்டு சேர்ந்து அவரை எதிர்த்தார்கள்.

இதற்கு ஒரு முடிவு கட்டவே தனக்கு எதிராக யார் யாரெல்லாம் இருக்கிறார்களோ, அவர்களுடன் எல்லாம் கைகோர்த்தார்.

வளர்ந்துவந்த தாவூத் இப்ராஹிமையும், அமிர்ஸாதாவையும் ஒன்று சேர்த்தது கூட அதற்குத்தான்.

மஸ்தானின் இந்த மாஸ்டர் ப்ளான் பக்காவாக ஒர்க்அவுட் ஆனது.

எப்போது தாவூத்தும், அமிர்ஸாதாவும் இணைந்து வந்தார்களோ - அப்பொழுதே தங்களுக்கு முடிவு காலம் வந்துவிட்டது என்பதை சிலியாஸ் உணர்ந்தனர்.

ஆனாலும் கடைசி வரை போராடிப் பார்த்தார்கள். என்றாலும் வெற்றி கிட்டவில்லை. கையில் கிடைத்த பொருட்களை எல்லாம் தாவூத் - அமிர்ஸாதா அணியினர் வீசி எறிந்தார்கள். ஆயுதங்களால் சிலியாஸின் வீட்டை இடித்து தரைமட்டமாக்கினார்கள். இரும்புக் கழியால் கண்ணில் பட்டவர்களை அடித்துத் துரத்தினார்கள்.

தாவூத் கணக்கிட்டது போலவே நடந்து முடிந்தது. சரியாக ஒரு

மணி நேரம் - அந்த இடம் காலியானது.

ரத்தம் வழிய வழிய சிலியாஸ் சிதறினார்கள். கரீம் லாலாவுடன் காரில் வந்து அந்த வெற்று நிலத்தை மஸ்தான் பார்த்தார். பார்த்துக் கொண்டே இருந்தார்.

அத்துடன், தான் கனவு கண்டபடி அந்த இடத்தில் அடுக்குமாடி கட்டிடத்தையும் கட்டினார்.

அந்த பில்டிங்தான் - 'மஸ்தான் டவர்ஸ்!'

# 57

“ரொம்ப சந்தோஷமா இருக்க போலிருக்கு?”

தாவூத்திடம் கேட்ட சபீரின் குரலில் மட்டுமல்ல அங்கிருந்த அடியாட்களின் முகங்களிலும் மகிழ்ச்சியே பூத்திருந்தது.

அதற்கு காரணமும் இருந்தது.

இப்போது அவர்களது குழு வளர்ந்திருந்தது. எண்ணிக்கையில் மட்டுமல்ல. தொழிலிலும். முன்பு போல் சின்னச் சின்ன திருட்டு, வழிப்பறிகளில் இப்போது அவர்கள் ஈடுபடவில்லை. எலெக்ட்ரானிக்ஸ் பொருட்களை கடத்தும் அளவுக்கு உயர்ந்திருந்தார்கள். உள்ளூர் பஞ்சாயத்துகளுக்கு நேரடியாக தாவூத் செல்வது என்ற நிலை மாறியிருந்தது. அவனது ரெப்ரசன்டேடிவ் சென்றாலே போதும். காரியம் முடியும் என்ற தெளிவு அடித்தட்டு மக்கள் மனதில் கல்வெட்டாக பதிந்திருந்தது. கேட்காமலேயே மாமூல் வந்தது. விலைவாசி ஏறும்போதெல்லாம் அது அதிகரிக்கவும் செய்தது.

மொத்தத்தில் இதுநாள் வரை அவர்களுக்கு ஒரே எதிரியாக இருந்த பதான்ஸ், இப்போது நண்பர்களாகி இருந்தார்கள். எனவே தெருச்சண்டைகள் அரங்கேறவில்லை. அதனாலேயே காவல்துறை ரிலாக்ஸ் ஆனது. ஏற்கனவே ‘தங்கள்’ தலைமை ஏட்டின் மகன் என தாவூத் மீது தனிப் பாசம் காட்டி வந்தார்கள். பெரும்பாலான விஷயங்களை கண்டுகொள்ளாமல் விட்டார்கள்.

அந்த நேசம் இப்போது அதிகரித்தது. எனவே உயர் அதிகாரிகளில் தொடங்கி கடைநிலை ஏட்டு வரை ஒட்டுமொத்த பம்பாய் காவல்துறையும் தாவூத்தின் சுண்டுவிரலுக்கு ஏற்ப அசைந்தது. ஆடியது.

இப்படியொரு ‘புரிந்துணர்வு’ ஒப்பந்தத்தை காவல்துறையுடன் எந்த தாதாவும் இதற்கு முன் போட்டதில்லை. பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றிலேயே இதுதான் முதல் முறை. இதை தன் இருபத்தைந்து வயதுக்குள் தாவூத் சாதித்தான் என்பது முக்கியம். என்றாலும் மற்றவர்கள் எதிர்பார்த்ததுபோல் பதான்ஸுடன் தொழில் ரீதியான கூட்டை அவன் ஏற்படுத்திக்கொள்ளவில்லை.

“அதுக்கு அவசியமும் இல்ல. அவங்கவங்க வேலையை அவங்கவங்க பார்க்கலாம். பதான்ஸ் ஏரியாக்குள்ள நாம நுழையவும் வேண்டாம். நம்ம பிசினஸ்ல அவங்க தலையிட அனுமதிக்கவும் வேண்டாம். புனிதநூல் மேல சத்தியம் செய்திருக்கோம். அதனால சண்டை சச்சரவு இல்லை. மற்றபடி நாம தனிகாட்டு ராஜாக்கள்தான்...”

வெற்றிகரமாக சிலியாஸை அப்புறப்படுத்தி, அந்த நிலத்தை மஸ்தானிடம் ஒப்படைத்த பின் தாவூத் தன் ஆட்களிடம் இதைத்தான்

அழுத்திச் சொன்னான். அதற்கு ஏற்பவே நடக்கவும் செய்தான்.
எனவேதான் இந்த மகிழ்ச்சி. கொண்டாட்டம்.
இதைதான் குறிப்பால் அன்று உணர்த்தினான் சபீர்.
''சந்தோஷம்தான். ஆனா, நிலையான மகிழ்ச்சி இல்ல...'' கண்களை இடுக்கியபடி தாவூத் பதிலளித்தான்.
சட்டென்று அங்கு நிலைமை மாறியது. ஒருவரையொருவர் பார்த்துக்கொண்டார்கள்.
"ஏன் இப்படி சொல்ற?"
"வேற எப்படி சொல்லணும்னு எதிர்பார்க்கிறே?" கேட்ட தாவூத் எழுந்து நின்றான்.
"புரியல. நாம இப்ப நல்லாதானே இருக்கோம்?"
"அதை நான் மறுக்கலையே. ஆனா, இது தொடருமான்னுதான் சந்தேகப்படறேன்..."
"காரணம்?"
"தேங்கிப்போன நம்ம வளர்ச்சி..."
''தேக்கமா? என்ன விளையாடறியா..?'' சொன்ன சபீர் அங்கிருந்தவர்களை பார்த்தான். சிரித்தான். இமைக்கும் நேரத்தில் தன் தம்பி பக்கம் திரும்பினான்.
''முட்டாள்தனத்துக்கும் ஓர் அளவிருக்கு. எல்லாத்தையும் சந்தேகப்படத்தான் செய்யணும். மறுக்கலை. ஆனா, நாம தேங்கிப் போயிட்டோம்னு மட்டும் சொல்லாத. இப்ப நம்ம பொசிஷன் என்ன தெரியுமா? உன்னைத்தான் தாவூத்... இப்ப நாம எந்த நிலைல இருக்கோம் தெரியுமா? உச்சில. எப்ப மஸ்தான் பாய் நமக்கு அழைப்பு அனுப்பினாரோ... தனக்கு சமமா நம்மையும் அமர வைச்சாரோ... அப்பவே நம்ம அந்தஸ்து உயர்ந்துடுச்சு. இதை நான் சொல்லலை. ஒட்டுமொத்த பம்பாயும் சொல்லுது. வெளில போய் பாரு... எப்படிப்பட்ட மரியாதை நமக்கு கிடைக்குதுன்னு உனக்கே தெரியும். பையா... இப்ப நாம பெட்டி கேஸ் திருடர்கள் இல்ல. கடத்தல்காரங்க. அதை முதல்ல புரிஞ்சுக்க..."
"புரிஞ்சதுனாலதான் சபீர் சொல்றேன்... நாம தேங்கிட்டோம்னு..."
"தாவூத்..."
"வெளில போய் பார்க்க வேண்டியது நானில்லை. நீ. என்ன சொன்னே... அந்தஸ்து உயர்ந்திருக்கா? காமெடி பண்ணாதே. நடுரோட்டுல வெட்டுக் குத்து நடக்கலை. மற்றபடி முன்ன எப்படி இருந்தோமோ அப்படியேதான் இப்பவும் இருக்கோம். அப்புறம் ஏதோ சொன்னியே... என்ன அது? யெஸ்... கடத்தல்காரங்க... அந்த சொல்லை மட்டும் பயன்படுத்தாதே. யாராவது கேட்டா சிரிப்பாங்க..."
"எவன் சிரிப்பான்? உளறாத..."
"பெனாத்தறது நானில்லை. நீ..."



“தாவூத்...”

“எலெக்ட்ரானிக்ஸ் பொருட்களை அங்க இங்க கொண்டு போகறதுக்கு பேரு கடத்தலா? அதை சின்ன பையன் கூட செய்வான்...”

“சரி. அப்ப வேற என்ன செய்தா ஸ்மக்கிலிங்னு சொல்லுவ?”

“கோல்ட்...”

“என்னது?”

“தங்கம் சபீர் தங்கம். அந்த பிசினஸ் நம்ம கைக்கு இன்னும் வரலை. அதனாலதான் நாம இன்னும் வளரலைன்னு சொல்றேன்... இன்னும் தெளிவா சொல்லணும்னா நாம இன்னும் மாஃபியாவா ஆகலை. வெறும் தெரு ரவுடிங்கதான். புரிஞ்சுதா?”

“ஆனா, அது மஸ்தான் பாய் ஏரியாவாச்சே?”

“அப்படீன்னு எங்கயாவது எழுதி

வைச்சிருக்கா?"

"இல்லைதான்..." இழுத்த சபீர், "அப்ப தங்கக் கடத்தல்ல நாமளும் இறங்குவோம்..." என்றான்.

"எப்படி?"

"புரியலை..."

"எ...ப்...ப...டி.... தங்கத்தை கடத்தப் போறோம்னு கேட்டேன்..." பற்களை கடித்தபடி வாக்கியத்தை அழுத்தினான். "நம்மகிட்ட என்ன வழிமுறை இருக்கு? கோல்ட் ஸ்மக்கிலிங் பத்தி நமக்கு என்ன தெரியும்?"

ஊசி விழுந்தால் ஒலி கேட்கும். அந்தளவுக்கு அந்த இடம் அமைதியானது. அடியாட்களின் மனதில் இருந்த மகிழ்ச்சியும் அகன்று இறுக்கம் சூழ்ந்தது.

அதை கலைத்தவன் காலிப்தான்.

"நான் ஒருத்தன் இருக்கும்போது இப்படி சொல்லலாமா தாவூத்?"

அனைவரும் காலிப் பக்கம் திரும்பினார்கள்.

"இன்னமும் உங்கள்ல ஒருத்தனா என்னை சேர்த்துக்கலை. அப்படித்தானே?"

"அதில்லை காலிப்..."

"பேசாத தாவூத். எனக்கு நல்லா புரிஞ்சுடுச்சு. இன்னமும் என்னை எதிரியாதான் பார்க்கறீங்க. இல்லைனா இப்படியொரு சொல் உன் வாயிலிருந்து வந்திருக்குமா..?"

"நான் சொல்ல வந்ததை நீ தப்பா புரிஞ்சுகிட்ட....

"இல்லை. சரியா புரிஞ்சதுனாலதான் பேசறேன். என்னை வைச்சுகிட்டே 'தங்கத்தை கடத்த நம்மகிட்ட என்ன வழிமுறை இருக்கு'ன்னு நீ எப்படி கேட்கலாம்?"

சம்மட்டியால் அடித்தது போல் சட்டென்று கனவிலிருந்து சபீர் மீண்டான். ஆஹா...

இதற்குத்தான் தாவூத் அடி போடுகிறானா...

அதனால்தான் அப்படி இடக்கு மடக்காக பேசி தன்னை மடக்கினானா... பாவி. படுபாவி. எங்கிருந்து இந்த வித்தையை கற்றான்?

அடி தூள். மவனே இப்ப சொல்றேன்டா...

நீ வளர்ந்துட்ட. பம்பாய் என்ன பம்பாய்... சுண்டைக்காய். இந்தியாவையே இன்னும் கொஞ்ச வருஷத்துல நீதான் ஆளப் போறே...

விசிலடிக்க வேண்டும் போல் தோன்றியது.

சிரமப்பட்டு அதை கட்டுப்படுத்தினான். தன் தம்பி வெறும் கில்லாடி அல்ல. பலே கில்லாடி. நாசுக்காக காலிப்பை உசுப்பிவிடுகிறான். சூப்பர். சூப்பர். சூப்பர்.

தலையை உலுக்கியபடி நாடகத்தின் அடுத்த கட்டத்தை

ஆர்வத்துடன் கவனிக்கத் தொடங்கினான்.

மெல்ல மெல்ல வீசிய வலையில் புறா சிக்க ஆரம்பித்தது.

"பதில் சொல்லு தாவூத். ஏன் அமைதியா நிக்கறே? நான் யாரு... என் வளர்ப்பு என்னனு உனக்கு தெரியுமில்லையா?"

தாவூத்தின் சட்டையை பிடித்து உலுக்கியபடி காலிப் தொடர்ந்தான்.

"உன்னால அடிச்சு கொல்லப்பட்ட பாஷு தாதாவோட வலது கை. அப்படித்தான் இருந்தேன்.

அவரோட பிசினஸ்... தங்கக் கடத்தல். அதை பார்த்துகிட்டது நான். எந்த நாட்ல தங்கம் கிடைக்கும்... யார் மூலமா அதை வாங்கணும்... எப்படி அதை பம்பாய்க்கு கொண்டு வரணும்... உள்ளூர்ல எந்த சேட்டுகிட்ட விற்கணும்... கடைசியா என்ன கமிஷன் கிடைக்கும்... இதெல்லாம் எனக்கு அத்துப்படி. நான் சொல்றது சரியா?"

"ம்..."

"என்ன 'ம்?' அப்படிப்பட்ட என்னை பக்கத்துல வைச்சுகிட்டு எப்படி நீ அப்படி சொல்லலாம்..?"

"தப்புதான்..."

"இப்படி சொல்லிட்டா மன்னிச்சிடுவேன்னு நினைக்கறியா? சத்தியமா மாட்டேன். என்ன அப்படி பார்க்கிறே... மனசு பொறுக்கலை தாவூத். அதனாலதான் இப்படி வெடிக்கறேன். என்னை என்ன சுயநலவாதின்னு நினைச்சியா? இல்ல... இந்த காலிப்புக்கு தெரிஞ்சதெல்லாம் ஒண்ணே ஒண்ணுதான். அது விசுவாசம்..."

பிடித்திருந்த தாவூத்தின் சட்டையை தளர விட்டவன், கால்கள் துவள அகன்றான். குரல் தழுதழுத்தது.

"நீ நினைச்சிருந்தா என்னையும் கண்டந்துண்டமா வெட்டி கொன்னுருக்கலாம். ஆனா, அப்படி செய்யாம உன்கூட, உன் வீட்டு பக்கத்துல, முசாஃபிர்கானாவுல தங்க வைச்சிருக்க. மூணு வேளை வயிறார சோறு போடற. கேட்காமயே இன்னிக்கி எனக்கு எல்லாம் கிடைக்குது. காரணம் நீ. ரோட்ல நடந்தா எல்லாரும் சலாம் வைக்கிறாங்க. அது என் மேல இருக்கிற பயத்துனால இல்ல. உனக்கு தோஸ்த்தா இருக்கேனே... அதுக்காக. இந்த நன்றியை நான் மறப்பேன்னு எப்படி நினைச்சே... அந்தளவுக்கு நீ வெறுக்கும்படியான காரியத்தையா நான் செய்திருக்கேன்..?"

தலையில் அடித்துக்கொண்டு அழுதவனை இழுத்து அணைத்தான் தாவூத்.

"சாரி...சாரி...உன் மனசை எந்த வகையிலாவது புண்படுத்தியிருந்தா என்னை மன்னிச்சுடு..."

"அதெல்லாம் ஒண்ணுமில்ல... நீ மன்னிப்பெல்லாம் கேட்க

வேண்டாம்...” முணுமுணுத்தவன் அணைப்பிலிருந்து விலகினான். சட்டை காலரால் தன் கண்ணீரை துடைத்துக்கொண்டு மூக்கை உறிஞ்சினான்.

“இப்ப என்ன... தங்கக் கடத்தல்ல இறங்கணும்... அவ்வளவுதானே? கலக்கிடலாம். நான் இருக்கேன்... பார்த்துக்கறேன். நீ கவலையே படாத...”

“உணர்ச்சிவசப்படாத... கொஞ்சம் நிதானமா இரு. ச்சூ. அப்படிப் பார்க்காத காலிப். உன்னை குறைச்சு எடை போடலை...”

“அப்புறம்?”

“முன்ன மாதிரி இப்ப கோல்ட் ஸ்மக்கிலிங் அவ்வளவு ஈசி இல்ல...”

“கஷ்டமா? எவ்வளவு... இவ்வளவா?”

தன் கைகளை அகல விரித்தான்.

“சீரியசா இரு காலிப்...”

“விளையாடறது நீதான் தாவூத்...”

“புரிஞ்சுக்காம பேசாதே. தங்கக் கடத்தலுக்கு குஜராத் துறைமுகம் போகணும்...”

“ஆமா...”

“அங்க ஆட்சி செய்யறது சுகுர் நாராயண் பாக்கியா...”

“...”

“அவரோட ஏஜென்ட்டாதான் பம்பாய்ல அமிர்ஸாதா செயல்பட்டுகிட்டு இருக்கான்...”

“இதெல்லாம் பழைய விஷயம்தானே?”

“அப்படி நினைச்சு அலட்சியமா இருக்க முடியாது. மஸ்தான் பாயாலயே சுகுர் நாராயண் பாக்கியாவோட பிசினசை அசைக்க முடியலை. அந்தளவுக்கு வஸ்தாதா இருக்காரு. அப்படிப்பட்டவரை நம்மால எதிர்க்க முடியும்னு நினைக்கறியா?”

“ஆமா...”

“காலிப்...”

“இங்க பாரு. என்னை நம்பற இல்லையா?”

“முழுசா நம்பறேன்...”

“அதுபோதும். பொறுப்பை என்கிட்ட ஒப்படைச்சுட்டு நிம்மதியா இரு...”

“பொறு. எங்க கிளம்பிட்ட?”

“வேலையை தொடங்க வேண்டாமா?”

“அதுதான் எப்படி...?”

“ம்... சின்ன மீனை போட்டு பெரிய மீனை பிடிக்கப் போறேன்... டேய் வாங்கடா...”

என ஆட்களை அழைத்துக்கொண்டு வேகமாக வெளியேறினான். காலிப் செல்வதை பார்த்தபடியே நாற்காலியில் கால் மேல் கால்

போட்டபடி அமர்ந்த தாவூத்,

கசங்கிய தன் சட்டையை நீவிவிட்டுக் கொண்டான்.

“நீ எமன்தான்... சந்தேகமேயில்லை...”

கண்களை விரித்தான் சபீர்.

“யாருக்கு?”

“மஸ்தான் பாய்க்கு...”

“என்ன சொன்னே?”

“சாரி. சாரி. பாயை கட் பண்ணிடறேன். வெறும் மஸ்தானுக்கு. போதுமா?”

“அது...”

சிரித்தான். சிரித்தார்கள்.

# 58

இதனை அடுத்து நடந்ததெல்லாம் வரலாறு.

எதை சொன்னானோ அதை செய்தான் காலிப். தங்கத்தை எப்படி கடத்துவது, எந்த வழியில் மத்திய கிழக்கு நாடுகளில் இருந்து கொண்டு வருவது, யார் யாரிடம் அதை விற்பது... என சகல அடிப்படை விஷயங்களையும் கற்றுத் தந்தான்.

தாவூத் அதை கசடறக் கற்றான். நிற்க அதற்குத் தக என வளர்ந்தான்.

போலவே எது தனது குணமோ, இயல்போ அதை அப்படியே காலிப் கடைப்பிடிக்கவும் செய்தான். விசுவாசம் என்றால் என்ன என்பதை முன்பு பாஷு தாதாவுக்கு காட்டினான். இன்று தாவூத்துக்கு அதை உணர்த்தினான்.

“இரண்டாமிடத்துல இருக்கறது எனக்கு பிடிச்சிருக்கு. சொல்லப் போனா நிம்மதியா இருக்கேன். படுத்ததும் தூங்கிடறேன். முதல் நிலைக்கு வரணும்னு எப்பவுமே நினைச்சதில்லை. அதுல விருப்பமும் இல்லை. அதனாலயே அதிக எதிரிகளும் எனக்கில்லை...”

போதையின் உச்சத்தில் ஒருமுறை தன் சகாவிடம் தெரியப்படுத்தியிருக்கிறான். தாவூத்தின் செவிகளையும் அது வந்தடைந்தது. புன்னகையை மட்டுமே அதற்கு பதிலாக கொடுத்தான்.

“இதுக்கு என்ன அர்த்தம்?”

“எதுவுமே இல்லை சபீர்...”

“புரியலையே?”

“புரிய என்ன இருக்கு? தன்னை உணர்ந்தவன் ஞானி. என்னளவுல காலிப் ஒரு ஜூம்பி. அவ்வளவுதான்...”

“அப்ப..?”

“பச். வேலையை பார்ப்போம் சபீர். குஜராத் இன்னும் முழுமையா நம்ம ஆளுகைக்கு வரலை. அதை கைப்பற்ற என்ன செய்யலாம்னு யோசிப்போம். காலிப்பை வரச்சொல்...”

பத்தாவது நிமிடத்தில் வந்து சேர்ந்தான்.

“பம்பாயை ஓரளவு கவர் பண்ணிட்டோம் காலிப். குஜராத்..?”

“அதையும் முடிச்சுடலாம்...”

“எப்படி?”

“இதோ இப்படி...” தன் பேன்ட் பாக்கெட்டிலிருந்து ஒரு வரைபடத்தை எடுத்து மேஜையின் மீது விரித்தான்.

“இது குஜராத்தோட மேப் தாவூத்...”

“ம்...”

“அமிர்ஸாதாவும் அலாம்சேப்பும் ஏற்கனவே இங்க வலுவா இருக்காங்க...”



“ம்...”

“இவங்களோட குஜராத் பிராஞ்ச் மேனேஜரா அப்துல் லத்தீப் கான் செயல்பட்டுகிட்டு இருக்கான்...”

“அவனை விலைக்கு வாங்கிடலாமா?”

“வேண்டாம் தாவூத். வேற ஒரு ப்ளான் இருக்கு...”

“என்ன?”

“இப்ப பதான்ஸ் பெரிய ஆட்களோடதான் டீல் பண்ணிட்டு இருக்காங்க...”

“அப்படித்தானே இருக்க முடியும்? ஏன்னா தங்கத்தை சாதாரண மக்களால வாங்க முடியாதே...” சபீர் இடைமறித்தான்.

“குறுக்க பேசாம அமைதியா இரு...” சகோதரனை அடக்கிவிட்டு காலிப் பக்கம் திரும்பினான். “இதுக்கு என்ன மாற்று?”

“சாமான்யர்களையும் வாங்க வைப்போம்...”

“எப்படி?”

“நகைச்சீட்டு போடுவோம்...”

சட்டென்று அங்கு அமைதி நிலவியது.

காலிப் தொடர்ந்தான்.

“ரொக்கமா பணம் கொடுத்து அவங்களால கடைல வாங்க முடியாது. கடை ரேட்டை விட நாம குறைச்சலா தருவோம். அதையும் தவணைல வசூல் பண்ணுவோம்...”

*“லாபம்?”*

*“கிடைக்கும். சேதாரமான தங்கத்தையும், அதிகமா தாமிரம் கலந்ததையும் பெரிய ஆட்கள் சீண்ட மாட்டாங்க. அதை நாம அடிமாட்டு விலைக்கு வாங்குவோம். அதை வைச்சு டிசைன் டிசைனா நகைகளை உருவாக்குவோம். எனக்கு தெரிஞ்ச ஆச்சாரிங்க இருக்காங்க. கூலிக்குத்தான் மாரடிக்கிறாங்க. அவங்களை இதுக்கு பயன்படுத்தலாம். கூடவே...”*

*“சொல்லு காலிப்...”*

*“அவங்களை முன்னிலைப்படுத்தி நகைக் கடைகளையும் அங்கங்க ஆரம்பிப்போம். அடித்தட்டு மக்களுக்கான அந்த கடைகள்ல இந்த சீட்டை தொடங்குவோம்...”*

*உதட்டை கடித்தபடி தாவூத் அமைதியாக இருந்தான்.*

*“என்ன யோசிக்கற? பிரமாதமான ஐடியா இது...”*

*“மறுக்கலை சபீர்...”*

*“அப்புறம்?”*

*“உடனடியா இதை அமல்படுத்த முடியுமான்னு தெரியலை. சில சிக்கல்கள் இருக்கு...”*

*“அப்ப இதை விட்டுடலாம்னு சொல்றியா?”*

*“இல்லை காலிப். தொலைநோக்கு பார்வையோட நீ சிந்திச்சிருக்க. இப்ப இல்லைனாலும் சில வருஷங்கள் கழிச்சாவது இது நமக்கு பலனளிக்கும். ஸோ, ஆரம்பகட்ட வேலையை இப்பவே ரகசியமா தொடங்கிடு. ஆனா...”*

*“ஆனா?”*

*“இந்த நிமிஷம் நமக்கு பயன் கொடுக்கக் கூடிய செயல் எதுன்னு நாம ஆராயணும். ஏன்னா அதுதான் நம்மை நிலைநிறுத்தும்...”*

*சபீரும் காலிப்பும் அமைதியாக இருந்தார்கள். தாவூத் குறுக்கும் நெடுக்குமாக நடந்தான். விநாடிகள் நிமிடங்களான தருணத்தில் நின்றான். “ஒரு நடை நான் துபாய்க்கு போயிட்டு வரேன்...”*

*சபீர் அதிர்ந்தான். “ஏன்?”*

*“நேரடியா கொள்முதல் செய்ய...”*

*“அது ஆபத்தானது...”*

*“இல்லை சபீர். இதுதான் சரி...”*

*“எந்த வகைல?”*

*“எல்லா வகைலயும். இடைத்தரகர்கள் பதான்ஸுக்கு சாதகமா இருக்காங்க. அதனாலதான் அவங்களுக்கு போக மற்றதை நமக்குத் தர்றாங்க. இதை உடைக்கணும்னா ஷேக்குகளை நாமளே நேருக்கு நேர் சந்திச்சு டீல் பேசணும்...”*

*“முடியுமா?”*

*“தாவூத்தால மட்டும்தான் முடியும்...” காலிப்பின் குரலில் உற்சாகம் கொப்பளித்தது.*

“உசுப்பேத்தி விடாத...” சபீர் எச்சரித்தான்.

“அது என் வேலையும் இல்லை...”

“என்ன குரல் உயருது...”

“உயராம? இங்க பார் சபீர். ரொம்ப தெளிவா தாவூத் ப்ளான் பண்றான். இது மட்டும் சக்சஸ் ஆச்சுன்னா நம்ம ரேஞ்சே வேற. நான் என்ன சொல்றேன்னு உனக்கே கொஞ்ச நாள்ல புரியும்...” அழுத்தத்துடன் சொன்னவன், தாவூத் பக்கம் திரும்பினான்.

“எப்ப கிளம்பற?”

“உடனடியா...”

“ரைட். அதுக்கான ஏற்பாட்டை நான் செய்யறேன்...”

சொன்னபடியே சில நாட்களில் செய்து முடித்தான்.

“வெற்றி நமக்குத்தான். நிம்மதியா போயிட்டு வா. இந்தியாவுக்கு நீ திரும்பறப்ப நல்ல செய்தியை சொல்றேன்...” விமான நிலையத்தில் விடை கொடுத்தான்.

காலிப் என்ன செய்யப்போகிறான் என்பது தாவூத்துக்கு தெரிந்தே இருந்தது. அதனால் முகமும் மலர்ந்தது. என்றாலும் மேற்கொண்டு எதையும் அவன் துருவவில்லை. மனம் முழுக்க துபாயே ஆக்கிரமித்திருந்ததால் பயணம் முழுவதும் அது குறித்தே யோசித்தான்.

எதிர்பார்த்தது போலவே எல்லாம் நடந்தது. வலது காலையெடுத்து வைத்து முதன் முறையாக அவன் துபாய் விமான நிலையத்தில் இறங்கிய போது - காலிப்பால் ஏற்பாடு செய்யப்பட்ட நபர், அவனை வரவேற்றார். தன் இடத்துக்கு காரில் அழைத்துச் சென்றார். வைத்த கண் வாங்காமல் துபாய் சாலைகளை பார்த்துக்கொண்டே சென்றான். அவன் பிறந்து வளர்ந்த பம்பாயை விட, துபாய் வசீகரமாக இருந்தது. அந்த ஈர்ப்பில் மனதை பறிகொடுத்தான். தன் சாம்ராஜ்ஜியத்தின் தலைமையிடமாக துபாய் இருந்தால் எப்படியிருக்கும் என்று யோசித்தான். கனவு கண்டான். சுகமாக இருந்தது.

அந்த மகிழ்ச்சியை அதிகப்படுத்தும் விதமாகவே சந்திப்புகள் நிகழ்ந்தன. அரபு ஷேக்குகள் அவனை சந்தித்தார்கள். அவன் சொல்வதை காது கொடுத்து கேட்டார்கள். அவனது நடை உடை பாவனைகளை அளவிட்டார்கள். வியாபாரம் செய்ய ஒப்புக் கொண்டார்கள்.

திருப்தியுடன் பம்பாய் திரும்பினான். எதிர்பார்த்தது போலவே வரவேற்க சபீரும், காலிப்பும் காத்திருந்தார்கள். அவர்களை அணைத்துக்கொண்ட தாவூத், “போன காரியம் சக்சஸ்...” என முணுமுணுத்தான். ஆமோதிப்பின் அறிகுறியாக இருவர் கண்களும் பிரகாசித்தன. ஏர்போர்ட்டை விட்டு வெளியே வந்தார்கள். நொடிக்கும் குறைவான நேரத்தில் அங்கு குப்பைகளை பொறுக்கிக்

கொண்டிருந்தவர்களை தாவூத் பார்த்தான்.

"என்ன விஷயம்?" காதருகில் சபீர் கிசுகிசுத்தான்.

"ஒண்ணுமில்ல..."

டாக்சியில் ஏறினார்கள். யதேச்சையாக வெளியே பார்த்தவனின் புருவங்கள் உயர்ந்தன.

"குஜராத்துக்கு இன்னொரு நாள் போவோம்..."

அருகில் அமர்ந்திருந்த இருவரும் வியப்படைந்தார்கள்.

"வண்டி அங்கதான் போகுதுன்னு உனக்கு எப்படி தெரியும்?" சபீர் ஆச்சர்யப்பட்டான்.

காலிப்பின் தோளில் கைபோட்டபடி தாவூத் சிரித்தான். "துபாய்லேந்து நான் வர்றதுக்குள்ள குஜராத் துறைமுகத்தை நம்ம கட்டுப்பாட்டுக்குள்ள இவன் கொண்டு வந்திருப்பான்னு தெரியும். சரிதானே?" வெட்கத்துடன் காலிப் தலையசைத்தான்.

"நாளைக்கு அங்க போவோம். இப்ப வண்டியை நம்ம ஏரியாவுக்கு திருப்புங்க..."

போக்குவரத்தை கடந்து முஸாஃபீர்கானாவை அடைந்தார்கள். அடியாட்களுக்கு மத்தியில் தன் திட்டத்தை தாவூத் விவரித்தான். ஏகமனதாக அனைவரும் இதற்கு ஒப்புக்கொண்டார்கள்.

ஆனால் - அதுவே அவனுக்கு எமனாக முடியப்போகிறது என்பதை அங்கிருந்தவர்கள் அறியவில்லை.

ஏனெனில் முதல் முறையாக 'காபிபோசா' சட்டத்தின் கீழ் தாவூத் கைது செய்யப்பட்டது இதன் பிறகுதான்!

## 59

"இதுதான் திட்டம்..." தாவூத் சொல்லி முடித்தான். வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்துக் கொண்டிருந்த அனைவரது கண்களும் பிரகாசித்தன.

"ஏதாவது சந்தேகமிருக்கா?"

''எதுவும் இல்ல. பக்காவா ப்ளான் பண்ணியிருக்க...'' காலிப் சொன்னதை சபீர் உட்பட அனைவரும் ஆமோதித்தார்கள்.

"அப்ப தொடங்கிடலாமா?"

"நாளைக்கே ஆரம்பிச்சிடலாம்..." காலிப் முடிப்பதற்குள் -"முதல் ஆளா நான் போறேன்..." ஒர் அடியாள் முன்வந்தான்.

"வேண்டாம்..."

"ஏன் தாவூத்?" கேட்டவனின் முகத்தில் ஏமாற்றத்தின் அறிகுறிகள் படர்ந்தன.

"உன் மேல நம்பிக்கை இருக்கு. ஆனா..."

"ஆனா?"

"நம்ம ஆட்கள் யாரும் இதுல நேரடியா இறங்க வேண்டாம். ஏன்னா, எல்லாருடைய முகமும் போலீஸ்ல ரிஜிஸ்டர் ஆகியிருக்கு..."

"அப்புறம் வேற யாரை இதுல இறக்கறது?"

படபடத்த சபீரை பார்த்து புன்னகைத்தான். ''சாதாரண பயணிகளை..."

"அப்படி யாரும் கிடைக்கலைனா?"

"நாமே பயணிகளை உருவாக்குவோம்..."

"என்ன சொல்ற தாவூத்?"

"வழி... ரூட்டு... பாதை..."

"வாட்?"

"யெஸ். யாராலயும் கண்டுபிடிக்க முடியாத புத்தம் புது கடத்தல் வழி இதுதான்..."

"கொஞ்சம் புரியும்படியா சொல்லு..."

"வார்த்தைல சொல்லணுமா இல்லை செயல்ல காட்டணுமா?"

உதட்டை கடித்த சபீர், தன் சகோதரனை சில நொடிகள் உற்றுப் பார்த்தான். "செயல்ல..."

"அப்ப சில நாட்கள் பொறு..." என்றபடி தாவூத் திரும்பினான்.

இதற்காகவே காத்திருந்தது போல் "ஒரு ஆள் ரெடியா இருக்கான்..." என கண்களை விரித்தான் காலிப்.

"யாரு?"

"தெரிஞ்சவன்தான். வேலை தேடிட்டு இருக்கான்..."

"நம்பலாமா?"

"முழுமையா. தவிர..."

"ம்..."

“அவன் குடும்பம் நம்ம கண்பார்வைலதானே இருக்கு?”

கேட்ட தாவூத் வாய்விட்டு சிரித்தான். காலிப்பை நெருங்கி கட்டி அணைத்தான். “ஆக வேண்டியதை பாரு...”

கட்டளைக்கு அடிபணிந்த காலிப், மடமடவென்று செயலில் இறங்கினான். அவனால் தேர்ந்தெடுக்கப்பட்ட ‘பயணி’ துபாய்க்கு புறப்பட்டான். தாவூத்தை தவிர மற்றவர்கள் நிலைகொள்ளாமல் தவித்தார்கள். ஓரிடத்தில் அமராமல் அங்கும் இங்கும் நடந்தார்கள். ஏதேதோ பேசினார்கள். பொழுதை கழிக்க அரும்பாடுபட்டார்கள். உறக்கமின்றி தவித்தார்கள்.

துபாய்க்கு டிரங்கால் செய்ய சபீர் முயன்றான்.

“முட்டாள்தனமா எதையும் செய்து காரியத்தை கெடுக்காத...” சீறிய தாவூத், சிவந்த கண்களுடன் இணைப்பை துண்டித்தான்.

“அங்க என்ன நடக்குதுன்னு நமக்கு தெரிய வேண்டாமா?”

“வேண்டாம்...”

“ஏன்?”

“நடத்தறதே நாமதான். அப்படியிருக்கிறப்ப அங்க என்ன நடக்குதுன்னு நமக்கு தெரியாதா என்ன?”

சபீர் எதுவும் பேசவில்லை. தம்பியின் போக்கும் புரியவில்லை. இனம்புரியாத கோபம் மட்டும் பொங்கி வந்தது. அதை அதிகரிப்பது போல் காலிப் அங்கு வந்து சேர்ந்தான்.

“இந்த லிஸ்ட்டை ஒருமுறை பார்த்துடு தாவூத்...”

வாங்கியவன் தன் பார்வையால் அதை அலசினான்.

எட்டிப் பார்த்த சபீர், புருவத்தை சுளித்தான். “என்ன இது?”

“பட்டியல்...”

“விளையாடாத காலிப்...”

“நிஜத்தைதானே சொன்னேன்..?”

“எது நிஜம்?”

“இந்த லிஸ்ட்...” மகிழ்ச்சியுடன் எழுந்தான் தாவூத்.

இருவரையும் மாறி மாறி பார்த்த சபீருக்கு பற்றிக்கொண்டு வந்தது.

“ரெண்டு பேரும் விளையாடறீங்களா?”

“ஆமா. அரசாங்கத்தோட...”

“தாவூத்...”

“ஷ்... கத்தாத சபீர். அமைதியா இரு. காலிப்... இவங்க எல்லாரும் நம்பிக்கையானவங்கதானே?”

“ஆமா தாவூத்...”

“அப்ப சரி. ஒவ்வொருத்தரையா துபாய்க்கு அனுப்பு. கூடவே ஒவ்வொருத்தர் வீட்டு முன்னாடியும் நம்ம ஆட்களை நிற்க வை. போனவன் திரும்பி வர்ற வரைக்கும் சம்பந்தப்பட்டவன் வீட்டை விட்டு நம்ம ஆள் நகரக்கூடாது...”

“சரி...”

“இரு... இரு...” காலிப்பை தடுத்த சபீர், பதற்றத்துடன் தாவூத் பக்கம் திரும்பினான்.

“இந்த பட்டியல்ல இருக்கிற எல்லாரையும் துபாய்க்கு அனுப்பப் போறியா?”

“ஆமா...”

“முதல்ல போனவனே இன்னும் திரும்பி வரலை...”

“இன்னிக்கி வர்றான்...”

“என்னது?”

“எதுக்கு இப்படி அதிர்ச்சியடையறே? கூல்...”

“கூலா..? உங்களை...” கைகளை பரபரவென தேய்த்தான். “எத்தனை மணிக்கு ஃப்ளைட்?”

“இந்நேரம் லேண்ட் ஆகியிருக்கும்...”

“வாட்.... அப்புறம் ஏன் இங்க இருக்கணும்? வாங்க போகலாம்...”

“எங்க?”

“இதென்ன கேள்வி. வர்றவனை ரிஸீவ் பண்ண வேண்டாமா?”

“வேண்டாம்...”

“நம்மை ஏமாத்திட்டானா?”

“வாய்ப்பே இல்லை...”

“தாவூத்...”

“இங்க பார் சபீர். செயல்ல நிரூபிக்க சொன்னே. அதுக்கு அவகாசம் கேட்டிருந்தேன். நீயும் சரின்னு சொன்னே.

அதுக்குள்ள அவசரப்பட்டா எப்படி.... பொறுமையா இரு. வர்றவனை வரவேற்க நம்ம ஆட்கள் போயிருக்காங்க...”

“சரக்கு?”

“வந்து சேரும்...”

தாவூத் சொன்னது போலவே அடுத்த முக்கால் மணி நேரத்தில் கைக்கு அடக்கமான அட்டைப் பெட்டி வந்து சேர்ந்தது.

மகிழ்ச்சி பொங்க அதை பிரித்தான்.

விளக்கு ஒளியில் உள்ளே இருந்த தங்க பிஸ்கெட்டுகள் ஜொலித்தன.

“ஹிப் ஹிப் ஹுரே...” என அடியாட்கள் குதித்தார்கள்.

சபீர் நம்ப முடியாத வியப்புடன் அந்த பெட்டியையே பார்த்துக் கொண்டிருந்தான்.

“இப்ப நம்பறியா?” காதருகில் தாவூத்தின் குரல் ஒலித்தது.

கண்கள் மின்ன தலையசைத்தான்.

“அடுத்த பயணியை அனுப்பலாமா?”

“ம்...”

“அப்ப நீயே தேர்ந்தெடு...” காலிப் தன்னிடம் கொடுத்த லிஸ்டை சபீர் முன் நீட்டினான்.

அதை பெற்றுக்கொண்டவன், மனம்போன போக்கில் தன் ஆள்காட்டி விரலை நகர்த்தி... ஓரிடத்தில் நிறுத்தினான்.

"ஓ... இவனா? ஓகே. காலிப், அடுத்த பயணி இவன்தான்..."

இப்படித்தான் இங்கி பிங்கி பாங்கி போட்டு 'பயணிகளை' தேர்வு செய்தார்கள். கை நிறைய பணம் கொடுத்து துபாய்க்கு அனுப்பி வைத்தார்கள். சென்றவர்கள் அனைவரும் பொருளாதார ரீதியாக பாதிக்கப்பட்டவர்கள் என்பதால், 'இந்த' வேலையை மனமுவந்து செய்தார்கள். அடுத்த மூன்று மாதங்களுக்கு கவலையின்றி குடும்பத்தை நடத்தினார்கள். அந்தளவுக்கு 'வருமானம்' அவர்களுக்கு தாவூத் வழியாக வந்தது.

இதனால் அதிகம் பாதிக்கப்பட்டது பம்பாய் க்ரைம் பிராஞ்ச்தான். கண்ணைக் கட்டி காட்டில் விட்டது போல் தவித்தார்கள். பம்பாய்க்குள் எப்படி சட்டத்துக்கு விரோதமாக தங்கம் நுழைகிறது? தெரியவில்லை. யார், எந்த வழிமுறையில் கடத்துகிறார்கள்? நோ ஐடியா. கூட்டத்தின் தலைவன் யார்? க்ளூ கிடைக்கவில்லை.

ஆனால் – வழக்கத்தை விட அதிகமாக தங்க கடத்தல் நடக்கிறது என்பது மட்டும் காவல்துறைக்கு புரிந்தது.

பம்பாய் துறைமுகத்தை சலித்து எடுத்தார்கள். குண்டூசி முனையளவுக்கு கூட துப்பு கிட்டவில்லை. முட்டுச்சந்தில் ஓடுவது போல் இருந்தது.

ஏறக்குறைய இதே நிலைதான் கஸ்டம்ஸ் துறைக்கும். ஒருவேளை விமானத்தின் வழியாக கடத்தல் நடக்கிறதோ என்று எண்ணி கண்காணிப்பை அதிகப்படுத்தினார்கள். துபாயிலிருந்து வரும் ஒவ்வொரு பயணியையும் கண்களில் விளக்கெண்ணெய் விட்டு ஆராய்ந்தார்கள்.

ஒவ்வொரு உடல் பாகத்தையும் இஞ்ச் பை இஞ்ச் ஆக பரிசோதித்தார்கள். ஏமாற்றமே கிடைத்தது.

இதையெல்லாம் வேடிக்கை பார்த்த தாவூத், வாய்விட்டு சிரித்தான். அடியாட்களுடன் கும்மாளமிட்டான். அடிக்கடி தன் பகுதி மக்களுக்கு விருந்து வைத்தான். அவர்கள் வீட்டு விசேஷங்களை முன்னின்று நடத்தினான். பொருளாதார உதவிகளை வேண்டிய அளவுக்கு வேண்டப்பட்ட அனைவருக்கும் செய்தான்.

சிறுக சிறுக அவனது அந்தஸ்து உயர்ந்துகொண்டிருந்தது. அடியாட்களின் கூட்டமும் பெருகிக் கொண்டிருந்தது. இதையெல்லாம் கவனித்த பதான்ஸ்களுக்கு நாசியில் வியர்த்தது. அடி வயிறு எரிந்தது. தங்கக் கடத்தல் என்பது பதான்ஸ்களுக்கு சொந்தமானது. கடந்த நாற்பது வருடங்களாக இவர்கள் மட்டும்தான் அதில் கோலோச்சிவருகிறார்கள். ஹாஜி மஸ்தான் மட்டும் விதிவிலக்கு. என்றாலும் இவர்களை கடந்து அவர் செல்லவில்லை.

இணையாகவே பயணித்தார். சமமாகவே நடத்தினார்.

ஆனால் - ஓவர் நைட்டில் தாவூத் இவர்களை ஓவர்டேக் செய்துவிட்டான். இவர்களது வாடிக்கையாளர்களை எல்லாம் தன் பக்கம் இழுத்துக்கொண்டான்.

எப்படி இது சாத்தியமாயிற்று?

தங்கத்தை கடத்துவதற்கு என்று ஒரு வழிமுறை இருக்கிறது. அதன்படிதான் பதான்ஸோ அல்லது ஹாஜி மஸ்தானோ காலம் காலமாக பம்பாய்க்குள் கடத்தி வருகிறார்கள்.

இதற்கு மாறாக ஏதோ ஒரு புதிய வழியை தாவூத் பின்பற்றுகிறான். அது என்ன?

எவ்வளவு யோசித்தும் விடை கிடைக்கவில்லை.

"அடிக்கடி அவன் ஏன் துபாய்க்கு ஆட்களை அனுப்பறான்?" எரிச்சலுடன் தன் சகாவிடம் கேட்டான் அமிர்ஸாதா.

"தெரியலையே..."

"சாப்பிட தெரியுமா?"

"ஏய்..."

"போ. போய் சாப்பிடு..."

பற்களை கடித்தபடி எழுந்த அமிர் ஸாதா, தனக்கு நெருக்கமான கஸ்டம்ஸ் அதிகாரியை சந்தித்தான்.

"ஏர்போர்ட் வழியாதான் சார் கடத்தல் நடக்குது..."

"வாய்ப்பே இல்லை. நாங்க தரோவா செக் பண்ணறோம்..."

"உங்க டியூட்டியை நான் குறை சொல்லலை. ஆனா, உங்க கண்கள்ல அவன் ஆட்கள் மிளகாய் பொடி தூவற இடம் அதுதான். ஏன்னா, ஹார்பர் முழுக்க எங்க கட்டுப்பாட்டுல இருக்கு. எங்களை மீறி அங்க யாரும் தங்கத்தை கடத்திட முடியாது. எஞ்சி இருக்கிற ஒரே இடம் விமான நிலையம்தான்..."

சிந்தனையில் ஆழ்ந்த அந்த கஸ்டம்ஸ் அதிகாரி, முன்பை விட பாதுகாப்பை பலப்படுத்தினார். அப்படியும் எந்த மீனும் சிக்கவில்லை.

தலையே வெடித்துவிடும் போல் இருக்கவே காலார விமான நிலையத்தினுள் நடக்க ஆரம்பித்தார்.

அப்பொழுதுதான் அந்த காட்சி அவர் கண்களில் பட்டது.

துபாயிலிருந்து வந்த பயணி ஒருவன், கஸ்டம்ஸ் சோதனைக்கு முன்பாக இருந்த ஒரு குப்பைக்கூடை முன்னால் நின்றான். அங்கிருந்த வேலையாளை நொடிக்கும் குறைவான நேரத்தில் பார்த்தான். தன் கையில் இருந்த அட்டைப்பெட்டியை அதனுள் போட்டான். நகர்ந்தான்.

விசிலடித்தபடி சில நிமிடங்கள் நின்ற அந்த வேலையாள், தன் கடமையை செய்வதுபோல் அந்த குப்பைக் கூடையை எடுத்துக் கொண்டு வெளியேறினான்.

சட்டென்று அந்த அதிகாரியின் மூளையில் பல்பு எரிந்தது.

"நில்லு..." என்று கத்தியவர் விரைந்து சென்று வீசி எறியப்பட்ட அந்த அட்டைப்பெட்டியை எடுத்தார். திறந்தார். அதிர்ந்தார்.

பெட்டியினுள் இருந்தது பிஸ்கெட்தான். ஆனால், தங்க பிஸ்கெட்டுகள்!

அவ்வளவுதான். கூடைக்குள் பெட்டியை வீசிய பயணியையும், வேலையாளையும் கையும் களவுமாக பிடித்தார்.

'முறைப்படி' விசாரித்த பிறகுதான் சகலமும் வெட்ட வெளிச்சமானது.

குப்பை அள்ளும் வேலையாளுக்கும் சரி, துபாய்க்கு சென்று விட்டு திரும்பும் பயணிக்கும் சரி... அட்டைப் பெட்டிக்குள் இருப்பது தங்கம் என்று தெரியாது.

துபாயில் கொடுக்கப்பட்ட பெட்டியை பம்பாய் விமான நிலைய குப்பைக் கூடையில் வீச வேண்டும் என்பது பயணிக்கு இடப்பட்ட கட்டளை.

அதை எடுத்துக்கொண்டு வெளியில் நிற்கும் ஆட்களிடம் கொடுக்க வேண்டும் என்பது வேலையாளுக்கு இடப்பட்ட பணி.

இதற்காகத்தான் அவர்கள் இருவருக்கும் 'சர்வீஸ் சார்ஜ்' கொடுக்கப்படுகிறது.

"பணம் கொடுக்கறது யாரு?"

"தாவூத்..."

போதாதா? கோழியை அமுக்குவது போல் தாவூத் இப்ராஹிமை 'காபிபோசா' சட்டத்தின் கீழ் 1980களின் தொடக்கத்தில் கைது செய்தார்கள்.

"இனி தங்கக் கடத்தல்ல நமக்கு போட்டியே கிடையாது..." என அமிர்ஸாதா கொக்கரித்தான்.

ஆனால் - அந்த மகிழ்ச்சி அதிக நாட்கள் நீடிக்கவில்லை.

காரணம், சிறையில் இருந்தபடி தாவூத், காய்களை நகர்த்தத் தொடங்கினான்.

60

பற்களை கடிப்பதைத் தவிர அமிர்ஸாதாவுக்கு வேறுவழி தெரியவில்லை.

''இப்ப எதுக்கு டென்ஷன் ஆகறே?'' ஹூக்காவை புகைத்தபடி ரிலாக்ஸ் ஆக கேட்டான் அலாம்ஸேப்.

பதில்சொல்லாமல் விட்டத்தை வெறித்தான் அமிர்ஸாதா.

“உன்னைத்தான்...”

“ம்... என்ன கேட்டே?”

“பரோட்டாவுக்கு சால்னா இருக்கான்னு...”

“ஏய்...”

“பின்ன என்ன அமிர்ஸாதா... நம்ம எதிரி தாவூத் இப்ப ஜெயில்ல இருக்கான். வெளில வர வாய்ப்பே இல்லை. ஏன்னா, அவன் உள்ள போயிருக்கறது பெட்டி கேஸ்ல இல்லை. ‘காபிபோசா’. அப்புறம் என்ன..? நிம்மதியா இரு...”

முடியவில்லை. தாவூத் வெளியில் இருந்தபோது எப்படி நிலைகொள்ளாமல் தவித்தானோ அதைவிட பல மடங்கு நிம்மதியில்லாமல் அவன் சிறைக்கு சென்ற பிறகு தவித்தான்.

தங்கக் கடத்தலை பொறுத்தவரை பதான்ஸ் வெறும் ஏஜென்ட் ஆகத்தான் செயல்பட்டார்கள். அதாவது, பம்பாய் அல்லது குஜராத் துறைமுகத்துக்கு அவை வந்த பின் உள்நாட்டில் அதை பட்டுவாடா செய்யும் பணியைத்தான் மேற்கொண்டார்கள். இதில் ரிஸ்கும் அதிகம். லாபமும் குறைவு. ஏனெனில் கமிஷன் மட்டுமே கிடைத்தது.

இதற்கு மாறாக புத்தம் புது ரூட்டை தாவூத் உருவாக்கியிருந்தான். அதாவது, நேரடியாக அரபு ஷேக்குகளிடம் அவனே பேரம் பேசினான். கொள்முதல் செய்தான். அவன் ஆட்களே அதை இந்தியாவுக்கு கொண்டு வந்தார்கள். இந்தியாவுக்குள் விநியோகித்தார்கள். இந்த சங்கிலியின் இணைப்பில் லாபம் எங்குமே சிதறவில்லை.

சாப்பிட்ட கையால் கூட அவன் காக்காய் ஓட்டவில்லை. எனவே அனைத்து பருக்கைகளும் அவன் வயிற்றுக்கே சென்றன.

ஒருவகையில் மையப்படுத்தப்பட்ட அரசாங்கம் போலவே தங்க கடத்தலை நடத்தினான். அடியாட்களை தரம் வாரியாக பிரித்து ஒவ்வொரு வரையும் ஒவ்வொரு வேலைக்கு ஒதுக்கினான். அவரவர் பணிக்கு ஏற்ப சம்பளம் கொடுத்தான். மட்டுமல்ல அடியாட்கள் ஒவ்வொருவருக்கும் தனித்தனியாக ஃபைலை மெய்டன் செய்தான். குறிப்பிட்ட காலத்துக்கு பிறகு அப்ரைசல் செய்து ஊதியத்தை உயர்த்தினான். ‘பதவி’ உயர்வு கொடுத்தான்.

தன்னை ஏமாற்றாமல் விசுவாசமாக இருந்தால் வாழ்க்கையில் முன்னேறலாம் என்ற நம்பிக்கையை ஒவ்வொருவர் மனதிலும்



ஏற்படுத்தினான்.

இந்த பிம்பத்தை காவல்துறைக்குள்ளும் விதைத்தான் என்பதுதான் ஹைலைட். எனவே காவலர்களும் அவனுக்கு விசுவாசமாக இருந்தார்கள். அவரவர் தகுதிக்கு ஏற்ப மாமூலை பெற்றார்கள்.

பதான்ஸ்கள் தங்கள் வாழ்க்கையில் நினைத்துப் பார்க்க முடியாத விஷயம் இது. தொடக்க காலம் முதலே காவல்துறையை அவர்கள் எதிரிகளாகவே பார்த்தார்கள். தள்ளியே நின்றார்கள். தள்ளியே நிறுத்தினார்கள். மேல் மட்டத்தில் இருந்த ஓரிருவரிடம் மட்டுமே நட்பு பாராட்டினார்கள்.

அதையும் ரகசியமாக வைத்திருந்தார்கள்.தாவூத், இந்த இடத்தில்தான் வித்தியாசப்பட்டான். உயரதிகாரிகளுக்கு என்ன செய்ய வேண்டுமோ அதை செய்தான். என்றாலும் இவர்களிடம் இருந்து தள்ளியே நின்றான்.

ஆனால் - அடிமட்ட ஏட்டுகளிடம் நெருங்கினான். இவர்கள் வீட்டு சுபவிசேஷங்களில் கலந்துகொண்டான்.

வீட்டின் உறுப்பினரைப் போல் வேலைகளை இழுத்துப்போட்டு செய்தான். தன் ஆட்களை வைத்து செய்ய வைத்தான்.

உதாரணத்துக்கு ஒரேயொரு சம்பவம். முஸாஃபீர்கானா எல்லைக்கு உட்பட்ட காவல் நிலைய ஏட்டின் மகளுக்கு திருமணம் தள்ளிக்கொண்டே போனது. காரணம், அவரிடம் போதுமான

பணமில்லை.

இந்த விவரம் தெரிந்ததுமே தாவூத் களத்தில் இறங்கினான். அந்த பெண்ணுக்கு ஏற்ற மணமகனை தானே முன்னின்று தேடினான். வரம் பேசினான். மொத்த செலவையும் ஏற்று திருமணத்தை நடத்தி வைத்தான்.

இதுதான் தாவூத். அடிமட்டத்தில் இருப்பவர்களுடன் நெருக்கமாவது. மேல் மட்டத்தில் இருப்பவர்களுடன் ‘நல்லுறவை’ மட்டும் பேணுவது. பொது இடங்களில் சந்திக்க நேரும்போது வெறும் ‘ஹாய்... ஹலோ...’ சொல்லிவிட்டு நகர்வது.

இதற்கு நல்ல பயனும் கிடைத்தது. அதுதான் அமிர்ஸாதாவை நிலைகொள்ளாமல் தவிக்கவும் வைத்தது.

‘காபிபோசா’ சட்டத்தின் கீழ் கைதான பிறகும் தாவூத்தின் அரசாங்கம் தொடர்ந்தது. என்ன...

தங்கக் கடத்தல் முன்பு போல் ஜெகஜோதியாக நடக்கவில்லை. ஸோ வாட்? மற்ற பிசினஸ் குறைவின்றி நடந்தன. போலவே தாவூத்தின் கஜானா நிரம்பவில்லை. அதே நேரம் காலியாகவும் இல்லை.

நியாயமாகப் பார்த்தால் போட்டியாளர் கையறு நிலையில் நிற்கும்போது எதிராளி ஜெயிக்க வேண்டும்.

ஆனால் - இங்கே அனைத்தும் தலைகீழாக நடந்தன.

எதுவும் செய்ய முடியாத நிலையில்தான் தாவூத் இருந்தான். என்றாலும் பதான்ஸ்கள் வெற்றி பெறவில்லை. சொல்லப்போனால் இவர்களது தங்க கடத்தல் ஹை ஸ்பீடில் மட்டுமல்ல... ஒரு இஞ்ச் கூட வளரவில்லை. முன்பு எப்படி ததுங்கினத்தோம் போட்டார்களோ அப்படியேதான் இப்போதும் தட்டுத் தடுமாறினார்கள். ‘ஏஜென்ட்’ என்னும் நிலையைத் தாண்டி பதான்ஸால் முன்னேறவே முடியவில்லை. நேரடியாக டீலிங் பேச அரபு ஷேக்குகள் மறுத்தார்கள். அதாவது, தாவூத்துக்கு கொடுத்த முக்கியத்துவத்தை இவர்களுக்கு அவர்கள் கொடுக்கவேயில்லை.

இதுதான்... இந்த இடம்தான் அமிர்ஸாதாவை சிந்திக்க வைத்தது. ஒருவேளை சிறையில் இருந்தபடியே தாவூத் காய்களை நகர்த்துகிறானோ என்றும் எண்ண வைத்தது.

அந்த எண்ணம் சரிதான் என்பதை அழுத்தம் திருத்தமாக உணர்வதற்குள் தலைக்கு மேல் வெள்ளம் போயிருந்தது.

யெஸ், தாவூத் சிறைக்கம்பிகளை எண்ணினான். அதே நேரம் தன் அரசாங்கத்தையும் நான்கு சுவருக்குள் இருந்தபடி நடத்தினான். சிறைக்காவலர்கள் இதற்கு ஒத்துழைத்தார்கள். அவர்கள் உதவியுடன் இந்திய அரசாங்கத்தை சேர்ந்தவர்களுடன் தொடர்பு கொண்டான். கொடுக்க வேண்டியதை கொடுத்தான். செய்ய வேண்டியதை செய்தான். வழக்கை ஒன்றும் இல்லாமல் ஆக்கினான். சிறையை

விட்டு வெளியே வந்தான்.

இந்த டுவிஸ்டை பதான்ஸ் எதிர்பார்க்கவேயில்லை. 'காபிபோசா' குறித்து அவர்கள் அறிந்திருந்த அனைத்து நம்பிக்கைகளும் தவிடுபொடியானது. அந்த சட்டமே 'பெப்பே'தான் என்பதை நடைமுறையில் உணர்த்தினான். முகத்தில் கரியை பூசினான்.

மட்டுமல்ல, சிறையை விட்டு வெளியே வந்தபின் மீண்டும் தங்கக் கடத்தலில் முன்பை விட அசுரத்தனமாக இறங்கினான். இதையும் பதான்ஸால் தாங்கிக்கொள்ளவும் முடியவில்லை. ஏற்கவும் இயலவில்லை.

அந்தளவுக்கு ஒரு பாய்ச்சலை நிகழ்த்தினான்.

இந்த சூறாவளி சபீரையும், காலிப்பையும் கூட திகைக்க வைத்தது.

"எதுக்கு இப்படி இடி இறங்கின மாதிரி நிக்கறீங்க? திட்டம் பிடிக்கலையா?"

புருவத்தை உயர்த்தியபடி வினவிய தாவூத்தை கண் கொட்டாமல் பார்த்தார்கள். சிறையிலிருந்து அப்போதுதான் திரும்பியிருந்தான். ஓய்வு எடுக்கவில்லை. பதிலாக தன் ஆட்களை அழைத்து புதிய ப்ளானை விவரிக்கிறான்... அதுவும் யாருமே யோசித்துப் பார்க்காத வழிமுறையை... ஜெயிலில் இருந்த குறுகிய காலத்தில் எந்தளவுக்கு தொலைநோக்குப் பார்வையுடன் திட்டமிட்டிருக்கிறான்..?

"என்ன இப்படி கேட்டுட்டே? இதைவிட பிரமாதமான வழியை ஒருத்தராலும் சொல்ல முடியாது..." வடியாத ஆச்சர்யம் காலிப்பின் குரலில் வழிந்தது.

"ரைட். அப்ப காரியத்துல இறங்கலாம் இல்லையா?"

"பின்னே? இதைவிட தலைபோகிற வேலை வேற எதுவும் இல்லையே..?"

சபீரின் குரலில் துள்ளல்.

"நீயா இதை சொல்ற?"

"ஆமா... நானேதான். ஏன் தாவூத் நம்ப முடியலையா?"

பதில் சொல்லாமல் சிரித்தான்.

"ம்க்கும். எப்பவும் பயந்து பயந்து சந்தேகப்பட்டுக்கிட்டே இருப்பேன்னு நினைச்சியா..?"

"அதெல்லாம் ஒண்ணுமில்லை..."

அண்ணனை தட்டிக் கொடுத்துவிட்டு காலிப்பை ஏறிட்டான் தாவூத்.

புரிந்ததற்கு அறிகுறியாக வெளியேறியவன், அடுத்த அரை மணி நேரத்தில் ஓர் இளைஞனுடன் வந்து நின்றான்.

ஏற இறங்க வந்தவனை அளவிட்ட தாவூத், திருப்தியுடன் தலையசைத்ததும் துபாய்க்கு அந்த இளைஞன் அனுப்பப்பட்டான்.

தங்க கடத்தல் வேறொரு முறையில் தொடர்ந்தது.

அதுவும் விஞ்ஞானப்பூர்வமாக.

ஆம், அதுவரை இந்திய கடத்தல் வரலாற்றிலேயே இல்லாத அளவுக்கு புதிய வழிமுறையை தாவூத் புகுத்தினான். கஸ்டம்ஸ் துறையில் கொட்டை போட்ட நேர்மையான அதிகாரியால் கூட கண்டுபிடிக்க முடியாதபடி அது அறிவியல் பூர்வமாக இருந்தது. பயனும் கற்பனைக்கு எட்டாதபடி கிடைத்தது. காசு... பணம்... துட்டு... மணி... மணி... என கடைநிலை ஊழியனும் பாடும் உயரத்துக்கு அவன் சாம்ராஜ்ஜியம் விரிந்தது.

அப்படியென்ன பொல்லாத வழிமுறை என்று கேட்கிறீர்களா? வேறொன்றுமில்லை. வேலையில்லா பட்டதாரிகளுக்கு வேலை கொடுத்தான். ஒரே குவாலிஃபிகேஷன் அவர்கள் அடித்தட்டு மக்களாக இருக்க வேண்டும். எழுதப் படிக்க தெரிந்திருக்க வேண்டும். குறிப்பாக ஆரோக்கியம் அவசியம்.

அப்படிப்பட்டவர்களை தேர்வு செய்தான். அவர்களுக்கு பாஸ்போர்ட் எடுத்தான். மத்திய கிழக்கு நாடுகளுக்கு அனுப்பி வைத்தான். மூன்று வாரங்கள் - சரியாக இருபத்தோரு நாட்கள் - சுற்றுலா பயணியைப் போல் அவர்கள் அந்தந்த நாடுகளை சுற்றிப் பார்க்கலாம். இஷ்டத்துக்கு செலவு செய்யலாம். தாவூத்தின் 'கம்பெனியே' இதையெல்லாம் ஏற்றது.

பயணம் முடிந்து அவர்கள் இந்தியாவுக்கு திரும்பும்போது - அந்தந்த நாடுகளில் இருக்கும் தாவூத்தின் ஆட்களை சந்திக்க வேண்டும். அந்த இளைஞர்களின் உடலுக்குள் - குறிப்பாக ஆசனவாய்க்குள் - இவர்கள் சின்னச் சின்ன தங்க கட்டிகளை புகுத்துவார்கள்.

இதன் பின்னர் விமானம் ஏறி பம்பாயில் இறங்க வேண்டும். முஸாஃபீர்கானா சென்று 'உள்ளுக்குள்' இருக்கும் சரக்கை எடுத்து 'கம்பெனி'யிடம் ஒப்படைக்க வேண்டும். நிர்ணயிக்கப்பட்ட 'கூலி'யை வாங்கிக்கொண்டு வீட்டுக்கு செல்ல வேண்டும்...

இதை படித்ததும் சட்டென்று கே.வி.ஆனந்த் இயக்கத்தில் சூர்யா நடித்த 'அயன்' பட காட்சிகள் மனக்கண்ணில் ஓடுகிறதா..?

குட். அதேதான்.

இந்த வழிமுறையை இந்தியாவில் புகுத்திய புண்ணியம் தாவூத்தையே சேரும். அன்று பம்பாய் விமான நிலையத்தில் இருந்த ஸ்கேன் மிஷின் பழைய மாடல். எனவே எவ்வளவு தடவிப் பார்த்தும் அதனால் 'இதை' கண்டுபிடிக்கவே முடியவில்லை.

நம்புவதற்கு சிரமமாக இருக்கும். உண்மை அதுதான். பெஹண்டி பஜார், இமாம் பாடா ரோடு, சந்தூர்ஸ்ட் ரோடு ஆகிய பகுதிகளை சேர்ந்த பம்பாய்வாசிகள் - அதேதான். அடித்தட்டு மக்களேதான் - பலரும் இதனால் பயனடைந்தார்கள். இந்தப் பகுதிகளில் வசித்த அடித்தட்டு மக்களின் வாழ்வாதாரங்கள் உயர்ந்தன. மேம்பட்டன. மூன்றுவேளை வயிறார சாப்பிட ஆரம்பித்தார்கள். அடிப்படை

வசதிகளை பெருக்கிக் கொண்டார்கள்.

இவர்களிடமே பணப்புழக்கம் அதிகரித்தது என்றால், தாவூத் குறித்து சொல்லவே வேண்டியதில்லை. சொர்ணாபிஷேகத்தில் குளித்தான்.

இப்போது பம்பாய் அவனுக்கு சுண்டைக்காயாக தெரிந்தது.

பொதுவாக பணத்துக்கு ஒரு குணம் உண்டு. தேவைக்காகத்தான் முதலில் அதை மனிதன் தேடுவான். ஆனால், எப்போது அது தேவைக்கு அதிகமாகிறதோ, அப்போது அது தன் குணத்தை காட்டும். அதாவது 'இன்னும் இன்னும்' என பசித்த ஓநாயைப் போல் எட்டுத் திசையிலும் நகரும். எதிர்படும் அனைத்தையும் விழுங்கும்.

அப்படித்தான் தாவூத்தும் நகர்ந்தான். துபாயில் தன் பிராஞ்ச் ஆபீசை திறந்தான்.

கூடவே - காதலிக்கவும் செய்தான்.

யெஸ், தாவூத் இப்ராஹிம் வாழ்க்கையிலும் மகத்தான ஒரு ரொமான்ஸ் எபிசோட் இருக்கிறது!

61

காரணம் சுஜாதா. முழுப் பெயர் சுஜாதா கவுர். வட்டமான முகம். மழுமழுப்பான கன்னங்களில் சின்னதாக அதுவும் அங்கொன்றும் இங்கொன்றுமாக பருக்கள். கூர்மையான நாசி. சராசரிக்கு சற்றே அதிக உயரம். மொத்தத்தில் பஞ்சாப் மாநிலத்தின் அத்தனை செழுமைகளையும் தன்னகத்தே கொண்ட இளம் பெண்.

இப்படியொரு தேவதை பம்பாயின் தெற்குப் பகுதியான முஸாஃபீர் கானாவில் இருந்தால் அங்குள்ள இளைஞர்கள் என்ன செய்வார்கள்?

அதைத்தான் தாவூத் இப்ராஹிமும் செய்தான்.

கடிகாரத்தை பார்க்காமலேயே அவனுக்கு நேரம் தெரியும். அதற்கு முன்னதாகவே தன் கடைக்கு வந்துவிடுவான். நாற்காலியில் அமர்ந்தபடி கலெக்ஷன் ரிப்போர்ட்டை பார்ப்பான். அடியாட்களுடன் அடுத்தகட்ட நடவடிக்கைகள் குறித்து ஆலோசிப்பான்.

சட்டென்று அவன் இதயம் வேகமாக துடிக்க ஆரம்பிக்கும். இருப்புக் கொள்ளாமல் தவிப்பான். கேஷுவலாக எழுந்து நிற்பான். வாசல் பக்கம் வருவது போல் வருவான். குறிப்பிட்ட திசையை பார்ப்பான்.

அப்படி அவன் பார்க்கும்போதுதான் - சந்திலிருந்து திரும்பி மணீஷ் மார்க்கெட் மெயின் ரோட்டுக்குள் சுஜாதா நுழைவாள். குனிந்த தலையுடன் சாலையில் நடப்பாள். தாவூத்தை கடப்பாள்.

மழையோ, வெயிலோ, பனியோ அல்லது வேலை நெருக்கடியோ - எதுவாக இருந்தாலும் குறிப்பிட்ட அந்த நேரத்துக்கு தாவூத் தன் கடைக்கு வந்துவிடுவான். சில நிமிடங்களில் அவன் இதயம் வேகமாக துடிக்கும். சுஜாதாவின் தரிசனம் கிடைத்த பிறகே அது நார்மலாகும்.

அன்றாடம் நடக்கும் இந்த சடங்கை யார் பார்க்க நேர்ந்தாலும் ஏதோ இருவரும் பேசி வைத்து செய்வது போல்தான் தெரியும். குறிப்பிட்ட நேரத்துக்கு சுஜாதா வருவதும், தாவூத் அந்த தருணத்தில் கடைவாசலில் வந்து நிற்பதும்.

ஆனால் - இது இயல்பாக நடந்தது என்பதுதான் ஆச்சர்யம்.

இத்தனைக்கும் தாவூத் அப்போது மாஃபியா உலகில் ஒர் ஆளுமையாக உயர்ந்திருந்தான். ஊரே அவனைப் பார்த்து நடுங்கியது. முரடனாகவும், கடத்தல் தொழிலில் கைதேர்ந்தவனாகவும் மட்டுமே அவனை கணித்தது.

இதற்கு மாறாக அவனுக்குள் இருந்த அன்பை - காதலை - நேசத்தை உலகிலேயே உணர்ந்த ஒரே ஜீவன், சுஜாதாதான்.

சொல்லப்போனால் அவளைத் தவிர வேறு யாரும் இன்றுவரை தாவூத்தின் இந்த முகத்தை நேருக்கு நேர் பார்த்ததில்லை.

அடிப்படையில் சுஜாதா அழகி என்பதால், சுற்று வட்டாரத்தில் இருந்த அனைத்து இளைஞர்களும் அவள் பின்னால் அலைந்தார்கள். ஈக்களை போல் அவளை மொய்த்தார்கள்.

எப்போது அவள் வீட்டைவிட்டு வெளியே வந்தாலும் சரி, சாலையில் அடியெடுத்து வைத்தாலும் சரி, பின்தொடரும் நிழலாக மாறினார்கள். அவள் பாதச்சுவடை இம்மி பிசகாமல் பின்பற்றி நடந்தார்கள். பாதுகாப்பு கொடுத்தார்கள். அவள் எந்தப் பக்கம் திரும்புகிறாளோ அந்தப் பக்கம் திரும்பினார்கள். எங்கு நிற்கிறாளோ அங்கு நின்றார்கள். மைக்ரோ விநாடியில் கடைக்கண் பார்வை கிடைக்காதா என்று ஏங்கினார்கள். பசலை படர தவித்தார்கள்.

இவை எல்லாம் சுஜாதாவுக்கும் தெரியும். தினமும் தன் முகத்தை கண்ணாடியில் பார்ப்பவள்தானே? எனவே தன்னைப் பற்றியும், தன் அழகைப் பற்றியும் உணர்ந்திருந்தாள். அதற்காகவே கட்டுடல் வேங்கை முதல், கம்பீரமான ஆணழகன் வரை தன்னை பின்தொடர்வதையும் அறிந்திருந்தாள். என்றாலும் அவள் யாரையும் ஏறிட்டும் பார்க்கவில்லை. ஒரே ஒருவனைத் தவிர.

அவன் தாவூத். அவள் மனம் மெல்ல மெல்ல சாய்ந்தது அவன் பக்கம்தான். யாரும் சொல்லாமலேயே அவனைப் பற்றி அறிந்திருந்தாள் - அவனது பராக்கிரமத்தை, பெருமையை, புத்திசாலித்தனத்தை.

விரும்பியோ விரும்பாமலோ அவை அனைத்தும் அவள் செவியை அடைந்திருந்தன. உள்ளத்தை நிரப்பியிருந்தன. அவற்றை எல்லாம் தொகுத்துப் பார்த்தால், மருந்துக்கு கூட நல்ல எண்ணம் ஏற்படாது. கனவிலும் நினைத்துப் பார்க்காத கொடூரமான மனிதனாகவே அவனது சித்திரம் அவள் மனதில் பதிந்திருந்தது. வரையப்பட்டிருந்தது.

ஸோ வாட்?

மனதார அவனை நேசித்தாள். தனக்காக அவன் காத்திருப்பதும், தன் தரிசனத்துக்காக ஏங்கி தவிப்பதும் அவளுக்கு பிடித்திருந்தது. ஹாஜி மஸ்தானும், கரீம் லாலாவும் தங்கள் வாழ்க்கையில் மிரண்டது - மிரள்வது ஒரே ஒருவனை கண்டுதான். பதான்ஸின் கொட்டத்தை அடியோடு ஒழித்தவனும் அவனேதான்.

அப்படிப்பட்டவன் தன் பின்னால் சுற்றுகிறான். தான் வருவதற்காக காத்திருக்கிறான். தன் பார்வை விழாதா என கசிந்துருகுகிறான்.

இதை விட ஒரு பெண்ணுக்கு வேறென்ன வேண்டும்? சிறகடித்து வானில் பறந்தாள். கற்பனையில் மிதந்தாள். கூடவே தன்னை சமாதானப்படுத்தியும் கொண்டாள். யெஸ்... கெட்டவன்,



பொல்லாதவன் என ஊர் சொல்கிறது. பேசட்டுமே... ஏழைகளுக்கு உதவுகிறான் அல்லவா? அது போதும்.

காலப்போக்கில் அவனை திருத்திவிடலாம்...

இந்த முடிவுக்கு அவள் மூளை வரவும், அனிச்சையாக அவள் பார்வை அவன் பக்கம் திரும்பவும், உதடுகள் விரிந்து புன்னகை பூக்கவும் சரியாக இருந்தது.

சூரியனைக் கண்ட மலர் போல் உடனே தாவூத் மலர்ந்தான். அருகில் சென்று பேசினான். இமைகள் படபடக்க, கன்னங்களில் சிவப்பு ஏற, கருவிழிகளில் காதல் வழிய சுஜாதா பதில் சொன்னாள்.

காதலித்தான். காதலித்தாள். காதலித்தார்கள். விஷயம் சுஜாதாவின் அப்பா கவுருக்கு எட்டியது. அவரால் இதை ஜீரணிக்க முடியவில்லை. கிளியை வளர்த்து சிறுத்தையிடம் ஒப்படைப்பதா என்று கொதித்தார். தன் மகளை வீட்டுக்குள் சிறை வைத்தார். கடைக்கோ, கோயிலுக்கோ செல்லவே கூடாது என்று கட்டளையிட்டார். அத்துடன் தங்கள் குடும்பத்துக்கு ஏற்ற மணமகனையும் தேர்வு செய்தார்.

விஷயம் தெரிந்ததும் தாவூத் பொங்கி எழுந்தான். சபீரையோ, காலிப்பையோ கூட துணைக்கு அழைத்துச் செல்லவில்லை.

தன்னந்தனியாக கையில் கத்தியுடன் - ஆம், துப்பாக்கியல்ல. கத்திதான். அப்படித்தான் பதிவு செய்யப்பட்டிருக்கிறது - சுஜாதாவின் வீட்டுக்கு சென்றான்.

வாசல் கதவு மூடியிருந்தது. தட்டவில்லை. இடியென ஓங்கி அறைந்தான்.

இதற்காகவே காத்திருந்தது போல் கதவு திறந்தது.

புயலென உள்ளே நுழைந்தான். சுஜாதாவை காணவில்லை.

பதிலாக தன் கைகளை கட்டிக்கொண்டு கவுர் நின்றிருந்தார்.

“எங்க உன் பொண்ணு?” கர்ஜித்தான்.

“உள்ள இருக்கா...”

“கூப்பிடு...”

“எதுக்கு?”

“ஒரு க்ளாஸ் தண்ணீர் கொடுக்க...” இகழ்ச்சியாக சொன்னவன், சட்டென்று கவுரின் ஜிப்பாவை கொத்தாக பிடித்தான். “கூப்பிடு...” சீறினான்.

முகத்தை திருப்பாமல், “சுஜா...” என குரல் கொடுத்தார்.

தயங்கித் தயங்கி சுஜாதா வந்து நின்றாள். விடாமல் அழுதிருப்பாள் போல. முகமெல்லாம் வீங்கியிருந்தது. அந்தக் கோலத்தில் அவளை கண்டதும் தாவூத், கோபத்தின் உச்சிக்கு சென்றான்.

“இப்படியா சித்திரவதை பண்ணுவ..?”

“யாரு நானா..?”

“பின்னே... வேற யாரு? ஒரு பெண்ணை அவளோட விருப்பத்துக்கு மாறா திருமணம் செய்து வைக்கக் கூடாதுன்னு கூடவா உனக்குத் தெரியாது..?”

“...”

“அவ மேஜர். தன் கணவனை தேர்ந்தெடுக்கிற உரிமை அவளுக்கு இருக்கு...”

“சட்டம் பேசறியா?”

“உண்மையை பேசறேன். இங்க பார்... கவுர் உன்கிட்டத்தான் பேசிகிட்டு இருக்கேன். நிமிர்ந்து என்னைப் பார்... உன் பிரச்னை என்ன? வேற வேற மதமா? பயப்படாத. உன் பெண்ணை மதம் மாற சொல்ல மாட்டேன். அவளை ராணி மாதிரி வைச்சு காப்பாத்தறேன். தரைல நடக்க விட மாட்டேன். ஒரு தகப்பனா எப்படியெல்லாம் உன் பொண்ணு வாழணும்னு நினைக்கறியோ... அதைவிட பல மடங்கு மகிழ்ச்சியோட அவளை நான் வாழ வைக்கறேன். ஏன்னா, அந்தளவுக்கு நான் சம்பாதிக்கறேன்...”

“அதுதான் பிரச்னையே...”

“ஓ... கடத்தல்ல நான் சம்பாதிக்கறேன்னு குத்திக் காட்டறியா? அதெல்லாம் சுஜாதாவுக்கும் தெரியும். எதையும் நான் மறைக்கலை. எல்லாம் தெரிஞ்சுதான் என்னை விரும்பறா. ஒழுங்கா எங்க ரெண்டு பேருக்கும் கல்யாணம் செய்து வை...”

“இல்லைனா..?”

“இப்ப, இந்த நிமிஷமே உன் பெண்ணை தூக்கிட்டு போயிடுவேன்.

உன்னால முடிஞ்சதை நீ பார்த்துக்க...”

“சரி... கூட்டிட்டு போ...”

“அப்பா...” அதுவரை அமைதியாக அனைத்தையும் கவனித்துக் கொண்டிருந்த சுஜாதா, அதிர்ச்சியுடன் நிமிர்ந்தாள். இப்படி சொல்வது தன் தந்தையா? அவளால் நம்ப முடியவில்லை.

“என்ன பார்க்கறே?

கூட்டிட்டு போ...”

“இதை முன்னாடியே செய்திருக்கலாம். பாவம் சுஜாதா... அழுது அழுது... சே...” என்ற தாவூத், அவள் பக்கம் திரும்பினான். “வா...”

சுஜாதா நகரவில்லை. தன் அப்பாவையே பார்த்தாள்.

“அதான் அவரே சொல்லிட்டாரே... வாம்மா...”

தன் காதலனை நோக்கி ஓரடி எடுத்து வைத்தாள்.

“ஒரு நிமிஷம்...” கவுரின் குரல் கணீரென்று ஒலித்தது. “இவன் கூட போனேனா திரும்பி இங்க வரக்கூடாது...”

“...”

“உனக்கு அப்பா, அம்மா, சொந்தம் பந்தம்னு எதுவுமே இல்லை... எல்லாரையும் மறந்துடணும்...”

“...”

“வீட்டை விட்டு நீ வெளியேறின அடுத்த நிமிஷமே குடும்பத்தோட நாங்க தற்கொலை செய்துப்போம். எங்க பிணத்தை கூட நீ பார்க்கக் கூடாது. சத்தியம் செஞ்சு கொடுத்துட்டு உன் காதலனோட போ...”

சுஜாதா விக்கித்து நின்றாள். அப்பாவும் அம்மாவும் தற்கொலை செய்துகொள்ளப் போகிறார்களா... அதுவும் தன்னாலா...

“அப்பா...” கதறியபடி அவர் காலில் விழுந்தவள், “நீங்க பார்க்கிற மாப்பிள்ளையையே நான் கட்டிக்கறேன்...” என்றாள்.

‘இப்ப என்ன சொல்ற?’ என்பது போல் தாவூத்தை பார்த்தார்.

அங்கு அவன் இல்லை. எப்போது சுஜாதா அப்படி சொன்னாளோ அப்பொழுதே அவன் அவள் வீட்டை விட்டு வெளியேறிவிட்டான்.

செய்தி அறிந்த அவன் கூட்டாளிகள் அவனை தேற்றினார்கள். தெரிந்த பெண்களை அவனுக்காக பார்த்தார்கள். பாலியல் தொழிலாளர்களை அழைத்து வந்தார்கள். சாராயத்தை அவன் முன்னால் வைத்தார்கள்.

எதையும், யாரையும் அவன் தொடவில்லை. பதிலாக ஒன்றே ஒன்றை மட்டும் சொன்னான். “இனி, என் வாழ்க்கைல காதலுக்கு இடமேயில்லை. பொண்ணுங்க வெறும் சதைப் பிண்டங்க. காமத்தை தீர்த்துக்க அவங்க வேணும். மத்தபடி கூட வாழ எல்லாம் அவங்க தகுதியற்றவங்க. அனுபவிச்சுட்டு வீசி எறிஞ்சிடணும். அப்படித்தான் செய்யப்போறேன்...”

செய்தான். அதனாலேயே மாஃபியா ராணிகளும் உருவாக ஆரம்பித்தார்கள்.

# 62

"இவ்வளவு தீவிரமா எதைப்பத்தி யோசிச்சுட்டு இருக்க?"

தோளில்கைபோட்டபடி அலாம்ஸேப்கேட்ட கேள்விக்கு எந்த பதிலையும் சொல்லாமல் அமைதியாக இருந்தான் அமிர்ஸாதா.

அந்த மவுனம் வியப்பை தந்தது. "நம்மை பத்தியா?" துருவினான். இமைகளை அழுத்தமாக மூடித் திறந்த அமிர்ஸாதா, "இல்ல..." என்றான்.

"அப்படீன்னா தாவூத் பத்தியா?"

"அதுவும் இல்ல..."

"இரண்டுமே இல்லைனா வேற எதைப் பத்தி ஆலோசிக்கற?"

"சத்தியத்தை பத்தி..."

"என்ன சொல்ற அமிர்ஸாதா..?"

"உண்மையை..."

"புரியலையே?"

"புரியலையா... இல்லை மறந்துட்டியா?"

கேட்டவனை உற்றுப் பார்த்தான் அலாம்ஸேப்.

பதிலை எதிர்பார்க்காமல் அடுத்த கேள்வியை அமிர்ஸாதா கேட்டான்.

"மஸ்தான் ஒரு மீட்டிங்கை ஆர்கனைஸ் பண்ணினாரே... நினைவுல இருக்கா?"

"ம்..."

"அப்ப என்ன நடந்தது?"

"..."

"சமாதான உடன்படிக்கை. இல்லையா..?"

"ஆமா..."

"அதனோட சாராம்சம் என்ன?"

"..."

"பதில் சொல்லு அலாம்ஸேப்... அந்த இடத்துல நீயும்தானே இருந்த?"

"இதையெல்லாம் இப்ப ஏன் கேட்கற?"

"காரணமாத்தான்..."

"அந்தக் காரணம்தான் என்னன்னு கேட்கறேன். இங்க பாரு அமிர்... உன் மனசுக்குள்ள ஏதோ குத்திகிட்டு இருக்கு. அது என்னன்னு சுத்தி வளைக்காம சொல்லு..."

மேஜையை தட்டியபடி எழுந்தான் அமிர்ஸாதா. "நமக்கு சமமா எப்பவுமே தாவூத் குரூப் இருந்ததில்ல. இருக்கவும் முடியாது. ஏன்னா, பரம்பரை பரம்பரையாவே பம்பாயை கட்டிக் காப்பது நாமதான். குறிப்பா கடந்த நாற்பது வருஷங்கள். அதனாலதான் நமக்குன்னு ஒரு மரியாதைஇருக்கு. மக்களும் நம்மை பார்த்து பயந்துகிட்டு இருக்காங்க..."



“இதையெல்லாம் நான் மறுக்கலையே...”

“ஆனா, மறந்துட்டியே... என்ன அப்படி பார்க்கறே? நான் என்ன சொல்ல வரேன்னு புரியலையா?”

“...”

“ஓ.கே. நேரா விஷயத்துக்கு வரேன். அப்படி மாபெரும் சாம்ராஜ்ஜியமா இருந்த நம்மோட நிலை இப்ப எப்படி இருக்கு?”

“...”

“ஏன் தலையை குனியற அலாம்... நிமிர்ந்து நில்லு. யதார்த்தம் புரியுதா? இன்னி தேதில நாம டம்மி பீசு. எந்த மக்கள் நம்மை பார்த்து பயந்தாங்களோ அவங்களே இப்ப நம்மை எதிர்க்கிறாங்க. எந்த தொழில்ல நாம கொடி கட்டி பறந்தோமோ அந்த தொழில் இப்ப நம்ம கைல இல்லை. என்னதான் சப்பு கொட்டினாலும் இதுதான் இன்னி தேதில நம்ம பொசிஷன். இதெல்லாம் எப்படி நடந்தது?”

“...”

“மஸ்தானால. அந்த கிழவன் தலைமைல நடந்த மீட்டிங்கால. அங்க நாம என்ன செஞ்சோம்... நம்ம புனித நூல் மேல சத்தியம் செஞ்சோம்.

என்னன்னு... சொல்லு அலாம்ஸேப்... உன்கிட்டதான் நான் பேசிட்டு இருக்கேன்...”

“இனி தாவூத் குரூப்போட சண்டை போட மாட்டோம்னு...”

“திரும்பச் சொல்லு...”

எதற்கு இப்படி அமிர்ஸாதா நோண்டுகிறான் என்று தெரியவில்லை. ஆனாலும் சொன்ன வாக்கியத்தையே மீண்டும் அலாம்ஸேப் உச்சரித்தான்.

“இதுக்கு என்ன அர்த்தம்?”

பதில் சொல்லாமல் மற்றவன் விழித்தான்.

“அதாவது இனி நாம எதிரிகள் இல்ல...

நண்பர்கள்னு. கரெக்டா?”

“ம்...”

“என்ன ம்..? சொன்னபடி நாம நடந்துக்கறோம். ஆனா, தாவூத்?”

“...”

“எதுக்கெடுத்தாலும் கண்ணை விரிக்காம நடப்புக்கு வா. சத்தியம் செஞ்சதுலேந்து நாம அவங்க வழிக்கு போகலை...”

“அவங்களும்தானே நம்ம வழில குறுக்கிடாம இருக்காங்க...”

“அறைஞ்சேனா தெரியும்... முட்டாள்தனமா உளறாத...”

“யாரை பார்த்து முட்டாள்னு சொல்ற?”

“இந்த ஆத்திரத்துக்கு ஒண்ணும் குறைச்சலில்ல. முதல்ல புத்தியோட யோசிக்க கத்துக்க...”

“ஆமா சார். நான் முட்டாள்தான். நீங்கதான் அறிவாளியாச்சே... எங்க புத்தியோட சொல்லுங்க பார்க்கலாம்...”

“கோச்சுகிட்டயா அலாம்...”

“...”

“பரவால. உன்னை திருப்திபடுத்தணும்னு என்னால பொய் சொல்ல முடியாது...”

“ஏய்...”

“கத்தாத. இப்படி தேவையில்லாம கூச்சல் போட்டு கூச்சல் போட்டுத்தான் நாம ஒண்ணுமே இல்லாம ஆகியிருக்கோம். கொஞ்சம் கண்ணை திறந்து பாரு. இன்னி தேதில நாம ஜீரோ. நாய் கூட நம்மை மதிக்க மாட்டேங்குது. இதுக்கெல்லாம் யார் காரணம்? நாமளா... போலீசா... மக்களா? இவங்க யாருமே இல்ல. தாவூத்தான் முழுக்க முழுக்க காரணம்...”

“...”

“தங்க கடத்தல் நம்ம பிசினஸ். அதுல நாமதான் கொடிகட்டி பறந்தோம். இப்ப... பச். கஸ்டமர்களே அவனைத்தான் தேடிப் போறாங்க. புதுசு புதுசா... தினுசு தினுசா அவன் பிசினஸ் பண்ணிட்டு இருக்கான்...”

“...”

“உன் வழில நான் குறுக்கிட மாட்டேன்.

அதேபோல என் வழிலயும் நீ குறுக்கிடாத. இப்படி சொல்லித்தானே நாம புனித நூல் மேல சத்தியம் செஞ்சோம்?”

“...”

“வாக்கு தவறாம நாம இருக்கோம். ஆனா, அவன்? நம்ம வழில குறுக்கிடறான். தங்க கடத்தலை மொத்தமா தன் கட்டுப்பாட்டுக்குள்ள கொண்டு வர முயற்சிக்கறான். இரு... இரு... ‘இந்தத் தொழில் பதான்ஸுக்கு மட்டுமே சொந்தம்னு எங்கயாவது எழுதி வைச்சிருக்கா?’ இதைத்தானே கேட்க வர..?”

“ஆமா...”

“நானும் அப்படி சொல்ல வரலை. காலம் மாற மாற எல்லாரும் எல்லா தொழிலையும் எல்லாரும் செய்ய ஆரம்பிப்பாங்கன்னு எனக்கும் தெரியும். ஆனா, புனிதநூல் மேல செஞ்ச சத்தியத்தை மீறலாமா?”

“...”

“அலாம்... திரும்பத் திரும்ப சத்தியத்தை பத்தியே பேசறேன்னு எரிச்சல் அடையாத.

புரிஞ்சுக்க. அது சாதாரண சத்தியம் இல்லை. நம்ம உயிரை விட மேலா நாம மதிக்கிற நம்ம புனிதநூல் மேல செய்த சத்தியம். அதை யார் மீறினாலும் அது தப்புத்தான்...”

“...”

“ரெண்டு முறை நீ சொன்னதை மூன்றாவது முறையா நான் சொல்றேன்... ‘இனி தாவூத் குரூப்போட சண்டை போட மாட்டோம்’னு மனதார நாம ப்ராமிஸ் செஞ்சதோட அர்த்தம், ‘இனி நாங்க எதிரிகள் இல்லை... நண்பர்கள்’னு. அப்படின்னா எல்லாவற்றிலும் கூட்டுன்னுதானே பொருள்...”

“வாட்...” அலாம்ஸேப்புக்கு தூக்கிவாரிப் போட்டது. “நீ... நீ... என்ன சொல்ல வர்ற..?”

“தங்க கடத்தல்ல நம்மையும் தாவூத் பார்ட்னரா சேர்த்திருக்கணும்னு. அப்படி சேர்க்காதது புனிதநூலை அவமதிப்பு செஞ்ச மாதிரின்னு...”

எதையோ சொல்ல வருவதும் மென்று விழுங்குவதுமாக அலாம்ஸேப் தடுமாறினான்.

குறுக்கும் நெடுக்குமாக நடந்தான்.

அங்கிருந்த மற்ற பதான்ஸ்களும் நிலை கொள்ளாமல் தவித்தார்கள். அமிர்ஸாதா சொன்ன ஒவ்வொரு சொல்லும் இடியாக அவர்கள் மனதில் இறங்கியது. யாராலும் மறுத்து பேச முடியவில்லை. மெல்ல மெல்ல தராசின் தட்டு சாய்ந்தது.

“நான் வேணும்னா தாவூத்கிட்ட பேசி பார்க்கட்டுமா?” அலாம்ஸேப் அமைதியை கிழித்தான்.

சரேலென்று திரும்பிய அமிர்ஸாதா, பற்களை கடித்தான். “பிச்சை கேட்கப் போறியா?”

அனைவர் முகத்திலும் இறுக்கம் சூழ்ந்தது.

*"இதுக்கெல்லாம் காரணம் காலிப்தான்..."*

*பின்னால் இருந்த அடியாள் ஓங்கி குரல் கொடுத்தான்.*

*"ஆமா. தொழில் ரகசியத்தை எல்லாம் தாவூத்துக்கு கத்துக் கொடுத்தது அவன்தான்..."*

*இன்னொருவன் வழிமொழிந்தான்.*

*"பேசாம அவனை போட்டுத் தள்ளிடலாம்..." மூன்றாவது ஆள் முஷ்டியை உயர்த்தினான்.*

*"வேண்டாம்..." கையை உயர்த்தியபடி அமிர்ஸாதா அவர்களை அடக்கினான்.*

*"ஏன்?"*

*"அவன் வெறும் கருவி அலாம்... அவனை கொல்றதால நமக்கென்ன பயன்?"*

*"அப்ப அமைதியா இருந்துடலாம்னு சொல்றியா?"*

*"இல்லை. வாலை நறுக்கறதுக்கு பதிலா தலையையே வெட்டிடலாம்னு சொல்றேன்..."*

*சட்டென்று அங்கிருந்தவர்களின் முகத்தில் திகிலும், பயமும், ஆச்சர்யமும், வியப்பும், மகிழ்ச்சியும் மாறிமாறி தாண்டவமாடியது.*

*"அப்ப..?"*

*"அதுவா..?"*

*"அப்படியா..?"*

*"இது சரி வருமா..?"*

*நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்து கொட்டியது போல் சொற்களும், வார்த்தைகளும் நான்கு புறமும் சிதறின. யார் என்ன பேசுகிறார்கள் என்றே தெரியாத அளவுக்கு பேச்சும் எதிரொலிகளும் சூழ்ந்தன.*

*ஆனால் - ஒருவரும் 'குறிப்பிட்ட பெயரை' மட்டும் யாரும் முணுமுணுக்கக் கூட இல்லை.*

*தன் கைகளை கட்டியபடி அமைதியாக இதையெல்லாம் அமிர்ஸாதா கவனித்தான்.*

*"ஷ்... அமைதியா இருங்கப்பா..."*

*உள்ளங்கையை உயர்த்தி அனைவரையும் அடக்கினான் அலாம்ஸேப்.*

*மூச்சு விடும் சத்தம் மட்டும் அங்கே ஒலிக்க ஆரம்பித்த தருணத்தில் - அந்த கேள்வியை குரல் நடுங்க கேட்டான்.*

*"தாவூத்துக்கே ஸ்கெட்ச் போட்டுடலாம்னு சொல்றியா?"*

*"இல்ல..."*

*"இல்லையா?"*

*மீண்டும் அங்கே வார்த்தைகளின் பரபரப்பு. எதிரொலி. சொற்கள் ஒன்றுக்கொன்று மோதின.*

*"அட அமைதியா இருங்கப்பா..." படபடப்புடன் கத்திய அலாம்,*

"என்னதான் சொல்ல வர்ற அமிர்..?" என்றான்.

"ஏன் உன் குரல் நடுங்குது?"

"ச்சூ. பதிலை சொல்லு..."

"எந்த பதிலை..?"

''தாவூத்தைத் தூக்க வேண்டாம்னு இப்ப சொன்னே இல்லையா..?"

"நான் எங்க அப்படி சொன்னேன்..?"

ஊசி விழுந்தால் சத்தம் கேட்கும் அளவுக்கு அனைவரும் உறைந்து நின்றார்கள்.

"தாவூத்துக்கும் ஸ்கெட்ச் போடலாம்னு சொல்றேன்..."

"அப்ப இன்னொருத்தரையும் சேர்த்து தூக்கணுமா?"

"ஆமா..."

"ரெண்டாவது ஆளு யாரு?"

"சபீர்..."

"..."

"அண்ணனுக்கும் தம்பிக்கும் சேர்த்து ஸ்கெட்ச் போடணும். சுதாரிக்க இடமே தரக்கூடாது.

ஒரே நேரத்துல ரெண்டு பேரையும் போட்டுத் தள்ளணும். ஏன்னா சத்தியத்தை மீறினதுல சபீருக்கும் சம அளவுல பங்கிருக்கு..."

செவியில் தேன் பாய்ந்தது போல் இருந்தது. மறுக்கும் நிலையில் யாருமே இல்லை. இது மட்டும் நடந்துவிட்டால் பதான்ஸை அடித்துக் கொள்ள ஆளே இல்லை என்பது அனைவருக்கும் புரிந்தது. எனவே உற்சாகமானார்கள்.

அதே சமயம் - இது நடக்குமா என்ற வினாவும் எல்லோருடைய மனதிலும் பூத்தது.

"கேட்க நல்லாதான் இருக்கு. ஆனா, எங்கிருந்து ஆரம்பிக்கப் போறோம்?" மற்றவர்களின் உள்ளத்தில் இருந்ததை அலாம்ஸேப் வாய்விட்டு கேட்டான்.

"காங்கிரஸ் ஹவுஸிலிருந்து..."

தாமதிக்காமல் அமிர்ஸாதா சொன்ன பதில் அனைவருக்கும் போதுமானதாக இருந்தது.

உற்சாகத்துடன் மேற்கொண்டு நடக்க வேண்டியதை குறித்து ஆலோசிக்கத் தொடங்கினார்கள்.

தெற்கு பம்பாயின் புகழ்பெற்ற இடம்தான் 'காங்கிரஸ் ஹவுஸ்'. ஆங்கிலேயர்களுக்கு அடிமைப்பட்டிருந்த காலத்தில் அங்குதான் காங்கிரஸ் தலைவர்கள் கூடுவார்கள். விடுதலை குறித்து பேசுவார்கள். எனவேதான் அந்த பெயர் வந்தது.

ஆனால் - இந்தியாவுக்கு சுதந்திரம் கிடைத்த பிறகு அந்த இடம் மாஃபியாக்களின் கைகளுக்கு சென்றுவிட்டது. கொத்து கொத்தாக பெண்களை பிடித்து வந்து அங்கு சிறை வைத்தார்கள். அதே.

காமாத்திபுரா போலவேதான்.

என்ன... அங்கு அடித்தட்டு உழைக்கும் மக்கள் மட்டுமே செல்வார்கள். ஏனெனில் குறைந்த விலைக்கு பாலியல் தொழிலாளர்கள் கிடைப்பது காமாத்திபுராவில்தான். ஒதுங்கும் இடம் நெருக்கமாகவும் சுகாதாரமின்றியும் இருக்கும். எனவே 'ஒயிட் காலர்' ஆண்கள் அங்கு செல்ல தயங்குவார்கள்.

இப்படிப்பட்டவர்களின் வேடந்தாங்கலே 'காங்கிரஸ் ஹவுஸ்'. மூன்றாம் தர இந்திப் பாடல்களுக்கு அரைகுறை ஆடையில் பெண்கள் நடனமாடுவார்கள். பேரம் படிந்ததும் ஆண்களுடன் அறைக்கு செல்வார்கள். ஓரளவு கட்டிலும் மெத்தையும் சுத்தமாக இருக்கும்.

இந்த இடத்துக்குத்தான் சபீர் அடிக்கடி சென்று வந்தான்.

இவனது மனம் கவர்ந்த சித்ரா, அங்குதான் இருந்தாள். எனவேதான் சபீரை போட்டுத் தள்ள 'காங்கிரஸ் ஹவுஸை' அமிர்ஸாதா தேர்ந்தெடுத்தான்.

63

சித்ரா திரும்பிப் பார்க்கவைக்கும் அளவுக்கு அழகியல்ல. அதற்காக முகத்தை திருப்பிக் கொள்ளும் அளவுக்கு தோற்றம் கொண்டவளும் அல்ல. சில பெண்களை பார்த்ததும் பிடிக்கும். பலரை பார்க்கப் பார்க்கப் பிடிக்கும். சித்ரா, இதில் இரண்டாவது வகை.

வளைந்த புருவங்கள். கூர்மையான நாசி. செப்பு உதடுகள். அடர்த்தியான கேசம். சுண்டி இழுக்கும் தேகம்.

காலம் காலமாக ஒரு பெண்ணை வர்ணிக்க எந்தெந்த சொற்கள், வாக்கியங்கள், உவமைகள் எல்லாம் பயன்படுத்தப்பட்டு வருகின்றதோ அவை அனைத்தும் அவளுக்கும் பொருந்தும்.

போலவேதான் 'காங்கிரஸ் ஹவுஸு'க்கு அவள் வந்து சேர்ந்த கதையும்.

பாலியல் தொழிலாளர்களாக மாற்றப்படும் எல்லா பெண்களுக்கும் பின்னால் என்ன சரித்திரம் இருக்கிறதோ அதுவேதான் சித்ராவின் வரலாறும். என்ன நம்பிய காதலன் ஏமாற்றவில்லை. பதிலாக சொந்தங்கள் நம்ப வைத்து கழுத்தை அறுத்தார்கள்.

யெஸ், அப்பா, அம்மா இல்லாத அநாதை. உறவினர்களால் வளர்க்கப்பட்ட சிறுமி. பருவம் அடைந்ததும் சில நூறுகளுக்கு அவளை இங்கு விற்றுவிட்டார்கள்.

தொடக்கத்தில் முரண்டு பிடிக்கவே செய்தாள். எப்போது ஒரே நேரத்தில் ஏழு ஆண்களால் பாலியல் வல்லுறவு செய்யப்பட்டாளோ அப்போது முதல் சுழற்சியின் ஓர் அங்கமானாள். அக்காக்களுக்கும் மாமாக்களுக்கும் கட்டுப்பட்ட பண்டமானாள். இருபத்தைந்து வயதுக்குள் நாளொன்றுக்கு இருபது மணி நேரம் உழைக்கும் அளவுக்கு மாற்றப்பட்டாள். சராசரியாக முப்பது ஆண்கள் அவளுடன் அந்த உழைக்கும் நேரத்தில் கூடிவிட்டு நகர்ந்தார்கள்.

உடல் மரத்துப் போயிருந்தது. மலர்ச்சி என்னும் சொல்லே அவள் அகராதியிலிருந்து அழிக்கப்பட்டிருந்தது. இயந்திரமாகவே மாறியிருந்ததால் எந்த இயக்கமும் உணர்வு எழுச்சியின் தளத்துக்கு நகரவில்லை.

இதை மாற்றுவதற்காகவே 'காங்கிரஸ் ஹவுஸு'க்கு வந்து சேர்ந்தவன்தான் சபீர்.

இத்தனைக்கும் அப்போது அவனுக்கு ஷாநாஸுடன் திருமணமாகியிருந்தது. அதுவும் காதல் மணம். அதாவது, ஒருதலைக் காதல் திருமணம்.

மனமார ஷாநாஸ் விரும்பியது ஒரு பதானைத்தான். 'லாலா கி லாலி' என அவள் தோழிகள் கிண்டல் அடிப்பார்கள். அந்தளவுக்கு பதான் பைத்தியமாக இருந்தாள்.



அந்த நேரம் பார்த்து யதேச்சையாக இவளை சபீர் சந்தித்தான். கண்டதும் காதல். தாவூத் இப்ராஹிமிடம் தன் விருப்பத்தை தெரிவித்தான்.

"வேண்டாம்..." திட்டவட்டமாக தம்பி மறுத்தான்.

"ஏன்?"

"அவ ஏற்கனவே இன்னொருத்தனை காதலிக்கிறா..."

"பரவால. எனக்கு மனைவியானதும் அந்த பதானை மறந்துடுவா..."

தாவூத்துக்கு இதில் உடன்பாடில்லை. ஆனாலும் அண்ணனின் ஆசைக்கு தடை போடவில்லை.

ஷாநாஸை கன்வின்ஸ் செய்யும் பொறுப்பை சபீர் ஏற்றான். என்ன பேசினான் என்று தெரியாது. ஆனால், திருமணத்துக்கு சம்மதித்தாள். அத்துடன் காதலித்தவனை மறக்கவும் செய்தாள்.

இவர்கள் அன்புக்கு அடையாளமாக அடுத்த வருடமே ஷிராஸ் பிறந்தான்.

என்ன... அந்த அன்பு தறிகெட்டு பாய்ந்ததால் இடைவெளியின்றி

மீண்டும் கர்ப்பமானாள்.

இதனால் உடல் பலவீனமாகியிருந்தது.

''தள்ளித்தான் படுக்கணும்...'' என மருத்துவர்கள் எச்சரித்துவிட்டார்கள்.

"கவலைப்படாத. வடிகாலுக்கு இடமிருக்கு..." ஓர் அடியாள் கண் சிமிட்டினான்.

"காமாத்திபுராவா? நான் வரலை..."

"அங்க இல்ல..."

"பின்னே... ஃபால்க்லேண்ட் ரோடா?"

"அதுவும் கலீஜ்தானே? அங்கயும் இல்ல..."

"அப்ப வேற எந்த இடம்?"

"காங்கிரஸ் ஹவுஸ்..."

சொன்னதுடன் நிற்காமல் அழைத்து வரவும் செய்தான்.

கண் முன்னால் நின்ற இயந்திரங்களில் சபீர் தேர்ந்தெடுத்தது சித்ராவைத்தான்.

பத்தோடு பதினொன்றாக அவனையும் ஏற்கும்விதமாகத்தான் அறைக்குள் நுழைந்தாள்.

ஆனால் - அவளுக்குள் செத்துக்கிடந்த அவளை அவன் உயிர்பித்தான். இப்படியொரு திருப்பத்தை சித்ரா சற்றும் எதிர்பார்க்கவில்லை. தன் வாழ்க்கை 'காங்கிரஸ் ஹவுஸ'்க்குள்ளேயே முடிந்துவிடும் என்றுதான் நினைத்தாள்.

அதற்கு மாறாக அவள் கனவும் காணாத வாழ்க்கையை அவளுக்கு சபீர் காண்பித்தான்.

என்ன காரணத்தாலோ அவனுக்கு அவளை பிடித்துவிட்டது. ஒருவேளை அவன் தத்து பித்து என்று பேசுவதை எல்லாம் கண்களை விரித்தபடி அவள் கேட்டது காரணமாக இருக்கலாம்.

தன் தம்பி தாவூத்தாலும், காலிப் உட்பட மற்ற சகாக்களாலும் 'முட்டாள்... தத்தி... அவசர கொடுக்கு...' என்றே புறக்கணிக்கப்பட்டு வந்த அவனையும் மதித்த ஒரே ஜீவனாக சித்ரா இருந்ததும் அவனை சாய வைத்திருக்கலாம்.

அவளுக்காகவே பழைய இந்தி காதல் பாடல்களை பாடினான். கண்களை மூடி ரசித்தாள். தனக்கு தெரிந்த உருது கவிதைகளை ஏற்ற இறக்கத்துடன் உச்சரித்தான். கிறங்கினாள். கைகோர்த்தபடி சாலையில் நடந்தான். தோளில் கண் மூடி சாய்ந்தாள். வெளி இடங்களுக்கு அழைத்துச்சென்றான். முத்தமிட்டாள். ஆள் இல்லாத திரையரங்குக்கு அவளுடன் நுழைந்தான். ஷாநாஸ் கொடுக்கத் தவறிய சுகத்தை இருள் அடைந்த தியேட்டரில் அவனுக்கு கொடுத்தாள்.

இலக்கின்றி காரில் நெடுந்தூரம் சென்றார்கள். வண்டியை அவன் ஓட்டினான். அவனை அவள்.

பேல்பூரி சாப்பிட்டார்கள். பானிபூரியை உறிஞ்சினார்கள்.

கடத்தல் தொழிலில் வேண்டுமானால் சபீர் சப்பையாக இருக்கலாம். ஆனால், காதல் விஷயத்தில் மன்மதனுக்கே பாடம் கற்பிக்கும் ஆசானாக இருந்தான்.

அவனுடன் செலவழிக்கும் பொழுதுகளே அவளுக்கு பொக்கிஷமாக அமைந்தன. அவளை இறக்கிவிட்டு தன் வீட்டுக்கு அவன் செல்லும்போது எதையோ பறிகொடுத்தது போல் தவிப்பாள்.

அந்த நேரத்தில் அவளுக்கு அடைக்கலம் தருபவள் நந்தாதான்.இன்னொரு பாவப்பட்ட உயிர். சித்ராவை போலவே உறவினர்களால் வஞ்சிக்கப்பட்டு 'காங்கிரஸ் ஹவுஸ'க்கு வந்து சேர்ந்த ஆத்மா. ஓவர் டைம் பார்த்ததால் புண்ணாகிப்போன உடலுக்கு பரஸ்பரம் ஒத்தடம் கொடுப்பதன் வழியாக இருவரும் இயல்புக்கு திரும்புவார்கள்.

சபீருடன் வெளியில் சுற்றிவிட்டு திரும்பும் நாட்களில் நடந்த விஷயங்களை எல்லாம் மறைக்காமல் நந்தாவிடம் பகிர்ந்து கொள்வாள்.

"இன்னிக்கி ரெண்டு பேரும் கோன் ஐஸ் சாப்பிட்டோம்... அப்ப சபீர் என்ன செஞ்சான் தெரியுமா..?"

"ம்... சொல்லு..."

"தன் கைல இருந்த மொத்த ஐஸையும் என் முகத்துல அப்பினான்..."

"ஐயையோ...

அப்புறம்?"

"பொது இடம்னு கூட பார்க்காம தன் நாக்கால அத்தனை ஐஸையும் வழிச்சு தின்னான்..."

"..."

நந்தா அமைதியாக அவளையே பார்ப்பாள். உள்ளம் மட்டும் எரிமலையாக கொதிக்கும். உடலில் இருக்கும் ஒவ்வொரு செல்லும் வெந்து தணியும்.

சத்தியமாக நந்தா பொறாமைப்படவில்லை. ஆனால், தனக்கு மட்டும் ஏன் இப்படியொரு காதலன் கிடைக்காமலேயே போகிறான் என்று எண்ணி எண்ணி மருகினாள். தலையணை நனையும் அளவுக்கு அழுதாள். கழிவறையில் கதறினாள். தன்னையும் மனுஷியாக நினைக்கும் ஒரேயொரு ஆண் கிடைத்தால் போதும் என முப்பது முக்கோடி தேவர்களையும் பிரார்த்தித்தாள். நந்தாவின் வேண்டுதல் வீண் போகவில்லை.

இவள் எதிர்பார்த்தது போலவே ஓர் ஆண் வந்து சேர்ந்தான். இயந்திரமாக செயல்படாமல் இவளுக்குள் குறுக்கும் நெடுக்குமாக ஓடிய நரம்புகளை தனித்தனியாக சுண்டினான். உடலே அதிர்ந்தது. முதல் முறையாக தன் வாழ்நாளில் ஒரு காதலனை கண்டாள்.

*மனமெல்லாம் நடுங்க வந்தவனின் கேசத்தை தடவியபடி கேட்டாள்.*

*"உங்க பேரு என்ன..?"*

*வந்தவன் சிரித்தான். "எதுக்கு கேட்கற?"*

*"நீங்க போன பிறகும் உங்களை பத்தி நினைக்க..."*

*"அப்ப என்னை போக சொல்றியா?"*

*சட்டென்று தன் மேல் இருந்தவனின் உதட்டை கவ்வினாள். கடித்தாள். பூத்த குருதியை உறிஞ்சினாள்.*

*"ஏய்..." உதறியவன் நந்தாவை உற்றுப் பார்த்தான். "அவ்வளவு பிடிச்சிருக்கா என்னை?"*

*"ம்..." கண் கலங்கினாள்.*

*"அப்ப வெளில போயிட்டு வரலாமா?*

*அக்காகிட்ட நான் பேசிக்கறேன்..."*

*உதடுகள் துடிக்க தலையசைத்தாள். எழுந்து முகத்தை கழுவினாள். கலைந்த முடியை வாரினாள். உடையை சரிசெய்தாள்.*

*"வா..."*

*"இன்னும் உங்க பேரை சொல்லலையே?"*

*இமைகளை மூடித் திறந்தவன் அழுத்தமாக சொன்னான்.*

*"அமிர்ஸாதா..."*

64

நந்தா, மிதந்தாள். வானத்தில். கடலில். மலையில். காடுகளில். நிலத்தில்.

மனமெங்கும் உற்சாகம் ஊற்றெடுத்தது. அது அவள் உடலிலும் எதிரொலித்தது. நடையில் நிமிர்வு வந்தது. கன்னத்தில் செழுமை கூடியது. கண்களில் பளபளப்பு ஏறியது. எந்நேரமும் இந்தி சினிமா பாடல்களை முணுமுணுத்தாள். அருகில் இருக்கும் சக தோழிகளை தோன்றும்பொழுதெல்லாம் முத்தமிட்டாள்.

காங்கிரஸ் ஹவுஸில் அவளை மேற்பார்வை செய்து வந்த 'அக்கா'வுக்கு எதுவும் புரியவில்லை. புரிந்துகொள்ளவும் முயலவில்லை. நந்தாவின் தோற்றம் மாறியதே போதுமானதாக இருந்தது அக்காவுக்கும் வாடிக்கையாளர்களுக்கும்.

சித்ராவை எப்படியெல்லாம் சபீர் மகிழ்விக்கிறான் என நந்தா கனவு கண்டு பெருமூச்சு விட்டாளோ, அப்படியெல்லாம் அமிர்ஸாதா அவளை கொண்டாடினான். அல்லது அவளை எப்படியெல்லாம் அமிர்ஸாதா மகிழ்விக்கிறானோ அப்படியெல்லாம்தான் சித்ராவை சபீர் கொண்டாடுகிறான் என நினைத்துக்கொண்டாள்.

அதனாலேயே தன் தோழியை அவளுக்கு பிடித்திருந்தது. சித்ரா இல்லையேல் காதலன் குறித்து கற்பனை செய்திருக்க மாட்டாள். மட்டுமல்ல, தோழியின் வாழ்க்கையில் சபீர் நுழைந்த பிறகுதான் அவள் வாழ்விலும் அமிர்ஸாதா வலது காலை எடுத்து வைத்து நுழைந்தான்.

எனவே தனது இப்போதைய அனைத்து உணர்வுகளுக்கும் காரணம் சித்ராவும், சபீரும்தான் என மனதார நம்பினாள். அவர்கள் நலமுடன் வாழ வேண்டும் என முப்பது முக்கோடி தேவர்களையும் வேண்டினாள். தோழியின் நலம் குறித்த விஷயங்களில் அக்கறை செலுத்தினாள்.

சொல்லி வைத்தது போல்தான் சகலமும் நடந்தது. சித்ராவை அழைத்துக்கொண்டு சபீர் எப்பொழுதெல்லாம் வெளியில் செல்கிறானோ அப்பொழுதெல்லாம் அவளையும் கூட்டிக் கொண்டு அமிர்ஸாதா நகர் உலா வந்தான்.

பொதுவாக ஓர் ஆணும் பெண்ணும் காதலால் கசிந்துருகுகிறார்கள் என்றால்... அதையும் வெளிப்படுத்திக்கொள்ளாமல் மனதுக்குள் பூட்டி வைத்திருக்கிறார்கள் என்றால்... அந்த விஷயம் சம்பந்தப்பட்டவர்களை விட மற்றவர்களுக்குத்தான் முதலில் தெரியும்.

இது உலக நியதி.

சாதாரண மனிதர்களின் காதலே இப்படி வெளிச்சமாகிறது என்றால், பாலியல் தொழிலாளர்களின் நேசம் குறித்து கேட்கவே வேண்டாம். சூரியனை விட அது அதிகம் பிரகாசித்து மற்றவர்களுக்கு காட்டிக் கொடுத்துவிடும்.



அப்படித்தான் நந்தாவின் காதலை சபீர் அறிந்துகொண்டான். அந்த காதலன் அமிர்ஸாதாவாக இருந்தது அவனை யோசிக்க வைத்தது. உள்குத்து இருக்குமோ என பலமுறை சிந்தித்தான். ஒவ்வொரு முறையும் இது குறித்து யோசிக்கும்போதும் புனித நூலின் மீது செய்யப்பட்ட சத்தியம்தான் நினைவுக்கு வரும். சமாதானம் அடைவான். 'எதிரிதான்...

இப்பொழுது இல்லை...'

என்றாலும் ஒருமுறை கூட இருவரும் 'காங்கிரஸ் ஹவுஸில்' சந்தித்துக் கொள்ளவில்லை. சந்தர்ப்பமும் அமையவில்லை. சபீர் வரும் நேரத்தில் அமிர்ஸாதா இருக்க மாட்டான். போலவே அமிர்ஸாதா வரும் சமயத்தில் சபீரும்.

என்றாலும் ஒருவரைப் பற்றி மற்றவருக்குத் தெரிந்திருந்தது. குறிப்பாக அமிர்ஸாதாவுக்கு. நந்தாவின் முகத்தை வைத்தே சித்ராவின் மனநிலையையும் அதன் வழியாக சபீரின் போக்குவரத்தையும் அவனால் கணிக்க முடிந்தது.

'என்ன... சித்ரா ஜாலியா இருந்தாளா?'

'எப்படி கரெக்ட்டா சொல்றீங்க..?'

'என் உடம்புல உன் கை நகர்வதை வைச்சு...'

'சீ... நீங்க ரொம்ப மோசம்...'

எச்சரிக்கையாக தொடங்கி, இயல்பாக நகர்ந்து, பழக்கமான உரையாடல்களாக இந்த விஷயம் மாறிய நேரத்தில்தான் அமிர்ஸாதா, அவளை தொலைபேசியில் அழைத்தான்.

'இன்னிக்கி நைட் வெளில போகலாமா?'

நந்தாவால் உடனடியாக பதில் சொல்ல முடியவில்லை. சித்ராவின் ஏக்கம் படிந்த முகமே அவள் மனதில் நிழலாடியது. சில நாட்களாக சபீர் வரவில்லை. எனவே...

'ஏன் அமைதியா இருக்க?'

'இல்ல...' இழுத்தாள்.

'என்ன விஷயம்?'

முகத்தை கழுவியபடி வந்த சித்ராவை பார்த்தபடியே பதில் சொன்னாள். 'சித்ராவையும் கூட கூட்டிட்டு போகலாமா?'

மறுமுனையில் அமிர்ஸாதா என்ன சொன்னான் என்று தெரியாது. அதற்குள் சித்ரா பாய்ந்து நந்தாவின் வாயை பொத்தினாள். ரிஸீவரை அவள் செவியில் இருந்து அகற்றினாள்.

'என்ன இது பைத்தியக்காரத்தனம்? பூஜை வேளைல நான் எதுக்கு கரடியா...'

'அதில்லை சித்ரா... வந்து...'

'வந்தாவது போய்யாவது. நீங்க ரெண்டு பேரும் வெளில போயிட்டு வாங்க. எனக்கு வேலை இருக்கு...'

'அப்படியென்ன பொல்லாத வேலை...'

'பொல்லாததுதான். நைட் அவர் வர்றார். நாங்களும் அவுட்டிங் போறோம்...' கண் சிமிட்டினாள்.

சட்டென்று நந்தாவின் முகம் மலர்ந்தது. 'சபீரா..?'

'ம்...' குதித்தபடி ஓடினாள்.

பாரம் இறங்கியது போல் லேசானாள். விலகிய ரிஸீவரை எடுத்து மறுபடியும் காதில் வைத்தாள்.

'சாரி... திடீர்னு ஒருத்தங்க வந்துட்டாங்க. அதான் பதில் சொல்ல முடியலை. நாம நைட்டு வெளில போகலாம்...'

'சித்ரா?'

'அவ வரலையாம்...'

'ஏன்?'

'சபீர் கூட அவளும் அவுட்டிங் போறா...'

'அப்ப இன்னிக்கி என்னை அளவுக்கு அதிகமாவே நீ சந்தோஷப்படுத்துவேன்னு சொல்லு...' என்று மறுமுனையில் அமிர்ஸாதா கிசுகிசுப்பான் என்று எதிர்பார்த்தாள்.

பதிலாக 'கீ... கீ...' என்ற ஒலிதான் அவள் செவியை நிரப்பியது. தொலைபேசியை துண்டித்திருக்கிறான். ஒருவேளை கால் கட்டாகி விட்டதோ? அப்படித்தான் இருக்கும். சித்ரா இயல்புக்கு திரும்பி விட்டாள் அல்லவா? அது போதும்.

'நீயாதான் கூப்பிட்டியா?' அறைக்குள் நுழைந்ததும் கேட்டாள்.

'ஆமா...' கன்னங்கள் சிவக்க சித்ரா பதில் அளித்தாள்.

உண்மையில் சித்ரா அழைத்தபோது சபீர் மருத்துவமனையில்

இருந்தான். ஷாநாஸுக்கு மாதாந்திர செக்கப். பிரசவம் ஆக இன்னும் மூன்று மாதங்களே இருந்தன. ஒரு பிரச்னையும் இல்லை என மருத்துவர் சொல்லியிருந்தார்.

'வா... உன்னை இறக்கிவிட்டுட்டு நான் கிளம்பணும்...' மனைவியை அவசரப்படுத்தினான்.

சலனமில்லாமல் ஷாநாஸ் தலையசைத்தாள்.

'வேலை இருக்கு. காலைலதான் வருவேன்...'

என்ன வேலை என்று கேட்கவில்லை. பதிலை அறிந்திருந்தாள். அடிக்கடி இப்பொழுதெல்லாம் வெளியில் தங்குகிறான்...

மனைவி நல்லமுறையில் வீட்டுக்குள் சென்றாளா என்று கூட அவன் கவனிக்கவில்லை. கார் கதவை திறந்துகொண்டு அவள் இறங்கியதுமே கியரை மாற்றினான். வண்டியை திருப்பினான். வேகத்தை அதிகரித்தான். காங்கிரஸ் ஹவுஸை வந்தடைந்தான்.

அதற்குள் சித்ரா குளித்து முடித்து உடையை மாற்றியிருந்தாள். ஒரேயொரு முறைதான் 'ஹாரன்' அடித்தான். அதற்குள் வாசலுக்கு வந்துவிட்டாள்.

காங்கிரஸ் ஹவுஸில் ஒரு வழக்கம் உண்டு. நள்ளிரவு 12.30 மணிக்கு மேல் அங்கு எந்த வாடிக்கையாளரும் இருக்கக்கூடாது. பெரிய மனிதர்கள் என்றால், குறிப்பிட்ட பெண்ணை அழைத்துக் கொண்டு வெளியில் செல்லலாம்.

சபீர் பெரிய மனிதன். எனவே 'அக்கா' தடுக்கவில்லை.

வாசலை தாண்டுவதற்கு முன் அங்கிருந்த நாள்காட்டியை சித்ரா பார்த்தாள். அடுத்த நாள்தான் பிறந்துவிட்டதே...

தேதியை கிழித்தாள்.

12.2.1981.

குதிகாலால் குதித்தபடி காரை நோக்கி வந்தாள்.

கண்களால் சிரித்தபடி அவளை வரவேற்றான். முன்பக்க கார் கதவை திறந்தான். உதட்டை குவித்து அவனுக்கு அழகு காட்டியபடியே அமர்ந்தாள். அனிச்சையாக அவள் பார்வை தன் மணிக்கட்டில் இருந்த கடிகாரத்தை பார்த்தது. அவன் பரிசளித்ததுதான். மணி, சரியாக ஒன்று.

'எங்க போறோம்?'

'ம்... சொர்க்கத்துக்கு...'

'ச்சீ...' அவன் நெஞ்சில் குத்தினாள்.

புன்னகையுடன் காரை கிளப்பினான். மிதமான வேகம். ரம்மியமான சூழல்.

காமாத்திபுராவை கடந்தது, டார்டியோவில் இடப்பக்கம் திரும்பி, ஹாஜி அலி மசூதி பக்கமாக சென்றான்.

சித்ராவை பார்ப்பதும், சாலையை ஏறிடுவதுமாக இருந்தவன் எதேச்சையாக 'ரியர் வியூ' கண்ணாடியை பார்த்தான்.

ரோஜாக்களால் அலங்கரிக்கப்பட்ட அம்பாசிடர் கார் ஒன்று பின்னால் வந்துகொண்டிருந்தது.

புதிதாக மணமான ஜோடிகள் போல. உதடு விரிய சிரித்தான். சித்ராவின் விரல்கள் அவன் உடலில் ஊர்ந்துகொண்டிருந்தன. அது கொடுத்த கிளர்ச்சியும் திருமணமான ஜோடி ஒன்று பின்னால் வருவதுமாக சேர்த்து அவன் நரம்புகளை அதிர வைத்தன.

விசில் அடித்தபடியே 'ஃபியூயல் மீட்டரை' பார்த்தான். சலித்துக் கொண்டான்.

'சே... டேங்கை ஃபில் பண்ண மறந்துட்டோமே...'

அருகில் எங்கெல்லாம் பெட்ரோல் பங்க் இருக்கிறதோ அங்கெல்லாம் சென்றான். சந்து பொந்துகளில் நுழைந்தான். எல்லாமே பூட்டியிருந்தன.

'ஃபியூயல் மீட்டரோ' அபாய நிலையை தொடும் நிலையில் இருந்தது.

எப்பொழுது வேண்டுமானாலும் கார் நின்றுவிடலாம். அதற்குள்... அதற்குள்... கரெக்ட். பிரபாதேவி நான்கு அல்லது ஐந்து கிலோ மீட்டர் தொலைவில்தான் இருக்கிறது. அங்கிருக்கும் கேஸ் ஸ்டேஷன் இப்பொழுது திறந்திருக்கும். கொஞ்சம் லாவகமாக ஓட்டினால் நிற்காமல் சென்றுவிடலாம்...

சந்துகளை கடந்து சாலையை தொட்டவன் மீண்டும் 'ரிவர் வியூ மிரரை' பார்த்தான்.

அதிர்ந்தான்.

புருவங்கள் முடிச்சிட்டன.

அதே வெள்ளை அம்பாசிடர். அதே ரோஜா பூக்கள். இத்தனை நேரம் தங்களைத்தான் பின்தொடர்கிறதா?

உள்ளுக்குள் அலாரம் அடித்தது. அதே நேரம் 'ஃபியூயல் மீட்டரும்' அவன் கவனத்தை தன் பக்கம் இழுத்தது.

தாக்குப் பிடித்தபடி பிரபாதேவியை அடைந்தான். எதிர்பார்த்தது போலவே பங்க் திறந்திருந்தது.

பெட்ரோலை நிரப்புவதற்காக காரை நிறுத்தினான்.

சரியாக ரோஜாக்களால் அலங்கரிக்கப்பட்ட அந்த அம்பாசிடரும் பின்னால் வந்து நின்றது.

ஸ்கெட்ச் போட்டிருக்கிறார்கள்...

'சித்ரா இறங்கு...' கத்தும்போதே சபீரின் குரல் நடுங்கியது.

'என்ன... என்ன... விஷயம்..?'

'சொல்றதை கேளு. இறங்கி பங்குக்குள்ள ஓடு...'

'ஏன்?' என்று அவள் கேட்டு முடிப்பதற்குள் - அம்பாசிடர் காரில் இருந்து இறங்கிய ஐந்து பேர் கையில் பிஸ்டல், துப்பாக்கி, ரைஃபிள், கத்தி சகிதம் சபீரின் பிரீமியர் பத்மினி ஃபியட்டை சூழ்ந்துகொண்டார்கள்.

*ஒருவன் முன்பக்க கார் கதவை திறந்தான். முரண்டு பிடிக்க சித்ராவுக்கு நேரம் தராமல் அவளை இழுத்து வெளியே எறிந்தான்.*

*அச்சம் படர்ந்த கண்களுடன் தன் துப்பாக்கியை சபீர் தேடி எடுப்பதற்குள் - சரமாரியாக குண்டுகள் பாய்ந்தன.*

*மொத்தம் 9 குண்டுகள் அவன் உடலையும் - 19 குண்டுகள் காரையும் துளைத்தன.*

*ஸ்டியரிங் வீலில் அப்படியே சாய்ந்தான். துப்பாக்கியின் ஓசை அடங்கியதும் ஒரு மனிதன் கையில் கத்தியுடன் கதவை திறந்தான். சபீரின் தலைமுடியை கொத்தாக பிடித்து உயர்த்தினான். தன் கையில் இருந்த கத்தியால் அவன் கழுத்தை...*

*உயிர் பிரியும் அந்த கடைசி நொடியில் - தன் கழுத்தில் இருந்து பொங்கிய குருதியை சபீர் பார்க்கவில்லை.*

*பதிலாக தன் முன்னால் நின்ற ஆஜானுபாகுவான மனிதனை பார்த்தான்.*

*அவன் அமிர்ஸாதா.*

## 65

"போயிட்டானா?" குரல் நடுங்க அலாம்ஸேப் கேட்டான்.

"குண்டு பாய்ந்தப்பவே..." இனம்புரியாத மகிழ்ச்சியுடன் சொன்ன அமிர்ஸாதா, அமர்ந்த நிலையில் இறந்திருந்தவனை ஆராய்ந்தான்.

சிட்டிகை அழுக்கு கூட பதியாத சபீரின் வெள்ளை நிற ஷூ, ரத்தத்தில் நனைந்திருந்தது.

தன் காலை உயர்த்தினான். பழுப்பு நிற ஷூவின் அடிப்பாகத்தில், குருதியில் குளித்திருந்த கத்தியை நிதானமாக தடவினான்.

சித்ராவின் கதறல் நிற்காமல் ஒலித்தது. அக்கம் பக்கத்தில் இருந்த வீடுகளில் வெளிச்சம் பரவத் தொடங்கியது.

அவசரம் காட்டாமல் நிமிர்ந்த அமிர்ஸாதா, அம்பாசிடரை நோக்கி நடந்தான்.

அதற்குள் மற்றவர்கள் காருக்குள் புகுந்திருந்தார்கள்.

முன்பக்க இருக்கையில் அமர்வதற்கு முன்னால் ஏறிட்டான். "நன்றி சித்ரா..." என்றபடி ஃப்ளையிங் கிஸ் கொடுத்தான். ஓசையுடன் கதவை மூடினான்.

டிரைவர் சீட்டில் இருந்த மமூர்கான், எடுத்ததுமே வேகத்தை கூட்டினான். அரைவட்டம் அடித்து வந்த வழியே அம்பாசிடர் பறந்தது.

''நேரா நம்ம இடம்தானே?'' பின்னிருக்கையில் இருந்த அலாம்ஸேப், முன்னுக்கு வந்தான்.

"அதை மன்யா சூர்வ் சொல்லட்டும்..."

''என்னை ஏன் அமிர்ஸாதா கேட்கற?'' அலாம்ஸேப்புக்கு அருகில் இருந்த மனோகர் சூர்வ் என்கிற மன்யா சூர்வ் சலித்துக் கொண்டான்.

"வேற யாரை கேட்க? இந்த ப்ளான் உன்னோடதுதானே?"

"அது சரி..." கர்வத்துடன் மன்யா சூர்வ் முணுமுணுத்தான்.

உண்மைதான். சபீரை போட்டுத்தள்ள அவன்தான் திட்டம் போட்டு கொடுத்தான். உதவியது ஜேம்ஸ் ஹாட்லி சேஸ் நாவல்கள். அவனுக்கு மற்ற பதான்ஸை விட ஆங்கிலம் நன்றாக வரும். பேசவும் எழுதவும் படிக்கவும். அதன் காரணமாகவே நிறைய துப்பறியும் நாவல்களை படிப்பான். முக்கியமாக ஜேம்ஸ் ஹாட்லி சேஸ்.

அதனால்தான் அன்றைய இரவு 'காங்கிரஸ் ஹவுஸ்'க்கு சபீர் வரப்போகிறான் என்று அமிர்ஸாதா தகவல் சொன்னதுமே சுறுசுறுப்பானான்.

"ஒரு அம்பாசிடர் கார் வேணும்..."

யாரும் ஏன் என்று கேட்கவில்லை. அவனை நம்பினார்கள். ஏற்பாடும் செய்தார்கள்.



“அலாம்ஸேப்... எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஒற்றை ரோஜாக்களை கொண்டு வா...”

அமிர்ஸாதா அதையே தன் பார்வையால் கட்டளையிட்டான். மறுபேச்சு பேசாமல் அலாம்ஸேப் பூக்களை சேகரித்தான்.

“மஹூர்... காரை சுற்றிலும் இதை ஒட்டு. பார்க்கறதுக்கு புதுசா கல்யாணமானவங்க வண்டில போகற மாதிரி இருக்கணும். ஈ, காக்கா உட்பட ஒருத்தருக்கும் சந்தேகம் வரக்கூடாது...”

சொன்னதை விட துல்லியமாக அலங்கரித்தான்.

பார்த்த மன்யா சூர்வுக்கு பரம திருப்தி.

“இந்த கார்ல சபீரை ஃபாலோ பண்ணலாம்...”

“எல்லாம் சரி... எந்த இடத்துல அவனை கொல்லப் போறோம்...”

“அதை சபீரே முடிவு செய்வான்...” அலட்சியமாக அமிர்ஸாதா பதிலளித்தான்.

இந்த ஃப்ளாஷ்பேக்தான் காரில் இருந்தவர்களின் உள்ளத்தில் ஓடியது.

“சொல்லு மன்யா... அடுத்து எங்க?” அலாம்ஸேப்பின் குரல் நினைவுகளை கலைத்தது. அனைவரையும் நடப்புக்கு இழுத்தது.

“ம்...” நொடிக்கும் குறைவான நேரம் கண்களை மூடினான் மன்யா சூர்வ்.

அவனையே வைத்த கண் வாங்காமல் அலாம்ஸேப் பார்த்தான்.

அமிர்ஸாதாவின் பார்வை காருக்கு வெளியே இருந்தது. மன்யா என்ன சொல்வான் என்பதை அறிந்தவன் போல் உதட்டில் புன்னகை.

அதற்கேற்பவே இமைகளை திறந்த மன்யா, உதட்டையும் பிரித்தான்.

"முஸாஃபீர்கானா..."

"என்னது..?" அலாம்ஸேப் துள்ளிக் குதித்தான். "விளையாடறியா?"

"ஆமா. விளையாடத்தான் அங்க போறோம்..."

"முட்டாள்தனமா பேசாத..."

"எது முட்டாள்தனம்?"

"உன்னோட ஐடியாதான். அங்க போனா என்ன நடக்கும் தெரியுமா?"

"நீயே சொல்லு..."

"சொல்றது என்ன... தெரிஞ்ச விஷயம்தானே..."

"எது?"

"உன் தலை..." பற்களை கடித்த அலாம்ஸேப் தொடர்ந்தான். "பம்பாய் வரலாற்றுலயே இது மாதிரி ஒரு படுகொலை நடந்ததில்லை. அதுமாதிரி சபீரை போட்டுத் தள்ளியிருக்கோம்..."

"ம்..."

"என்ன ம்... பைத்தியக்காரா... விஷயம் தெரிஞ்சதும் மொத்த போலீஸூம் அலறப்போகுது. தாவூத் இப்ராஹிம் என்ன செய்வான்னு யாருக்குமே தெரியாது. எரிமலையா வெடிப்பான். அதுவும் நாமதான் இந்த காரியத்தை செய்தோம்னு தெரிஞ்சா அவ்வளவுதான்... கண்டம் துண்டமா நம்மை வெட்டித் தள்ளவும் தயங்க மாட்டான்..."

''தெரிஞ்சாதானே?'' அமைதியாக இருந்த அமிர்ஸாதா, உரையாடலில் புகுந்தான்.

"அப்ப தெரியாதுன்னு சொல்றியா?" அலாம்ஸேப் பரபரத்தான்.

"தெரியறதுக்கு முன்னாடி அவனையும் சபீர் போன இடத்துக்கே அனுப்பிடணும்னு சொல்றேன்..."

பேசக் கூட வழியின்றி அலாம்ஸேப் விக்கித்து நின்றான். எதையோ சொல்ல வருவதும் வாயை மூடிக்கொள்வதுமாக இருந்தான். எச்சிலை விழுங்குவதைத் தவிர வேறு எதுவும் செய்யத் தோன்றவில்லை.

"மன்யாவோட திட்டமும் அதுதான். சரிதானே?"

"நூறு சதவிகிதம்..." என்றபடி மன்யா ஸூர்வ் சிரித்தான்.

சிரித்தார்கள்.

சிரிக்க முடியாமல் தவித்தவன் அலாம்ஸேப்தான்.

"இது சரியா வருமா?"

"இதுதான் சரியா வரும்..."

"ஒருவேளை முடியலைனா?"

"ஒருவேளை முடிஞ்சுட்டா?"

அமிர்ஸாதா கேட்டதற்கு என்ன பதில் சொல்வது என்று

தெரியாமல் விழித்தான். "சொல்லு அலாம்ஸேப்... ஏன் மவுனமா இருக்க? மன்யா சொல்ற மாதிரி முஸாஃபீர்கானா போவோம். தாவூத்தையும் கையோட சுட்டுத் தள்ளுவோம். அப்படி நடந்துட்டா ஒரே கல்லுல ரெண்டு மாங்கா அடிச்ச மாதிரி ஆகும் இல்லையா..?"

"..."

"யோசிச்சுப் பாரு. எப்படியும் நாளை காலை பம்பாயே பற்றி எரியப்போகுது. கூடவே தாவூத்தும் சுட்டுக் கொல்லப்பட்டான்னு நியூஸ் வந்தா அவனோட சாம்ராஜ்ஜியமே தரைமட்டமாகிடும் இல்லையா? அடுத்து நம்மைத் தேடித்தானே கஸ்டமருங்க வந்தாகணும்..."

"..."

"இந்த வாய்ப்பை நழுவவிட வேண்டாம். மமூர்... வண்டியை முஸாஃபீர்கானாவுக்கு திருப்பு..."

அதன் பிறகு யாரும் எதுவும் பேசவில்லை. கிடைத்த சந்தர்ப்பத்தை பயன்படுத்திக் கொள்ளலாம் என்றே அங்கிருந்தவர்கள் நினைத்தார்கள். துரிதமாக தங்கள் கையில் இருந்த துப்பாக்கியினுள் புல்லட்டை லோட் செய்தார்கள்.

அம்பாசிடர் ஜே ஜே ஸ்கொயரை தொட்டது. வேகத்தை குறைத்தது. பக்கோடியா தெருவினுள் நுழைந்தபோது ஹெட்லைட்டை மமூர் அணைத்தான். முஸாஃபீர்கானாவை அடைந்ததும் இன்ஜினை ஆஃப் செய்தான்.

ஊர்ந்து ஊர்ந்து தாவூத்தின் வீட்டு முன்னால் நின்றது.

இருள்.

பொட்டு வெளிச்சமில்லை.

அடியாட்கள் உட்பட சகலரும் உறங்குகிறார்கள்.

பழம் நழுவி பாலில் விழுந்து அதுவும் வாய்க்குள் இறங்கப் போகிறது...

ஓசை எழுப்பாமல் முன் கதவை திறந்து அமிர்ஸாதா இறங்கினான்.

தொடர்ந்து மற்றவர்களும்.

அனைவரது கையிலும் துப்பாக்கி இருந்தது. ஆளுயர காம்பவுண்ட்டையும் அதற்கேற்ப ஒட்ட வைக்கப்பட்டிருந்த இரும்புக் கதவையும் பார்த்தார்கள்.

அரை நொடி.

அதன் பின் சரமாரியாக இலக்கில்லாமல் இரும்புக் கதவை சுட ஆரம்பித்தார்கள்.

ஒன்று... இரண்டு... பத்து... பதினைந்து... இருபது...

டிக். டிக். டிக்.

குண்டுகள் வெளிவராமல் அனைவரது டிக்கர்களும் ஓசையை மட்டும் எழுப்பின.

லாக் கழன்றுகொண்டதால் இரும்புக் கதவு திறந்தது.

அதனுள் நுழைந்தபடியே தங்கள் துப்பாக்கிகளில் மீண்டும் குண்டுகளை நிரப்ப ஆரம்பி...

டுமீல்.

வீட்டுக்குள்ளிருந்து தோட்டா சீறி வந்தது.

இதை எந்த பதான்ஸும் எதிர்பார்க்கவில்லை.

டுமீல். டுமீல். டுமீல்.

அடுத்தடுத்து குண்டுகள்.

அதிலிருந்து தப்பிக்க சிதறினார்கள். காம்பவுண்ட் சுவருக்கு வெளியே ஓடி பதுங்கினார்கள்.

''எவனும் தூங்கலை போலிருக்கு...'' மரண பயத்துடன் அலாம்ஸேப் முணுமுணுத்தான்.

“ம்...” அமிர்ஸாதாவின் புருவங்கள் சுருங்கின.

பொட். பொட். பொட்.

ஒவ்வொரு பல்பாக எரிய ஆரம்பித்தது. அக்கம்பக்கத்து வீடுகளிலும் வெளிச்சம் பூக்கத் தொடங்கியது.

“இங்கிருந்து போயிடலாம்... ம்... எல்லாரும் கார்ல ஏறுங்க...” மன்யா துரிதப்படுத்தினான்.

மற்றவர்களுக்கும் அதுதான் சரியென்று தோன்றியது.

அதற்குள் தாவூத்தின் ஆட்கள் துப்பாக்கியால் சுட்டபடியே வாசலுக்கு வந்தார்கள்.

மமூர் அம்பாசிடரை கிளப்பினான். நல்லவேளையாக அது மக்கர் செய்யாமல் உடனே ஸ்டார்ட் ஆனது. கியரை மாற்றி வேகத்தை அதிகரித்தான்.

வந்தவர்கள் தப்பிக்கிறார்கள் என்பதை உணர்ந்துகொண்ட தாவூத்தின் ஆட்கள் சரமாரியாக சுட்டார்கள்.

பேனட், காரின் பின்பக்க கண்ணாடி... சகலமும் நொறுங்கின.

சீட்டுக்கு அடியில் பதுங்கியபடி பதான்ஸ் தப்பித்தார்கள்.

புள்ளியாக காரும் மறைந்தது.

“யார் அவங்க?” கர்ஜனை கேட்டு அடியாட்கள் திரும்பினார்கள்.

கண்கள் சிவந்த நிலையில் இரவு உடையை சரி செய்தபடி தாவூத் நின்றிருந்தான்.

“தெரியல...” என்றபடி காலிப் முன்னால் வந்தான்.

அந்த நள்ளிரவின் ஹீரோ அவன்தான். சபீர் புறப்பட்டு சென்றது முதல் இவன்தான் விழித்திருக்கிறான். அதனால்தான் சத்தம் எழுப்பாமல் கார் வந்தபோது உஷாரானான். வந்தவர்கள் சுட்டு முடித்ததும் அவர்கள் சுதாரிக்க இடம் தராமல் தனது துப்பாக்கியை பயன்படுத்தினான்.

தாவூத் எதுவும் பேசாமல் அங்கிருந்த ஒவ்வொருவரையும் உற்றுப் பார்த்தான்.

தன்னை சேர்ந்தவர்கள் அனைவரும் அங்கிருக்கிறார்கள்...

ஒருவனைத் தவிர.

"சபீர் எங்க?"

தாவூத்தின் கேள்வி பூகம்பத்தின் விளைவை ஏற்படுத்தியது. அடியாட்கள் அனைவரும் சபீரை தேட முற்பட்டார்கள்.

''பதற்றப்பட வேண்டாம்...'' காலிப் அனைவரையும் அமைதிப்படுத்தினான். "சித்ராவை பார்க்க காங்கிரஸ் ஹவுஸுக்கு போயிருக்கார்..."

"எப்ப?"

"ரெண்டு மணி நேரத்துக்கு முன்னாடி...

"அஞ்சு பேர் 'சாமான்களோட' அங்க போங்க..."

தாவூத்தின் கட்டளைக்கு அடிபணிந்து அவன் ஆட்கள் அங்கு செல்ல புறப்பட்டார்கள்.

அதற்குள் சபீர் சுட்டுக் கொல்லப்பட்ட செய்தி முஸாஃபீர்கானாவுக்கு வந்தது.

இந்த நிகழ்வுக்கு பிறகு இரண்டு விஷயங்கள் பம்பாயில் நடந்தன. ஒட்டுமொத்த மாநகரையும் தலைகீழாக மாற்றின.

ஒன்று தாவூத். அடுத்தது பம்பாய் மாஃபியா.

பழிக்குப் பழி, வஞ்சம், போதைப் பொருட்கள் கடத்தல்... என மொத்தமாக... முழுமையாக பம்பாய் சீரழிந்தது.

இந்தியாவின் முகமும் மாறியது...

# 66

சபீரின் சடலம் வந்தபோது மொத்த முஸாஃபீர்கானாவும் அதிர்ந்தது. குலுங்கியது. ஒருவரும் எதிர்பார்க்கவில்லை. இறைவனிடம் பிரார்த்தனை செய்ததில்லை.

சபீரின் மீது எரிச்சல் இருந்தது. அவனது நடவடிக்கைகளால் சங்கடப்பட்டிருக்கிறார்கள். தலையில் அடித்துக்கொண்டிருக்கிறார்கள்.

ஆனால் - ஒருபோதும் அவன் இறக்க வேண்டும் என்று நினைத்ததில்லை. அதுவும் துப்பாக்கிக் குண்டுகள் பாய்ந்து...

பம்பாய் சரித்திரத்திலேயே நடக்காத சம்பவம். முதல் துர் மரணம். போயும் போயும் அது தெரிந்த பிள்ளைக்கா நடக்க வேண்டும்? அவர்கள் பார்த்து வளர்ந்தவன். அவர்கள் கண் முன்னால் நெஞ்சை நிமிர்த்தி நடந்தவன். அவர்கள் வீட்டு சுக துக்கங்களில் பங்கெடுத்து கொண்டவன். தோளில் கை போட்டு பேசியவன். சமயத்துக்கு பணம் கொடுத்து உதவியவன்.

அப்படிப்பட்டவன் ரத்தத்தில் மிதந்தபடி படுத்திருக்கிறான்.

இழப்பின் வலி அனைவரையும் உலுக்கியது.

சடலத்தின் மீது புரண்டபடி தாவூத்தின் அம்மாவும், நான்கு சகோதரிகளும் அழுத காட்சியை நொடிக்கு மேல் ஒருவராலும் பார்க்க முடியவில்லை. இப்ராஹிம் கஸ்கர் செய்வதறியாமல் திகைத்து நின்றார். கேவலும் ஓலமுமாக சுவரோரம் சாய்ந்திருந்தார்.

தாவூத் அமைதியாக இருந்தான். இறுக்கமாகவும். உள்ளுக்குள் எரிமலை வெடித்துக்கொண்டிருந்ததை ஒருவரும் உணரவில்லை. காலிப்பை தவிர. ஓரடி இடைவெளி விட்டு அவன் அருகில் நின்றான். பார்வையை வேறெங்கும் திருப்பவில்லை. அவனையே பார்த்தான். பார்த்துக்கொண்டிருந்தான்.

இதை தாவூத்தும் உணர்ந்தான். என்றாலும் அசையவில்லை. உணர்ச்சிவசப்பட இது தருணமல்ல. எல்லாம் நல்லபடியாக முடியவேண்டும். ஆம், 'எல்லாமும்'. சபீரை முறைப்படி அடக்கம் செய்யவேண்டியது கடமை. அதை, தான்தான் செய்தாகவேண்டும். இனி வீட்டை கவனித்து கொள்ள வேண்டியதும் தன் பொறுப்புதான்.

உதவிக்கு மற்ற சகோதரர்கள் வர மாட்டார்கள். அவர்களால் முடியாது. கொடி படருமே தவிர தனித்து நிற்காது.

துக்கம் விசாரிக்க ஒவ்வொருவராக வர ஆரம்பித்தார்கள். ஹாஜி மஸ்தானும், கரீம் லாலாவும் சேர்ந்து வந்தார்கள். இப்ராஹிம் கஸ்கரை கட்டிக்கொண்டு அழுதார்கள். தாவூத்தின் கைகளை பற்றியபடி சில நிமிடங்கள் நின்றார்கள்.

வாயில் முந்தானையை அடக்கியபடி ஜெனாபாய் வந்தாள்.

தன் வளர்ப்பு மகனை அணைத்தபடி அழுதாள். அவள் முதுகை ஆறுதலாக தட வினானே தவிர ஒரு வார்த்தை கூட பேசவில்லை.



“மனசை தேத்திக்க...” கண்களை துடைத்தபடி விலகினாள். தாவூத்தின் அம்மா அருகில் சென்றாள்.

காவல்துறையை சேர்ந்த பெரும்பாலானவர்கள் மாலையுடன் வந்து மரியாதை செலுத்தினார்கள். நிச்சயம் குற்றவாளிகளை பிடிப்போம் என உறுதியளித்தார்கள்.

கண்காணாமல் மறைந்திருந்த பாஷு தாதா கூட ஓடோடி வந்தார். “சத்தியமா நானில்லை. என்னை நம்பு...” என கிசுகிசுத்தபடி மன்றாடினார். தாவூத் மவுனமாக இருந்தான். ஒரே கண்ணசைப்பில், ‘எனக்கு தெரியும்’ என அவருக்கு பதிலளித்தான்.

யார் யார் வந்திருக்கிறார்கள் என கணக்கிட்டான். வராதவர்களை குறித்துக் கொண்டான்.

சபீரை குளிப்பாட்டினார்கள்.

பெற்றவர்களும் உடன் பிறந்தவர்களும் கதறி அழுதார்கள். அவன் அசையவில்லை.

புது வெள்ளைத் துணியை சடலத்தின் மீது போர்த்தினார்கள்.

இமைக்காமல் பார்த்தான். சவப்பெட்டியினுள் கிடத்தினார்கள்.

இறுதியாக அண்ணனின் முகத்தை பார்த்தான். தோட்டாக்கள் பாய்ந்த இடத்தை நெஞ்சில் பதிய வைத்தான். பெட்டியை மூடினார்கள்.

இமையோரம் கசிந்தது.

பச்சைத் துணியால் போர்த்தினார்கள்.

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக முன்னால் நடந்தான். நிழலாக காலிப் தொடர்ந்தான். ஊர்வலம் புறப்பட்டது.

ஒரு கேங் லீடர் படுகொலை செய்யப்பட்டிருக்கிறான். அதுவும் தாவூத் இப்ராஹிமின் உடன்பிறந்த சகோதரன். எனவே எலும்புகள் சில்லிட முஸாஃபீர்கானாவில் எத்தனை உயிர்கள் இருந்தனவோ அத்தனையும் அதில் கலந்துகொண்டது. தாவூத்தின் நண்பர்களும், எதிரிகளும், பகைவர்களாக மாறப்போகிறவர்களும் வரிசையில் வந்தார்கள்.

பைதோனி, ஜேஜே மார்க், தோங்கிரி, தெலி மொஹல்லா, முஸாஃபீர்கானா, போரி மொஹல்லா, பெண்டி பஜார், மந்த்வி பகுதியை சேர்ந்த எல்லா கடைகளும் மூடியிருந்தன. அனைத்து வீட்டுக் கதவுகளும் அடைக்கப்பட்டிருந்தன.

காகங்களும் கரைவதை நிறுத்தியிருந்தன. எந்தவித அசம்பாவிதமும் இல்லாமல் அமைதியாக... மிக மிக அமைதியாக கடற்கரை சாலையில் இருந்த சந்தன்வாடி எல்லைக்கு உட்பட்ட படா கப்ரஸ்தானை அடைந்தார்கள்.

முறைப்படி அடக்கம் செய்தார்கள். தன் வலது கரத்தை தாவூத்தின் தோள் மீது காலிப் வைத்தான். அழுத்தினான். மிதந்த கண்ணீர் முதன் முறையாக கன்னத்தில் வடிந்தது. தாவூத் அதை துடைக்கவில்லை. வடியட்டும் என காத்திருந்தான்.திரும்பினார்கள். வீட்டை அடைந்தார்கள்.

நெருங்கிய உறவினர்களும் தூரத்து சொந்தங்களும் இன்னும் கதறலை நிறுத்தவில்லை. அவனும் நிறுத்தச் சொல்லவில்லை. அழட்டும். நன்றாக அழட்டும். ஒரு கட்டத்துக்கு பிறகு அவர்களே அழுகையை நிறுத்துவார்கள். வெற்று சமாதானங்கள் பயன் தராது. ஆறுதல் சொல்வதற்கு இது நேரமும் அல்ல.

ஒதுங்கி தனியாக அமர்ந்தான்.அடியாட்கள் மெல்ல மெல்ல விலகினார்கள். வீட்டு வாசலில் சிதறியபடி நின்றார்கள்.

நிழல் மட்டும் விலகவில்லை. அருகிலேயே காலிப் தன் கைகளை கட்டியபடி நின்றான்.

நேரம் நகர்ந்தது.

“அமிர்ஸாதாவும் அலாம்ஸேப்பும் வரலை... இல்லையா?”

தாவூத்தின் குரல் அமைதியை கிழித்தது.

கண்கள் சுருங்க “ஆமா...” என காலிப் பதிலளித்தான்.

தூணோரம் சாய்ந்து அமர்ந்திருந்த இப்ராஹிம் கஸ்கர் உதறலுடன் எழுந்தார்.

“எதுக்காக கேட்கற?” அடிவயிற்றிலிருந்து

கத்தினார். “போட்டுத் தள்ளப் போறியா... அவன்தான் சபீரை கொன்னான்னு உனக்கு தெரியுமா?”

தன் மனைவியின் அருகில் சென்றார்.

எழுப்பினார்.

“உன் புள்ள என்ன சொல்றான்னு கேட்டியா? படிச்சுப் படிச்சு சொன்னேன்... அவன் போற பாதை சரியில்லைனு. யாராவது கேட்டீங்களா? இப்ப பாரு எங்க வந்து முடிஞ்சிருக்குன்னு. இப்பவாவது

திருந்துவான்னு பார்த்தா... ம்ஹுூம்... உன் பையன் மாறலை. மாறவேயில்லை. ரத்த வெறி பிடிச்சு அலையறான். இவனாலதான் சபீர் செத்தான். அடுத்து யாரு? உன்னோட பொண்ணுங்களா... இல்லை மற்ற பசங்களா..? சீட்டு குலுக்கி பார்க்கலாமா... வேண்டாம்...” தாவூத்தின் அருகில் சென்றார். “நீயே தேர்ந்தெடு. அடுத்து எங்கள்ல யார் சாகணும்? துப்பாக்கியா, கத்தியா... ஆயுதத்தை முடிவு பண்ணிட்டியா..?”

“வாப்பா...”

“என்னடா வாப்பா. கடத்தல்... அடியாட்கள்... எப்படிடா எனக்கு மகனா வந்து பொறந்த? இங்க பாரு... அமிர்ஸாதாவுக்கும் அலாம்ஸேப்புக்கும் ஏதாவது வேலை இருந்திருக்கலாம். ஏன் வெளியூர் கூட போயிருக்கலாம். அவங்க வராததுக்கு ஆயிரம் காரணம் இருக்கும். புரிஞ்சுதா?”

“...”

“இன்ஸ்பெக்டர் போகும்போது கூட சொல்லிட்டுத் தான் போனாரு. குற்றவாளிகளை அவங்க தேடிட்டுத்தான் இருக்காங்களாம். நிச்சயம் பிடிச்சுடுவாங்க. தண்டிப்பாங்க. சட்டத்தை நீ கைல எடுக்காத...”

சொல்லிவிட்டு நகர்ந்தவர் அத்துடன் நிற்கவில்லை. அப்போது மாநில முதல்வராக இருந்த ஏ.ஆர்.அந்துலேவை சந்தித்தார். தன் மகனை கொன்றவர்களை பிடிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

நிச்சயம் உரிய நடவடிக்கைகளை முதல்வர் எடுப்பார் என முழுமையாக நம்பினார். ஒரே மதத்தை சேர்ந்தவர்கள் என்பது மட்டும் காரணமல்ல. முதல்வரின் பூர்வீகமும் கொங்கன் பகுதி தான். எனவே குற்றவாளிகள் தண்டிக்கப்படுவார்கள் என்பதில் உறுதியாக

இருந்தார். கூடவே காவல்துறையை சேர்ந்த உயரதிகாரிகளை சந்தித்து மனு அளித்தார்.

சம்பந்தப்பட்டவர்களை பிடித்து தண்டிப்பதில் காவல்துறையும் பிடிவாதமாக இருந்தது.

வரலாற்றின் முதல் படுகொலை. உரியவர்களை பிடிக்காவிட்டால் மக்கள் தங்கள் மீது வைத்திருக்கும் நம்பிக்கையை இழந்துவிடுவார்கள். எனவே பம்பரமாக சுழன்றார்கள். விசாரணையை முடுக்கினார்கள்.

நேரடி சாட்சி சித்ராதான்.

நெஞ்சம் எல்லாம் வெடிக்க, தான் கண்ணால் கண்டதை அப்படியே அவள் சொல்லிவிட்டாள்.

அமிர்ஸாதா, அலாம்ஸேப், மன்யா சூர்வ், மஜூர் கான். ஆட்கள் யாரென்று தெரிந்துவிட்டது.

ஆனால் - கைது செய்ய முடியவில்லை.

நால்வருமே தலைமறைவாகிவிட்டார்கள். எங்கிருக்கிறார்கள் என சின்ன க்ளு கூட கிடைக்கவில்லை. அதற்காக காவல்துறை சோர்வடையவில்லை. இது அவர்களுக்கு விடப்பட்ட சவால். எதிர்கொண்டுதான் ஆகவேண்டும். அப்பொழுதுதான் தலைநிமிர்ந்து நடக்க முடியும். இல்லாவிட்டால் கொசு கூட காறி துப்பும்.

எனவே எல்லா இடங்களிலும் வலை விரித்தார்கள். நான்கு பதான்ஸுக்கும் நெருக்கமான நண்பர்களை தேடித்தேடி விசாரித்தார்கள்.

முட்டிக்கு முட்டி தட்டினார்கள். எல்லைகளை எல்லாம் சீல் வைத்தார்கள். கண்காணிப்பை அதிகரித்தார்கள்.

தேவை சின்ன நுனி. அது கிடைத்தால் போதும். நுழைந்துவிடலாம்.

சீருடை அணிந்த, அணியாத அத்தனை காவலர்களும் காத்திருந்தார்கள்.

இறுக்கமான முகத்துடன் தாவூத்தும் இதையெல்லாம் கவனித்துக் கொண்டிருந்தான். காவல்துறை எங்கெல்லாம் நகர்கிறது... எந்தப் பக்கமாக ஊடுருவுகிறது... என்பதை எல்லாம் அறிந்து கொண்டான். தெரிந்துகொள்வதற்காக ‘இன்ஃபார்மர்’களை நியமித்திருந்தான். முந்த வேண்டும். அவர்களுக்கு முன்பு, தான் அந்த பதான்ஸை போட்டுத் தள்ள வேண்டும்.

இதுதான்... இது மட்டும்தான்... அவனது ஒரே நோக்கமாக இருந்தது.

நாட்கள் நகர்ந்தன. மாதங்கள் உருண்டன.

காவல்துறை வைத்த பொறியில் எலி சிக்கியது. அதுவும் அமிர்ஸாதா என்னும் தலைமை எலி.

“நோ...” விஷயம் அறிந்த தாவூத்

பொங்கினான். “அவன் துடி துடிக்க சாகணும்...”

பற்களை கடித்தவன் காலிப் பக்கம் திரும்பினான். “இந்திய

சட்டத்து மேல எனக்கு நம்பிக்கை இல்லை. கீழ்கோர்ட்டுல தண்டனை கிடைச்சாலும் மேல் கோர்ட்டுக்கு போய் அவனால விடுதலையாக முடியும். அப்படியே அங்கயும் தண்டனை உறுதி செய்யப்பட்டாலும் அது நிறைவேற ஆண்டுகளாகும். அதுவரைக்கும் பொறுமையா இருக்க முடியாது. தவிர, கருணை மனு போட்டு வயசான காலத்துல அவன் வெளில வரவும் சான்ஸ் இருக்கு.

எல்லாத்துக்கும் மேல ஒரே சாட்சியான சித்ரா வேற வெளில இருக்கா. என்னதான் நாம கண்ணும் கருத்துமா பார்த்துகிட்டாலும் எப்ப வேண்டுமானாலும் அவளுக்கு ஆபத்து வரலாம். சபீரையே ஸ்கெட்ச் போட்டு கொன்னவனுக்கு சித்ராவை சுட்டுத்தள்ள எத்தனை நேரமாகும்..? ம்ஹூம். இதெல்லாம் சரிப்படாது. ஜெயில்லயே அமிர்ஸாதாவை கொல்லணும். நாமளே களத்துல இறங்கணும்...”

“வேண்டாம்...” அவசரமாக காலிப் மறுத்தான்.

“ஏன்..?”

“நேரடியா நாம இறங்க வேண்டாம்...”

“பின்னே?”

“ஆட்களை வைச்சு செய்யலாம். எப்படியும் அமிர்ஸாதா செத்தா உன் மேலதான் சந்தேகம் வரும். அது நம்ம பிசினஸுக்கு நல்லதில்லை...”

“சரி ஏற்பாடு பண்ணு. ஆனா, ஒண்ணு...”

“என்ன?”

“நம்ம ஆட்களா அவங்க இருக்க வேண்டாம். நமக்கு தெரியாதவங்களா இருக்கட்டும்...”

தலையசைத்த காலிப், சல்லடையிட்டு தேடினான்.

கிடைத்தார்கள்.

பட்டியலை கொடுத்தான்.

சலித்து சலித்து ஓர் ஆளை டிக் செய்தான் தாவூத்.

பெயரை பார்த்த காலிப் ‘சூப்பர்’ என புருவத்தை உயர்த்தினான்.

“உடனே சந்திப்புக்கு ஏற்பாடு செய்...”

கட்டளையிட்ட தாவூத், நிம்மதியுடன் நாற்காலியில் சாய்ந்தான்.

காரணம், அவன் தேர்ந்தெடுத்த நபர் அப்படி. எப்படிப்பட்ட கடுங்காவல் சிறைக்குள்ளும் புகுந்து குறிப்பிட்ட நபரை கொல்லும் சக்தி அவனால் டிக் செய்யப்பட்டவனுக்கு இருந்தது.

அந்த நபர் - மகாராஷ்டிராவை சேர்ந்தவனோ குஜராத்தை சேர்ந்தவனோ அல்ல. கேரளாவை பூர்வீகமாக கொண்டவன்.

‘டைப்ரைட்டர் திருடன்’ என்பது செல்லப் பெயர். படா ராஜன் என்பது காரணப்பெயர். ராஜன் நாயர் என்பது முழுப்பெயர்.

67

பிழைப்பு தேடி பம்பாய்க்கு சென்ற தென்னிந்தியர்களில் ராஜன் நாயரும் ஒருவர். அவரது பயணம் 1970களில் நிகழ்ந்தது.

அனுபவ அறிவுதான். பள்ளிக்கு செல்லவில்லை. குடும்ப சூழல் அனுமதிக்கவும் இல்லை. பிரமாதமாக துணிகளை தைப்பார். எனவே தானேவில் இருந்த 'இந்துஸ்தான் அப்பேரல்' என்ற ரெடிமேட் துணிக்கடையில் டெய்லர் வேலை கிடைத்தது.

இரவு, பகல் பாராமல் உழைத்தார். மற்றவர்களை விட வேகமாக துணிகளை தைத்தார். இவரது உழைப்பை நிறுவனம் மெச்சியது. உச்சி முகர்ந்தது. ஒரு நாளைக்கு பதினான்கு மணி நேரம் உழைத்த பிறகு பெருந்தன்மையுடன் முப்பது ரூபாயை கூலியாக கொடுத்தது.

தொடக்கத்தில் எதுவும் தெரியவில்லை. கிடைத்த பணம் போதுமானதாக இருந்தது அல்லது அப்படி தெரிந்தது.

ஆனால், ஐந்து ஆண்டுகளான பிறகும் நாள் கூலி நாற்பது ரூபாய்க்கு மேல் நகரவில்லை என்றபோது இடிந்துபோனார். இன்னமும் நிலையான வசிப்பிடம் தனக்கு கிடைக்கவில்லை என்ற உண்மை ராஜன் நாயரை அதிகம் யோசிக்க வைத்தது. மல்லாந்து படுத்தபடி தன் எதிர்காலத்தை குறித்து கவலைப்பட்டார்.

அந்த நேரம் பார்த்துத்தான் அவருக்கு காதல் வந்தது.

அந்த பெண்ணுக்கும் அவர் மீது ஓர் ஈர்ப்புத்தான். எதிர்படும்போதெல்லாம் மலர்ந்தாள். கன்னங்கள் சிவக்க... நாசிகள் அதிர... புன்னகைத்தாள்.

வானத்தில் மிதந்தார்.

ராஜனின் தோற்றம் மட்டுமல்ல... அவரது அயராத உழைப்பும் அவளை கவர்ந்தது. இப்படிப்பட்ட உழைப்பாளி தனக்கு கணவனாக அமைந்தால், வாழ்க்கை சொர்க்கமாக இனிக்கும் என நம்பினாள்.

என்ன... அவரது ஊதியம் குறித்துத்தான் மிகையாக கணக்கிட்டாள். திறமைசாலி. உழைப்புக்கு அஞ்சாதவர் என்னும்போது சம்பளமும் அதிகமாகத்தானே இருக்கும்?

இந்த மன ஓட்டத்தை அறிந்தபோது அதிர்ந்துபோனார். உண்மையை சொல்லிவிட துடித்தார்.

ஆனால் - கொஞ்சிக் கொஞ்சி அந்த பெண் பேசியதும், கைகோர்த்தபடி உடன் நடந்ததும், தோளில் சாய்ந்தபடி ஈஷிக் கொண்டதும் அவரை யோசிக்க வைத்தது.

நடப்பது நடக்கட்டும் என விட்டுவிட்டார்.

அதுவே வினையானது.

சந்திக்கும்போதெல்லாம் அதிகம் செலவு செய்ய வேண்டிய கட்டாயத்துக்கு ஆளானார். சொல்லவும் மெல்லவும் முடியவில்லை.



சம்பளம் கரைந்தது. தினப்படி செலவை சமாளிக்க கடன். அதற்கு வட்டி. அடுத்த சந்திப்புக்கு சம்பளத்தில் முன்பணம்.

ம்ஹூம். தாக்குப்பிடிக்க முடியவில்லை.

ஈடுகட்ட இரவில் வேலைக்கு சென்றார். தாபாவில் சர்வர், இற்றுப்போன ஏதோவொரு நிறுவனத்தில் வாட்ச்மேன், அதிகாலையில் பேப்பர் போடும் பாய்... எதுவும் நாக்கை வழிக்க கூட பயன்படவில்லை.

கடன் கொடுத்தவர்கள் மென்னியை பிடித்தார்கள். மூச்சு திணறியது.

அந்த நேரம் பார்த்துத்தான் காதலிக்கு பிறந்த நாளும் வந்தது. நல்ல பரிசை கொடுக்க வேண்டியது காதலனின் தலையாய கடமை.

முதலாளி முன் கைகட்டி நின்றார்.

நயா பைசா கூட முன்பணமாக கொடுக்க முடியாது என பதில் வந்தது. துக்கமும் தொண்டையை அடைத்தது.

ஏதாவது செய்ய வேண்டும். என்ன செய்யலாம்?

திருடுவதைத் தவிர வேறு ஆப்ஷன் கிடைக்கவில்லை.

தான், பணிபுரிந்த ரெடிமேட் கடையிலேயே எது விலை மதிக்க முடியாத பொருளாக இருந்ததோ... அதை எடுத்துக்கொண்டு மட்டன் தெருவுக்கு சென்றார்.

அந்த தெருவுக்கு சோர் பஜார் என்ற இன்னொரு பெயரும் உண்டு. வேறொன்றுமில்லை. இன்றைய சென்னையில் எப்படி புதுப்பேட்டையும், ரேடியோ மார்க்கெட்டும் கமுக்கமாக இயங்கி வருகிறதோ அப்படி பம்பாயில் இயங்கி வந்த - வரும் ஏரியாதான் சோர் பஜார். பழைய இரும்பு சாமான்கள், போல்ட், நட், சைக்கிள் செயின், டூ வீலர் இன்ஜின், எலெக்ட்ரானிக்ஸ் பொருட்கள், லொட்டு லொடுக்கு என சகலமும் சல்லீசான விலையில் கிடைக்கும்.

அப்படிப்பட்ட பஜாரில், தான் கொண்டு சென்ற பொருளை விற்றார். 'கண்டேன் கண்டேன்' என வாங்கிக்கொண்டு இருநூறு ரூபாய் கொடுத்தார்கள். கூடவே, 'இந்த பொருளுக்கு ஏக கிராக்கி உண்டு. அப்பப்ப கொண்டு வா...' என காதை கடித்தார்கள்.

அந்த பொருள் டைப்ரைட்டர்.

1970களில் அதுதானே ஒவ்வொரு நிறுவனத்துக்கும் அத்தியாவசியமான பொருளாக இருந்தது?

உண்மையை உணர்ந்துகொண்ட ராஜன் நாயர், தெம்பானார். கிடைத்த பணத்தில் தன் காதலிக்கு அழகான சேலை ஒன்றை வாங்கி பிறந்த நாள் பரிசாக கொடுத்தார். மகிழ்ந்த காதலி அவர் கன்னத்தில் முத்தமிட்டாள்.

அந்த முத்தம்தான் அவரை அடியோடு மாற்றியது. முதல் திருட்டினால் பூத்திருந்த கொஞ்சநஞ்ச குற்றவுணர்வையும் அது முற்றிலுமாக துடைத்தது.

அதன் பின்னர் இதையே தனது முழுநேர தொழிலாகவும், டெய்லரிங்கை பகுதிநேர வேலையாகவும் மாற்றிக் கொண்டார்.

வாரம்தோறும் இரு டைப்ரைட்டர்களுடன் சோர்பஜாருக்கு செல்வார். கிடைத்த நானூறு ரூபாயை அப்படியே காதலிக்காக செலவு செய்வார்.

வாழ்க்கை இனித்தது.

மாற்றமும் நிகழ்ந்தது.

ஒரு முறை வேறு ஏதோ ஒரு கேஸ் விஷயமாக சோர்பஜார் சென்ற காவலர்கள் அங்கிருந்த டைப்ரைட்டர்களை பார்த்து திகைத்துவிட்டார்கள். ஓரளவு புதிதாக இருந்தன. பழைய பொருட்களின் ஹோல் சேல் மார்க்கெட்டுக்கு இவை எப்படி வரும்?

மிரட்டி கேட்டபோது, அங்கிருந்தவர்கள்

முழு உண்மையையும் சொல்லிவிட்டார்கள். போதாதா?

ராஜனின் அடுத்த வருகைக்காக வழி மேல் விழி வைத்து காத்திருந்த காவலர்கள், அவரை கையும் களவுமாக பிடித்தார்கள்.

கைது செய்யப்பட்ட நேரம் சாத்தானுக்கு உகந்த பொழுதாக இருக்க வேண்டும். ஊரிலிருந்த அனைத்து வழக்கையும் அவர் மேல் சுமத்தி தண்டனை வாங்கி கொடுத்தார்கள்.

மூன்று ஆண்டுகள் சிறையில் இருந்தார் ராஜன். அங்குதான்

பஞ்சமா பாதகங்களையும் கசடறக் கற்றார். பல மாஃபியாக்கள் சிறைச்சாலையில் தான் உருவாகிறார்கள் என்ற உண்மைக்கு வலு சேர்த்தார்.

விடுதலையானதும் களத்தில் இறங்கியவர் தனக்கென்று ஒரு குழுவை அமைத்துக் கொண்டார். பம்பாயின் வட கிழக்கு புறநகர் பகுதிகளான காட்கோபார், செம்பர், விக்ரோலி, மன்க்ஹெர்ட், பன்தப்... என அனைத்து இடங்களும் அவரது கோட்டையானது. ப்ளாட்பார விற்பனையாளர்கள் முதல் கடைக்காரர்கள் வரை, ரெஸ்டாரன்ட் நடத்துபவர்கள் தொடங்கி டாக்ஸி டிரைவர்ஸ், ரிக்‌ஷா ஓட்டுபவர்கள் வரை ஒருவர் பாக்கியில்லாமல் எல்லோரிடமிருந்தும் மாமூல் வசூலித்தார்கள். கட்டப் பஞ்சாயத்து செய்தார்கள். வீட்டை காலி செய்யவும் நிலத்தை அபகரிக்கவும் உதவினார்கள்.

இதற்கெல்லாம் அப்துல் கஞ்சு என்கிற கஞ்சு அவருக்கு உதவியாக இருந்தான். விவரமறிந்தவன். பள்ளிக்கு சென்றவன். படிக்கவும், எழுதவும் தெரிந்தவன்.

இப்படிப்பட்ட புத்திசாலிகளை எப்போதுமே தாதாக்களுக்கு பிடிக்கும்.

ராஜனுக்கும் பிடித்திருந்தது.

மெல்ல மெல்ல அவரது வலது கையாக மாறினான்.

எந்நேரமும் ராஜனுடன் இருந்ததாலோ என்னவோ அவரது அனைத்து மைனஸ் பாயின்டுகளும் கஞ்சுவுக்கு அத்துப்படியானது.

எனவே, திலக் நகரில் இருந்த ஷெல் காலனியில் தனக்கென்று ஒரு குழுவை அமைத்துக்கொண்டான். அதாவது, ராஜனின் குழுவுக்குள் இது துணைக்குழு!

ஒரு கட்டத்துக்கு பிறகு துணைக்குழுவே மையக்குழுவை கட்டுப்படுத்தத் தொடங்கியது.

இதுதான் சரியான சமயம் என கஞ்சு தனித்து செயல்பட தொடங்கினான்.

ராஜன் நாயருக்கு இது பெரிய அடிதான். சுதாரித்து எழுந்து கொள்வதற்குள் அடுத்த தாக்குதலை நிகழ்த்தினான்.

எந்த பெண்ணை ராஜன் உயிருக்கு உயிராக காதலித்தாரோ... எந்த பெண்ணுக்காக டைப்ரைட்டர் திருடராக மாறினாரோ... அந்த பெண்ணையே கஞ்சு திருமணம் செய்துகொண்டான்.

இந்த இடியைத்தான் அவரால் தாங்கிக்கொள்ள முடியவில்லை.

1979ல் தேசிய பாதுகாப்பு சட்டம் மும்முரமாக அமல்படுத்தப்பட்ட போது, கஞ்சுவின் நடமாட்டம் குறித்த தகவலை போலீசுக்கு சொன்னார். அவர்களும் அவனை வளைத்து பிடித்து சிறையில் அடைத்தார்கள்.

இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொண்டு கஞ்சுவின் குழுவில்

இருந்தவர்களை எல்லாம் ராஜனின் ஆட்கள் வேட்டையாடினார்கள்.

விளைவு? அவனது சாம்ராஜ்ஜியமே தகர்ந்தது.

ராஜன் திருப்தி அடையவில்லை. இன்னும் ஒருவர் பாக்கியிருந்தார். தப்பு. ஒருத்தி. அவள், கஞ்சுவின் மனைவி. அதாவது, அவரது முன்னாள் காதலி.

அவளை பழிவாங்க அவர் எடுத்த அனைத்து முயற்சிகளும் தோல்வி அடைந்தன.

இதையெல்லாம் சிறையில் இருந்த படி செய்வதறியாமல் கஞ்சு பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்குள் பழி வாங்கும் உணர்வு அதிகரித்தது.

தப்பித்து செல்வதற்காக காத்திருந்தான்.

அந்த காலமும் வந்தது.

விக்ரோலி கோர்ட்டுக்கு அவனை அழைத்துச் சென்றபோது போலீசின் கண்களில் மிளகாய்ப் பொடியை தூவிவிட்டு தப்பினான். தலைமறைவானான். காவலர்களின் தேடுதல் வேட்டை குறையும் வரை காத்திருந்தவன், அதன் பிறகு காட்கோபாருக்கு வந்து சேர்ந்தான். ராஜனை சந்திக்க தூது அனுப்பினான்.

இருவருக்கும் இடையிலான மீட்டிங் சுமுகமாகவே நடந்தது. காவல்துறையின் கெடுபிடி அதிகமாக இருப்பதால் தங்களுக்குள் சண்டையிட வேண்டாம் என கைகுலுக்கினார்கள்.

ஆனால் – இது தற்காலிக உடன்பாடுதான் என்பதை இருவருமே அறிந்திருந்தார்கள். சமயம் பார்த்து ஒருவரை மற்றவர் போட்டுத்தள்ள காத்திருந்தார்கள்.

இந்த நேரத்தில்தான் ராஜன் நாயருக்கு அழைப்பு வந்தது.

அதுவும் தாவூத் இப்ராஹிமிடமிருந்து. பம்பாயின் அப் கம்மிங் மாஃபியா, தன்னை ஏன் சந்திக்க விரும்புகிறார்?

விடை கிடைக்கவில்லை. என்றாலும் தனக்கு கிடைத்த பாக்கியமாக இதை ராஜன் கருதினார்.

தாவூத்தை சந்திக்க குறிப்பிட்ட நாளன்று முஸாஃபீர்கானாவுக்கு சென்றார்.

68

எதிர்பார்த்தது போலவே சந்திப்பு நிகழ்ந்தது. ஆனால் - எதிர்பார்த்த மாதிரி அது நிகழவில்லை.

இதில் ராஜன் நாயருக்கு வருத்தம்தான்.

இத்தனைக்கும் முஸாஃபீர்கானாவுக்கு அவரை அழைத்து சென்றது தாவூத் இப்ராஹிமின் நம்பிக்கைக்குரிய நபர்தான். சென்ற இடத்திலும் =வரவேற்பில் குறைவில்லை. இன்முகத்துடன் தாவூத் அவரை அணைத்துக் கொண்டான். அமர வைத்தான். இயல்பாக உரையாடினான்.

என்றாலும் ஏதோ ஒன்று குறைவது போலவே இருந்தது. அழைத்த காரணத்தை அவன் கோடிட்டுகூட காட்டவில்லை. அவரை குறித்தே விசாரித்தான். 'தொழில்' எப்படி செல்கிறது என கேட்டான். 'ஏதேனும் உதவி வேண்டும் என்றால் தயங்காமல் கேளுங்கள்' என அன்பை பொழிந்தான்.

இதுதான் அவரை சங்கடப்படுத்தியது. தான், சொல்லாமலேயே தன்னைக் குறித்து நிச்சயம் அறிந்திருப்பான். சொல்லப்போனால் தன்னை விட தன்னைப்பற்றி அவனுக்கே நன்றாக தெரியும். அப்படியிருக்க எதற்காக இந்த 'அன்பு' நாடகம்? இதை அரங்கேற்றத்தானா தன்னை சந்திக்க விருப்பம் தெரிவித்தான்?

எங்கோ இடித்தது. இடம் மட்டும் தெரியவில்லை. அதை அறிவதற்குள் அடுத்தடுத்து பல சந்திப்புகள் நிகழ்ந்துவிட்டன. ஒவ்வொரு முறையும் தாவூத்தின் நேசம் ஆறாக பெருகியது. ஒன்றாகவே உண்டான். அவர் சாப்பிட்ட பிறகே தன் கையை கழுவினான்.

குழப்பம் அதிகரித்தது.

அதற்காக அவரால் முஸாஃபீர்கானாவுக்கு வராமலும் இருக்க முடியவில்லை.

காரணம் சோட்டா ராஜன். பெரும்பாலும் அவரை அழைத்து செல்ல இவன்தான் வந்தான். இருவரது பெயரிலும் 'ராஜன்' இருந்தது. குறிப்பிட்ட மதத்தினர் ஆதிக்கம் செய்யும் 'தொழிலில்' அவர்கள் இருவர் மட்டும் வேறொரு மதத்தை சேர்ந்தவர்களாக இருந்தார்கள். அந்த வகையில் பெரும்பான்மைக்கு மத்தியில் சிறுபான்மை.

எனவே தாவூத்திடம் பகிர்ந்துகொள்ள முடியாத பல விஷயங்களை இவனிடம் அவரால் மனம்விட்டு பேச முடிந்தது. கொஞ்சம் கொஞ்சமாக நெருங்கினார்கள். ஒட்டிக் கொண்டார்கள்.

இதற்குள் தாவூத்தும் ஒரு முடிவுக்கு வந்திருந்தான். அவன் அனுபவிக்கும் வேதனையை யாராலும் புரிந்துகொள்ள முடியாது. எப்போதும் நெஞ்சை நிமிர்த்தி நடப்பவன், இப்பொழுதெல்லாம்



அடிக்கடி தலைகுனிகிறான். வாப்பாவையும் அம்மாவையும் ஏறிட்டு பார்க்க முடியவில்லை. சகோதரர்களும், சகோதரிகளும் எந்நேரமும் எதையோ பறிகொடுத்தது போல் விட்டத்தை வெறித்துக் கொண்டிருந்தார்கள். வீட்டில் இருக்க முடியவில்லை. வெளியிலோ நடமாட முடியவில்லை. எந்தப் பக்கம் திரும்பினாலும் சபீர் நிற்பது போலவே தெரிந்தது.

அமிர்ஸாதா. அமிர்ஸாதா. அமிர்ஸாதா.

பற்களை கடித்தான். இமைகளை மூடி திறந்தான்.

இதுவரை நடந்த சந்திப்புகளின் மூலம் ராஜன் நாயரை குறித்து ஒருவாறு எடைபோட்டு முடித்திருந்தான்.

ரைட். களத்தில் இறங்கிவிடலாம்.

அடுத்து வந்த 'மீட்டிங்கில்' தனது தேவையை வெளிப்படுத்தினான்.

உச்சரித்த தொனி வேண்டுகோளாக இருந்தது. ஆனால், அதனுள் கட்டளையே குடிகொண்டிருந்தது.

இதைக் கூட புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு ராஜன் நாயர் ஒன்றும் குழந்தையில்லையே? சிறையில் இருக்கும் அமிர்ஸாதாவை கொல்ல வேண்டும் அல்லது தாவூத் கையால் மரணமடைய வேண்டும். இந்த இரண்டில் ஒன்றைத்தான் அவர் தேர்ந்தெடுக்க வேண்டும். வேறு ஆப்ஷன் இல்லை.

"முடிச்சிடலாம்..." என்றார் சட்டென்று.

“முடிக்கணும்...” அழுத்தம் கொடுத்தான் தாவூத். “ஆனா, ஒண்ணு...”

“என்ன?”

“இதுல நான் சம்பந்தப்பட்டிருக்கறது...”

“வெளில தெரியாது...”

“நீங்க தொடர்பு பட்டிருக்கறதும் தெரியக்கூடாது...”

ராஜன் சிரித்தார். “கவலையேபடாதீங்க. உங்க பேரோ என் பேரோ அடிபடாது...”

“என்ன செய்யப்போறீங்க?”

“சொல்றேன்...”

சொல்வதற்கு சில நாட்கள் ஆனது. காரணம் அடிப்படையாக சில விஷயங்களை அவர் செய்ய வேண்டியிருந்தது.

திலக்நகரின் வஸ்தாதாக ராஜன் நாயர் இருந்ததால் முதலில் தன் ஆட்களை அழைத்தார். சுற்றுவட்டாரங்களில் பணம் சம்பாதிக்க வேண்டும் என வெறியுடன் அலையும் இளைஞர்களை பட்டியலிட சொன்னார்.

அதிலிருந்து இருவரை தேர்ந்தெடுத்தார்.

ஒருவன், பிலிப்ஸ். பிக்பாக்கெட் திருடன்.

மற்றவன் டேவிட் தேவசயன் பர்தேஸி. தெருப் பொறுக்கி.

இவர்கள் இருவரில் பர்தேஸியை டிக் செய்தார் ராஜன். காரணம், அவன் அனாதை. வீடோ வாசலோ இல்லாதவன். கிடைத்ததை சாப்பிட்டு, கண்ட இடங்களில் உறங்குபவன்.

“நம்ம வேலைக்கு பர்தேஸிதான் சரியான ஆள்...” அடுத்த சந்திப்பின்போது தாவூத்திடம் தன் திட்டத்தை விவரித்தார். “அமிர்ஸாதா கோர்ட்டுக்கு வர்றப்ப சுட்டுத் தள்ளிடுவான்...”

“இவனால முடியுமா?”

“ம்...”

“சுடத் தெரியுமா?”

“பயிற்சி கொடுக்கணும்...”

தாவூத்தே அதற்கு ஏற்பாடு செய்தான். அதற்காகவே உரானில் உள்ள உள்வா கிராமத்துக்கு பர்தேஸியை அனுப்பினான். உள்வா என்பது கிராமத்தின் பெயர் மட்டுமல்ல. அது ஓர் இனத்தின் பெயரும் கூட. கொங்கணியை சேர்ந்த இஸ்லாமிய பிரிவுகளில் உள்வாவும் அடக்கம். அவர்கள் தாவூத் இப்ராஹிமை தங்களில் ஒருவராகத்தான் பார்த்தார்கள். கருதினார்கள். வணங்கினார்கள். அவன் என்ன சொன்னாலும் அதை செய்து கொடுக்க தயாராக இருந்தார்கள்.

எனவே பர்தேஸியை உள்வாவுக்கு அனுப்பினான். யாருக்கும் சந்தேகம் வராதபடி இவனுக்கு பயிற்சி அளிக்கப்பட்டது.

ஆனால் - பர்தேஸி விட்டேத்தியாக இருந்தான். சரிவர பயிற்சி

எடுக்கவில்லை. கற்கவும் முயலவில்லை. வேளாவேளைக்கு உணவு வந்தது. மது பாட்டில் எப்போதும் நிரம்பி வழிந்தது. சொகுசான படுக்கை எந்நேரமும் வரவேற்றது.

இந்த வசதிகள் எல்லாம் கனவும் காணாதது. அனுபவித்தான். கனவில் சஞ்சரித்தான்.

விஷயம் அறிந்த தாவூத் கொந்தளித்தான். "இவன் காரியத்தையே கெடுத்துடுவான்..."

"அப்படி எதுவும் நடக்காம நான் பார்த்துக்கறேன்..." ராஜன் சமாதானப்படுத்தினார்.

"வேற யாரும் கிடைக்கலையா?"

"கஷ்டம். அடிச்சாலும், மிதிச்சாலும், செத்தாலும் ஏன்னு கேட்க இவனுக்கு ஆளில்லை. நமக்கு இதுமாதிரி ஆள்தான் வேணும். கவலைப்படாதீங்க. காரியம் கச்சிதமா முடியும். அதுக்கு நான் பொறுப்பு..."

சொன்னதுடன் நிற்காமல் பர்தேஸியுடனேயே தங்கினார். பயிற்சியில் தேற வைத்தார்.

பொங்கும் எரிமலையை வெளிக்காட்டாமல் குறிப்பிட்ட நாளுக்காக தாவூத் காத்திருந்தான்.

அந்த நேரமும் வந்தது.

செப்டம்பர் 6, 1983.

அன்றுதான் பம்பாய் சிட்டி சிவில் அண்ட் செஷன்ஸ் கோர்ட்டுக்கு அமிர்ஸாதா அழைத்து வரப்பட்டான்.

அன்றைய தினத்தையே அவனது இறப்பு நாளாகவும் தாவூத் குறித்தான்.

இந்திய வரலாற்றிலேயே இதற்கு முன் கோர்ட் வளாகத்தில் யாரும் கொலை செய்யப்பட்டதில்லை. அதெல்லாம் ஹாலிவுட் படத்துக்கே உரிய சமாச்சாரங்கள் என இந்திய காவல்துறை நம்பியது.

பாதுகாப்பு விஷயத்திலும் அலட்சியம் காட்டியது.

இதைத்தான் தாவூத்தும் ராஜன்நாயரும் பயன்படுத்திக் கொண்டார்கள்.

தொளதொள சட்டை. நீளமான பேன்ட்.

அதனுள் கையடக்க துப்பாக்கியை மறைத்தபடி குறிப்பிட்ட நாளன்று பர்தேஸி நீதிமன்றத்துக்குள் நுழைந்தான்.

யாரும் பொருட்படுத்தவில்லை. ஏனெனில் காவல்துறை ரிக்கார்டுகளில் கூட இவன் பெயரோ, புகைப்படமோ இல்லை. சந்தேக லிஸ்டிலும் இவனை தப்பித்தவறி கூட அவர்கள் சேர்த்ததில்லை. எனவே சுதந்திரமாக பர்தேஸியால் வலம் வர முடிந்தது.

ராஜன் வகுத்து தந்த திட்டத்தை அசை போட்டான்.

முதல் மாடியில்தான் அமிர்ஸாதாவை ஆஜர்படுத்துவார்கள்.

அங்கிருக்கும் ஜன்னல்கள் அகலமானவை. கம்பிகள் அற்றவை. கீழே ஜீப் காத்திருக்கும். இன்ஜினை ஓடவிட்டபடி டிரைவர் சீட்டில் ராஜன் அமர்ந்திருப்பார். கூடவே பலராம் வேணுகோபால், அலி அந்துலே.

சமயம் பார்த்து அமிர்ஸாதாவை சுட வேண்டும். அவன் இறந்ததும் ஜன்னல் வழியே குதிக்க வேண்டும். அதுவும் ஜீப்பினுள். உடனே வண்டி கிளம்பும். போலீசார் துரத்தி வருவதற்குள் தப்பித்து விடலாம்.

நல்ல திட்டம்தான்.

பிசகினால்..?

எச்சிலை மென்று விழுங்கினான் பர்தேஸி.

தன் நிலை தெளிவாகவே புரிந்தது. போலீசாரிடம் சிக்கினால் தன் கதி அதோகதிதான். சிறைக்குள்ளேயே மடிய வேண்டியதுதான். காப்பாற்றவோ ஜாமீன் எடுக்கவோ ஈ, காக்காய் கூட வராது...

வியர்த்தது. கால்கள் நடுங்க ஆரம்பித்தன.

சட்டென்று நீதிமன்றம் அமைதியானது.

அமிர்ஸாதாவை அழைத்து வந்தார்கள்.

பார்த்தான்.

ஸ்லோ மோஷனில் வருவது போல் இருந்தது.

நீதிபதி முன்னால் நிறுத்தினார்கள்.

கண்கள் இருண்டன. மயக்கம் வந்தது.

தலையை உலுக்கிக்கொண்டான். இனி பின்வாங்க முடியாது.

நடுங்கும் கைகளால் பேன்ட்டுக்கு பின்புறம் சொருகியிருந்த துப்பாக்கியை எடுத்தான்.

யாரும் அதை கவனிக்கவில்லை.

உயர்த்தினான்.

அமிர்ஸாதாவின் நெற்றிக்கு குறிபார்த்தான்.

சட்டென்று ஒரு போலீஸ்காரரின் தலை மறைத்தது.

துப்பாக்கியை தாழ்த்தினான். துடிக்கும் உதட்டை கடித்தான். முன்பை விட அதிகமாகவே கைகள் நடுங்கின.

டார்கெட்டை மறைத்த காவலர் அகன்றதும் மீண்டும் துப்பாக்கியை உயர்த்தினான்.

அமிர்ஸாதாவின் நெஞ்சு பக்கம் ஃபோகஸ் செய்தான்.

டிக்கரை அழுத்தினான்.

டுமீல்...

அதுநாள் வரை நீதிமன்றம் கேட்காத ஓசை. யாருக்கும் எதுவும் புரியவில்லை. கூச்சலும் குழப்பமும் எழுந்தது.

நீதிபதியை பார்த்தபடியே அமிர்ஸாதா சரிந்தான்.

ரத்தத்தில் அவன் சட்டை நனைய ஆரம்பித்தது.

பர்தேஸியின் மூளைக்குள்ளும் அலாரம் அடித்தது. தப்பிக்க

வேண்டும்.

ஜன்னலை பார்த்து ஓடினான். ஜன்னல் மீது தாவி ஏறினான்.

ஜீப் உறுமலுடன் காத்திருந்தது. குதித்...

டொப்.

பர்தேஸியின் கழுத்தில் குண்டு பாய்ந்தது.

குதித்தான். கீழே காத்திருந்த ஜீப்பில் அல்ல.

நீதிமன்றத்தில்.

சுட்டது யாரென்று பர்தேஸி பார்த்தான்.

சப் இன்ஸ்பெக்டர் பகவான்.

இப்படியொரு கடமைவீரர் காவல்துறையில் இருப்பார் என்று ஏன் திட்டம் வகுத்த ராஜன் நாயரும், தாவூத் இப்ராஹிமும் சொல்லவில்லை...

கழுத்து வலித்தது. தலையை அசைக்க முடியவில்லை.

தண்ணீர் பாட்டிலில் இருந்து நீர் வழிவதுபோல் அவன் கழுத்திலிருந்து குருதி வழிந்தது.

பர்தேஸிக்காக கீழே காத்திருந்த ராஜன் உள்ளிட்டோருக்கு விபரீதம் புரிந்தது. என்றாலும் அவர்கள் நகரவில்லை. அமிர்ஸாதா ஸ்பாட்டிலேயே இறந்துவிட்டான் என நிச்சயமான பிறகே வண்டியை கிளப்பினார்கள். வெளியேறினார்கள்.

ஆனால் – தாவூத்தோ ராஜனோ எதிர்பார்க்காத திருப்பம் இதன் பிறகுதான் நிகழ்ந்தது.

அவர்கள் நினைத்தது போல் கழுத்தில் குண்டு பாய்ந்த பர்தேஸி இறக்கவில்லை. எஸ்.ஐ.பகவான் அவனை காப்பாற்றிவிட்டார்.

பர்தேஸி, ‘தொழில்’ முறை அடியாள் அல்ல. எனவே பயத்தில் மொத்த விவரத்தையும் பகவானிடம் கொட்டி விட்டான், ‘பகவானே என்னை காப்பாற்று’ என்ற விண்ணப்பத்துடன்.

அவ்வளவுதான்.

படுகொலைக்கு காரணமான தாவூத் இப்ராஹிமையும், ராஜன் நாயரையும் குண்டுக்கட்டாக தூக்கி சிறையில் அடைத்தார்கள்.

அந்த நொடியில் தாவூத்துக்கு ஓர் உண்மை புரிந்தது.

இனி பம்பாய் தனக்கு பாதுகாப்பான நகரம் அல்ல. இங்கிருந்து வெளியேறிவிட வேண்டும்...

# 69

அந்த அறையே எரிமலையாக தகித்துக் கொண்டிருந்தது.

குழுமியிருந்த ஒவ்வொரு பதானின் கண்களும் சிவந்திருந்தன. முஷ்டியை இறுக்குவதும், பற்களை கடிப்பதுமாக இருந்தார்கள். நடுநாயகமாக வீற்றிருந்த கரீம் லாலாவையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவரது உத்தரவுக்காக காத்திருந்தார்கள்.

லாலா அமைதியாக இருந்தார். உணர்ச்சிவசப்பட்ட நிலையில் எந்த முடிவையும் எடுக்கக்கூடாது.

அனுபவம் கற்றுத் தந்த பாடத்தை மனதுக்குள் அசைபோட முயன்றார்.

முடியவில்லை. அமிர்ஸாதாவின் சிரித்த முகமே அவர் மனதை ஆக்கிரமித்தது.

அவரது இனத்தை சேர்ந்தவன். சொந்த ஊர்க்காரன். அவரால் வளர்க்கப்பட்டவன். அவரது கையைப் பிடித்து தொழிலுக்கு வந்தவன். இனத்தின் பெருமையை திசை எங்கும் பரப்பத் தொடங்கியவன். அவருக்கு அடுத்து அவனே பதான்ஸின் பாதுகாவலன் என்ற நம்பிக்கையை பம்பாய் மக்களின் மனதில் விதைக்க ஆரம்பித்திருந்தவன்.

அப்படிப்பட்டவன் படுகொலை செய்யப்பட்டிருக்கிறான். அதுவும் இதுவரை அதுபோன்ற நிகழ்வுகளே நடந்திராத நீதிமன்றத்தில்.

இது அவருக்கு மட்டும் இழப்பல்ல. பதான்ஸ்களுக்கே பேரிழப்பு. அமிர்ஸாதாவின் உடம்பில் பாய்ந்த குண்டுகள், அதுநாள் வரையில் பம்பாயையே நடுங்க வைத்துக்கொண்டிருந்த ஓர் இனத்தின் பெருமையையே சுக்குநூறாக உடைத்திருக்கிறது.

சிதறிய அந்த மண் துகள்களில் நின்றபடி இனி பம்பாய் கொக்கரிக்கும். அவர்களை பார்த்து கைகொட்டி சிரிக்கும்.

‘‘இதுக்கு பழிக்குப்பழி வாங்கியே தீரணும்...'' அமைதியை கிழித்தபடி கரீம் லாலா கர்ஜித்தார்.

கைகளை தட்டியபடி மற்றவர்கள் ஆமோதித்தார்கள்.

‘‘இந்த வார்த்தைக்காகத்தான் காத்திருந்தோம் லாலா... பொறுப்பை என்கிட்ட ஒப்படைங்க. என் கையால நானே பழிவாங்கறேன். அப்பத்தான் என் மனசு ஆறும்...'' அலாம்ஸேப் எழுந்து நின்றான்.

“கூடாது...” லாலா தடுத்தார்.

“ஏன்... என் மேல நம்பிக்கை இல்லையா?”

“இருக்கு. அதனாலதான் தடுக்கறேன்...”

“புரியலையே..?”



“இங்க பார். இனி எந்த இடத்துலயும் எந்த பதானோட ரத்தமும் சிந்தக் கூடாது...”

“அப்படீன்னா நாம அமைதியா இருக்கணுமா?”

“தேவையில்ல. தாவூத் என்ன செய்தானோ அதையே நாமும் செய்யலாம்...”

“அதாவது..?”

“கொலையாளியை அவுட் சோர்ஸ் பண்ணலாம்...”

ஏகமனதாக இதை அங்கிருந்தவர்கள் ஏற்றார்கள். முள்ளை முள்ளால் எடுக்க சம்மதித்தார்கள். தாவூத் இப்ராஹிமை எப்படி கொல்வது என அலசி ஆராய்ந்தார்கள்.

அப்போதுதான் அவர்களுக்கு அந்த உண்மை தெரியவந்தது.

அமிர்ஸாதாவை கொல்ல திட்டமிட்டது தாவூத் அல்ல... ராஜன் நாயர்.

இதை எந்த பதானாலும் தாங்கிக்கொள்ள முடியவில்லை. அமிர்ஸாதா எப்பேர்ப்பட்ட தாதா. மாஃபியா உலகின் நம்பிக்கை நட்சத்திரம் அல்லவா அவன். அப்படிப்பட்டவனை போயும் போயும் ஒரு லோக்கல் தாதாவா திட்டமிட்டு படுகொலை செய்திருக்கிறான்... இந்த இறப்புக்கு பின்னால் தாவூத் இருந்திருந்தால் கூட ஒரு 'கெத்'தாக இருந்திருக்குமே...

முன்பை விட வெறி அதிகரித்தது.

ராஜன்நாயரை கொல்ல யார் கிடைப்பார்கள் என வலையை வீசினார்கள்.

மீன் கிடைக்கவில்லை. பதிலாக திமிங்கலமே சிக்கியது.

அந்த திமிங்கலம், அப்துல் கஞ்சு. சுருக்கமாக கஞ்சு.

அதே. எந்த ராஜன் நாயரால் வளர்க்கப்பட்டு அவருக்கு எதிராகவே களம் இறங்கினானோ...

எந்த ராஜன் நாயரின் காதலியை மணந்து அவருக்கு பரம எதிரியாக மாறினானோ... எந்த ராஜன் நாயரால் சிறைக்கு சென்று தனது சாம்ராஜ்ஜியத்தையே இழந்து ஓட்டாண்டியாக மாறினானோ...

அதே கஞ்சுதான்.

இதைவிட ராஜனை அழிக்கவும் பழங்கணக்குகளை தீர்க்கவும் வேறு சந்தர்ப்பம் கிடைக்காதே?

எனவே, படா ராஜன் என்கிற ராஜன் நாயரை போட்டுத்தள்ளும் பொறுப்பை கஞ்சு ஏற்றான்.

"எப்படி செய்யப்போறே?" கரீம் லாலா நேரடியாக விஷயத்துக்கு வந்தார்.

"ராஜன் என்ன செய்தானோ அப்படித்தான்..."

"அதாவது..?"

"நீதிமன்றத்துலயே சுட்டுக் கொல்லப்போறோம்..."

"உனக்கென்ன பைத்தியமா பிடிச்சிருக்கு..." அலாம்ஸேப் கத்தினான். "இந்நேரம் போலீஸ் அலர்ட் ஆகியிருக்கும். இனி நீதிமன்றத்துக்குள்ள நுழையற காற்றை கூட செக் பண்ணாம அனுப்ப மாட்டாங்க..."

"தெரியும். அதையும் மீறித்தான் இதை செய்யப்போறோம். அப்பத்தான் நம்ம பலம் என்னன்னு பம்பாய்கே தெரியும்..."

கஞ்சுவின் குரலில் இருந்த உறுதி பதான்ஸுக்கு நம்பிக்கை அளித்தது.

அதன்பிறகு துரிதமாக இறங்கினான். ராஜன் நாயரால் பாதிக்கப்பட்டவர்கள் யார் யார் என கஞ்சு லிஸ்ட் எடுத்தான்.

அதிக சிரமம் இல்லாமல் சந்திரகாந்த் சஃபாலிகா கிடைத்தான். ரிக்ஷாக்காரன். மாதம்தோறும் ரூபாய் பத்தை மாமூலாக ராஜனுக்கு கொடுத்தவன்.

'எங்க ரத்தத்தை இப்படி உறிஞ்சறீங்களே... படுபாவிகளா... நீங்க நல்லா இருப்பீங்களா...'

என மண்ணை அள்ளி சாபமிட்டவன்.

குறிப்பாக வேறொரு விஷயத்தால் அதிகம் பாதிக்கப்பட்டவன். அதனாலேயே ராஜனை தன் அடி மனதில் இருந்து வெறுத்தவன்.

சஃபாலிகாவின் இளைய தங்கையிடம் ராஜனின் கையாள் தவறாக நடந்துகொண்டான். இதை தட்டிக் கேட்கும்படி ராஜனிடம் பலமுறை மன்றாடியிருக்கிறான். அதற்கு அவர் செவிசாய்க்கவேயில்லை. மட்டுமல்ல, அதன் பின்னர் அந்த அடியாளின் நடவடிக்கை இன்னும் அத்துமீறியது.

குமுறிக் குமுறி அழுத தன் தங்கையை எப்படி சமாதானப் படுத்துவது என்று சஃபாலிகாவுக்கு தெரியவில்லை. கையறு நிலையில் தவித்தான்.

அனைத்துக்கும் முற்றுப்புள்ளி வைக்க இப்போது சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. பயன் படுத்திக் கொள்ளாவிட்டால் அண்ணனாக இருப்பதில் அர்த்தமில்லையே...

"முடிச்சுத் தர்றேன் கஞ்சு..." வாக்கு கொடுத்தான்.

"உன் மேல நம்பிக்கை இருக்கு. காரியத்தை கச்சிதமா முடி. ஐம்பதாயிரம் ரூபா தர்றேன்..."

சஃபாலிகா மகிழ்ச்சியில் துள்ளினான்.

ஐம்பதாயிரம்... இந்த பணத்தை கொண்டு இன்னும் நான்கு சைக்கிள் ரிக்ஷா வாங்கலாம். தங்கைகளுக்கு ஜாம் ஜாம் என்று திருமணம் செய்யலாம்.

முழுமூச்சுடன் துப்பாக்கியால் சுட பயிற்சி எடுத்தான்.

சரியாக அமிர்ஸாதா சுட்டுக் கொல்லப்பட்ட 24வது நாள், அந்த தகவல் கிடைத்தது.

ராஜன் நாயரை நீதிமன்றத்துக்கு அழைத்து வருகிறார்கள்...

இது ஆதாரமில்லாத அதிகாரப்பூர்வமான தகவல்.

யெஸ், நீதிமன்றத்தின் அன்றாட பணிகள் குறித்த நோட் புக்கில் இது குறித்து எந்த குறிப்பும் பதிவாகவில்லை.

முன்கூட்டியே அறிவித்து பதிவு செய்ய காவல்துறை விரும்பாததே காரணம். ஏனெனில் நிச்சயம் ராஜனை பழிவாங்க பதான்ஸ் முற்படுவார்கள் என்ற சந்தேகம் அவர்களுக்கு இருந்தது.

வழக்கை விசாரிக்கும் நீதிபதி, இதை உணர்ந்திருந்தார்.

காவல்துறையில் இருந்த கறுப்பு ஆட்டின் மூலம் பதான்ஸ்களுக்கு தகவல் கிடைத்தது.

உஷாரானார்கள். கஞ்சுவை அலர்ட் செய்தார்கள். சஃபாலிகாவை

தயார்படுத்தினார்கள்.

செப்டம்பர் 30, 1983.

வழக்கம் போல் சூரியன் உதித்தது.

ஆனால் - வழக்கத்துக்கு மாறாக ஏதோ நடக்கப்போகிறது என்பதை அஸாத் மெய்டன் காவல்நிலைய சரகத்துக்கு உட்பட்ட நீதிமன்றம் உணர்ந்தது.

ராஜன்நாயரை அங்குதான் ஆஜர்படுத்தப் போகிறார்கள்.

வருகை தந்த ஒவ்வொருவரையும் அக்குவேறு ஆணிவேறாக பரிசோதனை செய்த பின்னரே உள்ளே செல்ல அனுமதித்தார்கள்.

காவலர்களின் இதயங்கள் ஹைடெசிபலில் துடிக்க ஆரம்பித்தன. இவர்களின் நிலையே இப்படி என்றால் வழக்கறிஞர்கள் குறித்து கேட்கவே வேண்டாம்.

அன்றைய நாளுக்கான நீதிமன்றப் பணிகள் தொடங்கின.

ராஜன்நாயர் வந்து சேரவில்லை.

நெற்றியில் பூத்த வியர்வையை கைக்குட்டையால் நீதிபதி துடைத்துக்கொண்டார்.

குற்றம் சாட்டப்பட்டவர்கள் கூண்டில் ஏறுவதும் இறங்குவதுமாக இருந்தார்கள்.

கடிகார முள் அவசரமின்றி நகர்ந்துகொண்டிருந்தது.

அந்த கடற்படை அதிகாரி காத்திருந்தார். எஸ்.எஸ்.பிலாய் என்று பொறிக்கப்பட்ட பேச், சட்டையில் குத்தப்பட்டிருந்தது. பூரண சீருடையில் காட்சி தந்தவர், மவுனமாக அனைத்தையும் கவனித்து கொண்டிருந்தார்.

நீதிமன்றத்துக்குள் மயான அமைதி.

சில நிமிடங்கள்தான்.

சட்டென்று அந்த அமைதி கலைந்தது. பரபரப்பு அனைவரிடமும் தொற்றிக்கொண்டது.

காரணம், வாசலில் வந்து நின்ற போலீஸ் வேன்.

பலத்த காவலுடன் ராஜன்நாயரை அழைத்து வந்தார்கள். நீதிமன்றத்தில் நிறுத்தினார்கள்.

அந்த கடற்படை அதிகாரி நிமிர்ந்து உட்கார்ந்தார்.

காவலர்கள் மூன்றடி தள்ளியும், வழக்கறிஞர்கள் பத்தடிக்கு அப்பாலும் நின்றார்கள்.

ஒவ்வொரு காவலரின் வலது கை கட்டைவிரலும் டிக்கரின் மீதே பதிந்திருந்தன. கண்ணுக்கு தெரியாத எதிரியை சுடுவதற்கு காத்திருந்தார்கள்.

ராஜன் நாயருக்கு விபரீதம் புரிந்தது. தான் இறக்கப்போகிறோம்...

கால்கள் நடுங்க தன்னை அழைத்ததும் கூண்டில் ஏறினார்.

அமர்ந்திருந்த கடற்படை அதிகாரி, எழுந்து நின்றார். உள்ளங்கை வியர்த்தது. பேன்ட் பாக்கெட்டுக்குள் இருந்த கையடக்க

துப்பாக்கியை எடுக்க முயன்றார்.

முடியவில்லை. பயம் உடலெங்கும் நிரம்பி வழிந்தது. பாதுகாப்பு பயமுறுத்தியது. உதடுகள் துடிக்க கைகளை கட்டிக்கொண்டார். நடப்பதை பார்க்கத் தொடங்கினார்.

மின்விசிறியை மீறி நீதிபதிக்கு வியர்த்தது.

காவலர்களின் கண்கள் அங்கிருந்தவர்களை சலித்து எடுத்தன.

ஏனோ கடற்படை அதிகாரியை ஒருவரும் ஒரு பொருட்டாக மதிக்கவில்லை.

விசாரணை முடிந்து மறுதேதிக்கு தள்ளி வைக்கப்பட்டது.

ராஜன் நாயரை கைத்தாங்கலாக கூண்டை விட்டு இறக்கினார்கள்.

பயந்தது போல் எதுவும் நடக்கவில்லை. இறுக்கம் தளர்ந்து மெல்ல மெல்ல அனைவரும் இயல்புக்கு வர ஆரம்பித்தார்கள். தாமதமின்றி ராஜனை வெளியே அழைத்து வந்தார்கள்.

கடற்படை அதிகாரியும் அவர்களை பின்தொடர்ந்தார்.

வேன் கதவை திறந்தபடி ஒரு காவலர் காத்திருந்தார்.

எவ்வளவு வேகமாக முடியுமோ அவ்வளவு வேகமாக ராஜனை அதனுள் ஏற்ற முற்பட்டார்கள்.

அப்பாடா. தப்பித்தோம்... என அவர் நினைத்தபோது - யாரோ அழைக்கும் சத்தம் கேட்டது.

திரும்பினார்.

அவரை நோக்கி அந்த கடற்படை அதிகாரி வேகமாக வந்தார்.

யார் இவர்... எதற்காக தன்னருகில் வருகிறார்... என ராஜன் விழிக்க - ஒன்றும் புரியாமல் காவலர்கள் திகைக்க - அருகில் வந்த அந்த கடற்படை அதிகாரி தன் துப்பாக்கியை எடுத்தார்.

டுமீல். டுமீல். டுமீல். டுமீல்.

சரியாக நான்கு குண்டுகள். ராஜன் நாயரை துளைத்தன. சம்பவ இடத்திலேயே அவர் இறந்தார்.

அருகிலிருந்த காவலரின் தோளில் ஒரு குண்டு தவறுதலாக பாய்ந்தது.

என்ன ஏது என்று மற்ற காவலர்கள் சுதாரிப்பதற்குள் - கடற்படை அதிகாரியாக வேடமிட்டிருந்த சஃபாலிகா, தன் கையிலிருந்த துப்பாக்கியை கீழே போட்டான். தப்பிச் செல்ல முயலாமல் சரணடைந்தான்.

இந்த சம்பவத்தை கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் அப்படியே 1985ம் ஆண்டு சன்னிதியோல் நடிப்பில் வெளியான 'அர்ஜுன்' இந்திப் படத்தில் பயன்படுத்தியிருந்தார்கள்.

இந்த 'அர்ஜுன்' படத்தையே சுரேஷ் கிருஷ்ணா இயக்கத்தில், 'சத்யா' என தமிழில் கமல் ரீமேக் செய்தார்!

## 70

வாழையடி வாழை. கண்ணுக்கு கண். பல்லுக்குப் பல். ரத்தத்துக்கு ரத்தம். பழிக்குப் பழி. இவை எல்லாம் முன் தோன்றிய மூத்த குடியின் பொன்மொழிகள் மட்டுமே அல்ல. மாஃபியாக்களின் வரலாறும்தான்.

அதுவேதான் ராஜன் நாயர் விஷயத்திலும் நடந்தது.

எந்த நிமிடத்தில் நீதிமன்ற வாசலில் வைத்து ராஜன் சுட்டுக் கொல்லப்பட்டாரோ - அந்த தருணத்தில் இன்னொரு ராஜன் பிறந்தார்.

உதயமான ராஜன் வெர்ஷன் இரண்டின் பெயர் ராஜேந்திர நிக்கால்ஜே. சுருக்கமாக சோட்டா ராஜன். அப்பா, சதாஷிவ். தானேவில் உள்ள தொழிற்சாலையில் வேலை பார்க்கும் தொழிலாளி. உடன் பிறந்தவர்கள் மூன்று சகோதரர்கள், இரு சகோதரிகள் என ஐந்து பேர். ஐந்தாம் வகுப்புக்கு மேல் படிக்கவில்லை. படிப்பு ஏறவில்லை. பள்ளிக்கு அனுப்ப வசதியும் இல்லை. பூர்வீகம் சதாராவில் உள்ள லோனா என்னும் கிராமம்.

பள்ளிக்கு செல்லாத சிறுவர்களுக்கு என்னென்ன சகவாசம் ஏற்படுமோ அவை அனைத்தும் சோட்டா ராஜனுக்கும் ஏற்பட்டது. பிஞ்சிலேயே பழுத்த பழம். கற்று மறக்காத களவுப் பயிற்சியை கசடற கற்றார்.

இன்றும் 'புக் மை ஷோ' இணையதளம் வழியாக பம்பாய், செம்பூரில் இருக்கும் சஹாகர் திரையரங்கில் டிக்கெட் புக் செய்ய முடியும். இன்னும் இடிக்கப்படாத, திருமண மண்டபமாக மாறாத, மல்டிப்ளக்ஸ் ஆக வளராத - பழமையான தியேட்டர். சிங்கிள் ஸ்கிரீன். முன்னணி நடிகர்களின் படங்கள் தவறாமல் இங்கு வெளியாகும். ஐந்து, பத்து மடங்குகளில் சல்லீசாக ப்ளாக்கில் டிக்கெட் விற்பனையாகும். ரசிகர்கள் கேள்வி கேட்க மாட்டார்கள். காவலர்கள் தடுக்க மாட்டார்கள். இதற்கென்று தனி மாஃபியா. ஸ்பெஷல் ராஜாங்கம்.

இந்த ராஜ்ஜியத்தின் தனிப்பெரும் ராஜாவாக விளங்கியவர் சோட்டா ராஜன். 1970களில் இத்திரையரங்கில் வெளியான அனைத்து ஸ்டார் படங்களுக்கும் வாசலில் நின்று கூவிக் கூவி டிக்கெட் விற்ற புண்ணியம் இவருக்கு உண்டு.

இப்படி ப்ளாக்கில் டிக்கெட் விற்றே மாத செலவை ஈடுகட்டி வந்தவருக்கு எமர்ஜென்சி வடிவத்தில் இடி விழுந்தது.

இந்தியாவில் அவசரநிலை அமல்படுத்தப்பட்டபோது அனைத்து காவலர்களும் கையில் லத்தியை ஏந்தினார்கள். கண்ணில் தென்படுபவர்களை எல்லாம் முட்டிக்கு முட்டி தட்டினார்கள்.

அப்படி தங்கள் பங்குக்கு உடைப்பதற்காக செம்பூர் சரக



காவலர்களும் சஹாகர் திரையரங்குக்கு வந்தார்கள். ப்ளாக்கில் டிக்கெட் விற்றவர்களை ஓட ஓட விரட்டினார்கள். இருந்த பத்து பேரும் அடி, உதைக்கு அஞ்சி சிதறினார்கள். சோட்டா ராஜன் மட்டும் அசையாமல் நின்றார். அத்துடன் தன்னை அடிக்க வந்த ஒரு காவலரிடமிருந்து லத்தியை பிடுங்கி மற்ற போலீசாரை வெளுக்க ஆரம்பித்தார். ஒன்றல்ல இரண்டல்ல... ஐந்து காவலர்களை தன்னிடமிருந்த லத்தியால் விளாசினார்.

அடிக்கு பயந்து காவலர்கள் ஓட.... சோட்டா அவர்களை துரத்த... செம்பூர் பகுதியே கைகொட்டி இந்த நிகழ்ச்சியை வேடிக்கை பார்த்தது. அதுநாள் வரை வெறும் ப்ளாக் டிக்கெட் ஏஜென்ட் ஆக இருந்தவர், ஒரே நொடியில் தாதாவாக மாறினார். நடக்க முடியாத வயதானவர்கள் கூட எழுந்து நின்று மரியாதை செலுத்தும் அளவுக்கு 'டான்' ஆனார்.

போதாதா?

எட்டு திசையில் இருந்தும் அழைப்பு வந்தது. லெட்டர் பேட்

மாஃபியா குழுக்கள் முதல் கனவிலும் அலற வைக்கும் அமைப்புகள் வரை சகலரும் தங்களுடன் சேரச் சொல்லி வெற்றிலை பாக்கு வைத்து அழைத்தார்கள்.

சீட்டு குலுக்கிப் பார்க்காமல் சோட்டா ராஜன் தேர்ந்தெடுத்த குழு, ராஜன் நாயருடையது.

பெயர் பொருத்தம் காரணமா அல்லது நடைமுறை ஈர்த்ததா என்பது கடவுளுக்கே வெளிச்சம். மொத்தத்தில் ராஜன் நாயருடன் ஐக்கியமாகி கொஞ்சம் கொஞ்சமாக அன்னாரது வலது கையாக உயர்ந்தார் என்பது மட்டும் உண்மை.

அழைப்பை ஏற்று தாவூத்தை சந்திக்க ராஜன் நாயர் சென்றபோது தவறாமல் சோட்டா ராஜனையும் தன்னுடன் கூட்டிச் சென்றார்.

அமிர்ஸாதாவை நீதிமன்ற வளாகத்தில் போட்டுத்தள்ள திட்டம் தீட்டியதில் சோட்டாவுக்கும் பங்குண்டு. சொல்லப்போனால் பர்தேஸியை அழைத்துச் செல்ல ஜீப்புடன் ராஜன் நாயர் காத்திருந்தார் அல்லவா? அப்போது அந்த வண்டியின் பின்னிருக்கையில் சோட்டாவும் இருந்தார்.

திட்டமிட்டபடி அமிர்ஸாதா கொல்லப்பட்டபோது சோட்டா மகிழ்ந்தார். இது தொடர்பாக ராஜன் நாயர் கைதானபோது வருந்தினார். ஆனால் - அது கோபமாக மாறியது ராஜன் நாயர் சுட்டுக் கொல்லப்பட்டபோதுதான்.

பழிக்குப் பழி வாங்க பதான்ஸ் முற்படுவார்கள் என்று தெரியும். எதிர்பார்க்கவும் செய்தார். எனவே படுகொலை நிகழ்ந்தபோது கதறி அழுதார். ரத்த வெள்ளத்தில் ராஜன் நாயர் மிதந்ததை அவரால் மறக்கவே முடியவில்லை. அது மன்னிக்க முடியாத குற்றமாக மாறியது, இதற்கு பின்னால் சூத்திரதாரியாக இருந்தது யார் என்று தெரிந்த போதுதான்.

கஞ்சு.

எப்படி அவனால் இப்படியொரு திட்டத்தை தீட்ட முடிந்தது? எந்த ராஜன் நாயரால் வளர்க்கப்பட்டானோ, அதே நபரின் காதலியை தன் மனைவியாக்கி கொண்டான். இதையே சோட்டாவால் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கஞ்சுவை போட்டுத்தள்ள வேண்டும் என ராஜனுக்கு சமமாக துடித்தான்.

அப்படியிருக்கும்போது இந்த படுகொலையின் பின்னால் அவனே இருக்கிறான் என்று தெரிந்த பின்னர் சும்மா இருக்க முடியுமா?

பதிலடி கொடுக்க தயாரானார்.

இந்த விஷயம் தெரிந்ததும் கஞ்சு பதுங்கினான். இண்டு இடுக்கு விடாமல் தன் இருப்பிடத்தை மாற்றிக் கொண்டே இருந்தான்.

சோட்டா அசரவில்லை. எங்கெல்லாம் அவன் சென்றானோ அங்கெல்லாம் துரத்தினார். பின்தொடர்ந்தார். சுற்றி வளைத்தார்.

பயந்துபோன கஞ்சு, நேராக அலாம்ஸேப்பிடம் சென்றான். காப்பாற்றும்படி மன்றாடினான்.

"என்ன விளையாடறியா... உனக்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? அசைன்மென்ட் கொடுத்தோம். அதை நீ முடிச்சுக் கொடுத்த. பேசினபடி நாங்க பணத்தை கொடுத்துட்டோம். நம்ம உறவு அதோட முடிஞ்சு போச்சு. இனி, உன்னை நீயேதான் காப்பாத்திக்கணும். என்கிட்ட வராத. கண் முன்னாடி நிக்காத. ஓடிப் போயிடு..."

திட்டவட்டமாக அலாம்ஸேப் மறுத்தான்.

இனி தப்பிக்கவே முடியாது என்பதை உணர்ந்த கஞ்சு, சற்றும் யோசிக்கவில்லை. எதிராளியிடமே சரணடைய தீர்மானித்தான்.

ம்ஹூம். சோட்டாவிடம் அல்ல. காவல்துறையிடம்.

1983ம் ஆண்டு அக்டோபர் மாதம் 9ம் தேதி அன்று க்ரைம் பிரான்ச் சென்றவன், ராஜன் நாயரை படுகொலை செய்ய சஃபாலிகாவை நியமித்ததும், திட்டம் தீட்டி கொடுத்ததும், தான்தான் என ஒப்புதல் வாக்குமூலம் அளித்து சரணடைந்தான்.

குண்டு கட்டாக தூக்கி சிறையில் அடைத்தார்கள்.

அப்பாடா... போலீஸ் காவலில் பாதுகாப்பாக இருக்கலாம் என நிம்மதியானான்.

அது அதிக நாள் நீடிக்கவில்லை. ஏனெனில் சோட்டாவின் கரங்கள் காவல்துறையிலும் ஊடுருவி இருந்தது.

சிறைக்குள்ளேயே தன்னை கொல்ல சோட்டா ராஜன் முயலக் கூடும் என்பதை அறிந்ததும் அவனால் நிம்மதியாக உறங்கவோ, சாப்பிடவோ, தண்ணீர் குடிக்கவோ, காலைக்கடன் கழிக்கவோ முடியவில்லை. எந்நேரமும் உயிரை கையில் பிடித்தபடி நடமாட வேண்டிய நிலை. ஆழ்ந்த தூக்கம் எட்டாக்கனியானது. நள்ளிரவில் அடிக்கடி அலறலுடன் விழித்தான். பேந்தபேந்த முழித்தான்.

கஞ்சுவின் நிலை, நேர்மையான காவல்துறை அதிகாரிகளை யோசிக்க வைத்தது.

முதலில் அமிர்ஸாதா. அடுத்து ராஜன் நாயர். இருவருமே நீதிமன்ற வளாகத்தில் அடுத்தடுத்து சுட்டுக் கொல்லப்பட்டிருக்கிறார்கள். பம்பாய் மட்டுமல்ல இந்திய வரலாற்றிலேயே கரும்புள்ளியாக பதிந்துவிட்ட நிகழ்வு இது. பாதுகாப்பு குறித்த கேள்விகள் சட்டமன்றத்திலும் பாராளுமன்றத்திலும் எழுப்பப்படுகின்றன. பத்திரிகைகள் எல்லாம் நார்நாராக போலீசாரை கிழிக்கின்றன. மூன்றாவதாக ஒரு பழிவாங்கும் நடவடிக்கை நடந்தால்... அதுவும் நீதிமன்ற வளாகத்திலேயே நிகழ்ந்தால்... அவ்வளவுதான். மானம் கப்பல் ஏறாது. செவ்வாய்க் கிரகத்தை நோக்கி ராக்கெட்டில் பறக்கும்.

எனவே கண்களில் விளக்கெண்ணெய் ஊற்றி கஞ்சுவை கண்காணித்தார்கள். பாதுகாப்பு வளையங்களை பலப்படுத்தினார்கள்.

இதை அறிந்த சோட்டாராஜன், தனக்குள் புன்னகைத்துக் கொண்டார். இப்போதைக்கு எதுவும் செய்ய வேண்டாம். அது ரிஸ்க் என தன் கூட்டாளிகள் சொன்னதை புறம் தள்ளினார். பாயத்தான் பதுங்க வேண்டுமே தவிர ஓடுவதற்கு பின்வாங்கக் கூடாது என்பது அவரது சித்தாந்தம். கொள்கை.

இதுவேதான் மாஃபியாக்களின் வழிமுறையும்.

பழி வாங்க முடிவு செய்துவிட்டால் அச்சு அசலாக அப்படியே படுகொலையை நிகழ்த்த வேண்டும்.

அமிர்ஸாதாவை எப்படி கொன்றார்களோ - அப்படித்தான் ராஜன் நாயரையும் சுட்டார்கள்.

'கெத்' என்பது இதுதான். இப்படி செய்பவன்தான் தாதா. டான். மாஃபியா கூட்டத்தின் தலைவன்.

அதை விட்டுவிட்டு ஓய்வு நேரத்தில் பழி வாங்குவதற்கு பெயர், கையாலாகாத்தனம். சோட்டா அப்படிப்பட்டவனில்லை. வீரன். பாதுகாப்பு வளையத்தை மீறி கஞ்சுவை போட்டுத்தள்ளுகிறேன்... நான் யார் என்று பம்பாய்க்கு காட்டுகிறேன்.

கைகளை பரபரவென தேய்த்தபடி சோட்டா ராஜன் ஒரு முடிவுக்கு வந்தார். பக்காவாக திட்டம் தீட்டினார். நாளையும் குறித்தார்.

ஜனவரி 22, 1984.

அன்றுதான் கஞ்சுவின் வழக்கு வருகிறது.

வருவான். நிச்சயம் நீதிமன்றத்துக்கு வருவான்.

சோட்டா காத்திருந்தார்.

கஞ்சுவும்தான்.

கல் தோன்றி மண் தோன்றா காலம் தொட்டே மாஃபியா குழுக்களுக்கு மத்தியில் நிலவிவரும் செயல்பாடுகளை அவனும் அறிந்தவன்தானே?

எனவே அன்றைய தினத்தில் தன்னை சுட்டுக்கொல்ல சோட்டா முயல்வான் என்பது அவனுக்கு தெரியும். அதனாலேயே அன்று பலமுறை காலைக்கடன் கழித்தான். அச்சத்தில் வியர்வை கொட்டியது. ஆறாக பெருகியது. வேகமாக இதயம் துடித்தது.

சிறையிலிருந்து அவனை நீதிமன்றத்துக்கு அழைத்துச் செல்ல காவலர்கள் வந்தார்கள்.

மின்னலென ஒரு திட்டமும் அவன் மனதில் உதித்தது.

அதை காவல்துறை அதிகாரியிடம் சொன்னான்.

அப்பழுக்கற்ற அந்த திட்டம் அதிகாரிக்கு பிடித்திருந்தது.

ஏற்றார்.

சிறைக்கு வெளியில் இருந்த வண்டியில் கஞ்சு ஏறினான்.

துப்பாக்கியுடன் நீதிமன்ற வளாகத்தில் அவனது வருகைக்காக சோட்டா காத்திருந்தார்.

# 71

போலீஸ் வேனுக்குள் ஏறிய கஞ்சுவுக்கு மூச்சு முட்டியது.

காவல்துறை அதிகாரியிடம், தான் தெரிவித்த யோசனையையும் அதற்கு அவர் ஒப்புக் கொண்டதையும் நினைத்துப் பார்த்தான். இது செயல் வடிவம் பெற இன்னும் சில மணி நேரமாகும்.

அதுவரை, தான் உயிர் பிழைக்க வேண்டுமே...

எச்சிலை விழுங்கினான்.

வாகனத்துக்கு முன்னால் இருந்த போலீஸ் ஜீப் உறுமலுடன் கிளம்பியது. தொடர்ந்து வேன். அதன் பின்னால் காவல்துறைக்கு சொந்தமான அம்பாசிடர் கார்.

துடிக்கும் இதயத்தை கஞ்சுவால் கட்டுப்படுத்த முடியவில்லை. மிரட்சியுடன் பார்வையை வெளியே கொட்டினான். கருவிழியை சுழற்றினான். அருகில் எந்த வண்டி வந்தாலும் அதில், சோட்டா ராஜன் இருப்பானோ என்று அஞ்சினான். வாகனங்கள் கடக்கும்போதெல்லாம் குனிந்து தன்னை மறைத்துக்கொண்டான்.

ஏறக்குறைய இதே மனநிலையில்தான் போலீசாரும் இருந்தார்கள். குறிப்பாக கஞ்சுவுக்கு பாதுகாப்பாக வேனுக்குள் அமர்ந்திருந்த காவலர்கள். வயலுக்கு பாயும் நீர் புல்லுக்கும் பாய்வது போல் எங்கே இவனை சுட்டுக் கொல்ல முயற்சிக்கும்போது தங்கள் மீதும் குண்டுகள் பாயுமோ...

விநாடிகள் நிமிடங்களாகின.

ஒன்றன் பின் ஒன்றாக சென்றுகொண்டிருந்த மூன்று வாகனங்களும் போக்குவரத்து நெரிசலில் சிக்கியது.

வண்டிக்குள் அமர்ந்திருந்த அனைத்து இதயங்களும் ஹை டெசிபலில் துடித்தன.

வாகன ஊர்வலம், ஊர்ந்தன. வேகம் பிடித்தன. சடர்ன் பிரேக்கில் நின்றன. சீறின. கடிகாரமுள் நிமிடங்களாக கடக்க, மனநிலை மட்டும் யுகங்களை கடந்து பயணித்தன.

நீதிமன்றத்தை அடைந்தபோது அனைவருக்குமே அப்பாடா என்றிருந்தது. கடவுளுக்கு நன்றி. அசம்பாவிதம் எதுவும் நடக்கவில்லை.

வேனை விட்டு முதலில் இறங்கிய காவலர்கள் ஒன்றுக்கு இருமுறை நீதிமன்ற வளாகத்தை ஆராய்ந்தார்கள்.

பாதுகாப்பு பணியில் ஈடுபட்டிருந்த போலீசார், ஒன்றும் பிரச்னையில்லை... இருப்பவர்களை ஆராய்ந்து அலசிவிட்டோம் என தெரியப்படுத்தியதும் - கஞ்சுவை இறக்கினார்கள்.

தலையை உயர்த்தி வானத்தை பார்த்தான். இமைகளை மூடித் திறந்தான். பயமும் குழப்பமும் மறைந்து முகத்தில் நிம்மதி படர்ந்தது.



நிதானமாக காவலர்களை பின்தொடர்ந்தான்.

அவனது முறை வந்தபோது கூண்டில் ஏறினான்.

ஓரிடத்தில் நிற்காமல் நான்கு புறமும் பாதுகாப்பு பணியில் இருந்த காவலர்கள் அலைந்தார்கள். புதிதாக யார் தென்பட்டாலும் குலம், கோத்திரம் என்ன என்று விசாரித்தார்கள்.

விசாரணை நடந்தது.

மூக்குக் கண்ணாடியை கழற்றாமல் உன்னிப்பாக நீதிபதி கவனித்தார். மறு தேதியை அறிவித்தார்.

கஞ்சு எதிர்பார்த்தபடியே நீதிமன்றக் காவல் தொடர்ந்தது.

கூண்டை விட்டு இறங்கியவன், காவல்துறை அதிகாரியை ஏறிட்டான்.

அதே அதிகாரிதான். சிறை வளாகத்தில் யாரை தனியாக அழைத்து தன் யோசனையை தெரிவித்தானோ... யார் அதற்கு ஒப்புக் கொண்டதாக தலையசைத்தாரோ...

அவரேதான்.

அவரது பார்வையை நேருக்கு நேர் சந்தித்தான்.

இதற்காகவே காத்திருந்தது போல் புன்னகைத்தார்.

பாரம் இறங்கியது. ஆனாலும் எச்சரிக்கையை கைவிடவில்லை. இன்னமும் நீதிமன்றத்துக்குள்தான் இருக்கிறோம். வாசலை அடைய சில அடிகள் நடக்க வேண்டும். பெரிய தூரமில்லை. என்றாலும் சோட்டா ராஜனுக்கு இந்த தொலைவே போதுமானது.

பயன்படுத்திக்கொள்வானோ?

ஓரடியை எடுத்து வைக்கவே சிரமப்பட்டான். திக்கித்திணறி வெளியே வந்தான்.

முன்பை போலவே வரிசையாக வாகனங்கள் நின்றிருந்தன.

ம்ஹூம். மூன்று அல்ல. நான்கு.

முதலில் ஜீப். அடுத்து வேன். பிறகு அம்பாசிடர். கடைசியாக

இன்னொரு வெள்ளை நிற அம்பாசிடர்.

மைக்ரோ நொடிக்கும் குறைவான நேரத்தில் அந்த காவல்துறை அதிகாரியை பார்த்தான். புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக அவர் விரல்களை உயர்த்தி சைகை காட்டினார்.

உடனே சூழ்ந்திருந்த காவலர்கள் தத்தம் வண்டிகளில் விரைவாக ஏறினார்கள்.

கஞ்சு மட்டும் வேனில் ஏறவில்லை.

அதிகாரி அருகில் வந்தார்.

"கஞ்சு... உன்னை நம்பறேன்..."

"ஏமாத்த மாட்டேன் சார். உங்களுக்கு முன்னாடியே ஜெயில் வாசல்ல இருப்பேன். தப்பிச்சு போனா நிச்சயமா சோட்டா ராஜன் என்னை கொன்னுடுவான். சிறைதான் பாதுகாப்பு. நான் வாழ விரும்பறேன். நம்பி போங்க..."

தலையசைப்புடன் தனது அம்பாசிடர் காரில் அவர் ஏறியதும் -அதற்கு பின்னால் இருந்த வெள்ளை அம்பாசிடரில் கஞ்சு ஏறினான். காரை ஓட்டி வந்தவன் அவனது கையாள்தான்.

"வேற வழி தெரியுமில்லையா?" டிரைவரிடம் கேட்டான்.

"தெரியும்ணே..."

"ஜெயில் வாசல்ல இறக்கிவிடு..."

விர்ர்ர்ரென்று கார் கிளம்பியது.

நிம்மதியுடன் தன் இருக்கையில் சாய்ந்தான்.

பயணத்தின்போதுதான் தன்னை போட்டுத் தள்ள சோட்டா ராஜன் முயற்சி செய்வான். வரும்போது எதுவும் நடக்கவில்லை. போகும்போது நடக்கலாம். நடக்கும். வேனுக்குள், தான் இல்லை என்பது தெரியாமல் தோட்டாக்களை வீணாக்குவான். பைத்தியக்காரன்...

உதட்டோரம் சிரித்தபடி ரிவர் வியூ மிரரை பார்த்தான்.

ஒரு கார் பின் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது.

மனதுக்குள் அலாரம் அடித்தது.

"வேகமா போ..."

அம்பாசிடருக்கு சமமாக அந்த காரும் வேகம் பிடித்தது.

பொட்டு பொட்டாக கஞ்சுவின் நெற்றியில் வியர்வை பூத்தது.

வருவது யார்... கண்டிப்பாக சோட்டா ராஜனாக இருக்க வாய்ப்பில்லை. ஏனெனில் இப்படி வண்டி மாறி செல்லும் விஷயம் காவல்துறை அதிகாரியையும் அவனையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது...

என்று நினைத்து முடிப்பதற்குள் - பின்னால் வந்த காரிலிருந்து ஒரு தலை எட்டிப் பார்த்தது.

கஞ்சு அதிர்ந்துவிட்டான்.

காரணம், அது சோட்டா ராஜன்.

எப்படி... எப்படி ரகசியம் கசிந்தது?

"எங்கயும் நிக்காத..." அலறினான்.

டிரைவருக்கும் விபரீதம் புரிந்தது. கியரை மாற்றினான். பிரேக்கில் இருந்து காலை எடுத்தான். ஹாரன் அடித்தபடியே பறந்தான்.

பின் தொடரும் நிழலாக சோட்டா ராஜனும் தொடர்ந்தான்.

இரு கார்களும் நெருங்கின. விலகின.

அருகருகில் உரசின.

சோட்டா ராஜனின் ஆட்கள் துப்பாக்கியால் குறி பார்த்தார்கள்.

ஃபோகஸ் தவறியபடியே இருந்ததால் டிக்கரை அழுத்தவில்லை.

தப்பிக்க வேண்டும்... உயிர் பிழைத்தே ஆக வேண்டும்... என கஞ்சு பிரார்த்தனை செய்த நேரத்தில் - அவன் சென்ற கார் சடர்ன் பிரேக்குடன் நின்றது.

கண்கள் விரிய டிரைவரை ஏறிட்டான்.

செய்வதறியாமல் சிக்னலை டிரைவர் காட்டினான்.

ரெட்.

ஓடுவதற்காக கார் கதவை திறக்க கஞ்சு முயன்றபோது - துரத்தி வந்த கார் உரசி நின்றது.

திபுதிபுவென ஆட்கள் இறங்கினார்கள்.

துப்பாக்கியை எடுத்தார்கள். சரமாரியாக கஞ்சு இருந்த அம்பாசிடரை சுட்டார்கள்.

சிவப்பு விளக்கு மறைந்து பச்சை ஒளிரும் வரை தோட்டாக்கள் பாய்ந்துகொண்டே இருந்தன.

சுட்டவர்களை பிடிப்பதற்காக போக்குவரத்து காவலர் ஓடி வந்தார்.

அதற்குள் பச்சை விழுந்தது.

பாய்ந்து, தாங்கள் வந்த காரில் சோட்டா ராஜனின் ஆட்கள் ஏறினார்கள். போக்குவரத்து நெரிசலில் கலந்து மறைந்தார்கள்.

விரைந்து வந்த போக்குவரத்து காவலர், சல்லடையாக துளைக்கப்பட்டிருந்த அம்பாசிடர் காரை அதிர்ச்சியுடன் பார்த்தார். உள்ளே இருந்தவர்கள் யாரென்று சத்தியமாக அவருக்கு தெரியாது. யாராக இருந்தாலும் நிச்சயம் பிழைத்திருக்க வாய்ப்பில்லை என்று மட்டும் தீர்மானமாக நம்பினார்.

கார் கதவை திறந்தார்.

ஆனால் - உள்ளே யாரும் இறந்துகிடக்கவில்லை.

டிரைவரும் கஞ்சுவும் விபரீதத்தை உணர்ந்து குனிந்துவிட்டதால் குண்டுகளில் இருந்து தப்பித்தார்கள்.

என்றாலும், கஞ்சுவின் தோளில் ஒரு தோட்டா பாய்ந்திருந்தது.

இந்த சம்பவத்தை அறிந்த தாவூத் இப்ராஹிம் விநாடிக்கும் குறைவான நேரத்தில் தன் கண்களை சுருக்கினான். பின் இயல்புக்கு திரும்பினான்.

இந்த நிகழ்வை மறந்தும்விட்டான்.

கஞ்சுவால் மட்டும் மறக்க முடியவில்லை. விழிப்பிலும் உறக்கத்திலும் துப்பாக்கி முனையே துரத்தியது.

தப்பிக்க வழியே இல்லை... போலீசாராலும் தன்னை காப்பாற்ற முடியாது. சிறையும் பாதுகாப்பில்லை. எந்த நொடியிலும் சோட்டா ராஜன் தன்னை கொன்றுவிடுவான்...

விழித்தபடியே இருந்தான். நடமாடினான். படுத்தான். இமைகளை மட்டும் மூடவேயில்லை. விஷமிருக்குமோ என உண்ணவும் இல்லை.

போலீசாருக்கும் ஒன்றும் புரியவில்லை. தாங்கள் பணியில் இருக்கும்போது கஞ்சு இறந்தால், கரும்புள்ளி விழுந்துவிடுமே என அஞ்சினார்கள். முன்னெச்சரிக்கை நடவடிக்கையாக சோட்டா ராஜனை பிடிக்க முயன்றார்கள்.

ஏமாற்றமே கிடைத்தது. ஆள் தலைமறைவாகிவிட்டான்.

குழம்பித் தவித்தார்கள்.

கஞ்சுவின் தோளில் ஆழமாக குண்டு பாய்ந்திருந்ததால் சிகிச்சை அளிக்க வேண்டியிருந்தது. அதற்காக ஜே.ஜே மருத்துவமனைக்கு அடிக்கடி அழைத்துச் சென்றார்கள்.

ஒவ்வொரு முறையும் தன் மீது குண்டுகள் பாயும் என்று கஞ்சு எதிர்பார்த்தான். செத்து செத்து பிழைத்தான்.

அப்படி எதுவும் நடக்கவில்லை.

இனி எதுவும் நடக்காது என காவல்துறை நம்பியது.

அவனுக்கு மட்டும் நம்பிக்கை வரவில்லை.

தன் மரணத்தை வரவேற்க காத்திருந்தான்.

நாட்கள் கடந்து மாதங்களாகின.

1984ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 25ம் தேதியும் விடிந்தது.

சிகிச்சைக்கு செல்ல வேண்டிய நாள்.

பயத்துடன் கஞ்சு புறப்பட்டான்.

மருத்துவமனையில் இருக்கும் டாக்டர்களும், நர்சுகளும், பணியாளர்களும் அதற்குள் காவலர்களுக்கு நெருக்கமாகி இருந்தார்கள். அவர்களால் ஆபத்து ஏற்படாது என்ற உணர்வு போலீசார் மத்தியில் ஏற்பட்டது.

மருத்துவமனைக்குள் நுழைந்தவர்கள் வழக்கம் போல் அங்கிருந்தவர்களை பார்வையால் சலித்தார்கள்.

நோயாளிகள் அதிகமில்லை. இருந்த ஒன்றிரண்டு பேரும் சுருண்டிருந்தார்கள்.

கஞ்சுவை கைத்தாங்கலாக பிடித்தபடி டாக்டரின் அறையை நோக்கி நடந்தார்கள்.

அறை வாசலில் கையில் மாவுக் கட்டுடன்

ஒருவன் அமர்ந்திருந்தான்.

நெருங்கினார்கள்.

அமர்ந்திருந்தவன் எழுந்தான்.

என்ன ஏது என்று காவலர்கள் சுதாரிப்பதற்குள் - தன் மாவுக்கட்டை பிரித்தான்.

உள்ளே மறைத்திருந்த துப்பாக்கியை எடுத்தான். கஞ்சுவை நோக்கி சரமாரியாக சுட்டான்.

இப்படி நடக்கும் என எதிர்பார்க்காத காவலர்கள் சிதறினார்கள்.

இப்படி நடக்கலாம் என்று பயத்துடனேயே இருந்த கஞ்சு, குனிந்தான். விலகினான். தூணுக்கு பின்னால் மறைந்தான். தப்பித்தான்.

ஆனால் - இம்முறையும் அவன் தோளில், அதே இடத்தில் ஒரு தோட்டா பாய்ந்துவிட்டது.

செய்தி அறிந்த தாவூத், துள்ளி எழுந்தான்.

"சோட்டா ராஜனை நான் பார்க்கணும். இவ்வளவு கெடுபிடிக்கு மத்திலயும் பழிவாங்க துடிக்கிறானே... அவன் எனக்கு வேணும். அடுத்தடுத்து தோத்து போனாலும் திரும்பத் திரும்ப திட்டம் போடறானே... அவன் நம்ம ஆளா மாறணும். சந்திப்புக்கு ஏற்பாடு செய்யுங்க".

72

மீட்டிங்குக்கு ஏற்பாடு செய்தார்கள்.

விவரம் அறிந்தபோது சோட்டா ராஜன் ஆச்சரியப்பட்டான். எதற்காக தாவூத் தன்னை அழைக்கிறான்? தெரியவில்லை. ஆனாலும் மறுக்க தோன்றவில்லை.

இந்த வாய்ப்பை நழுவவிடக்கூடாது என அவனது உள்ளுணர்வு சொன்னது. தாவூத் இப்ராஹிமை சந்திப்பது என்பது பம்பாய் வாழ் 'டான்'களின் கனவு. அவன் மட்டும் இதற்கு விதிவிலக்கா என்ன..?

ஏற்கனவே படா ராஜனுடன் சேர்ந்து தாவூத்தை சந்தித்திருக்கிறான். அப்போது அவன் வெறும் கையாள். நிழல். எனவே பெரிதாக எந்த அறிமுகமும் ஏற்படவில்லை. ஒப்புக்கு சப்பாணியாக உடன் சென்றதோடு சரி.

இப்போது அப்படியில்லை. கதாநாயகனே அவன்தான். நேருக்கு நேராக - ஒன் டூ ஒன் ஆக - தாவூத்தை சந்திக்க இதைவிட நல்ல வாய்ப்பு கிடைக்காது.

தன் ஆட்களுடன் குறிப்பிட்ட நாளன்று முஸாஃபீர்கானா சென்றான்.

வலது - இடது கைகள் வாசலில் வந்து வரவேற்றார்கள். கட்டி அணைத்து உள்ளே அழைத்துச் சென்றார்கள்.

அமர்ந்த நிலையிலேயே புன்னகையுடன் தாவூத் அவர்களை எதிர்கொண்டான்.

மாஃபியாக்களின் முறைப்படி சோட்டா ராஜன் மண்டியிட்டான். தாவூத்தின் வலது கையில் முத்தமிட்டான். கை குலுக்கினான். எதிரில் இருந்த நாற்காலியில் அமரச் சொன்னதும் நுனியில் உட்கார்ந்தான்.

கஞ்சுவை பழிவாங்க அவன் மேற்கொண்ட அனைத்து முயற்சிகளையும் தாவூத் பாராட்டினான்.

கூச்சத்தால் நெளிந்தான். பரஸ்பர நலம் விசாரிப்புக்கு பின், சோட்டா ராஜனின் செவிகளில் தேன் வந்து பாய்ந்தது.

"என் கூட இரு..."

நம்ப முடியாமல் தாவூத்தை ஏறிட்டான்.

தவம் செய்யாமல் கிடைத்த வரம். யோசிக்காமல், தயங்காமல், ஆலோசிக்காமல் ஒப்புக்கொண்டான்.

"கஞ்சுவை போட்டுத் தள்ள நான் முகூர்த்தம் குறிச்சு தர்றேன். அதுவரைக்கும் பொறுமையா இரு..."

இருந்தான்.

மேற்கொண்டு எந்த நடவடிக்கைகளிலும் சோட்டா இறங்கவில்லை.

கஞ்சு சிறையில் இருந்தான். சிகிச்சைக்காக மருத்துவமனைக்கு சென்று வந்தான். குறிப்பிட்ட நாள் வரும்போதெல்லாம் காவல்துறை



வேனில் ஏறினான். நீதிபதி முன்னால் கைகட்டி நின்றான். மறு தேதி அறிவிக்கப்பட்ட பின் பூரண பாதுகாப்புடன் ‘மாமியார் வீட்டுக்கு’ திரும்பினான்.

தொடக்கத்தில் இருந்த பயம் மெல்ல மெல்ல கரைந்தது. விலகியது. சோட்டா ராஜன் தன்னை பின்தொடரவில்லை என்பதை உணரவே பல மாதங்களானது. பறிபோன நிம்மதியும் கொஞ்சம் கொஞ்சமாக மனதில் குடியேறியது.

*ரிலாக்ஸ் ஆனது கஞ்சு மட்டுமல்ல. போலீசாரும்தான்.*

*மாதங்கள் உருண்டு வருடங்களானது.*

*விடுதலையானான்.*

*விலகிய அச்சமும் பாய்ந்து வந்து குடியேறியது.*

*ஒருவேளை 'வெளியில் போட்டுத் தள்ள' சோட்டா ராஜன் முயல்வானோ?*

*வழக்கமான தனது இருப்பிடத்துக்கு செல்லாமல் வேறொரு இடத்துக்கு சென்றான். பதுங்கினான்.*

*சூரியன் உதித்தது. அனலை கக்கியது. மறைந்தது.*

*வானம் இருண்டது. மழை பொழிந்தது.*

*வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது.*

*ம்ஹூம். எதுவும் நடக்கவில்லை.*

*இனி நடக்கவும் வாய்ப்பில்லை என்று தெரிந்ததும் வெளியில் தலைகாட்டத் தொடங்கினான். தனது ஆட்கள் சூழ நடமாடினான்.*

*இதற்காகவே காத்திருந்த தாவூத், தனது நிழலாக மாறியிருந்த சோட்டா ராஜனை பார்த்து புன்னகைத்தான்.*

*புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக அவனும் களத்தில் இறங்கினான்.*

*1987ம் ஆண்டின் கோடை காலம் அது.*

*மைதானத்தில் தன் ஆட்களுடன் கஞ்சு வொயிட் அண்ட் வொயிட்டில் கிரிக்கெட் ஆடிக்கொண்டிருந்தான். அதுதான் அன்றைய இந்திய கிரிக்கெட் வீரர்களின் உடை. அதுவேதான் தெருவுக்கு தெரு மட்டையை கையில் ஏந்தியவர்களின் தேசிய உடையும்.*

*இரு அணிகளாக பிரிந்து விளையாடிக்கொண்டிருந்தவர்கள் - சட்டென்று அந்த விபரீதத்தை உணர்ந்தார்கள்.*

*பதினோருபேர் ஃபீல்டிங். இரண்டுபேர் பேட்டிங். ஒரு அம்பயர். ஆக பதினான்குபேர்தான் நியாயமாகப் பார்த்தால் மைதானத்தில் இருக்க வேண்டும்.*

*மாறாக இருபது பேர் வெள்ளை பேன்ட், வெள்ளை சட்டையில் இருந்தார்கள்.*

*எப்படி? யார் அந்த எக்ஸ்ட்ரா ஆறு நபர்கள்?*

*சுதாரிப்பதற்குள் - பேட்டை பிடித்தபடி பந்துக்காக காத்திருந்த கஞ்சுவை புதிதாக வந்த ஆறு பேரும் சூழ்ந்துகொண்டார்கள்.*

*கிளவுசுக்குள் மறைத்து வைத்திருந்த கத்தியை - துப்பாக்கியை - எடுத்தார்கள்.*

*கஞ்சுவின் இமைகள் விரிந்தன. மூடவும் மறந்து அந்த இடத்திலேயே சரிந்தான். மார்பில் ஆறு குண்டுகள் பாய்ந்திருந்தன. நெஞ்சிலும், கை கால்களிலும் கத்திக்குத்து.*

*இறந்துவிட்டான் என்பதை ஒன்றுக்கு இருமுறை சரிபார்த்துவிட்டு*

- அந்த ஆறு பேரும் கிரவுண்டை விட்டு வெளியேறினார்கள். அதுவும் நிதானமாக.

ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்து.

காரில் அமர்ந்தபடி இத்தனையும் கண்கொட்டாமல் பார்த்த சோட்டா ராஜன், எச்சிலை தரையில் துப்பினான். ரிலாக்ஸ் ஆக சிகரெட்டை பற்ற வைத்தான்.

ராஜன் நாயரின் ஆத்மா சாந்தி அடைவதாக...

துள்ளலுடன் காரை சீற விட்டவன் நேராக தாவூத்தை தேடி சென்றான். 'முடித்தேன் கஞ்சுவை' என ஆனந்தக் கூத்தாடினான். முன்பை விட அதிகமாக தாவூத்திடம் ஒட்டிக்கொண்டான்.

இதற்குள் அந்த பிளவும் ஏற்பட்டிருந்தது.

பிளவு?

ஆம் பிளவுதான். நகையும் சதையுமாக இருந்த தாவூத்தும் காலிப்பும் விலகி இருந்தார்கள்.

இருவருக்கும் இடையிலான முரண்பாடு முன்
எப்போதும் இல்லாத அளவுக்கு அதிகரித்திருந்தது.

காலிப்?

அவனேதான். பாஷு தாதாவின் வலது கரமாக இருந்து, பின்னர் தாவூத்தின் விசுவாசியாக மாறியவனேதான். லோக்கல் ஏரியாவில் மாமூலை வசூலிப்பதைவிட தங்கக் கடத்தலில் ஈடுபடுவதே வளர்ச்சிக்கான அறிகுறி என புரியவைத்தவனேதான்.

கடல் வழி பதான்ஸ்களின் கையில் இருந்ததால் வான் வழியை பயன்படுத்தி மத்திய கிழக்கு நாடுகளில் இருந்து தங்கத்தை கொண்டு வரலாம் என யோசனை சொன்னவனேதான்.

எல்லாம் நன்றாக போய்க் கொண்டிருந்தது.

சபீர் இறந்ததும் தாவூத்தின் நம்பிக்கைக்குரிய கரமாகவே மாறிப் போனான்.

இந்நிலையில்தான் அந்த யோசனையை முன்வைத்தான்.

அதுவேதான் காலிப்புக்கு எமனாகவும் மாறியது.

அமிர்ஸாதா கொல்லப்பட்டு, பதான்ஸ்களின் கொட்டம் ஒடுக்கப்பட்ட நேரம் அது. நாக்கில் சனிபகவான் சப்பணமிட்டு அமர்ந்த வேளையும் கூட. இல்லாவிட்டால் காலிப் வாய் திறந்திருப்பானா?

விதி வலியது.

வான்வழியே தங்கத்தை கடத்துவது ரிஸ்க் ஆக இருக்கிறது. தவிர, குறைந்த எண்ணிக்கையில்தான் கோல்டு பிஸ்கெட்டை கொண்டு வரவும் முடிகிறது. கடல்வழி அப்படியில்லை. கிலோ கணக்கில் கடத்தலாம். பதான்ஸ் ராஜ்ஜியம் மறைந்துவிட்டதால் கடலிலும் இனி நாமே ராஜா.

சரியான ஐடியாதான். தாவூத்தும் இதற்கு ஒப்புக்கொண்டான்.

கஸ்டம்ஸ் துறையின் கண்களில் மண்ணைத் தூவ என்ன செய்யலாம் என்று ஆலோசித்தார்கள்.

காலிப்பே இதற்கும் வழி சொன்னான்.

தங்கத்தை சுமந்து வரும் கப்பல் துறைமுகத்துக்குள் நுழையக் கூடாது. நடுக்கடலில் நிற்க வேண்டும்.

மீன் பிடிக்க செல்லும் மீனவர்களில் சிலரை நாம் விலைக்கு வாங்க வேண்டும். அந்த மீனவர்கள் தங்கள் படகுகளில் நடுக்கடலுக்கு செல்ல வேண்டும். பகுதி பகுதியாக தங்கள் படகுகளில் தங்கத்தை இறக்க வேண்டும். மீனைக் கொண்டு வருவதுபோல் கரைக்கு வர வேண்டும்.

"சூப்பர்..." என்று பாராட்டிய தாவூத், பொறுப்பை காலிப்பிடமே ஒப்படைத்தான்.

இதுதான்... இந்த வேலைப் பிரிவினைதான் அவர்கள் இருவருக்கும் இடையில் பிளவையும் ஏற்படுத்தியது.

தாவூத், பம்பாயிலே பிறந்து வளர்ந்தவன். தெருவில் புழுதி படிய விளையாடியவன். மராத்தியும் இந்தியும் சரளமாக வரும். பேசுவான்.

உருது?

கொச்சையாக இருக்கும்.

காலிப் அப்படியில்லை. தாய்மொழியே உருது என்பதால் அந்த மொழி நாக்கில் தவழும். விளையாடும்.

மத்திய கிழக்கு நாடுகளை சேர்ந்த ஷேக்குகளுக்கு இந்தியோ, மராத்தியோ தெரியாது.

உருதுவில்தான் பேசுவார்கள். எழுதுவார்கள்.

எனவே அவர்களுடன் வணிகம் தொடர்பாக டீல் செய்யும் பொறுப்பை காலிப் ஏற்றான்.

பம்பாய்க்கு வந்து சேர்ந்த தங்கத்தை உள்நாட்டில் பட்டுவாடா செய்யும் பணியை தாவூத் மேற்கொண்டான்.

இரண்டுமே சம அளவிலான வேலைகள்தான். பார்ட்னர்ஷிப் இப்படி இருப்பதுதான் சரி.

ஆனால் - இந்த சரியே தவறாகிப்போனதுதான் கொடுமை.

ஷேக்குகள் எல்லா விஷயத்துக்கும் காலிப்பையே தொடர்பு கொண்டார்கள். தாவூத்திடம் சாதாரணமாக பேசுவதை கூட தவிர்த்தார்கள்.

அதாவது, காலிப்தான் தலைவன் என்பது போலவும், அவனிடம் பணிபுரியும் வேலைக்காரனே தாவூத் என்பது மாதிரியும் நடந்து கொண்டார்கள்.

இந்த உதாசீனம் தாவூத்தின் உள்ளத்தை தைத்தது.

அல்லக்கைகள் இதை பயன்படுத்திக்கொண்டார்கள். ஒன்றுக்கு இரண்டாக தூபம் போடத் தொடங்கினார்கள்.

இதை காலிப்பும் உணர்ந்தான். எனவே தன்னிலை விளக்கம்

அளிக்க எவ்வளவோ முயன்றான்.

தாவூத் பிடிகொடுக்கவில்லை. அல்லக்கைகள் அதற்கு அனுமதிக்கவும் இல்லை.

பேசித் தீர்க்கப்பட வேண்டிய விஷயம்,

பேசப்படாமலேயே போனது.

ஏழு ஆண்டுகள்... 84 மாதங்கள் ஒருடல் ஈருயிராக இருந்தவர்கள்... மெல்ல மெல்ல மனத்தளவில் விலகினார்கள். விலக்கப்பட்டார்கள்.

போதும். இந்த கடத்தல் தொழிலில் இருந்து விஆர்எஸ் வாங்கி விலகிவிடலாம். மனைவி குழந்தைகளுடன் அமைதியான வாழ்க்கையை மேற்கொள்ளலாம் என காலிப் தீர்மானித்தான்.

அறிவிக்கவும் செய்தான்.

தாவூத், தடுக்கவில்லை. சொல்லப் போனால் காலிப்பை கொல்ல வேண்டும் என்று அவனுக்கு தோன்றவேயில்லை. ஆயிரம்தான் இருந்தாலும் இன்றைய தனது வளர்ச்சிக்கு காரணம் அவன்தான். எனவே ஒரு சாஃப்ட் கார்னர் அவன் மீது இருக்கவே செய்தது.

அதற்காக தண்டிக்காமல் இருக்க முடியாதே...

எனவே சரக்கு நடுக்கடலுக்கு வரும் நாளில், மீனவர்கள் தத்தம் படகுகளில் அதை கொண்டு வருவதற்காக புறப்பட்ட தினத்தில் -

கஸ்டம்ஸ் அதிகாரிகளிடம் தாவூத் தகவலை சொன்னான்.

கோழியை அமுக்குவது போல் கஸ்டம்ஸ் துறை சரக்கை கைப்பற்றியது.

காலிப் இதை துளியும் எதிர்பார்க்கவில்லை.

சரக்கு வரும் விஷயம் தாவூத்தையும் அவனையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. அப்படியிருக்க கஸ்டம்ஸ் துறைக்கு தகவல் போயிருக்கிறது என்றால்...

வியர்த்து கொட்டியது. கறுப்பு ஆடு தாவூத்தான் என்பதை ஒருபோதும் அவனால் நிரூபிக்க முடியாது.

தப்பிக்க முடியாதபடி அனைத்து வழிகளையும் தாவூத் அடைத்துவிட்டான்.

இதிலிருந்து எப்படி மீள்வது?

யோசிக்கத் தொடங்கினான்.

73

அதிக நேரம் காலிப் யோசிக்கவில்லை. சட்டென்று முடிவுக்கு வந்துவிட்டான். இந்த கடத்தல் வாழ்க்கை போதும். வேண்டியது வரை தாதாக்களுக்கு வலது கரமாக இருந்துவிட்டோம். இனி குடும்பத்தை பார்ப்போம்.

அடியாட்கள் இல்லாத தருணத்தில் தாவூத்தை நெருங்கினான்.

“விலகிடலாம்னு இருக்கேன்...”

“ஏன்... ஏதாவது பிரச்னையா?”

“நீதான் பிரச்னையே...” என்று எப்படி சொல்ல முடியும்? “அப்படியெல்லாம் எதுவும் இல்லை தாவூத்...”

“அப்புறம்..?”

“குடும்பத்தோட அமைதியா வாழலாம்னு நினைக்கறேன்...”

“ம்...”

“தில்லி, கரோல் பாக்குல ஒரு பங்களா இருக்கு... அங்க போகலாம்னு ஐடியா...”

“முட்டாள்தனமா முடிவெடுக்காத. உன்னைப் போல எனக்கு யாரும் கிடைக்க மாட்டான். எதுவா இருந்தாலும் பேசித் தீர்த்துக்கலாம். போய் வேலையை பாரு...”

இப்படி தாவூத் சொல்லுவான் என காலிப் எதிர்பார்க்கவில்லைதான்.

ஆனால் - குறைந்தபட்சம் தடுத்து நிறுத்துவான் என்று நினைத்தான்.

அப்படி எதுவும் நடக்கவில்லை.

மாறாக - “சரி போயிட்டு வா...” என விடை கொடுத்தான்.

அந்த பதிலே காலிப்பின் பாதி உயிரை பறித்துவிட்டது. சோர்வுடன் வீடு திரும்பியவன் கிளம்புவதற்காக வேலைகளில் இறங்கினான்.

அதற்குள் தாவூத் அடுத்த தாக்குதலை நிகழ்த்திவிட்டான்.

இதற்கு அவன் துணை சேர்த்துக்கொண்டது ஜெனாபாயை.

அதே ஜெனாபாய்தான். மாஃபியா ராணிகளில் முதலிடத்தில் இருப்பவர்தான். தாவூத்தின் வளர்ப்பு அம்மாதான். வரதராஜ முதலியார் - கரீம் லாலா - ஹாஜி மஸ்தான் ஆகியோரின் தத்து சகோதரிதான்.

அவள் போலீஸ் இன்ஃபார்மராகவும் இருந்தாள் என முன்பே பார்த்திருக்கிறோம்.

இதை வைத்துத்தான் தன் காய்களை தாவூத் நகர்த்தினான். நகர முடியாதபடி காலிப்பை கட்டம் கட்டினான். அதற்கு அச்சாரமாகவே அவளை சந்தித்தான்.



“என்ன விஷயம்? இவ்வளவு காலைலயே வந்திருக்க..?”

தாவூத் எதுவும் பேசவில்லை. உள்ளே நுழைந்து நாற்காலியில் அமர்ந்தான்.

புருவம் சுருங்க அவனை பார்த்தவள், நேராக சமையலறைக்குச் சென்றாள். சொம்பில் நீர் கொண்டு வந்தாள்.

தலைகுனிந்தபடி அதை பெற்றுக்கொண்டான்.

மீண்டும் உள்ளே சென்றவள், சில நிமிடங்கள் கழித்து ஆவி பறக்க காபியுடன் வந்தாள்.

“குடி...”

மிதமான சூடு. அப்படி பருகத்தான் அவனுக்கு பிடிக்கும்.

நாக்கால் உதட்டை ஈரப்படுத்தியபடி குடித்தான்.

“இப்ப சொல்லு...”

பதில் பேசாமல் அவளை ஏறிட்டான்.

அவன் கண்களையே சில கணங்கள் உற்றுப் பார்த்தாள்.

“யாரு?” கேள்வியுடன் அவன் எதிரில் அமர்ந்தாள்.
“காலிப்...”
“பாஷு தாதா கூட இருந்தவனா?”
“ம்...”
“பேசிப் பார்த்தியா?”
“அந்த கட்டத்தை தாண்டியாச்சு...”
“விலகிட்டானா?”
“ம்...”
“இப்ப யார் கூட இருக்கான்?”
“தனியாதான்...”
“உனக்கு போட்டியா கேங் ஆரம்பிக்கப் போறானா?”
“இல்ல. தில்லில செட்டில் ஆகப்போறான்...”
“அது உனக்குப் பிடிக்கலையா?”
“...”
“போட்டுத் தள்ளிடு...”
“அது வேண்டாம்...” அவசரமாக மறுத்தான்.

ஜெனாபாயால் தன் செவிகளையே நம்ப முடியவில்லை. இவ்வளவு இரக்கத்துடன் பேசுவது தாவூத்தா? தன்னையே கிள்ளிப் பார்த்துக்கொண்டாள்.

அதைப் பார்த்து சங்கடத்துடன் நெளிந்தான்.

“சரி. உன் இஷ்டம். நான் என்ன செய்யணும்? அதை சொல்லு...”

“என் கூட காலிப் ஏழு வருஷங்கள் இருந்திருக்கான். ஒருவகைல இந்தளவுக்கு நான் வளர அவன்தான் காரணம்...”

“அப்படீன்னா அவனை மன்னிக்கப் போறயா?”
“அப்படி நான் சொல்லலையே...”
“பின்னே?”
“கொல்ல விருப்பமில்லை. அவ்வளவுதான்...”
“புரியலையே?”

“தெளிவாவே சொல்லிடறேன்மா... அவன் உயிரோட இருக்கணும்...”

“ம்...”
“ஆனா, தலை நிமிரவே கூடாது...”

கண்கள் விரிய தாவூத்தை பார்த்தாள். என்ன சொல்ல வருகிறான்?

“மத்தவங்களுக்கு... குறிப்பா என்னை விட்டு விலகணும்னு நினைக்கறவங்களுக்கு அவன் வாழ்க்கை ஒரு பாடமா அமையணும்...”

“அப்படி ஒரு தண்டனை இருக்கா?”
“இருக்கு...”

“ஆக திட்டத்தோடதான் வந்திருக்க. சரி. இதுல நான் என்ன செய்யணும்... எந்த கதாபாத்திரத்தை ஏற்று நடிக்கணும்?”

“புதுசா எதுவும் இல்லை... வழக்கமா என்ன செய்வீங்களோ

அதை செய்ங்க...”

“அதாவது...”

“போலீசுக்கு தகவல் கொடுங்க...”

“...”

“கடத்தல் சரக்கு வந்திருக்கு. எப்பவும் போல எங்க கோடவுன்ல பதுக்கியிருக்கோம். அந்த இடம் எங்க இருக்குன்னு என்னையும் காலிப்பையும் தவிர வேற யாருக்கும் தெரியாது...”

“புரிஞ்சுது. இடத்தை சொல்லு...”

சொன்னான்.

குறித்துக்கொண்ட ஜெனாபாய், அதை காவல்துறையிடம் தெரியப்படுத்தினாள்.

பெரும் படையே முஸாஃபீர்கானாவுக்குள் நுழைந்து குறிப்பிட்ட அந்த இடத்தை சுற்றி வளைத்தது. கடத்தல் பொருட்களை கைப்பற்றியது.

இதை அறிந்ததும் காலிப் வெலவெலத்துப் போனான். குறிப்பாக எந்த நபரும் கைது செய்யப்படவில்லை என்ற உண்மை அவன் இதயத்தை அறுத்தது.

கூடவே - தாவூத்தின் சுயரூபத்தையும் புரியவைத்தது.

பக்காவாக ப்ளான் செய்து தன்னை முட்டுச்சந்தில் நிறுத்திவிட்டான். இனி எந்தப் பக்கமும் நகர முடியாது. இப்போது தாவூத் கேங்கில் இருக்கும் அனைவருமே தன்னைத்தான் கறுப்பு ஆடாக நினைப்பார்கள்.

ஏனெனில் கோடவுன் இருக்கும் இடம் அவர்கள் யாருக்கும் தெரியாது. அறிந்தவர்கள் இருவர். அதில் ஒருவன் குழுவின் தலைவன். அவன் காட்டிக் கொடுத்திருக்க வாய்ப்பேயில்லை என்றுத்தான் சத்தியம் செய்வார்கள். மீதமிருப்பது, தான் மட்டுமே. எனவே அனைவரது சுட்டு விரலும் தன்னை நோக்கித்தான் நீளும்.

தவிர, குறுகிய இடைவெளியில் இரண்டாவது முறையாக நடந்திருக்கும் சம்பவம் இது. முதலில் கஸ்டம்ஸ் அதிகாரிகள். அந்த சூடு காய்வதற்குள் அடுத்த இடி.

வாழ்நாள் முழுக்க விசுவாசமாக இருந்ததற்கு பலன் ‘ஆள்காட்டி’ பட்டமா?

துவண்டு போனான்.

இதுவரையில் நடந்தவைகளை எல்லாம் அசை போட்டான்.

மின்னல் தாக்கியது போல் உடல் அதிர்ந்தது.

காரணம், பளிச்சிட்ட உண்மை.

தாவூத்தின் குழுவில் இப்போது இருப்பவர்கள் அனைவரும் ஒரு குறிப்பிட்ட மதத்தை சேர்ந்தவர்கள்.

மட்டுமல்ல, தாவூத்துக்கு பரம எதிரியாக மாறிய பதான்ஸூம், பதான்ஸ் குழுவில் இருந்தவர்களும்கூட அதே மதத்தை

சேர்ந்தவர்கள்தான்.

எனவேதான் சுலபமாக ஒரு குழுவிலிருந்து அடுத்த குழுவுக்கு இடம் மாறியிருக்கிறார்கள். மாறியும் வருகிறார்கள். அதாவது மதம்தான் அவர்களை ஒருங்கிணைக்கிறதே தவிர தலைமையின் மீதான விசுவாசம் அல்ல.

எல்லாவற்றையும் விட தாவூத்துக்கு வேறொரு ப்ளஸ் பாயின்ட் இருக்கிறது. அதுதான் 'மராத்தியன்' என்ற அடையாளம். மண்ணின் மைந்தன் என்ற பட்டம். பதான்ஸ்களிடம் இது இல்லை. அவர்கள் ஆப்கனை பூர்வீகமாக கொண்டவர்கள். அதனாலேயே உள்ளூர் மக்கள் அவர்களை விலக்கியே வைத்திருக்கிறார்கள்...

இந்த நிஜம் முகத்தில் அறைந்ததுமே காலிப் செயலில் இறங்கினான்.

இந்து மதத்தை சேர்ந்த தாதாக்களையும், மாஃபியாவாக உருவாகி வந்தவர்களையும் சந்தித்தான். அருண் காவ்லி, ரமா நாயக், பாபு ரெஷிம் ஆகியோரை ஒருங்கிணைத்தான். இந்த இணைப்பு மற்ற இந்து இளைஞர்களுக்கு உத்வேகம் கொடுத்தது. கைகோர்த்தபடி இந்த குழுவில் இணைந்துகொண்டார்கள். சுனில் சாவந்த் என்கிற சவுத்யா, மனிஷ் லாலா, அனில் பராப் போன்றோர் இப்படி வந்து சேர்ந்தவர்கள்தான்.

இதற்குள் தனது வெளிநாட்டு தொடர்புகளின் வழியே இக்பால் மிர்ச்சிக்கு நெருக்கமானான். இங்கிலாந்தில் வசித்து வந்த இக்பால், சர்வதேச அளவில் போதைக் கடத்தலுக்கு பெயர்போனவன். வஸ்தாது.

இப்படி தொடர்பு பலப்பட்டதும் குடும்பத்துடன் இங்கிலாந்துக்கு காலிப் பயணமானான். பின்னர் துபாயில் செட்டில் ஆனான்.

பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றிலேயே ரத்தம் சிந்தாமல்... வெட்டுக் குத்து நடக்காமல்... ஒரு பிரிவினை ஏற்பட்டது என்றால் –

அது தாவூத் – காலிப் விலகல்தான்.

பின்னாளில் பலமுறை காலிப்பை துபாயில் சந்தித்தான் தாவூத். பெயருக்கு கைகுலுக்கிக்கொண்டார்களே தவிர, பழைய நெருக்கத்தை, பாசத்தை, இருவரும் வெளிப்படுத்திக் கொள்ளவேயில்லை. போலவே பரஸ்பரம் கொலை செய்யவும் இருவரும் முயற்சிக்கவில்லை.

இதற்கிடையில் அந்த புகழ்பெற்ற பம்பாய் மில்தொழிலாளர்களின் போராட்டம் வெடித்தது.

தலையேற்று நடத்தியவர் டாக்டர் தத்தா சமத் என்கிற டாக்டர் சாஹேப்.

கொங்கனியை சேர்ந்த இவர், காட்கோபாரில் வளர்ந்தவர். இந்திய தேசிய காங்கிரஸின் தொழிற்சங்கமான ஐஎன்டியூசி-யின் முக்கிய தலைவர்களில் இவரும் ஒருவர். டாக்டருக்கு படித்தவர் என்றாலும் தொழிற்சங்கங்களில்தான் ஈடுபாடு அதிகம். தொழிலாளர்களுக்காக

தன் வாழ்க்கையை அர்ப்பணித்தவர். 1972 தேர்தலில் காங்கிரஸ் கட்சி சார்பில் போட்டியிட்டு சட்டமன்ற உறுப்பினரானவர்.

என்றாலும் எமர்ஜென்சி காலத்தில் தன் கட்சி தலைமையாலேயே கைது செய்யப்பட்டார். 1977ல் இவர் விடுதலையானபோது ஆயிரக்கணக்கான மில் தொழிலாளர்கள் திரண்டு வந்து இவரை வரவேற்றார்கள்.

அப்படிப்பட்டவர் ஜார்ஜ் பெர்னான்டஸுடன் இணைந்து 1982ல் மிகப்பெரிய வேலை நிறுத்தத்தை முன்னின்று நடத்தினார்.

பம்பாயில் இருந்த மில் தொழிலாளர்கள் அனைவரும் இதில் பங்கேற்றார்கள். கிட்டத்தட்ட மூன்று லட்சம் பேர் என்கிறது புள்ளி விவரம். துறைமுக மாநகரமே குலுங்கியது. இயல்பு வாழ்க்கை முற்றிலும் பாதிக்கப்பட்டது.

ஆலை முதலாளிகள் டாக்டரை தாஜா செய்ய முயன்றார்கள்.

எதற்கும் இவர் அசைந்து கொடுக்கவில்லை. காம்ப்ரமைஸுக்கும் வரவில்லை. ஊதிய உயர்வு, பணி நிரந்தரம் ஆகிய கோரிக்கைகளில் பிடிவாதமாக இருந்தார்.

மாதக் கணக்கில் நீடித்த இந்த ஸ்டிரைக்கை பார்த்து அன்றைய பிரதமரான இந்திராகாந்தி பயந்தார். எங்கே நாடு முழுக்க இந்த போராட்டம் பரவி, டாக்டர் தத்தா சமத் புகழ்பெற்று விடுவாரோ என்று அஞ்சி, சிவசேனாவை தூண்டிவிட்டார்.

ஒன்றுபட்டு போராடிக் கொண்டிருந்த தொழிலாளர்களுக்குள் ஊடுருவிய சிவசேனாவின் தொழிற்சங்க பிரிவினர் மதத்தின் பெயரால் இணைப்பை துண்டித்தனர்.

விளைவு, தங்கள் வாழ்வாதாரத்துக்காக போராடிய தொழிலாளர்கள், மதத்தின் பெயரால் ஒருவருக்கொருவர் அடித்துக் கொள்ள ஆரம்பித்தார்கள்.

டாக்டர் தலைமையில் நடந்த மாபெரும் போராட்டம் பிசுபிசுத்து தோல்வியில் முடிந்தது.

இந்த சம்பவத்தை தாவூத், கச்சிதமாக பயன்படுத்திக் கொண்டான். போராட்ட காலத்தில் வேலையில்லாமல் தவித்த தொழிலாளர்களை மத வேறுபாடின்றி தன் பக்கம் இழுத்து ரவுடியாக, தாதாவாக மாற்றினான். தனது ராஜ்ஜியத்தையும் பெருக்கிக்கொண்டான்.

இந்த இடத்தில் குறிப்பிட வேண்டிய விஷயம் ஒன்றே ஒன்றுதான்.

தனி மனித ஈகோ காரணமாகவே ரத்தம் சிந்தாமல் தாவூத்தும் - காலிப்பும் பிரிந்தார்கள்.

ஆனால் - இந்த விலகலே பிறகு ரத்த ஆறு பெருக்கெடுத்து ஓடும் அளவுக்கு இஸ்லாம் மாஃபியா - இந்து மாஃபியா என பம்பாயே பிளவுபடும் அளவுக்கு மாறியது என்பதுதான்.

74

விவரம் அறிந்தபோது நிச்சயம் இயக்குநர் மகேந்திரன் நொந்துபோயிருப்பார்.

காரணம், அவரது கதை - வசனத்தில், சிவாஜி நடித்த 'தங்கப்பதக்கம்' திரைப் படம்தான். பி.மாதவன் டைரக்‌ஷனில் உருவான இந்தப் படம், தவறு செய்தால் சொந்த மகனையே காவல்துறை அதிகாரிகள் சுட்டுக் கொல்வார்கள் என்பதை அழுத்தம் திருத்தமாக பதிவு செய்திருந்தது.

ஆனால் -

காவல்துறைக்கு பெருமை சேர்ந்த அந்தப் படமே பம்பாய் மாஃபியாக்களின் வரலாற்றில் புதிய அத்தியாயத்தையும் எழுதியது என்பது எவ்வளவு பெரிய நகை முரண்.

யெஸ், மாஃபியாக்களின் கட்டுப்பாட்டில்தான் இப்போது இந்தி திரையுலகம் இருக்கிறது. படங்களுக்கு பைனான்ஸ் செய்வது முதல் எந்த ஹீரோவை சூப்பர் ஸ்டார் ஆக்க வேண்டும் என்பது வரை மாஃபியாக்களே தீர்மானிக்கிறார்கள். அவர்களது அருட்பார்வை எந்த நடிகையின் மீது விழுகிறதோ அவர்களே இந்தியாவின் கனவுக் கன்னியாக மாறுகிறார்கள்.

இதெல்லாம் இன்றைய நிலவரம்.

*But*, இதற்கு பிள்ளையார் சுழி போட்டது 'தங்கப்பதக்கம்' படத் தின் இந்தி ரீமேக் ஆன 'ஷக்தி'தான்.

1982ம் ஆண்டு வெளியான இந்தப் படத்தை ரமேஷ் சிப்பி இயக்கியிருந்தார். இந்திய சினிமாவின் குறிப்பிடத்தகுந்த ஸ்கிரிப்ட் ரைட்டர்களான சலீம் - ஜாவேத், இதற்கு திரைக்கதை - வசனம் எழுதியிருந்தார்கள். சிவாஜி கேரக்டரில் திலீப் குமாரும், ஸ்ரீகாந்த் வேடத்தில் அமிதாப்பச்சனும் நடித்திருந்தார்கள். சொல் லப்போனால் திலீப்குமாரும், அமிதாப்பச்சனும் இணைந்து நடித்த ஒரே படம் இதுதான்.

படம் ப்ளாக் பஸ்டர். வரலாறு காணாத வசூல்.

இந்தப் படத்தை முஷீர் அலாமும், மொஹமத் ரியாஸும் தயா ரித்திருந்தார்கள். இதில் முஷீர் அலாம்தான் பிரதானமானவர். இவரது மைத்துனரே மொஹமத் ரியாஸ்.

சினிமா உருவான காலம்தொட்டே இந்தக் காட்சியை காண லாம். குறிப்பிட்ட நடிகர்களை வைத்தே சில தயாரிப்பாளர்கள் தொடர்ந்து படங்களை தயாரிப்பார்கள். இதில், தயாரிப்பாளரால் உருவான நடிகர்களும், நடிகர்களால் உருவான தயாரிப்பாளர் களும் அடக்கம்.

அந்த வகையில் எப்படி எம்ஜிஆரை வைத்து தொடர்ந்து சின்னப்ப தேவர் படங்களை தயாரித்தாரோ -

எப்படி சிவாஜியை வைத்து கே.பாலாஜி அடுத்தடுத்து ப்ரொட்



யூஸ் செய்தாரோ –

அப்படி திலீப்குமாரை வைத்து தொடர்ச்சியாக படம் எடுத்தவர் தான் இந்த முஷீர் அலாம் – மொஹமத் ரியாஸ் ஜோடி. ‘சஃபார்’, ‘பைரங்’, ‘ஷக்தி’ ஆகிய சூப்பர் ஹிட் எல்லாம் இந்த காம்பினேஷனில் வந்தவைதான்.

இதில் அதிகம் கல்லா கட்டியது ‘ஷக்தி’யே.

அந்த தெம்பில் அன்றைய கலெக்‌ஷனை சரிபார்த்து விட்டு, ‘ஃபில்மிஸ்தான்’ பில்டிங்கில் இருந்த தனது ‘எம்.ஆர். புரொடக்‌ஷன்ஸ்’ அலுவலகத்தில் இருந்து சரியாக மாலை 4.30 மணிக்கு முஷீர் அலாம் புறப்பட்டார்.

தெற்கு பம்பாயில் அவருக்கு ஒரு அப்பாயின்ட்மென்ட் இருந்தது.

அங்கு செல்வதற்காக வோர்லி பகுதியில் இருந்து அன்னி பெசன்ட் சாலை வழியாக புறப்பட்டார். செல்ஃப் டிரைவிங். வெள்ளை நிற ஃபியட், அவரது அந்தஸ்துக்கு மட்டுமல்ல தன்னம்பிக்கைக்கும் அடையாளமாக இருந்ததை உணர்ந்தபடியே மிதமான வேகத்தில் காரை ஓட்டினார்.

அப்போதுதான் அந்த காட்சியையும் கண்டார்.

வெள்ளை அம்பாசிடர் ஒன்று அவருக்கு பின்னால் வந்து

கொண்டிருந்தது. அதுவும் போக்குவரத்து விதிகளுக்கு உட்பட்ட தொலைவில் பின்தொடரவில்லை. மாறாக மோதிவிடும் அளவுக்கு நெருக்கமாக.

அவருக்கு ஒன்றும் புரியவில்லை. இதற்கு முன் காரையே ஓட்டிய தில்லையா... இப்படி வருகிறார்களே... எக்கேடோ கெட்டு தொலை யட்டும். ஓரம் கட்டி வழிவிட்டார்.

ம்ஹூம். அம்பாசிடர் அவரை கடக்கவில்லை. சலிப் புடன் தன் வேகத்தை அதிகப்படுத்தினார். அதே வேகம் பின்னாலும் எதிரொலித்தது.

சட்டென்று மனதில் ஃப்ளாஷ் அடித்தது.

தன் அலுவலக வாசலில் ஒரு அம்பாசிடர் நின்றிருந்ததே... தான், புறப்பட்டதும் அதுவும் புறப்பட்டதே... ஒருவேளை அதுதான் இதுவா?

வியர்த்தது.

அன்னிபெசன்ட் சாலைக்குள் ஃபியட்டை திருப்பினார். கொஞ்ச தூரம் போயிருப்பார்.

சரியாக அப்போதுதான் அந்த விபரீதம் நடந்தது.

அதுவரை பின் தொடர்ந்து வந்த அம்பாசிடர் சட்டென்று அவரை முந்தியது.

ஆனால் -

கடக்கவில்லை. மாறாக அவரது ஃபியட்டை தாண்டி குறுக்கே நின்றது.

முஷீர் அலாம், எப்போதும் தன் கால்களை பிரேக்கிலேயே வைத்திருப்பார். அந்த குணம்தான் அவரை காப்பாற்றியது.

சடர்ன் பிரேக் போட்டு வண்டியை நிறுத்தியவர், "அறிவில்ல... இப்படியா காரை ஓட்டுவாங்க..." என சத்தம் போட்டபடி இறங் கினார்.

அது மட்டும்தான் அவருக்கு தெரியும். அதன் பிறகு நடந்தது அவரது கற்பனைக்கும் அப்பாற்பட்டது.

அம்பாசிடர் காரில் இருந்து மூவர் இறங்கினார்கள். பிஸ்டல், கத்தி... என ஆயுதங்களுக்கு குறைவில்லை.

என்ன ஏது என்று சுதாரிப்பதற்குள் ஒருவன் அவர் வாயை பொத்தி கழுத்தில் கத்தியை வைத்தான். மற்ற இருவரும் அவரது நெஞ்சை குறி பார்த்தார்கள்.

கண்களில் அச்சம் பரவ மிரள மிரள விழித்தார். அதை பயன் படுத்திக் கொண்டு குண்டுக்கட்டாக அவரை தூக்கி அம்பாசிட ருக்குள் போட்டார்கள்.

ஆஃப் செய்யாமல் ஆக்சிலேட்டரை அழுத்திக்கொண்டிருந்த டிரைவர், உடனே கியரை மாற்றினான்.

வண்டி பறந்தது. பின் சீட்டில் இருந்த அவரது கண்களை கட்டி

னார்கள். அப்போதுதான், தான் கடத்தப்படுகிறோம் என்பதே அவருக்கு புரிந்தது.

அதிகபட்சம் ஒரே நிமிடம்தான். அதற்குள் பம்பாய் வரலாற்றிலேயே மிகப்பெரிய ஆள் கடத்தலாக அமைந்த அந்த சம்பவம் நடந்து முடிந்துவிட்டது.

எங்கு செல்கிறோம் என்று பார்த்தார்.

கட்டப்பட்ட துணிகளைத் தாண்டி பிரம்மாண்டமாக தீட்டப்பட்டிருந்த வண்ண ஓவியம் ஒன்று தெரிந்தது.

'ஷோலே' படத்தின் பேனர்...

"வெளில பார்க்கறான் பாரு..." டிரைவருக்கு அருகில் அமர்ந்திருந்தவன் கத்தினான்.

உடனே அவருக்கு இருபக்கமும் அமர்ந்திருந்தவர்கள் துரிதமாக செயல்பட்டார்கள். அவர் தலையை அழுத்தி சீட்டுக்கு அடியில் தள்ளினார்கள்.

இந்தி சினிமாவின் புகழ்பெற்ற தயாரிப்பாளர் இரு அடியாட்களின் காலடியில் அமர்ந்திருக்கிறார்...

இப்படியொரு காட்சி அவர் தயாரித்த படங்களில் மட்டுமல்ல... எந்த திரைப்படத்திலுமே இதற்கு முன் இடம்பெற்றதில்லை.

எம்ஜிஆர் நடித்த 'குடியிருந்த கோயிலை' அவர் பார்த்தாரா என்று தெரியாது. ஆனால், அந்தப் படத்தின் ஒரிஜினலான ஷம்மி கபூர் நடித்த 'சைனா டவுன்' இந்திப் படத்தை பார்த்திருக்கிறார். ரசித்திருக்கிறார்.

அந்த நேரத்தில் அந்தப் படத்தின் காட்சிகள் அவரது நினைவுக்கு வந்தன.

கால்களை குறுக்கி சீட்டுக்கு கீழே அமர்ந்தவர், தன் செவிகளை திறந்தார். சத்தங்கள் வழியாக செல்லும் திசையை கணிக்க முடியுமா என்று ஆராய்ந்தார்.

மனதில் பதிய வைக்கும் அளவுக்கு எந்த துப்பும் கிடைக்கவில்லை.

நொடிகள் கரைந்து நிமிடங்களாகி அதுவும் நேரத்தை நோக்கி நகர்ந்தபோது -

அவர்கள் சென்ற கார் நின்றது.

இறங்கினார்கள். அவரையும் இறக்கினார்கள்.

கையை பிடித்து அழைத்துச் சென்றார்கள்.

"காலை தூக்கி வை..." காதருகில் எவனோ கிசுகிசுத்தான்.

எச்சரிக்கையுடன் அதன்படியே செய்தார். மரச்சட்டகத்தில் அவர் கால் பதிந்து அதிர்ந்தது.

பத்தடி நடந்தார்கள்.

"படிக்கெட்டு வருது..."

புரிந்துக் கொண்டதற்கு அறிகுறியாக தன் பாதங்களை உயர்த்தினார்.

சிமென்ட் அல்லது இரும்பு. இரண்டினாலும் உருவான படிக்கட்டுகள் அல்ல அவை. மாறாக மரத்தினாலானவை. குறித்துக் கொண்டார்.

படிக்கட்டு வளைந்து வளைந்து சென்றது. மெல்ல மெல்ல சிறுவர்கள் புனித நூலின் வாசகங்களை உச்சரிப்பது செவியை நிரப்பியது.

“நேரா நட...”

படிக்கட்டு முடிந்துவிட்டதா அல்லது ஏதோ ஒரு தளமா?

சொன்னபடி நடந்தார்.

“வலப்பக்கம் திரும்பு...”

திரும்பினார்.

“உள்ள போ...”

போனார்.

இழுத்து அமர வைத்தார்கள். இரும்பு நாற்காலி. கண்ணில் கட்டியிருந்த துணியை யாரோ அவிழ்த்தார்கள்.

முதலில் கூசியது. கொஞ்சம் கொஞ்சமாக சகஜநிலைக்கு வந்ததும் சுற்றிலும் பார்த்தார்.

அவரை கடத்தி வந்த மூவரைத் தவிர வேறு இருவர் இருந்தார்கள். பார்த்ததுமே அவர்கள் பதான்ஸ் என்பது புரிந்தது.

தலைவன் போல் காணப்பட்டவன் அவரை உற்றுப் பார்த்தான்.

நெளிந்தார்.

“நீ கடத்தப்பட்டிருக்க...”

பதில் சொல்லாமல் தலையை குனிந்தார்.

“நீ தயாரிச்ச ‘ஷக்தி’ நல்லா போகுதுன்னு கேள்விப்பட்டோம்...” என்றபடி சில காகிதங்களை எடுத்துப் போட்டான். “படத்தோட கலெக்‌ஷன் ரிப்போர்ட்...”

மேலோட்டமாக பார்த்தார். அவரது அலுவலகத்தில் இருந்த அதே ரிப்போர்ட்டின் நகல்.

“அதிகம் வேண்டாம்... வெறும் இருபத்தஞ்சு லட்ச ரூபா போதும்...”

“எதுக்கு?”

“உன்னை விடுவிக்க...” என்றபடி தொலைபேசியை அவர் அருகில் தள்ளினான். “உன் பாட்னர் மொஹமத் ரியாஸுக்கு போன் பண்ணு. உடனடியா எவ்வளவு புரட்ட முடியுமோ அதை ரெடி பண்ண சொல்லு. மிச்சத்தை அப்புறம் கொடு...”

எச்சிலை மென்று விழுங்கினார். எங்கு இருக்கிறோம் என்று தெரியவில்லை. தப்பிக்கவும் வழியில்லை. சொன்னதை செய்தால்தான் உயிர் தப்ப முடியும்.

மொஹமத் ரியாஸை தொடர்புகொண்டு விஷயத்தை சொன்னார். அன்றிரவுக்குள் ரூபாய் இரண்டு லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் திரட்டப்பட்டது.

எந்த இடத்துக்கு பணத்துடன் வரவேண்டும் என்று தலைவன் சொன்னான். அதை தன் கூட்டாளிக்கு தெரியப் படுத்தினார்.

பணம் கைமாறியது.

''மூணு நாளைக்குள்ள மீதிப்பணம் வந்தாகணும்... இல்லைனா இப்ப உன்னை கடத்தின மாதிரி திரும்ப தூக்கிடுவோம். ஜாக்கிரதை...'' என்றபடி அவரை விடுவித்தான்.

சோர்வுடன் தன் வீட்டுக்கு திரும்பிய முஷீர் அலாம், அதிர்ந்தார்.

காரணம், அவரது வருகைக்காகவே அங்கு ஒருவர் காத்திருந்தார்.

அவர், நடிகர் திலீப்குமார்.

75

முஷீர் அலாமை பார்த்ததுமே பாய்ந்து சென்று கட்டியணைத்தார் திலீப் குமார்.

"ஆர் யூ ஆல்ரைட்?"

"ம்..." புன்னகைக்க முயன்ற முஷீர் அலாம், அது முடியாமல் போகவே தலைகுனிந்து உதட்டைக் கடித்தார்.

"முதல்ல குளிச்சுட்டு வா..."

அவரை அனுப்பிவிட்டு சமையல்காரரை அழைத்தார்.

"லைட்டா எதையாவது செய். ஆனா, சூடா இருக்கட்டும்..."

அழுதுகொண்டிருந்த திருமதி முஷீரின் அருகில் சென்றார்.

"கவலைப்படாதீங்க பாபி... நான் இருக்கேன்..."

தொலைபேசியில் யாரிடமோ பேசினார்.

மொஹமத் ரியாஸை அழைத்து காதில் கிசுகிசுத்தார்.

அதற்குள் முஷீர் அலாமும் குளித்துவிட்டு வந்தார்.

"உட்காரு..."

டைனிங் டேபிளில் அவரை அமரவைத்து தன் கையால் உணவை பரிமாறினார். பொதுப்படையாக பேசியபடியே கம்பெனி கொடுத்தவர், அவர் கையை கழுவியதும் எழுந்தார்.

"பாபி, ஒரு மணி நேரத்துல நாங்க வந்துடறோம். ரிலாக்ஸ். ஒரு பிரச்னையும் இல்ல. சரியா? மொஹமத், காரை எடு. முஷீர் வா..."

"எங்க?"

"சொல்றேன்..."

ஏற்கனவே திலீப் குமார் வழியை சொல்லியிருக்க வேண்டும். முடிந்தவரை காரை வேகமாக செலுத்தினார் மொஹமத் ரியாஸ்.

கமிஷனர் அலுவலகத்தில் வண்டி நின்றது.

காத்திருந்த காவலர்கள் மூவரையும் அன்று பம்பாய் போலீஸ் கமிஷனராக இருந்த *Julio Riberio*வின் அறைக்கு அழைத்துச் சென்றார்கள்.

கமிஷனரை கண்டதுமே அதுவரை கட்டிக்காத்த அமைதியை திலீப் குமார் பறக்கவிட்டார்.

"இதுதான் நீங்க மக்களை பாதுகாக்கிற லட்சணமா? பப்ளிக்கா இவரை கடத்தியிருக்காங்க..."

முஷீர் அலாமை முன்னால் நகர்த்தினார்.

"புகழ்பெற்ற தயாரிப்பாளர். வரியை ஒழுங்கா கட்டறவர். இவருக்குன்னு ஒரு மதிப்பும் மரியாதையும் இருக்கு. அமைச்சர்களுக்கு நெருக்கமானவர். அப்படிப்பட்டவருக்கே இந்த நிலமைன்னா எந்த பின்புலமும் இல்லாத சாதாரண மக்களை பத்தி நினைச்சுப் பார்க்கவே பயமா இருக்கு..."

பட்டாசாக பொரிந்து தள்ளினார். கமிஷனர் குறுக்கிடவில்லை. கோபம் அடங்கட்டும் என காத்திருந்தார்.



*புயல் ஓய்ந்தது.*

*மறுநொடியே ஸின்தேவை (Zende) கமிஷனர் அழைத்தார்.*

*அதே ஸின்தேதான். சர்வதேச சீரியல் கில்லரான சார்லஸ் சோப்ராஜை பொறிவைத்து கோவாவில் பிடித்தாரே... அவரேதான்.*

*அவரிடம் என்ன நடந்தது என்பதை முஷீர் அலாம் விளக்கினார்.*

*பொறுமையாக கேட்ட ஸின்தே, "வாங்க..." என க்ரைம் பிரான்சுக்கு மூவரையும் அழைத்து சென்றார்.*

*இவர்களது வருகைக்காகவே அங்கு சப் இன்ஸ்பெக்டர் பகவான் காத்திருந்தார்.*

*1974ம் ஆண்டு Batchஐ சேர்ந்த இவர், அப்போதுதான் க்ரைம் பிரான்சுக்கு மாற்றலாகி வந்திருந்தார். வந்ததுமே பெட்ரோல் பங்கில், சபீர் படுகொலை செய்யப்பட்டான். காவல்துறையின் மானம் கப்பல் ஏறியது. அந்த ஈரம் காய்வதற்குள் முஷீர் அலாம் கடத்தல் சம்பவம் நிகழ்ந்துவிட்டது. அதுவும் பட்டப்பகலில், மக்கள் நடமாட்டம் நிறைந்த வோர்லி பகுதியில்.*

*மக்கள் காறி துப்புவது நன்றாகவே தெரிந்தது. இதை துடைக்க வேண்டுமானால், கடத்தல்காரர்களை உடனே பிடித்தாக வேண்டும். அப்போதுதான் இழந்த பெருமையை மீட்க வேண்டும்.*

*எனவே முஷீர் அலாமை அமரவைத்து இன்ச் பை இன்ச் ஆக*

என்ன நடந்தது என்று சொல்லச் சொன்னார்.

அதை தன் கைப்படவே டைரியில் குறிப்பெடுத்தார்.

கண்கள் கட்டப்பட்டது.

'ஷோலே' படத்தின் பேனர்.

அங்கிருந்து பத்து அல்லது பன்னிரண்டு நிமிட பயணம்.

மர ப்ளாட்ஃபார்ம்.

பின்னர் மர படிக்கட்டு.

சிறுவர்கள் புனிதநூலின் வாசகங்களை உச்சரிப்பது.

அறை.

எழுதியதை மீண்டும் மீண்டும் படித்தார். மனதுக்குள் எழுந்த பிம்பங்களையும் முடிவுகளையும் அடுத்த பக்கத்தில் எழுதினார்.

'ஷோலே' படத்தின் பேனர் என்றால்... அது தியேட்டராக இருக்க வேண்டும்.

மரத்தாலான ப்ளாட்ஃபார்ம், மரப் படிக்கட்டு என்றால்... பல குடும்பங்கள் ஒரே கட்டிடத்தில் வசிக்கும் 'ஸ்டோர்'.

சிறுவர்கள் புனிதநூலின் வாசகங்களை உச்சரிக்கிறார்கள் என்றால்... மதராஸா.

சட்டென்று தெளிவு கிடைத்தது.

தற்சமயம் பம்பாயில் 'ஷோலே' எந்தெந்த திரையரங்குகளில் எல்லாம் ஓடுகிறது... அந்தந்த தியேட்டரில் இருந்து 10 அல்லது 12 நிமிட பயணத்தில் எங்கெல்லாம் 'ஸ்டோர்' இருக்கிறது... அங்கு மதராஸா இயங்குகிறதா...

என்பதையெல்லாம் கணக்கிட சொன்னார்.

இதை தன் கீழ் பணிபுரியும் காவலர்களிடம் மட்டும் பகவான் சொல்லவில்லை என்பதுதான் முக்கியம். போலீஸ் இன்ஃபார்மர்களாக இருப்பவர்களிடமும் இதே கட்டளையை பிறப்பித்தார்.

பதில் வருவதற்காக அவர் காத்திருந்தபோது -

மேஜையில் இருந்த தொலைபேசி ஒலித்தது.

மிக நெருங்கியவர்கள் மட்டுமே அறிந்த ப்ரைவேட் நம்பர். அது ஒலிக்கிறது என்றால், 'இடம் தெரிந்துவிட்டது' என்று அர்த்தம்.

மகிழ்ச்சியுடன் ரிசீவரை எடுத்தார்.

"ஹலோ..."

"வணக்கம் பகவான் ஸாப்..." ஹஸ்கி வாய்ஸில் ஒரு குரல் கிசுகிசுத்தது.

சட்டென்று நிமிர்ந்தார். அவருக்குதெரிந்த இன்ஃபார்மர்தான். பக்ருதீன். உள்வட்டத்தை சேர்ந்தவன்.

"சொல்லு. இத்தனை நாளா எங்கிருந்த? ஏன் தொடர்பு கொள்ளலை?"

“வேலை இருந்தது ஸாப்...”

“சரி. என்ன விஷயம்?”

“கேஸை ஓபன் பண்ணலாம் ஸாப்...”

சிரித்தார். ‘கேஸை ஓபன் செய்யலாம்’ என்பது காவல்துறை அதிகாரிகளுக்கும், இன்ஃபார்மர்களுக்கும் இடையில் இருக்கும் ரகசிய வார்த்தை. துப்பு கிடைத்துவிட்டது என்பதே இதற்கு அர்த்தம்.

அப்படியானால், முஷீர் அலாமை கடத்தியவர்கள் யார், அவர்கள் எங்கிருக்கிறார்கள் என்பது பக்ருதீனுக்கு தெரிந்துவிட்டதா?

‘ஆம்’ என்பது போலவே பதில் சொன்னான்.

‘ம்...’, ‘ம்...’ என்றபடியே விவரங்களை தாளில் குறித்துக் கொண்டார்.

இறுதியாக கடத்தல் கும்பலின் தலைவன் பெயரை பக்ருதீன் அழுத்தமாக உச்சரித்தான்.

ஒரு நொடி எழுதுவதை பகவான் நிறுத்தினார். ‘அவனாகத்தான் இருக்கும்...’ என உள்மனம் சொன்னது. சுதாரித்துக்கொண்டு தன் பணியை தொடர்ந்தார்.

“வைச்சுடறேன் ஸாப்...”

“நீ சொன்னதெல்லாம் உண்மைதானே?”

“சத்தியமா ஸாப்...”

“இடம் கரெக்டா?”

“நூறு சதவிகிதம் அது காதர் பில்டிங்தான்...”

“சரி. அப்புறமா என்னை வந்து பாரு...” தொடர்பை துண்டித்து விட்டு எழுந்தவர், தன் ஜீப்பை நோக்கிப் பாய்ந்தார்.

போலீஸ் வேன் சூழ, அவரது ஜீப் பறந்தது.

தியேட்டரும் வந்தது. வாசலில் ‘ஷோலே’ பேனரும் பிரமாண்டமாக மின்னியது.

கண்களில் கட்டப்பட்ட துணிகளை மீறி முஷீர் அலாம் பார்த்தது இந்த வண்ண ஓவியமாகத்தான் இருக்க வேண்டும். பக்ருதீன் கொடுத்த முகவரி, சரிதான்.

பரபரப்பை அடக்கியபடி ஜீப்பை காமாத்திபுராவுக்குள் செலுத்தினார்.

வாடிக்கையாளர்களுக்காக சாலையில் நின்றிருந்த பாலியல் தொழிலாளர்களும், ‘மாமா’க்களும் அலட்சியமாக இந்த வாகன வரிசையை பார்த்தார்கள்.

எந்த வகையிலும் இது அவர்களை சலனப்படுத்தவில்லை. எச்சரிக்கை செய்யவுமில்லை.

மாமூல் வாங்கவும், ஓசியில் இன்பம் அனுபவிக்கவும் அடிக்கடி வருபவர்கள்தானே... என உதட்டை சுழித்தார்கள்.

ஆனால் –

இரண்டு ஜீப், ஒரு வேன் என்பது அவர்களுக்கு வியப்பை

அளிக்கவே செய்தது. எரிச்சலையும்தான்.

ஒரே நேரத்தில் இவ்வளவு பேரா..? இருக்கும் பெண்கள் எப்படித்தான் சமாளிக்கப் போகிறார்களோ..?

சரியாக காதர் பில்டிங் முன்னால் தன் ஜீப்பை நிறுத்தினார்.

மர ப்ளாட்ஃபார்ம் அவரை வரவேற்றது.

குதித்தார்.

கண் முன்னால் ஓராள் ஏறும் அளவுக்கு மரப் படிக்கட்டு இருந்தது.

இதுதான்... இதுவேதான்... சுதாரிப்பதற்குள் கும்பலை பிடித்து விட வேண்டும்...

இரண்டு இரண்டு படிக்கட்டுகளாக தாவினார்.

புனித நூலின் வாசகங்களை சிறுவர்கள் உச்சரிப்பது தெளிவாக கேட்டது.

நன்றி பக்ருதீன்.

கோவணம் போல் நீண்டிருந்த தளத்தில் ஓடியவர், குறிப்பிட்ட அறையின் முன்னால் நின்றார்.

கதவு மூடியிருந்தது.

துப்பாக்கியை கையில் ஏந்தியபடி மூச்சை இழுத்துப் பிடித்தவர் – தன் கால்களால் கதவை எட்டி உதைத்தார்.

கதவுக்கு வலப்புறம் சுவரோடு ஒதுங்கினார்.

தோட்டாக்கள் எதுவும் பாயவில்லை.

ஒன்று... இரண்டு... மூன்று... என மனதுக்குள் எண்ணினார்.

எதுவும் நடக்கவில்லை. நொடிகள்தான் கரைந்தன.

ஓ.கே. உடனடி பிரச்னை எதுவும் இல்லை

குறி பார்க்க வசதியாக துப்பாக்கியை நீட்டியபடி காவலர்கள் பின்தொடர நுழைந்தார்.

முஷீர் அலாம் விவரித்தபடியே அந்த அறை இருந்தது.

ஆனால் –

காலியாக இருந்தது.

பதுங்கியிருக்கலாம்.

கண்களை கூர்மையாக்கி சலித்தார்.

ஓரமாக ஓர் இளைஞன் ஒடுங்கியபடி அமர்ந்திருந்தான்.

அவன் தலைமுடியை கொத்தாக பிடித்தார்.

“எங்கடா மத்தவங்க எல்லாம்..?”

“தெ...ரி...யா...து...”

பளீரென்று கன்னத்தில் அறைந்தார்.

இடியாக இறங்கியது.

கண்களில் பூச்சி பறக்க அவன் கத்தினான்.

“சொல்லிடறேன்...”

# 76

“ஓ... அடிச்சாதான் உண்மையை சொல்லு வியா? அப்ப சரி... இவனை வண்டில ஏத்துங்க...” இன்ஸ்பெக்டர் பகவானின் கட்டளைக்கா கவே காத்திருந்தது போல் காவலர்கள் செயல் பட்டார்கள்.

அந்த இளைஞனை அலேக்காக தூக்கினார் கள்.

“நடந்தே வரேன்...” முணுமுணுத்தான்.

“அட, கொழந்த பிரஸ்டீஜ் பார்க்குது... அடிங்க... தூக்கிட்டுப் போனா மானம் கப்பல் ஏறிடுமா? இழுத்துட்டு வாங்க...”

தலைமுடியை கொத்தாக பிடித்து தரதரவென இழுத்துக் கொண்டு கீழே இறங்கினார்கள்.

முதலில் காதர் பில்டிங்கை சேர்ந்தவர்களும், பிறகு காமாத்திபுரா ஆட்களும் கைகட்டி வேடிக்கை பார்த்தார்கள்.

அவமானத்தால் அந்த இளைஞன் கூனிக் குறுகினான். உண் மையை சொல்வதாக கத்திய பின்னும் தன்னை ஏன் இப்படி கொடுமைப்படுத்துகிறார்கள் என்று தெரியாமல் குழம்பினான்.

போலீஸ் கஸ்டடியை நினைத்து ஏன் அடியாட்கள் அஞ்சு கிறார்கள் என்று தெளிவாக புரிந்தது. நான்கு பேர் அறிய அடிக்க வேண்டும். தான், அடி வாங்குவதைப் பார்த்து மற்றவர்கள் மிரள வேண்டும். இதுதான் காவலர்களின் இயல்பு.

ம்... இப்படி என்று தெரிந்திருந்தால், “சொல்லிடறேன்...” என கையை உயர்த்தாமலாவது இருந்திருக்கலாம் அதன் மூலம் கொஞ்ச மாவது கெத்தை காட்டியிருக்கலாம். காலம் கடந்த ஞானோதயம். இனி யோசித்துப் பயனில்லை...

பிடரியில் இடி இறங்கியது. பகவான்தான். ஏதோ பம்பாயில் நடக்கும் அத்தனை பிரச்னைகளுக்கும், தான்தான் காரணம் என் பது போல் தன் மீது இவ்வளவு வெறுப்பை உமிழ்கிறாரே... இவரை எல்லாம் யார் இன்ஸ்பெக்டராக தேர்ந்தெடுத்தார்கள்?

“ஏறுடா...”

வேனில் தூக்கிப்போட்டார்கள்.

இரண்டு ஜீப்பும், ஒரு வேனும் வந்த வழியே திரும்பியது.

வழியெங்கும் நினைத்து நினைத்து அடித்தார்கள். உதைத்தார் கள். உதடு கிழிந்து ரத்தம் வந்தது.

மவுனமாகவும், வாய்விட்டும் கதறினான்.

நிமிடங்கள் யுகங்களாக கரைந்த பின்,க்ரைம் பிரான்ச் அலுவலக வாசலில் வண்டிகள் நின்றன.

அவனால் நிற்கவோ, நடக்கவோ முடியவில்லை.

அதைப் பார்த்து காவலர்கள் பரிதாபப்படவும் இல்லை.

தரதரவென இழுத்துக்கொண்டு உள்ளே சென்றார்கள்.



விசாரணை அறைக்குள் தூக்கிப்போட்டார்கள்.

பொத்தென்று விழுந்தவனால் எழுந்திருக்க முடியவில்லை.

சுருண்டான்.

"தண்ணி கொடுங்க..."

அவன் அருகில் நாற்காலியில் அமர்ந்தபடி பகவான் குரல் கொடுத்தார்.

வலுக்கட்டாயமாக நீரை புகட்டினார்கள்.

ரத்தத்துடன் அதை விழுங்கினான். முழுங்க வைத்தார்கள்.

"உன் பேரென்ன?"

"ச...லீ...ம்..."

"நான் உண்மையான பேரை கேட்டேன்..."

"சானி...யா... பங்கி..."

"அப்புறம் ஏன்டா சலீம்னு பொய் சொன்ன?"

கண் முன்னால் பூச்சிகள் பறந்தன. ஒன்றரை டன் வெயிட்டாக அறைந்திருக்கிறார் என்பதே பிறகுதான் புரிந்தது.

"இப்ப என் பேரு சலீம்தான்... மதம் மாறிட்டேன்..."

"அட்றா சக்கை... என்ன லவ்வா?"

அந்த வேதனையிலும் அவன் கண்கள் பளிச்சிட்டன. ஆமோதிக்கும் வகையில் தலையசைத்தான்.

"எதுக்காக தயாரிப்பாளர் முஷீர் அலாமை கடத்தினீங்க?"

"ப...ண...த்து...க்காக..."

"இதோடா... நாங்க ஏதோ சமாதான உடன்படிக்கைக்காகன்னு நினைச்சோமே... அப்படியில்லையா?"

மீண்டும் நக்கல். மீண்டும் அறை. மீண்டும் கண்களில் பூச்சி பறத்தல்.

"எப்படி கடத்துனீங்க?"

"தெரி...யாது..."

"ஏய்..."

அமர்ந்திருந்த நாற்காலியை எட்டி உதைத்துவிட்டு பகவான் கோபத்துடன் எழுந்தார்.

"சத்தி...யமா... தெரியாது... நான் புதுசு. அதனால என்னை எங்கயும் கூட்டிட்டு போகமாட்டாங்க..."

"அப்ப அந்த ரூம்லயேதான் இருந்தியா?"

"ஆ...மா..."

"அங்கதான் முஷீர் அலாமை கண்ணை கட்டி கூட்டிட்டு வந்தாங்களா?"

"ம்..."

"சரி... மத்தவங்க எல்லாம் எங்க?"

விழித்தான். மிரண்டான்.

"இப்ப சொல்லப்போறியா இல்லையா?"

"நி...ஜ...மா... தெரியா...து..."

லத்தியில் எண்ணெய்யை தடவிக்கொண்டிருந்த காவலர் நிமிர்ந்து பகவானை பார்த்தார். அவர் கண் அசைத்ததும் பளப ளக்கும் லத்தியுடன் அவனை நெருங்கினார்.

இரு காவலர்கள் அவனை கைத்தாங்கலாக எழுப்பினார்கள்.

மூன்றாவது காவலர் அவனது கால்சராயை அவிழ்த்தார்.

லத்தியை ஆசனவாயில் செருகப் போகிறார்கள்...

"வேண்...டா...ம்..." அலறினான்.

"அப்ப உண்மையை சொல்லு..."

"சத்திய...மா... தெரி..யா..து..."

லத்தியுடன் அந்த காவலர் அவனை நெருங்கினார்.

"ஜன்க்ரஸ் கானுக்கு தெ...ரி...யு...ம்..."

பகவானின் கண்கள் பளிச்சிட்டன. சைகையால் சலீமை அழைத்துப் போகும்படி சொல்லிவிட்டு தன் பரிவாரங்களுடன் கிளம்பினார்.

அவரது ஊகம் தவறவில்லை. யார், எந்தக் குழு கடத்தியிருக்கும் என்று நினைத்தாரோ -

அவர்கள்தான் இந்த காரியத்தில் இறங்கியிருக்கிறார்கள்.

பதான்ஸ்.

தாவூத் இப்ராஹிம் மொத்தமாக அவர்களை பலவீனப்படுத்தியதும், ஆள் கடத்தலில் நுழைந்திருக்கிறார்கள்.

முளையிலேயே கிள்ளி எறிய வேண்டும்.

டன்கன் சாலையில் இருக்கும் அலி பில்டிங்குக்கு விரைந்தார். ஜன்க்ரஸ் கான் வசிப்பது அங்குதான்.

காவலர்கள் பில்டிங்கை சூழ்ந்துகொள்ள, அந்த வீட்டுக்குள் நிதானமாக நுழைந்தார்.

எதிர்பார்த்தது போல் ஜன்க்ரஸ்கான் படுத்த படுக்கையாக கிடந்தார். முதுமை அவரது உடலை கொஞ்சம் கொஞ்சமாக தின்றுகொண்டிருந்தது.

அவரை ஆராய்ந்தபடியே படுக்கையின் நுனியில் அமர்ந்தார் பகவான்.

உதட்டை சுழித்தபடி அந்த முதியவர் முகத்தை திருப்பிக் கொண் டார்.

“உன் பையன் எங்க?”

அவர் காதருகில் குனிந்து கேட்டார்.

ஜன்க்ரஸ் கான் மவுனமாக இருந்தார்.

“நீங்களா பதில் சொல்லிட்டா நல்லது...” குரலில் அழுத்தம் தெரிந்தது. “வீட்டை சுற்றி போலீஸ் நிக்கறாங்க... என்ன சொல்றீங்க?”

கண்களை இறுக்கமாக மூடினார்.

“காய்கறி வாங்க உங்க பொண்ணு மார்க்கெட் போயிருக்கா இல்லையா?”

சட்டென்று இமைகளை திறந்தார்.

“ம்... இதுதான் சரி... சொல்லுங்க. உங்க மகன் எங்க?”

பொய் சொல்ல முடியாது என்று ஜன்க்ரஸ்கானுக்கு புரிந்தது. “கலுபுராவுல இருக்கான்...”

“அகமதாபாத்துலயா?”

“ஆ...மா...”

“அங்க எங்க?”

“தெரியாது...”

பகவானின் கண்கள் சுருங்கின.

“நிஜமாவே தெரியாது...” ஜன்க்ரஸ்கான் திணறினார். “எம் பொண்ணை எதுவும் செய்துடாதீங்க...”

“சரி எங்க இருப்பான்னு உத்தேசமா தெரியுமா?”

“ம்... சூதாட்டம் எங்க நடக்குதோ அங்க இருப்பான்...”

“கார் நம்பர்?”

“GUJ - 7999...”

கட்டிலில் இருந்து எழுந்த பகவான், இரு காவலர்களை அழைத்தார். “நான் சொல்ற வரைக்கும் இங்கயே இருங்க...”

அலி பில்டிங்கை விட்டு வெளியேவந்தவர், ஸிந்தேவை தொடர்பு கொண்டு விஷயத்தை சொன்னார்.

அதன் பிறகு ஸிந்தே தாமதிக்கவில்லை.

தனது டீமுடன் அகமதாபாத்துக்கு விரைந்தார். கலுபுராவுக்குள் நுழைந்ததும் அங்கு எத்தனை ஹோட்டல்கள் இருக்கின்றன என்று கணக்கிட்டார். அதில் எங்கெல்லாம் சூதாட்டம் நடக்கிறது என்று பட்டியலிட்டார்.

சரியான விடை கிடைக்கவில்லை. ஏனெனில், காவல்துறைக்கு தெரியாமல்தான் ஒவ்வொரு விடுதியும் சூதாட்டத்தை நடத்தியது. என்றாலும் சோர்வடைய தேவையில்லை. எப்படியும் பிடித்துவிட லாம். என்ன... அதற்குள் விஷயம் தெரிந்தது. முஷீர் அலாமை கடத்தியவர்கள் தப்பிக்காமல் இருக்க வேண்டும். நல்லவேளையாக கார் நம்பர் இருக்கிறது.

இரு குழுவாக காவலர்களை பிரித்தார். கார் எண்ணை அனைவ ரிடமும் கொடுத்தார்.

கலுபுராவை சல்லடையிட்டார்கள்.

புதையல் கிடைத்தது.

வெள்ளை அம்பாசிடர். GUJ – 7999.

ஒரு ஓரமாக நின்றிருந்தது.

அவ்வளவுதான். ஸிந்தே தாமதிக்கவில்லை. அதற்குள் பிரிந்து சென்ற இன்னொரு காவலர் குழுவும் வந்துவிட்டது.

கோழியை அமுக்குவது போல் அந்த அம்பாசிடரை சுற்றி வளைத்தார்கள்.

துப்பாக்கி முனையில் அதில் இருந்தவர்களை பிடித்தார்கள்.

அம்பாசிடர் காரில் .12 bore வகையை சேர்ந்த மூன்று ரைபிள் களும், .38, .32, .22 என மூன்று பிரிவாக இருந்த சீனா மற்றும் ஜெர்மனியில் தயாரான பதினான்கு ரிவால்வர்களும், முந்நூறு தோட்டாக்களும் இருந்தன.

அவற்றை மொத்தமாக கைப்பற்றினார்கள்.

கூடவே தலைவனையும்.

அவன், வேறு யாருமல்ல அமிர்ஸாதாதான்.

யெஸ், தயாரிப்பாளர் முஷீர் அலாமை கடத்தி பணம் பறித்த கும்பலின் தலைவன் அமிர்ஸாதாதான்.

இப்படித்தான் அவன் கைது செய்யப்பட்டான். காவலர்களால் சிறையில் அடைக்கப்பட்டான்.

இதன் பிறகு அவனை போட்டுத்தள்ள தாவூத் இப்ரா ஹிம் முயன்றதும், இதற்காகவே டைப்ரைட்டர் திருடனான ராஜன் நாயரை ஒப்பந்தம் செய்ததும்,நீதிமன்ற வளாகத்திலேயே அமிர்ஸாதா சுட்டுக் கொல்லப்பட்டதும், இதனையடுத்து ராஜன் நாயரும், தாவூத்தும் கைது செய்யப்பட்டதும், அமிர்ஸாதாவின் கொலைக்கு பழிவாங்க அதே நீதிமன்ற வளாகத்திலேயே ராஜன் நாயரை சுட்டுக் கொல்ல பதான்ஸ் ஏற்பாடு செய்ததும் –

முந்தைய அத்தியாயங்களில் விலாவாரியாக பார்த்துவிட்டோம்.

ஆனால் -

முக்கியமான இன்னொரு விஷயத்தை இந்த இடத்தில் பார்க்க வேண்டியிருக்கிறது.

அதுதான், சபீரின் மரணத்துக்கு ஸ்கெட்ச் போட்டுக் கொடுத்த மனோகர் சூர்வ் என்கிற மன்யா சூர்வின் மரணம்.

எந்த ஜேம்ஸ் ஹாட்லி சேஸ் எழுதிய நாவல்களை படித்துப் படித்து ஸ்கெட்ச் போட்டுக் கொடுப்பதில் கில்லாடியாக மாறினானோ -

அதே ஜேம்ஸ் ஹாட்லி சேஸின் நாவல்களில் வருவது போலவேதான் இவனது மரணமும் நிகழ்ந்தது என்பதுதான் சோகம்.

வரலாறு என்றுமே சுவாரஸ்யமானதுதான்...

77

மனோகர் சூர்வ் என்கிற மன்யா சூர்வின் பூர்வீகம் தெரியவில்லை. போலவே பிறந்த வருடமும். கொஞ்சம் தம்பிடித்து தேடினால் ஒருவேளை கிடைக்கக்கூடும்.

ஆனால், ஒன்று.

நினைவு தெரிந்த நாள் முதலே நிழல் உலக வாழ்க்கைக்கு பழக்கப்பட்டிருந்தான்.

*காரணம், பார்கவ் சூர்வ். சொந்த அண்ணன். அனைவருக்கும் மூத்தவன். சாராயக் கடத்தலிலும், ஆல்கஹால் பிசினஸிலும் கை தேர்ந்தவன். வலுவானவன். லோக்கல் தாதா. அதனாலேயே இவன் பெயருக்கு பின்னால் இருந்த சூர்வ் மறைந்து பார்கவ் தாதா என பயத்துடன் அழைக்கப்பட்டான்.*

*அதுவே விபரீதத்திலும் முடிந்தது.*

*அது என்னவோ தெரியவில்லை 'தாதா' என்னும் அடைமொழி பார்கவ்வுக்கு ரொம்பவும் பிடித்துவிட்டது. அந்த 'செல்லப்' பெயரை தக்க வைத்துக் கொள்வதற்காகவே அதிகம் மெனக்கெட்டான். பஞ்சமா பாதகங்களையும் செய்தான்.*

*அதில் ஒன்று வியாபாரிகளை மிரட்டுவது.*

*மிரட்டுவது என்றால் சும்மா கர்ஜிப்பதில்லை. கடத்திச் சென்று ஹாக்கி ஸ்டிக்கால் நையப் புடைப்பது.*

*இதற்காகவே வியாபாரிகளை தேடித் தேடி சென்று அவர்களுக்கு பணம் தேவைப்பட்டபோது பெருந்தன்மையுடன் கொடுத்து உதவினான்.*

*சும்மா இல்லை. மீட்டர், ஃபயர் வட்டிக்கு.*

*குறிப்பிட்ட காலத்துக்குள் அவர்கள் அசலுடன் வட்டியை திருப்பாவிட்டால்...*

*இருக்கவே இருக்கிறது ஹாக்கி ஸ்டிக். அல்லக்கைகள் சம்பந்தப் பட்ட வியாபாரியை அலேக்காக தூக்கி வருவார்கள். தன் திருக்கையால் அவர்கள் உடலிலிருந்து ரத்தம் சொட்டும் வரை அடிப்பான்.*

*அப்படித்தான் 1969ம் ஆண்டு பிரபாதேவி பகுதியை சேர்ந்த ஒரு வியாபாரியை தூக்கிச் சென்றான். கை நீட்டி வாங்கிய ரூபாய் ஐம்பதாயிரத்தை வட்டியுடன் குறிப்பிட்ட காலத்துக்குள் திருப்பித் தரவில்லை என்பது இவன் தரப்பு நியாயம்.*

*வழக்கம் போல் மூங்கில் கழியும், ஹாக்கி ஸ்டிக்கும் உடையும் அளவுக்கு வெளுத்து வாங்கினான்.*

*அடி வாங்கியவர் பூஞ்சை உடம்புக்காரரர். பொட்டென்று போய்விட்டார்.*

*விவரம் அறிந்ததும் அப்பகுதி வியாபாரிகள் கொந்தளித்து விட்டார்கள். தாதர் - பிரபாதேவி பகுதியில் மூன்று நாட்கள் வெற்றிகரமாக கடையடைப்பு நடத்தி தங்கள் எதிர்ப்பை தெரி*



வித்தார்கள்.

அவ்வளவுதான். மொத்தமாக அந்த இரு பகுதிகளின் இயல்பு வாழ்க்கை பாதிக்கப்பட்டது. காவல்துறைக்கும் நெருக்கடி அதிக ரித்தது.

ஏதாவது செய்தே ஆகவேண்டும் என்ற கட்டாயத்தில் சுற்றி வளைத்து பிடித்து சிறையில் அடைத்தார்கள்.

ம்ஹூம். பார்கவ் சூர்வை - தப்புத் தப்பு. பார்கவ் தாதா - அல்ல.

பதிலாக மன்யா சூர்வை!

'பார்கவ்வின் தம்பி என்ற ஒரே காரணத்துக்காக என்னை கைது செய்வதா?' என மன்யா துள்ளினான்.

கேட்க காதுகள்தான் இல்லை.

ஆனால் -

உதடுகள் மட்டும் திரும்பத் திரும்ப உச்சரித்தன: 'தம்பி என்பதால் நீ என்ன நல்லவனா? அந்த வியாபாரியின் சாவுக்கு நீயும்தான் காரணம்... எங்களிடம் ஆதாரம் இருக்கிறது...'

'அது பொய்...'

என மன்யா கத்தக் கத்த... கதற... கதற... சட்டையே செய்யாமல் அவனை குண்டுக்கட்டாக தூக்கி எரவாடா மத்திய சிறைச்சாலையில் அடைத்தார்கள்.

இது போங்காட்டம். எனக்கு நீதி வேண்டும்...

என்று முஷ்டியை உயர்த்தி, தொடை தட்டி சிறையிலேயே உண்ணா விரதம் இருந்தான்.

ஈ, காக்காய் கூட கண்டுகொள்ளவில்லை.

உள்ளிருப்பு போராட்டத்தை மன்யாவும் நிறுத்தவில்லை.

இதனால் அவன் உடல்நிலை மோசமானது.

ஸ்ட்ரெச்சரில் தூக்கிக் கொண்டு சென்றார்கள். சசூன் மருத்துவமனையில் சேர்த்தார்கள். மூக்கு கண்ணாடி அணிந்த டாக்டர்கள் வந்தார்கள். டார்ச் அடித்தும், ஸ்டெதஸ்கோப்பை வைத்தும் அவனை பரிசோதித்தார்கள். மருந்து, மாத்திரை கொடுத்து அவனை காப்பாற்றினார்கள்.

மூன்று நாட்களுக்கு பின் அவன் உடல் தேறியது.

இதை அறிந்ததுபோல் பாஜிராவ் 'பாஜ்யா' படீலும், ஷேக் முனீரும் மருத்துவமனைக்கு வந்தார்கள்.

இருவருமே மன்யாவின் உயிர் நண்பர்கள். வலது - இடது கைகள்.

படுக்கையில் படுத்தபடியே அவர்கள் வரவுக்காக காத்திருந்தான்.

நெருங்கியதும் கண்ஜாடை காட்டினான்.

மூவரும் இமைக்கும் நேரத்தில் செயல்பட்டார்கள்.

படுக்கையை சுற்றி காவலுக்கு நின்றிருந்த காவலர்களின் கண்களில் மிளகாய்ப் பொடியை தூவிவிட்டு அவர்கள் சுதாரிப்பதற்குள் எஸ்கேப் ஆனார்கள்.

இந்த சம்பவத்துக்கு பிறகு, மன்யாவின் புகழ் மாஃபியாக்களின் மத்தியில் பரவியது.

காரணம், திட்டமிடல்.

ஏற்கனவே பார்கவ் தாதாவின் நடவடிக்கைகளால் சந்தேகப்பட்டவர்கள்தான். 'இப்படி புத்திசாலித்தனமாக இவன் எப்படி செயல்படுகிறான்... யார் இவனுக்கு ஆலோசனை வழங்குகிறார்...' என்றெல்லாம் குழம்பியவர்கள்தான்.

மருத்துவமனையில் இருந்து மன்யா சூர்வ் தப்பித்ததும் -

அனைவருக்கும் விடை கிடைத்தது.

புத்திசாலித்தனமான மூளை எங்கிருக்கிறது என்பது அனைவருக்கும் புரிந்தது.

எனவே தப்பித்த பிறகு தலைமறைவாக இருந்த மன்யாவை சந்திக்க விரும்புவதாக தூது அனுப்பினார்கள்.

அனைவருக்குமே அவரவர் 'தொழில்' சார்ந்து சில சந்தேகங்கள் இருந்தன. அவற்றை எப்படி நடத்துவது... எந்த திசையில் நகர்வது... இத்யாதி... இத்யாதி.

அனைத்துக்கும் 'கன்சல்டிங் ஃபீஸ்' வாங்கிக்கொண்டு மன்யா ஆலோசனை வழங்கினான். தேவையான சமயங்களில் 'க்ரைம் கவுன்சிலிங்கும்' செய்தான்.

இதற்கெல்லாம் உதவியாக இருந்தது, அவனது வாசிப்பு அனுபவம்தான்.

அந்த கால - அதாவது 1960களின் இறுதி - பி.ஏ. பட்டதாரி.

கீர்த்தி கல்லூரியில் பட்டம் படித்தபோதே ஆங்கில நாவல்களை தேடித்தேடி படிக்க ஆரம்பித்துவிட்டான்.

குறிப்பாக க்ரைம் த்ரில்லர்களை.

ஜேம்ஸ் ஹாட்லி சேஸுக்கே அவ்வப்போது, தான் எத்தனை நாவல்கள் எழுதியிருப்போம் என்ற சந்தேகம் ஒருவேளை எழுந் திருக்கக்கூடும்.

ஆனால் -

மன்யாவுக்கு ஒருபோதும் அந்த ஐயம் ஏற்பட்டதேயில்லை.

ஆழ்ந்த உறக்கத்தில் இருப்பவனை எழுப்பி கேட்டாலும், டாண் டாண் என்று பதிலளிப்பான். அந்தளவுக்கு அனைத்தும் அத்துப்படி.

இதனாலேயே பம்பாய் மாஃபியாக்கள் அவனை தேடி வந்தார் கள். யாராலும் கண்டுபிடிக்க முடியாத அளவுக்கு எப்படி கொலை செய்வது, பொருட்களை கடத்துவது என்று ஆலோசனை கேட்டார் கள். பெரும் தொகையையும் சன்மானமாக கொடுத்தார்கள்.

மெல்ல மெல்ல அவன் புகழ் பரவியது. அந்த நேரம் பார்த்துத் தான் விபரீத யோசனையும் தோன்றியது. எத்தனை நாட்களுக்குத் தான் சாணக்கியனாக இருப்பது? பேசாமல், தானே மன்னரானால் என்ன..?

விதை, செடியாகி மரமாகி விருட்சமானபோது -

தனிக் குழுவை தொடங்கினான்.

பத்து முதல் பன்னிரண்டு பேர் வரை அவனது gangல் சேர்ந்தார் கள். தனித்தனியாக ஒவ்வொருவரிடமும் இன்டர்வியூ நடத்தியதும், பரீட்சை வைத்து தேர்வு செய்ததும் அவன்தான்.

இந்த அடியாட்கள் இரு பிரிவாக பிரிக்கப்பட்டு பாஜிராவ் - ஷேக் முனீர் ஆகியோரிடம் ஒப்படைக்கப்பட்டார்கள்.

மன்யாவின் அணி, இப்படித்தான் இயங்கியது. அதற்காக தன் குழுவை முழுமையாக அவன் நம்பினான் என்று சொல்ல முடியாது. தன் நிழலையே சந்தேகிக்கும் அளவுக்கு மன்யா ஞானம் படைத்தவன்.

எனவே -

கண்காணிப்பை பலப்படுத்தினான். அடிக்கடி டெஸ்ட் வைத்தான். தோல்வி அடைபவர்களையும், சந்தேகப்படும்படி நடமாடுபவர்களையும் விசாரணை நடத்தாமல் தண்டித்தான்.

அதுவும் கடுமையாக.

மன்யா வழங்கும் தண்டனைகள் உறைய வைப்பவை.

ஒரே உதாரணம், பப்பி படீல் தண்டிக்கப்பட்ட விதம். உயிர் போகவில்லை. அதே நேரம் உயிர் வாழவும் முடியவில்லை. அந்தளவுக்கு உருக்குலைத்தான். இத்தனைக்கும் பப்பி படீல், யாரோ எவரோ அல்ல.

மன்யாவின் நண்பன். தவறு. சிநேகிதனாக இருந்தவன்!

78

அது 1979ம் ஆண்டின் மாலைப்பொழுது. மஹிம் பகுதியில் இருந்த உடற்பயிற்சி மையத்துக்குள் மன்யா நுழைந்தான். உடலை இறுக்கிப் பிடிக்கும் ஆடைகள். புஜங்கள் புடைத்து கொண்டிருந்தன. வயது முப்பதுக்குள்தான். அந்நாளில் இப்படியொரு உடல்வாகு அபூர்வம். எனவே ஜிம்மில் இருந்த அனைவரும் வைத்த கண் வாங்காமல் அவனை பார்த்தார்கள். தங்கள் கரங்களில் இருந்த கருவிகளை வைத்துவிட்டு அவன் செய்யவிருக்கும் உடற்பயிற்சிகளை காண முற்பட்டார்கள்.

மன்யா, யாரையும் சட்டை செய்யவில்லை. நிதானமாக மையப் பகுதிக்கு வந்தான். சின்னச் சின்ன பயிற்சிகள் மூலம் தன் கால்களையும், கைகளையும் அசைத்தான். warm up.

பிறகு தன்னைச் சுற்றிலும் பார்த்தான். வேடிக்கை பார்க்கும் ஒவ்வொருவரையும் அலசினான். அவர்களது கண்களுடன் உறவாடினான். ஓரிடத்தில் அவன் பார்வை நின்றது.

அங்கு பப்பி படீல் நின்றிருந்தான். மற்றவர்களை போலவே இவனும் மன்யா செய்யவிருக்கும் பயிற்சிகளுக்காகவும் அப்போது புஜங்கள் துடிக்கப் போவதையும் காணவே ஆவலாக இருந்தான். கண்கள் அப்படித்தான் உணர்த்தின.

பப்பியை பார்த்து புன்னகைத்த மன்யா நகர்ந்தான். முன்னால் போய் நின்றான். என்ன ஏது என்று பப்பி சுதாரிப்பதற்குள் தன் பேண்ட் பாக்கெட்டில் கைவிட்டு பிஸ்டலை எடுத்தான்.

டுமீல்.

சீறிய தோட்டா, பப்பியின் கேசத்தை தொட்டுவிட்டு சென்றது.

இதை எதிர்பார்க்காத பப்பியின் முகத்தில் அச்சத்தின் ரேகைகள் பூக்க ஆரம்பித்தன.

அதை ரசித்தபடியே பிஸ்டலைத் தாழ்த்தி மீண்டும் டிக்கரை அழுத்தினான்.

டுமீல்.

குண்டு பாய்ந்தது. பப்பியின் வலதுகால் மூட்டை துளைத்தது.

டுமீல்.

அடுத்த தோட்டா இடது கால் மூட்டை பெயர்த்தது.

அலறியபடியே கீழே விழுந்தான். ரத்தம் பெருக்கெடுத்து தரையை நிரப்பியது.

பிஸ்டலை பாக்கெட்டுக்குள் அடைத்த மன்யா, சில நொடிகள் பப்பி பட்டீலை ஆராய்ந்தான். இரு மூட்டுகளும் பெயர்க்கப் பட்டிருந்தன. இனி ஒருபோதும் பப்பியால் நடக்க முடியாது.

வலது உள்ளங்கையை நெற்றிக்கு கொண்டு சென்று சல்யூட் அடித்தான். வாசலை நோக்கி நடந்தான். வெளியேறினான்.



அதன் பிறகே வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த மற்றவர்கள் பப்பியின் அருகில் பாய்ந்து சென்றார்கள். மருத்துவமனைக்கு தகவல் சொன்னார்கள்.

இன்னொரு சோறு பதமும் இருக்கிறது. அந்த பருக்கையின் பெயர், அசோக் மஸ்கர். இவனும் மன்யாவின் நண்பனாக இருந்த வன்தான் என்பது யதேச்சையானது அல்ல.

தனது வலது - இடது கைகளான பாஜிராவ் மற்றும் ஷேக் முனீருடன் ஒருநாள் மஸ்கரின் வீட்டுக்குள் மன்யா நுழைந்தான்.

"என்ன விஷயம்... யாரை பார்க்க வந்தீங்க?" என்றபடி வெளியில் வந்த சிறுமியை அலேக்காக தூக்கினார்கள். "அப்பா..." என்று அலறிய அவள் வாயை பொத்தினார்கள்.

சத்தம் கேட்டு ஹாலுக்கு வந்த மஸ்கரை பார்த்து மன்யா சிரித்தான். "சவுக்கியமா?"

பதில் சொல்ல முடியாமல் மஸ்கர் எச்சிலை விழுங்கினான்.

தன் தோளில் இருந்த சிறுமியை பாஜிராவ் கீழே இறக்கினான்.

அவளை தன் பக்கம் இழுத்துக்கொண்ட ஷேக் முனீர், அவள் கழுத்தில் கத்தியை வைத்தான்.

"ஏய்... ஏய்... என்ன இது..?" என தடுக்க முற்பட்ட மஸ்கரை பளீரென்று மன்யா அறைந்தான்.

"கத்தக்கூடாது. சத்தம் வெளில வந்தா உன் பொண்ணு செத்துடுவா..."

*அடிக்குரலில் கர்ஜித்தவன், எந்த வகையில் எல்லாம் மஸ்கரை அடிக்க முடியுமா... அப்படியெல்லாம் அடித்தான். உதைத்தான். தரையில் தள்ளினான். அப்பா அடிவாங்குவதை அந்த சிறுமி பயத்துடன் பார்த்துக்கொண்டிருந்தாள்.*

*உதடும், காதுகளும் கிழிந்து... சதைகள் தொங்கி... குருதி கசிந்து... கிட்டத்தட்ட மயக்க நிலைக்கு மஸ்கர் சென்றபோதுதான் –*

*மன்யா அடிப்பதை நிறுத்தினான். மூச்சு விடவும் சிரமப்பட்டவனின் முகத்தை தன் வலது காலால் திருப்பினான்.*

*இமைகளை அரைவாசி பிரித்த மஸ்கர், பரிதாபத்துடன் தன் முன்னாள் நண்பனை பார்த்தான்.*

*பேண்ட் பாக்கெட்டுக்குள் கைவிட்ட மன்யா, சின்ன கண்ணாடி குடுவையை கையில் எடுத்தான். அழுத்தத்துடன் மூடியிருந்த மூடியை புஜங்கள் துடிக்க பிரித்தான்.*

*சரியாக மஸ்கரின் முகத்தை பார்த்து அந்த குடுவைக்குள் இருந்த திரவத்தை கொட்டினான்.*

*“அம்மா...” என அலறலுடன் தன் முகத்தை பொத்தியபடி மஸ்கர் துடித்தான். மன்யா தன் முகத்தில் ஆசிட்டை வீசியிருக்கிறான் என்று புரியவே மஸ்கருக்கு சில விநாடிகள் ஆனது.*

*கதறுபவனை ரசித்துவிட்டு தன் வலது உள்ளங்கையை நெற்றிக்கு கொண்டு சென்று சல்யூட் அடித்தான். வாசலை நோக்கி நடந்தான். வெளியேறினான்.*

*பாஜிராவும், ஷேக் முனீரும் அவனை பின்தொடர்ந்தார்கள்.*

*இதுதான் மன்யா. சிறையிலிருந்து தப்பித்து வந்த பிறகு அவன் செய்த முதல் இரு காரியங்களே இதுதான்.*

*எதற்காக பப்பி படீலையும் அசோக் மஸ்கரையும் தண்டித்தான்?*

*இன்றுவரை யாருக்கும் விடை கிடைக்கவில்லை.*

*ஆனால் –*

*போலீசாரால் கைது செய்யப்படுவதற்கு முன் ஏதோ கோரிக்கையை இவர்கள் முன் வைத்ததாகவும், என்ன காரணத்தாலோ இவர்கள் அதை மறுத்துவிட்டதாகவும் சொல்கிறார்கள்.*

*நிஜம் எதுவாக இருந்தாலும் ‘இல்லை... முடியாது...’ என யார் சொன்னாலும் அவர்களை மன்யா ஈவிரக்கமின்றி தண்டித்தான் என்பது மட்டும் உண்மை.*

*இத்தனைக்கும் அவனால் இரு முட்டிகளும் பெயர்க்கப்பட்ட பப்பி படீலின் வீட்டுக்கு அடிக்கடி சென்றிருக்கிறான். பப்பியுடன் தோள் உரசியபடி அமர்ந்து அவர்கள் வீட்டிலேயே பலநாட்கள் சாப்பிட்டிருக்கிறான்.*

*நண்பர்கள் என்றில்லை. தன் வழியில் யார் குறுக்கிட்டாலும் அவர்களை கதற வைத்துவிட்டுத்தான் மறுவேலை பார்ப்பான். அப்படித்தான் தாதர் காவல்நிலைய இன்ஸ்பெக்டரின் உறக்கத்தை*

பறித்தான். அவனை கைது செய்தது அவர் தலைமையிலான போலீஸ் அணிதான்.

எனவே தப்பித்து வந்ததும் அவர் வீட்டுக்கு சென்றான். வேலை விஷயமாக அவர் எங்கோ வெளியில் சென்றிருந்தார். அவர் வீட்டில் இருந்த ஒவ்வொருவரிடமும் சென்று, ''இன்ஸ் பெக்டர் சாவு என் கையாலதான்...'' என்று சொல்லிவிட்டு வந்தான். மட்டுமல்ல, இன்ஸ்பெக்டருக்கும் போன் செய்து, "உன் சாவு என் கையாலதான்..." என எச்சரித்தான்.

இப்படி ஒரு நாள் இருநாள் அல்ல... பல மாதங்கள் செய் தான். இன்ஸ்பெக்டர் வீட்டில் இல்லாதபோது செல்வது... உறவினர்களிடம் தனித்தனியாக தன் முடிவை சொல்வது... காவல் நிலையத்துக்கு போன் செய்து எச்சரிப்பது...

விளைவு? அந்த இன்ஸ்பெக்டரின் வீட்டில் இருந்த அனைவரும் கிட்டத்தட்ட மனநிலை பாதிக்கும் அளவுக்கு சென்றார்கள்.

இன்ஸ்பெக்டரின் நிலை குறித்து சொல்லவே வேண்டாம். எதை பார்த்தாலும் பயந்து அலற ஆரம்பித்து... தற்கொலை செய்து கொள்ளும் அளவுக்கு நிலைகுலைந்தார்.

தண்டிப்பதிலும், மிரட்டுவதிலும் இப்படி புதிது புதிதாக பல வழிமுறைகளை கையாண்ட மன்யா, வங்கிக் கொள்ளையிலும் தினுசு தினுசாக செயல்பட்டான்.

பிரபாதேவி பகுதியில் இருந்த தேனா வங்கி கிளைக்கு ஒரு முறை சென்றவன், ரூபாய் இரண்டு லட்சத்துடன் அங்கு வந்த ஒரு பிசினஸ்மேனை அசால்ட்டாக சுட்டுவிட்டு பணத்தை பறித்தான். போலவே ஒருமுறை அம்பாசிடர் காரில் முக்கிய புள்ளி ஒருவர் ரூபாய் ஏழு லட்சத்தை கொண்டு செல்கிறார் என் பதை அறிந்து அதை லாவகமாக கைப்பற்றினான்.

இதற்கெல்லாம் அவனுக்கு உதவியது அவன் படித்த ஆங்கில க்ரைம் நாவல்கள்தான். குறிப்பாக ஜேம்ஸ் ஹாட்லி சேஸ் எழுதிய புதினங்கள்.

இதனால் பம்பாய் காவல்துறையின் உறக்கம் கெட்டது. நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாக அவனை பற்றிய புகார்கள் வர ஆரம்பித்தன. குவியத் தொடங்கின.

பிடித்தே ஆக வேண்டும் என போலீசார் ரூம் போட்டு யோசித்த போதுதான் -

அமிர்ஸாதா தலைமையிலான பதான்ஸ் அவனை சந்திக்க வந்தார்கள்.

தாவூத் இப்ராஹிமையும், சபீரையும் போட்டுத் தள்ள ப்ளான் கேட்டார்கள்.

அப்போது மன்யா சொன்ன பதில்தான் பின்னாளில் அவனுக்கே எமனாக மாறியது...

79

காரணம், மற்றவர்களிடம் மன்யா ஏற்படுத்தியிருந்த பிம்பம்தான். அதனால்தான் அமிர் ஸாதா உள்ளிட்ட பதான்ஸ் அவனை தேடி வந்து சந்தித்தார்கள்.

'நாம் என்னவாக இருக்கிறோம் என்பது முக்கியமல்ல... என்ன அதிர்வை மற்றவர்களிடம் ஏற்படுத்தியிருக்கிறோம் என்பதுதான் முக்கியம்...' என்பார்கள்.

இதை யார், எப்போது சொன்னார்கள் என்று தெரியாது. ஆனால், சொல்லப்பட்ட கருத்து காலம் கடந்தும் நிற்கிறது. இதுவே மன்யாவை தேடி பதான்ஸ் வர காரணமாகவும் அமைந்தது.

அந்தளவுக்கு தன்னை குறித்து மற்றவர்களிடம் பயத்தை ஏற்படுத்தியிருந்தான். அவன் தண்டிக்கும் முறையும், கொள்ளை அடிக்கும் புத்திசாலித்தனமும் அவனை குறித்த மாபெரும் பிம்பத்தை பம்பாய் முழுக்க ஏற்படுத்தியிருந்தன.

எனவேதான் அவனை தேடி வந்தார்கள். தங்கள் கோரிக்கையை முன்வைத்தார்கள்.

இந்த விஷயத்தில் அமிர்ஸாதா கில்லாடி. எதிராளியை கன்வின்ஸ் செய்வதில் கெட்டிக்காரன். அந்த வித்தையை மொத்தமாக மன்யாவிடம் இறக்கினான்.

"இங்க பாரு... என்னதான் நீ புத்திசாலியா இருந்தாலும் தாவூத் இப்ராஹிமுக்கு அடுத்த நிலைலதான் இருக்க. இந்த இரண்டாம் இடம் உனக்குத் தேவையா? பேசாம போட்டுத் தள்ளிடுவோம். அதுக்கு பிறகு உன்னை அடிச்சுக்க ஆளில்லை. என்ன சொல்ற?"

கேட்டதுடன் நிற்காமல் பெரும் தொகை ஒன்றை தருவதாகவும் வாக்களித்தான்.

மன்யா, தன் வாழ்க்கையில் கேள்விப்படாத பணம் அது. முக்கி முக்கி சம்பாதித்தாலும் அந்த தொகையை எட்ட வருடங்களாகும். அது சிங்கிள் பேமண்டில் கிடைக்கும் போது வேண்டாம் என்று மறுக்க அவனுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

ஒப்புக்கொண்டான். கூடவே தன் திட்டத்தையும் விவரித்தான்.

"தாவூத்தையும், சபீரையும் ஒண்ணா போட்டுத் தள்ளறதை விட முதல்ல அவங்க இரண்டு பேரையும் பிரிச்சுடலாம். அதுக்கு அப்புறம் ஒவ்வொருத்தரையா கொலை செய்யலாம். இப்படி செஞ்சாதான் உயிரோடு இருக்கறவன் இழப்பை அனுபவிப்பான். கை உடைந்த மாதிரி அலறுவான்..."

இந்த ப்ளானுக்கும் அவன் வாசித்த ஜேம்ஸ் ஹாட்லி சேஸின் க்ரைம் நாவல்கள்தான் உதவின!

பதான்ஸ்களுக்கு இது பிடித்திருந்தது. வழிமொழிந்தார்கள்.

அதன்பிறகு மன்யா தாமதிக்கவில்லை. மடமடவென்று



காரியத்தில் இறங்கினான். சபீரின் நடமாட்டத்தை கண் காணித்தான். பாலியல் தொழிலாளியான சித்ராவை பகடைக் காயாக பயன்படுத்தினான். பெட்ரோல் பங்கில் சரமாரியாக சபீரை சுட்டுக் கொன்றான்.

இந்த அசைன்மென்ட் முடிந்ததுமே தலைமறைவானான். எப்படியும் தகவல் அறிந்ததும் தாவூத் எரிமலையாவான் என எதிர்பார்த்தான்.

அதுதான் நடந்தது.

பதான்ஸ்களுக்கும் தனக்கும் ஜென்மப் பகை. எனவே அவர்கள் சபீரை கொன்றதில் ஓரளவு நியாயம் இருக்கிறது.

ஆனால் -

மன்யாவுக்கும் தனக்கும் பிரச்னை ஏதுமில்லையே... சொல்லப் போனால் அவன் விஷயத்தில் தலையிடாமல்தானே இருக்கிறோம்..? அப்படியிருக்க எதற்காக அவன் ஸ்கெட்ச் போட்டு கொடுத்தான்?

இந்த கேள்விகள்தான் தாவூத்தை சுற்றிச் சுற்றி வந்தன. எனவே மன்யாவுக்கு பாடம் கற்பிக்க முடிவு செய்தான். எங்கு அவன் தலைம றைவாக இருக்கிறான் என சல்லடையிட்டு சலிக்க ஆரம்பித்தான்.

ஏமாற்றமே கிடைத்தது.

ஏறக்குறைய பம்பாய் போலீசாரும் இதே நிலையில்தான் இருந்தார்கள். அதுவரை நிகழாத அளவுக்கு ஒரு மாஃபியா படுகொலை நிகழ்ந்திருக்கிறது. (மா)நகர மக்கள் அதிர்ந்து போயிருக்கிறார்கள். காவல்துறை மீது அவர்களுக்கு நம்பிக்கை

ஏற்பட வேண்டுமென்றால் உடனே சம்பந்தப்பட்டவர்களை பிடித்து சட்டத்தின் முன்பு நிறுத்தியாக வேண்டும்.

எனவே தீயாக வேலை செய்தார்கள். சூத்திரதாரி மன்யாதான் என்பது புரிந்தது. ஆனால், எங்கிருக்கிறான்... எப்படி அவனை சுற்றி வளைப்பது?

தெரியவில்லை. சின்னதாக துப்பும் கிடைக்கவில்லை. அதற்காக சோர்ந்துவிட முடியாதே?

மன்யாவை பிடிப்பதற்காக அன்றைய பம்பாய் கமிஷனரான *Julio Ribeiro*, சிறப்புக்குழு ஒன்றை 1981ல் அமைத்தார். சீனியர் இன்ஸ்பெக்டரான ஐசக் சாம்சன்; இன்ஸ்பெக்டர் யஷ்வந்த் பிடே; சப் இன்ஸ்பெக்டர்களான ராஜா தம்பட், சஞ்சய் பரண்டே, பகவான் உள்ளிட்டவர்கள் அதில் இடம்பெற்றார்கள்.

மன்யா இருந்த - புழங்கிய இடங்கள், முன்னாள் நண்பர்கள் என ஒருவர் பாக்கியில்லாமல் சந்தித்தார்கள். அவ்வளவு ஏன் அவனால் தண்டிக்கப்பட்ட பப்பி படீல், அசோக் மஸ்கர் ஆகியோரையும் தொடர்புகொண்டார்கள்.

மட்டுமல்ல, சிறையில் அவன் இருந்தபோது யார் யாரெல்லாம் நண்பர்களாக இருந்தார்கள் என்பதையும் பட்டியலிட்டார்கள். அவர்களை சந்தித்து மன்யாவின் நடமாட்டம் குறித்து கேட்டார் கள். விவரம் சொன்னால் அவர்களை ஜாமீனில் தாங்களே எடுப்ப தாகவும் உறுதியளித்தார்கள்.

இப்படி பல இடங்களில் விதைகளை தூவியதாலோ என்னவோ -

ஓரிடத்தில் செடி முளைத்தது.

அந்த செடி, காதலி என அடையாளம் காணப்பட்டதுதான் ஹைலைட்.

அது என்னவோ தெரியவில்லை. மாஃபியாக்களின் வரலாற் றில், எதிரிகளாலும் காவல்துறையினராலும் வேட்டையாடப் படும் தாதாக்கள் அனைவருமே தத்தம் காதலியை சந்திக்க வரும் போதுதான் சிக்குகிறார்கள். அழிகிறார்கள்.

மன்யாவும் இதற்கு விதிவிலக்கல்ல.

தன் குடியிருப்புப் பகுதியில் வசித்த ஒரு பெண்ணை சின்சி யராக காதலித்தான். கணவனை இழந்த அவள், தன் தாய்-தந்தையுடன் வசித்து வந்தாள்.

அவளைத்தான் ஜனவரி 11, 1982 அன்று வடாலாவில் உள்ள அம்பேத்கர் கல்லூரி வாசலில் அவன் சந்திக்கப்போவதாகவும், அவளை அழைத்துக்கொண்டு இன்றைய நவி மும்பை பகுதிக்கு செல்லப் போவதாகவும் துப்பு கிடைத்தது.

நம்பத் தகுந்த ஸோர்ஸ் மூலம் வந்த தகவல் என்பதால், காவல் துறை களத்தில் இறங்கியது.

இரு பிரிவாக போலீசார் பிரிந்தார்கள்.

ஒருவேளை அம்பேத்கர் கல்லூரி வாசலில் இருந்து தப்பித்து நவி மும்பைக்கு சென்றுவிட்டால்? எனவே நவி மும்பையில் உள்ள 17வது செக்டாரில் ஒரு குழுவினர் பதுங்கினார்கள்.

மறு தரப்பினர் அம்பேத்கர் கல்லூரி வாசலில் முகாமிட்டார்கள். ராஜா தம்பட், சஞ்சய் பரண்டே, பகவான் உள்ளிட்டவர்கள் அன்று 20களின் மத்தியில் இருந்ததால், கல்லூரி மாணவர்கள் போல் ஜீன்ஸ் டீ ஷர்ட்டில் காட்சியளித்தார்கள். ஐசக் சாம்சனுக்கும், யஷ்வந்த் பிடெவுக்கும் பேராசிரியர் வேடம் கச்சிதமாக பொருந்தியது.

அனைவருமே தங்கள் கைகளில் புத்தகங்களை வைத்திருந்தார்கள். புத்தகத்தினுள் துப்பாக்கி மறைத்து வைக்கப்பட்டிருந்தது.

சரியாக காலை 10.30 மணிக்கு ஒரு பெண் வந்து பஸ் ஸ்டாப்பில் நின்றாள். அவள்தான் 'மன்யாவின் காதலி' என ஒரு இன்ஃபார்மர் ஜாடை காட்டினான்.

போலீசார் உஷாரானார்கள். காத்திருந்தார்கள்.

சரியாக 10.45க்கு ஒரு டாக்ஸி வந்து பஸ் ஸ்டாப் அருகில் நின்றது.

அதிலிருந்து மன்யா இறங்கினான். விசிலடித்தபடி தன் காதலியை நோக்கி நடந்தான்.

இதற்காகவே காத்திருந்த போலீசார், புத்தகத்தினுள் மறைத்து வைக்கப்பட்டிருந்த துப்பாக்கியை எடுத்தார்கள். அவனை சூழ்ந்து கொண்டார்கள்.

விபரீதத்தை உணர்ந்து அவன் தப்பிக்க முயற்சித்தபோது -

டிக்கரை அழுத்தினார்கள்.

டுமீல்... டுமீல்... டுமீல்...

மன்யாவின் உடலை தோட்டாக்கள் துளைத்தன. அப்படியே ரத்த வெள்ளத்தில் சரிந்தான். சம்பவ இடத்திலேயே இறந்தான்.

பம்பாய் என்கிற மும்பையின் முதல் என்கவுன்ட்டர் இப்படித்தான் நடந்தது. வரலாற்றிலும் பதிவானது.

ஆனால் -

இந்த சம்பவம் தொடர்பான கேள்வி ஒன்று இன்றுவரை சுற்றிச் சுற்றி வருகிறது. இப்போதுவரை அதற்கு விடை கிடைக்கவேயில்லை.

தலைமறைவாக இருந்தபோது எந்நேரமும் கையெறி குண்டுகளையும், ஆசிட் பாட்டிலையும் சுமந்தபடி மன்யா திரிந்தான்.

அப்படிப்பட்டவன் போலீசிடம் சிக்கக் காரணம், ஒரு பெண்.

அந்தப் பெண் யார்?

ஒரு தரப்பினர், அவள் தாவூத்தின் கையாள். மன்யாவை பழி வாங்க இப்படியொரு காதல் ஸ்கிரிப்ட்டை தாவூத்தான் எழுதினான். பெண்ணை காட்டி மன்யாவை மயக்கினான். தானே நேரடியாக களத்தில் இறங்கினால் பிரச்னையாகிவிடும் என்பதால், தனக்கு தெரிந்த இன்ஃபார்மர் மூலம் போலீசுக்கு தகவல் கொடுத்து இந்த என்கவுன்ட்டரை அரங்கேற்றினான் என்று சொல்கிறார்கள்.

*மறு தரப்பினரோ, இல்லை இல்லை... இது போலீசாரின் திட்டமிடல்தான் என சாதிக்கிறார்கள்.*

*எது உண்மை என்று தெரியாது.*

*ஆனால் -*

*போலீசாரால் மன்யா சுட்டுக் கொல்லப்பட்டதும், அதுவே பம்பாய் என்கிற மும்பையின் அதிகாரப்பூர்வமான முதல் என்கவுன்ட்டர் ஆனதும், மன்யாவின் காதலி யார் என்ற உண்மை கசியாமல் இருப்பதும் -*

*வரலாறு.*

*இந்த சம்பவத்தை அடிப்படையாகக் கொண்டுதான் 2013ம் ஆண்டு ‘Shootout at Wadala’ இந்திப் படம் எடுக்கப்பட்டது என்பது உபரித் தகவல்!*

80

வெறித்தபடி 'Inquilab' உருது நாளிதழில் வெளியாகியிருந்த அந்த பெட்டிச் செய்தியை மீண்டும் ஒருமுறை படித்தான் அப்துல் சமத் அப்துல் ரஹீம் கான். சுருக்கமாக சமத் கான்.

நூறாவது முறையாக இருக்குமா?

இருக்கும். அதிகாலையில் அவன் வீட்டு முன்னால் எப்போது அந்த நாளிதழ் வீசப் பட்டதோ... எப்போது அதை கேஷுவலாக புரட்டி தலைப்புச் செய்திகளை பார்வையிட ஆரம்பித்தானோ... எப்போது குறிப் பிட்ட அந்த பெட்டிச் செய்தியில் அவன் கண்கள் நிலைகுத்தி நின்றதோ... எப்போது கண்கள் விரிய ஒவ்வொரு சொல்லாக அதை படித்தானோ...

அப்போது முதல் அதையேதான் வாசித்துக்கொண்டிருக்கிறான்.

'சமத் கானுக்கும் எனக்கும் எந்தவித தொடர்பும் இல்லை. யாரேனும் அவனை தொடர்புகொண்டாலோ அல்லது அவன் வழியாக எந்த செயலையாவது முடிக்க நினைத் தாலோ, அது அவரவர் தனிப்பட்ட விருப்பம் சார்ந்த விஷ யமே தவிர எனக்கும் அதற்கும் குண்டூசி முனையளவு கூட சம்பந்தமில்லை என்பதை அனைவரும் உணர வேண்டும். குறிப் பாக ஒப்பந்தம் எதையாவது போடுவதற்கு முன் இதை நினைவில் கொள்ள வேண்டும். மீண்டும் அழுத்தமாக குறிப்பிடுகிறேன். சமத் கான் வேறு... நான் வேறு. எங்கள் இருவரையும் இணைத்து இனி யார் பேசினாலும் அவர்கள் சட்ட ரீதியாக பதில் சொல்லியாக வேண்டும்.

இப்படிக்கு,

கரீம்கான் என்கிற கரீம்லாலா'

சமத் கானுக்கு பற்றிகொண்டு வந்தது. நாளிதழை வீசி எறிந்தான்.

எங்காவது ஒரு மாமனே தன் மருமகனை இப்படி அவமானப் படுத்துவானா... காட்டிக் கொடுப்பானா... இந்த பதான்ஸ்களே இப்படித்தான். மரபு, மண்ணாங்கட்டி, அது இது என்று இன்னமும் பழமையை பிடித்து தொங்கிக்கொண்டிருக்கிறார்கள். எப்போதுதான் அல்ட்ரா மார்டன் ஆக காலத்துக்கு தகுந்தபடி மாறப் போகிறார்களோ...

பற்களை கடித்தான்.

அவனுக்கு தன் இனத்தை பிடிக்காது. பழமையை சுமந்தபடி திரியும் அவர்களது குணத்தை மனதின் அடி ஆழத்திலிருந்து வெறுத் தான். அதனாலேயே சக பதான்ஸ்களிடமிருந்து தள்ளியிருந்தான்.

சொல்லப்போனால் நண்பர்கள், நெருங்கிய வட்டம், உள்வட்டம் என்றெல்லாம் அவனுக்கு கிடையாது. தாமரை இலை போலவே தண்ணீரில் ஒட்டாமல் திரிந்தான்.



அடிப்படையில் அவன் மூர்க்கன். கோபக்காரன். விலங்குக்கும் அவனுக்கும் எந்த வேறுபாடும் இல்லை. பெண் தொடர்பு அதிகம். விருப்பத்துடன் அவனை தேடி வந்தவர்களுக்கு சமமாக பயத்துடன் அவன் இச்சைக்கு அடிபணிந்தவர்களும் இருந்தார்கள்.

எப்படி இருந்தாலும் அவர்களுடன் உறவுகொள்ளும்போது வன்முறையையே கடைப்பிடிப்பான். காதலுடன் இதுவரை எந்த பெண்ணையும் அவன் அணுகியதில்லை. தொட்டதில்லை. இரண்டறக் கலந்ததில்லை. படுக்கை என்பது அவனை பொறுத்த வரை வன்புணர்வுக்கான இடம். பெண்கள் எந்தளவுக்கு அலறுகிறார்களோ அந்தளவுக்கு அவன் உச்சம் அடைவான்.

ஏறக்குறைய சமத்கானுடைய இந்த கேரக்டர் ஸ்கெட்சை அடியொற்றித்தான் ‘சத்யா’ இந்திப் படத்தை ராம்கோபால் வர்மா எடுத்தார். அதில் ‘பிக்கு’ என்னும் மனோஜ் பாஜ்பாயின் எபிசோ

டுக்கும் - குறிப்பாக தன் மனைவியுடன் அவன் கலவி செய்யும் கட்டங்களுக்கும் - சமத்கானே இன்ஸ்பிரேஷன்.

இதை தனது 'ஆய்த எழுத்து' படத்தில் மாதவன் - மீரா ஜாஸ்மின் எபிசோடுக்கு மணிரத்னமும் பயன்படுத்தியிருப்பார். அதனாலேயே டைட்டில் கார்டில் ராம்கோபால் வர்மாவுக்கு கிரெடிட் கொடுத்திருப்பார்.

இவ்விரு இயக்குநர்களும் அந்த கேரக்டர் ஸ்கெட்சை நேர் முறையில் ரொமான்டிக்காக பயன்படுத்தியிருப்பார்கள்.

ஆனால் -

இதற்கு வித்திட்ட சமத்கானோ, உண்மையில் எதிர்மறையாகத்தான் இருந்தான். வாழ்ந்தான். அதனாலேயே பம்பாய் மாஃபியாக்களும், தாதாக்களும், லோக்கல் ரவுடிகளும் அவனிடமிருந்து தள்ளியே நின்றார்கள். விலகியே வாழ்ந்தார்கள். என்ன ஆச்சர்யம் என்றால், 'தங்கள் ஆள்' என சொந்தம் கொண்டாடி வளைய வருவதையே தங்கள் கடமையாகக்கொண்ட பதான்ஸ் கூட சமத்கானிடமிருந்து தள்ளி நின்றதுதான்.

காரணம் சாடிசம்.

பெண்களை எப்படி கதறவைத்து கதறவைத்து இன்பம் கண்டானோ -

அப்படித்தான் தன் எதிரிகளையும் துடிக்கத் துடிக்க பழிவாங்கினான்.

அதற்கு ஒரே உதாரணம் ஜெயினை அவன் கொன்ற விதம்.

கரீம் லாலாதான் அந்த அசைன்மென்ட்டை அவனிடம் கொடுத்தார். 'சுபாரி' விருந்தையும் தடபுடலாக நடத்தினார். ஒருவகையில் இதுதான் சமத்கானின் முதல் 'சுபாரி'.

எனவே இதில் தன் திறமையை நிரூபித்து பம்பாயை நடுங்க வைக்க வேண்டும் என்று நினைத்தான். அதற்கேற்பவே திட்டமிட்டான்.

தொழிலதிபரான ஜெயின் குறிப்பிட்ட அந்த ஹோட்டலுக்கு வந்திருக்கிறார் என்று தெரிந்ததும் நேராக ரிசப்ஷனிஸ்ட்டிடம் சென்றான்.

"எந்த ரூம்ல ஜெயின் தங்கியிருக்காரு..?"

பதில் சொல்ல ரிசப்ஷனிஸ்ட் தயங்கினான். வாடிக்கையாளர்கள் தங்கும் அறையை வெளி மனிதர்களுக்கு தெரியப்படுத்தக்கூடாது என்பது நடைமுறைச் சட்டம்.

எனவே, "சாரி சார்... நாங்க அதை சொல்லக்கூடாது..." என்று மறுப்பதற்காக வாயை திறந்தான். சொற்களுக்கு பதில் காற்றுத்தான் வந்தது. காரணம், சிறுத்தையின் கண்களை போல் ஜொலித்த சமத்கானின் கருவிழிகள். பதில் சொல்லாவிட்டால் தன் உயிர் போய் விடும் என்பதை அந்த ரிசப்ஷனிஸ்ட் உணர்ந்தான்.

தன்னையும் அறியாமல் -

*“1921...”*

*“நன்றி...”*

*நகர்ந்த சமத் கான், நேராக அந்த அறைக்கு செல்லவில்லை. மாறாக ஹோட்டலை விட்டு வெளியேறினான்.*

*பாரம் இறங்கியது போல் உணர்ந்த ரிசப்ஷனிஸ்ட், தன் வேலைகளில் மூழ்கினான். சமத்கான் வந்து விசாரித்ததையே மறந்து விட்டான்.*

*அன்றிரவு சரியாக 12 மணிக்கு இரு அடியாட்களுடன் அதே ஹோட்டலுக்குள் நுழைந்தான். இலக்கு தெளிவாக இருந்ததால் நடையிலும் கண்களிலும் தடுமாற்றமில்லை. எனவே ஹோட்டல் ஊழியர்களும் அவர்களை தடுக்கவில்லை. வாடிக்கையாளர்கள் போல என விட்டுவிட்டார்கள்.*

*நிதானமாக 19வது மாடியை அடைந்தவன், அங்கிருந்த 21ம் அறைக்கு முன் நின்றான்.*

*உடன் வந்தவர்கள் பெல் அடித்தார்கள்.*

*திறக்கவில்லை.*

*தட்டினார்கள்.*

*திறந்துகொண்டது.*

*“என்ன வேணும்?” தூக்க கலக்கத்துடன் ஒரு நடுத்தர மனிதர் கேட்டார்.*

*“ஜெயின்?”*

*“நான்தான்...”*

*அடுத்த நொடி, அந்த மனிதர் தரையில் விழுந்தார்.*

*ஒருவன் அவர் வாயை பொத்தினான். அடுத்தவன் அவர் தலை முடியை கொத்தாக பிடித்து தூக்கினான். தன் காலால் அறைக் கதவை மூடிய சமத்கான், அவரை சில கணங்கள் உற்றுப் பார்த்தான்.*

*“துணியை கழட்டிடுங்க...” அடிக்குரலில் கட்டளையிட்டான்.*

*திமிறத் திமிற அவரது உடைகளை அடியாட்கள் கழற்றினார்கள்.*

*முழு நிர்வாணத்துடன் கூனிக் குறுகி ஜெயின் நின்றார். வாய் பொத்தப்பட்டிருந்ததால் கத்த முடியவில்லை.*

*“வாய்ல துணியை அடைச்சு கை காலை கட்டுங்க...”*

*நிறைவேற்றினார்கள்.*

*தரையில் உருண்ட ஜெயினை தன் பங்குங்கு எட்டி உதைத்த சமத்கான், எரிந்துக் கொண்டிருந்த சின்ன பல்பையும் அணைத்தான்.*

*அறையை இருள் சூழ்ந்தது. என்ன நடக்கப் போகிறதோ என்ற பயத்தில் ஜெயினுக்கு வியர்த்தது.*

*ஷ்...*

*தீக்குச்சி எரிந்தது.*

*அதனை தொடர்ந்து புத்தம் புதிய ஒரு மெழுகுவர்த்தி சுடர் விட்டது.*

அதை கையில் ஏந்தியபடி குரூர புன்னகையுடன் அவரை நோக்கி சமத்கான் ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்தான்.

கண்கள் பிதுங்கி வெளியேறும் அளவுக்கு விரித்தவர், அவனையே பார்த்தார்.

அவர் முன்னால் குனிந்தான்.

அவர் கன்னத்தை கிள்ளி முத்தமிட்டான்.

உருக ஆரம்பித்த மெழுகை சொட்டுச் சொட்டாக... ஒவ்வொரு துளியாக சிதறாமல் அவர் ஆணுறுப்பின் நுனியில் விட்டான்.

கதற முற்பட்டார். முடியவில்லை. துள்ள முயன்றார். அசைய வழியில்லை. எலும்பை ஊடுருவிய வலி, அவரது உயிர்க்குலையை நிதானமாக அறுக்க ஆரம்பித்தது.

பின்னர் அவரது இமைகளை தன் கரங்களால் பிரித்தான். கண்களுக்குள் உருகிய மெழுகை சொட்டுச் சொட்டாக...

துடிதுடித்து அவர் இறக்க இரண்டுமணி நேரமானது.

திருப்தியுடன் சமத்கான் தன் ஆட்களுடன் அறையைவிட்டு வெளியே வந்தான்.

இறங்க ஆரம்பித்தபோது -

ஒரு மனிதர் படியேறிக்கொண்டிருந்தார்.

சமத்கான் அசையாமல் நின்றான்.

காரணம், அப்படி வந்து கொண்டிருந்தவர்தான் அவன் கொல்ல வேண்டிய உண்மையான ஜெயின்!

அப்படியானால் சற்று முன் அவன் கொன்ற நபர்?

அவர் வேறொரு ஜெயின்.

பெயர் குழப்பத்தால் வந்த வினை.

உதட்டை கடித்தவன் நொடிக்கும் குறைவான நேரம் யோசித்தான். தன் பாணியில் சித்திரவதை செய்து இவரை கொல்ல நேரமில்லை. அதற்காக மறுநாள் பார்த்துக்கொள்ளலாம் என தள்ளிப் போட முடியாது. ஆள் உஷாராகி எஸ்கேப் ஆக வாய்ப்பிருக்கிறது.

சட்டென்று தன் பாக்கெட்டில் இருந்து ரிவால்வரை எடுத்தான்.

டப். டப். டப்.

மூன்று குண்டுகள் உண்மையான ஜெயினின் உயிரை பறித்தது.

மாமாவின் கட்டளையை நிறைவேற்றிய உணர்வுடனும், காரியத்தை கச்சிதமாக முடித்துவிட்ட மகிழ்ச்சியிலும் வெளியேறினான்.

அவன் செய்த இந்த இருகொலைகள்தான் -

'இனி தனக்கும் தன் மருமகனுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை...' என கரீம் லாலா அறிவிக்கவும் -

இந்தியாவை விட்டே முதலும் கடைசியுமாக தாவூத் இப்ராஹிம் வெளியேறவும் -

காரணமாக இருக்கப்போகிறது என்பதை அப்போது அவன் அறியவில்லை!

# 81

விசாரணைக்காக பம்பாய் காவல்துறை தன்னை அழைத்தபோது கரீம்லாலாவுக்கு ஒன்றும் புரியவில்லை. குழப்பத்துடன்தான் சென்றார். க்ரைம் பிரான்சுக்குள் நுழைந்த பிறகுதான் அவருக்கு விஷயமே புரிந்தது.

முந்தைய தினம் அடுத்தடுத்து இருவர் படுகொலை செய்யப்பட்டிருக்கிறார்கள். இருவரது பெயரும் ஜெயின். ஒருவர் குண்டுகள் பாய்ந்தும் மற்றவர் சித்திரவதை செய்யப்பட்டும் இறந்திருக்கிறார்கள்.

இப்படி டிசைன் டிசைன் ஆக கொலை செய்பவன் அன்று பம்பாயிலேயே ஒருவன்தான். அவன், சமத்கான். கரீம்லாலாவின் மருமகன்.

காரியம் முடிந்ததும் தலைமறைவாகி விட்டான். அவனை பிடிக்க வேண்டுமானால் கரீம்லாலாவை காவலில் வைக்க வேண்டும். மாமா மீது பற்றுள்ள அவன், அப்போதுதான் தானாகவே வெளியில் வந்து சரணடைவான். ஏனெனில் இந்த பிரபஞ்சத்திலேயே அவன் நேசிப்பதும், அன்பு செலுத்துவதும் கரீம் லாலாவிடம் மட்டும்தான்.

இந்த உண்மை பம்பாய் காவலர்களுக்கு தெரியும். அனுபவம் கற்றுத் தந்த பாடம். அதனால்தான் ஒவ்வொரு முறையும் அவன் தவறு செய்யும்போதும் மசால்வடையை காட்டி எலியை பிடிப்பது போல் அவன் மாமனை விசாரணைக்காக அழைப்பார்கள். இந்த ஸ்டேஷனில் இருந்து அந்த ஸ்டேஷனுக்கு என அலைக்கழிப்பார்கள். கான்ஸ்டபிளில் தொடங்கி க்ரைம் பிரான்ச் ஆபீசர்ஸ் வரை ஒவ்வொருவராக வந்து கேட்ட கேள்விகளையே திரும்பத் திரும்ப வெவ்வேறு மாடுலேஷனில் கேட்டு துளைத்து எடுப்பார்கள். எங்கும் நகரவிடாமல் பாடாய் படுத்துவார்கள்.

இந்த விவரம் எப்படியாவது சமத்கானை சென்றடையும். உடனே பதுங்கி இருக்கும் இடத்தை விட்டு வெளியே வருவான். தானாகவே அருகில் இருக்கும் காவல்நிலையம் சென்று சரணடைவான். குண்டுக் கட்டாக தூக்கி அவனை சிறையில் அடைப்பார்கள். மறு நிமிடம் கரீம்லாலாவை ரிலீஸ் செய்வார்கள்.

“கொஞ்ச நாள்ல வந்துடுவேன் மாமா...” என அவர் காலை தொட்டு கும்பிட்டுவிட்டு ‘மாமியார் வீட்டுக்குள்’ வலதுகாலை எடுத்து வைத்து நுழைவான்.

உண்மையிலேயே சிறைச்சாலை அவனுக்கு மாமியார் வீடுதான். மாப்பிள்ளையை உபசரிப்பதுபோல்தான் அவனை தாம்பாளத்தில் வைத்து தாங்குவார்கள். தாங்கினார்கள்.

குறிப்பாக ஆர்த்தர் ரோட் ஜெயில். அங்கு சூப்பிரடெண்ட் ஆக, வார்டன் ஆக யார் வேண்டுமானாலும் இருக்கலாம்.



ஆனால் -

சமத்கான் அங்கு வந்துவிட்டால், அவன்தான் ராஜா. அவன் வைத்ததுதான் ஆர்த்தர் ரோட் ஜெயிலில் சட்டம். அவன் விரல் அசைவுக்கு ஏற்பத்தான் மொத்த சிறைச்சாலையும் இயங்கும். அவ்வளவு ஏன், அவன் அடைக்கப்பட்ட அறையில் கலர் டி.வியும், வீடியோ டெக்கும் கூட இருந்தன என்றால் பார்த்துக் கொள்ளுங்கள்.

கவனியுங்கள், இவை இரண்டும் அன்று வேறு எந்த மாஃபியா சிறையில் அடைக்கப்பட்டாலும் வழங்கப்படாத சலுகைகள்!

நோ. இவை எல்லாம் புருடா அல்ல. சத்தியமான உண்மை. 1983 – 84 காலகட்டங்களில் ஆர்த்தர் ரோட் ஜெயில் இப்படித்தான் இருந்தது, சமத்கானை ஆராதித்தது என்கிறது ரிக்கார்ட்.

சின்னச் சின்ன திருட்டுக்களுக்காகவும், கடத்தலுக்காகவும் பல முறை சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறான்.

அப்படி ஒருமுறை அவன் கைது செய்யப்பட்டபோது வழக்கம் போல் மசால்வடையை காட்டித்தான் - அவனுக்கு எதிராக வலுவான ஆதாரங்கள் இருந்தன. குறிப்பாக இரண்டு சாட்சிகள். அவர்கள் மட்டும் நீதிமன்றத்தில், தாங்கள் கண்ணால் கண்டதை அப்படியே சொல்லிவிட்டால் போதும். ஜென்மத்துக்கு சமத்கான் களி தின்ன வேண்டி வரும்.

பயப்படவேயில்லை. அந்த இரு சாட்சிகளையும் தன் ஆட்கள் மூலம் அலேக் ஆக சிறைக்கு தூக்கி வரச்செய்தான். என்ன நடக்கப்போகிறது என்பதை அறிந்ததாலோ என்னவோ, சிறைக் காவலர்கள் தத்தம் இடங்களில் பதுங்கினார்கள். சக கைதிகளும் தங்கள் செல்லைவிட்டு வெளியே வரவேயில்லை.

தன் முன் கொண்டு வரப்பட்ட அவர்கள் இருவரையும் உற்றுப் பார்த்தான். உதட்டோரம் சிரித்தபடி அவர்களது உடைகளை களையச் சொன்னான். முரண்டு பிடித்தார்கள். பளீரென்று அறைந்தான். தன் ஆட்களை விட்டே அவர்களை நிர்வாணப்ப டுத்தி மண்டியிட வைத்தான். பிறகு வாசல் பக்கம் பார்த்து ஜாடை காட்டினான்.

காத்திருந்த முடி வெட்டுபவர், தன் உபகரணங்களுடன் உள்ளே வந்தார். நிர்வாணமாக இருந்த இருவரது உடம்பிலும் எங்கெல்லாம் ரோமம் இருக்கிறதோ... அங்கெல்லாம் சவரம் செய்தார்.

உச்சி முதல் உள்ளங்கால் வரை அவர்கள் மழுமழு என்று காட்சியளித்ததும் -

“இது வெறும் சாம்பிள்தான். எனக்கு எதிரா சாட்சி சொன்னீங் கன்னா அதுக்கு பிறகு கத்தி, உங்க ரோமத்தை நீக்காது. பதிலா, உடம்புல இருக்கிற ஒவ்வொரு நரம்பையும் வெட்டி எடுக்கும்...”

அடித்தொண்டையில் சீறினான். கர்ஜித்தான்.

இதன் பிறகும் நீதிமன்றத்தில் உண்மையை சொல்ல அவர்களுக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது?

அந்தர் பல்டி அடித்தார்கள். சமத்கானும் அந்த வழக்கில் இருந்து விடுதலையானான்.

இப்படி ஆர்த்தர் ரோட் சிறையில் இருந்தபடி அவன் நடத் திய ராஜாங்கத்தை ஆதாரங்களுடன் பட்டியலிட்டுக்கொண்டே போகலாம்.

சமத்கான் குற்றம் செய்வதும், தலைமறைவாவதும், அவனை பிடிக்க கரீம்லாலாவை துருப்புச் சீட்டாக பயன் படுத்துவதும்...

ஏதோ தினமும் கிழக்கிலிருந்து சூரியன் உதிப்பது போலவே நிகழ்ந்து கொண்டிருந்தன. அனைவருக்கும் தெரிந்த விஷயங்கள்

– சம்பவங்கள்தான் – இவை.

ஆனால் –

இரு ஜெயின்கள் கொல்லப்பட்டதை தொடர்ந்து விசாரணைக் காக காவலர்கள் கரீம்லாலாவை அழைத்தபோது –

முன்பு போல் அவரால் இதை சாதாரணமாக எடுத்துக் கொள்ள முடியவில்லை. சலிப்பாகவும், எரிச்சலாகவும் இருந்தது. வயதாகிவிட்டதால் அவரது உடலும் அலைக்கழிப்புக்கு இடம் தரவில்லை. தவிர, பிடிபடாமல் குற்றம் செய்து தைரியமாக நடமாடும் தாவூத் இப்ராஹிம் வேறு அவரை எரிச்சல்டுத்திக்கொண்டே இருந்தான்.

தாவூத்துக்கு இருக்கும் புத்திசாலித்தனத்தில் கொஞ்சமாவது சமத் கானுக்கு இருக்கக்கூடாதா?

எனவே இம்முறை தனது உள்வட்டம் மூலம் சமத்கானை சரணடைய சொன்ன பிறகு, நேராக தன் நண்பரான ஹாஜி மஸ்தானை சந்தித்தார். தனது பிரச்னையை எடுத்துச் சொன்னார்.

பொறுமையாக கேட்ட மஸ்தான் சொன்ன யோசனைதான், ‘தனக்கும் தன் மருமகனுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை’ என்ற அறிவிப்பு.

லாலாவுக்கும் இது சரியாகப்பட்டது. உருது நாளிதழில் விளம்பரம் செய்ய முடிவு செய்தார்.

இதற்குள் தன் மாமனின் நலனுக்காக ஜெயின்(கள்) கொலை வழக்கில் சரணடைந்திருந்த சமத்கான், இரண்டே மாதங்களில் – ஆம். சரியாக 60 நாட்களில் – ‘போதிய சாட்சியம்’ இல்லாததால் விடுதலையானான்.

மறுநாள் தன் மாமனை சந்திக்க வேண்டும் என்று அவன் முடிவு செய்த போதுதான் –

‘Inquilab’ உருது நாளிதழில் அந்த பெட்டிச்செய்தியை வாசித்தான். கோபப்பட்டான். மாமனை நினைத்து பற்களை கடித்தான்.

ஒரு கணம், ஒரேயொரு நொடி, லாலாவை சந்தித்து சமாதானம் செய்துகொள்ளலாமா என்று தோன்றியது.

அதை மைக்ரோ விநாடியில் ஆசிட் ஊற்றி பொசுக்கினான்.

‘நான் என்ன சவலைப்பிள்ளையா... மாமன் இல்லாவிட்டால் என்னால் வாழமுடியாதா... உண்மையில் என் தயவுதான் அவருக்குத் தேவை. அதை அவருக்கு உணர வைக்கிறேன். தேடி வந்து மன்னிப்புக் கேட்டு என் காலில் அவரே விழும்படி செய்கிறேன். இனி நிழலில் ஒதுங்கப்போவதில்லை. எனக்கென்று அடியாட்களை உருவாக்கி தனி குழுவாக இயங்கப் போகிறேன். பம்பாயை ஆட்டிப் படைத்து நான் யாரென்று காட்டுகிறேன்...’

சபதம் செய்த கையோடு ஒரு காரியம் செய்தான்.

தனியாக, தான் செயல்படும்போது யார் யாரெல்லாம் முட்டுக் கட்டை போடுவார்கள் என்று பட்டியலிட்டான்.

முதல் பெயராக தாவூத் இப்ராஹிம் பெயர் வந்தது.

இது டேன்ஜர். யாரை வேண்டுமானாலும் பகைத்துக்கொள்ள லாம்.

இவனை?

ம்ஹூம். கூடவே கூடாது. சமாதானமாக போவதே தன் எதிர் காலத்துக்கு நல்லது.

இந்த முடிவுக்கு வந்ததும் எவ்வித துணையும் இன்றி நேராக முஸாஃபீர்கானா சென்று தாவூத்தை சந்தித்தான்.

அந்த சந்திப்புத்தான் அவனுக்கே வினையாக முடிந்தது.

இந்தியாவை விட்டே தாவூத் வெளியேறவும் அதுவே காரண மாக அமைந்தது.

82

தாவூத் முகம் இறுக்கமாக இருந்தது. என்ன நினைக்கிறான் என ஒருவராலும் புரிந்துகொள்ள முடியவில்லை. சோட்டா ராஜன் உள்ளிட்ட அவனது ஆட்கள் வழக்கம் போல் அவனைச் சுற்றி பாதுகாப்பாக நின்றார்கள். வளையமாக, இடைவெளிவிட்டு அமர்ந்தார்கள்.

அனைவரது பார்வையும் வாசலிலேயே பதிந்திருந்தது.

சபீர் படுகொலை செய்யப்பட்ட பின், பதான்ஸ்களை தாவூத் நரவேட்டை ஆடிக்கொண்டிருந்தான். பம்பாயின் சிறு துகளும் அறிந்த விஷயம் அது.

அப்படியிருக்க, ஒரு பதான் சந்திக்க அப்பாயின்மென்ட் கேட்டால்..? அதற்கு ஒப்புக்கொண்டு தாவூத்தும் வரச் சொன்னால்..?

உடன் இருந்தவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை. ஏதோ நடக்கப் போகிறது என உள்ளுணர்வு சொன்னது. அது என்னவாக இருந்தாலும் நடக்கப் போவதில் தாவூத்துக்கு எந்த ஆபத்தும் வந்துவிடக் கூடாது என்பதில் மட்டும் கவனமாக இருந்தார்கள். மறைத்து வைத்திருந்த தங்கள் ஆயுதத்தை எடுப்பதற்கு தயாராக இருந்தார்கள்.

குறிப்பிட்ட நேரத்துக்கு புன்னகை தவழும் முகத்துடன் சமத்கான் வந்து சேர்ந்தான்.

உச்சி முதல் உள்ளங்கால் வரை அவனை பரிசோதித்துவிட்டு அனுப்பினார்கள்.

தாவூத்தின் கண்கள் அக்குவேறு ஆணிவேறாக அவனை அலசியது.

முன்னால் இருந்த நாற்காலியில் அமரும்படி சோட்டா ராஜன் செய்கை செய்தான்.

சமத்கான் அமரவில்லை.

மாறாக நேராக தாவூத்தின் அருகில் சென்றான்.

"ஏய்..." என சோட்டா ராஜன் குரல் கொடுக்க, மற்றவர்கள் தங்கள் ஆயுதங்களை கையில் எடுக்க -

தாவூத் அசையாமல் அவனையே பார்க்க -

சமத்கான் மண்டியிட்டான். தாவூத் இப்ராஹிமின் வலது கையை திருப்பி முத்தமிட்டான்.

"வணக்கம் பாய்..."

தாவூத்தும் சோட்டா ராஜனும் கண்களால் ஒரு நொடி பேசிக் கொண்டார்கள்.

"என்னை நீங்க எதிர்பார்த்திருக்க மாட்டீங்க..." சமத்கான் அமர்ந்தான். "நேரடியா விஷயத்துக்கு வந்துடறேன் பாய். நான் லாலாவோட மருமகன்தான். பிறப்பால பதான்ஸ்தான். ஆனா..."

நாற்காலியின் நுனிக்கு வந்து முன்னால் குனிந்தான்.

"சத்தியமா சபீரோட படுகொலைக்கும் எனக்கும் எந்த தொடர்பும் இல்லை. அமிர்ஸாதா, அலாம்ஸேப் கூட சில மாதங்களாவே நான் டச்சுல இல்ல..."

"இதை சொல்லத்தான் வந்தியா?" தாவூத் அமைதியாக கேட்டான்.

"ஆ...மா..."

"சரி போயிட்டு வா..."

மிரள மிரள விழித்தவன், உத்தேசமாக தலையசைத்துவிட்டு வாசல் பக்கம் நகர்ந்தான்.

"தனியா தொழில் செய்யப் போறியா?"

தாவூத்தின் குரல் அவனை தடுத்தது.

கண்கள் விரிய திரும்பினான்.

சிரித்தான்.

சிரித்தார்கள்.

சமத்கான் வெளியேறியதும் சோட்டா ராஜன் திரும்பினான்.

"நம்ம வேலையை நாம பார்ப்போம்..." என்பதற்கு மேல் தாவூத் எதுவும் பேசவில்லை.

"அவனுக்கு நல்ல காலம் பொறந்துடுச்சு போல..."

அடியாட்கள் தங்களுக்குள் பேசிக்கொண்டார்கள்.

ஏறக்குறைய இதையேதான் சமத்கானும் நினைத்தான்.

'அப்பாடா... தாவூத் நம்மை தப்பா நினைக்கலை... இது போதும்...'

நிம்மதியுடன் தனிக்குழு தொடங்கும் ஆரம்பகட்டப் பணிகளில் இறங்கினான். யார் யாரை சேர்ப்பது, யாரிடம் மாமூல் வசூலிப்பது, எங்கிருந்து கடத்துவது, உள்நாட்டில் அதை எப்படி விற்பது... என A to Z பட்டியலிட்டான்.

திருப்தியாக இருந்தது. திட்டமிட்டபடி அனைத்தும் நடந்தால், தன் மாமனின் கண்களில் விரல்விட்டு ஆட்டலாம்.

சோம்பல் முறித்தவன் குடிப்பதற்காக எப்போதும் செல்லும் Barக்கு சென்றான்.

மிதமான போதை.

வானத்தில் மிதந்தான்.

அப்போதுதான் ஒரு இன்ஃபார்மர் அவனைத் தேடி வந்தான்.

"நீ ஒரு வெத்து வேட்டாம். கரீம்லாலா இல்லைனா என்னிக்கோ காணாம போயிருப்பியாம்..."

"என்னது..?"

தலைக்கு ஏறிய போதை அப்படியே இறங்கியது.

பாய்ந்து அந்த இன்ஃபார்மரின் சட்டையை பிடித்தான். கழுத்தை நெரிக்க முற்பட்டான்.

"அப்படீன்னு நான் சொல்லலை..." திக்கினான்.

"வேற யாரு சொல்றது?"

“நூரா...”

“...”

“அல்லா மேல ஆணை. நான் பொய் சொல்லலை...”

பிடித்த சட்டையை விட்டான். மனம் கொந்தளிக்கத் தொடங்கியது.

மாமா... மாமா...

நிழல்... நிழல்...

சிறு வயது முதல் இதைத்தான் கேட்டுக்கொண்டே இருக்கிறான். அவனை, அவனது திறமையை ஏன் யாரும் அங்கீகரிக்க மறுக்கிறார்கள்?

ஆத்திரம் தலைக்கு ஏற நேராக நூராவை தேடிச் சென்றான்.

என்ன ஏது என்று கேட்கவேயில்லை.

அடித்தான். உதைத்தான். அறைந்தான்.

தன் கோபம் தீரும் வரை வெளுத்து வாங்கினான்.

குற்றுயிராக நூரா சுருண்ட பிறகே இயல்புக்கு வந்தான்.

“நான் நிழல் இல்லன்னு இப்பவாவது நம்பறியா..?”

பதிலை எதிர்பார்க்காமல் மீண்டும் எட்டி உதைத்துவிட்டு வெளியேறினான்.

இந்த சம்பவம் அவனுக்குள் கனன்று கொண்டிருந்த நெருப்பை விசிறி விட்டது. தனி மாஃபியாவாக உருவெடுக்க துரிதமாக செயல்பட்டான்.

நூராவை அடித்ததற்காக அவனைத் தேடி யாரும் வரவில்லை.

நிம்மதியானான்.

1984ம் ஆண்டு அக்டோபர் மாதம் 4ம் தேதி.

தன் மனம் கவர்ந்த ஷீலா வசிக்கும் அடுக்குமாடி குடியிருப்புக்கு வந்தான்.

அவனுக்காக காத்திருந்தவள், மலர்ந்தாள். அவன் மீது தாவினாள்.

அள்ளி அணைத்தான்.

ஒருவருக்கு ஒருவர் அடிபணியாமல் திமிறினார்கள். முரண்டு பிடித்தார்கள். நெகிழ்ந்தார்கள். விலகினார்கள். ஈஷிக் கொண்டார்கள். கடித்தார்கள்.

இரண்டு மணி நேரத்துக்குப் பின் அவனது மன அழுத்தம் நீங்கியது.

அவளுக்கு டாட்டா காட்டிவிட்டு லிஃப்டை நோக்கி வந்தான். 3, 4... என சிவப்பு பட்டன் ஒளிர்ந்தது.

சிகரெட்டை பற்ற வைத்தான்.

லிஃப்ட் கதவு திறந்தது.

நுழைந்தான்.

கதவு மூடியது.

*8... 7... 6...*

*அனுபவித்து புகையை விட்டான்.*

*G...*

*கதவு திறந்தது.*

*வெளியேறுவதற்காக வலது காலை உயர்த்தினான்.*

*அதிர்ந்து நின்றான்.*

*வாயிலிருந்த சிகரெட், முழுவதுமாக எரிந்து முடிந்து அவன் உதட்டை சுட்டது.*

*திறந்த வாயை அவனால் மூட முடியவில்லை.*

*லிஃப்டுக்கு வெளியே கண்கள் சிவக்க தாவூத் நின்றிருந்தான். வலப்பக்கம் சோட்டா ராஜன், அப்துல் ஹமீத். இடப்பக்கம் அலி அந்துலே.*

*எதையோ சொல்ல முயன்றான்.*

*வார்த்தைகள் வெளிவரவில்லை.*

*பதிலாக தோட்டாக்கள் சீறின. அவன் உடலை துளைத்தன.*

*மொத்தம் 19 குண்டுகள் தன் உடம்பில் பாய...*

*சமத்கான் அப்படியே சரிந்தான்.*

*"இந்தப் பக்கம் என்கிட்ட சமாதானம் பேசிட்டு அந்தப் பக்கம் என் தம்பி நூரராயை அடிக்கறியா?" தாவூத் எட்டி உதைத்தான். "ஆஸ்பத்திரில உயிருக்கு போராடிட்டு அவன் கிடக்கான்... இங்க உனக்கு ஷோக்கு கேட்குதா?" கர்ஜித்தான்.*

*ஆனால் -*

*இதை கேட்டு நடுங்கும் நிலையில் சமத்கான் இல்லை. மூன்றாவது தோட்டா பாயும்போதே அவன் உயிர் பிரிந்துவிட்டது.*

*சமத்கானின் மரணத்துக்கு தாவூத் இப்ராஹிம்தான் காரணம் என சந்தேகத்துக்கு இடமின்றி நிரூபணமானது. இதனை தொடர்ந்து காவல்துறையும் முஸாஃபீர் கானாவை சுற்றி வளைத்தது.*

*பம்பாயில் இருந்தல்ல... இந்தியாவிலிருந்தே வெளியேற தாவூத் முடிவு செய்தான்.*

*துபாய், அவனை இருகரம் கூப்பி வரவேற்றது.*

83

கடைசியாக தாவூத் இப்ராஹிம் பம்பாயை விட்டு வெளியேறியது 1986ல்.

ம்ஹூம். தனியாக துபாய்க்கு செல்லவில்லை. தம்பதி சகிதமாகத்தான் சென்றான்.

யெஸ். அவனுக்கு திருமணமாகியிருந்தது. கண்டதும் காதல். காண வைத்தது மெஹ்ஜாபீன் (Mehjabeen) அழகு.

இப்படி காதலால், தான் கசிந்து உருகுவோம் என்று அவன் கனவுகூட கண்டதில்லை.

காரணம், சுஜாதா ஏற்படுத்தியிருந்த ரணம்.

காதலித்து விட்டு பிறகு அப்பா சொன்னார் என்ற ஒரே காரணத்துக்காக தன்னை உதாசீனப்படுத்திவிட்டு சென்ற அவளை அவன் மறக்கவும் இல்லை. மன்னிக்கவும் இல்லை. பெண்களையே வெறுத்தான். எதிர்பாலினத்தை பார்ப்பதையும் தவிர்த்தான். பம்பாய் மாஃபியாவாக உருவெடுப்பதிலும், தனிப்பெரும் ராஜ்ஜியத்தை கட்டியமைக்கவும், எதிராளிகளை வேரோடு கிள்ளி எறியவும், தனக்கென விசுவாசப் படையை உருவாக்கவுமே தன் சிந்தனையை செலவிட்டான். கற்றுக் கொண்ட மொத்த வித்தையையும் இறக்கினான்.

சமயங்களில் காதலர்கள் கைகோர்த்தபடி சாலையில் நடப்பதை பார்ப்பான். மோட்டார் பைக்கில் ஈஷிக் கொண்டு அவர்கள் பறப்பது தட்டுப்படும்.

அதுபோன்ற நேரங்களில் ஆத்திரம் கொழுந்துவிட்டு எரியும். தன்னை மட்டும் நேசிக்கக்கூடிய பெண், ஏன் தனக்கு மட்டும் கிடைக்கவில்லை என உள்ளுக்குள் பொருமுவான். மவுனமாக அழுவான். உடல் வெந்து தணியும்.

மாஃபியா தாதாவாக இருந்தாலும் அவனும் ஆண்தானே? அவனுக்கும் ஹார்மோன்கள் சுரக்குமே?

அதுபோன்ற தருணங்களில்தான், முக்கியமான அசைன்மெண்ட்டை தேர்ந்தெடுப்பான். காதல் உணர்வுகள் கொழுந்து விட்டு எரியும்போதுதான் அதை தணிக்க எதிராளிகளை பந்தாடுவான். நார்நாராக கிழிப்பான்.

அப்படித்தான் ஒருமுறை நடந்தது. மெஹ்ஜாபீனை சந்திக்கும் வாய்ப்பையும் அதுவே ஏற்படுத்திக் கொடுத்தது.

தனிமை வருத்தும்போதெல்லாம் மனீஷ் மார்க்கெட்டில் உள்ள குல்ஷன் - இ - ரெஸ்டாரெண்ட் செல்வது அவன் வழக்கம். ஜன்னலோர இருக்கையில் அமர்ந்தபடி சொட்டுச் சொட்டாக தேநீர் அருந்துவான்.

சில நாட்களாகவே இதை கவனித்து வந்த மும்தாஸ்கான் - செல்லமாக கானா - அவன் அருகில் வந்தார்.



தாவூத் யார்... அவனது அருமை பெருமைகள் என்ன... அவனால் என்ன செய்ய முடியும்... என்பதெல்லாம் அவருக்குத் தெரியும். அதனாலேயே அவன் மூலமாக ஒரு காரியத்தை முடிக்க நினைத்தார்.

முனீஷ் மார்க்கெட்டில் கடை எண் 12, அவருக்கு தொந்தரவாக இருந்தது. இடத்தை காலி செய்ய மறுத்து அடம் பிடித்தார்கள்.

எனவே குறிப்பிட்ட அந்த நாள் அன்று தாவூத்தின் அருகில் வந்தவர், தன் வேண்டுகோளை வைத்தார்.

சரியாக அப்போது பசலையால் தாவூத் தவித்துக்கொண்டிருந்தான். ரெஸ்டாரென்டில் இருந்த ஒரு ஜோடி நெருக்கமாக அமர்ந்தபடி அவனது தன்மானத்தை சீண்டிக்கொண்டிருந்தது.

அந்த நெருப்பை அணைக்க வேண்டுமானால், பாலியல் உணர்வுக்கு சமமான வன்முறையை கையில் எடுக்க வேண்டும். அப்போதுதான் உள்ளம் இயல்புக்கு திரும்பும்.

மறுபேச்சு பேசவில்லை. என்ன, ஏது... யார் மீது தவறு...

எதையும் கேட்கவில்லை. நாற்காலியை பின்னுக்கு நகர்த்திவிட்டு நேராக 12ம் நம்பர் கடைக்குச் சென்றான். தனி ஆளாக அங்கிருந்த பொருட்களை எல்லாம் அடித்து நொறுக்கினான். தட்டுப்பட்டவர்கள் ரத்த வெள்ளத்தில் மிதந்தார்கள். தட்டிக் கேட்க வந்தவர்கள் அவனது ஆக்ரோஷத்தை கண்டு பின்வாங்கினார்கள்.

எல்லாம் முடிந்ததும் ஒற்றைக் கையால் கடையின் ஷட்டரை இறக்கிவிட்டு இடுப்பில் கை வைத்தபடி நின்றான்.

கூட்டம் சிதறியது.

கானா, ஓடிவந்து அவனை அணைத்துக்கொண்டார்.

அந்த நொடி முதல் இருவரும் நண்பர்களானார்கள்.

தன் வீட்டுக்கு அவனை அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தினார். மெல்ல மெல்ல அந்த வீடு, அவன் இல்லமானது. அவரது மனைவியை மரியாதையுடன் 'பாபி' என கூப்பிட்டான். அன்பாகப் பழகினான்.

இதனாலேயே அடிக்கடி அவனுக்கு விருந்து வைத்தார்கள். பாபியின் கைமணம் தாவூத்துக்கு பிடித்திருந்தது. எனவே ருசித்து சாப்பிட தோன்றும்போதெல்லாம் கதவைத் தட்டிவிட்டு உள்ளே நுழைந்தான். இருப்பதை வயிறார சாப்பிட்டுவிட்டு சென்றான்.

கார்ப்பரேட் சர்க்கிளில் மட்டுமல்ல... மாஃபியாக்கள் மத்தியிலும் ஒரு வழக்கம் உண்டு.

சாப்பிடும் நேரத்தில் பிசினஸ் பேச மாட்டார்கள்.

யார் ஏற்படுத்திய விதி என்று தெரியாது. ஆனால், இன்றுவரை கடைப்பிடிக்கிறார்கள்.

தாவூத்தும், கானாவும் விதிவிலக்கல்லவே? அவர்களும் நிற்க அதற்குத் தக என பொதுப்படையாக சிரித்துப் பேசி சாப்பிடுவார்கள்.

இப்படி நெருக்கம் அதிகரித்த ஒரு பொழுதில் -

கானா வீட்டில் விருந்துக்கு ஏற்பாடு செய்தார்கள்.

தாவூத் இல்லாமலா?

வந்தான்.

ஆனால் -

பரிமாறிய பிறகும் அவனால் சாப்பிட முடியவில்லை. தோன்றவில்லை. ஹை டெஸிபலில் அவன் இதயம் துடித்தது. இந்த படபடப்பை இதற்கு முன் அவன் அனுபவித்தது சுஜாதாவை கண்டபோதுதான்.

இருக்கையில் அமர முடியாமல் நெளிந்தான்.

கானா வீட்டில் புதியதாக வலம் வந்த பெண், இமைகளை வெட்டியபடி அவனைப் பார்த்து புன்னகைத்தாள். வெட்கப்பட்டாள். அவன் தட்டில் பிரியாணியை வைத்தாள்.

தட்டுத் தடுமாறி சாப்பிட்டு முடித்தான்.

கை கழுவிய பிறகு அவனால் கட்டுப்படுத்த முடியவில்லை.

"யார் அந்தப் பெண்?"

கானா சிரித்தார். "என் மச்சினிச்சிதான். பேரு, மெஹ்ஜாபீன்..."

இனி தன் வாழ்க்கையில் எந்த சுஜாதாவுக்கும் இடமில்லை என்று நினைத்தவன் -

தன்னையும் அறியாமல் மெஹ்ஜாபீன் பக்கம் சாய்ந்தான்.

அவனது இதய சிம்மாசனத்தில் எவ்வித எதிர்ப்பும் இன்றி அவள் அமர்ந்தாள்.

தாவூத்துக்கு சுற்றி வளைத்து பேசிப் பழக்கமில்லை.

எனவே நேரடியாக சென்று மெஹ்ஜாபீனிடம் தன் விருப்பத்தை தெரியப்படுத்தினான்.

ஏற்கனவே, கானா மூலமாக அவனது வீரதீர சாகசங்களை கேள்விப்பட்டிருந்தாள். ஒவ்வொரு சம்பவத்தையும் கானா விவரிக்கும் போது அதை காட்சியாக தன் மனதில் ஓடவிடுவாள். சிரிப்பாள். நாணத்தில் முகம் கவிழ்ப்பாள்.

எனவே தாவூத் தன் விருப்பத்தை தெரியப்படுத்தியபோது -

அதற்காகவே காத்திருந்த மெஹ்ஜாபீன், பச்சக் என ஒட்டிக் கொண்டாள்.

இருவரும் மோட்டார் பைக்கில் பம்பாயை வலம் வந்தார்கள். கடற்கரை சாலையில் நிதானமாக பானிபூரி தின்றார்கள். கைகோர்த்த படி மணலில் நடந்தார்கள். ஒட்டியபடி அமர்ந்தார்கள். தோளில் சாய்ந்தார்கள்.

இந்தி காதல் பாடல்களை தாவூத் முணுமுணுப்பான். கண்களை மூடியபடி மெஹ்ஜாபீன் அதை ரசிப்பாள். முழுநிலவு அவர்களது காதலை வளர்த்தது.

விவரம் அறிந்தபோது கானாவும், அவரது மனைவியும் மகிழ்ந் தார்கள்.

ஆனால் -

மெஹ்ஜாபீனின் தந்தை இதை விரும்பவில்லை. அதுதான் தாவூத்தின் 'புகழ்' எட்டு திசையிலும் பரவியிருக்கிறதே?

சுஜாதாவை போல் மெஹ்ஜாபீனும் தன் தந்தைக்கு கட்டுப்பட்டு விலகுவாளோ என்று தாவூத் நினைத்தான்.

அப்படி நடக்கவேயில்லை. மாறாக, 'தாவூத்தான் தன் கணவர்' என்பதில் அவள் உறுதியாக இருந்தாள்.

இதை அறிந்ததும் தாவூத் நெகிழ்ந்துவிட்டான்.

கொஞ்ச நஞ்சம் அவனுக்குள் ஒட்டிக்கொண்டிருந்த சுஜாதாவின் உருவம் அந்த நொடியில்தான் சுத்தமாக விலகியது.

நூறு சதவிகிதம் அல்ல... ஆயிரம் சதவிகிதம் மெஹ்ஜாபீனை அவன் காதலிக்க ஆரம்பித்தான்.

பெண்ணின் பிடிவாதம் தந்தையை யோசிக்க வைத்தது.

தாவூத்தின் பின்னணியை ஆராய்ந்தார்.

லஞ்சம் வாங்காத, கறைபடியாத இப்ராஹிம் கஸ்கரின் மகன் தான் தனக்கு வரவிருக்கும் மாப்பிள்ளை என்று அறிந்ததும் தன் எண்ணத்தை மாற்றிக் கொண்டார்.

இரு வீட்டாரும் கலந்துகொள்ள ஜாம் ஜாம் என்று தாவூத் - மெஹ்ஜாபீன் திருமணம் நடந்தது.

முன்னிலை வகித்தது -

வேறு யார்? மாஃபியா ராணிகளில் முதல்வரும் மூத்தவருமான ஜெனாபாய்தான்!

## 84

ஆனால் -

தன் மனைவியுடன் அதிகபட்சம் ஒரு மாதம் தாவூத் இப்ராஹிம் பம்பாயில் வாழ்ந்திருந்தால் அதிகம். வெறும் பதினைந்து நாட்கள்தான் அவர்கள் இல்லற வாழ்க்கை இந்தியாவில் நடந்ததாக சொல்கிறார்கள்.

அதற்குள் க்ரைம் பிராஞ்சின் பிடி இறுகி விட்டது.

சபீர் படுகொலை செய்யப்பட்டதை தொடர்ந்து பம்பாயில் நடந்த நிகழ்வுகளும், *Gang War's*ம் காவலர்களின் தூக்கத்தை கெடுத்தன. அரசியல் மட்டத்திலிருந்து அழுத்தம் அதிகரித்தது. மக்கள் சாலையில் கூடிக்கூடி பேச ஆரம்பித்தார்கள். ஊடகங்கள் தங்கள் பேனா முனையை கூர் தீட்டின. காவல்துறையின் கையாலாகாதனத்தை அம்பலப்படுத்தின.

இதற்கு மேலும் தங்கள் முன்னாள் ஊழியரான இப்ராஹிம் கஸ்கருக்காக சும்மா இருக்கக்கூடாது. தாவூத்தையும், அவன் அடியாட்களையும் கைது செய்தே ஆக வேண்டும் என்ற நிலைக்கு காவல்துறை தள்ளப்பட்டது.

சமத்கானின் கொலை -

அந்த முடிவை துரிதப்படுத்தியது.

பம்பாய் போலீஸ் கமிஷனராக டி.எஸ்.சோமன் *(D.S.Soman)* அப்போது இருந்தார். நேர்மையானவர். விலைபோகாதவர் என்ற பெயர் அவருக்கு இருந்தது.

பதான்ஸ்களின் கொட்டம் அடங்கியிருந்தது, அடக்கப்பட்டிருந்தது. ஹாஜி மஸ்தானும், கரீம்லாலாவும், வரதராஜ முதலியாரும் வயது காரணமாக உடல் தளர்ந்து முடங்கியிருந்தார்கள்.

ஆட்டம் போட்டுக்கொண்டிருந்தது தாவூத் மட்டுமே. பம்பாய் மட்டுமல்ல... குஜராத் துறைமுகமும் அவன் கட்டுப்பாட்டுக்குள் வந்திருந்தது. கடத்தல் பொருட்களின் நடமாட்டத்தை தடுக்க முடியவில்லை. இந்திய பொருளாதாரமே ஆட்டம் கண்டு கொண்டிருந்தது.

இதற்கெல்லாம் சூத்திரதாரியாக விளங்கும் தாவூத்தை கைது செய்துவிட்டால், தேசமே பலப்பட்டுவிடும். பம்பாயும், குஜராத்தும் அமைதிப் பூங்காவாகிவிடும். மக்களும் குற்றம்சாட்டுவதை நிறுத்திவிடுவார்கள்.

டி.எஸ்.சோமன் மட்டுமல்ல, மொத்த காவல்துறையும் இந்த உண்மையை உணர்ந்திருந்தது.

எனவே கமிஷனருக்கு முழு சுதந்திரம் கொடுத்தார்கள்.

ஏற்கனவே சின்னச்சின்ன வழக்குகளுக்காக தாவூத்துக்கு ஜாமீன் வழங்கப்பட்டிருந்தன. அவை அனைத்தையும் கேன்சல்



செய்தார்கள். இன்ஸ்பெக்டர் மதுக்கர் ஸின்டே போன்ற துடிப்பான, கறை படியாத, நாற்பது வயதுக்கு உட்பட்ட காவலர்களை தேர்ந் தெடுத்து ரகசிய குழு ஒன்றை அமைத்தார்கள். விஷயம் வெளியில் கசிந்துவிடக்கூடாது என்பதில் கவனமாக இருந்தார்கள்.

காரணம், தாவூத்தின் பலம். காவல்துறையின் இண்டு இடுக்கில் எல்லாம் அவன் ஆட்கள் ஊடுருவி இருந்தார்கள். மாதச் சம்பளம் அல்ல... வாரச் சம்பளத்தை அவனிடமிருந்து பெற்றுக்கொண்டிருந்த காவலர்களின் எண்ணிக்கை நூற்றுக்கணக்கில் இருக்கும்.

எனவேதான் டி.எஸ்.சோமன் ரகசிய படையை அமைத்தார். ஆபரேஷனுக்கு நாள் குறித்தார்.

குறிப்பிட்ட தினத்தன்று -

காவல்துறை வாகனங்கள் முஸாஃபீர்கானாவுக்குள் நுழைந்தன.

அதிகாலையில் எதற்காக இத்தனை போலீசார் வந்திருக்கி றார்கள் என்று யாருக்கும் புரியவில்லை. பேப்பர் வாங்கவும், டீ குடிக்கவும் சென்றுகொண்டிருந்த மக்கள் வியப்புடன் பார்த் தார்கள்.

சரியாக -

*D company* இயங்கிவந்த கட்டிடத்தின் முன் -

அனைத்து வாகனங்களும் நின்றன.

திபுதிபுவென ஆயுதங்களுடன் ஒரு பிரிவு காவலர்கள் நுழைந்தார்கள்.

மறு பிரிவினர் கட்டிடத்தை சுற்றி வளைத்தார்கள்.

உள்ளே அவர்கள் கண்ட காட்சி -

அதிர வைத்தது.

வாரத்தின் 7 நாட்களும், 24 மணி நேரங்களும் ஓர் அலுவலகம் இயங்கினால் எப்படியிருக்கும்?

அப்படியிருந்தது தாவூத்தின் இருப்பிடம்.

ஜன்னல்களுக்கு சீலைகள் அமைக்கப்பட்டிருந்தன. அவை காற்றில் ஆடின.

ஆஷ்ட்ரேயில் அணையாத நிலையில் சிகரெட் புகைந்து கொண்டிருந்தது.

நிக்கோட்டின் மணம் அறை எங்கும் சூழ்ந்திருந்தது.

நாற்காலிகள் அனைத்திலும் குஷன்.

யாரோ அதில் அமர்ந்திருந்ததற்கு அடையாளமாக நடுவில் அவை உள்வாங்கியிருந்தன.

ஆனால் -

மனித நடமாட்டம் மட்டும் அங்கில்லை.

தாவூத் இப்ராஹிம் மட்டுமல்ல... அவனது கடைசி அடியாள் கூட அங்கு தென்படவில்லை.

சொல்லி வைத்தது போல், போட்டது போட்டபடி சகலரும் முக்கியமான ஆவணங்களுடன் தலைமறைவாகிவிட்டார்கள்.

காவல்துறை அசரவில்லை.

முஸாஃபீர்கானாவில் இருந்த அனைத்து வீடுகளுக்குள்ளும் நுழைந்து சலித்தது. அங்கு வாழ்ந்தவர்களை நிற்க வைத்து கேள்வி மேல் கேள்வி கேட்டது.

யாருக்கும் எந்த பதிலும் கிடைக்கவில்லை.

தாவூத் எப்படி தப்பினான்?

மறுநாள் இந்தக் கேள்வியைத்தான் ஆபரேஷனில் ஈடுபட்ட காவலர்களிடம் டி.எஸ்.சோமன் கேட்டார்.

அனைவரும் விடை தெரியாமல் தலைகவிழ்த்தார்கள்.

"இப்படி நின்னா என்ன அர்த்தம்?" டி.எஸ்.சோமன் கத்தினார். "நாம கைது செய்யப் போற விஷயம், அவனுக்கு எப்படி தெரிஞ்சது?"

"..."

"இந்த ஆபரேஷன் பத்தி நம்மைத் தவிர வேற யாருக்குமே தெரியாது... அப்படியிருக்கிறப்ப நியூஸ் லீக் ஆகியிருக்குன்னா... நமக்குள்ள ஒருத்தர்தான் கறுப்பு ஆடு... யார் அந்த ப்ளாக் ஷீப்?"

“யாருமில்ல சார்...” சப் இன்ஸ்பெக்டர் வினோத் பட், குரல் கொடுத்தார்.

“என்ன சொல்றீங்க?”

“உண்மையை...”

“புரியலையே...”

“இங்க பாருங்க சார்...” ஒரு காகிதத்தை எடுத்து கமிஷனர் முன்னால் நீட்டினார். “நாம அவன் இடத்தை சுத்தி வளைக்கறதுக்கு 10 நிமிஷத்துக்கு முன்னாடி ஒரு போன்கால் வந்திருக்கு...”

அங்கிருந்த அனைவரும் பரபரப்பானார்கள்.

டி.எஸ்.சோமன் அந்த காகிதத்தை வாங்கிப் பார்த்தார். தொலைபேசி எண்கள் நேர வாரியாக அதில் குறிப்பிடப்பட்டிருந்தன.

“போன் செய்தது யாரு?”

“நம்ம குழுவுல யாரும் இல்லை சார்...”

“இந்த நம்பர் எந்த ஏரியாவை சேர்ந்தது...”

“...”

“உங்களைத்தான் வினோத் பட்....

தைரியமாக இடத்தை சொன்னார் அந்த சப் இன்ஸ்பெக்டர்.

கேட்ட டி.எஸ்.சோமனுக்கு தலை சுற்றியது.

ஏனெனில் அது மண்ட்ராலயா பகுதியை சேர்ந்தது.

அங்கிருந்த ஒரு சீனியர் அரசியல்வாதிதான், தாவூத் கைது செய்யப்பட வேண்டும் என அழுத்தம் கொடுத்தவர். ஆபரேஷன் தொடர்பான விவரங்களை டி.எஸ்.சோமன் பகிர்ந்துகொண்டது அவரிடம் மட்டும்தான்.

அந்த அரசியல்வாதியுடன் இருக்கும் யாரோதான் தகவலை கசியவிட்டிருக்கிறார்கள்.

அந்த நபரை கண்டுபிடிப்பது இயலாத காரியம்.

“சரி... எல்லா இடத்துலயும் தாவூத்தை தேடுங்க...”

“வாய்ப்பில்லை சார்...” மதுக்கர் ஸின்டே முணுமுணுத்தார்.

“ஏன்?”

“அவன் துபாய்க்கு தப்பிச்சு போயிட்டான்...”

“வாட்?” டி.எஸ்.சோமன் அலறினார். “அவன் பாஸ்போர்ட்டை முடக்கியிருக்கோம்...”

“தெரியும் சார்... க்ரைம் பிராஞ்ச் கஸ்டடில அவன் பாஸ்போர்ட் இருக்கு. உயரதிகாரியான ராஜா தம்பட், அதை லாக்கர்ல வைச்சிருக்கார்...”

“அப்படீன்னா லாக்கர்லேந்து பாஸ்போர்ட் எப்படி வெளில போச்சு?”

“எங்கயும் அது போகலை சார்...”

“என்னய்யா சொல்றீங்க?”

“காலைல போய் செக் பண்ணினோம். பாஸ்போர்ட் அதே

*லாக்கர்லதான் பாதுகாப்பா இருக்கு...”*

*“பிறகெப்படி அவன் துபாய் போனான்?”*

*“போலி பாஸ்போர்ட்...”*

*“...”*

*“பம்பாயிலிருந்து தில்லிக்கு போய் அங்கிருந்து துபாய்க்கு பறந்திருக்கான்...”*

*இதைக் கேட்டு இடிந்து போனது இந்திய அரசு மட்டுமல்ல.*

*ஜெனா பாயும்தான்.*

*மும்பை மாஃபியா ராணிகளில் முதன்மையானவராக இருந்த, சர்வ வல்லமையுடன் பவனி வந்த அவரது வாழ்க்கை -*

*இதன் பிறகுதான் ஆட்டம் கண்டது.*

## 85

ஒரு வகையில் ஜெனாபாய் துவண்டு போனார் என்றுதான் சொல்ல வேண்டும்.

இதுநாள் வரையில் அவரை ஆதரித்த, உடன் பிறவா சகோதரியாக பராமரித்த கரீம் லாலாவும், ஹாஜி மஸ்தானும் முதுமையின் உச்சியில் தளர்ந்துபோய் காணப்பட்டனர். பம்பாய் நிழலுலகில் அவர்களுக்கு மரியாதை இருந்ததே தவிர பிடிப்பு இல்லை. சொல் பேச்சு கேட்டு நடக்கும் நிலையில் இளைய தலைமுறையினரும் இல்லை. போதும் போதாதற்கு அரசியல் கட்சித் தொடங்கி சின்னாபின்னமாகி இருந்தார் ஹாஜி மஸ்தான்.

தாய்க்கு சமமாக, தான் வளர்த்த தாவூத் இப்ராஹிம் தன்னை இறுதிவரை சிம்மாசனத்தில் அமர வைப்பான் என நம்பினார். அதனாலேயே பதான்ஸ்களுக்கும் அவனுக்கும் இடையில் ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்த ஹாஜி மஸ்தான் முயன்றபோது, மறைமுகமாக தாவூத்துக்கு ஆதரவு கொடுத்தார்.

ஆனால் -

அவன் பறந்துவிட்டான். பம்பாயில் இருந்தல்ல. இந்தியாவை விட்டே.

இனி ஒருபோதும் அவன் திரும்ப மாட்டான். முடியவும் முடியாது. அவனை கைது செய்ய இந்திய காவல்துறையே காத்திருக்கிறது.

இப்படி அபாயம் சூழ்ந்தநிலையிலும் துபாயில் இருந்தபடி பம்பாயை, இந்தியாவை அவன் ஆட்டிப் படைத்துக் கொண்டுதான் இருந்தான்.

இதனால் பயனடைந்தது அவன் மட்டும்தான். ஜெனாபாய்க்கு ஊசி முனை அளவுக்குக் கூட லாபம் கிடைக்கவில்லை. அவனது இந்திய பிரதிநிதிகளை சந்தித்து முறையிடவும் அவரால் முடியவில்லை.

1988ல் வரதராஜ முதலியார் சென்னையில் காலமானார். இந்த மறைவு ஹாஜி மஸ்தானையும், கரீம்லாலாவையும் முற்றிலுமாக தனிமைப்படுத்தி ஒடுக்கியது.

வேறு வழியின்றி ஜெனாபாய் வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்தார்.

ஆண்டுகள் பறந்தன.

1992, டிசம்பர் 6 அன்று பாபர் மசூதி இடிக்கப்பட்டது.

இதனை தொடர்ந்து பம்பாயில் கலவரங்கள் அரங்கேறின. குறிப்பிட்ட மதத்தை சேர்ந்த உழைக்கும் மக்கள், சூறையாடப்பட்டார்கள்.



தங்கள் வாழ்வாதாரங்களை இழந்து நிர்கதியாக நின்றார்கள்.

இதனை பார்த்துக்கொண்டு ஜெனாபாயால் சும்மா இருக்க முடியவில்லை.

மும்பை என பம்பாய் பெயர் மாற்றம் பெறுவதற்கு சில ஆண்டுகளுக்கு முன் -

1993 ஜனவரி மாதத்தில் -

தெருவில் இறங்கினார். பாதிக்கப்பட்ட, ஆதரவற்ற நிலையில் தவித்துக்கொண்டிருந்த மக்களை ஒன்று திரட்டி பம்பாய் தெருக் களில் பேரணி நடத்தினார்.

அப்போது அவருக்கு வயது 72. முதுமையும் மன அழுத்த மும் ஏராளமான கோடுகளை அவர் முகத்தில் வரைந்திருந்தன. தடுமாறாமல் நடக்க முடியவில்லை. ஆனாலும் பேரணிக்கு தலைமை தாங்கினார்.

எச்சரிக்கையை மீறி பேரணி நடைபெற்றதால் -

பம்பாய் காவல்துறை லத்தி சார்ஜ் நடத்தியது.

தலைமையேற்ற ஜெனாபாயை இளம் காவலர்கள் அடித்து நொறுக்கினார்கள்.

எந்த காவல்துறைக்கு இன்ஃபார்மராக இருந்தபடியே முதல்கட்ட மாஃபியா ராஜாக்களுக்கு உதவினாரோ -

எந்த காவல்துறை அவரது நண்பராக விளங்கியதோ -

அதே துறையை சேர்ந்த இளம் தலைமுறையினர் நடுரோட்டில் அவரை ரத்தம் சொட்டச் சொட்ட லத்தியால் அடித்தார்கள்.

'ஜெனாபாய் சிந்தாபாத்...'

'ஜெனாபாய் சிந்தாபாத்...'

என ஆதரவாளர்களின் குரல்கள் அவரது செவியையும்,

*மனதையும் நிரப்பின.*

*அப்படியே மயக்கமானார்.*

*அவரைத் தூக்கிக்கொண்டு மருத்துவமனைக்கு சென்றார்கள். முதலுதவி அளித்தார்கள். கண் விழித்தவர், வீட்டுக்கு செல்ல வேண்டும் என்று அடம்பிடித்தார்.*

*ஜெனாபாய்க்கு மருத்துவமனை பிடிக்காது என்பது உறவினர் களுக்கு தெரியும்.*

*எனவே அவர் விருப்பப்படி டிஸ்சார்ஜ் செய்தார்கள்.*

*எந்த வீட்டில் இருந்தபடி பம்பாயையே ஆட்டிப் படைத்தாரோ -*

*அதே வீட்டில் -*

*அவர் புழங்கிய அதே அறையில் -*

*படுக்க வைக்கப்பட்டார். மருந்துகள் வேளாவேளைக்கு கொடுக் கப்பட்டன. அப்படியும் அவர் உடல்நிலை மோசமானது. நினை விழந்து கோமா நிலைக்கு சென்றவரின் உயிர் -*

*ஒருநாள் பிரிந்தது.*

*சார்னி ரோட்டிலிருந்து மெரைன் லைன் செல்லும் சாலையில் உள்ள இடுகாட்டில் -*

*உரிய மரியாதையுடன் அடக்கம் செய்யப்பட்டார்.*

*அந்த இடத்தில் 'L' வடிவில் சமாதி ஒன்றை எழுப்பினார்கள். விலாசமும் கொடுத்தார்கள்.*

*Form No. 2544, Otta No. 601.*

*சுதந்திரப் போராட்ட வீரர். தன் பெயருடன் காந்தியை இணைத்துக்கொண்டவர். வரதராஜ முதலியாரின் வளர்ப்புத் தங்கை. ஹாஜி மஸ்தான் - கரீம் லாலாவின் தத்து அக்கா. தாவூத் இப்ராஹிமை சீராட்டி வளர்த்த அன்பு அம்மா. முன் னாள் இந்தியப் பிரதமர் மொராஜி தேசாய்க்கும், முன்னாள் மகாராஷ்டிர மாநில முதல்வர் சவானுக்கும் ராக்கி கயிறு கட்டிய சகோதரி. பம்பாய் மாஃபியா ராணிகளில் முதலாமவர்; முதன்மையானவர்...*

*என்றெல்லாம் பன்முகம் கொண்ட ஸைனாப் தர்வேஷ் காந்தி என்கிற ஜெனாபாய் -*

*அடக்கம் செய்யப்பட்ட அந்த சமாதியை வணங்கிவிட்டுத்தான் -*

*இன்றும் மும்பையில் பெண் தாதாக்களாக உருவெடுக்கும் அனைவரும் துப்பாக்கியை கையில் ஏந்துகிறார்கள்.*

*அப்படித்தான் அந்த பெண்ணும் தன் நிழலுலக வாழ்க்கையை ஆரம்பித்தார்.*

*துபாயிலிருந்து வரவிருக்கும் தொலைபேசி அழைப்புக்காக காத்திருந்தார்!*

86

அஸ்ரப் சட்டென்று கண்விழித்தாள். உடல் நடுங்க ஆரம்பித்தது. பொட்டுப் பொட்டாக வியர்வை ஊற்றெடுத்தது. துர்கனவு. ஏதோ அசம்பாவிதம் நடக்கப்போகிறது.

சிரமப்பட்டு மேஜையில் இருந்த கடிகாரத்தை பார்த்தாள். டிக் டிக் டிக். அதிகாலை மணி நான்கு.

இந்த நேரத்தில் கனவு கண்டால் பலிக்கும் என்பார்களே... அப்படியானால் தனக்கு நெருக்கமாக இருக்கும் யாருக்காவது பாதிப்பு ஏற்படப் போகிறதா?

தூக்கி வாரிப் போட்டது.

நெருக்கம் என்றால் அது மொஹமத் மட்டும்தான்.

தோழியின் திருமணத்தில்தான் அவனை முதன்முறையாக சந்தித்தாள். என்னவோ தெரியவில்லை... பார்த்ததுமே வயிற்றில் பட்டாம்பூச்சி பறந்தது. வாழ்நாள் முழுக்க அவனுடன் இருக்க வேண்டும் என்று தோன்றியது.

அதையே அவனும் மறுநாள் வெளிப்படுத்தியபோது -

அவளால் மறுக்க முடியவில்லை.

காதலித்தார்கள். மும்பை முழுக்க சுற்றினார்கள். ஒவ்வொரு தருணத்திலும் காதல் பலப்பட்டதே தவிர குறையவேயில்லை.

நிக்காஹ் நடந்தபோது, 'அதுதான் ஏற்கனவே கணவன்-மனைவியாக மாறிவிட்டோமே' என்றுதான் இருவருக்கும் தோன்றியது.

மகிழ்ச்சியாக வாழ்ந்தார்கள். ஆனந்தக் கடலில் நீந்தினார்கள்.

இரண்டு விஷயங்கள் மட்டுமே அஸ்ரப்பை சங்கடப்படுத்தியது.

ஒன்று, மொஹமத்தை யாராவது 'கருப்பன்' என்று அழைக்கும் போது. எங்கிருந்துதான் வருமோ தெரியாது... அப்படியொரு கோபம் அவளுக்குள் பொங்கி வெடிக்கும். "இதுக்கெல்லாம் டென்ஷன் ஆனா எப்படி? விட்டுத்தள்ளு..." என்று மொஹமத் சிரிப்பான். பதிலுக்கு அவனை முறைப்பாள்.

இரண்டாவது, வேலை.

உத்தியோகம் புருஷ லட்சணம் என்பார்கள். அதற்கு ஏற்ப மொஹமத் கைநிறைய சம்பாதித்தான். அவளை பணத்தில் குளிப்பாட்டினான். என்ன கேட்டாலும் வாங்கி கொடுத்தான்.

ஆனால் -

எங்கு அவன் வேலை பார்க்கிறான் என்று மட்டும் அவளுக்கு தெரியாது. கெஞ்சி, குழைந்து கேட்டிருக்கிறாள். ஈஷிக் கொண்டு விசாரித்திருக்கிறாள். இணைப்பின் உச்சத்தில் பதில் வாங்க முயன்றிருக்கிறாள்.

அசைந்து கொடுக்கவேயில்லை.

"அதெல்லாம் உனக்கெதுக்கு அஸ்ரப்... என் கண்ணு

இல்லையா... செல்லம் இல்லையா...” என திகட்டத் திகட்ட அன்பை பரிமாறியபடியே வாயை அடைத்துவிடுவான்.

குறிப்பிட்ட இடைவெளியில் துபாய் சென்று வருகிறான் என்பதைத்தாண்டி -

வேறு எதுவுமே அவனைப்பற்றி அவளுக்கு தெரியாது.

ஐந்து மாதங்களுக்கு முன்பு கூட அப்படித்தான் அவளுடன் கூடி விட்டு, கழுத்தில் உதடு பதித்து இதயத்தில் செய்தி சொல்லிவிட்டு -

மத்தியகிழக்கு நாட்டிற்கு பறந்தான்.

இன்னும் மும்பை திரும்பவில்லை.

ஒருவேளை அங்கு அவனுக்கு ஏதாவது..?

அதற்கு மேல் அஸ்ரப்பால் யோசிக்க முடியவில்லை. படுக்கையை விட்டு எழுந்தாள். இருப்புக் கொள்ளவில்லை. தவித்தாள். தனியாக அந்த ப்ளாட்டில் வசிப்பது கொடுமையாக இருப்பதை அப்போதுதான் உணர்ந்தாள்.

டொக்... டொக்...

வாசல் கதவை யாரோ தட்டுகிறார்கள்?

யாராக இருக்கும்?

திறந்தாள்.

“மொஹமத் பாய் லைனுக்கு வந்தார். அஞ்சு நிமிஷத்துல மறுப டியும் கூப்பிடறேன்னு சொன்னார்...” பக்கத்து ப்ளாட் பெண்மணி சிரித்தபடி சொன்னாள்.

துபாயிலிருந்து கணவன் அழைக்கிறான்...அப்படியானால் பயந்ததுபோல் அவனுக்கு ஒன்றும் இல்லை...

அப்பாடா என்று இருந்தது. துர்கனவு மறைந்தது.

கதவை மூடிவிட்டு உடன் சென்றாள். தொலைபேசி ஒலிப்பதற் காக காத்திருந்தாள்.

ஐந்து நிமிடங்கள் கழித்து -

ஐஎஸ்டி சவுண்ட்.

இரண்டாவது ரிங்கிலேயே எடுத்தாள்.

“ஹாய் டார்லிங்...” மறுமுனையில் உற்சாகத்துடன் மொஹமத் தின் குரல் ஒலித்தது. “ஈவினிங் மும்பை திரும்பறேன். ஏர்போர்ட்டுல உன்னை எதிர்பார்க்கிறேன். ஏமாற்றாம வா... தரிசனம் தா...”

கவலைகள் அகன்று வெட்கத்துடன் ஹஸ்கி வாய்ஸில் அவனி டம் சுருக்கமாக பேசிவிட்டு ரிஸிவரை வைத்தாள்.

மனதின் மகிழ்ச்சியை கடிகாரம் புரிந்துகொண்டதோ என்னவோ...

வேகமாக முள் சுற்றி மாலை நான்கு மணிக்கு வந்து நின்றது.

குளித்து, வாசனை திரவியத்தை தன் உடல் முழுக்க தெளித்துக்கொண்டு சரியாக ஐந்து மணிக்கு சாண்டா குரூஸ் விமான நிலையத்தை அடைந்தாள்.

வாசலில் நின்றிருந்த போலீஸ் ஜீப் அவள் கண்களை உறுத்தியது.

அலட்சியப்படுத்தினாள்.

துபாயிலிருந்து வந்த விமானம் தரையிறங்கியது.

பயணிகள் ஒவ்வொருவராக வர ஆரம்பித்தார்கள்.

மொஹமத்தை எதிர்பார்த்து காத்திருந்தாள்.

உயரமான அவன் தோற்றம் கண்ணில் பட்டது.

கைகளை உயர்த்தி, தான் இருக்கும் இடத்தை அடையாளம் காட்டினாள்.

கண்களால் சிரித்தபடி பதிலுக்கு மொஹமத் கைகளை அசைத்தான்.

டுமீல்.

துப்பாக்கி வெடிக்கும் சத்தம் கேட்டு அங்கிருந்தவர்கள் சிதறினார்கள். தரையில் குனிந்தார்கள். தரையோடு தரையாக படுத்தார்கள்.

அஸ்ரப்பின் அருகில் இருந்த நபர், அவளையும் வலுக்கட்டாய மாக மண்டியிட வைத்தார்.

டுமீல். டுமீல். டுமீல்...

தோட்டா சீறியபடியே இருந்தது.

அவளால் கணக்கிடவே முடியவில்லை.

மெல்ல மெல்ல சத்தம் அடங்கியது.

மொஹமத்...

ஐயோ... அவனும் இப்படி குனிந்து தப்பித்திருப்பானா...

பதற்றத்துடன் எழுந்தாள்.

அவளை நோக்கி கை அசைத்த இடத்தில் -

அவன் இல்லை.

எங்கு சென்றான்?

பயத்துடன் இங்கும் அங்குமாக ஓட ஆரம்பித்த மக்கள் கூட்டத் தில் அவனை கண்டுபிடிக்க முடியவில்லை. அங்கும் இங்குமாக அலைந்தாள்.

டுமீல்.

கார் பார்க்கிங் பக்கம் இருந்து சத்தம் வந்தது.

கூடவே மொஹமத்தின் குரலும்.

பதறியபடி அந்தப் பக்கம் செல்ல முயன்றாள்.

யாரோ பிடித்து நிறுத்தினார்கள்.

“இப்ப அங்க யாரும் போகக்கூடாதுமா...”

“இல்ல... என் புருஷன் அங்க இருக்காரு...”

“எல்லாம் பாதுகாப்பா இருப்பாரு. கவலைப்படாத...”

முகம் தெரியாத குரலின் ஆறுதல் தேற்றவில்லை. இனம் புரியாத பயம் சூழ்ந்தது.

நிலமை கட்டுக்குள் வந்ததும் -

விரைந்தாள்.

அதிர்ந்தாள்.

அங்கிருந்த டாக்சி ஒன்றின் கதவில் திட்டுத் திட்டாக ரத்தம் தெறித்திருந்தது.

தரையில் ஓர் ஆள் படுத்திருந்ததற்கு அடையாளமாக சாக்பீசால் வரைந்திருந்தார்கள்.

அந்த உயரமும்... அகலமும்...

அப்படியே தரையில் சரிந்தாள்.

''கறுப்பா... உயரமா இருந்தான்... அவனை போலீஸ் சுட்டுட்டாங்க...''

யாரோ யாரிடமோ சொன்ன விஷயம், சரியாக அவள் காதில் விழுந்தது.

"மொஹமத்..." அலறியவள் "சுடப்பட்டவர் எங்க?" என குரல் வந்த திசையை நோக்கி கதறினாள்.

"கூப்பர் ஆஸ்பிட்டலுக்கு கூட்டிட்டு போயிருக்காங்க?"

மூச்சு வாங்க மருத்துவமனையை நோக்கி ஓடினாள்.

ரிசப்ஷனில் இருந்த பெண், குண்டடிபட்டு யாருமே வரவில்லை என்றாள்.

"இல்ல... கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி ஏர்போர்ட்டுலேந்து இங்கதான் கூட்டிட்டு வந்திருக்காங்க..."

"எனக்கு தெரிஞ்சு யாரும் வரலை மேடம்..."

''தெரியாம இருக்கலாம் இல்லையா?'' அழுகை வெடிக்க கெஞ்சினாள்.

''நல்லா தெரியும் மேடம். காலைலேந்து புதுசா யாரும் அட்மிட் ஆகலை. வேணும்னா போலீஸ் ஸ்டேஷன் போய் விசாரிச்சுப் பாருங்க...''

"அது... எங்க இருக்கு?"

"எது?"

"போலீஸ் ஸ்டேஷன்..."

அஸ்ரப்பை விசித்திரமாக பார்த்த ரிசப்ஷனிஸ்ட், வழியை சொன்னாள்.

காற்றை கிழித்தபடி அந்தேரி காவல்நிலையத்தை அடைந்தவள் - அப்படியே இடிந்துபோனாள்.

காரணம், அவள் கணவன் யாரென்றே அப்போதுதான் அவளுக்கு தெரிந்தது...

## 87

ஆனால் -

அந்தேரி காவல்நிலையத்தில் அஸ்ரப்புக்கு உடனடியாக தகவல் கிடைக்கவில்லை. அவள் கணவன் மொஹமத் எங்கிருக்கிறான் என்று சொல்ல காவலர்கள் மறுத்தார்கள். அலைக்கழித்தார்கள். மவுனம் சாதித்தார்கள். வெளி யு ல க ம் அறியாமல் வளர்ந்த அஸ்ரப் நிலைகுலைந்தாள். காவல்துறையின் நடைமுறை அவளுக்கு புதிதாகவும் குழப்பமாகவும் இருந்தது. சாய்ந்துகொள்ள தோளில்லை. ஆறுதல் தர யாருமில்லை. வற்றாத கண்ணீரோ வழிந்தபடியே இருந்தது. பரிதாபப்பட்ட ஓர் ஏட்டு, இரண்டு மணி நேரம் பொறுத்து அவளிடம் அந்த தகவலை சொன்னார்.

“உம் புருஷன் ஒரு தாதாமா... தேடப்படும் மாஃபியா. அதனாலதான் அவனை பொறி வைச்சு பிடிச்சோம். சாண்டாக் ரூஸ் விமானநிலையத்துல என்கவுன்டர் செஞ்சோம்...”

“பொய்...” அலறினாள்.

ஏட்டுக்கு பாவமாக இருந்தது. அவர் மகள் வயதுள்ள பெண்... ஒன்றும் செய்வதற்கில்லை.

நகர்ந்தார்.

“இப்ப அவர் எங்க இருக்கார்?”

“ஜே ஜே மருத்துவமனைல...”

தோட்டாக்களின் ஓசை அவள் செவியில் எதிரொலித்தன.

“ஐசியூலயா?”

விநாடி நேரம் அமைதியாக இருந்தவர், “இல்லம்மா... மார்ச்சுவரில...” என்று சொல்லிவிட்டு அவளை எதிர்கொள்ள விரும்பாமல் வெளியேறினார்.

அஸ்ரப்புக்கு சுயநினைவு வர நேரமானது. அதன் பிறகு மருத்துவமனை நோக்கி விரைந்தாள். இம்முறை விலாசத்தை யாரிடமும் அவள் கேட்கவில்லை. மூச்சுவாங்க வந்த பெண்ணுக்கு மருத்துவமனை சிப்பந்தி மார்ச்சுவரி இருக்கும் இடத்தை காட்டினான்.

விரைந்தாள்.

“போலீஸ் கேசும்மா... யாரும் பார்க்கக் கூடாது...” அலட்சியமாக பேச ஆரம்பித்த பிணவறை ஊழியன், வாக்கியத்தை முடிக்காமல் அமைதியானான்.

அஸ்ரப்பின் தோற்றம் அவன் முடிவை மாற்றியது. அக்கம் பக்கத்தில் யாரும் இல்லை என்பதை உறுதிப்படுத்திக் கொண்டவன், “வாம்மா...” என அவளை உட்புறமாக அழைத்துச் சென்றான்.

நாற்றம் குடலை பிடுங்கியது. வாந்தி, அருவியாக பொங்கியது.

ஆனால் -



அஸ்ரப் கவனத்தில் எதுவும் பதியவில்லை. மொஹமத்தாக இருக்கக்கூடாதுஎன அல்லாவை பிரார்த்தனை செய்தபடியே அவனை பின்தொடர்ந்தாள்.

"சீக்கிரமா... யாராவது வந்துடப் போறாங்க..."

துணியை விலக்கினான்.

பார்த்தாள். அழுத்தமாக ஆராய்ந்தாள்.

அவன்தான். அவளது ஆசை கணவனேதான். மொஹமத் என்னும் பெயர் கொண்டவனேதான்.

கதறியபடி அவனை அள்ளி அணைத்தாள்.

துபாய் செல்வதற்கு முன் அணைத்தது. அப்போது அவன் இதயத் துடிப்பை துல்லியமாக கேட்க முடிந்தது.

*ஐந்து மாதங்களுக்கு பின் இப்போது மீண்டும் அணைக்கிறாள். அதே அன்பு. காதல். நேசம்.*

*ஆனால் –*

*இம்முறை அவன் இதயத் துடிப்பை கேட்க முடியவில்லை.*

*இனி ஒருபோதும் கேட்கவும் முடியாது...*

*“ஆஸ்பத்திரிக்கு வரும்போதே உயிர் போயிடுச்சுமா...” சிப்பந்தி சொன்னான். “நாலு குண்டு... குறி பார்த்து சுட்டிருக்காங்க... பொட்டுன்னு போயிட்டான்...”*

*“சுட்டது யாரு?”*

*“போலீஸ்தான்...”*

*“அதான் யாரு?”*

*“எனக்கு தெரியாதுமா... நீ கிளம்பு... யாராவது பார்த்தாங்கன்னா என் வேலை போயிடும்...”*

*நடைபிணமாக வீடு திரும்பினாள். உறவினர்கள் ஒவ்வொரு வராக வர ஆரம்பித்தார்கள்.*

*“இன்ஸ்பெக்டர் இமானுவேல்தான் தன் கையால சுட்டிருக் காரு...”*

*“மொஹமத் மாஃபியா கேங்கை சேர்ந்தவனாமே?”*

*“என்னய்யா சொல்ற?”*

*“பேப்பர்ல அப்படித்தான் போட்டிருக்கு... விலாவாரியா எழுதியிருக்காங்க...”*

*யாரோ யாரிடமோ உரையாடியது அழுத்தமாக அவள் மனதில் பதிந்தது.*

*மறுநாள் Nariawali Qabrastanல் இறுதிச் சடங்கு நடைபெற்றது.*

*அவளை அனுமதிக்கவில்லை.*

*கவலைப்படவும் இல்லை. தொலைவில் நின்றபடி பார்த்தாள். பார்த்துக்கொண்டேயிருந்தாள். அழவில்லை. கதறவில்லை. கண்ணீர் வடிக்கவில்லை. அசையவும் இல்லை. நின்றாள். நின்று கொண்டேயிருந்தாள்.*

*யாரோ தன்னை கண்காணிப்பது போலிருந்தது.*

*கவனிக்க மனம் இடம்தரவில்லை.*

*யாராக இருந்தால் என்ன... அன்புக் கணவனே மறைந்து விட்டான்...*

*சூரியன் மறையத் தொடங்கியபோது –*

*மொஹமத்தை புதைத்தார்கள்.*

*விநாடி நிமிடங்கள் ஆனபோது –*

*ஒவ்வொருவராக வெளியேறினார்கள்.*

*“வா... நாமளும் போகலாம்...” உறவினர்கள் அழைத்தார்கள்.*

*“இல்ல... நான் அப்புறமா வர்றேன்...”*

*“சொல்றதை கேளு அஸ்ரப்...”*

“ப்ளீஸ்... இந்த இடத்துல நான் கொஞ்ச நேரம் தனியா இருக்க விரும்பறேன்...”

அதன் பிறகு யாரும் கட்டாயப்படுத்தவில்லை.

நகர்ந்தார்கள். விலகினார்கள். இருட்டும் சூழ ஆரம்பித்தது.

அவளைத் தவிர யாரும் அங்கில்லை.

நிதானமாக கணவன் புதைக்கப்பட்ட இடத்துக்கு சென்றாள்.

மேடான பகுதி, இனி மொஹமத் திரும்பி வர மாட்டான் என்பதை உணர்த்தியது.

அவ்வளவுதான்.

அதுவரை அடக்கி வைத்திருந்த கதறல் வெடித்தது.

மண்ணை தடவியபடியே வெடித்து அழுதாள்.

அழுகை கொஞ்சம் கொஞ்சமாக கேவலாக மாறியபோது –

“தண்ணி குடிம்மா...”

யாரோ கண்ணாடி டம்ளரை அவள் முன் நீட்டினார்கள்.

நிமிர்ந்தாள்.

நட்சத்திர ஒளியில் வயதானவர் நின்றிருந்தார்.

“நீங்க யாரு?”

“சொல்றேன்... முதல்ல தொண்டையை ஈரப்படுத்திக்க...”

மறுக்க தோன்றவில்லை. குடித்தாள். தண்ணீர் உள்ளே இறங்கும்போதுதான் எந்தளவுக்கு தாகமாக இருக்கிறோம் என்பதே அவளுக்கு புரிந்தது.

“ஏன் வீட்டுக்கு போகாம இங்கயே இருக்கீங்க?”

“நீ எதுக்காக இருக்கியோ அதுக்காகத்தான்...”

“இவர் என் புருஷன்...”

“இவன் என் சிநேகிதன்...”

புருவத்தை சுளித்தாள். “இதுக்கு முன்னாடி உங்களை நான் பார்த்ததில்லையே?”

“அதுக்கு அப்ப அவசியம் ஏற்படலை...” சொல்லும்போதே பெரியவரின் கண்கள் கலங்கின. “மொஹமத்தை எனக்கு நல்லா தெரியும். ஒருவகைல நாங்க கூட்டாளிங்கதான்... என் பேரு உஸ்மான்...”

“ம்...”

“உன் புருஷனை யார் கொன்னாங்கன்னு எனக்கு தெரியும்...”

“எனக்கும்...”

ஆச்சர்யத்துடன் அஸ்ரப்பை பார்த்தார்.

அதை கவனிக்காமல் அவள் தொடர்ந்தாள். “இன்ஸ்பெக்டர் இமானுவேல்...”

“அப்படீன்னு பொய் சொல்லியிருக்காங்க...”

அதிர்ந்தாள். “அப்ப யாரு மொஹமத்தை கொன்னது?”

“எங்க ரெண்டு பேருக்கும் பொதுவான எதிரி...”

“இப்ப அந்த ஆள் எங்க இருக்கான்?”

“துபாய்ல...”

குழப்பத்துடன் உஸ்மானை பார்த்தாள்.

“ஆமாம்மா... அந்த கொலையாளி துபாய்ல இருக்கான். மொஹமத்தை விமான நிலையத்துல சுட்டுக்கொல்ல திட்டம் போட்டது அவன்தான்... தனக்கு தெரிஞ்ச போலீஸ்காரங்க மூலமா அதை மும்பைல செயல்படுத்திட்டான்...”

“எதுக்காக?”

“அவன் சொன்ன வேலையை முடிக்க மொஹமத் மறுத்தான்...”

“அதுக்காக கொல்லணுமா?”

“அப்பத்தானே ‘என் பேச்சை யார் மீறினா இதுதான் கதி’ன்னு மத்தவங்களை எச்சரிக்க முடியும்?”

“நீங்க சொல்றது நம்பும்படியா இல்லை... எங்கயோ இருக்கிறவனால இங்க நடக்கறதை எப்படி தெரிஞ்சுக்க முடியும்...”

“அவனால முடியும்மா... அவன் அசைவுபடிதான் மும்பையே இயங்குது...”

அவன் அவன்னு சொல்றீங்களே... அந்த அவன் யாரு?”

“தாவூத்...”

“என்னது?

“தாவூத் இப்ராஹிம்...”

எழுந்தாள். “வாங்க...”

“எங்க?”

“போலீஸ் ஸ்டேஷனுக்கு...”

“எதுக்கு?”

“கம்ப்ளைண்ட் பண்ண வேண்டாமா?”

“அதை பதிவு பண்ணுவாங்கன்னு நினைக்கறியா?”

பதில் சொல்ல அஸ்ரப் முயன்றாள்.

கையை உயர்த்தி அவளை தடுத்தார் உஸ்மான். “இங்க பாருமா எந்த ஸ்டேஷனுக்கு போய் தாவூத் பத்தி நீ புகார் கொடுத்தாலும் யாரும் அதை ஏத்துக்க மாட்டாங்க... ஏன்னா, பெரும்பாலானவங்க அவனோட கையாளுங்க...”

“அப்ப வேற என்னதான் செய்யறது?”

“பழிவாங்கு...”

“...”

“உன் புருஷனை எப்படி அவன் சுட்டுக் கொல்ல ஏற்பாடு செய்தானோ... அப்படி அவனை போட்டுத்தள்ள நீ முயற்சி செய்...”

“நீங்க உதவுவீங்களா?”

“என்னால முடியாது... ஆனா, யார் ஹெல்ப் பண்ணுவாங்கன்னு சொல்லமுடியும்...”

“யாரு?”

“உசைன் உஸ்தாரா...”



இலக்கு மட்டுமே அஸ்ரப்பின் மனதில் இருந்தது.

எனவே சுற்றுப்புறத்தை கவனிக்கவில்லை. கவனத்தை சிதறவிடவில்லை.

மக்கள் நடமாட்டம் அதிகம் இருந்த தோங்கிரியின் பிரதான சாலையை கடந்தவள் – வலப்பக்கம் தென்பட்ட குறுகலான சந்துக்குள் நுழைந்தாள்.

தடுக்கவோ கடந்து செல்லவோ அங்கு மனிதர்கள் இல்லை.

நேராக வந்தவள் இடப்பக்கம் திரும்பி தென்பட்ட படிக்கட்டின் மீது ஏறினாள்.

மாலை மறைந்து இருள் பரவ தொடங்கியிருந்தது.

உச்சியில் இருந்த வீடு இருட்டில் மூழ்கியிருந்தது.

கதவை தட்டினாள்.

“சொன்ன நேரத்துக்கு வந்துட்டியே?”

உட்புறத்தில் இருந்து ஒலித்த குரல் அவளை திடுக்கிட வைத்தது.

தான், வருவோம் என்று தெரியுமா..? ஒரு வேளை பெரியவரான உஸ்மான் தகவல் அனுப்பியிருப்பாரா? வாய்ப்பில்லையே...

‘ஆளை அடையாளம் காட்டிட்டேன். சந்திக்கும்போது தேவைப்பட்டா என் பெயரை சொல்லு. மத்தபடி அங்க உன்னை கூட்டிட்டு போகற நிலமைல நானில்லை. என்னை எதிர்பார்க்காம நீயே போயிட்டு வா...’

தெளிவாக சொல்லிவிட்டாரே... பிறகு எப்படி?

கதவு திறந்தது.

எதிர்பட்ட மனிதன் வாட்டசாட்டமாக இருந்தான். கையில்லாத பனியனும் அரைக்கால் டவுசரும் அணிந்திருந்தான். வயது நாற்பதுக்குள் இருக்கலாம். குளித்து முடித்திருப்பான் போல. சோப்பின் வாசனை அவள் நாசியை நிறைத்தது.

“சலாம் அலைக்கும். உசைன் உஸ்தாரா?”

கேட்டவனின் முகத்தில் அதிர்ச்சி பரவியது. சமாளித்துக் கொண்டான்.

“அலைக்கும் சலாம். உள்ள வா...”

நுழைந்தாள்.

“என் பேரை சொல்ல வேண்டாம்னு சொன்னேனே... எப்படி தெரிஞ்சுகிட்ட?”

பதில் சொல்லாமல் உட்புறத்தை சுற்றிப் பார்த்தாள். சுத்தமாக இருந்தது.

“உட்காரலாமா?” சோபாவை சுட்டிக்காட்டியபடி கேட்டாள்.

“உட்காரவா வந்திருக்க?” உசைன் உஸ்தாரா ஆச்சர்யப்பட்டான்.

“இல்ல. உதவி கேட்டு வந்திருக்கேன். உட்கார்ந்தா பேச முடியும்...”



''பேசணுமா?'' உசைன் குரலில் திகைப்பு. ''பேரம் பேச விரும்பறியா?''

"நீங்க என்ன சொல்றீங்க?"

"புரிஞ்சதை சொன்னேன்..." அலமாரியை திறந்தவன், அங்கிருந்த துப்பாக்கியை எடுத்து மேஜை மீது வைத்தான்.

எந்த பேரத்துக்கும் அடிபணியாத வலுவான ஆயுதம். இதைப் பார்த்த பிறகும் பேச விரும்புவாளா என்ன?

அலட்சியத்துடன் அவளை பார்த்தவன் -

திகைத்தான்.

காரணம், அஸ்ரப்பின் கண்கள் துப்பாக்கியையே கண் கொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தன. ஏதோ அதை எடுத்து கொஞ்சி தடவ வேண்டும் போல... ஆசையுடனும் வெறியுடனும்...

யோசனையுடன் அமர்ந்திருந்தவளை ஆராய்ந்தான்.

புர்கா அணிந்திருந்தாள். கண்கள் மட்டும் தெரிந்தன. உடல் மூடியிருந்தபோதும் ஆண்களை ஈர்க்கும் வல்லமை அவளிடம் இருப்பதை அவனால் உணரமுடிந்தது. காத்திருந்தது வீண் போகவில்லை. இன்றிரவு... நல்லிரவு.

"என்ன விஷயம்?"

"இது மனிதர்களை கொல்லுமா?" துப்பாக்கியை பார்த்தபடி கேட்டாள்.

"ம்..."

“எத்தனை புல்லட் இதுல இருக்கும்?”

“பதினெட்டு. ஜெர்மனில தயாரானது. எனக்கு பிடிச்ச டிசைன். ஆனா, உனக்கு எதுக்கு இதெல்லாம்? நீ தேடி வந்த ஆயுதம் இது இல்லையே..?” உச்சி முதல் உள்ளங்கால் வரை அவளை அளவிட்டவன் நாக்கை துருத்தியபடி சொற்களை உதிர்த்தான்.

அதன் ஆபாசம் அவளுக்கு உறைத்தது. அலட்சியப்படுத்தினாள். “என்னுடைய லட்சியத்தை அடைய எந்த ஆயுதம் உதவுமோ அது தான் எனக்கு பிடிக்கும்...”

“லட்சியமா?”

“ம்... உங்களுக்கு இருக்கிற அதே லட்சியம்...”

“ஆஹா...” வாய்விட்டு சிரித்தான். “உன்னோட லட்சியம் பணம். அதுக்காக பேரம் பேசற...”

“பணமா? அது யாருக்கு வேணும்?”

“அப்ப எதுக்காக இங்க வந்திருக்க?”

“அதான் சொன்னேனே உதவி வேணும்னு...”

ஒன்று, இரண்டு, மூன்று... என பத்து வரை மனதுக்குள் உசைன் எண்ணினான். “உன்னை யார் அனுப்பினது?”

“உஸ்மான்பாய்...”

தன்னை நிதானப்படுத்திக்கொள்ள உசைனுக்கு சில நிமிடங்கள் ஆனது. உஸ்மான் தங்கமான மனிதராயிற்றே... அவராவது பாலியல் தொழிலாளியை அனுப்புவதாவது...

“நான் உன்னை தப்பா புரிஞ்சு...”

‘‘என் பேரு அஸ்ரப்கான். போன வாரம் என் புருஷன் மொஹமத் கானை சுட்டுக் கொன்னுட்டாங்க...”

“சாரி... சாரி... உனக்கு எப்படி ஆறுதல் சொல்றதுன்னு...”

“அவரோட சாவுக்கு பழி வாங்க நினைக்கறேன்...”

“யார் சுட்டதுன்னு தெரியுமா?”

“ம்... தாவூத்...”

“என்னது?” உசைனுக்கு தூக்கிவாரிப் போட்டது. “தாவூத்தா?”

“ஆமா. தாவூத் இப்ராஹிம். இப்ப துபாய்ல அவன் இருக்கறதா கேள்விப்பட்டேன்...”

“அவனை நீ பழிவாங்கப் போறியா?”

“யெஸ். உங்க எதிரியும் அவன்தான்னு சொன்னாங்க...”

“பரம வைரி... கண்ணுல பட்டா கண்டம் துண்டமா வெட்டி கொன்னுடுவேன்...”

“அப்ப எனக்கு உதவி பண்ணுங்க...”

“எப்படி?”

“துப்பாக்கில சுட பயிற்சி கொடுங்க...”

அழுத்தம்திருத்தமாக ஒலித்த அவளது குரல் உசைனை அசைத்தது.

*“சரி. நாளை காலை பதினொரு மணிக்கு வா...”*

*“நன்றி...”*

*எழுந்தவள் கண்கள் இடுங்க மேஜை மீதிருந்த துப்பாக்கியை பார்த்தாள். கையில் எடுத்து தடவினாள். கண்களுக்கு அருகில் கொண்டு வந்தாள்.*

*பிறகு அதை அந்த இடத்திலேயே வைத்துவிட்டு வாசலை நோக்கி நகர்ந்தவள் –*

*நின்றாள்.*

*“பாய்...”*

*“என்னை பாய்னு கூப்பிடாத...” உசைன் சீறினான்.*

*‘‘நான் வர்றப்ப ஒரு பொண்ணு கதவுகிட்ட நின்னுட்டிருந்தா...”*

*“என்னது?”*

*“பார்க்க மராத்தி மாதிரி தெரிஞ்சா. என்னை பார்த்ததும் போயிட்டா...”*

*அஸ்ரப் சொல்லச் சொல்ல உசைனுக்கு ஐயோ என்றிருந்தது. அவன் எதிர்பார்த்த... ஆசையுடன் வரச் சொல்லியிருந்த பாலியல் தொழிலாளி அந்தப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். அவளை எதிர்பார்த்துத்தான் காத்திருந்தான். அவளுக்காகவே குளித்தான். அவள் பொருட்டே தன் ஆட்கள் அனைவரையும் அப்புறப்படுத்தியிருந்தான். அவனது ஒரே பலவீனம் பெண் தான். எதிரிகளை போலவே அவனுக்கும் அது தெரிந்திருந்தது. ஆனாலும் விட முடியவில்லை. வந்தவள் போய்விட்டாள். தேடிக் கண்டுபிடிக்க முடியாது. வேறு கஸ்டமருடன் ஐக்கியமாகியிருப்பாள். புதிதாக இன்னொருவளை வரச் சொல்வதும் இனி சாத்தியமில்லை. ஆக இன்றிரவு தனியாகத்தான் படுக்க வேண்டும்...*

*“நாளை காலை வரேன்...”*

*பதிலை எதிர்பார்க்காமல் அஸ்ரப் சென்றாள்.*

*மேஜை மீது பார்த்த ஜெர்மன் துப்பாக்கி மட்டுமே அவள் மனதை ஆக்கிரமித்திருந்தது.*

*பதினெட்டு தோட்டாக்கள்.*

*சுட வேண்டும்.*

*தாவூத் இப்ராஹிமை சுட வேண்டும்...*

# 89

சொன்ன நேரத்துக்கு அஸ்ரப் வந்தபோது கதவு மூடியிருந்தது. தட்டினாள்.

"என்ன வேணும்?" லேசாக திறந்தபடி மஜீத் கேட்டான். உசைனின் உதவியாளன்.

"உசைன் சாப்பை பார்க்கணும்..."

"தூங்கிட்டிருக்காரு. அப்புறம் வா..." கதவை அடைக்க முயன்றான்.

கால்களை நுழைத்து அதை தடுத்தாள். "எழுப்பு..."

"என்னது?"

"அஸ்ரப் வந்திருக்கான்னு சொல்லி அவரை எழுப்பு..."

மஜீத்தால் தன் செவிகளையே நம்பமுடியவில்லை. அறிந்த வரை இப்படி யாரும் கட்டளையிட்டதில்லை. மட்டுமல்ல, உசைனாக எழுந்திருக்கும் வரை அவனை யாரும் எழுப்பியதாக சரித்திரமில்லை.

"அதெல்லாம் முடியாது..."

"அப்படீன்னா என்னாலயும் இங்கிருந்து நகர முடியாது..."

மஜீத்தை தள்ளிவிட்டு நுழைந்தாள். முந்தைய இரவு எங்கு அமர்ந்தாளோ அங்கு அதே நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"பொண்ணுங்களுக்கு இடம் கொடுத்தா இப்படித்தான் தலை மேல உட்காருவாங்க..."

முணுமுணுத்தபடி உள்ளறைக்கு சென்றான்.

எவ்வளவு மட்டமாக தன்னை நினைக்கிறான் என்பது அஸ்ரப்புக்கு புரிந்தது. பேசாமல் வெளியேறிவிடலாமா என்று கூட தோன்றியது.

ஆனாலும் அசையாமல் கல்லு போல அமர்ந்திருந்தாள்.

தாவூத்தை பழிவாங்க உசைனை விட்டால் வேறு ஆளில்லை. பொறுத்துத்தான் போக வேண்டும். அமைதி காத்தாள்.

உள்ளறையில் - அநேகமாக அது உசைனின் படுக்கை அறையாக இருக்க வேண்டும் - பேச்சுக்குரல் கேட்டது.

"என்னை எழுப்ப என்ன தைரியம் உனக்கு..." என முதலில் பாய்ந்த உசைன், பிறகு "புர்கா அணிஞ்சிருக்கிற பொண்ணா... அப்புறம் வரச் சொல்லு... என்ன வந்து ஹால்ல உட்கார்ந்திருக் காளா... சரி வரேன்..." என எரிந்துவிழுந்ததெல்லாம் துல்லியமாக காதில் விழுந்தது.

அஃறிணையாக மாறினாள்.

கால் மணி நேரத்துக்கு பின் காலடி சத்தம் கேட்டது.

"போகலாமா?" என்றபடி எழுந்தாள்.

"எங்க?"

உசைனின் குரலில் வழிந்த கோபத்தை அலட்சியப்படுத்தினாள். "துப்பாக்கில சுட பயிற்சி அளிக்கிறதா வாக்குறுதி தந்திருக்கீங்க..."



“சாப்பிட்டியா?”

“அப்பவே...”

“நான் இன்னும் சாப்பிடலை...” என்றபடி அங்கிருந்த இன்னொரு நாற்காலியில் அமர்ந்தான். மஜீத் கொண்டு வந்த சமோசாவையும் ஆம்லெட்டையும் சாப்பிட ஆரம்பித்தான்.

ஜன்னல் பக்கமாக சென்ற அஸ்ரப் தன் முதுகை அவனுக்கு காட்டியபடி நின்றாள்.

‘இதுல ஒண்ணும் குறைச்சலில்ல... நல்லா தூங்கிட்டு இருந்த வனை எழுப்பிட்டு தொந்தரவு இல்லாம நான் சாப்பிட உதவறா ளாம்...’

மனதில் ஓடிய வரிகளை படித்தபடியே அவளை ஆராய்ந்தான். அஸ்ரப்பின் உடல் வெளிப்படுத்திய உறுதி அவனை புரட்டிப் போட்டது. விரைவாக சாப்பிட்டு முடித்தான்.

“வா...”

அவனுடன் வெளியில் வந்தாள். மாடியை விட்டு இறங்கியவன் கீழ்த் தளத்துக்கு சென்றான். பழைய இரும்புப் பொருட்கள் அங்கு சிதறியிருந்தன. கிடைத்த இடங்களில் கால் வைத்தபடி உட்புறமாக நகர்ந்தான். இம்மி பிசகாமல் அவனை பின்தொடர்ந்தாள்.

நூறடி தூரம் சென்றதும் கதவு தட்டப்பட்டது.

அழுத்தி அதை திறந்தான்.

செவ்வக வடிவில் நீளமான அறை அவர்களை வரவேற்றது.

இருவரும் அதற்குள் நுழைந்ததும் கதவை தாழிட்டான்.

கண்களால் அந்த இடத்தை அஸ்ரப் அளவிட்டாள்.

இப்படியொரு பயிற்சி மையம் உட்புறம் இருக்கும் என்று அவள் சத்தியமாக எண்ணவில்லை. அந்தளவுக்கு ரகசியமாகவும், பாதுகாப்பாகவும் அது வடிவமைக்கப்பட்டிருந்தது.

அறையின் மூலையில் வட்ட வடிவில் ஒரு மரப்பொருளும், ஆட்களை அச்சு எடுத்ததுபோல் ஒரு மரச் சட்டகமும் தொங்கவிடப்பட்டிருந்தன.

மறு மூலையில் நீளமான ஒரு டேபிள். அதன் மீது நாட்டுத் துப்பாக்கியும், ஸ்டார் துப்பாக்கியும் வைக்கப்பட்டிருந்தன. கூடவே முந்தைய நாள் இரவு உசைன் ஏந்திய ஜெர்மன் துப்பாக்கி.

அந்த டேபிளுக்கு அருகில் அவளை அழைத்துச் சென்றான்.

"இந்த மூணுல எதை எடுத்துக்கற?"

"எது விரைவா உயிரை பறிக்குமோ... அது..."

இப்படியொரு பதிலை உசைன் எதிர்பார்க்கவில்லை என்பதை அவன் முகமே காட்டியது. சமாளித்துக்கொண்டான்.

"பயிற்சியை ஆரம்பிக்கறதுக்கு முன்னாடி சில அடிப்படையான கேள்விகள்..."

"என்ன?" அவன் மீது பார்வையை பதித்தபடி கேட்டாள்.

"தோட்டா சத்தத்தை கேட்டா பயப்பட மாட்டியே?"

"மாட்டேன்..."

"ரத்தத்தை பார்த்தா..?"

"மாட்டேன்..."

"சொல்றது ஈசி. ஆனா..."

"இங்க பாரு. உனக்கு வேண்டப்பட்டவங்க உன் கண் முன்னாடி குண்டு பாய்ந்து ரத்த வெள்ளத்துல மிதந்ததை நீ பார்த்திருக்கியா? நான் பார்த்திருக்கேன். அதுவும் இந்த இரண்டு கண்ணால. சும்மா பேசிப் பேசி டைமை வேஸ்ட் பண்ணாம பயிற்சி அளிக்க ஆரம்பி..."

அழுத்தத்துடன் அஸ்ரப் பேசப்பேச உசைனுக்கு ஆச்சர்யம் அதிகரித்தது. இப்படி யாரும் அவனை எதிர்த்து பேசியதில்லை என்பது மட்டும் அதற்கு காரணமல்ல. அவள் கண்களில் தென்பட்ட உறுதியும்தான்.

''சரி...'' தனக்கு பிடித்த ஜெர்மன் துப்பாக்கியை எடுத்தான். ''இது அடிப்பக்கம். உள்ளங்கையால இதைத்தான் அழுத்தமா பிடிக்கணும். அரை வட்டமா இருக்கு பார்த்தியா... இதுக்குள்ள ஆட்காட்டி விரலை நுழைக்கணும். அதுக்குள்ள கம்பி மாதிரி இருக்கே... அதுதான் டிக்கர். சுடறப்ப மட்டும்தான் இந்த டிக்கர் மேல உன் ஆட்காட்டி விரல் பதியணும். மத்த நேரங்கள்ல தப்பித் தவறி கூட இதுமேல விரலை வைச்சுடாத. புரிஞ்சுதா?''

"ம்..."

அதன் பிறகு உசைன் எதுவும் பேசவில்லை. ஜெர்மன்

துப்பாக்கியை ஏந்தியபடி பத்தடி தொலைவுக்கு நகர்ந்தான்.

“நல்லா கவனி. இப்படி கால்களை கட்டி நிக்கணும். அதாவது, உடலோட மொத்த வெயிட்டையும் இரு கால்களுக்கும் சமமா கொடுக்கணும்...”

“ம்...”

“உனக்கு வலது கை பழக்கமா இல்ல இடதா?”

“வலது...”

“எனக்கும் அதேதான். துப்பாக்கியை வலது கைல ஏந்து. தோள் பட்டைக்கு நேரா துப்பாக்கியோட கையை உயர்த்து...”

“ம்...”

“ஆரம்ப நிலைல முதுகை கொஞ்சம் வளைச்சுக்க. அதாவது, வில்லு மாதிரி. இதோ இப்படி...”

வளைந்து காட்டினான்.

புரிந்துகொண்டதற்கு அறிகுறியாக தலையசைத்தாள்.

“அப்புறம் டார்கெட்டை பாரு. குறி வை. ஆட்காட்டி விரலை அரை வட்டத்துக்குள்ள நுழை. டிக்கரை அழுத்து...”

“புரிஞ்சது...” என்றபடி அங்கிருந்த இரு துப்பாக்கிகளில் ஒன்றை எடுக்க முற்பட்டாள்.

“இரு...” என்றபடி அவள் அருகில் வந்தான். “சுடறதுக்கு முன்னாடி இன்னொரு விஷயத்தை செய்யணும்...”

தன் ஜெர்மன் துப்பாக்கியை அவள் முன்பு உயர்த்தினான்.

“துப்பாக்கிக்கு மேல நீளமா ஒரு பகுதி இருக்கு இல்லையா..?”

“இதுவா?” தொட்டு கேட்டாள்.

“ஆமா. இதேதான்...” ஐந்தடி தொலைவுக்கு பின்னோக்கி நகர்ந்தான். “இந்தப் பகுதியை உன் பக்கமா முடிஞ்ச வரைக்கும் இழு...”

செய்து காட்டினான்.

“அப்புறம் ரிலீஸ் பண்ணு...”

சர்ரென அந்தப் பகுதி முன்பு போல் துப்பாக்கியுடன் ஒட்டிக்கொண்டதும் ‘க்ளிக்’ என சத்தம் எழுந்தது.

“இந்த சத்தம் வரணும். அப்பத்தான் துப்பாக்கி தயாரா இருக்குன்னு அர்த்தம். அதுக்கு பிறகுதான் இலக்கை பார்த்து டிக்கரை அழுத்தணும்...”

அழுத்தினான்.

மூன்று குண்டுகள்.

மூன்றும் வட்டமான மரப்பொருளின் மத்தியில் பாய்ந்தன.

உசைனுக்கு நிம்மதியாக இருந்தது. ஒருவேளை தாறுமாறாக குண்டு பாய்ந்திருந்தால் அஸ்ரப் முன்னால் மானம் போயிருக்கும். நல்லவேளை அப்படி எதுவும் நடக்கவில்லை. தன் மரியாதை காப்பாற்றப்பட்டிருக்கிறது.

கம்பீரமாக அவள் அருகில் வந்தான். தன் கையில் இருந்த

துப்பாக்கியை அவளிடம் கொடுத்தான்.

இதற்கு முன்பு அவள் துப்பாக்கியை தொட்டுக்கூட பார்த்ததில்லை போல. ஏந்தியதுமே கணம் தாங்காமல் தன் கைகளை தாழ்த்தினாள். சில நொடிகள்தான். சமாளித்துக்கொண்டாள்.

“ஆட்களை அச்சு எடுத்தது போல இருக்கிற மரச் சட்டகம்தான் உன்னோட இலக்கு...”

“அதாவது, தாவூத் இப்ராஹிம்...”

மைக்ரோ விநாடி அதிர்ந்தான்.

அவனது பதிலை எதிர்பார்க்காமல் அஸ்ரப் செயல்பட்டாள்.

எப்படி நிற்க வேண்டும்... குனிய வேண்டும்... குறி பார்க்க வேண்டும்... டிக்கரை அழுத்த வேண்டும்... என்றெல்லாம் அவன் கற்றுத் தந்தானோ –

அதை இம்மி பிசகாமல் அப்படியே கடைப்பிடித்தாள்.

ஆரம்பத்தில் தாறுமாறாக தோட்டாக்கள் பாய்ந்தன.

சோர்வடையாமல் தொடர்ந்து பயிற்சியில் ஈடுபட்டாள்.

அவள் அருகில் நின்றபடி அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

கொஞ்சம் கொஞ்சமாக அவள் மீது மரியாதை அதிகரித்தது.

இத்தனைக்கும் அவள் புர்காவை விலக்கவேயில்லை என்பதை அவன் உணர்ந்தபோது –

பசி வயிற்றை கிள்ளியது.

கடிகாரத்தை பார்த்தான்.

மணி நான்கு.

“இன்னிக்கி இது போதும்...” கட்டளை தொனியில் அவளை தடுத்தான். “வா சாப்பிடலாம்...”

“பரவால. வீட்டுக்கு போய் சாப்டுக்கறேன்...”

துப்பாக்கியை மேஜை மீது வைத்தாள். “நாளைக்கும் இதே நேரம்தானே?”

“ஆமா...”

“சரி வரேன்...”

கிளம்பியவள் நின்றாள்.

“நன்றி பாய்...”

“என்னை பாய்னு கூப்பிடாதேன்னு நேத்தே சொன்னேன்...”

தலை குனிந்தபடி உதட்டை கடித்தவள் சட்டென நிமிர்ந்தாள்.

“நன்றி சாப்...”

புன்னகையுடன் தலையசைத்தான்.

வெளியேறினாள்.

மறுநாள் குறிப்பிட்ட நேரத்துக்கு வந்து நின்றாள்.

இம்முறை உசைன் தயாராக இருந்தான்.

பயிற்சி தொடர்ந்தது.

*மூன்று நாட்களுக்கு பின் -*

*“சபாஷ்...” என்றான் உசைன்.*

*“என்ன?”*

*“ஓரளவு தேறிட்ட....*

*“அப்படியா?”*

*“ஆமா...”*

*“அப்ப வாங்க...”*

*“எங்க?”*

*“துபாய்க்கு...”*

*“எதுக்கு?”*

*“தாவூத் இப்ராஹிமை சுட வேண்டாமா?”*

*பக்கென்று உசைன் சிரித்து விட்டான்.*

*கண்களால் அவனை எரித்தாள்.*

*“என்ன சிரிப்பு?”*

*“சுட கத்துகிட்ட சரி. ஆட்களை அடிக்க தெரியுமா?”*

*“புரியலை?”*

*“சண்டை போட தெரியுமா?”*

*“அதையும் கத்துக்கணுமா?”*

*“ஆமா...”*

*“அப்ப கத்துக் கொடுங்க...”*

*முதல் முறையாக உசைனுக்கு கோபம் வந்தது.*

*“எனக்கென்ன வேற வேலையே இல்லைனு நினைச்சியா?” சீறினான்.*

*இரண்டடி பின்னால் நகர்ந்தாள். “சாரி...”*

*பார்க்க பாவமாக இருந்தது. தணிந்தான்.*

*“ஓ.கே. நாளைக்கு ஆரம்பிக்கலாம். ஆனா, இம்முறை நான் கத்து தர மாட்டேன்...”*

*புருவத்தை உயர்த்தினாள். “அப்புறம்?”*

*‘‘மார்ஷியல் ஆர்ட்ஸ் தெரிஞ்சவங்க உன்னை டிரைன் பண்ணுவாங்க...”*

*கண்கள் மின்ன “சரி...” என்றாள்.*

90

"மார்ஷியல் ஆர்ட்ஸ் கத்துக்கறதுக்கு சில விதிகளை நீ தெரிஞ்சுக்கணும்..." குரலை உயர்த்தாமல் அதே நேரம் அழுத்தத்துடன் உசைன் சொன்னான்.

"என்ன?" அஸ்ரப் குரலில் ஆவல்.

"முழங்கை, முழங்கால், குதிகால். இந்த மூன்று பகுதிகளும் முக்கியமானது..."

"ம்..."

"எப்ப வேணா யார் வேணா தங்களை தற்காத்துக்க இந்த மூணையும் பயன்படுத்தலாம்... பயன்படுத்தணும். ஏன்னா எப்பேர்பட்ட காயம் ஏற்பட்டாலும் இது மட்டும் இயங்கும்..."

"ம்..." என்ற அஸ்ரப் சில நொடிகள் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

"தயங்காம கேளு..." அவளை பார்த்தபடி உசைன் சிரித்தான்.

"ஆம்பளைங்களை வீழ்த்த எந்த இடத்துல அடிக்கணும்..."

"தொடைகளுக்கு நடுவுல..." தாமதிக்காமல் பதில் சொன்ன உசைன், சுதாரித்து நாக்கை கடித்தான். உச்சரித்த வார்த்தைகளின் விபரீதம் புரிந்தது.

இருவரும் பேசாமல் நின்றார்கள்.

அஸ்ரப் தலைகுனிந்தாள்.

"நான் சொல்ல வந்தது அதில்ல..." உசைன் தடுமாறினான். "ஐ மீன்... விதைப்பைகள்..."

நிமிர்ந்தாள்.

"அந்த இடத்தை தாக்கினா போதும்... எப்பேர்பட்ட பலசாலியாலும் பத்து நிமிஷங்கள் அசைய முடியாது. அதுக்குள்ள தப்பிச்சிடலாம்..."

அஸ்ரப் எதுவும் சொல்லவில்லை. என்ன நினைக்கிறாள் என்று அறிய புர்கா வழியே தென்பட்ட அவள் கண்களை ஊடுருவினான். எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை.

"வரேன்... வழக்கமான நேரத்துல நாளை சந்திக்கலாம்...."

சொன்ன நேரத்துக்கு மறுநாள் வந்தாள். வாக்களித்தபடி வல்லுனர்களை வரவழைத்து அவளுக்கு மார்ஷியல் ஆர்ட்ஸ் பயிற்சியை தொடங்கினான்.

உற்சாகத்துடன் ஒவ்வொரு ஸ்டெப்பையும் கற்றுக் கொண்டாள். அவளுக்குள் இருக்கும் பழிவாங்கும் வெறியை பூரணமாக உணர்ந்தான்.

எந்த சூழலிலும் அவள் புர்காவை எடுக்கவில்லை. விலக்கும்படி அவனும் சொன்னதில்லை.

ஆனால் -

சொல்வதற்கான தருணமும் வந்தது.

ஓரளவுக்கு தற்காப்புக் கலையை அவள் கற்றிருந்த நேரம் அது.



"உனக்கு பைக் ஓட்ட தெரியுமா?"

"தெரியாது..."

"கத்துத் தர்றேன். நிழலுலகுக்கு வர்ற ஒவ்வொருத்தருக்கும் கண்டிப்பா வாகனம் ஓட்ட தெரிஞ்சிருக்கணும். குறிப்பா புல்லட்..."

"சரி..."

"ஆரம்பிக்கலாமா?"

"இப்பவே..."

தொடங்கினார்கள்.

எப்படி கால்களால் உதைக்க வேண்டும். கியரை மாற்ற வேண்டும். ஆக்சிலேட்டரை எங்கு முறுக்க வேண்டும். பிரேக் அழுத்தும் விதம்...

சகலத்தையும் ஸ்டாண்ட் போட்ட வண்டியில் கற்று கொடுத்துவிட்டு ஓட்டும் பயிற்சி யை தொடங்கினான்.

அஸ்ரப்புக்கு சைக்கிள் ஓட்ட தெரிந்திருந்தது. எனவே பேலன்ஸ் செய்வது சிரமமாக இல்லை.

ஆள் அரவமற்ற சாலையில் ஆரம்பக்கட்ட ஓட்டத்தை முடித்துவிட்டு -

போக்குவரத்து நிரம்பிய சாலைக்கு வந்தார்கள்.

பிரச்னை அப்போதுதான் வெடித்தது.

இரும்பு ராடுகளை ஏற்றிக் கொண்டு ஒரு வேன் சென்று கொண்டிருந்தது. அதை அஸ்ரப் நெருங்கும்போது –

அவள் அணிந்திருந்த புர்காவின் நுனி –

வெளியில் நீட்டிக்கொண்டிருந்த இரும்பு ராடில் சிக்கிக் கொண்டது.

பின்பக்கம் அமர்ந்திருந்த உசைன் மட்டும் சுதாரிக்காவிட்டால் பெரும் விபத்து ஏற்பட்டிருக்கும்.

"முதல்ல புர்காவை வீசி எறி..." கத்தினான்.

"முடியாது. அது தப்பு..." பதிலுக்கு சீறினாள்.

"எது..?" பற்களை கடித்தான். "புருஷன் செத்து இன்னும் கொஞ்ச நாள் கூட ஆகலை. நியாயமா பார்த்தா வெளிலயே நீ வரக் கூடாது. ஆனா, தினமும் வர்ற... முன்னபின்ன தெரியாத என்கூட பழகற. அந்நிய ஆண்களை தொட்டுத் தொட்டு தற்காப்புக் கலையை கத்துக்கற..."

மறுத்து எதையோ சொல்ல முற்பட்டாள்.

கைகளை உயர்த்தி அவளை தடுத்தான்.

"இதெல்லாம் தப்பில்ல... புர்காவை எடுக்கறது மட்டும்தான் தப்பு. இல்லையா?"

அவனை முறைத்துவிட்டு அகன்றாள்.

மறுநாள் முதல் அவள் வரமாட்டாள் என்றுதான் நினைத்தான்.

ஆனால் –

வந்தாள். அதுவும் சுடிதாரில்.

அந்த தோற்றத்தில் இதுவரை அவளை அவன் பார்த்ததில்லை. வாயை பிளந்தான். என்ன ஒரு உடல்வாகு...

"கடைசியா சம்மதிச்சிட்ட..."

"ம். மொஹமத்துக்காக..."

புரிந்து. அதனாலேயே மனதால் விலகாமல் பார்வையை மட்டும் அப்புறப்படுத்தினான். உள்ளம் மட்டும் இன்ச் பை இன்ச் ஆக அவளை பருக தொடங்கியது.

வெறியுடன் இரு சக்கர வாகனம் ஓட்ட கற்றுக்கொண்டாள். சந்துகளிலும், போக்குவரத்து பிதுங்கும் நேரத்திலும் லாவகமாக வண்டியை செலுத்தினாள்.

மார்ஷியல் ஆர்ட்ஸ் பயிற்சியும் தொடர்ந்தது.

மெல்ல மெல்ல சுடிதாரில் இருந்து டைட் ஜீன்சுக்கு மாறினாள்.

உசைனின் பார்வை அகலமானது.

அவன் மேய்வதை அலட்சியப்படுத்தினாள். உணராதது போல் காட்டிக்கொண்டாள்.

இதை எப்படி புரிந்துகொள்வது என அவன் தவித்தபோது –

ஒருநாள் மதியத்துடன் பயிற்சியை முடித்துக்கொண்டாள்.

“கொஞ்சம் பர்சனல் வேலை இருக்கு...” நகர்ந்தாள்.

அப்படி என்ன வேலை?

தொண்டை வரை கேள்வி வந்தது. அடக்கிக்கொண்டான். அவள் வெளியேறுவதையே இமைக்காமல் பார்த்தான். டைட் ஜீன்ஸ்...

பெண்களை அறிந்தவன்தான். பெண் சுகத்தை அனுபவிப்ப வன்தான். வளைவுகளும் நெளிவுகளும் அத்துப்படியானதுதான்.

ஆனாலும்...

நிலைகொள்ளாமல் தவித்தான். எந்தப் பெண்ணும் அவனை இப்படி பாதித்ததில்லை.

ம்ஹூம். தனியாக அமர்ந்திருந்தால் இப்படித்தான் மனம் வெறி பிடித்த நாயாக அலையும்.

கடல் காற்று ஒருவேளை தணிக்கலாம்.

சிந்தனை எழுந்ததுமே குளித்துவிட்டு வந்தான்.

அப்போது –

புயலென அஸ்ரப் நுழைந்தாள்.

அவள் கைகளில் செய்தித்தாள் இருந்தது.

“என்ன விஷயம்? பிரேக் வேணும்னு கேட்டியே...” ஆச்சர்யத் துடன் கேட்டான்.

“கொஞ்சம் பேசணும்...”

“கடற்கரைக்கு போகலாமா?”

“ம்...”

“புல்லட்டை ஓட்டு...”

ஒட்டியும் ஒட்டாமலும் பின்னால் அமர்ந்தான்.

வெண்ணெயில் கத்தி நுழைவது போல் சாலையில் வழுக்கிக் கொண்டு பறந்தாள்.

மதியத்துக்கும் மாலைக்கும் இடைப்பட்ட நேரம் என்பதால் கடற்கரையில் கூட்டமில்லை.

நாரிமன் பாயின்டில் இருக்கும் பைக்ஸ்டாண்டில் வண்டியை நிறுத்தினாள்.

இருவரது முகங்களையும் காற்று தழுவியது.

“பர்சனல் வேலை முடியலையா?” அவளைப் பார்த்து கேட்டான்.

“அது வந்து...” உதட்டை கடித்தவள் ஒரு முடிவுடன் நிமிர்ந்தாள்.

“என் லாயர் கூப்பிட்டிருந்தார்...”

“வக்கீலா?” அதிர்ந்தான். “எதுக்கு?”

“இன்ஸ்பெக்டர் இமானுவேல் அமோலிகா மேல நான் கேஸ் போட்டிருந்தேன்...”

“என்னது?”

“அது ஹியரிங்குக்கு வரப்போறதா சொன்னாரு...” செய்தித் தாளை நீட்டினாள்.

திகைத்தபடி அவளை பார்த்தான்.

“சொந்தக்காரங்கதான் முன்னாடியே உங்ககிட்ட சொல்ல வேண்டாம்னு தடுத்தாங்க... சாரி...”

“அது இருக்கட்டும். இது மூலமா என்ன சாதிக்கலாம்னு நினைக்கற?”

“என்ன இப்படி கேட்டுட்டீங்க?” எரிச்சல் அடைந்தாள். “என் புருஷனை என்கவுன்ட்டர் செஞ்சது இந்த இன்ஸ்பெக்டர்தான்...”

“சரி...”

“என்ன சரி? இவன் மேல கேஸ் போட்டா தாவூத் இப்ராஹிம் இந்தியாவுக்கு வரமாட்டானா?”

“வரவே மாட்டான்...” அழுத்தம் திருத்தமாக சொன்ன உசைன் -

“தனக்கு ஒரு எதிரி இருக்கான்னு அவனுக்கு தெரிய வைக்கணும். டிஸ்டர்ப் பண்ணணும். இதுதானே உன் நோக்கம்? அதுக்கு வேற ஒரு வழி இருக்கு...”

“என்ன?”

“ஹவாலா!”



“ஹவாலாவா..?” அஸ்ரப் குழம்பினாள். “தாவூத் இப்ராஹிமை டிஸ்டர்ப் செய்ய அதுதான் வழியா?”

“அது மட்டும்தான் வழி...” தீவிரத்துடன் உசைன் பதிலளித்தான்.

“ம்...”

“நான் சொல்றதை கவனமா கேளு. வழக்கு போட்டு எல்லாம் அவனை துபாய்லேந்து வரவழைக்க முடியாது. அப்படி முடியும்னா இந்நேரம் அவன் வந்திருக்கணும். ஏன்னா அவ்வளவு கேஸ் அவன் மேல இருக்கு...”

“...”

“தாவூத்துக்கு ஒரு பழக்கம் உண்டு. அதிகாரத்துல இருக்கிறவங்களை பயன்படுத்திப்பான். ஆனா, அவங்களுக்கு ஆபத்து வந்தா கை கழுவிடுவான். இதுக்கு நிறைய உதாரணங்கள் இருக்கு. அதனால உன் சக்தியை வேண்டாத விஷயங்கள்ல வீணடிக்காத...”

“அப்ப வேற என்னதான் வழி?”

“அதான் சொன்னேனே ஹவாலான்னு...”

அஸ்ரப் உதட்டை கடித்தாள்.

“அப்படீன்னா என்னனு தெரியும் இல்லையா?”

“கேள்விப்பட்டதில்லை...”

“பரவால விடு...” என்றபடி அவள் அருகில் வந்தான். “பம்பாய் முழுக்க அவனுக்கு சொந்தமான சூதாட்ட விடுதிகளும் டான்ஸ் பார்களும் இருக்கு... பணப்பரிவர்த்தனை பூரா அது வழியாதான் நடக்குது. அந்த வழியை தடுத்துட்டா போதும்...துபாய்ல இருக்கிறவனுக்கு வலிக்கும். தனக்கொரு எதிரி இருக்கறதை புரிஞ்சுப்பான்...”

“இது ஒர்க் அவுட் ஆகுமா?”

“கன்ஃபார்மா ஆகும்...”

“சரி. பணம் வர்ற வழியை எப்படி தடுக்கறது?”

சில நிமிடங்களுக்கு உசைன் எதுவும் பேசவில்லை.

அவன் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். “பதில் சொல்ல விருப்பமில்லைனா வேண்டாம்...”

“அப்படியில்ல...” தொண்டையை செருமிக்கொண்டான். “நான் என்ன வேலை பார்க்கிறேன்னு தெரியுமா?”

“தெரியாது...”

“இன்ஃபார்மர்...”

“...”

“தாவூத்துக்கு சொந்தமான சூதாட்ட விடுதிகளையும் டான்ஸ் பார்களையும் கண்டுபிடிப்பேன்... அங்க வேலை பார்க்கிறவங்களை ஃப்ரெண்டு பிடிப்பேன். பணம் கைமாறப் போற தகவல்



கிடைச்சதும் போலீசுக்கு தெரியப்படுத்துவேன்... இதுக்கு சன் மானமும் கிடைக்கும்...''

''இதே வேலையை நானும் செய்யறேன்...''

''இன்னொரு விஷயம். தாவூத்தோட எதிரிகள் யாருன்னு கண்டுபிடி. அவங்களோட நட்பா பழகு. அதாவது...''

''அதாவது?''

''என்னை தேடி வந்து ஃப்ரெண்டான மாதிரி...''

சிரித்தாள்.

சிரித்தான்.

சிரித்தார்கள்.

''உனக்கு அருண் காவ்லிய தெரியுமா?''

''ம்ஹூம். யாரு?'' அஸ்ரப் புருவத்தை உயர்த்தினாள்.

''பெரிய தாதா. தாவூத்தோட பரம விரோதி. இந்து. பைகுலால இருக்கிற தக்தி சாவ்ல வசிக்கிறான். தாவூத் இப்ராஹிமுக்கு ஆகாத வங்களை இருகரம் கூப்பி வரவேற்பான்...''

எதுவும் பேசாமல் கடலை பார்த்தபடி நின்றாள்.

காற்று அவள் முகத்தை தழுவியது. முன்னுச்சி முடிகள் பறந்தன.

உசைன் அவளை தொந்தரவு செய்யவில்லை. அவளது பின்பக்

*கத்திலிருந்து பார்வையையும் விலக்கவில்லை.*

*சில நிமிடங்களுக்கு பின் –*

*சட்டென்று திரும்பினாள்.*

*“நான் வரேன். நாளை சந்திக்கலாம்...”*

*“ம்...” என்றபடி பைக்கை ஸ்டார்ட் செய்ய முற்பட்டான்.*

*“அவசியமில்ல. பஸ்ல போய்க்கறேன்...”*

*பதிலை எதிர்பார்க்காமல் மந்த்ராலயா பக்கமாக நடந்தாள். பஸ் டெர்மினல் அங்குதான் இருக்கிறது. ஈட்டியாக அவன் பார்வை தன் முதுகை துளைப்பதை உணர்ந்தபோதும் அவள் திரும்பவில்லை.*

*தன்னையும் அறியாமல் உசைன் பெருமூச்சு விட்டான்.*

*இன்றும் அவனால் அஸ்ரப்பை புரிந்து கொள்ள முடியவில்லை.*

*தறிகெட்டு பாய்ந்த எண்ணங்கள் அடங்கும் வரை கடற்கரையிலேயே இருந்தான்.*

*வீடு திரும்பியபோது இருட்டியிருந்தது.*

*மறுநாள் வழக்கம்போல் வந்தாள். பயிற்சியை தொடர்ந்தாள்.*

*வழக்கத்துக்கு மாறாக உசைனால்தான் கவனம் செலுத்த முடியவில்லை. அடியோடு, தான் மாறியிருக்கிறோம் என்பது புரிந்தது. இது நல்லதற்குஇல்லைஎன உள்ளுணர்வு சொன்னபோதும் பாதிப்பிலிருந்து மீளமுடியாமல் தவித்தான்.*

*இடைவேளையின்போது அருகில் வந்தாள்.*

*“நேத்து அருண் காவ்லியை பார்த்தேன்...”*

*“என்னது?” ஜெர்க் ஆனான். எவ்வளவு வேகமாக இருக்கிறாள்...*

*“எங்க?”*

*“அவன் இடத்துல...”*

*“என்ன சொன்னான்?”*

*“என் கதையை பொறுமையா கேட்டான். மொஹமத் இறந்ததுக்கு வருத்தம் தெரிவிச்சான்...”*

*“ம்...”*

*“ஆனா, உதவ முடியாத நிலைல இருக்கேன். சாரின்னு சொல்லிட்டான்...” தண்ணீர் பாட்டிலை எடுத்தாள்.*

*“பரவால... டிரை பண்ணினியே... அதுவே பெரிய விஷயம்தான்...”*

*நீரை பருகிவிட்டு பாட்டிலை மூடினாள். “அருண் காவ்லியோட பேசி முடிச்சதும்தான் எனக்கொரு உண்மை புரிஞ்சுது...”*

*“என்ன?”*

*“அது வெறும் சந்தேகம்தான்...”*

*“பரவால. சொல்லு...”*

*“நான் முஸ்லீமா இருக்கறதாலதான் உதவ மறுத்தானோன்னு...”*

*“உளறாத...”*

*“தெளிவா இருக்கேன். ஒருவேளை தாவூத் என்னை வேவு பார்க்க*

அனுப்பியிருப்பான்னு நினைச்சிருக்கலாம் இல்லையா?"

"வாய்ப்பிருக்கு. ஆனா, அதுக்கும் நீ முஸ்லீமா இருக்கறதுக் கும் தொடர்பில்லை. ஏன்னா காவ்லியோட மனைவியே ஒரு முஸ்லீம்தான்..."

"அது கல்யாணத்துக்கு முன்னாடி. இப்ப அவ ஆஷா. முழுக்க முழுக்க இந்துவா மாறிட்டா..."

"..."

"அவளையும் சந்திச்சேன். புருஷனை போலவே வருத்தம் தெரி விச்சாளே தவிர உதவறேன்னு சொல்லலை..." துண்டால் முகத்தை துடைத்துக்கொண்டாள். "நான் பேரை மாத்திக்கலாம்னு முடிவு பண்ணியிருக்கேன்..."

"எதுக்கு இப்ப?"

"இந்து மாஃபியாக்கள் கிட்ட பழகத்தான்..."

சிரித்தான். "ம்... நல்ல ஐடியாதான். பேரை முடிவு பண்ணிட்டியா?"

"இன்னும் இல்ல. தாவூத்தை பழி வாங்கணும்... அதுதான் மொஹமத்துக்கு நான் செலுத்தற நன்றிக் கடன்... இது என் சப்னா..."

பேசிக்கொண்டே சென்றவளின் கண்கள் பிரகாசித்தன.

"சப்னா... யெஸ் சப்னா... நல்லா இருக்குல. இந்து, முஸ்லீம்... ரெண்டு மதத்துக்கும் பொதுவான பேரு. இதையே வைச்சுக்கறேன்..."

"சரி சப்னா..!"

உசைன் சொன்னதை கேட்டு கண்கலங்கினாள்.

அதன் பிறகு நடந்தது எல்லாம் அவன் கனவிலும் எதிர்பாராதது.

அஸ்ரப்பாக எதுவும் சொல்லவில்லை.

அதனால் என்ன?

அவளை கண்காணிக்க அவன் நியமித்திருந்த ஆட்கள் தகவலை கொட்டிக்கொண்டே இருந்தார்கள்.

நள்ளிரவில் இப்போது அதிகம் நடமாடத் தொடங்கியிருந்தாள்.

குறிப்பாக சூதாட்ட விடுதிகளும் டான்ஸ் பார்களும் இருந்த இடங்களில்.

அஸ்ரப், சப்னா... என இரு பெயர்களும் அவளுக்கு உதவின. பார் டான்ஸ் ஆடும் பெண்களுடன் அவரவர் மதம் சார்ந்து பழகினாள். சிநேகத்தை வளர்த்துக்கொண்டாள்.

பணம் தொடர்பான பரிவர்த்தனை நடக்கப்போவதை அறிந்ததும் மறக்காமல் க்ரைம் பிரான்சுக்கு போன் செய்தாள் - அதுவும் தேர்ந்த இன்ஃபார்மராக.

ஒருபோதும் தன் வீட்டில் இருந்து தொடர்பு கொள்ளவில்லை.

மாறாக பப்ளிக் பூத்தையே பயன்படுத்தினாள்.

காவலர்களிடமும் 'சப்னா' என்றே தன்னை அறிமுகப் படுத்திக்கொண்டாள்.

*சன்மானம் பெற்றுக் கொள்ள அழைத்தார்கள்.*

*செல்ல மறுத்தாள்.*

*தன் குரலை தவிர வேறு எந்த அடையாளமும் இல்லாதபடி பார்த்துக்கொண்டாள்.*

*ஏறக்குறைய சூதாட்ட விடுதிகளிலும் இதே நிலைதான்.*

*ஒருமுறை சப்னா கொடுத்த தகவலால் நாற்பது பேரை கையும் களவுமாக போலீஸ் பிடித்தது. இதற்கு முன்பு இவ்வளவு பேரை ஒரேநேரத்தில் காவல்துறை கைது செய்ததில்லை.*

*பிடிபட்டவர்களில் இருபது பேர் தேடப்படும் குற்றவாளிகள்!*

*இதனால் சப்னாவின் புகழ் எங்கும் பரவியது.*

*அதுவே அவளுக்கு வினையாகவும் மாறியது.*

*முந்தைய நாள் இரவு அவளை குண்டர்கள் தாக்க முயன்றார்கள் என்று அறிந்தபோது -*

*உசைன் பதறினான்.*

*"முட்டாள் தனமா நடந்துக்காத. உயிர் போச்சுன்னா என்ன செய்வ?"*

*"அதான் போகலையே..." அலட்சியமாக பதில் சொன்னாள்.*

*"நேத்து தப்பிச்சதுனால இப்படி பேசறியா?"*

*"இல்ல. மூணு முறை தப்பிச்சதால பேசறேன்..."*

*அதிர்ந்தான். "என்ன சொல்ற?"*

*"இதுக்கு முன்னாடி மூணு முறை என்னை கொல்ல முயற்சி செய்திருக்காங்க. நீ கொடுத்த பயிற்சி என்னை காப்பாத்திச்சு. இனியும் காப்பாத்தும். நாம சரியான வழில போயிட்டு இருக்கோம். இன்னும் கொஞ்ச நாள்ல தாவூத்தே நம்மை தேடி வருவான்..."*

*"மாட்டான்..."*

*"என்ன சொல்ற?"*

*"ஒரு சூதாட்ட விடுதியோ டான்ஸ் பாரோ மூடினா என்ன... அடுத்ததை திறந்துடப் போறான்..."*

*"அப்ப அவனை டார்கெட் பண்ண வழி?"*

*"பணம் வர்ற வாசலை அடைக்கறது... அதுக்கு நாம காத்மண்டு போயாகணும்!"*

92

"இதை ஏன் முன்னாடியே சொல்லலை?" அஸ்ரப் என்கிற சப்னாவின் கேள்வி உசைனை அசைத்தது. கோபமாக அவள் விசாரித்திருந் தால் கூட இந்தளவுக்கு பாதிக்கப்பட்டிருக்க மாட்டான்.

"சாரி... எனக்கே இப்பத்தான் தெரியும்..."

"எதுக்கு சாரி எல்லாம்..." சொன்னவளின் கண்களில் பரிவு வழிந்தது. "நாம எதுக்கு காதமண்டு போகணும்? அதை சொல்லுங்க..."

"தாவூத் இப்ராஹிமை அசைக்கத்தான்..."

"அதான்... எப்படி?"

"கள்ளப் பணமோ ஆயுதமோ எதுவா இருந்தாலும் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவுக்கு நேரடியா வர்றதில்லை. நேபாளம் வழியாதான் வருது..."

"ம்..."

"இந்தக் கடத்தல்ல தாவூத்தான் முக்கிய பங்கு வகிக்கறான்..."

"ம்..."

"சமீபத்துலதான் ராம் சிங் பகதூர் பழக்கமானான்... இதுமாதிரி பரிமாற்றங்கள் நடக்கறது எல்லாம் அவனுக்கு தெரியும்..."

"ம்..."

"அவன் கொடுத்த தகவல்படி அடுத்த வாரம் தாவூத் ஒரு பொருளை இந்தியாவுக்கு அனுப்பறான்?"

"என்ன பொருள்?"

"அவனுக்கே தெரியலை... தாவூத் ஆட்கள் அந்த பொருளை வாங்கறதுக்குள்ள நாம அதை கைப்பற்றிடணும்..."

"நல்ல ஐடியா. வாங்க புறப்படலாம்..."

புறப்பட்டார்கள்.

கணவனை தவிர்த்து பிற ஆணுடன் முதல் முறையாக சப்னா வெளியூர் - வெளிநாடு செல்கிறாள். இது ஒன்றே போதும் எந்தள வுக்கு அவள் மொஹமத்தை நேசிக்கிறாள் என்று புரிந்துகொள்ள...

அவள் மீதான மரியாதை அதிகரித்தது.

ஈர்ப்பும்.

எச்சரிக்கை காரணமாக இருவரும் மும்பையிலிருந்து நேரடியாக நேபாளம் செல்லவில்லை. காத்மண்டுவுக்கு விமானம் பிடிக்கவில்லை.

மாறாக ராக்சல் சென்றார்கள்.

பீகாரில் இருக்கும் அந்த குக்கிராமத்தை இந்திய அரசாங்கம் ஒரு பொருட்டாக மதித்ததேயில்லை.

ஆனால் -

சர்வதேச கடத்தல் பொருட்கள் அங்குதான் பெரும்பாலும்



கைமாறுகிறது என்பதை சப்னா கண்கூடாக பார்த்தாள். சின்னச் சின்ன எலக்ட்ரானிக்ஸ் பொருட்கள் முதல் தங்கம் வரை சகலமும் அந்த கிராமத்தில் நிறைந்திருந்தது.

உசைனுடன் அங்கு செலவிட்ட சில மணிநேரத்தில் போதைப் பொருட்கள் பிரித்து அனுப்பப்படுவதை கண்டாள்.

"அதெல்லாம் அப்படித்தான். கண்டுக்காத..."

எதையோ கேட்க முற்பட்டவளை தடுத்தான்.

காத்மண்டு செல்லும் பஸ் வந்ததும் இருவரும் ஏறினார்கள். மறக்க முடியாத பயணமாக இருவருக்கும் அது அமைந்தது. நட்பு பலப்பட்டதும் அப்போதுதான்.

முதல் முறையாக சப்னா, அந்த கேள்வியை கேட்டாள்.

“அதென்ன உங்க பேரோட ‘உஸ்தாரா’ ஒட்டிகிட்டு இருக்கு? உஸ்மான் பாய் உங்க பேரை உச்சரிச்சப்ப நான் வேற மாதிரி நினைச்சேன்...”

“என் முகத்துல தழும்பு இருக்கும்னா?”

“ஆமா...”

“எல்லாரும் என் பேரை கேட்டதும் அப்படித்தான் நினைக்க றாங்க. உண்மைல ‘உஸ்தாரா’ நானா வைச்சுக்கிட்டது இல்ல. மத்தவங்க எனக்கு சூட்டினது...”

“ஏன்?”

“பிக்பாக்கெட் அடிக்கறதுதான் என் தொழில். அதாவது, இருபது வருடங்களுக்கு முன்னாடி. அப்ப நான் சின்னப் பையன். கூட்டமா இருப்போம். எல்லாருமே சிறுவர்கள்தான். எங்களுக்கு ஒரு தலைவன் உண்டு. கூட்டமா இருக்கிற பஸ் இல்லைனா திரு விழாவுக்குள்ள நுழைவோம். லம்ப்பா அடிப்போம். எங்க கேங்குல நான்தான் எப்பவும் அதிகமா பிக்பாக்கெட் அடிப்பேன்...”

“ம்...”

“ஒருமுறை வழக்கத்துக்கு மாறா பணம் சேர்ந்தது. அதை மொத்தமா தலைவனுக்கு தர மனசு வரலை. எப்பவும் கொடுக் கிற தொகையை மட்டும் கொடுத்துட்டு மத்ததை மறைச்சுட்டேன். இதை ஒரு பையன் போட்டுக் கொடுத்துட்டான். லீடருக்கு கோபம் வந்துடுச்சு. பளார்னு அறைஞ்சாரு...”

“ம்...”

“அப்ப நாங்க க்ளப்ல இருந்தோம். எல்லார் முன்னாடியும் என்னை அந்தாள் அடிச்சது பிடிக்கலை. பதிலுக்கு நானும் லீடரை அடிச்சேன்...”

“...”

“இதை அவன் கொஞ்சமும் எதிர்பார்க்கலை. கீழ விழுந்தான். அவன் எழுந்திருக்கறதுக்குள்ள என் பாக்கெட்ல இருந்த பிளேடை எடுத்து ஒரே சீவா சீவினேன்... அவன் கழுத்துலேந்து அடி வயிறு வரைக்கும்...”

“...”

“ரத்தம் வழிஞ்சது. நான் எஸ்கேப் ஆகிட்டேன். அவனை ஆஸ் பத்திரிக்கு கூட்டிட்டு போனாங்க. பரிசோதிச்ச டாக்டர், ‘ஆபரே ஷன் பண்ணத் தெரிஞ்ச ஒருத்தனாலதான் இப்படி துல்லியமா சீவியிருக்க முடியும்’னு சொல்லிட்டார். இது எல்லா இடத்துலயும் பரவிடுச்சு... அன்னிலேந்து என் பேரோட ‘உஸ்தாரா’வையும் இணைச்சுட்டாங்க...”

சப்னா அவனை வியப்புடன் பார்த்தாள்.

குண்டும் குழியுமான சாலையை கடந்து காத்மண்டு வந்து சேர்ந்தார்கள்.

காத்திருந்த ராம்சிங் பகதூர் அவர்களை வரவேற்றான். தங்க வைக்கும் இடத்துக்கு அழைத்துச் சென்றான்.

அங்கு நுழைந்ததுமே கதவை தாழிட்ட பகதூர், “பொருள் பிர் கஞ்சுலதான் கை மாறும்...” என்றான்.

“அது எங்க இருக்கு?”

“பக்கத்துலதான்...”

“என்னிக்கி தாவூத் அனுப்பற பொருள் வருது?”

“இன்னும் ரெண்டு நாள்ல...”

“சரி... அதுக்குள்ள நாங்க பிர்கஞ்சை அலசிடறோம்...”

சொன்னதுடன் நிற்காமல் சப்னாவை அழைத்துக்கொண்டு உடனடியாக கிளம்பினான்.

பாறைகளும், மலைகளும், மணல்களும் சூழ்ந்த பகுதி.

ஒருவகையில் எல்லைப் பிரதேசமும் கூட.

கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை பிர்கஞ்சை ஆராய்ந்தான்.

சப்னாவும் தன் பங்குக்கு அப்பகுதியை உள்வாங்கினாள்.

அன்றிரவு காத்மண்டு திரும்பியதும் தன் திட்டத்தை உசைன் விளக்கினான்.

சப்னாவுக்கு அது திருப்தியளித்தது.

“இதுக்கு மேல நான் உங்களோட இருக்கறது நல்லதில்ல...” ராம் சிங் பகதூர் மென்று விழுங்கினான்.

“புரியுது பகதூர். நீ கிளம்பு. இந்த உதவியை என்னிக்கும் நாங்க மறக்க மாட்டோம்...”

“நன்றி பாய்... வரேன் பாபி...” திரும்பிப் பார்க்காமல் வெளி யேறினான்.

பகதூர் தன்னை ‘பாபி’ என்று குறிப்பிட்டதை சப்னா கண்டு கொள்ளவில்லை. உசைனின் மனம் மட்டும் சற்றே நெகிழ்ந்தது.

ஆனால் -

அவளிடம் அதற்கு ஏற்ற பிரதிபலிப்பு தெரியவில்லை என்ற வுடன் தன் உணர்வை மறைத்துக்கொண்டான்.

மறுநாள் இருவரும் வெளியில் எங்கும் செல்லாமல் அறை யிலேயே இருந்தார்கள். ஒருவருக்கும் சந்தேகம் வராதபடி பார்த்துக் கொண்டார்கள்.

உசைனை தேடி ஒருவன் வந்தான். நவீன கைத்துப்பாக்கி இரண்டை கொடுத்துவிட்டு சென்றான்.

அந்த நேரத்தில் சப்னாவை குளியலறையில் இருந்தாள். அப்படி அவள் இருக்கும்படி நேரத்தை கணக்கிட்டு உசைன் அனுப்பினான்.

ஒன்றாக தங்கியபோதும் இருவரும் விலகியே இருந்தார்கள்.

தாவூத்தை வீழ்த்துவது மட்டுமே அவர்களது குறிக்கோளாக இருந்தது.

இந்த வாய்ப்பை தவறவிட்டால் மீண்டும் கிடைக்காது என்பதால் ஒவ்வொரு அடியையும் பார்த்துப் பார்த்து வைத்தார்கள்.

பொருள் வரும் நாள் விடிந்தது.

மாலையில்தான் அது கைமாறும் என ராம் சிங் பகதூர் ஏற்கனவே சொல்லியிருந்தான்.

என்றாலும் காலையிலேயே இருவரும் பிர்கஞ்சுக்கு சென்றுவிட்டார்கள்.

ஆனால் -

இரண்டு கி.மீ., முன்பே இறங்கிக்கொண்டார்கள்.

மாற்றுப் பாதைக்குள் உசைன் நுழைந்தான். சப்னா பின் தொடர்ந்தாள்.

முடிந்தவரை பாறை, மலை, புதர்களுக்கு இடையில் பதுங்கிப் பதுங்கி சென்றார்கள்.

சூரியன் மறையத் தொடங்கினான்.

உயர்ந்த பாறைக்கு பின்னால் அமர்ந்தார்கள். மண்சாலை துல்லியமாக தெரிந்தது.

பார்த்தார்கள்.

பார்த்துக்கொண்டேயிருந்தார்கள்.

இரண்டு கழுதைகளுடன் இரு நேப்பாளிகள் வருவது தெரிந்தது.

கழுதைகளின் மேல் பொதிகள்.

அதற்குள் பதுக்கப்பட்டிருந்த பொருள்...

கண்டதுமே அதிர்ந்தார்கள்.

காரணம் -

அது ஏகே 47!

93

"மை காட்..." சப்னாவின் குரலில் அதிர்ச்சி. "அது... அது..."

"ஆயுதங்கள்தான் அஸ்ரப்..." நிதானமாக உசைன் பதிலளித்தான்.

"சப்னா... இந்தப் பேர்லதான் கூப்பிடணும்னு எத்தனை முறை சொல்லியிருக்கேன்?" அழுத்தத்துடன் சீறினாள்.

புன்னகையுடன் தலையசைத்தான்.

"அவன் ஆயுதம் கடத்தறானா?"

சப்னா ஒருமையில் அழைத்தது தாவூத்தை என்பது புரிந்தது.

"ம்..."

"இதை வைச்சுகிட்டு என்ன செய்வான்?"

"மும்பைல கலவரத்தை ஏற்படுத்துவான். தனக்கு வேண்டாதவங்களை சுட்டுத் தள்ள பயன்படுத்துவான்..."

"அப்படீன்னா இதை அழிச்சிட வேண்டியதுதான்..."

"ஏன்?"

"என்ன ஏன்... அப்படி செய்தாதானே அவனுக்கு வலிக்கும்... தனக்கு எதிரிங்க உருவாகி இருக்கிறதையும் அப்பத்தானே தெரிஞ்சுப்பான்?"

"தெரிஞ்சுப்பான். அதுவரை ஓ.கே. ஆனா, வலிக்காது..."

"..."

"என்ன பார்க்கிற? ஏற்கனவே சொன்னதுதான். தாவூத் நாம நினைக்கிற மாதிரி சோட்டா இல்ல. பெரிய ஆள். அவனை பொறுத்தவரை இதெல்லாம் சுண்டைக்காய்..."

"பரவால. ஒரு சுண்டைக்காய்க்கு அவன் அசரலைனாலும் தொடர்ந்து இதே மாதிரி செய்தா ஆட்டம் காணுவான். இந்த ஆயுதங்களை நாம பறிமுதல் செஞ்சு அழிச்சுடணும்..."

"அது மட்டும் வேண்டாம்..."

அவள் ஏதோ சொல்ல முற்பட்டாள். தடுத்துவிட்டு தொடர்ந்தான்.

"இதை நாம வித்தா பல லட்சம் கிடைக்கும்..."

"நான் சம்மதிக்க மாட்டேன்..." உறுதியுடன் மறுத்தாள்.

"முட்டாள்தனமா பேசாத..."

"பரவால முட்டாளாவே இருந்துட்டு போறேன். ஆனா, ஆயுதங்கள் இந்தியாவுக்குள்ள நுழையறதை மட்டும் ஏத்துக்க மாட்டேன்..."

"சப்னா..."

"ஷ். முதல்ல ஆயுதங்களை பறிமுதல் செய்யலாம். அதுக்கு அப்புறம் இது பத்தி யோசிக்கலாம்..."

அவள் சொன்னதும் சரியென்று பட்டது.

பாறை மறைவில் இருந்து சந்தேகம் வராதபடி எட்டிப் பார்த்தான்.

முன்பு பார்த்த இரு நேபாளிகள் தவிர -

வாட்டசாட்டமான, மாநிறம் கொண்ட ஒரு மனிதனும் அங்கிருந்தான்.

எங்கிருந்து இந்த புதிய மனிதன் வந்தான்?

யோசிக்க நேரமில்லை. துரிதமாக செயல்பட்டான்.

தன் பையிலிருந்து தனக்கு பிடித்தமான ஜெர்மன் துப்பாக்கியை எடுத்துக் கொண்டான். சப்னா பயிற்சி பெற்ற துப்பாக்கியை அவளிடம் கொடுத்தான்.

"ரெடி?"

"ம்..." பிஸ்டலை கெட்டியாக பிடித்துக்கொண்டாள்.

இடது கையால் அவளை பிடித்தபடி மறைவை விட்டு வெளியே வந்தவன், "யாரும் அசையாதீங்க..." என்று குரல் கொடுத்தான்.

கழுதைகளுடன் நின்றிருந்த நேபாளிகளும் புதிய மனிதனும் திடுக்கிட்டார்கள்.

துப்பாக்கியால் குறி பார்த்தபடியே நிதானமாக அவர்களை நோக்கி நடந்தான்.

"நீ யாருன்னு எனக்கு தெரியாது. ஆனா, நீ செய்யறது தப்புன்னு மட்டும் நல்லா தெரியும். பேசாம போயிடு. இல்லைனா விபரீதமாயிடும்..."

நின்ற இடத்தை விட்டு அந்த புதிய மனிதன் அசையாமல் உடைந்த இந்தியில் கர்ஜித்தான்.

"என்ன மிரட்டறியா?" அலட்சியத்துடன் அவனை நெருங்கிய உசைன் -

எட்டி உதைத்தான்.

அடிப்பட்டவன் சுருண்டு விழுந்தான்.

கழுதைகளுடன் வந்த இரு நேபாளிகளும் செய்வதறியாமல் திகைத்து நின்றார்கள்.

"ஏதோ விபரீதமாகிடும்னு உதார் விட்டியே... இப்ப என்னாச்சு பார்த்தியா..?"

பற்களை கடித்தபடி தன் வலது காலால் விழுந்திருந்த மனிதனின் முகத்தை நிமிர்த்தினான்.

அதன் பிறகு என்ன நடந்தது என்று உசைனுக்கு புரியவில்லை.

கண் முன்னால் பூச்சிகள் பறந்தன.

காதுகளில் 'கொய்ங்...' என சத்தம்.

நிலை கொள்ளாமல் தள்ளாடிய கால்கள் -

அப்படியே சரிந்தன.

முட்டிப் போட்டபடி அமர்ந்தான்.

"நான்தான் அந்த விபரீதம்..."

குரல் வந்த திசையை நோக்கி சிரமப்பட்டு கண்களை திருப்பி

னான். மாலை நேர சூரியன் கண்களைக் கூச வைத்தது. கண்களை சுருக்கியபடி பார்த்தான். கையில் மரக்கட்டையுடன் இன்னொரு வாட்டசாட்டமான மனிதன் நின்றிருந்தான்.

பின் மண்டையில் தன்னை அடித்தவன் இவன்தான் என்று புரிந்தது.

ஆனால் -

இவன் எப்போது வந்தான்..? இதுவரையில் எங்கிருந்தான்..? இன்னும் ஆட்கள் மறைந்திருக்கிறார்களா..?

வினாக்கள் பூத்துக்கொண்டே சென்றன.

எதற்கும் விடை கிடைக்கவில்லை.

மட்டுமல்ல மேற்கொண்டு யோசிக்கவும் அவர்கள் இருவரும் இடம் தரவில்லை.

ஆமாம். இருவர்தான்.

நேப்பாளிகள், வெறும் கூலிகள்.

எனவே ஒதுங்கி நின்றார்கள்.

ஆனால் -

உசைனால் முதலில் அடிபட்டவனும் -

உசைனை அடித்தவனும் -

சேர்ந்து மாறி மாறி உதைத்தார்கள்.

திருப்பித் தாக்க உசைனுக்கு அவர்கள் சந்தர்ப்பம் அளிக்க வில்லை. தற்காத்துக் கொள்ளத்தான் முடிந்தது.

அதற்குள் உதடு கிழிந்தது. பாறைகளில் உருண்டதால் கால் களிலும் கைகளிலும் அடிபட்டது. ரத்தம் பீறிட்டது.

என்றாலும் ஜெர்மன் துப்பாக்கியை மட்டும் கெட்டியாக பிடித்திருந்தான்.

இதைப் புரிந்துகொண்டவர்கள் கால்களை உயர்த்தி ஓர் உதை விட்டார்கள்.

ஹக்.

பிடி நழுவியது. பிஸ்டலும் அருகில் விழுந்தது.

சிரித்தார்கள். தங்களை ஆசுவாசப்படுத்திக் கொள்ள சில நொடிகள் மூச்சு வாங்கினார்கள்.

அப்போது உசைன் குப்புறப் படுத்திருந்தான். தவறு. அந்த கோலத்தில் படுக்க வைத்திருந்தார்கள்.

உதட்டில் இருந்து தரைக்கு ரத்தம் ஒழுகியது.

பலமாக தாக்கப்பட்டதால் வயிறு வலித்தது.

மரணத்தை கண்களுக்கு நேராக பார்த்தான்.

இறப்பதை குறித்து அவன் என்றுமே வருந்தியதில்லை.

ஆனால் -

இப்படி கேவலப்பட்டு சாக அவன் மனம் இடம்தரவில்லை.

ஏதாவது செய்தாக வேண்டும்...

எழுந்திருக்க முற்பட்டான்.
"இத பார்றா..."
யாரோ கிண்டலடித்தார்கள்.
அதனை தொடர்ந்து சரமாரியாக மிதித்தார்கள்.
வாய்ப்பேயில்லை...
தரையில் சாய்ந்தான்.
சரியாக அப்போதுதான் -
சப்னாவின் நினைவு வந்தது.
ஐயோ...
புலன்கள் விழித்துக்கொண்டன.
அவளை எப்படி மறந்தோம்?
இமைகளை பிரித்துப் பார்த்தான்.
மங்கலாக தெரிந்த உருவங்களில் எதுவும் அவளுடையதில்லை.
கடவுளே... இந்த அரக்கர்களிடம் பிடிபட்டுவிட்டாளா... கசக்கி எறிந்துவிடுவார்களே... இதற்காகவா சபதம் எடுத்து அத்தனை பயிற்சிகளையும் மேற்கொண்டாள்..? நம்மை நம்பி வந்தவளை இப்படி நிர்கதியாக விட்டுவிட்டோமே..?
அழுகை வந்தது.
ஒருவேளை தப்பித்துவிட்டாளா..?
ஆஹா... அப்படியிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்..?
சற்றே முகம் தெளிவு பெற தலையை உயர்த்தினான்.
கண்ட காட்சி நம்ப முடியாததாக இருந்தது.
அவனை அடித்த இருவரும் தலைதெறிக்க ஓடினார்கள்.
கழுதைகள் அவர்களை துரத்தின. எட்டி எட்டி உதைத்தன.
மூட்டைகள் தரையில் சிதறின.
பார்த்தால் -
கையில் துப்பாக்கியுடன் சப்னா நின்றிருந்தாள்.
அப்படிப் போடு அருவாள..!
எஞ்சியிருந்த வலுவை திரட்டியபடி உசைன் எழுந்தான்.
விழுந்திருந்த தன் ஜெர்மன் துப்பாக்கியை எடுத்தான்.
இருவரது கால்களிலும் சுட்டான்.
நல்லவேளை... குறி தவறவில்லை.
தவறியிருந்தால் சப்னா முன்னால் அசிங்கமாகியிருக்கும்.
புன்னகையுடன் அவளை பார்த்தான்.
சப்னாவின் பார்வை தோட்டா பாய்ந்து அலறியபடி தரையில் விழுந்தவர்களின் மீது இருந்தது.
தனது பார்வையையும் அவர்கள் மீது திருப்பினான்.
நாய்களா... என்னையா அடித்தீர்கள்...
கொலை வெறியுடன் அவர்களது மார்புக்கு குறி வைத்தான்.
"வேண்டாம். கொலை செய்யறது நம்ம நோக்கமில்ல..."

தடுத்தவள் அங்கிருந்த கயிற்றை எடுத்தாள். பேந்த பேந்த விழித்துக் கொண்டிருந்த இரு நேபாளிகளையும் செய்கையால் அழைத்தாள்.

நால்வரையும் கட்டி தரையில் உருள விட்டாள்.

"டிரெயினிங் உன்னை காப்பாத்தியிருக்கு..." ரத்தத்தை துடைத்த படி உசைன் சொன்னான்.

"புத்தியும் உதவியிருக்கு..."

"என்ன செஞ்ச?"

''உங்களை அடிக்கிறப்ப கழுதைகளுக்கு பின்னால போயிட்டேன்..."

"ம்..."

"அப்புறம் கழுதைகளோட விரைப்பையை எட்டி உதைச்சேன்!"

அதன் பிறகு என்ன நடந்தது என்பதை அவளும் சொல்லவில்லை. அவனும் கேட்கவில்லை.

கிழிந்த உதடுகள் வலிக்க வலிக்க வாய்விட்டு சிரித்தான்.

"உன்னை நினைச்சா எனக்கு பெருமையா இருக்கு..."

"எனக்கும்தான்..." என்றவள் அழுகையுடன் அவன் அருகில் வந்தாள். தன் துப்பட்டாவால் ரத்தத்தை துடைத்தாள்.

இருவரது கண்களும் சந்தித்தன. நெகிழ்ந்தன. உரையாடின.

முதலில் சுதாரித்தது உசைன்தான்.

அவளை விலக்கினான்.

என்ன என்பதுபோல் பார்த்தாள்.

"இதுக்கு மேல இங்க இருக்கறது ஆபத்து. வா போகலாம்..." சிதறிய ஆயுத மூட்டையை ஒழுங்குப்படுத்தி ஆளுக்கு ஒன்றாக எடுத்துக் கொண்டார்கள்.

அவனை கைத்தாங்கலாக பிடித்துக்கொண்டாள்.

எவ்வளவு விரைவாக முடியுமோ -

அவ்வளவு வேகமாக அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்கள்.

அரைமணி நேரத்துக்குப் பின் பள்ளத்தாக்கை நெருங்கினார்கள்.

இரு மூட்டைகளையும் தரையில் பிரித்தாள்.

ஒவ்வொரு ஆயுதமாக எடுத்து அதை அருகில் இருந்த பாறையில் அடித்து இரண்டாக பிளந்தாள். தூக்கி எறிந்தாள்.

உசைன் அவளை தடுக்கவில்லை.

பார்த்துக்கொண்டே இருந்தான்.

முதல் கட்டமாக அவள் வெற்றி பெற்றிருக்கிறாள் என்பது அவனுக்கு புரிந்தது.

ஆமாம். தாவூத் இப்ராஹிமை எதிர்க்க முழுமையாக சப்னா தயாராகிவிட்டாள்!

## 94

எந்த வகையிலும் தாவூத் இப்ராஹிமின் சாம்ராஜ்ஜியம் பாதிக்கவில்லை. சொல்லப்போனால் அசைந்ததற்கான அறிகுறிகள் கூட தெரியவில்லை.

என்றாலும் முதல் வெற்றி சப்னாவுக்கும் உசைனுக்கும் உற்சாகத்தை கொடுத்தது.

அதே தெம்புடன் அடுத்தடுத்து நேபாளத்துக்கு பயணப்பட்டார்கள்.

ஒவ்வொரு முறையும் ராம் சிங் பகதூர்தான் 'சரக்கு' வரும் தகவல் கொடுத்தான். ஒரு கட்டத்துக்கு பிறகு செய்தி வரும் நாளுக்காகவே காத்திருக்கத் தொடங்கினார்கள்.

என்றாலும் ரூட்டை மட்டும் மாற்றவில்லை. பாதுகாப்புக்கு வேறு பாதை இல்லை என்பதால் ராக்சல் சென்று அங்கிருந்து காத்மண்டு அடைந்தார்கள்.

பலமுறை வெற்றி பெற்றார்கள். சிலமுறை தோல்வி அடைந்தார்கள். வெற்றியின் சதவிகிதமே அதிகமாக இருந்ததால் நேபாளத்தையே தங்கள் இருப்பிடமாகவும் கொள்ள ஆரம்பித்தார்கள்.

ஆயுதமோ, போதைப் பொருட்களோ அல்லது தங்கம் - எலக்ட்ரானிக்ஸ் உள்ளிட்ட கடத்தல் பொருட்களோ -

எதை பறிமுதல் செய்தாலும் அதை உடைத்து கடாசுவதிலேயே சப்னா குறியாக இருந்தாள்.

இப்படியே போனால் தாங்கள் திவாலாகிவிடுவோம் என்பதை ஒரு மழை நாளில் உசைன் புரிய வைத்தான்.

அடிக்கடி பயணம் மேற்கொள்கிறோம். அதற்கு பணம் அவசியம். தவிர, தகவல் கொடுப்பவர்களுக்கு அவ்வப்போது ஒரு தொகையை கொடுத்தால்தான் நமக்கு தேவையான செய்திகளை சொல்வார்கள்... என்றெல்லாம் எடுத்துச் சொன்ன பிறகே வேண்டா வெறுப்பாக சம்மதித்தாள்.

இதன் பிறகு பறிமுதல் செய்த பொருட்களை ராக்சலில் விற்றார்கள். லட்சங்களில் பணம் கிடைத்தது. அதை சரிபாதியாக பங்கிட்டுக் கொண்டார்கள். இன்ஃபார்மர்களுக்கும் அதிகமாகவே கொடுத்தார்கள்.

சூரியன் உதித்தது - மறைந்தது. மழை பொழிந்தது. வெயில் காய்ந்தது.

எந்த மாற்றமும் ஏற்படவில்லை.

இவர்களது நேபாளப் பயணமும் நிற்கவில்லை.

அதற்கும் ஒருநாள் முற்றுப்புள்ளி விழுந்தது.

காரணம் -

தாவூத் இப்ராஹிம் அல்ல.

நேபாள எல்லையோரப் பாதுகாப்புப் படையினர்.



வழக்கம்போல் பாகிஸ்தானில் இருந்து வரப்போகும் சரக்கை எதிர்பார்த்து பாறை மறைவில் காத்திருந்தார்கள்.

டுமீல்.

சப்னாவின் செவிக்கு அருகில் குண்டு பறந்தது.

ஜஸ்ட் மிஸ்.

இல்லாவிட்டால் கபாலம் சிதறியிருக்கும்.

அதிர்ந்துபோய் திரும்பிப் பார்த்தார்கள்.

டுமீல். டுமீல். டுமீல்.

தோட்டாக்கள் சீறின.

பாய்ந்து பாய்ந்து தப்பித்தவர்கள் பாறையின் அந்தப் பக்கம் சென்றார்கள்.

யார் சுடுவது என்பதை புரிந்துகொள்ள சில நிமிடங்கள் ஆயிற்று.

நல்லவேளையாக கூட்டமாக எல்லையோர பாதுகாப்பு படையினர் வரவில்லை. மூன்று பேர்தான். எனவே குண்டுகள் தீர்ந்து போனதும் கட்டிப் புரண்டு சண்டையிட்டு தப்பிப்பது சுலபமாக இருந்தது.

இந்த சம்பவத்துக்கு பிறகு நேபாள அரசு விழித்துக்கொண்டது. எல்லைப் பகுதியில் பாதுகாப்பையும் பலப்படுத்தியது. தாவூத்தும் சரக்கு கைமாறும் இடத்தை மாற்றிக்கொண்டான். புதிய இடம் ராம் பகதூர் சிங்குக்கு தெரியவில்லை.

இவை எல்லாமாக சேர்ந்து இருவரையும் மும்பையிலேயே முடக்கியது.

அதற்காக பழிவாங்கும் எண்ணத்திலிருந்து சப்னா பின்வாங்க வில்லை. அவளுக்கு உதவும் நோக்கத்திலிருந்து உசைனும்.

முன்னிலும் அதிகமாக இரவு நேரங்களில் சப்னா நடமாடத் தொடங்கினாள். நிழலைப் போல் அவனது ஆட்களும் பின் தொடர்ந்து சென்று அவளுக்கு ஆபத்து வராமல் பார்த்துக்கொண்டார்கள்.

இடையில் உசைன் எதிர்பார்த்தது போலவே ஒரு சம்பவம் நடந்தது.

மொஹமத்தை சுட்டுக் கொன்றதற்காக இன்ஸ்பெக்டர் இமா னுவேல் அமோலிகா மேல் வழக்கு தொடர்ந்திருந்தாள் அல்லவா?

அந்த விசாரணை முடிந்து வழக்கு தள்ளுபடி செய்யப்பட்டது.

'நான்தான் அப்பவே சொன்னேனே...'

தொண்டை வரை வந்த வாக்கியத்தை சிரமப்பட்டு விழுங்கினான்.

வழக்கின் முடிவு சப்னாவை பாதித்தது. காட்டிக் கொள்ள வில்லை. தன் முயற்சியையும் கைவிடவில்லை. எல்லா வகையி லும் தனக்கு ஆதரவாக இருக்கும் அவன் மீது அன்பு பெருகியது. அளவுக்கு அதிகமாக ஒட்டிக்கொண்டாள். அதே நேரம் தாமரை இலை தண்ணீர் போல விலகியும் இருந்தாள். ஒன்றாக சுற்றினார் கள். ஒரே தட்டில் உணவு அருந்தினார்கள். படுக்கையை மட்டும் பகிர்ந்துகொள்ளவில்லை.

என்றேனும் ஒருநாள் அதுவும் நடக்கும் என நம்பிக்கையுடன் இருந்தான்.

அவளுக்காகவே தன் இயல்பையும் மாற்றிக்கொண்டான்.

"ஏன் இப்படி பெண்கள் பின்னாடி சுத்தற? பொம்பளை இல்லைனா தூங்க முடியாதா?"

பொறுக்க முடியாமல் ஒருநாள் கேட்டுவிட்டாள்.

அன்றிலிருந்து பாலியல் தொழிலாளர்களை நாடிச் செல்வதையே அவன் நிறுத்திவிட்டான்.

இதை அறிந்தவள் முகம் மலர புன்னகையை பரிசாக கொடுத் தாள்.

இதற்குள் மும்பை நிழலுலகில் அவர்கள் இருவரும் வளர்ந்தி ருந்தார்கள். இருவரது பெயரும் அனைவருக்கும் தெரிந்திருந்தது.

ஆனால் -

ஒருவருக்கும் சப்னா யார் என்று தெரியவில்லை. அந்தளவுக்கு தன் உருவத்தை மறைத்துக்கொண்டாள். தன் பங்குக்கு உசைனும் அவள் பெண் என்ற தகவலைத் தவிர வேறு விவரங்களை கசிய விடாமல் பார்த்துக்கொண்டான்.

இதற்கும் ஒருநாள் முடிவு வந்தது.

அன்று முன் எப்போதும் இல்லாத அளவுக்கு அவன் பசலையால் தவித்துக்கொண்டிருந்தான்.

எந்தப் பக்கம் திரும்பினாலும் சப்னா நிற்பது போலவே இருந்தது.

படுக்கையிலும் அவனை அணைத்தபடி... முத்தமிட்டபடி... அவள் இருப்பதாக எழுந்த பிம்பம் –

அலைக்கழித்தது.

தன்னை மறைக்க குடித்தான். குடித்துக்கொண்டே இருந்தான்.

ம்ஹூம். பசலை வடியவேயில்லை.

அப்படியே படுக்கையில் சாய்ந்தான்.

யாரோ அவனை உலுக்கி எழுப்பினார்கள்.

சிரமப்பட்டு கண்களைத் திறந்தான். அதிகாலை மணி மூன்று என கடிகாரம் காட்டியது.

இந்த நேரத்தில் யார்?

திரும்பினான்.

துப்பட்டா இல்லாமல் சப்னா...

அவளிடம் ஒரு ஸ்பேர் கீ உண்டு. கொடுத்ததும் அவன்தான்.

"என்ன விஷயம் இந்த நேரத்துல வந்திருக்க?"

தள்ளாட்டத்துடன் பதறியடித்து எழுந்தவன் விளக்கை போட்டான்.

அவள் கண்கள் சிவந்திருந்தன. அழுகிறாளா...

"என்னம்மா..?"

அருகில் சென்று தோளை தொட்டான்.

அவ்வளவுதான்.

உடைந்தவள் அவன் மார்பில் முகம் பொத்தி கதற ஆரம்பித்தாள்.

"இன்னிக்கி... இன்னிக்கி..."

"சொல்லும்மா..."

"மாட்டிகிட்டேன்..."

"..."

"தாவூத்துக்கு சொந்தமான சூதாட்ட விடுதியை நோட்டம் விட்டுட்டு இருந்தேன். ஏழு பேர் என்னை பார்த்துட்டாங்க..."

"ம்..."

"என்னை பிடிக்க வந்தாங்க... அவங்க கிட்டேந்து தப்பிச்சு ஓடி வர்றேன்..."

"கவலைப்படாத... நான் இருக்கேன்..."

"இங்க... நான் வந்ததையும் கவனிச்சுட்டாங்க..."

"அவங்களால என்னை எதுவும் பண்ண முடியாது சப்னா..."

"தெரியும்... ஆனா..."

"ஆனா..?"

"என்னை பாலியல் வன்புணர்வு செய்ய முயற்சி செஞ்சாங்க..."

இறுக அணைத்தான்.

ஒண்டினாள்.

வடிந்த பசலை மீண்டும் சுரந்தது.

தன்னை மறந்து சுரிதாரின் ஜிப்பை கீழே இறக்கத் தொடங்கினான்.

இன்னொரு கை அவளது முன்பக்கத்தை...

பளீர்.

நிலைதடுமாறி தரையில் விழுந்தான்.

கண் முன்னால் பூச்சி பறந்தது.

சப்னாவா அறைந்தாள்... அதுவும் தன்னையா...

"தூ..." காறி உமிழ்ந்தாள்.

"உன் புத்தியை காட்டிட்டல? தாவூத் ஆட்களுக்கும் உனக்கும் என்ன வித்தியாசம் இருக்கு? என்னோட பலவீனத்தை பயன்படுத்திக்க நினைக்கறியே... நீயெல்லாம் ஒரு மனுஷனா..?"

"சப்னா..."

திரும்பிப் பார்க்காமல் நடந்தாள்.

"அஸ்ரப்..."

படீரென்று திரும்பினாள்.

"இனி ஜென்மத்துக்கும் என்னை பெயர் சொல்லி கூப்பிடாத... தேடியும் வராத... பை..."

கதவை அறைந்து சாத்திவிட்டு புயலென மறைந்தாள்.

அதன் பிறகு உசைனை தேடி அவள் வரவேயில்லை.

அவளுக்கு பிடிக்காது என்பதால் அவனும் தேடிச் செல்லவில்லை.

இந்தப் பிரிவினை எந்த வகையிலும் அவளை தடுக்கவில்லை. தாவூத்தை வீழ்த்த என்னவெல்லாம் முடியுமோ அதையெல்லாம் செய்ய ஆரம்பித்தாள்.

சப்னாவின் நடமாட்டத்தை மட்டும் தன் ஆட்கள் மூலம் அறிந்தபடியே இருந்தான்.

மெல்ல மெல்ல தனக்கென ஒரு குழுவை சேர்க்க ஆரம்பித்தாள்.

இஸ்லாமிய இளைஞர்கள் தங்கள் தலைவியாக அவளை ஏற்றார்கள். பாசத்துடன் 'திதி' என்று அழைத்தார்கள்.

இந்த நேரத்தில்தான் -

நம்பத் தகுந்த ஆள் மூலம் அந்த விஷயத்தை உசைன் கேள்விப்பட்டான்.

ஆச்சர்யமும் அதிர்ச்சியும் ஒருசேர ஏற்பட்டது.

ஆம். தாவூத்தை சுற்றி வளைத்துவிட்டாள்!

## 95

ஏதை எதிர்பார்த்தாலும் இதை மட்டும் உசைன் நினைத்துக் கூட பார்க்கவில்லை.

அதிர்ந்து நின்றான். அஹமத் சொல்வதையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். கண்களும் காதுகளாக மாறின.

நம்புவதா வேண்டாமா என்ற குழப்பம் ஏற்படவேயில்லை.

அஹமத் பொய் சொல்ல மாட்டான். நம்பிக்கையான ஆள். பல ஆண்டுகளாக உடன் இருப்பவன். வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசியே பழக்கப்பட்டவன். உள்ளதை உள்ளபடி சொல்வதில் அவனை அடித்துக்கொள்ள ஆளில்லை.

உசைன் கேட்டுக் கொண்டதாலேயே சப்னா அறியாமல் அவளை பின்தொடர்பவன், கண்காணிப்பவன்.

எனவே நம்பித்தான் ஆக வேண்டும்.

என்றாலும் தெளிவுபடுத்திக் கொள்ள மீண்டும் கேட்டான்.

கமா, ஃபுல்ஸ்டாப் மாறாமல் அஹமத் திரும்பவும் சொன்னான்.

அதை உள்வாங்கியபடி அசை போட்டான்.

எப்போதும் போல் இப்போதும் சப்னா ஆச்சர்யப்படுத்தினாள்.

இருவரும் பிரிந்து இரண்டு ஆண்டுகளாகிறது. இடைப்பட்ட காலத்தில் இவனை தொடர்புகொள்ளக் கூட அவள் முயற்சிக்கவில்லை. அதே சமயம் தன் குணத்தையும் மாற்றிக்கொள்ளவில்லை. தாவூத் இப்ராஹிமை பழிவாங்கும் குறிக்கோளில் இருந்து இம்மியும் மாறவில்லை.

தனது ஒவ்வொரு அடியையும் இலக்கை நோக்கியே வைத்தாள்; நகர்ந்தாள்.

இதோ சுற்றியும் வளைத்துவிட்டாள்.

ஆம். சப்னாவின் திட்டம் மட்டும் நிறைவேறிவிட்டால் தாவூத் பிணமாகிவிடுவான்.

இதற்காக அவள் தேர்ந்தெடுத்தது கிரிக்கெட் மைதானத்தை.

பெரும்பாலான இந்தியப் பெண்களைப் போல் அவளுக்கும் கிரிக்கெட்டில் ஈடுபாடில்லை. அவன் அறிந்தவரை அவள் எந்த மேட்சையும் பார்த்ததில்லை. சொல்லப்போனால் சாலையில் சிறுவர்கள் ரப்பர் பந்தால் விளையாடும் ஆட்டத்தைக் கூட அவள் ஏறெடுத்துப் பார்த்ததில்லை.

ஆனால் -

இப்போது மாறியிருக்கிறாள்.

மாற்றியது தாவூத்.

இந்திய - பாகிஸ்தான் அணிகளுக்கு இடையிலான கிரிக்கெட் போட்டியை 1990களில் தொடர்ச்சியாக தாவூத் பார்த்து ரசிக்க ஆரம்பித்திருந்தான்.

ஷார்ஜா மைதானத்தில் தொலைபேசிக்கு முன்னால் அவன் அமர்ந்திருந்த காட்சி -

புகைப்படமாக அனைத்து இந்தியப் பத்திரிகைகளிலும் இடம் பெற்றது.

அவளுக்குள் மாற்றத்தை ஏற்படுத்தியது அந்த போட்டோதான்.

எனவே தனக்குப் பிடிக்காவிட்டாலும் டிவியை பார்க்க ஆரம்பித்தாள்.

விளையாட்டையோ வீரர்களையோ அல்ல.

விஐபி ஏரியாவில் கம்பீரமாக அமர்ந்திருந்த மனிதனை. தன் கணவனை சுட்டுக்கொல்ல ஏற்பாடு செய்த கொலைகாரனை. தாவூத் இப்ராஹிமை.

இதற்கு முன் சப்னா துபாய்க்கு சென்றதில்லை. ஷார்ஜாவை பார்த்ததில்லை. எப்போதாவது மொஹமத் அந்த நாட்டை குறித்து ஏதாவது சொன்னால் அதை கேட்பாள் - கேட்பது போல் நடிப்பாள்.

இப்போது அப்படியில்லை. கிடைத்த துரும்பை பற்றிக் கொண் டாள். இன்ச் பை இன்ச் ஆக மைதானத்தின் வரைபடத்தை உள்வாங்கினாள்.

இதற்காகவே தொலைக்காட்சியில் போட்டி ஒளிபரப்பான போது அதை ரிக்கார்ட் செய்து திரும்பத் திரும்ப போட்டுப் பார்த் தாள்.

ஓரளவு ப்ளூ பிரின்ட் கிடைத்ததும் தனக்கு நம்பிக் கைக்கு உரிய மூன்று பேரை துபாய்க்கு அனுப்பினாள். ஷார் ஜாவை அக்கு வேறு ஆணி வேறாக அலசச் சொன்னாள். மைதானத்துக்கு செல்லும் வழி... எங்கெங்கு காவலர்கள் நிற்கி றார்கள்... எந்தெந்த இடங்களில் பரிசோதிக்கிறார்கள்... எந்தெந்த பொருட்களை கொண்டு செல்ல அனுமதிக்கிறார்கள்...

அனைத்தையும் ஒன்றுவிடாமல் அறிந்தாள்.

விஐபி ஏரியாவை மட்டும் இருமுறை பரிசோதிக்கச் சொல்லி கட்டளையிட்டாள்.

ஆட்கள் கொண்டு வந்து கொடுத்த தகவலை வைத்து பக்காவாக ப்ளான் பண்ணினாள்.

ஆயுதங்கள் பறிமுதல் செய்யப்படும் என்பதால் சின்ன கத்தியை கொண்டு செல்லக்கூட வாய்ப்பில்லை. பரவாயில்லை. தேர்ந்த பயிற்சி பெற்ற தன் ஆட்கள் குடைகளையும் தண்ணீர் பாட்டிலை யும் மைதானத்துக்கு கொண்டு சென்றால் போதும்.

விஐபி ஏரியாவில் அவர்களும் அமரவேண்டும். அதுவும் தாவூத்தை சுற்றி ஆங்காங்கே.

வீரர்கள் சிக்ஸர் அல்லது ஃபோர் அடிக்கும்போதோ -

விக்கெட் விழும்போதோ -

மொத்த மைதானமும் எழுந்து நின்று ஆர்ப்பரிக்கும்.

அதுதான் சரியான நேரம்.

அப்போது தனது ஆட்கள் தண்ணீர் பாட்டிலை உடைக்க வேண்டும். தாவூத்தின் மீது பாய்ந்து குத்திக் கொல்ல வேண்டும்.

அதிகபட்சம் இரண்டு நிமிடங்களுக்குள் இது நடந்தாக வேண்டும்.

குத்திய நபரை நிச்சயம் தாவூத்தின் ஆட்கள் அந்த இடத்திலேயே கொன்றுவிடுவார்கள். அதற்காக வருத்தப்பட வேண்டியதில்லை. கெட்ட இஸ்லாமியனை கொலை செய்தால் நிச்சயம் அல்லா மன்னிப்பார்.

சம்பந்தப்பட்ட நபர் தன் குடும்பம் குறித்து கவலைப்பட வேண்டியதில்லை. அனைவரையும் பார்த்துக் கொள்ளும் பொறுப்பு என்னுடையது...

சப்னாவின் திட்டம் இதுதான்.

இதைத்தான் அஹமத் சொல் மாறாமல் உசைனிடம் ஒப்பித்தான். புனிதநூலின் மீது சத்தியம் செய்துவிட்டு சப்னாவின் ஆட்கள் துபாய்க்கு புறப்பட தயாராக இருப்பதையும் தெரியப்படுத்தினான்.

கேட்கக் கேட்க உசைனுக்கு மலைப்பாக இருந்தது.

பிரமாதமான திட்டம்தான்.

ஆனால், நிறைவேற வேண்டுமே?

இது போன்று தன்னை கொலை செய்ய யாராவது முயலலாம் என்று தாவூத்தும் எதிர்பார்க்காமலா இருப்பான்?

நிச்சயம் அறிந்திருப்பான். ஏனெனில் மும்பையில் தனக்கு எதிராக சப்னா என்னும் பெண்ணும் உசைன் என்னும் ஆணும் செயல்படுவதாக அவன் செவிக்கு தகவல் எட்டியிருந்தது.

எனவே உஷாராகத்தான் இருப்பான்.

சப்னாவை எச்சரிக்கையாக இருக்கச் சொல்லலாமா? தன்னால் முடிந்த உதவிகளை அவளுக்கு செய்யலாமா?

பதில் கிடைக்காமல் திணறினான்.

அலைக்கழிப்பை உதறிவிட்டு அவளை சந்திக்க முயன்ற போது -

ஈகோ தடுத்தது.

ஈகோவேதான்.

இடைப்பட்ட காலத்தில் சப்னாவுக்கு மறுமணம் ஆகியிருந்தது. நாக்பதா ஏரியாவை சேர்ந்த ஒரு போலீஸ்காரனை திருமணம் செய்து கொண்டிருந்தாள். அதுவும் காதல் மணம். போலீஸ் இன்ஃபார்மராக அவள் இருந்தபோது ஏற்பட்ட பழக்கம்.

இதை அறிந்தபோது உசைன் நொறுங்கிப் போனான். தன்னிடம் இல்லாத எது அந்த போலீஸ்காரனிடம் இருக்கிறது?

தன்னை மறுத்தவள் -

அவனை மட்டும் ஏன் ஏற்றாள்?

*விடை கிடைக்கவில்லை.*

*ஆனால் -*

*காரணமில்லாமல், ஆதாயமில்லாமல் எந்த உறவையும் சப்னா ஏற்படுத்திக்கொள்ள மாட்டாள் என்று அவன் உள்ளுணர்வு சொன்னது. அவனை சந்தித்து பழகியது கூட அப்படித்தானே?*

*தன்னையே சமாதானப்படுத்திக்கொண்டபோதும், போலீஸ்காரனை அவள் மணந்ததற்கான காரணத்தை மட்டும் அவனால் தெரிந்து கொள்ள முடியவில்லை.*

*அதற்குள் அவர்கள் பிரிந்தும் விட்டார்கள்.*

*இந்த நிகழ்வுகளை எல்லாம் தனக்குள் அசைபோட்டவன் -*

*ஈகோவை புறம்தள்ளிவிட்டு அவளை சந்திக்க ஆள் அனுப்பினான்.*

*எந்த காரணத்தாலோ அவனை பார்க்கவே மறுத்துவிட்டாள்.*

*சரி, எப்போதும்போல் தள்ளி நின்றபடியே அவளுக்கு பாதுகாப்பு வழங்கலாம்... ஷார்ஜா விஷயத்திலும் துணை நிற்கலாம்...*

*என தனக்குத்தானே சமாதானப்படுத்திக்கொண்டான்.*

*அதற்கும் ஒருநாள் ஆபத்து வந்தது.*

*இம்முறையும் அஹமத்தான் தகவலை சுமந்து வந்தான்.*

*எந்த மூன்று பேரை சப்னா தேர்ந்தெடுத்தாளோ -*

*கிரிக்கெட் போட்டி நடக்கும்போது அவர்களை ஷார்ஜாவுக்கு அனுப்ப முடிவு செய்தாளோ -*

*அந்த மூன்று பேரில் ஒருவன் -*

*புனித நூலின் மீது செய்த சத்தியத்தையும் மீறி -*

*தாவூத்தை கொலை செய்ய, தாங்கள் திட்டமிட்டிருப்பதை -*

*தாவூத்தின் வலது கையிடம் கக்கிவிட்டான். இதற்கு ஈடாக பெரும் பணத்தையும் பெற்றுக்கொண்டான்...*

*இதை கேட்டதும் உசைனின் இதயம் துடிப்பதையே நிறுத்தி விட்டது.*

*ஏனெனில், தாவூத்தின் அந்த வலது கை -*

*சோட்டா ஷகீல்!*

*மாஃபியாக்களிலேயே அதிகம் உணர்ச்சிவசப்படுபவன், சோட்டா ஷகீல்தான். ஏன், எதற்கு என்றெல்லாம் ஆராயாமல் - நம்பகத்தன்மையை சரிபார்க்காமல் - பிபி எகிற குட்டையை குழப்பிவிடுவான்.*

*அப்படிப்பட்டவனுக்கு திட்டம் தெரிந்துவிட்டால் சும்மா இருப்பானா?*

*கண்டிப்பாக சப்னாவை தீர்த்துக் கட்டிவிடுவான்...*

*எண்ணும்போதே உசைனுக்கு ரத்தம் உறைந்தது.*

*அதே சமயம் -*

*பெண்களையும், குழந்தைகளையும் எந்தக் காரணத்தைக்*

கொண்டும் சித்திரவதையோ கொலையோ செய்யக்கூடாது என்று மாஃபியாக்களுக்கு மத்தியில் இருக்கும் எழுதப்படாத விதியை நினைக்கும்போது -

நம்பிக்கை வந்தது.

ஆனால் -

அதை தவிடுபொடியாக்கினான் சோட்டா ஷகீல்...

96

நாக்பதா ஏரியாவில் இருக்கும் ஹஜ்ரா முஹாலா பகுதிக்கு அப்போது சப்னா குடி போயிருந்தாள்.

சின்னச் சின்ன தாதாக்களும் பிக்பாக்கெட் பேர்வழிகளும், ஆரம்பக்கட்ட வழிப்பறி கொள்ளையர்களும் வசிக்கும் பகுதி அது.

என்றாலும் தொங்கிரியின் புகழ்பெற்ற இடம் அது. பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் அங்கு சகாய விலையில் ரெடிமேட் ஆடைகள் விற்கப்பட்டன.

எல்லாமே சின்னச் சின்ன கடைகள்தான். நடைபாதை கடைகள் என்று சொன்னாலும் தப்பில்லை. லேட்டஸ்ட் கலெக்‌ஷன்ஸ் அங்கு கிடைக்கும். பிராண்டட் உடைகளுக்கு சமமான போலிகள் உடனுக்குடன் விற்பனைக்கு வந்துவிடும்.

எனவே எப்போதும் அங்கு மனித நடமாட்டம் இருக்கும். காலை ஒன்பது மணி முதல் இரவு பத்து மணி வரை ஜே ஜே என்று கூட்டம் நிரம்பி வழியும்.

அதன் பிறகு?

மயான அமைதி.

அதிகபட்சம் பத்தரைக்குள் கடையை பூட்டிவிட்டு விற்பனையாளர்கள் சென்றுவிடுவார்கள். வாடிக்கையாளர்களும் அங்கு வருவதை தவிர்த்துவிடுவார்கள்.

இதன் பின்னர் மும்பையின் நிழலுலக வாழ்க்கைக்குள் அடியெடுத்து வைக்கும் ஆரம்பகால அப்ரண்டீஸ்கள் அந்த இடத்தை ஆக்கிரமித்துவிடுவார்கள்.

அப்போது சீனில் இல்லாத பழைய மாஃபியாக்களின் பராக்கிரமத்தை உணர்ச்சியுடன் எந்த பெருசாவது சொல்வார். கொட்டக் கொட்ட கண்விழித்தபடி அதை பன்னிரண்டு வயதுக்கு மேற்பட்டவர்கள் கேட்பார்கள்.

அன்றைய தினம் அடிக்கப்பட்ட பிக்பாக்கெட் தொகை -

அங்குதான் எண்ணப்பட்டு பங்கு பிரிக்கப்படும்.

ஸ்கெட்ச் போடுவது குறித்த வகுப்புகளும் நடக்கும்.

இப்படிப்பட்ட பகுதிக்கு சப்னா வந்து சேர்ந்ததற்கு காரணம் -

ஹஜ்ரா முஹாலா பகுதியிலிருந்து கூப்பிடும் தொலைவில்தான் முஸாஃபீர்கானா இருந்ததுதான்.

அதாவது, தாவூத் இப்ராஹிமின் வீடு!

அவனைக் குறித்து தகவல் அறியவும், துபாயிலிருந்து அவன் அனுப்பும் ஆட்களை வழிமறிக்கவும் -

இதுவே சிறந்த இடம் என சப்னா கருதினாள்.

அதனாலேயே தனது அந்தஸ்தை மீறி -

ஒண்டுக் குடித்தனத்துக்குள் ஒரு குடித்தனத்துக்கு வந்து சேர்ந்து



தன் ராஜ்ஜியத்தை நிறுவினாள்.

இந்த நேரத்தில்தான் -

ஒருநாள் அவளுக்கு காய்ச்சல் வந்தது.

அது 1994ம் ஆண்டின் ஓர் இரவு.

மருந்து, மாத்திரை சாப்பிட்டுவிட்டு, தான் உறங்கப்போவதாகவும் யாரும்துணைக்கு இருக்கவேண்டாமென்றும் தன் ஆட்களிடம் அவள் சொன்னது அப்போதுதான்.

'Didi'யின் கட்டளையை மீற முடியாதே?

வலது - இடது கைகள் உட்பட அவளது அனைத்து நம்பிக்கைக் குரிய சகல ஆட்களும் தத்தம் இருப்பிடத்துக்கு நகர்ந்தார்கள்.

சப்னாவும் மாத்திரை சாப்பிட்டுவிட்டு உறங்க ஆரம்பித்தாள்.

சரியாக இரவு பத்து மணியிருக்கும்.

வழக்கம் போல் ஹஜ்ரா முஹாலா பகுதியை லோக்கல் தாதாக் கள் ஆக்கிரமிக்க ஆரம்பித்தார்கள். அன்றைய நிகழ்வுகள் குறித்து உரையாடத் தொடங்கினார்கள்.

சொல்லி வைத்தது போல் -

சட்டென்று அந்த பேச்சுக்கள் நின்றன.

குழு குழுவாக சிதறியிருந்த அனைவரது பார்வையும் -

சாலையில் நிலைகுத்தி நின்றன.

சிவப்பு நிற மாருதி ஒன்று ஓசை எழுப்பாமல் வந்துகொண்டிருந்தது.

பார்த்ததுமே அனைவருக்கும் புரிந்துவிட்டது - அந்த காருக்கு சொந்தக்காரரர் யார் என்று.

அப்படியே வெளிச்சத்திலிருந்து விலகி இருளில் பதுங்கினார்கள்.

என்ன நடக்கப்போகிறது என்பது அனைவருக்கும் தெரிந்திருந்தது.

ஆனால் -

யாரை கொலை செய்ய வருகிறார்கள் என்றுதான் தெரியவில்லை.

ஒவ்வொரு குழுவை அந்த கார் கடக்கும்போதும் -

'அப்பாடா பலியாகப் போவது நாமல்ல...' என சம்பந்தப்பட்டவர்கள் பெருமூச்சு விட்டார்கள்.

சாலைகளை கடந்து குறிப்பிட்ட அந்த சந்துக்குள் மாருதி நுழைந்ததும் -

பதுங்கியிருந்தவர்கள் அதிர்ந்தார்கள்.

சப்னா..!

இதற்குள் அந்த சந்துக்குள் இருந்த மற்ற குடித்தனக்காரர்களுக்கும் விபரீதம் புரிந்துவிட்டது.

சட்... சட்டென்று தங்கள் வீட்டு மின் இணைப்பை துண்டித்தார்கள்.

தெரு விளக்கைத் தவிர வேறு வெளிச்சமில்லை.

சப்னாவின் வீட்டுக்கு முன்னாலேயே கார் என்ஜின் அணைக்கப்பட்டதால் -

ஊர்ந்து வந்த வாகனம் சரியான இடத்தில் நின்றது.

நான்கு பேர் இரும்பு உருளைகளுடனும் பிஸ்டலுடனும் இறங்கினார்கள்.

"இந்த வீடுதானே?"

"ம்..."

"கதவை உடைக்கலாமா?"

"அவசியமில்ல. திறந்துதான் இருக்கு. நமக்கு தகவல் கொடுத்தவன்கிட்ட உட்புறமோ வெளிப்புறமோ தாழ்ப்பாள் போடாதபடி பார்த்துக்கன்னு சொல்லியிருக்கேன்... பேசின தொகைக்கு மேல கொடுத்திருக்கேன்..."

சொன்னவன் கார் மீது சாய்ந்தபடி சிகரெட்டை பற்ற வைத்தான்.

புரிந்து கொண்டதற்கு அறிகுறியாக தலையசைத்த மற்ற மூவரும் நிதானமாக வீட்டை நோக்கி அடியெடுத்து வைத்தார்கள்.

எதிர்பார்த்தது போலவே கதவு திறந்திருந்தது.

மாத்திரையின் வீரியத்தால் கட்டிலில் சப்னா ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள்.

அவளைச் சுற்றி மூவரும் நின்றார்கள்.

தலைமாட்டில் இருந்தவன் அவள் முடியை கொத்தாக பிடித்துத் தூக்கினான்.

அருகில் இருந்தவன் சரமாரியாக கன்னத்தில் அறைந்தான்.

அலறியடித்து எழுந்தவளுக்கு -

மயக்கம் தெளிவதற்குள் -

தரையில் வீசினார்கள்.

கத்த கூட அவளுக்கு வாய்ப்பு வழங்கவில்லை.

இரும்பு உருளையால் சரமாரியாக அவள் வயிற்றில் -

குறிப்பாக இடுப்புக்கு கீழ் -

அடித்தார்கள். குத்தினார்கள். குதறினார்கள்.

ரத்த வெள்ளத்தில் மிதந்தபடி சுயநினைவை அவள் இழக்கும் வரை வெளுத்து வாங்கினார்கள்.

"ம்..." என்று ஒருவன் தடுத்ததும் நெற்றி வியர்வையை துடைத்துக் கொண்டு வெளியே வந்தார்கள்.

அதற்குள் காரின் மீது சாய்ந்திருந்தவன் மூன்று சிகரெட்டுகளை ஊதியிருந்தான்.

நால்வரும் வண்டியில் ஏறினார்கள்.

ஹஜ்ரா முஹாலா பகுதியை விட்டு அந்த சிவப்பு மாருதி வெளியேறும் வரை -

ஈ காக்காய் கூட சப்னாவின் வீட்டுக்குள் நுழையவில்லை.

அதன் பிறகு அக்கம்பக்கத்தில் இருந்தவர்கள் மெல்ல எட்டிப் பார்த்தார்கள்.

சப்னா அங்கில்லை.

மாறாக மார்பகமும், பெண்ணுறுப்பும் சிதைக்கப்பட்ட ஒரு சடலத்தைத்தான் கண்டார்கள்.

ஆம்புலன்ஸ் வந்தது. பயனில்லை என்று தெரிந்தும் மருத்துவ மனைக்கு கொண்டு சென்றார்கள்.

பெயருக்கு வழக்கு ஒன்றை போலீசார் பதிவு செய்தனர். அக்கம் பக்கத்தில் வசித்தவர்கள் சாட்சி சொல்ல வரவில்லை. தங்களுக்கு எதுவுமே தெரியாது என கற்பூரம் அடித்து சத்தியம் செய்தார்கள்.

ஒரு வாரத்துக்குப் பின் ஒன்றிரண்டு பேர் கைதானதாக செய்தி வந்தது. பத்து நாட்களுக்குப் பின் அவர்கள் ஜாமீனில் வெளியே வந்த போது யாரும் அதை பொருட்படுத்தவில்லை.

அனைவருக்குமே - போலீசார் உட்பட - இந்த படுகொலையை நிகழ்த்தியவன் கராச்சியில் இருந்த சோட்டா ஷகீல் என்று தெரிந்திருந்தது. தொலைபேசி வழியாக ஸ்கெட்ச் போட்டுக் கொடுத்தவன்

*இவனே என்பதில் யாருக்கும் மாற்றுக்கருத்தில்லை.*

*ஆனால் -*

*போதுமான சாட்சிகள் இல்லாததால் சோட்டா ஷகீல் மீது FIR போடப்படவில்லை.*

*ஓர் உண்மை மட்டும் மும்பைக்கு புரிந்தது.*

*தாவூத்தை யார் எதிர்த்தாலும் சரி...*

*அது ஆணோ பெண்ணோ இப்படித்தான் பிணமாவார்கள்.*

*மாஃபியா ராணிகளில் ஒருவரான அஸ்ரப் என்கிற சப்னாவின் வாழ்க்கை உணர்த்தும் நிஜம் இதுதான்.*

*இது மட்டும்தான்.*

97

மரணம் என்று சொல்லக்கூடாது. படுகொலை என்று குறிப்பிடுவதே சரி.

அப்படித்தான் உசைன் நினைத்தான். சந்திக்கும் அனைவரிடமும் அப்படியே சொன்னான்.

அஸ்ரப் இறந்தது அவனை ரொம்பவே பாதித்தது.

எல்லோருக்கும் சப்னாவை தெரியும். சகலரும் இரங்கல் தெரிவித்தார்கள்.

ஆனால் -

அஸ்ரப்பை அறிந்தவன் அவன் மட்டும்தானே?

பெண் பித்தன்தான். பெண்ணை அணைக்காமல் ஒருபோதும் அவன் உறங்கியதில்லைதான். இது மாஃபியா உலகமே அறிந்த 'ரகசியம்'தான்.

ஸோ வாட்?

அஸ்ரப் என்கிற சப்னாவை அவன் தொட்டதுகூட இல்லை. அவளும் அதற்கு இடம் கொடுத்ததில்லை. அவளது அங்கங்கள் எப்படியிருக்கும் என்று கற்பனையில்தான் பார்த்திருக்கிறான். நிஜத்தில் அந்த பாக்கியம் கிட்டியதில்லை.

அதனால் என்ன?

அவனது மனம் கவர் காதலி - ஆம் காதலிதான் - அஸ்ரப்தான்.

இதனாலேயே அவளது இறப்பு அவனை பாதித்தது.

எந்த வகையிலாவது இதற்கு பழிவாங்க வேண்டும் என்று சபதம் செய்தான்.

காய்களையும் அதற்கு ஏற்பவே நகர்த்தினான்.

எவ்வளவு முயன்றும் அன்றைய இரவு சப்னாவை தேடிச் சென்றவர்கள் யார்... யார்... என்று கண்டறிய முடியவில்லை. ஸ்கெட்ச் போட்டுக் கொடுத்த சோட்டா ஷகீலோ கராச்சியில் பாதுகாப்பாக இருந்தான்.

எல்லா கதவுகளும் அடைபட்ட நிலை.

துவளவில்லை. சோர்வடையவில்லை.

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமாதித்தனாக துப்பு துலக்கிக்கொண்டே இருந்தான்.

கூடவே பெண் சகவாசத்தையும் விட்டுவிடாமல் தொடர்ந்தான்.

அதுவே அவனுக்கு வினையாயிற்று.

இத்தனைக்கும் அன்றைய மும்பை மாஃபியாக்களில் உசைனே பெஸ்ட் ஷூட்டர். டிராக் ரிக்கார்ட் அப்படித்தான் சொல்கிறது. காவல்துறை அப்படித்தான் குறிப்பிடுகிறது. எதிரிகள் அப்படித்தான் சிவப்பு மையினால் அடிக்கோடிட்டு தகவல் பரிமாற்றம் செய்து கொண்டிருக்கிறார்கள்.



மட்டுமல்ல பயிற்சி பெற்ற பல 'ஷூட்டர்ஸை' தன்னுடன் வைத்திருந்தான். அவர்கள் சூழத்தான் எங்கும் செல்வான். எந்த இடத்திலும் வலம் வருவான். எல்லா பொழுதுகளையும் சந்திப்பான்.

ஆனால் -

ஒரேயொரு இடத்துக்கு மட்டும் தனியாக செல்வான்.

அது -

தன்னுடைய பெண் தோழிகளை அவன் சந்திக்கச் செல்லும் போது.

யார் யார் அவனது உடல் தேவையை நிறைவேற்றுகிறார்கள் என்பது அவனுடைய நிழலுக்கு கூட தெரியாது.

அந்தளவுக்கு சீக்ரெட் ஆக தன்னந்தனியாக செல்வான்.

அதுவும் தன் வீட்டிலிருந்து நேராக செல்லமாட்டான்.

சுற்றி வளைத்து... வாகனங்கள் மாறி... காற்றால் கூட பின்

தொடர முடியாதபடி டார்கெட்டை அடைவான்.

இவ்வளவு எச்சரிக்கையையும் மீறி அப்படியொரு சம்பவம் நடக்கும் என்று யார்தான் எதிர்பார்த்தார்கள்?

அது 1998ம் ஆண்டு, செப்டம்பர் மாதம் 11ம் நாள் இரவு.

வழக்கம்போல் தனது பெண் தோழிகளில் ஒருவரை சந்திக்க -

பாதுகாவலர், பரிவாரங்கள், உதவியாளர்கள் இத்யாதி இத்யாதி என ஒருவரும் இல்லாமல் -

தனியாக புறப்பட்டான்.

மறக்காமல் தனது ஜெர்மன் பிஸ்டலை எடுத்துக்கொண்டான்.

சாம்பல் நிற DCM Daewoo Cielo கார் -

பாபுராவ் பார்தே மார்க் ஷெட்டில் இருந்து புறப்பட்டது.

அன்று அவனை மகிழ்விக்க இருந்தவள் நாகபதாவில் இருந்தாள்.

இந்த விஷயம் -

எப்படி, யார் மூலமாக கராச்சியில் இருந்த சோட்டா ஷகீலை அடைந்தது என்று தெரியாது.

ஆனால் -

ஒரேயொரு தொலைபேசி அழைப்பில் -

மொத்த ஸ்கெட்சையும் போட்டுக் கொடுத்துவிட்டான்.

இரண்டு பைக்கில் நான்கு பேர்.

ஒரு ஸ்கூட்டரில் இரண்டு பேர்.

ஒரு மாருதி வேனில் இருவர்.

ஆக மொத்தம் எட்டு பேர்.

பதற்றப்படாமல் நாகபதாவில் காத்திருந்தார்கள்.

வந்தவேளை முடிந்து -

உசைன் வெளியே வந்தான்.

எட்டு பேரும் அசையவில்லை.

சற்றுத் தள்ளி நிறுத்தப்பட்டிருந்த தன் காரை நோக்கி நடந்தான்.

எட்டு பேரும் அமைதியாக இருந்தார்கள்.

டிரைவர் பக்கம் இருந்த கதவை திறந்தான்.

அவ்வளவுதான்.

பதுங்கியிருந்த எட்டு பேரும் அவனை சூழ்ந்து கொண்டு சரமாரியாக சுட்டார்கள். எந்த வகையிலும் உசைன் சுதாரிக்க அவர்கள் இடம் தரவேயில்லை.

எத்தனை குண்டுகள் சீறின?

தெரியவில்லை.

எத்தனை தோட்டாக்கள் உசைனின் உடலையும் காரையும் துளைத்தன?

கணக்கிட முடியவில்லை.

மொத்தம் Twenty Rounds என பிறகுதான் காவல்துறை கணக்கிட்டு சொன்னது.

ஏனெனில் உசைனை சுட வந்தவர்கள் பிஸ்டலையோ, துப்பாக்கியையோ பயன்படுத்தவில்லை.

AK 47-ஐ பயன்படுத்தியது.

யெஸ். மும்பை மாஃபியாக்கள் வரலாற்றிலேயே முதல் முறையாக ஒரு மாஃபியாவை வீழ்த்த இன்னொரு மாஃபியா AK 47-ஐ கையாண்டது அப்போதுதான்.

யார் இந்த எட்டு பேர்... அவர்கள் முகம் எப்படியிருக்கும்... இதற்கு முன்பு அவர்களை பார்த்திருக்கிறோமா..?

கேள்விகள் பூக்கவும் இல்லை. விடைகள் மலரவும் இல்லை.

அதற்குள் உசைன் ரத்த வெள்ளத்தில் பிணமானான்.

தகவல் கிடைத்து காவல்துறை விரைந்து வந்தது. வழக்கை பதிவு செய்தது. விசாரணையை தொடங்கியது.

செய்தி அறிந்த தாவூத் இப்ராஹிம் -

சோட்டா ஷகீலை பார்த்து புருவத்தை உயர்த்தினான்.

அவ்வளவுதான். அவ்வளவேதான்.

வேறு எந்த ரியாக்‌ஷனையும் தாவூத்தும் காட்டவில்லை. சோட்டாவும் அதை எதிர்பார்க்கவில்லை.

அடுத்தகட்ட நடவடிக்கைகளில் இருவரும் கவனம் செலுத்த ஆரம்பித்துவிட்டார்கள்.

முடிந்தது கதை.

ஆமாம். இந்த நூலும் இத்துடன் முடிந்தது.

துண்டு துண்டாக பல கதாபாத்திரங்கள் அந்தரத்தில் தொங்குவது போல் இருக்கும்.

வேறு வழியில்லை. இது நிஜக்கதை. நிஜமான சம்பவங்களின் கோர்வை. எனவே விடை தெரியாத கேள்விகள் சுற்றிக்கொண்டு தான் இருக்கும்.

பம்பாயில் மாஃபியாக்கள் தோன்றியது முதல் -

தாவூத் இப்ராஹிமின் எழுச்சி வரை, துபாய்க்கு அவன் சென்றது வரை -

இங்கு பதிவு செய்திருக்கிறோம்.

எனவேதான் மாஃபியா ராணிகளில் முதன்மையானவரான ஜெனாபாயில் தொடங்கி -

தாவூத்தை பழிவாங்க முற்பட்ட அஸ்ரப் என்கிற சப்னா வரை மட்டுமே இங்கு பார்த்திருக்கிறோம்.

உண்மையில் இதன் பிறகுதான் ஹைடெக் மாஃபியா சாம்ராஜ்ஜியமே தொடங்குகிறது. இந்திய பொருளாதாரத்துடனும், அரசியலுடனும் இணைந்த வரலாறு அது. ஆக்டோபஸ்ஸாக ரியல் எஸ்டேட் பிசினஸுக்குள் மாஃபியாக்கள் ஊடுருவி இந்திய நிலங்களையே சூறையாடிய சரித்திரம் அது.

ஆனால் -

*அது தனி நூலுக்கான் விஷயம்.*

*எனவேதான் மும்பை குண்டு வெடிப்புகளும், ஹவாலா பணப் பரிமாற்றங்களும், இந்தி சினிமாவுக்குள் ஊடுருவிய மாஃபியாக் களின் சாம்ராஜ்ஜியம் குறித்தும், தாவூத்துக்கு எதிராக அணி திரண்ட இந்து மாஃபியாக்களின் சக்தி பற்றியும் சிறு குறிப்பை கூட இங்கு தரவில்லை.*

*மும்பை க்ரைம் ரிப்போர்ட்டரான எஸ்.உசைன் சைதி எழுதிய நூல்களும், 'Illustrated Weekly', 'Sunday'யில் தொடங்கி 'Outlook' வரை எண்ணற்ற ஆங்கில வார இதழ்களும், 'இந்துஸ்தான் டைம்ஸ்', 'த டைம்ஸ் ஆஃப் இந்தியா' மும்பை பதிப்பு, 'மும்பை மிரர்', 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' உள்ளிட்ட ஆங்கில நாளிதழ்களின் செய்திகளும் -*

*இந்நூல் எழுத பயன்பட்டிருக்கிறது.*

*முகம் தெரியாத அந்த பத்திரிகையாளர்களுக்கு நன்றி.*



**கே.என்.சிவராமன்...**

சென்னை குரோம்பேட்டையில் வசிக்கும் இவரது சொந்த ஊர் திருச்சி. பிறந்து, வளர்ந்ததெல்லாம் வேலூரில். டூல்ஸ் எஞ்சினியரிங் முடித்துவிட்டு பத்திரிகைத் துறைக்கு வந்த இவர், 'பிலிமாலயா', 'பெண்மணி', 'சாவி', 'குங்குமம்', 'குமுதம்', 'தினமலர்' இதழ்களில் பணிபுரிந்துவிட்டு இப்போது 'தினகரன்' நாளிதழின் இணைப்பிதழ்களுக்கு முதன்மை ஆசிரியராக இருக்கிறார். 'கர்ணனின் கவசம்', 'சகுனியின் தாயம்' ஆகிய நாவல்களைத் தொடர்ந்து அச்சில் வரும் இவரது மூன்றாவது நூல் இது.

தாதாக்கள், மாஃபியாக்களைக் குறிப்பிடும்போது 'நிழல் உலக தாதாக்கள்', 'நிழல் உலக மாஃபியாக்கள்' என்ற சொற்களைப் பயன்படுத்துகிறார்கள். அது என்ன நிழல் உலகம்?

அதிகாரத்தில் இருப்பவர்களுக்கு எப்போதும் இரட்டை முகங்கள் இருக்கும். பொதுவெளியில் அவர்கள் காட்டுவது ஒரு முகம்; அதைத் தாண்டிய இன்னொரு முகம்தான் அவர்களின் அதிகாரம் இறுக்கமாகக் கைப்பிடியில் இருக்க உதவி செய்கிறது. அந்த இன்னொரு முகம் நிழல் உலகத்தில் இருக்கிறது. பணத்தில் புரளும் தொழிலதிபர்கள், ஆட்சி நிர்வாகத்தை செய்யும் அரசியல்வாதிகள், எப்போதும் செல்வாக்கு குறையாத போலீஸார் உள்ளிட்ட அதிகார வர்க்கம்... என இவர்கள் எல்லோருக்குமே தங்கள் அதிகாரம் கைநழுவிப் போய்விடக் கூடாது என்கிற அச்சம் இருக்கிறது. அதிகாரத்தைத் தக்க வைத்துக்கொள்ள அவர்கள் சில ஏவலாளிகளை வைத்துக் கொள்கிறார்கள்.

ஆனால், மும்பையின் நிழல் உலகம் வேறு மாதிரியானது. இந்தியாவின் பொருளாதாரத் தலைநகரான அங்கு, பணம் படைத்தவர்களைத் தாண்டி, போலீஸைத் தாண்டி, அரசியல்வாதிகளைத் தாண்டி, அதிகாரம் மாஃபியாக்களின் கைக்குப் போனது. இந்தியாவில் வேறு எங்கும் நிகழ்ந்திராத விசித்திரம் இது! அந்த மாஃபியாக்களின் நிழல் உலகில் நுழைந்து, உண்மைகளை ஒரு மர்ம நாவலுக்குரிய விறுவிறுப்புடன் விவரிக்கும் அற்புத நூல் இது. கையில் எடுத்தால், ஒரே மூச்சில் படித்து முடிக்காமல் கீழே வைக்கமாட்டீர்கள்!

கிட்டத்தட்ட இரண்டு ஆண்டுக் காலம் வாசகர்களின் ஏகோபித்த ஆதரவுடன் 'தினகரன் வசந்தம்' இணைப்பிதழில் வெளியான இத்தொடர், இப்போது நூல் வடிவம் பெற்றிருக்கிறது.






**MAAFIA RANIGAL**

₹300/-

